உ

கடவுள் துணை

# இரு 200 நூறு பலபாட்டுச் சில்லரைக் கோர்வை



சென்னை, ஆனை,

சிறுமணவூர்

முனிசாமி முதலியார் ஸன்ஸ்

அவர்களால் தமது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிக்கப்பெற்றது

இதன் விலை ரு 2

உ

கடவுள் துணை.

ஔவையா ரருளிச்செய்த

# விநாயகரகவல்.

வேழமுகம் உலகநீதி.



இவை

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

தமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1908.

உ

கணபதிதுணை.

ஔவையா ரருளிச்செய்த

# விநாயகரகவல்.

## வரலாறு.

சுந்தரமூர்த்திநாயனருடனே கைலாயத்திற்குப்பரமசிவனுடைய சந்நிதானத்தில் ஆதியுலா அரங்கேற்ற எழுந்தருளியபோது, சேரமான்பெருமாணாயனார் ஔவையாரை அழையாமல் வந்துவிட்டோமே யென்று நினைத்தார் அது விநாயகரைப் பூசைசெய்துக்கொண்டிருந்த ஔவையாருக்குத்தெரிந்து தானும் அவர்களுடனே கைலாயத்திற்குப்போகவேண்டுமென்கிற விருப்பங்கொண்டு துரிதமாகப்பூசைசெய்தாள் விநாயகர் ஔவையே நீ சாவதானமாகப் பூசைசெய் அவர்களுக்குமுன்னுதாகவே நீ போய்ச்சேரும்படிசெய்வேனென்றார் அப்படியே ஔவையார் துரிதமில்லாமற்பூசைசெய்து இந்த அகவலை தோத்திரமாகப் பாடினாள். அப்போது விநாயகர் தாம் சொன்னபடி ஔவையாரைக் கைலாயத்திற்சேர்த்தார். பின்புவந்த சேரமான் பெருமாணாயனாரைப்பார்த்து ஔவையார் சொன்னதாவது :—

# விநாயகரகவல்.

## கட்டளைக்கலித்துறை.

மதுரமொழிநல்லுமையாள்புதல்வன் மலர்ப்பதத்தை
முதிரநினையவல்லார்க்கரிதோமுகில்போன்முழங்கி
அதிரநடந்திடும்யானையுந்தேருமதன்பின்வருங்
குதிரையுங்காதங் கிழவியுங்காதங் குலமன்னனே.

## சோடசநாமங்கள்.

சுமுகாயநமஃ ஏகதந்தாயநமஃ கபிலாயநமஃ கஜகர்ணிகாயநமஃ லம்போதராயநமஃ விகடாயநமஃ விக்னராஜாயநமஃ கணபதியேநமஃ தூமகேதுவேநமஃ கணாதியக்ஷாயநமஃ பாலசந்திராயநமஃ கஜானநாயநமஃ வக்ரதுண்டாயநமஃ சூர்ப்பகர்ணயநமஃ ஹேரம்பாயநமஃ ஸ்கந்தபூர்வஜாயநமஃ.

## சுலோகம்.

மூஷிகவாஹன மோதகஹஸ்த, சாமரகர்ண விளம்பிதசூஸ்திர, வாமனரூப மயேஸ்வரபுத்ர விக்நவிநாயக பாதநமஸ்தே.

அம்பிகா ஹிருதயானந்தம் மாத்ருபிப் பரிவேஷ்டிதம்
பக்தப் பிரிய மதோன்மத்தம் வந்தேகங்கணநாயகம்.

## அகவல்.

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பும் பலவிசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகி லாடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்

# விநாயகரகவல்.

அஞ்சு கரமு மங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீலமேனியும்
நான்ற வாயு நாலிரு புயமும்
மூன்று கண்ணு மும்மதச் சுவடும்
இரண்டு செவியு மிலங்குபொன் முடியும்
திரண்ட முப்புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதங் கடந்த துரிய மெய்ஞ்ஞான
அற்புத நின்ற கற்பகக் களிறே
முப்பழ நுகரு மூஷிக வாகன
இப்பொழு தென்னை யாட்கொள வேண்டித்
தாயா யெனக்குத் தானெழுந் தருளி
மாயாப் பிறவி மயக்க மறுத்துத்
திருந்திய முதலைந் தெழுத்துந் தெளிவாய்
பொருந்தவே வந்தென் னுளந்தனிற் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னிற்
திருவடி வைத்துத் திறமிது பொருளென
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளி
கோடா யுதத்தாற் கொடுவினை களைந்தே
உவட்டா வுபதேசம் புகட்டியென் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையுங் காட்டி
ஐம்புலன் றன்னை யடக்கு முபாயம்
இன்புறு கருணை யினிதெனக் கருளி
கருவிக ளொடுங்குங் கருத்தினை யறிவித்
திருவினை தன்னை யறுத்திருள் கடிந்து
நலமொரு நான்குந் தந்தெனக் கருளி

மலமொரு மூன்றின் மயக்க மறுத்தே
ஒன்பது வாயி லொருமந்திரத்தால்
ஐம்புலக் கதவை யடைப்பதுங்காட்டி
ஆறா தாரத் தங்குச நிலையும்
பேறா நிறுத்திப் பேச்சுரை யறுத்தே
இடைபிங் கலையி னெழுத்தறி வித்துக்
கடையிற் சுழிமுனைக் கபாலமுங் காட்டி
மூன்று மண்டலத்தின் முட்டிய தூணின்
நான்றெழு பாம்பி னாவிலுணர்த்திக்
குண்டலி யதனிற் கூடிய வசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட வுரைத்து
மூலா தாரத்தின் மூண்டெழு கனலைக்
காலா லெழுப்புங் கருத்தறிவித்தே
அமுத நிலையும் ஆதித்த னியக்கமும்
குமுத சகாயன் குணத்தையுங் கூறி
இடைச்சக் கரத்தி னீரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தி னுறுப்பையுங் காட்டிச்
சண்முக தூலமுஞ் சதுர்முக சூட்சமும்
எண்முக மாக வினிதெனக் கருளிப்
புரியட்ட காயம் புலப்பட வெனக்குத்
தெரியெட்டு நிலையுந் தெரிசனப் படுத்திக்
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி யினிதெனக் கருளி
என்னை யறிவித் தெனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக்களைந்து

வாக்கு மனமு மில்லா மனோலயம்
தேக்கியே யென்றன் சிந்தை தெளிவித்
திருள்வெளி யிரண்டுக் கொன்றிட மென்ன
அருடரு மானந்தத் தழுத்தியென் செவியில்
எல்லையில்லா வானந்த மளித்து
அல்லல் களைந்தே யருள்வழி காட்டிச்
சத்தத்தி னுள்ளே சதாசிவங் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கங்காட்டி
அணுவிற் கணுவா யப்பாலுக் கப்பாலாய்
கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி
வேடமு நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தி னரும்பொரு டன்னை
நெஞ்சக் கரத்தி னிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக விரைகழல் சரணே.

விநாயகர் அகவல்
முற்றிற்று.

---

சுக்லாம் பரதரம் விஷ்ணும்
ஸஸிவர்ணம் சதுர்புஜம்
பிரசன்ன வதனந் தியாயேத்
ஸர்வவிக்னோ பசாந்தயே.

கணபதி துணை.

# வேழமுகம்.

## காப்பு.

வேழ முகத்து விநாயகனைத்தொழ
வாழ்வு மிகுத்து வரும்
வெள்ளைக்கொம்பன் விநாயகனைத்தொழத்
துள்ளியோடுந் தொடர்ந்த வினைகளே.

## பிள்ளையார் சிந்தனை.

| | |
|---|---|
| சிந்தித் தவர்க்கருள் கணபதி | ஜெய ஜெய |
| சிரிய வானைக் கன்றே | ஜெய ஜெய |
| அன்புடை யமரர்கட் காப்பாய் | ஜெய ஜெய |
| ஆவித் துணையே கணபதி | ஜெய ஜெய |
| இண்டைச் சடைமுடி யிறைவா | ஜெய ஜெய |
| ஈசன் றந்தருள் மகனே | ஜெய ஜெய |
| உன்னிய கருமமுடிப்பாய் | ஜெய ஜெய |
| ஊர்நவ சந்தி யுகந்தாய் | ஜெய ஜெய |
| எம்பெரு மானே யிறைவா | ஜெய ஜெய |
| ஏழுல குந்தொழ நின்றாய் | ஜெய ஜெய |
| ஐயா கணபதி நம்பியே | ஜெய ஜெய |
| ஒற்றை மருப்புடை வித்தகா | ஜெய ஜெய |

பராவித்தொழுவோம் நங்காய்
நங்காய் நங்காய் நமஸ்து
ஞானக் கொழுந்தே நமஸ்து
கல்விக் கரசே நமஸ்து
கணக்கறி தேவி நமஸ்து
சொல்லும் பொருளே நமஸ்து
சூட்சும ரூபி நமஸ்து

சரஸ்வதி சிந்தனை முற்றிற்று.

---

## பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை.

எள்ளு பொரித்த பொரியும்
இடித்தவல் தன்னிற் கலந்து
வள்ளிக் கிழங்கைத் திருத்தி
வாழைப் பழத்தை யுரித்து
உள்ளிய பாகு திரட்டி
உண்ணும்படியே தருவோம்
கள்ளத் திருமான் மருகா
கணபதி சப்பாணி கொட்டாயே
ஆறு தேங்கா யவல்தூணி
அதற்குத் தகுந்த வெள்ளுருண்டை
நூறு குடலை மாம்பழம்
நொடிக்குமளவி லமுதுசெய்ய-வல்லபிள்ளாய்
ஆடாய் பாடாய் சங்கீதம்
அடியேன் காணகின் றுடாயே
சண்டப் பெருச்சாளி யேறி

சடுகுடு வென்ன வுலாவி
இண்டை யிளம்பிறை சாய
இணங்கிய கொம்போ ரிரண்டுத
அண்டத் தமரர் துதிக்க
அடைக்கலங் காத்த பிரானே
குண்டைக் கணபதி நம்பி
குடங்கையாற் சப்பாணி கொட்டாயே
பொழுது விடிந்தது பொழுது
போய்த்திரு மலைமே லேறவேண்டும்
ஏறி மலர்ந்தபூக் கெய்யவேண்டும்
கொய்து திருமுடி சாத்தவேண்டும்
சாத்தி கைகட்டி நிற்கவேண்டும்
நின்று திருவிளக் கேற்றவேண்டும்
ஏற்றி யரகர வென்னவேண்டும்
ஐயா கணபதி நம்பி
ஆயிர நாம முடையாய்
பொய்யில்லா மெய்யை யுரைப்பாய்
போன தெல்லாந் தருவாய்
வெள்ளித் தாலம் பூசிவைத்து
வேண்டும் படியே யிட்டுண்டு
பள்ளிக் கேற்க நடவாய்
பாக்கியஞ் செய்த பிள்ளாய்
பிள்ளாய் பிள்ளாய் பேருடையாய்
பிரம மென்னும் பெயருடையீர்
பிள்ளைகள் தங்கள் பிரானுரே

ஓங்கிய வானைக் கன்றே ஜெய ஜெய
ஔவிய மில்லா வருளே ஜெய ஜெய
அஃகறு வத்து வானவா ஜெய ஜெய
கணபதி யென்வினை களைவாய் ஜெய ஜெய
ஙப்போர் மழுவோன் றேந்தியே ஜெய ஜெய
சங்கரன் மகனே சதுரா ஜெய ஜெய
ஞயநம் பினர்பா லாடிய ஜெய ஜெய
இடம்படு விக்கின விநாயகா ஜெய ஜெய
இணங்கிய பிள்ளைகள் தலைவா ஜெய ஜெய
தத்துவ மறைதெரி வித்தகா ஜெய ஜெய
நன்னெறி விக்கின விநாயகா ஜெய ஜெய
பள்ளியி லுறைதரும் பிள்ளாய் ஜெய ஜெய
மன்று ளாடும் மணியே ஜெய ஜெய
இணங்கிய ஞானக் குன்றே ஜெய ஜெய
அரவக் கிண்கிணி யார்ப்பாய் ஜெய ஜெய
இலகக்கொம்பன் றேந்தியே ஜெய ஜெய
வஞ்சனை பலவுந் தீர்ப்பாய் ஜெய ஜெய
அழகிய வானைக் கன்றே ஜெய ஜெய
இளமத யானை முகத்தாய் ஜெய ஜெய
இரகுபதி விக்கின விநாயகா ஜெய ஜெய
அநந்தலோடாதியி லடிதொழ வருளே.

பிள்ளையார் சிந்தனை முற்றிற்று.



உ

கணபதிதுணை.

# சரஸ்வதிசிந்தனை.



புத்தகத் துள்ளுறைமாதே
பூவி லமர்ந்துறை வாழ்வே
வித்தகப் பெண்பிள்ளை நங்காய்
வேதப் பொருளுக் கிறைவி
முத்தின் குடையுடையாளே
மூவுல குந்தொழு தேவி
செப்பு கவித்தன முலையாய்
செவ்வரி யோடிய கண்ணாய்
முத்து நிரைத்தவெண்பல்லாய்
முருக்கம் பூமேனி நிறத்தாளே
தக்கோலந் தின்ற துவர்வாயாய்
சரஸ்வதி யென்னுந் திருவே
எக்காலு முன்னைத் தொழுவோம்
எழுத்தறி புத்தி பண்ணுவிப்பாய்
ஆக்கா யெம்பெரு மாட்டி
அழகிய பூவணை மீதாய்
நோக்கா யென்மிடி தீர
நொடிக்கும் பிராமணத்தி நோக்காயே
சாலு நெல்லரிசி கொண்டு
சரஸ்வதி பூசை பண்ணி
பாலொடு பழத்தை நிரப்பிப்

பராவித் தொழுவோம் நங்காய்
நங்காய் நங்காய் நமஸ்து
ஞானக் கொழுந்தே நமஸ்து
கல்விக் கரசே நமஸ்து
கணக்கறி தேவி நமஸ்து
சொல்லும் பொருளே நமஸ்து
சூட்சும ரூபி நமஸ்து

சரஸ்வதி சிந்தனை முற்றிற்று.

---

## பள்ளியிற் பிள்ளையார் சிந்தனை.

எள்ளு பொரித்த பொரியும்
இடித்தவல் தன்னிற் கலந்து
வள்ளிக் கிழங்கைத் திருத்தி
வாழைப் பழத்தை யுரித்து
உள்ளிய பாகு திரட்டி
உண்ணும்படியே தருவோம்
கள்ளத் திருமான் மருகா
கணபதி சப்பாணி கொட்டாயே
ஆறு தேங்கா யவல்தூணி
அதற்குத் தகுந்த வெள்ளுருண்டை
நூறு குடலை மாம்பழம்
நொடிக்குமளவி லமுதுசெய்ய-வல்லபிள்ளாய்
ஆடாய் பாடாய் சங்கீதம்
அடியேன் காணகின் றாடாயே
சண்டப் பெருச்சாளி யேறி

சடுகுடு வென்ன வுலாவி
இண்டை யிளம்பிறை சாய
இணங்கிய கொம்போ ரிரண்டுத
அண்டத் தமரர் துதிக்க
அடைக்கலங் காத்த பிரானே
குண்டைக் கணபதி நம்பி
குடங்கையாற் சப்பாணி கொட்டாயே
பொழுது விடிந்தது பொழுது
போய்த்திரு மலைமே லேறவேண்டும்
ஏறி மலர்ந்தபூக் கெய்யவேண்டும்
கொய்து திருமுடி சாத்தவேண்டும்
சாத்தி கைகட்டி நிற்கவேண்டும்
நின்று திருவிளக் கேற்றவேண்டும்
ஏற்றி யரகர வென்னவேண்டும்
ஐயா கணபதி நம்பி
ஆயிர நாம முடையாய்
பொய்யில்லா மெய்யை யுரைப்பாப்
போன தெல்லாந் தருவாய்
வெள்ளித் தாலம் பூசிவைத்து
வேண்டும் படியே யிட்டுண்டு
பள்ளிக் கேற்க நடவாய்
பாக்கியஞ் செய்த பிள்ளாய்
பிள்ளாய் பிள்ளாய் பேருடையாய்
பிரம மென்னும் பெயருடையீர்
பிள்ளைகள் தங்கள் பிரானுரே

இருந்தீரே பிரானுரே
எங்கள் மனது கலங்காதே
பள்ளித் தடுக்குங் கையேடும்
படிக்குஞ் சுவடியும் பரிந்தெடுத்துத்
துள்ளித் திரியுங் கால்தன்னை
சுகமே நிறுத்தும் பிரானுரே
ஓடாதே யொளியாதே
இட்டதே சோறும் பெற்றதே கறியும்
உண்டு தூங்கிப் பூசைமுடித்து
வெள்ளி முளைக்கப் பள்ளிக்கு வாரும்

பள்ளியிற்பிள்ளையார்சிந்தனை முற்றிற்று.

# உலகநீதி.

காப்பு.

உலகநீதி புராணத்தை யுரைக்கவே
கலைகளாய்வருங் கரிமுகன்காப்பு.

ஓதாமலொருநாளு மிருக்கவேண்டாம்
ஒருவரையும்பொல்லாங்கு சொல்லவேண்டாம்
மாதாவையொருநாளும் மறக்கவேண்டாம்
வஞ்சனைகள்செய்வாரோ டிணங்கவேண்டாம்
போகாதவிடந்தனிலே போகவேண்டாம்
போகவிட்டுப்புறஞ்சொல்லித் திரியவேண்டாம்
வாதாடுங்குறவரிட வள்ளிபங்கன்
மயிலேறும்பெருமானை வாழ்த்தாய்நெஞ்சே. (க)

நெஞ்சாரப்பொய்தன்னைச் சொல்லவேண்டாம்
நிலையில்லாக்காரியத்தை நிறுத்தவேண்டாம்
நஞ்சுடனேயொருநாளும் பழகவேண்டாம்
நல்லிணக்கமில்லாரோ டிணங்கவேண்டாம்
அஞ்சாமற்றனிவழியே போகவேண்டாம்
அடுத்தவரையொருநாளுங் கெடுக்கவேண்டாம்
மஞ்சாருங்குறவரிட வள்ளிபங்கன்
மயிலேறும்பெருமாளை வாழ்த்தாய்நெஞ்சே. (உ)

மனம்போனபோக்கெல்லாம் போகவேண்டாம்
மாற்றானையுறவென்று நம்பவேண்டாம்
தனந்தேடியுண்ணமற் புதைக்கவேண்டாம்
தருமத்தையொருநாளும் மறக்கவேண்டாம்
சினந்தேடியல்லலையுந் தேடவேண்டாம்
சினத்திருந்தார்வாசல்வழி சேரவேண்டாம்
வனந்தேடுங்குறவரிட வள்ளிபங்கன்
மயிலேறும்பெருமாளை வாழ்த்தாய்நெஞ்சே. (ஙு)

குற்றமொன்றும்பாராட்டித் திரியவேண்டாம்
கொலைகளவுசெய்வாரோ டிணங்கவேண்டாம்
கற்றவரையொருநாளும் பழிக்கவேண்டாம்
கற்புடையமங்கையரைக் கருதவேண்டாம்
கொற்றவனோடெதிர்மாறு பேசவேண்டாம்
கோயிலில்லாவூரிற் குடியிருக்கவேண்டாம்
மற்றுநிகரொவ்வாத வள்ளிபங்கன்
மயிலேறும்பெருமானை வாழ்த்தாய்நெஞ்சே. (ச)

வாழாமற்பெண்ணை வைத்துத் திரியவேண்டாம்
மனையாளைக்குற்றமொன்றுஞ் சொல்லவேண்டாம்
வீழாதபடுகுழியில் வீழவேண்டாம்
வெஞ்சமரிற்புறங்கொடுத்து மீளவேண்டாம்
தாழ்வானகுலத்துடனே சேரவேண்டாம்
தாழ்ந்தவரைப்பொல்லாங்குசொல்லவேண்டாம்
வாழ்வாருங்குறவரிட வள்ளிபங்கன்
மயிலேறும்பெருமானை வாழ்த்தாய்நெஞ்சே. (ரு)

வார்த்தைசொல்வார் வாய்பார்த்துத் திரியவேண்டாம்
மதியாதார்தலைவாசல் மிதிக்கவேண்டாம்
மூத்தோர்சொல் வார்த்தைதனை மறக்கவேண்டாம்
முன்கோபக்காரரோடிணங்கவேண்டாம்
வாத்தியார்கூலியை வைத்திருக்கவேண்டாம்
வழிபறித்துத்திரிவாரோ டிணங்கவேண்டாம்
சேர்ந்தபுகழாளனொரு வள்ளிபங்கன்
திருக்கைவேலாயுதனைச்செப்பாய்நெஞ்சே. (சா)

கருதாமற்கருமங்கள் முடிக்கவேண்டாம்
கணக்கழிவையொருநாளும் பேசவேண்டாம்
பொருவார்தம்போர்க்களத்திற் போகவேண்டாம்
பொதுநிலத்திலொருநாளு மிருக்கவேண்டாம்
இருதாரமொருநாளுந் தேடவேண்டாம்
எளியாரையெதிரிட்டுக் கொள்ளவேண்டாம்
குருகாரும்புனங்காக்கும் ஏழைபங்கன்
குமரவேள்பாதத்தைக் கூறாய்நெஞ்சே. (எ)

சேராதவிடந்தனிலே சேரவேண்டாம்
செய்தநன்றி யொருநாளு மறக்கவேண்டாம்
ஊரோடுங்குண்டிணியாய்த் திரியவேண்டாம்
உற்றுரையுதாசினங்கள் சொல்லவேண்டாம்
பேரானகாரியத்தைத் தவிர்க்கவேண்டாம்
பிணைபட்டுத்துணைபோய்நீ திரியவேண்டாம்
வாதாடுங்குறவரிட வள்ளிபங்கன்
மயிலேறும்பெருமாளை வாழ்த்தாய்நெஞ்சே. (அ)

மண்ணினின் றுமண்ணோரஞ் சொல்லவேண்டாம்
மனஞ்சலித்துத்திடுகிட்டுத் திரியவேண்டாம்
கண்ணழிவுசெய்துதுயர் காட்டவேண்டாம்
காணுதவார்த்தையைக் கட்டுரைக்கவேண்டாம்
புண்படவேவார்த்தைதனைச் சொல்லவேண்டாம்
புறஞ்சொல்லித்திரிவாரோ டிணங்கவேண்டாம்
மண்ணளந்தான்மருமகனர் மைந்தனெங்கோன்
மயிலேறும்பெருமாளை வாழ்த்தாய்நெஞ்சே. (கூ)

மறம்பேசிதிரிவாரோ டிணங்கவேண்டாம்
வாதாடிவழக்குரைத்துச் சொல்லவேண்டாம்
திறம்பேசிகலகமிட்டுத் திரியவேண்டாம்
தெய்வத்தையொருநாளு மறக்கவேண்டாம்
இறந்தாலும்பொய்தன்னைச் சொல்லவேண்டாம்
ஏசலிட்டவுற்றுரை நத்தவேண்டாம்
குறம்பேசிவாழ்கின்ற வள்ளிபங்கன்
குமாரவேணுமத்தைக் கூறாய்நெஞ்சே. (௧௦)

அஞ்சுபேர்கூலியைக் கைக்கொள்ளவேண்டாம்
அதுவேதுதம்பிரான் சொல்லக்கேளாய்
தஞ்சமுடன்வண்ணு னுவிதன்கூலி
சகலகலையோதிவித்த வாத்தியார்கூலி
வஞ்சமுடன்நஞ்சறுத்த மருத்துவச்சிகூலி
மகாநோவுதனைத்தீர்த்த பண்டிதன்கூலி
இன்சொலுடனிவர்கூலி கொடாதபேரை
யேதேதுசெய்வாளுே வேமன்றுனே. (கக)

கூறுக்கியொருகுடியைக் கெடுக்கவேண்டாம்
கொண்டைமேற்பூத்தேடி முடிக்கவேண்டாம்
தூறுக்கித்தலையிட்டுத் திரியவேண்டாம்
துர்ச்சனராய்த்திரிவாரோ டிணங்கவேண்டாம்
வீறுனதெய்வத்தை யிகழவேண்டாம்
வெற்றியுள்ளபெரியோரை வெறுக்கவேண்டாம்
மாறுனகுறவரிடவள்ளிபங்கன்
மயிலேறும்பெருமாளை வாழ்த்தாய்நெஞ்சே. (கஉ)

ஆதரித்துபலவகையாற் பொருளுந்தேடி
அருந்தமிழாலறுமுகனைப் பாடவேண்டி
ஓதுவித்தவாசகத்தா லுலகநாதன்
உண்மையாய்பாடிவைத்த உலகநீதி
காதலித்துக்கற்றேருங் கேட்டபேருங்
கருத்துடனேநாடோறுங்களிப்பினேடு
போதமுற்றுமிகவாழ்ந்து புகழுந்தேடிப்
பூலோகமுள்ளளவும் வாழ்வர்தாமே. (கங)

உலகநீதி முற்றிற்று.

உ

கணபதி துணை.

# தேவாரப்பண்.

ஐய்யனே போற்றி போற்றி யமலனே போற்றி போற்றி
துய்யனே போற்றி போற்றி சோதியே போற்றி போற்றி
பொய்யனே எனையாட் கொண்ட போதனே செழுமலர்ப்பூங்
கையனே கைலைவாழுங் கணேசனே போற்றி போற்றி.

போதமே போற்றி போற்றி புனிதனே போற்றி போற்றி
வேதமே போற்றி போற்றி விரிகதிர் மணியே போற்றி
நாதமே போற்றி போற்றி நல் லருமருந்தே போற்றி
காதமே மணக்குஞ் சோலைக் கலைசைவா ழரசே போற்றி

அருமறை முடிவே போற்றி யானந்த வடிவே போற்றி
பெருமதக் களிறே போற்றி பேசரும் பொருளே போற்றி
தருமநற் கடலே போற்றி தத்துவப் பொருளே போற்றி
கருமதுகரஞ் சூழ்சோலைக் கலைசைவாழ் தேவே போற்றி.

ஆதியு மானாய் போற்றி அந்தமு மானாய் போற்றி
நீதியு மானாய் போற்றி நித்தியமானாய் போற்றி
சாதியு மானாய் போற்றி தண்ணருளானாய் போற்றி
சோதியு மானாய் போற்றி கயிலைவாழ் துரையே போற்றி.

அரியயனானாய் போற்றி அகிலமு மானாய் போற்றி
துரிய முமானாய் போற்றி துலங்கொளி யானாய் போற்றி
வரியளியளகவாமி மதலையு மானாய் போற்றி
அரியநல் வளங்க ளோங்குங் கயிலைவா ழரசே போற்றி.

விண்டல மானாய் போற்றி விண்ணவ ரானாய் போற்றி
மண்டல மானாய் போற்றி மன்னுயி ரானாய் போற்றி
தொண்டனேன் வினையகற்றுந் தூயமாதவனே போற்றி
கொண்டலே தவழுமேடை கலசைவாழ் கோவே போற்றி.

முத்தனை மூரலார்தம் மோகத்தை யொழிப்பாய் போற்றி
அத்தனை வலம் வந்தன்று அருங்கனி பெற்றாய் போற்றி
பத்தர்க ளகத்தின் மேவும் பதும நேர் பத்தாய் போற்றி
இத்தரை முழுதும் போற்றுங் கயிலைவா ழிறையே போற்றி.

கண்ணனே களிக்க வந்த மருகனே கருதும் வேளுக்
கண்ணனே யமரரேற்று மற்புதக் குன்றே போற்றி
இண்ணனேர் முலையாள் மாது வல்லபன் மகிழுநீல
வண்ணனே கலசை வாழும் வள்ளலே போற்றி போற்றி.

தடவரை தனைப் பழிக்குந் தனங்களான் மையல் பூட்டும்
படவரவல் குலார்தம் படுகுழி தனில் வீழாமல்
மடலவிழ் மலர்ப் பாதத்தை வணங்கினா னிருக்கச் செய்வாய்
திடமுளத் தவத்தோர் போற்றுங் கலசைவாழ்திதியேபோற்றி.

சுந்தர விளமை நீங்கத் துயர்தரு மூப்பைத் தாங்கிச்
சந்ததம் பிணியால் வாடித் தயங்கினன் மதிமயக்கி
அந்தகன் றனைக் கண்டஞ்சி யருளுதந் தென்னைக் காப்பாய்
சந்ததமலர்த் தடஞ்சூழ்க் கலசை செங்கழுநீர் போற்றி.

## கண்ணிகள்.

சீரார்கலசைவருஞ் செங்கழுநீரைங்கரனே
காரார்கஜமுகனே கண்ணேகணேஸ்வரனே.
முத்தனேமூவா முதலேயரும்பொருளே
கர்த்தனேயென்றன் கருத்தேகணேஸ்வரனே.

பஞ்சதருக்கனியே பன்னுமறையுட்பொருளே
குஞ்சரநற்கன்றே கோவே கணேஸ்வரனே.
அரிமகனேவென்ற வரனார்மகிழ்சுதனே
கரிமுகனேசர்க்கரையே கற்கண்டேகணேஸ்வரனே.
விண்ணேவொளியே விளங்குநவமணியே
கண்ணேபேரின்பக் கடலேகணேஸ்வரனே.
தேனேதெவிட்டாத் தெள்ளமுதேயெங்கள்பெரு
மானே, மெய்ஞ்ஞான மணியேகணேஸ்வரனே.
போதப்பொருளே புகலரியநல்லருளே
வேதப்பொருளே வெளியேகணேஸ்வரனே.
முத்தேபவளமே முக்கணிறையேசுடரே
சித்தேபரவடிவே தெளிவேகணேஸ்வரனே.
ஊனாகியுள்ளே யுறையுயிராயெப்பொருட்குங்
கோனாகின்ற குணக்குன்றே கணேஸ்வரனே.
தரைமீதில்வாழுந் தவத்தர்மனச்செந்தா
மரைமீதிலங்கு மதகரமேகணேஸ்வரனே.
பத்தியலாமற்பணிந்திடும் பத்தர்க்கிரங்கும்
நித்யகல்யாணகுண நிதியேகணேஸ்வரனே.
ஔவியமிலாத வகமுடையார்கண்களிக்குந்
திவ்வியகுஞ்சரநற் றேவேகணேஸ்வரனே.
பண்ணார்மொழியுமையாள் பாலகனேயுன்வடிவைக்
கண்ணாரக்கண்டு களிப்பேன்கணேஸ்வரனே.
நித்தந்தெறிவையர் நிதம்பத்தில்வீழ்ந் தழலென்
சித்தந்தெளியவருள் செய்வாய்கணேஸ்வரனே.
வள்ளலெனவுன்னீ வழுத்தலறியாதகொடுங்

கள்ளனெனையாளக் கருதாய்கணேஸ்வரனே.
வஞ்சமெனத்தாட்டமெலா மாய்ந்தசிரத்துன்பாதக்
கஞ்சமலர்சூட்டகடைக் கண்பார்கணேஸ்வரனே.
முன்னம்பிறந்த பிறப்போமுடிவில்லையான்
இன்னம்பிறக்க விதிக்காதேகணேஸ்வரனே.
செங்கமலவைங்கரநின் சீரார்ப்பதத்திலன்பு
தங்கமலநீங்கவரந் தருவாய்கணேஸ்வரனே.
பொய்யானவாழ்க்கையிலென் புத்திசுழலாதவண்ணம்
மெய்யானஓர்மிலைமை விளம்பாய்கணேஸ்வரனே.
சோதியேயெங்குந் துலங்குமணிவிளக்கே
ஆதியேயேழைக் கருள்வாய்கணேஸ்வரனே.
சண்டனார்பாசந் தனிற்படாமுன்னமெனைத்
தொண்டனாயாள்வாய் துணையேகணேஸ்வரனே.
துய்யவருள்வடிவைத் தொழும்பரடிபூசைநிதஞ்
செய்யவருள்செய்வாய் சிறப்பேகணேஸ்வரனே.
நஞ்சமனதுடையார் நட்பொழிந்துன்பாதமலர்
நெஞ்சமகலாமலரு ணிதியேகணேஸ்வரனே.
பாசப்பசாசுயென்னைப் பற்றியிழுக்காமலதை
நாசப்படுத்தும்விதம் நவில்வாய்கணேஸ்வரனே.
திரையற்றசாகரம்போற் சிறியேன்மடமடங்கி
உரையற்றமோனவுரு வாமோகணேஸ்வரனே.
மன்னவர்கள்வாழ்வெல்லா மண்ணாவதுங்கண்டும்
இன்னமதைவாஞ்சிப்ப தென்னேகணேஸ்வரனே.
முத்தொழிற்குக்காரணனே முல்லைநகையார்மோகப்
பித்தொழியுந்தந்திரத்தைப் பேசாய்கணேஸ்வரனே.

நின்சலசத்தாளே நிஜமாகநம்பியான்
சஞ்சலத்தால்வாடத் தகுமோகணேஸ்வரனே.
சனியாம்சம்சாரத்தளருமிவ் வேழைமுகம்
இனியாகிலும்பார்ப்பாய் யெந்தாய்கணேஸ்வரனே.
தேனேவெனுமொழியார் சிற்றின்பத்தென்னெஞ்சம்
ஏனேவலேவ தியம்பாய்கணேஸ்வரனே.
முடியாவஞ்ஞானவிருண் மூடாமலென்மனதிற்
குடியாயிருந்தாள்வாய் கோவேகணேஸ்வரனே.
சொல்லுங்கடந்தச் சுகாதீதக்கொன்றன்மனக்
கல்லுங்கரையும்விதங் காணேன்கணேஸ்வரனே.
கச்சிருக்கும்பூண்முலேயார் காதலேயொழித்தாள்வாய்
நச்சிருக்குங்கண்டனருள் நாதாகணேஸ்வரனே.
ஐம்புலவேடர்க்காளா யடியேனுகாமலுனே
யன்புருகப்பாட வரமருள்வாய்கணேஸ்வரனே.
கல்லாமநாளேக் கழித்தேனெனக்குன்னே
யல்லாமலார்துணையா வார்காண்கணேஸ்வரனே.
என்புதசையாலமைந்த யிவ்வுடலிலாசைவிட்டே
அன்பினுலுன்னே யறிவேனேகணேஸ்வரனே.
மூவாசைவந்தென்னே மூடாமலுந்தனையான்
தேவாவென்றேத்தவருள் செய்வாய்கணேஸ்வரனே.
முக்காலெனக்குவரா முன்னமேயாண்டுகொள்வாய்
திக்காவார்யாரோ செப்பாய்கணேஸ்வரனே.
நித்தமுனேச்சேவித்து நின்புகழைப்பாடியுன்றன்
சித்தமகிழ்ந்திருக்கச் செய்வாய்கணேஸ்வரனே.
குற்றங்குடிகொண்டக் கொடியனுனுமுன்றன்

சித்தம்பொருத்தாள்வாய் தேவேகணேஸ்வரனே.
எல்லையிலாத்துன்பத் தேழைகலங்காதவண்ணந்
தொல்லைவினையைத் துடைப்பாய்கணேஸ்வரனே.
வாதித்துமல்லாடு மட்டிமனக்குரங்கைச்
சோதிப்பதோபெரிது செப்பாய்கணேஸ்வரனே.
ஆவித்துணையே யண்ணலேயுன்னையன்றிப்
பாவிமுகம்பார்ப்பாரார் பதியேகணேஸ்வரனே.
எட்டிரண்டுந்தோராத வேழையேனென்றென்னை
விட்டிடிலென்செய்வேன் விண்ணேகணேஸ்வரனே.
பட்டப்பாடெல்லாம் பார்த்துவெளியேனையின்னந்
தட்டக்கழித்தாற் றகுமோகணேஸ்வரனே.
சாலவுனைப்பணியாச் சீரச்சுமைசுமந்தே
காலங்கழித்தேன் கண்ணேகணேஸ்வரனே.
அடிகனமில்லாத மல்லையுமரக்கலம்போல்
அடியேனகமலைய லாமோகணேஸ்வரனே.
நன்றுநீதுக்கு னடுவானைநின்னருளை
என்றுநான்பெற்றுய்வ தெந்தாய்கணேஸ்வரனே.
ஆடுங்கறுங்கா யலையுமனநின்பதத்தில்
ஆடும்படிசெய்வா யருளேகணேஸ்வரனே.
அல்லும்பகலும் யாறுமிப்பாவிமுகங்
கல்லுங்கண்டாற்கரையுங் கண்டாய்கணேஸ்வரனே.

முற்றிற்று.

---

உ

கடவுள்துணை.

வல்லபை கணேசர் பஞ்சரத்தினம்.

# விநாயக கவசம்,

# சிவகவசம், சத்திகவசம்.



இவை

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910.



உ

கணபதிதுணை.

# சென்னை வல்லபை கணேசர்

## பஞ்சரத்தினம்.



பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்

ஓங்கார வடிவான மூர்த்தமே செந்துகிரி னொளி
மேவு திருமுடி யுமே லொளிர்கின்ற விளமதியு மறுகு
மந் தாரமு முபயகன் னங்க ளிபலும், பாங்கான நல்
லடியர் தமைநோக்கு மூவிழியும் பரிசுதவு நீண்டகர
மும் பக்குவங் கொண்டவான் மாக்களாணவக்கரி பணி
க்கு மங்குச பாசமும், நீங்காத தொண்டானவானவர்க
டம்பகையை நீக்குமோர் கொம்பி னிலையு நிலவுபவ
னப்புவன போகநுகர் விக்கவே நேர்ந்தலட்டுகக்காமும்
யான், ஆங்கார மானபே யோடநின் னடியோடு மகமே
வ நிற்ற லெந்நா ளருள்கொண்டு சென்னையம் பதிமேவு
வல்லபையொ டமர்வினா யகதெய்வமே. க

அந்தாமரைத்திருவே யன்னமே வன்னமே யஞ்சுகக்
கிளவி யாடு மாடுமயி லேயென்ன வங்கலார்தம்முருவ
மானவை தமக்கு நேர்மை, செந்தாம ரைக்குவளைவள்
ளைகுமிழ் கோங்குமுலை செந்துகிர்க் கோடலர்தளிர்

திகழால் ரம்பையா வம்வரா லென்னவே செப்பிச்செ ருக்கி நின்றேன், கொந்தார் மலர்க்கொன்றை யேயுங் கோ டீரனருள் குஞ்சர முகத்த வொற்றைக் கோட் டென் வினையோட வருள்செயுந் தவவேட கொக்கரை செறித்த வகட, அந்தா துருக்குமந்தாரவென வொரு போது மன்பினொ டுரைக்க வறியே னருள்கொண்டு சென்னையம் பதிமேவு வல்லபையொ டமர்விநா யக தெய் வமே. ௨

மூளைத்தவரை யிடைமூளைத் தவரைவரை வில்லா முடித்தவரை நாண்மலர்க்கண் முநிவந் தவரையவர் மூதண்ட வேதண்ட முற்றும் படைக்க முன்னர்க், கிளை த்தவன சத்தொடென் பான்பதும் முங்கொண்டகேசவ ரை நீள்கரத்துட் கோடறக் கொண்டுபின் னவ்வழியு ஞ் செவிவழியுங் கிளரச் செலுத்தியன்பு, திளைத்தபெ ரி யோயெனையு மாட்கொளத் திருவுளஞ் சேர்த்தருள வேண்டுகின்றேன் திகழ்மணி முடிப்பணங் கச்சென வயாவினிற் செறிவித்த வேரம்பனே, அளைப்புகுமகித் தனை நிகர்த்தனன் னெனவெனை யகற்றிட நினைக்கல் தண்டா யருள்கொண்டு சென்னையம் பதிமேவு வல்ல பையொ டமர்விநா யகதெய் வமே. ௩

மறைவழிப் பட்டவாசார நிலைசற்றிலேன்மதியிலேன் மதிவா ணர்பால் மருவிடப் பெற்றிலே னெந்நெறியினி னிலைநிற்க மாட்டுவே னேழை யேனுன், குறையுளே னிழினர்வா ளுறையுளேன் காமா திகோளர்பாலுறவு

ளேன்பல் கோள்கரவு கற்றுளேனுள்பலவு வீணிற் குறைத்திடுவ னேற்றோர் கள்பால், இறையுளேயன்பினோடியாத குணமுளே னேனுமற் றையபிறவிகட் கென்செயக் கூடுவேன் கூடுவா னமனென் னு மெண்ணமொரு சிறிது மில்லேன், அறைகழற் பாதனே யெனையாளவேண்டினே னகல கிற்றிலே போதனே யருள்கொண்டுசென்னையம்பதிமேவுவல்லபையொடமர்விநாயகதெய்வமே

கல்லாத புல்லர்பா லில்லாமை யோதக் கருத்துடு பல ருதியே கற்பனைகள் சாலச் செறித்திசை புகட்டிக் கவிச்சந்த மாலைசெய்து, மல்லார்ந்த தோளனே யெனறணீஇப் பசும்பொய்கள் மனமாறவேபு கன்று மருகாம லறுகால் வளைந்தூது மந்தார மாலைதுயலும்புயத்தோய், நில்லாதவாழ்வினிலே நிற்குநெஞ் சுடையேனின் னேயவடி மலர்து திக்க நீதமை புரிந்தருள் வழங்குதி முழங்குதிரை நீத்தமுண் டோன்ஈன்ன னீர், அல்லார்ந்த சோலையூ டேடவருள் வோயெனவாற்றிடக் கருணைகூர்வா யருள்கொண்டு சென்னை யம்பதிமேவு வல்லபையொ டமர்விநா யகதெய் வமே. ௫

மு ற் றி ற் று.

---

இஃது, ம-ள-ள-ஸ்ரீ

க. வ. திருவேங்கட நாயுடு அவர்கள் இயற்றியது.



உ

கணபதி துணை

# விநாயக கவசம்.

---

ஆதியில் இக்கவசத்தைக் காசிபமுனிவர் முற்க
லமுனிவருக்கு அருளிச்செய்ய, அவர்மாண்
டவிமுனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர்
மரீசிமுனிவருக்கு உபதேசத்தருள,
அவர் பலமுனிவர்களுக்குத் திருவாய்மலர்ந்தரு
ளிச் செய்தனரென்றறிக.

நித்திய கருமங்களை முடித்துப் பரிசுத்தமாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு ஒன்றுபட்டமனசுடனே விநாயகரைத்தியானித்து இதைச் செபிக்கவேண்டும்.

---

வளர்சிகையைப் பராபரமாய் வயங்கு விநாயகர் காக்கவாய்ந்தசென்னி, யளவுபடாவதிகசவுந் தரதேக தோர்க்கடர்தாமமர்ந்துகாக்க, விளரறநெற்றியையென் றும் விளங்கிய காசிபர்காக்க புருவந்தம்மைத், தளர் வின்மகோதரர்காக்க தடவிழிகள்பாலசந் திரனர்காக்க.

கவின்வளருமதரங் கசமுகர்காக்க தாலங்கணக்கி ரீடர்காக்க, நவில்சிபுகங்கிரிசைசுதர் காக்கநனிவாக்கை

விநாயகர்தாங்காக்க, வவிர்நகைதுன் முகர்காக்க வள்ளெழிற்செஞ் செவிபாசபாணிகாக்க, தவிர்தலுறு திளங்கொடிபோல் வளர்மணிநாசியையச்சிந்திதார்த்தர்காக்க.

காமருபூமுகந்தன்னைக்குணேசர் நனிகாக்ககளங் கணேசர்காக்க, வாமமுறுமிருதோளும் வயங்குகந்தபூர்வசர்தா மகிழ்ந்துகாக்க, வேமமுறு மணிமுலைவிக்கின விநாயகன்காக்க விதயந்தன்னைத், தேதமகலுங் கணநாதர்காக்கவகட் டினைத்துலங்கேரம்பர்காக்க.

பக்கமிரண்டையுந்தரா தரர்காக்கபிருட்டத்தைப் பாவநீக்கும், விக்கினகரன்காக்க விளங்கிலிங்கம் வியாளபூடணர்தாங்காக்க தக்ககுய்யந் தன்னைவக்கிரதுண்டர்காக்கசகனத்தையல்ல, லுக்கணபன்காக்க வூருவை மங்களமூர்த்தி யுவந்துகாக்க. ௪

தாழ்முழந்தாண்மகாபுத்தி காக்கவிருபதமேகதந்தர்காக்க, வாழ்கரங்கிப்பிரப்பிரசா தனர்காக்க முன்கையை வணங்குவார்நோ, யாழ்தரச்செய்யாசாபூரகர்காக்கவிரல்பதும வத்தர்காக்க, கேழ்கிளருநகங்கள் விநாயகர்காக்க கிழக்கினிற்புத்தீசர்காக்க. ரு

அக்கினியிற்சித்தீசர் காக்கவுமாபுத்திரர்தென்றிசைகாக்க, மிக்கநிருதியிற்கணே சுரர்காக்கவிக்கினவர்த்தனர்மேற்கென்னுந், திக்கதனிற்காக்கவா யுவிற்கசகன்னன்காக்க திகழுதீசி, தக்கநிதிபன்காக்கவடகிழக்குவீசனந்தனரேகாக்க. சு

ஏகதந்தர்பகன்முழுதுங்காக்கவிரவினுஞ்சந்தியிரண்டன்மாட்டு, மோகையின் விக்கினகிருது காக்கவிராக்கதர்பூதமுறுவேதாள, மோகினிபேயிவையாதி யுயிர்திறத்தால்வருந்துயருமுடிவிலாத, வேகமுறுபிணிபலவும் விலக்குபுபா சாங்குசர்தாம் விரைந்துகாக்க. எ

மதிஞானந் தவந்தான மானமொளிபுகழ் குலம்வண்சரீரமுற்றும், பதிவானதனந்தானி யங்கிரகமனைவிமைந்தர்பயினட்பாதிக், கதியாவுங்கலந்துசர்வாயுதர்காக்ககாமற்பவுத் திரமுன்னுன, விதியாருஞ்சுற்றமெலாமயூரேசரெஞ்ஞான்றும் விரும்பிக்காக்க. அ

வென்றிசீவிதங்கபிலர் காக்கரியாதியெலாம் கவிடர்காக்க, வென்றிவ்வாறி துதனைதுக் காலமுமோதிடினும்பாலிடையூறென்று, மொன்றுறாமுனிவரர்கா ளறிமின்கள் யாரொருவரோதினுலு, மன்றவாங்கவர்தேகம்பிணியறவச்சிரதேக மாகிமன்னும். கூ

விநாயககவசம் முற்றிற்று.

---

பத்தியுடனே இந்தகவசத்தைப் பாராயணஞ்செய்பவர்களுக்குப் பிணியும், வறுமையும். பேய் பூதங்களாலுண்டாகிற பலதுன்பங்களும், கவலைகளும் பாவமுதலியவைகளும் நீங்கும், அன்றியும் பெருஞ்செல்வமும், தீர்ககாயிசும், களத்திரபுத்திர மித்திராதிகளும், உண்டாகும், அன்றியும் யாத்திரையிலே இதைச்செபித்தால், சகலவிக்கினமும்போய்ப் பயன்களெல்லாங்கை

கூடும். உயுதத்திலே இதனைச்சொன்னால் ஜயமுண்டா
கும். இருபத்தொருநாள் நாளொன்றுக்கு ஏழுமுறை
தோத்திரஞ் செய்தால், மாரணநீங்குவதன்றி உச்சா
டனம் ஆக்ருஷனம் ஸ்தம்பன முதலியவைகள் பயனு
றும் இருபத்தொருநாள் நித்தியம் இருபத்தொருதரஞ்
செபித்தால், சிறையிருப்பு விடுதலாய்துமன்றி அரசர்
களுடைய நிஷ்டூரமுநீங்கும். அரசனைக் காணப் போகு
ம்போது பத்தியினால், மூன்றுதரம் இதை ஓதினால் அ
வன்வசப்படுவான். இதைப்படித்தாலும், ஒருவர் சொ
ல்லக் கேட்டாலும், பூசித்தாலும், எப்படிப்பட்டதுன்
பமும் நீங்கும்.

உ
கணபதிதுணை.

# சிவகவசம்.

இந்தக்கவசம் பத்திராயுவென்னும் இராஜகுமா
ரனுக்குவிடபமுனி அருளிச்செய்ததென்று
சைமிசாரணிய முனிவருக்குச் சூதமகா
முனிவர் அநுக்கிரகித்தது.

பங்கயத்தவசின்மேவியிருந் துடற்பற்றுநீக்கி, யங்
குநற்பூதசுத்தி யடைவுடன் செய்தபின்னர்க், கங்கை
யைதரித்தசென்னிகற்பகதருவைச்செம்பொற், கொங்
கைவெற்பனையபச்சைகொடியொடுமுளத்தில்வைத்தே:

அகிலநாயகனுய்ஞான வானந்தரூபியாகித்
துகடுருமணுவாய்வெற்பின் றேற்றமாயுயிரையெல்லாந்
தகவுடனவனியாகித் தரிப்பவனெம்மையிந்த
மகிதலமதனிற்றீமை மருவிடாதருளிற்காக்க. (௨)

குறைபுன லுருவங்கொண்டு கூழ்தொறும்பயன்க ணல்கித்,தரையிடயுயிர்கள்யாருந் தளர்த்திடாவண்ண ங்காப்போ, னிறைநிறைமுகில்களீண்டிநெடுவரை முக ட்டிற்பெய்யும், விரைபுன லதனுள்வீழ்ந்துவிளிந்திடா தெம்மைக்காக்க. (௩)

கடையுகந்தன்னிலெல்லா வுலகமுங்கடவுட்டீயா
லடலைசெய்தமலைதாள மறைதகநடிக்குமீச
னிடைநெறிவனைதாபத்தி லெறிதருசூறைக்காற்றிற்
றடைபடாதெம்மையிந்தத் தடங்கலுலகிற்காக்க. (௪)

தூயகண்மூன்றினோடு சுடரும்பொன்வதனநான்கும்
பாயுமான்மழுவினோடு பகர்வரதாபயங்கண்
மேயதிண்புயங்கணான்கு மிளிருமின்னனைதேச
மாயதற்புருடனெம்மைக் குணதிசையதனிற்காக்க

மான்மழுசூலந்தோட்டி வனைதருமக்கமாலை
கூன்மலியங்குசந்தீத் தமருகங்கொண்டசெங்கை
நான்முகமுக்கணீல நள்ளிருள் வருணங்கொண்டே
யான்வருமகோரமூர்த்தி தென்றிசையதனிற்காக்க.

திவண்மறியக்கமாலை செங்கையோரிரண்டுந்தாங்க
வவிர்தருமிரண்டுசெங்கை வரதத்தோடபயந்தாங்க,கவி

னிறைவதனநான்குங் கண்ணொருமூன்றுங்காட்டுக்,தவ
ளமாமேனிச்சத்தியோ சாதன்மேற்றிசையிற்காக்க.

கறைகெழுமழுவுமானு மபயமுங்கண்ணினும்,
மறைதருதொடையுஞ்செய்ய வங்கைகணான்குமேந்திப்
பொறைகொணான் முகத்துமுக்கட் பொன்னிறமேனி
யோடு, மறைபுகழ்வாமதேவன்வட திசைபதனிற்காக்க.

அங்குசங்கபாலஞ்சூல மணிவரதாபயங்கள்
சங்குமான்பாசமக்கந் தமருகங்கரங்களேந்திக்
திங்களிற்றவளமேனி திருமுகமைந்தும்பெற்ற
வெங்களீசானதேவ னிருவிசும்பெங்குங்காக்க. (௯)

சந்திரமவுலிசென்னி தனிநுதற்கண்ணெற்றி
மைந்துறுபகன்கண்டோட் டோன்வரிவிழியகிலநாதன்
கொந்துணர்நாசிவேதங் கூறுவோன்செவிகபாலி
யந்தில்செங்கபோலந்தூய வைம்முகன்வதனமுற்றும்.

வளமறைபயிலுநாவ னுமணிநீலகண்டன்
களமடுபினாகபாணிமையிணைதருவமாகு
கிளர்புயந்தக்கன்யாகங் கெடுத்தவன்மார்புதூய
வொளிதருமேருவில்லி யுதரபன்மதனைக்காய்ந்தோன்.

இடையிபமுகத்தோன்றாதையுந்தி நம்பீசன்மன்னும்
புடைவளரைகுபேரமித்திரன் பொருவில்வாமம்
படர்சகதீசன்சானு பாய்தருமிடபகேது
மிடைதருகணைக்காலெந்தைவிமலன்செம்பாதங்காக்க.

வருபகன்முதல்யாமத்து மகேசன்பின்னிரண்டா ம்யாமம், பொருவறுவாமதேவன் புகன்றிடு மூன்றும் யாமஞ், செருமலிமழுவாலங்கைத் திரியம்பகனுலாம் யாமம், பெருவலிவிடபயூர்தி பிணியறவினிதுகாக்க.

கங்குலின்முதல்யாமத்துக் கலைமதிமுடித்தோன் காக்க, தங்கியவிரண்டாம்யாமஞ் சானவிதரித்தோன் காக்க, பொங்கிய மூன்றும்யாமம் புரிசடையண்ணல் காக்க, பங்கமினுலாமயாமங் கௌரிதன்பதியேகாக்க.

அனைத்துள காலமெல்லா மந்தகற்கடிந்தோனுள் ளூர்,தனிப்பெருமுதலாய்நின்ற சங்கரன் புறமுந்தானு வனப்புறநடுவுந்தூயபசுபதிமற்றுமெங்கு, நினைத்திடற் கரியநோன்மைச் சதாசிவநிமலன்காக்க. ௧௫

நிற்புழிப்புவனநாதனேகுழிநிமலமேனிப், பொற் பிறமதாதிநாத னிருப்புழிப்பொருவிலாத, வற்புதவே தவேத்திய னருந்துயில் கொள்ளுமாங்கட், டற்பரசிவ ன்வழிக்குச் சாமளருத்திரன்காக்க. ௧௬

மலைமுதற்றுருக்கந்தம்மிற் புராரிகாத்திடுகமன்னு ஞ், சிலைவலிவேடரூபன் செறிந்தகானகத்திற் காக்க, கொலையமர்கற்பத்தண்டகோடிகள், குலுங்கநக்குப்பல படி நடிக்கும்வீர பத்திரன்முழுதுங்காக்க. ௧௭

பல்லுளைப்புரவித்திண்டேர் படுமதக்களிறுபாய் மா, வில்லுடைபதாதி தொக்குமிடைத்திடு மெண்ணில்

கோடி கொல்லையன்மாலைவைவேற்குறுகலர்குறுகுங்கா ட், வல்லியோர்பங்கன் செங்கைமழும் படைதுனித்தி காக்க. ௧௮

தத்துநீர்ப்புணரியாடைத்தாரணியைச்சுமந்துமா ணப், பைத்தலைநொடிர பாந்தட்பஃதலையனைத்துந்தேய் ந்து, முத்தலைபடைத்தொக்கு மூரிவெங்கனல்கொள் சூலம், பொய்த்தொழிற் கள்வர்தம்மைப்பொருத்தழித் தினிதுகாக்க.

முடங்குளைமுதலாயுள்ளமுழுவலிக் கொடியமாக் க. ளடங்கலும், பிணுகங்கொல்க வென்றிவையனைத்து முள்ளந், திடம்படநினைந்துபாவஞ்செயும்சிவ கவசந் தன்னை, யுடன்படத்தரிப்பாயானுலம்பொருகுவவுத் தோளாய்,

வேறு.

பஞ்சபாதங்கள்போம் பகைகண்மாய்ந்திடும்
மஞ்சலின்மறலியு மஞ்சியாட்செயும்
வஞ்சநோயழிந்திடும் வறுமைதீர்ந்திடுந்
தஞ்சமென்றிதனை நீ தரித்தல்வேண்டுமால்.

சிவகவச முற்றிற்று.

---

************************************************

உ

கணபதி துணை.

வச்சிரபஞ்சரமென்னும்.

# சத்தி கவசம்.

---

தேவர்கள் தங்களுக்கு நெடுநாள் இடரிழைத்திருந்த துர்க்கனென்னும் அவுணனை உமாதேவியான வள் சங்கரித்து அவ்விடரை நீங்கியதுகண்டு அத்தேவியை வணக்கஞ்செய்து துதிசெய்தது இக்கவசமென்றறிக.

---

அங்கையிற்கரகந்தாங்கும்பிரமாணியருளினோடுந்
துங்கமென்சென்னிகாக்கவயிணவி துகளிலாக
மெங்கணுங்காக்கசெய்ய வேர்தெழிலுருத்திராணி
தங்குமெண்டிசையுமன்பு தழைத்திடவினிதுகாக்க.

கொன்னுனைச்சூலி சென்னி மயிரிணைக்குறித்துக் காக்க மன்னுவெண்பிறை தாழ்சென்னி வயங்கொளி நெற்றி காக்க, பன்மயிர் புருவநாளும் பரிவொடு மூமையாள் காக்க, வென்னியாண்முக்கணீச னிறைவிகண்ணிணை கள்காக்க.

வயமி குமிமயவல்லிமூக்கினைமகிழ்ந்துகாக்க
செயையொடுவிசயைமேல்கிழிதழினைச்சிறந்துகாக்க
வயிலுடைச்சுருதிதூய வஞ்செவிகாக்கதண்ணென்
பயின்மலருறையுஞ்செல்வி பல்லினையுவந்துகாக்க.

சண்டிமென்கபோலங்காக்க தவளநாண்மலரின்வைகு
மொண்டொடிநன்னுக்காக்க விசயைமங்கலை மற்றெவ்
வா, கன்கவர்நாடிகாக்க காத்தியாயனிபஞ்ஞான்று
முண்டகமலரிற்றூய முகத்தினைச்சிறந்துகாக்க. ௪

காளமுண்டிருர்தநீல கண்டிமென்கழுத்துக்காக்க
கோளில்பூதாரசத்தி கவர்புறங்காக்ககூர்மி
நீளொளிசசந்திகாக்க ..யிந்திரிநெறியினோடுந்
தோளிணைகாக்கபத்மை துணைமலரங்கைகாக்க. ௫

கமலகைவிரள்கள்காக்க விரசகையுகிர்கள்காக்க
திமிரமுண்டொளிரும்வெய்யோன்மண்டத்துறையுஞ்
செல்வி, யெமதிருவாகுமூலங்காக்கவானவர்களேத்த
வமிர்தலகரிநாணுளுமகன் மணிமார்புங்காக்க. ௬

தரித்திரியிதயங்காக்கதயித்தியர்ச்செகுப்போன்மிக்க
கருத்தொடுமுலைகள்காக்க சகத்தினிலிறைமைபூண்டோ
டிருந்தகுவயிறுகாக்க திகழ்ந்தபோகதிகன்னுள்ளத்
தருகதியினுந்திகாக்க வசைவளர்முதருகாக்க. ௭

கருதருவிகடைகாக்க கடிதலம்பாமைவாய்ந்த
குருமணிசகனங்காக்க குகாரணிகுய்யங்காக்க

வருடாவருமபாய கந்தினியபானங்காக்க
தெருளுடைவிபுலையென்றுஞ் சிறப்புடைகுறங்குகாக்க.

விளிவைதமென்முழந் தாள்காக்கவியற்சபைகணைக்கால்
காக்க, களிதருகோரைவாய்ந்த பரட்டிணைக்காக்கமிக்க,
வளிகொள்பாதலத்திற்செல்வோ ளணிகெழு புறந்தாள்
காக்க, வொளிர்நகம் விரல்கள்சந்திரி யுக்கிரிபுவந்து
காக்க. ௯

தலத்துறைமடந்தையுள்ளங் காலிணைகாக்கதண்ணென்
மலர்த்திருமனையைக்காக்க வயங்குகேத்திரதையோங்கி
யுலப்பில்கேத்திரங்கள்காக்க பிரியகரையொழிவறுது
நலத்தகுமக்கடம்பை நன்குறக்காக்கவன்றே. ௧௦

உயர்சனுதனியெஞ்ஞான்று மொழிவறுமாயுள்காக்க
மயர்வறுசீர்த்தியாவு மாதேவிகாக்கமிக்க
செயிரறுதருமம்யாவுந் தனுத்திரிசிறந்துகாக்க
வியல்புடைக்குலத்தைவாய்ந்த குலதேவியினிதுகாக்க.

சற்கதிபிரதைநல்லோ ரியையினித்தயாவிற்காக்க
விற்கொடும்போரினீரில் வெளியினில்வனத்திற்சூதி
விற்புறமதனிலோங்கு சர்வாணிகாக்கவொண்ணுப்
பொற்றருமலர்சுவேிப் புக்கவரேத்தினரே. ௧௨

சத்திகவசமுற்றிற்று

---

இந்தவச்சிரபஞ்சரத்தை யாவர்செபித்தாலும் அவ
ர்களுடையதேகத்திலுண்டாகிய வெப்புநோயொழியும்

எட்டுத்தரஞ் சலத்தில் அபிமந்திரித்து அதனையுட்கொண்டால்; வயிற்றிலேபொருந்திய குன்மஞ்சூலைமுதலிய நோயனைத்தும்நீங்கும். இரவில்வழிநடக்கும்போதுசெபித்தால், பூதம்பேயிவைகள் தொடரமாட்டாவாம்பிள்ளையைப் பெறமாட்டாமல் வருத்தப்படுகின்ற மாதருடைய அருகிலிருந்துசெபித்தாலும் அல்லதுநீரிலோதி உட்கொள்ளக் கொடுத்தாலும் விரைவிலே வருத்தநீங்கிப் பிள்ளைகளைப் பெறுவார்கள். யுத்தத்திலே செபித்தால், சத்துருக்கள்தோல்வியடைவார்கள். சிறுபிள்ளைகளுக்கு நீரிலோதிஉட்கொள்ளக்கொடுத்தால் வியாதி நீங்கும் இதையாவரோதினும் அவர்களைஉமாதேவி காப்பாற்றுவாள்.



ஆக புத்தகம்-12.

உ

சரஸ்வதிதுணை.

சகலகலாவல்லிமாலையென்னும்

# சரஸ்வதி தோத்திரம்.



இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

சரஸ்வதிதுணை.

குமரகுருபர சுவாமிகள் அருளிச்செய்த

சகலகலாவல்லிமாலையென்னும்

# சரஸ்வதிதோத்திரம்.



கட்டளைக்கலித்துறை.

வெண்டாமரைக்கன்றி நின்பதந்தாங்கவென் வெள்ளையுள்ளத், தண்டாமரைக்குத் தகாதுகொலோசகமேழுமளித், துண்டானுறங்கவொழித் தான்பித்தாகவுண்டாக்கும்வண்ணங், கண்டான்சுவைகொள் கரும்பேசகலகலாவல்லியே. (௧)

நாடும்பொருட்சுவை சொற்சுவைதோய்தரநாற்கவியும், பாடும்பணியிற்பணித்தருள்வாய் பங்கயாசனத்திற், கூடும்பசும்பொற்கொடியேகனதனக் குன்றுமைம்பாற், காடுஞ்சுமக்குங் கரும்பேசகல கலாவல்லியே.

அளிக்குஞ்செழுந்தமிழ் தெள்ளமுதார்ந்துன்னருட்கடலிற், குளிக்கும்படிக்கென்று கூடுங்கொலோவுளங்கொண்டுதெள்ளித், தெளிக்கும்பனுவற் புலவோர்கவிமழை சிந்தக்கண்டு, களிக்குங்கலாபமயிலேசகலகலாவல்லியே. (௩)

தூக்கும்பனுவற் றுறைதோய்ந்தகல்வியுஞ் சொற்சுவைதோய், வாக்கும்பெருகப் பணித்தருள்வாய்வட நூற்கடலுந், தேக்குஞ்செழுந்தமிழ்ச் செல்வமுந்தொண்டர்செந்நாவினின்று, காக்குங்கருணைக்கடலே சகல கலாவல்லியே. (௪)

பஞ்சப்புதந்தரு செய்யப்பாற்பாதப ங்கேருகமென் னெஞ்சத்தடத்தலராத தென்னேநெடுந்தாட்கமலத் தஞ்சத்துவசமுயர்த்தோன் செந்நாவுமகமும்வெள்ளை கஞ்சத்தவிசொத்திருந்தாய் சகலகலாவல்லியே. (௫)

பண்ணும்பரதமுங் கல்வியுந்தீஞ்சொற்பனுவலும்யா, னெண்ணும்பொழுதெளி தெய்தநல்காயெழுதாமறையும், விண்ணும்புவியும் புனலுங்கனலும் வெங்காலுமன்பர், கண்ணுங்கருத்து நிறைந்தாய்சகல கலாவல்லியே. (௬)

பாட்டும்பொருளும் பொருளாற்பொருந்தும்பயனுமென்பாற், கூட்டும்படிநின் கடைக்கணல்காயுளங் கொண்டுதொண்டர், தீட்டுங்கலைத்தமிழ்த் தீம்பாலமுதந்தெளிக்கும்வண்ணங், காட்டும்வெள்ளோதிமப்பேடேசகலகலாவல்லியே. (௭)

சொல்விற்பனமுமவதானமுங்கல்விசொல்லவல்ல நல்வித்தையுந்தந் தடிமைகொள்வாய்நளினசனஞ்சேர் செல்விக்கரிதன் றொருகாலமுஞ்சிதையாமை நல்கும், கல்விப்பெருஞ்செல்வப் பேறே சகல கலாவல்லியே.

சொற்கும்பொருட்குமுயிராமெய்ஞ்ஞானத்தின்றோ ற்றமென்ன, நிற்கின்றநின்னைநினைப்பவர்யார்நிலந்தோ ய்புழைக்கை, நற்குஞ்சரத்தின் பிடியோடரசன்ன நா ணநடை, கற்கும்பதாம்புயத் தாளேசகலகலாவல்லியே.

கண்கண்டவெண்குடைக்கீழாகமேற்பட்டமன்ன ருமென், பண்கண்டளவிற் பணியச்செய்வாய் படைப் போன்முதலாம், விண்கண்டதெய்வம் பலகோடியுண் டேனும் விளம்பிலுன்போற், கண்கண்டதெய்வமுள தோசகல கலாவல்லியே. (௧௦)

முற்றிற்று.



உ

நாமகள் துணை.

திருமயிலை - வித்துவான்,

சண்முகம்பிள்ளையவர்கள் இயற்றிய

# வெள்ளைக்கிழத்திமாலை.



கட்டளைக்கலித்துறை.

பொன்னே யப்பொன்னி னொளியே கருணைப் புகலி டமே, நின்னேய மெய்திய மெய்ஞ்ஞானியருளநேர்ந்த வருக், கன்னே யனைத்து முதவினை யாலுன் னடிபரச, பின்னே யருள்புரி வெண்டா மரைமலர் மெல்லியலே.

பாட்டுகந் தன்றொரு கம்பநன் ஞுடன் பனுவலுக் கன், ரேட்டறு செம்பொற் சிலம்பளித் தாயுனை யோ துமெய்ம்மை, நாட்டமளித்தெனை யாட்கொண்டு ஞா ன நிலையெனுமவ், வீட்டு நெறியருள் வெண்டாமரை மலர் மெல்லியலே. (உ)

போதகத்தானும் புணரியினுனும் பொருவில்கவுட், போதகத்தானும் புராரியுமெய்ப்பொரு ளென்றுரைக் கும், சூதகத்தோங்கிய வேதத்தினந்தந் துணிதனின் ஞல், மேதகுஞானவிளக்கே வெண்டாமரை மெல்லிய லே. (ங)

ஆயன்றிச்சேய்பிழை யாதென்றுரைப்ப தகிலம்பெ ற்ற, நீயன்றிச் சேரடி யேனும் பிழைத்திடு நீர்மையுண் டோ, மாயன்றிருமகன் செந்நாப்படரு மடமயிலே, வேயன்ன தோளெழில் வெண்டாமரைமலர் மெல்லிய லே. (ச)

கண்ணாமுதக்கடலேநின்னுமங் கனவினிலு, மெண் ணேற் குனதருள் வாய்ப்பதென் ருேவிணை வேல்விழி யாம், பெண்ணேய நீத்தவ ருள்ளத்தின்மேய பெடை யனமே, விண்ணோர் பராவிய வெண்டாமரைமலர் மெ ல்லியலே. (ரு)

சொற்சுவைதோய்தரு கல்விப்பிரசங்கஞ் சொலுந்து ணிவும், அற்புதக்கல்வியு நாற்கவிபாடு மருந்திறனும், நிற்பரசாநிற்கு மன்பர்கணேயமு நீயருள்காண், விற்ப னநீடிய வெண்டாமரைமலர் மெல்லியலே, (சு)

படியொன்றிலாகின் றிருமேனியாம்பல கல்விநலன்
அடியொன்றியசிறி யேன்றனக் கிங்ங னருளுகண்டாய்
செடியொன்றியசிந் தையர்காண்பருசிற் சுகோதயமே
விடியும்பவத்தர்க்குதவும்வெண்டாமரை மெல்லியலே

இல்லென்றெனையடை வார்க்கிவணே துமிசைந்துதவும்
நல்லதொர்செல்வந் தருவதென்றே நளினசனத்தோற்
கெல்லையிலின்ப முதவுமன்னே யெழிற்றீங்கரும்பே
வில்லொளியாரம்புனையும்வெண்டாமரை மெல்லியலே.

என்றுமிங் கியாணர்க் கவித்தொடை சாத்த விசைந்
தெனக்குத், துன்றியதோர்வர நல்குகண்டாய் தொலே
யாநிதியா, நின்றிலகுந்தெய்வமின்னே யொருநீள்வரை
யிணையை, வென்றிகொள் வெம்முலைமானே வெண்டா
மரை மெல்லியலே.

(கூ)

கன்னுணியபுயக் காகுத்தன்காதையைக் காசினிமே
ன், முன்னுடிக்கம்பநன்னுடன்றன்வாக்கின் மொழிந்த
னையால், என்னுவினின்று மதனுரையிஞ்ஞான் றியம்பு
கண்டாய், மின்னுண் படிவைத்து வெண்டாமரை மலர்
மெல்லியலே.

(கo)

முற்றிற்று.



உ

சரஸ்வதி துணை.

கம்பரருளிச்செய்த

# சரஸ்வதியந்தாதி.



சிறுமண்வூர்-முனிசாமி முதலியா ரவர்களது,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1908.



உ

சரஸ்வதி துணை.

கம்பரருளிச்செய்த

# சரஸ்வதியந்தாதி.

காப்பு - வெண்பா.

ஆயகலைக ளறுபத்து நான்கினையு
மேய வுணர்விக்கு மென்னம்மை—தூய
உருப்பளிங்குபோல்வாளென்னுள்ளத்தினுள்ளே
இருப்பளிங்கு வாரா திடர்.

படிக நிறமும் பவளச்செவ் வாயுங்
கடிகமழ்பூந் தாமரைபோற்கையுந்-துடியிடையும்
அல்லும் பகலு மனவரத முந்துதித்தாற்
கல்லுஞ்சொல் லாதோ கவி.

கட்டளைக்கலித்துறை.

சீர்தந்தவெள்ளிதழ்ப் பூங்கமலாசனத்தேவிசெஞ்சொற்
றார்தந்தவென்மனத் தாமரையாட்டி சரோருகமேற்
பார்தந்தநாத னிசைதந்தவாரணப் பங்கயத்தாள்
வார்தந்தசோதியம் போருகத்தாளை வணங்குதுமே.

வணங்குஞ்சிலைநுத லுங்களைத்தோளும்வனமுலைமேற்
சுணங்கும்புதிய நிலவெழுமேனியுந் தோட்டுடனே
பிணங்குங்கருந்தடங் கண்களுநோக்கிப் பிரமனன்பா
லுணங்குந்திருமுன் றிலாய்மறைநான்குமுரைப்பவளே.

உரைப்பாருரைக்குங் கலைகளெல்லாமெண்ணி லுன்னையன்றித்-தரைப்பாலொருவர் தரவலரோதன் டாளமுலை-வரைப்பாலமுதுதந் திங்கெனைவாழ்வித்த மாமயிலே-விரைப்பாசடைமலர் வெண்டாமரைப்பதி மெல்லியலே. (௫)

இயலானதுகொண்டு நின்றுநாமங்க ளேத்துதற்கு
முயலாமையாற்றடு மாறுகின்றேனிந்த மூவுலகுஞ்
செயலாலமைத்த கலைமகளேநின் றிருவருளுக்
கயலாவிடாம லடியேனையுமுவந் தாண்டருளே. (௬)

அருக்கோதயத்தினுஞ் சந்திரோதயமொத்தழகெறிக்குந்-திருக்கோலநாயகி செந்தமிழ்ப்பாவை திசைமுகத்தா-லிருக்கோதுநாதனுந் தானுமெப்போதுமினிதிருக்கு-மருக்கோலநாண்மலராளென்னையாளுமடமயிலே.

மயிலேமடப்பிடி யேகொடியேயிள மான்பிணையே
குயிலேபசுங்கிளி யேயன்னமேமனக் கூரிருட்கோர்
வெயிலேநிலவெழு மேனிமின்னேயினி வேறுதவம்
பயிலேன்மகிழ்ந்து பணிவேனுனதுபொற்பாதங்களே.

பாதாம்புயத்திற் பணிவார்தமக்குப் பலகலையும்
வேதாந்தமுத்தியுந் தந்தருள்பாரதி வெள்ளிதழ்ப்பூஞ்

சீதாம்புயத்தி லிருப்பாளிருப்பவன் சிந்தையுள்ளே
யேதாம்புவியிற் பெறலரிதாவ தெனக்கினியே. (எ)

இனிதாணுணர்வ தெண்ணெண்கலையாளையிலகுதொ
ண்டைக் -கனிநாணுஞ்செவ்விதழ்வெண்ணிறத்தாளைக்க
மலவயன்-றனிநாயகியை யகிலாண்டமும்பெற்றதாயை
மனப்-பனிநாண்மலருறை பூவையையாரணப் பாவை
யையே. (அ)

பாவுந்தொடையும் பதங்களுஞ்சீரும் பலவிதமா
மேவுங்கலைகள் விதிப்பாளிடம்விதி யின்முதிய
நாவும்பகர்ந்ததொல் வேதங்கணுன்கு நறுங்கமலப்
பூவுந்திருப்பதம் பூவாலணிபவர் புந்தியுமே. (சூ)

புந்தியிற்கூரிரு ணீக்கும்புதிய மதியமென்கோ
வந்தியிற்றோன்றிய தீபமென்கோநல் லருமறையோர்
சந்தியிற்றோன்றுந் தபனனென்கோமணித் தாமனென்
கோ-வுந்தியிற்றோன்றும் பிரான்புயந்தோயு மொருத்
தியையே. (க0)

ஒருத்தியையொன்று மிலாவென்மனத்தி லுவந்துத
ன்னை-யிருத்தியைவெண்கமலத்திருப்பாளையெண் ணெ
ண்கலைதோய்-கருத்தியையைம்புலனுங்கலங் காமற்கரு
த்தையெல்லாந்-திருத்தியையான்மற வேன்றிசைநான்
முகன் றேவியையே. (கக)

தேவருந்தெய்வப் பெருமானுநான்மறை செப்புகின்ற
மூவருந்தானவ ராகியுள்ளோரு முனிவரும்

யாவருமேனைய வெல்லாவுயிரு மிதழ்வெளுத்த
பூவருமாதி னருள்கொண்டுஞானம் புரிகின்றதே.

புரிகின்றசிந்தையி னூடேபுகுந்து புகுந்திருளை
யரிகின்றதாய்கின்ற வெல்லாவறிவி னரும்பொருளைத்
தெரிகின்றவின்பங் கனிந்தூறிநெஞ்சந் தெளிந்தமுற்ற
விரிகின்றதெண்ணெண்கலைமானுணர்த்தியவேதமுமே.

வேதமும்வேதத்தினந்தமுமந்தத்தின் மெய்ப்பொருளாம், பேதமும்பேதத்தின் மார்க்கமு மார்க்கப்பிணக்கறுக்கும், போதமும்போதவுருவாகியெங்கும் பொதிந்தவிந்து, நாதமும்நாதவண்டார்க்கும் வெண்டாமரை நாயகமே. (கச)

நாயகமான மலரகமாவது ஞானவின்பச்
சேயகமான மலரகமாவதுந் தீவினையா
லேயகமாறி விடுமகமாவது மெவ்வுயிர்க்குந்
தாயகமாவதுந் தாதார்சுவேத சரோருகமே. (கரு)

சரோருகமேதிருக் கோயிலுங்கைகளுந் தாளிணையு
முரோருகமுந்திரு வல்குலுநாபியு மோங்கிருள்போற்
சுரோருகஞ்சூழ்ந்த வதனமுநாட்டமுஞ் சேயிதழு
மொரோருகமீரரை மாத்திரையான வுரைமகட்கே. ()

கருந்தாமரைமலர் கட்டாமரைமலர் காமருதா
ளருந்தாமரைமலர் செந்தாமரைமல ராலயமாந்
தருந்தாமரைமலர் வெண்டாமரைமலர் தாவிலெழிற்
பெருந்தாமரைமணக்குங்கலைக்கூட்டப் பிணைதனக்கே.

தனக்கேதுணிபொரு ளென்னுந்தொல்வேதஞ் சதுர்முகத்தோ, னெனக்கேசமைந்த வபிடேகமென்னுமி மையவர்தா, மனக்கேதமாற்று மருந்தென்பருடு மலரென்பன்யான், கனக்கேசபந்திக் கலைமங்கைபாதகமலங்களே. (கஅ)

கமலந்தனிலிருப்பாள் விருப்போடங் கரங்குவித்துக் கமலங்கடவுளர் போற்றுமென்பூவை கண்ணிற்கருணை கமலந்தனைக்கொண்டு கண்டொரு காற்றங் கருத்துள் வைப்பார், கமலங்கழிக்குங் கலைமங்கையாரணிகாரணியே. (கசு)

காரணன்பாகமுஞ் சென்னியுஞ்சேர்தரு கன்னியரு
நாரணனாக மகலாத்திருவுமோர் நான்மருப்பு
வாரணன்றேவியு மற்றுள்ளதெய்வ மடந்தையரும்
ஆரணப்பாவை பணித்தகுற்றேவ லடியவரே. (உ௦)

அடிவேதநாறுஞ் சிறப்பார்ந்தவேத மனைத்தினுக்கு
முடிவேதவளை முளரியின்னே முடியாவிரத்ன
வடிவேமகிழ்ந்து பணிவார்தமது மயலிரவின்
விடிவேயறிந்தென்னையாள்வார் தலந்தனில்வேறிலையே.

வேறிலையென்று னடியாரிற்கூடி விளங்குநின்பேர்
கூறிலையானுங் குறித்துநின்றே னைம்புலக்குறும்பர்
மாறிலைகள்வர் மயக்காமனின்மலர்த் தாணெறியிற்
சேறிலையிந்தருள் வெண்டாமரைமலர்ச் சேயிழையே.

சேதிக்கலாந்தர்க்கமார்க்கங்களெவ்வெவர் சிந்தனையுஞ்
சோதிக்கலாமுறப்போதிக்கலாஞ் சொன்னதேதுணிந்
து, சாதிக்கலாமிகப் பேதிக்கலாமுத்தி தானெய்தலா,
மாதிக்கலாமயில் வல்லிபொற்றாளை யடைந்தவரே. ()

அடையாளநாண்மல ரங்கையிலேடு மணிவடமு
முடையாளை நுண்ணிடை யொன்றுமிலாளை யுபநிடதப்
படையாளையெவ்வுயிரும் படைப்பாளைப் பதுமநறுந்
தொடையாளையல்லதுமற்றினியாரைத்தொழுவதுவே.

தொழுவார்வலம்வருவார்துதிப்பார்தந்தொழின்மற
ந்து,விழுவாரருமறை மெய்தெரிவாரின்ப மெய்புளகித்,
தழுவாரினுங்கண்ணி னீர்மல்குவாரென்க ணுவதென்
னை, வழுவாதசெஞ்சொற் கலைமங்கைபாலன்பு வைத்த
வரே. (௨௫)

வைக்கும்பொருளுமில் வாழ்க்கைப்பொருளுமற்றெ
ப்பொருளும், பொய்க்கும் பொருளன்றி நீடும்பொரு
ளல்ல பூதலத்தின், மெய்க்கும்பொருளு மழியாப்பொ
ருளும் விழுப்பொருளு, முய்க்கும்பொருளுங் கலைமா
னுணர்த்து மூரைப்பொருளே. (௨௬)

பொருளாலிரண்டும்பெறலாகுமென்றபொருள்பொ
ருளோ, மருளாதசொற்கலைவான்பொருளோபொருள்
வந்துவந்தித், தருளாய்விளங்கு மவர்க்கொளியாயறி
யாதவருக், கிருளாய்விளங்கு நலங்கிளர் மேனியிலங்
கிழையே. (௨௭)

இலங்குந்திருமுக மெய்யிற்புளக மெழுங்கண்கணீர்
மலங்கும்பழுதற்ற வாக்கும்வலிக்கு மனமிகவே
துலங்குமுறுவல் செயக்களிகூருஞ் சுழல்புனல்போற்
கலங்கும்பொழுது தெளியுஞ்சொன்மானைக் கருதினர்க்கே. (உஅ)

கரியாரளகமுங் கண்ணுங்கதிர்முலைக் கண்ணுஞ்செய்ய
சரியார்கரமும் பதமுமிதழுந் தவளநறும்
புரியார்ந்ததாமரை யுந்திருமேனியும் பூண்பனவும்
பிரியாதென்னெஞ்சினு நாவினுநிற்கும் பெருந்திருவே

பெருந்திருவுஞ்சய மங்கையுமாகியென் பேதைநெஞ்சி, லிருந்தருளுஞ்செஞ்சொல் வஞ்சியைப்போற்றி லெல்லாவுயிர்க்கும், பொருந்தியஞானந் தருமின்பவேதப் பொருளுந்தருந், திருந்தியசெல்வந் தருமழியாப் பெருஞ் சீர்தருமே. (ௗ௦)

சரஸ்வதியந்தாதி முற்றிற்று.



ஆக புத்தகம் 15.

ஸ்ரீ

# லட்சுமி அந்தாதி.



சிறுமணவூர் - முனிசாமி முதலியா ரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
1908.





ஸ்ரீராமஜெயம்.

# இலட்சுமியந்தாதி.



## காப்பு.

சீரோங்கு செந்தமிழாற் றேவி யிலக்குமிதன்
பாரோங்குமந்தாதிபாடவே-பேரோங்குஞ்
சார்வதிகாயத்ரிபதந்தந்தளிக்குந் தாயரெங்கள்
பார்வதி காயத்ரிபதம்பற்று.

உகளத் தாமரைத் தாள்பணிந் தோங்குபூ
மகளைப்போற்ற வரும்பெருஞ் செல்வமே.

வரோதயமாதவவண்கமலாலயமங்கைபரம் [கன்
பரோதயபாதபங் கேருகத்தாள்பண்டைப் பாண்டரங்
சிரோதயபாதகங்கைத் தேன்தேவன்றிருமறுவொன்
றுரோதயமாதபயந்தரும் யாங்கட்குதயஞ்செய்தே.

உதையஞ்செய்வாளவட்சீ றடித்தாமரையோதியென்று
மிதையஞ்செய்வார்தமக்கேயளிப்பாள்வரமிக்குவிற்பூங்
குதையஞ்செய்வான்றணையின்றருள்வாணங்கொடுவினை
கள், சிதையஞ்செய்வாள் விழியாளெமக்கேதருஞ்செல்
வங்களே. (உ)

செல்வாளிநற்றடங்கண்ணிசெந்தாமரைச் செங்கைமங்கை, வில்வாளிகல்கதையாழி சங்கேந்தியவிண்ணவன்றேள், புல்வாளிலக்குமியெற்பெற்றதாயவள்பூத்தபைம்பொற்,பல்வாளிதழ்க்கமலாலயம்வாழருட்பாற்கடலே.

பார்க்கடற்கேடறச் செங்கோலுடன் பைம்பொன்முடியும், போர்க்கடற்கேசரி வீரபராக்ரமம்போதவுந்தன், கார்க்கடற்கேய் கட்கடாக்ஷமுமோக்ஷமுங் காதலடியார்க்கடற்கேயலர்மேன்மங்கைநாளுமருள்பரிசே.

அருட்பாற்கடற்பெருதாரமுதாமவ ணண்ணுபரம், பொருட்பாற்கடற் சிந்தையுள் ளெழுந்தாறப்புரிதவத்தோ, டிருப்பார்க்கடற்றிருப் பேரின்பவான்பதமீந்தருள்வாள், திருப்பாற்கடற்குளவதாரஞ் செய்தசெழுஞ்செல்வியே. (௫)

செல்விதன்பேரருள் கூர்ந்ததன்றேமுன்சிருட்டியெல்லா - நல்விதிசெய்துமுயிர்க் குயிராய்த்தெய்வநாயகனும் - பல்விதமாயிருந்தேகரந் தெங்கும்பரந்தளித்தும் சொல்விதமா யரன்றன்றுடைத்திட்டுந் தொழப்பெற்றதே. (௬)

பெற்றனர்மாயர்திருப்பாற் கடற்பள்ளியின்னுகனுருற்றனர்மாவெள்ளிவேதண்டமே சத்யலோகமுற்றார் வெற்றனரிந்திரர்பொன் னுலகாண்டனர் விண்ணவர்மேல்-நிற்றனர் நின்கட்கருணைபெற்றே நன்னிதியணங்கே.

நிதிபதியீசன்சுரேசன் செந்தீயமனீணிருதி
நதிபதிநாதன்சதாகதிதானுமெந்நாளுமிவ

ரதிபதியாகவெண் டிக்கடைந்தார்நின்னருள்பெறலால்
உதிபதினாறுகலாமதி மாமுகத்தொண்டிருவே. (௮)

திருவேநின்னையகர் பானிலமாதுஞ்சிவனிடத்தே,
பொருவே னெடுங்கண்ணுமையாளுடன் பொங்குகங்
கையுமீ-ரிருவேதநாவினில் வாணியுந்தாம்வந்திவர்களு
ன்பால்-வருவேலையங்கட் கடாக்ஷமன்றேபெற்று வா
ழ்வதுவே. (௯)

வாழ்வதநாளிற் புலோமிசையாண்முதன் மாதருன்
ருள்-தாழ்வதனாலவேரபெரும்போகத்துய்த்தார்வன
த்தார்-வீழ்வதனாற்புயப்பொன்மலைதோய்ந் தெழுமின்
விழித்தேன்-சூழ்வதனம்புயச்செஞ்சுடரே செய்ய சுந்
தரமே. (௧௦)

சுந்தரமேவுமுப்பத்து முக்கோடிசுராதிபரென்
றந்தரமேயவர்யாவருமேத்தநல் லச்சுதன்பூங்
கொந்தரமேவிருந்தின்னருள் கூருங்குலக்கொடியே
சிந்துரமேபிணைமானே சிவந்தசெழுஞ்சுடரே. (௧௧)

செழுஞ்சுடரேய்மணிசேர்பாற்கடலினுஞ்சிதரன்றன்
கொழுஞ்சுடரேறுகவுத்துவ மார்பினுங்கோதில்செந்
தேன்-விழுஞ்சுடரேமலிரைத்தாமரையினு மென்னுள
த்து-மெருஞ்சுடரே திருவே யண்டகோளங்களின்ற
வளே. (௧௨)

ஈன்றவளேமதவேளையறங்களை யேழுலகைத்
தென்றவளத்தளமுல்லைப்பல்வாயிதழ்ச்செம்பவளம்

போன்றவளேதிருமால்வளர்பாற் கடற்போல்விழிகள்
ஆன்றவளேயணங்கேயமுதேயென் னருந்தவமே. ()

அருந்தவமேபுரியன்பாயவர் நெஞ்சகத்தெழுந்த
பெருந்தவமே பொன்னருணர விந்தநற்பேரகம்வீற்
றிருந்தவமேதிருமாதேயெனக் கினிதாகுநலந்
தருந்தவமேயைந்தருவே தழைத்தவென்றாயகமே.

தாயகமேயெவ்வுலகுக்கும் யார்க்குந்தயாநிதியாம்
நாயகமேநின்சரணம்புயங்களை நாடுமென்பர்
தூயகமேவிளங்கும் விளக்காயவடியவள்கூர்ச்
சாயகமேயன்னகண்ணியம் போருகஞ்சார்பவளே.

சார்பவளாதரிப்பாரிடத்தே வந்தசாலவருள்
கூர்பவளாதரத்தாளெவர்க்குங் கனிக்கொவ்வையித
ழார்பவளானசெந்தாமரை யாளரிமார்பிடங்கொண்
டேர்பவளாதரித்தேயெனை யாண்டருளெங்கள்பங்கே.

பங்கையைகார்கொண்டவண்டாரளகவம்பாரமனைக்
கொங்கையைவான் முகத்தைக் கனிவாயைவாள்கூர்
விழியைச்-செங்கையைத்தாளை யருணோதயத் திருமே
னியைக்கண்-டங்கையையான்குவித்தேதொழுவேனெ
ன்றுற்றானந்தமே. (கஎ)

ஆனந்தரும்பண்டானவர் தானவராயிரக்கண்
ணனந்தரும்பரும்பங்கயத் தானக்கனுழியங்கைப்
பானந்தருங்கரும்பார்சொற்பொற் பாவையருள்சுரந்த
மீனந்தருங்கருங்கட்கடை நோக்கம்விரும்புவரே.

விரும்பேனின்சேவடிதேடிகின் றேவிழிநீரெழுமுத்-தரும்பேனெனன்பூடுரு கேன்பெருகேனினதன்பினினெஞ்-சிரும்பேனென்றேவுன் கருணைகடாக்ஷத்தையேபெறுவேன்-சுரும்பேகின்றார்குழற் றூயேசரோருகத்தோங்கனமே. (கசு)

அனமேயிளங்குயிலேமயிலே புள்ளியார்மடமானினமேபசுங்கொடியேபிடியே யணியேந்துகொம்பே
புனமேவருங்கிள்ளையே பிள்ளையேனகம்புக்கிருக்குந்
தனமேநலந்தருவே திருவே யெற்குன்றுள்கதியே.

தாள்களையாதரித்தாட் செய்குவார்தமர்தம்மடியா
ராள்களையாதரித்தாண்டருளாயன் றரக்கர்குலக் [தான்
கோள்களையாதரித்தார்ந்தகண்டாமணிக்கோதண்டத்
றோள்களையாதரித்தாய் தங்கமாமலர்த்தூயவளே.

தூயவரில்லறத்தாக்க மென்கோதெய்வச்சோதிமின்னாரயவரில்லறத்தெய்வமென்கோ வெற்குமார்க்கும்பெற்ற-தாயவரில்லறத் தாணுவென்கோ பஞ்சதாருவென்கோ-மாயவரில்லறத்தா ளெம்பிராட்டியை வாக்குவந்தே. (உஉ)

வாக்குவந்துன்னைவணங்கிவழிபட்டுவாழ்த்திவினைப்,
போக்குவந்தேநின்னருளினையான்பெறப்போந்தடைந்தேன்- நோக்குவந்தாதி யம்போருகத்தாயன்னைநின்னருட்கா - ளாக்குவந் தென்னைகண்டா யடியே னுன்னடைக்கலமே. (உங)

அடைக்கலந்தாரணிவேந்தர்விண்ணோர்தொண்டரா டுகங்கை- சடைக்கலந்தாரணிநான்முகனிந்திரன்ருங்கு தழாய்ப் - படைக்கலந்தானணிவான்சுடரோரும்பொ ற்பங்கயப்பூ - விடைக்கலந் தாளுநன் மாமதுகட்கடை யின்னருட்கே. (உச)

அருளேபுரிந்து பகிரண்டகோடிக ளாக்கறத்தின் பொருளேயருட்சந்தி ரோதயமேபெரும் போகந்தரு மருளேவிமலகமலமின்னேமருண்மாற்றுமின்பத் [பே. தெருளேவிரிந்தென் மனத்தெழுந்தூறித் தெளிந்தவன்

அன்பேபெருக மெய்யேபுளகிக்க மெய்யானநற்பே ரின்பேபருகக் கண்ணீரேததும்ப வல்யாக்கைதன்னே டென்பேயுருகநின்றியானேபுலம்பவந் தென்னிருகண் முன்பேதருகதிருவேநற்செல்வமுமோட்சமுமே(உசு)

மோட்சங்கணித்துபதேசித்தமுன்வினைமோதகட்க டாட்சங்களித்தடியேற்கருளாய்மற்சடாவசுரர்- கோட் சங்கமர்த்தனக்கோட்டுமெல்லார்தண்ட கோதண்டமா - வாட்சங்குசக்கரத்தான்மார்பில்வாழும்வனப்பணங்கே

வனப்பார வம்புயத் தாள்களுந் தோள்களு மங்கல நாண்- டனப்பாரமுங்கழுத்துங்கனிவாய்முத்துந் தாழ் குழலின் - கனப்பாரமுங் கயற்கண்களுங்காணவெங்க ண்முனின்றே - வனப்பாரவம்புயத்தா ளடியேன்றனை யாட்கொள்வளே. (உஅ)

ஆட்பட்டவர்க்கருஞ் சொர்க்காதி போகங் களைத்த
ருந்தொன்- னாட்பட்டவர்த்தனராகத்தருங்கலைஞானந்
தருங் - கோட்பட்டுருத்துவரும் பகையுங் கொடுந்தீவி
னையுந்- தூட்பட்டுகச்செயும் பூவாழும்பொற்கதிர் சூழு
மின்னே. (உகூ)

சூழ்கதிரோங்கு பங்கேருகத்தாளைத் தொழுபவர்க்கு
நீள்கதிரிந்திரச் செல்வமுங்கல்வியு நேர்ந்தளித்து
மாள்கதிநாளின்மகிழ்ந்துசித்யானந்தவைகுந்தமாம்
வாழ்கதிவீடுந்தருவாள்வரோதயமாமங்கையே. (௩௦)

முற்றிற்று.



உ

பரவசிவன் தோத்திரம்.

# அவனூசிப்பத்து.



இவை

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

தமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.



# பரமசிவன் தோத்திரம்.



காயாமரத்தின் கனியாகி கனியிற்கொட்டை யுள்ளாகித், தாயாயிரே மூலகுக்குந் தந்தையுமான தயாபரனே, யாயாமறைநூல் தனைவகுத்த வரனே யுந்தனடைக்கலங்காண், பேயாயெங்கள் பெருமானே பித்தாவென்னை யாளாயோ. (க)

அரவம்பணியா யணிவோனே வரனேயடியார்க்கெளியோனே, மருவின் கொழுந்தின் வாசனைபோல் மாயாமருளா மகதேவா குருவைச்சீஷன் தனைத்தேடி குடிகொண்டுளத்திலிருப்போனே, விரவும்பகலுமுனைப்புகழ்வேன் யீசாயென்னையாளாயோ. (உ)

மட்டார்குழலிதனைக்கூடி மாயாவயற்றுக்கிறைதேடி பட்டாங்கடித்துப் பரஞ்சோதி பாதங்காணவேணுமென்றே, கட்டாச்சுரபி கன்றதுபோல் காசினியெங்குந் திரிந்தடியேன், யெட்டாக்கொம்பை யெட்டிகின்றேனீசா என்னையாளாயோ. (ஙு)

வனக்குன்றெடுத்து வளர்த்தபெண்ணை வைத்தாயுந் தனிடப்பாகம், சினக்கும்புலித்தோல் தரித்தோனே சிவனே யெங்கள் பெருமானே, நினைக்கும்பொழுது அடியேன்முன்னிமலாவந்துநில்லாயோ, எனக்குமுன க்கும்போகா நீசாயென்னையாளாயோ. (௪)

கொல்லுங்களிறையுரித் தோனேகுடி கொண்டுளத் திருப்போனே, செல்லுந்தலத்திலிருந்தென்ன சிவனே யடியேன் படமாட்டேன், னல்லும் பகலும் உனைப்புகழ் வேனையாவுந்த னடைக்கலங்காண், இல்லும்பிறப்புமி னிவேண்டே னீசாயென்னையாளாயோ. (௫)

வருவதும் போவது மினிவேண்டேன் வாழ்வும் வே ண்டேன் புவிவேண்டேன், தருவதெனக்குவுன்பாதஞ் சர்வஜீவ தயாபரனே, குருவுபதேசம்நீதந்து குடிகொ ண்டுளத்தி லிருந்தடியே, னருவினை யறுத்தே யெனை யாண்டவரனே எளியேன்முன் வாராயோ. (௬)

நில்லாவாழ்வைச்சதமென்று நெறியானடக்கமாட் டாமல், நல்லார்பொல்லா ரென்றறியாமல் நமன்போல் நடுங்கித் திரிந்தாலும், அல்லார் குழலா ளுமைபாகா வரனே யடியார்க்கெளியோனே, எல்லாம்பொறுக்கப் பரமுனக்கே யீசாயென்னையாளாயே. (எ)

பொங்குகடல் சூழுலகமெங்கும் புவியிலேழுபுவன மெல்லா, மெங்குமுந்த னொளியன்றோ யிறைவாயெங்க ள் பெருமானே, அங்கந்தளர்ந்துமிக மெலிந்துவடியே ன் வயற்றுக்கிரைதேடி, யெங்குந்திரிந்துவுழலாமலீசா யென்னையாளாயோ. (அ)

பொய்யுமெய்யுந்தானுரைத்துப் புவிமேல்வாழ்வை ச்சதமென்று, கையுஞ்சலித்துக் கால்சலித்துக் கர்த்தா வுன்றன்செயலன்றே, செய்யுந்தொழிலை யு மெய்யென் று சிவனே யடியேன் படுவானேன், எய்யுஞ்சிலையுந் தனையெரித்தவீசாயென்னையாளாயோ. (கூ)

நெருப்போவுந்தன் திருமேனி நீறேபூசித் திரிவதல் லால், பொருப்போவுந்தனிருப்பிடந்தான் புவியீரேழு புவனமன்றே, தருப்போல்கிளைத்துத் தழைத்துநின் றாய், சகலசிவசெந்துக்குள் இருப்பா யெந்தனுளந்த னிலே யீசாயென்னையாளாயோ. (க0)

மங்குமனிதரெலும்பையெல்லா மார்மேல்நிறையப் பூண்டுகொண்டு, அங்கம்வளர்க்கப் படும்பாடு யார்தா னறியப்போரார்கள், சங்குகரத்தில் மழுமானுந்தரித்த சூலம் பிடித்தெதிரே, யெங்குந்திரிந்து வுழலாமலீசா யென்னையாளாயோ. (கக)

கல்லாதவனாயிருந்தாலுங் கனத்த பாவஞ்செய்தாலு ம்பொல்லாதவனா யிருந்தாலும் புலையுங் கொலையுஞ்செ ய்தாலுஞ், செல்லாவாசல் தனைச்சென்று சிவனேயுன் னைமறந்தாலும், எல்லாம்பொருக்கக் கடனுனக் கேயீ சாயென்னையாளாயோ. (கஉ)

படுவேன்பாடுபடச் சொன்னால் பாரஞ்சுமக்கப்பர மனக்கே, விடுவேனுனை விடச் சொன்னால் விதியின் பயன்தன்பயனன்றே, சுடுவேன் பாவந்தனை யின்றுசு டரேயுந்தனொளியாலே, யிடுவேன்வழக்கு நானுன்னை யீசாயென்னையாளாயோ. (கங)



உ

கணபதிதுணை.

# அவஞசிப்பத்து.



வற்றுதபொய்கை வளநாடுகண்டு மலைமேலிருந்த குமரா, வுற்றுரெனக்கு வொருபேரு மில்லை வுமையாள் தனக்கு மகனே, முத்தாடைதந்து வடியேனையாளு முருகேச ரெந்தன்மனத்தே, வித்தாரமாக மயில்மீதிலேறிவரவேணுமென்றனருகே. (க)

ஆலாலமுண்டோன் மகனுகிவந்த னடியார் தமக்கு முதல்வி, பாலூராலுண்டு கலிவாய்த்திரந்துபயனஞ்செழுத்தை மறவேன், மாலானவள்ளி தனைநாடிவந்த வடிவாகின்றகுமரா, மேலானவெற்றி மயில்மீதிலேறி வரவேணுமென்றனருகே, (உ)

திருவாசல்தோறு மருள்வேதமோதசிவனஞ்செழுத்தைமறவேன், முருகேசரென்னுமடியார்தமக்கு முதலாகின்றகுமரா, குருநாதசுவாமிகுறமாதுநாதர் குமரேசரென்றபொருளே, மறவாமல்வெற்றிமயில்மீதிலேறிவரவேணுமென்றனருகே. (ங)

உதிரந்திரண்டு பனியூராலுண் டுருவாசல்தேடிவருமுன், கதிபோலொழுந்த திருமேனிநாதர் கடைவிடுதந்தருள்வாய், முதிரஞ்சிறந்தவயல்வீறுசெங்கை வடிவே

லெடுத்தகுமரா, யதிராய்நடந்து மயில்மீதிலேறிவரவே ணுமென்றனருகே. (ச)

மண்ணுடுமீசன்மகனுரையுந்தன்மலேவீடுதந்து மருள்வாய், வண்டூரல்பாயும்வயலூரில்செங்கை வடிவேலெடுத்தகுமரா, நன்ருகவந்துயடியேனையாண்டு நல்வீடுதந்தகுகனே, கொண்டாடிவெற்றிமயில்மீதிலேறிவரவேணுமென்றனருகே. (ரு)

நீலஞ்சிறந்த குறமாதுவள்ளி நின்பாகம்வைத்தகுமரா, காலனெழுந்து வெகுபூசைசெய்து கயறுமெடுத்துவருமுன், வேலும்பிடித்து வடிவார்தமக்கு வீராதிவீரருடனே, சாலப்பரிந்து மயில்மீதிலேறி வரவேணுமென்றனருகே. (சா)

தலேகெட்டநாலின்நிழல்போலநின்று தடுமாறிநொந்துஅடியேன், நிலேகெட்டுயானும்புவிமீதில்நின்று நெடுமூச்செரியவிதியோ, மலேதொட்டசெங்கை வடிவேற்கடம்பா வடியேனையாளுமுருகா, மலேயேறிமேயு மயில்மீதிலேறி வரவேணுமென்றனருகே. (எ)

வண்டுண்டுபூவில்மதுவூரல்பாயும் வயலூரில்செங்கை வடிவேல், கண்டொன்றுசொல்லி திரிவார்கள் வாசல்கடனென்றுகேட்க விதியோ, வண்டேறுபூவிலிதழ்மேவு வள்ளிதெய்வானைக்குகந்தவேலா, நன்றென்றுசொல்லி மயில்மீதிலேறிவரவேணுமென்றனருகே. (அ)

விடதூதரோடி வரும்போதுவும்மை வெகுவாக நம்பினேனே, குறமாதுவள்ளியிடமாகவைத்து மயிலேறி

வந்தசெல்வா, திடமாகசோலை மலைமீதில்வாழும் திரு மால்தமக்குமருகா, வடமானபழனி வடிவேலுநாதா வரவேணுமென்றனருகே. (சு)

ஓங்காரசத்தி யுமைபால்குடித்து வுபதேச முரைத்த பரனே, பூங்காவனத்திலிதழ்மேவும்வள்ளிபுஜமீதிருந்த குகனே, யாங்காரசூரர் படைவீடுசோர வடிவேல்விடு த்தபூபா, பாங்கானவெற்றி மயில்மீதிலேறி வரவேணு மென்றனருகே. (கo)

ஆறுறுமாறு வயதானபோது வடியேனினைந்த படி யால், வேறேதுசிந்தை நினையாமலுந்த னுசாரசங்கமரு ள்வாய், அசுரேசர்போல யெமதூதரென்னை தொட் டோடகட்டவருமுன், மாறுதுதோகைமயில்மீதிலேறி வரவேணுமென்றனருகே. (கக)

கையாரவுன்னை தொழுதேத்தமனது கபடேதுசற்று மறியேன், ஐயாவுனக் காளாகும்போது வடியார்தம க்குமெளியேன், பொய்யானகாய மறிவேயொடுங்கயு யிர்கொண்டுபோகவருமுன், வையாளியாகமயில் மீதி லேறி வரவேணு மென்றன்னருகே. (கஉ)

ஏதேதுசன்ம மெடுத்தனோ முந்தியிந்தப்பிறப்பிலறி யேன், மாதாவுந்தந்தைநீ மாதவன்தனக்குமருகா குற த்திகணவா, காதோடு கண்ணையிருளாகமூடி யுயிர்கொ ண்டு போகவருமுன், வாதாடிநின்று மயில்மீதிலேறி வரவேணுமென்றனருகே. (கங)

முற்றிற்று.

## தனிப்பாசுரங்கள்.

வருமோகமக்குமொரு வாராதவாபத்துவஞ்சனைச்சூனியங்கள், வைப்புகுணமேவலும் வைத்திட என்மேலொரு வஞ்சகநினைந்தபோதும், கருவேரறுத்தவனைக் கண்டித்துத்தெண்டிக்க கர்த்தனேயுனை நம்பினேன்காலனும்பாசம்விட்டோலமிட்டோடவே கதிர்வேலெடுத்துவந்து, அன்புடனடியன்மேலணுவளவு வாராமலாதரித்தெனையாளுவாய், ஆலவிஷமுண்டனிடபாலனே யசுரர்குல வேரோடறுத்த குமரா, சுருதிமுதல்வேதமும் சற்றுமெய்ஞ்ஞானங்களும் தேடுதற்கரிதான தென்பழனிமலையில்வாழும், தேவாதிதேவனேயாவர்க்கு மேலான தெண்டாயுதக்கடவுளே. (கச)

அத்தி முகனுக்கிளைய சுத்தனே நித்தனேயானைமீதேறு பரனே, பையனே மெய்யனே யுய்யவழி யறிகிலேன் அரகராமுருகவேளே, சத்திசிவபாலா வருள்சண்முகத்தேவனே, சரவணபவானந்தனே; சாலோகமுதலறிய பலவிதரு செல்வமேதண்கஞ்சமலர்தாளனே, நித்திய கல்யாண குண முத்தர் பணியையனே நிலையற்றபாவிய திலும், நிர்மூட ணுகையாற்செய்குறைகணிக்கியேநின்னையாளவேண்டுஞ், சுத்திபுரிவல்லதிருமாலின்விழி மருகனே தேவர்க்கு மிகவறியனே, தெங்குபொழிலெங்குபலி சென்னைநகர் தங்குமருள் சிங்காரவடிவேலனே.

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 19.

உ

திருப்போரூர்

# மணிப்ரவாளப்பதிகம்.



சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களாது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1908.

உ

முருகன் துணை.

# திருப்போரூர்
# மணிப்ரவாளப்பதிகம்.



உனதுநகரொருநா ளிருந்தபேர் யமராஜ
　　னூரிலொரு நிமிஷமு மிரா
ருன்கோயி லொருதரஞ் சுற்றினேர் விண்ணுலகி
　　லும்பர்படை சுற்றவாழ்வார்
நினதுதிருவடிவையொரு போதுகண் டவர்கள்பின்
　　னெடும்பவச் சலதிகாணூர்
நித்தமுமுனைத்தொழும் பத்தஜனர் பெருபேறு
　　நிச்சயித்தோத வசமோ
கனகமய கேயூர கனபுஜத்துவாதசா
　　கலதகங் காரநந்தனு
கலசகுச யுகளகச் சளவிலோ சனசபர
　　கன்னிகா ஜீவரமணு
ஜனபத சமஸ்தஜன துரிதாந்தகாரமே
　　சனசந்திரகிப சண்முகா
சகலமுனி ஜனவினுத தருணரவி கிரணகண
　　சமரபுரிவருகுமரனே. க
வெற்பரையன் மங்கையார்பொற்பிளங்கொங்கைமேன்
　　மேருகிரி வில்லி புஜமேல்

வெகுவித நடம்புரிய மேகார தாகத்தின்
மேலரு மறைத் தலையின்மேற்
பற்பல மகாபுண்ணிய சிகரிமே னிற்குமுன்
பாதயுகளத்தை நித்தம்
பாவியே னிதயஞ் சுமந்திடப் பெறுதவப்
பயனையே தென்று சொல்வேன்
கற்பகாடவிவாச கல்யாண சுரராஜ
கன்னிகாமணிநாயகா
கனமான கும்பலம்போதர கஜானனக்
கணபதிக் கொரு சோதரா
சற்பமுடி மேலோடு சரணபங்கேருகச்
சக்ரபாணிக்குமருகா
சகலமுனி ஜனவினுத தருணரவி கிரணகண
சமரபுரி வருகுமரனே. உ

பித்தமதி சாரஞ் சுரஞ்சூலை காமாலை
பெருவயிறு குன்மமூலம்
பீனசங் குட்டஞ்சயங்கண்ட மாலைபெரு
பிளவையோ டுலகிலின்ன
மெத்தனை வியாதியுண்டத்தனையு நின்கோயி
லெதிர்நின்ற மனிதர் தம்பா
லிமைப்பொழுது நில்லாது விட்டகலு முன்மகிமை
யெம்பா லுரைக்க வசமோ
சித்தகின் னரகருட கந்தருவ சேவிதா
தேவதாசார்வபௌமா

சிங்கார கனகிங் கிணிகால கனகோஷ்ட
திவ்வியசரணும் போருகா
சப்தபூதலமுமொரு நொடியில் வலம்வருசதுர
சாமகானப்ர மோதா
சகலமுனி ஜனவினுத தருணரவி கிரணகண
சமரபுரி வருகுமரனே. ௫

சீதரனு நான்முகனு மொருசற்றுமறியாத
திருவடியு முடியு முடையோன்
செவியினிற் பிரணவப் பொருள் வடித்துரைஞான
தேசிகோத்தமனீயெனப்
பூதலமெலா மெச்சுபுலவர் சொல்வினவியும்
புண்ணியா வுன்னைப்பரம்
பொருளெனக்கருதாது பரதேவரைத்தொழும்
புல்லர்க்கும் வினைதீருமோ
பாதக நிசாசர்குல சூரசங் கிராமமலர்
பதுமவனி தைக்கு மருகா
பரிமளகதம்பப்ர சூனபூஷணமிருக
பதிமுக சிரச்சேதனு
சாதுஜன போஷணு சகஸ்ரதா மப்ரபுட
சச்சிதா நந்தரூபா
சகலமுனிஜனவினுத தருணரவி கிரணகண
சமரபுரி வருகுமரனே. ௬

அயில்வேல் விடுத்தசுரர் குலமான மிக்கபே
ரடவியத் தனையுந் துணித்

தகவுரு விசும்புலகி லமரர்குடி யேறவோ
　　ரயிராணி கண்டத்திலே
வெயில்வீசு மங்கிலிய மீந்துகில நிற்கமணி
　　விழியாயிரம் பெற்றவன்
வீராசு தொழில்புரிய வைத்தாயுனைப்போல
　　மேன்மைபெறு தேவரெவர்காண்
கயிலாச பதிசுதா கனகசுக் கிடத்வசா
　　கல்ஹார சூனப்ரியா
காங்கேய சதகோடி கந்தர்ப்பசமரூப
　　கார்த்திகைக் குரியபுத்ரா
சயிலாதி பதிசுதா தனயகிருபாகிர்பா
　　சாரநயனத்வாதசா
சகலமுனிஜனவினுத தருணரவிகிரணகண
　　சமரபுரி வருகுமரனே. (௫)

கஞ்சமலர் நிகருமிரு தாளுஞ் சதங்கையுங்
　　கனராக வர்னத்துகில்
கட்டுதிரு வரையுமரை ஞாணுமிள வெயில்வீசு
　　கடவுள்மணி யாரமார்பும்
நெஞ்சமர் விளக்குமயில் வேன்முதற் பலதானை
　　மேவுபன் னிருகைகளும்
மென்முருக கவிழ்நீப மலர்நாறு மீராறு
　　வெற்பனைய திண்டோள்களுஞ்
செஞ்சலச குண்டலச் செவிகளீ ராறுமருள்
　　சிந்துமீ ராறுவிழியுங்

திங்கண்முக மாறுஞ் சிரத்திலணியொழுகொளிச்
செம்பொன்முடி யாறுமெளியேன்
சஞ்சலந் தீரவே கண்டுபர மானந்த
சல்தியி லழுந்தவைப்பாய்
சகலமுனி ஜனவினுத தருணரவி கிரணகண
சமரபுரி வருகுமரனே. (௬)

சுரிதியைக் கரைகண்ட சதுரான னத்தனுஞ்
சுடராழி நெடுமாயனுஞ்
சூலாயு தத்தனுந் துதிசெயப் பலகோடி
சுரர்பணிய நரர்பணியவே
சுமநிறக் கடன்மே லெழும்பவள மலையெனக்
கனவேக வெற்றிமயின்மேற்
களிகூர நீவரும் பவனியைக் காணாத
கண்களுங் கண்களாமோ
அருண ரத்னப்ரபா கனககுண் டலதரா
அகிலாத்ம குலபாலனா
அண்டபரி பூரணாநந்தித சரித்திரா
அபங்கவீ ராக்ரகண்யா
சரவணத வோத்பவா சத்கிர்பாசாகரா
சம்புல்லபது மநயனா
சகலமுனி ஜனவினுததருணரவி கிரணகண
சமரபுரிவருகுமரனே. (௭)

நலமிகத் தரவல்ல கிர்த்திகா நக்ஷத்ர நாளினின் னூர்வந்துதா, னளிற்புனர் சரவணப் பொய்கைதனி லாடியு நறுங்கலாமதியைத்தொடும், பலமதிற்கோயில் வலம் வந்துநின் பதயுகள பங்கயங் கண்டுதொழுதும், பாருலகி லுண்டான நரர்பெற்ற புண்ணியம் பலசுரர் தமக்குமுளதோ, கல்ஹார கலித சோபித கண்டரம ணீயகன துரிததிமிரசோமா, கனமலேயகிரிவாச முனி ஞான தேசிகா கமநீய கோமளாங்கா, சலசகத்தகலா தசதுர்முகனுமுச்சரி சடாக்ஷராதேவோத்தமா, சகல முனிஜனவினுத தருணரவிகிரணகண சமரபுரி வருகு மரனே. (அ)

உனதுசெஞ் சேவலங் கொடியொரு தரங்கூவிலுல கமீரேழுமதிரு, முனதுமயில்வாகனஞ் சிறையடித்தெ ழுமளவிலுயரண்ட கோளமிடியும், நினதுவேல்வலியி னைச் சொல்லவோமுடியாது நீரகச்சதுர்முகனையு, நின் சிறுவிரற்றலேநகத்தினல் வெல்லுவாய் நின்னைவெல்வா ருமுளரோ, வனசர குலாங்கனு குசயுகள பூஷணமத் தகஜவல்லிநாதா, வக்ரசிர்ங்கத்வய மகாமேஷவாகனு மஞ்சுவிக்ரமசன்னிபா, சனகர்முதனுல்வருக் குபதே சகுருவான சங்கரற்குபதேசகா, சகலமுனிஜனவினுத தருணரவிகிரணகண சமரபுரிவருகுமரனே. (கூ)

பலமுக ருனதுகுண சரிகையைப் பாடவப் பாடலை ச்செவிடர்வினவப், பாருளோரிகழ்முடவ ராகினுரு ன்பெரும்பதியினைக் கண்டளவிலே, வலமாய்வரக்குரு

டர்கண்டுகளி கொளவரந் தருவையுன்போலவே, மன மிகவிரங்கி யடியவர்வினை களைந்துவிட வல்லதெய்வங் களுண்டோ, திலகரனனக்கவுரி நந்தனுபத்தஜனசித் தரதபத்ரகிலயா, தேவசேனதிபா தானவகுலாந்தகா தீனஜன துரிதஹரணு, சலசானனப்ரவுட பூசுரோத்த மவந்திய சந்ததோற்சவவைபவா, சகலமுனிஜனவினு த தருணரவிகிரணகண சமரபுரிவருகுமரனே. (கo)

பண்டு பொய்யாமொழிப் புலவனுடனேகாது பாடி னைவிளங்குசங்கப், பலகையிலிருந்திறைவா பொருளு ரை தெரிந்தனை பணிந்துபுகழ் கீரனகவல், கொண்ட னைவழுத்தருணகிரிகவிதைசூடினை குணக்குறு முனிக் குந்தமிழ், கூறினையுனைப்பாட வொருசற்று மறிவற்ற கொடியனல் முடியுமோகாண், அண்டர்பலர் கொண் டாடுதென்பரங்குன்று திருவாவினன் குடியேரக, மழ கானசெந்தில் பழமுதிர்சோலை குன்றுதோருடலுமுக ந்தசதுரா, தண்டுளபமான்மருக வொருகுருகுவரைப கத்தனிவேல் விடுத்தமுருகா, சகலமுனி ஜனவினுத தருணரவிகிரணகண சமரபுரி வருகுமரனே. (கக)

மணிப்ரவாளப்பதிகம்.

முற்றிற்று.

———

உ

திருப்போரூர்

# முருகக்கடவுள் பதிகம்.



இஃது,

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

முருகன்றுணை.

# திருப்போரூர்
# முருகக்கடவுள்பதிகம்.



## விநாயகர்துதி.

காருறழைம்பாலார் கதியோங்குபோரூரன்
பேரிலொருநற்பதிகம் பேசவே—ஆரருள்சேர்
பஞ்சமுகத்தோன்றந்த பசியவேம்படிமேவு
குஞ்சரனினிருகழலைக் கூறு.

திருமருவுமுனிவரர்க ளநுதினமுமுழுகிநற்
 றினகராவென வருக்கியந்
திகழ்ந்துய ரருச்சனைக் காயத்திரிச்செபஞ்
 சீர்பெறச்செய்துபாசக்
கருமருவு பிறவியெனுங் கடறணைக்கடந்திடக்
 கனமியற்றும் வேள்வியைக்
கானகத்தழித்த தாடகையைக் கொல்கிருபையுறு
 கண்ணனுக் கினியமருகோய்
பொருவரிய விமாசலப் புதல்வியாமுமையீன்ற
 புத்தர்தலை தத்தவைத்தோய்
பூதலத்திடையெளியன் போலுமொருவன்னெஞ்சன்
 புகலுதற் குண்டோசொலாய்

குருவடிவு தரித்தன்று குறுமுனிக் கருடந்த
கோதிலாமணியே யெனையாள்
குலவான மறைஞான நலமான துறுமோன
குலனன போரிமனனே. (௧)

இருமைசெறிசடவினையை மெய்யெனச்சிந்தித்து
மினியவச னுதியின்றி
யித்தரையிலுற்றுநற்க ல்விகல்லாதவறி
வீணன ந்ாயினேனும்
பெருமைபெறுமுனதமிக் குயர்ந்தபரிபூரணப்
பெரியவாழ் வுறுவதற்குப்
பேசரியபரிவகக் காலமன்றாயினும்
பெம்மானு னுபயசரண
வருமையாஞ்சலசதை யெனதுமுடி சூட்டிடா
யாரன னத்தையனே
யன்பருளமெஞ்ஞான்று மகலாத்தனிப்பரம
தானதொரு ஞானமயமே
குருவாருமிலையவே லுற்றநற் கரதலக்
குக்கிடத்துவசத்தனே
குலவானமறைஞான நலமானதுறுமோன
குலனன போரிமனனே. (௨)

அண்டர்களாமவுண ரென்களைகளைக்களைந்
தண்டரென் பயிர்தழைப்ப
வருள்செய்தநினதுபுக ழணிகொண்டநீராழி
யவனிபரி சேடனுள்ளங்

கொண்டுசொலவரிதென்னி லொருநாவையுடையநான்
கூறலாந் தகைமையாமோ
கொங்கதார்ந்துலவுங் கடப்பமலர்மாலையணி
குன்றுபுரை திண்டோளனே
கெண்டைமீற் கொடியுயர்த்தோன் வெப்புமாற்றியருள்
கேவலஞ் சகலமற்றோய்
கேதமற்றொளிர்வீழி மிழலையிற்பாடிநற்
கிளிச்சிறைக் காசுபெற்றோய்
குண்டுசுனைமலர்வண்டு பட்டுநல்லிசைமுரல்
குவளைசக் கிருவர்தலைவா
குலைவானமறைஞான நலமானதுறுமோன
குலனான போரிமனனே. (௩)

அகம்பிரமமெனவெண்ணி நானெனதெனப்புகலு
மாங்கார மமகரத்தி
லதிகமாகச்சிக்கி யொருநாளுநினதுதிரு
வாலயம் வலம்வந்திலே
னகங்கடொறுமினிதாட லியற்றியருடனிநாத
நாவலர்க டொழுதேத்தரும்
நாபிகமலத்தனரு ணான்குமுகவேதாவு
நாண்சிருட்டிப்பேனென
வகத்தினிற்கழறவோ மென்மொழிப்பொருள்வினவி
யவனையாழ் சிறையில்வைத்தோ
யடியனேனிறுமாப்பு மகல்வித்துமெய்ஞ்ஞான
வபரோட்ச பரோட்சமருள்வாய்

குகைபொன்று திகிரிகட் சிறகெறியும் வச்சிரகர
கோபதிக் குரியமருகோய்
குலவானமறைஞான நலமான றுமோன
குலனான போரிமனனே. (௪)

சொல்லுமிக்குறுபொருளும் வடிவானவெந்தையே
சுத்தபரி பூரணத்திற்
றேயுமொருநேயனே யேயகனியதரார்மாற்
றுக்கத்தி லாழ்ந்தநங்கி
யல்லலுறுவதுபார்த்துமெல்லவொருமொழியதா
மாநந்தப் பெருநிலையதை
யருள்செய்பமருணீங்கி யிரவுபகலற்றவிட
மார்ந்துறுநி னன்பருள்ள
நல்லதொருதாண்டவஞ் செய்புநின்பாதமலர்
நளினத்தை யளித்திடாம
னுபினேனைச்சோதனைச் செய்வதழகுகொன்
னுகமுகனுக் கிளைஞனே
கொல்லுலையவயிலைவேற் கண்ணுளருட்டநய
கொத்ததார் குறவணிந்தோய்
குலவானமறைஞான நலமான றுமோன
குலனான போரிமனனே. (௫)

அலைதிகழ்செவானநிகர் சடிலவிறைபகமகிழ்ந்
ததோமுகத் துடனேயமர்ந்
தளித்திட்டவன்றுகுல கிரிகளிருநான்கையும்
மலைகொழிக் திரங்குருழி

நிலைகுலைந்திடப்பெய்து மேருவாமோர்சிகரி
நெட்டுயிர்ப் பாளதெரிய
நினதுமலைமலர்க்கரங்கொண்டிளையவாகுவுட
னேர்மையா விளையாடினே
யிலையுருவரெனவறிந் தோர்சொலக்கரவுதனை
யென்றுமே கைக்கொண்டுமிக்
கியற்றிவருவாதாவி வில்வலப்பேர்கொண்ட
விருளூற்ற தநுவடைந்தோர்
குலைவுறச்சந்தமால் வரைமுனிக்கேணீந்த
கொற்றவா வெனையாளுவாய்
குலவானமறைஞான நலமானதுறுமோன
குலனான போரிமனனே. (சு)

எழுதரியமறைவேள்வி யோவறக்குயிற்றிவரு
மெந்தைநற் சண்பைநகர்வா
ழினியவில்லாச்சிரம சிவபதவிதயர்தவக்
கேற்றதோர் குழவியாகி
யழுதிடப்பாகத்த ளருண்ஞாணப்பாலதுண்
டவனிவாய்ச் செஞ்சொலாற்பா
லாகுநன்மாரிதனை மாணையிடமேந்திநில
மானதொரு வாகுபெய்த
தொழும்பருறு கீர்த்திபெறு கைம்மாறுகருதாத
தகளற்ற வியன்கொண்டலே
தூயசிற்சுகவாரி திப்பெரியர்மயிலைவாழ்
தொண்டனுஞ் சிவனேசனின்

குழவியாமங்கத்தை மின்னுக்கியாட்கொண்ட
குமரனே மயிற்றுரகரனே
குலவானமறைஞான நலமானதுறுமோன
குலனுன போரிமனனே. (எ)

படுபுலனெனப்பெயர்கொள் பஞ்சமுழை வாய்க்கராம்பற்றனு னுட்சிக்கியே, பாழாகியறிவுநனி யலைசுருண்டேங்கிவரு பார்மடந்தைக்கோராடை, யுடுபிறவியாழிபிற் பட்டுமிக்கிருவினை யெனுந்திரையின் மோதுண்டுமே, யோயாமலிரவுபக னுன்வருந்தாமிற்க வுற்றவிச்சமயத்திலே, கடுமிடறன்மைந்தனே நினது தாட்புணைதனைக் கருத்துன்னி யுதவாவிடிற், காசினியிலெளியனேன் பிழைப்ப தூண்டோசொலாய் காசிபன்றந்தமைந்தன், கொடுமையுறுசூரற் றடிந்ததொரு சீர்த்திபெறு குறிஞ்சியகலாதகுருவே, குலவானமறைஞான நலமானதுறுமோன குலனுன போரிமனனே. (அ)

தடக்குவடுடற்றுகள் படக்கடியமரனேதகர்ப்பரி செலுத்திறேனே, தாவில்புகழாற்புபா மொழிக்கவிப் பாவனைத்தாழ்ந்ததா வுட்கொண்டுநன், மடவநடையயிலெயிற் றியர்கள்வாழ்சுரத்தினை வண்மைமலர் வாய்திறந்து, வானத்திருந்து வீழ்திவலைசுடர்சுடுமென்றுமயக்குற்ற தாப்பாடிநோய், விடமுண்ட குறிகண்டவிருள் கண்டமறிகொண்ட விரல்கொண்ட வங்கைகொண்ட, வியன்கொன்றையணிகின்ற முதுகுன்ற மணிமன்றன்மிகுவீறின்மூரலற்ற, குடதிசைக் கெஞ்ஞான்று

வோரிடப் பகைவனைக் கொன்றசற் குமரவேளே, குல
வானமறைஞான நலமானதுறுமோன குலனைபோரி
மனனே. (௯)

மண்டுபுகழ் கொண்டதோ ரெண்டகாப் பொன்
னுண்ட மாண்மைபெறு முலகதனிலே, வானவர்கண்
மன்னியக மகிழ்ச்சியொடமர்ந்துய்ய வஞ்சரையநாளி
ற்சென்ற, கண்டுமொழிகெண்டைவிழிகொண்டுலவுசெ
ண்டுமுலைக்கண்ணியர்கண் மாய்கையுற்றுக், கருந்திரை
ப்புரளுநீ ராழியுடுதரைதனிற்கருத்தழிந் தழுங்குறாஉ
ந், தொண்டனு மளியினங்கிண்ட முகைவிண்டுநனைதா
ய்மைபெறுநறவமார்செய், சூழுமாரூரினுற் சுந்தரர்கா
விரவுதூதசென்மாதிடத்தர், கொண்டதொருகுமரனு
ம்வடிவேலெனபிதான கொண்டோனெ யெனையாளு
வாய், குலவானமறைஞான நலமானதுறுமோனகுல
னை போரிமனனே. (௰)

வாழ்கவேதியர் வையத்தரசனும்
வாழ்க வானவர் மாரியு மோங்குக
சூழ்சைவத் துறையினி லுள்ளவர்
ஆழ்க குகன்மலரனைவர்கணெஞ்சமே.

முற்றிற்று.



ஆக புத்தகம் 21.

உ

# திருப்பழனி

# வடிவேலர்பேரில் பதிகம்.



இஃது,
சிறுமணவூர்
முனிசாமி முதலியாரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1908.



உ

முருகன்றுணை.



# திருப்பழனி வடிவேலர்பேரில்பதிகம்.



ஆதிபரமானசுய சோதியேயீசர்க் கரும்பொருளு ரைத்தகுருவே, ஐயனேயுன்னையுஞ் செய்யவேல்மயில் வள்ளியம்மைதெய்வானைதனையும், நீதமுடனனுதினமு மோதவேயெந்தனது நெஞ்சினிற்குடி கொள்ளுவாய் நிமலனருள்பாலனே குமரகுருவேலனே நினைப்பவர்க் கனுகூலனே, கோதறப்பாரிலுளவேதசாஸ்திரமெலாங் குருமுனிதனக்குரைத்தாய், குவலயத் தனதன்பர்கவ லையைப்போக்கிடக் குருவாகிவந்தவர்க்கே, தீதிலாமெ ஞ்ஞான போதமதையவர்களது சிந்தையுட்டெளிய வைப்பாய், செங்கண்மால் மருகனே திங்கவேல்முருக னே தென்பழனிவடிவேலனே. (க)

ஆடியதோர்பம்பர மோடிவீழ்வதுபோலென்னு க்கை கெட்டழியுமுன்னுன், னழியாததிருவடியென்வி ழியினாற்காண்பதற்கருள்தருகவேண்டுமையா, கூடுவிட் டாவிபின்னேடியதொடுக்கையிற் குறிப்புடன் காண்ப

தரிதே, கூறுவாயிவ்வுலகில் சாருவாய்மீனெனக்குலக ள்தடுமாறுதையோ, மாடுதனம்வீடெனத்தேடுவதிலெ ன்னமனைமக்கள் தாய்தந்தையுடனே, மகராஜனாகவிச் செகமாண்டிருந்தென்ன வடிவேலாயுனதடிதினம், தே டிமெஞ்ஞானமதை நாடும்வகை யருளுவாய் திருவா யினிற்றுயின்ற, செங்கண்மால்மருகனே தங்கவேல்மு ருகனே தென்பழனிவடிவேலனே. (உ)

அல்லுபகனின்றுதிப் பில்லாதிருக்கின்ற வறிவி லேனாகிலுமென், னப்பனேயெனதுடைய சொப்பனத் துன்வாக்களித்ததும்பொய்யதாமோ, இல்லையோவன் பரிடம்வல்லையோநற்கீரரிடர் தவிர்த்தாளவில்லையோ, எ ளியனிடர் தீர்க்கவிப் பழியுனக்கல்லவோ யெவர்வரு வருன்னையல்லால், கல்லையோயான்றுதிகள் சொல்லி னேனனுதினங் கபடுவையாதுநெஞ்சிற், கருதுமடியா ர்கடம திருவினைதவிர்த்துநற் காக்ஷிதந் தாளுதற்கே, செல்லுமேயுந்தனல் வல்லபமதில்லையோ திருவாக்கெ னக்கருளுவாய், செங்கண்மால்மருகனே தங்கவேல் முருகனே தென்பழனிவடிவேலனே. (ந)

ஆடியேயனுதினம் பாடித்துதிக்கவொரு வனு வேறுயயானறிகிலே, னறமாகிலும் செயப்பொருளே

தமிலேபிந்த வவனியிலுடம்பெடுத்தேன், னீடியெந்நா ளுமிக்கூடழிவிலாதிந்த நீணிலத்தெவர்வாழ்ந்தனர், நி ல்லாதகாயமிது சொல்லாதகன்றுவிடும் நீரின்மேற்கு மிழியதனல், நாடினுனுன்சரண்தேடிப்பிடிக்கமெய்ஞா னமதெனக்கருளுவாய், நட்டாறுதன்னிலே விட்டிடா தேகொடிய நமனும்வந்தெந்தனைத்தான், தேடிப்பிடித் திடவுமோடிவருமுன்னிலுன் திருமயிலின்மீதுவருவா ய், செங்கண்மால்மருகனே தங்கவேல்முருகனேதென் பழனிவடிவேலனே. (ச)

ஆசையதுகொண்டுலக பாசக்கடற்குளே யழுந்தி யிப்பாரிலேயா, னரவின்வாய்த்தேரைபோற் சிறுமை யோடிருப்பதனை யறியாதிருப்பதெதினுல், நேசமுட னல்விசுவாசமதுசற்றிலா நிர்மூடனெனினுமிந்த, நீணி லத்துனையலால் வீணிலொருதெய்வத்தைநெஞ்சந்தனி ற்றுதிக்கேன், மாசென்னசெய்தன்யான்பேசினவர்பே சாமல்மௌனத்திருப்பதென்னே, வன்மமோகிற்குமி துதன்மமோகிள்ளைமொழி வள்ளிசொல் மாய்கைதா னே, தேசங்கள்புகழுமுருகேசனே முகிலொத்ததிரும யிலின்மீதுவருவாய், செங்கண்மால்மருகனே துங்கவே ல்முருகனே தென்பழனிவடிவேலனே. (ரு)

வல்லனேயான்சிறிய புல்லினிற்கிணையாமோ வடிவேலவடியனேற்கு, மாறுதனினதருள் தாராதிருக்கின்றமனச்சலிப்பேதையனே, கல்லேநிகர்மூடனென் சொல்லுவதுன்னீராறு காதினிற்கேட்கவில்லயோ, கடினமோயென்றும்நின் னடிமைநானல்லவோ கலங்குதேயெனதுநெஞ்சம், புல்லறிவினேற்குனது சொல்லாணர்த்திமெய்ப்போதமதெனக்கருளுவாய், புத்திசற்றில்லாதபத்தியோரென்போல்வர்பூவுலகிலியாருமுளரோ தில்லைதனில்மேவிவளர் வல்லிசிவகாமிமகிழ் சிவகுருவானபரனே, செங்கண்மால்மருகனே துங்கவேல்முருகனே தென்பழனிவடிவேலனே. (கூ)

தரணிதனையாண்டகுரு பரனேநின்றருள்தனைத் தரிசிக்கவேமனது வுருகுதே, யினிருகண்கள்குளிரத், தரிசிக்கவேமனது வுருகுதே யினிருகண்கள்குளிரத், ஒருநாளுமிரவுபகல் சற்றும்பான்கண்டுகொண்டால், ஒருநாளுமெமபயம் வாராதேதமன் னுமுதலுற்ற மூவாசையருமே, வுறியவொருதாய்வயிறில் மருவுமொருகருவாகிவற்பவமுமின்னமுண்டோ, அரவிணைப்பணியென்னவுரமீதணிந்துகொண் டாடும்நற்பரமனருளு மையனேயிராறு கையனேயெனக்கினியவருள் தருகும்நின்னடியையான், திரமுடன்கரணநல்வரமதைத்தருகுவாய் சி

வகுருவதானபரனே, செங்கண்மால்மருகனே துங்க வேல்முருகனேதென்பழனிவடிவேலனே. (ச)

எத்தனைவிதத்தில்நற் புத்திகளனேகமா யினிதா யெடுத்துரைத்து, மென்னுடையபாழ்மனது பின்னுமு லகாசைகொண்டேங்குதே சற்றுகிலும், பத்திசெய்து னதடியைநித்தமுந்துதியாத பாவியானிருந்து மிந்தப் பாரினிற்சமனுைத்த நாரியர்கள் காமவெம்பரவைதனி ல் வீழ்ந்தழியவோ, யித்தனைகடுஞ்சூது வைத்திருந்தா லினிமே லெவ்விதத்துனை நம்புவேன், எழைமுகமதை யிந்தவேளைபார் யான்செய்தயிருவினை தவிர்க்கவுந்தன், சித்தமதிலன்புமிக வைத்தருள்செய்கைலைவளர் சிவகு ருவதானபரனே, செங்கண்மால்மருகனே துங்கவேல் முருகனே தென்பழனிவடிவேலனே. (ரு)

வையகம்புகழுமுரு கையனேநின்கோவில்வலம்வ ராக்கா லிருந்தென், வடிவேலெனத்தினம் படியாதிருக் கின்றவாயதுமிருந்துமென்ன, மெய்யனேபழனிவேலை யநிற்காணுத விழியதுமிருந்துமென்ன, வேதமுறுமெ ய்ஞ்ஞான போதங்கேளாதசெவி வீணினி லிருந்துமெ ன்ன, வையநின்னடிமீது பையவேசேவியாவங்கைகளி ருந்துமென்ன, வண்டர்தொழு நின்றிருத்தொண்டுசெ

ய்துய்யாத வாக்கைதானிருந்துமென்ன, செய்யவடி வேல்கொண்டவையனேவறிவிலாச் சிறியனேற்கருள் புரிகுவாய், செங்கண்மால்மருகனே துங்கவேல் முரு கனேதென்பழனி வடிவேலனே. (௯)

எத்தனைதலங்கள்போய்ச் சுற்றினும்பேரின்பமெ ய்துமோவேழையேற்கே, யெழிலானமுகின்மழைபொ ழியவுயர்தெங்குபனை யினியபலாமாவரம்பையித்தி நா வற்கமுகு சுற்றிலின்னந்தருவிலிங்கவுங் குமுதமலரோ, டெங்கும்விகசிக்கின்றபங்கயப்பொய்கை யொடுமிணை யில்பழனங்கள்சூழும், எத்திசைகளும் புகழ்வுற்றநற்றி ருவா வினங்குடிதனக்குநிகரா, யிருக்குமோவறுத்த மீன் பொறுத்தியுயிராகுமற் றின்னமு மனேகமுமு ண்டென், சித்தமதுதெளியமனம் வைத்தருளவேண் டுநற்சிவகுருவ தானபரனே, செங்கண்மால்மருகனே துங்கவேல்முருகனே தென்பழனிவடிவேலனே. (௧0)

வடிவேலர்பேரில் பதிகமுற்றிற்று.



ஆக புத்தகம் 22.

உ

திருவேரகம் சுப்பிரமணியக்கடவுள்

# மெய்ஞ்ஞானப்பதிகம்.



சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1908.



உ

திருவேரகம்

# சுப்பிரமணியக்கடவுள் மெய்ஞ்ஞானப்பதிகம்.



## இரட்டையாசிரிய விருத்தம்.

சித்தமாய்நின்றபர மானந்தவுச்சியிற் சிவஞானதீப மாகித், திகழிரவியாகி மதியாகி தேசியினிற்சிலம்பொ லியினாதமாகிச், சத்தமாய்நின்றபர மாநந்தநாதமாய்ச் சண்முகக்கடவுளாகிச், சரவணோற்பவ முருகாவாவெ னத்துநிக்கின்ற சடாட்சரரூபமாகி, நித்தமாய்நின்றம யிலேறுமாதேசியாய் நிற்குணநிராகாரமாய், நிர்மலநி ரஞ்சன வகண்டபரிபூரண நிசரூபமானகுருவே, சுத்த மாய்நின்றவேல் சத்தமாய்வைத்தநின் சொரூபத்தை யென்றுகாண்பேன், துரைராசதெட்சநிகர் திருவேர கத்திலுறை சுப்ரமணியக்கடவுளே. (௧)

ஆதிசிவரூபமாய் நாசியொளியூடுபோ யகண்டமய மாகியெங்கும், அகாரவடிவாகியே யுகாரவடிநாதமா யநாதியின்மகாரமாகி, நீதிசிவஞானமாயோதியதபோ தனர்த நிஷ்டைக்குநேசமாகி, நீயன்றி யானன்றி இ

ரண்டினுமிலாததோர் நெற்றிநேரிட்டசுழியில், பூசிசி வவானந்த பொங்குகடலங்கண் புருவநடுவானவெளி யில், போதமயமாகவருநாத வொலிகீதமொருபுலியூ ரிடத்திலென்றுஞ், சோதிசிவமயின் மீதிலாதிவேற்கை யுடன் சொரூபத்தை யென்றுகாண்பேன், துரைராச தெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணியக் கட வுளே. (உ)

தூலமயமாகிய மூலவாதிஷ்டான தோன்றுமணிபூ ரமாகிச், சொற்பெரியவாநந்த விசுத்திமே லாக்கினைக டோன்று மண்டலங்கண்மூன்றாய், வாலைமயமாகிய ம னோன் மணியினம்பிகை மகாரமுங்கடந்துதாண்டி, ம ணிச்சிலம்போசைமேல் கோலமயமாகவே கொங்கண வர்காணவே கோடான கோடிநடனம், கும்பமுனித ன்னுடனம்பலத்தாடி குமரகுருவானபரனே, சூலமய வேலுடனீலமயின்மீதிலே சொரூபத்தை யென்றுகா ண்பேன், துரைராச தெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணியக்கடவுளே. (ஙூ)

தற்பரமதாகிய நயனநடுவெளியிலே தங்குநாகப்பிர மமாய், சாலோகசாமீப சாரூப சாயுச்சிய சதகோடி ரவிமதியுமாய், நற்பிரபவுச்சிமே னம்பரமவெளியிலே நாதாந்தபோதாந்தமாய், நாலுமறை வேதமுமோலமி ட்டறியாத நந்தியொளிகாந்தியாகி, விற்பரமவெளியி லே ஒளியாகி அறிவாகிமேன்மையாய் வெளியுமாகி, விண்ணோர்கள்காணவே முன்னோர்களறிவிலே மெய்

ஞ்ஞானமௌனமான, சொற்பரமசண்முக வெப்போ துமறவாமல் சொரூபத்தை யென்றுகாண்பேன் துரை ராசதெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணியக் கடவுளே. (ச)

வாசியிடைகடையாகி மதிஞலும்பாழதாழ் மறுப ட்டுநின்றமனதை, வங்கொன்று வாங்கிறதை சிங்கென் றுரேசித்து வச்ரமலையுச்சிமேலே, நாசியிடையூடுபோ ய் வீசிவிடுமும்மல நாதாந்தமுத்தியிதுவே, நக்கனர் சொக்கர்துணை முக்கியமீஃதுண்மையோ நடுவானகட வுளிதுவே, தேசியிடைபாயாமல் வாசமிடுமலர்போல த்தேனுக்குளின்பமொக்குஞ், சிவசிவாயாகார நடன மிடுசண்முகா தேவாதிதேவர்கோவே, தூசிபடவேவ் யசுரர்நாசமுறவேயளித் தோகைமயில் வேலுமாகத், துரைராசதெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணி யக்கடவுளே. (ரு)

அண்டபகிரண்டத்துக் கப்புறமுப்பாலு மப்பாலுக் கப்பாலுமா, யணுவிலணுவாகியே வுபநிடதநடனமா யருளுமொரு பரமவணுவே, கண்டமுதலறிவேதனே டிசைக்கோடியுங் காணெணுக்கருணைவாழ்வே, கருது மடியார்க்கடம் மறுகிலுறு முறுகலிரு கண்ணேடிருந் தகழலே, பண்டைவினையகலவிடு தொண்டுபடமௌன மொழிபகருவ தனக்கருமையோ, பரமசிவகுருவான திருமுருகசண்முகா பத்திக்குமுத்திமுதலே, தொண் டர்நடுவாகிய சூரசங்காரனே சூராதிசூரர்காலா, துரை

ராசதெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணியக்கடவுளே. (சு)

மறவுமனவெளிமாயை யுறவுமொருவுபதேச மௌனமொழியருளவேண்டும், வருகின்றபசுபாச மெரிதின்றுபோகவு மந்திரஞ் செய்யவேண்டும், நிறைவுசிவயோகமும் பரவுபரலோகமு நின்கருணை என்கருணையாய், நீயின்றிவேறுதுணை யாதொன் றெனக்கில்லைநிர்மலாநந்தபரமே, யுறவுபரவெளியாகித் திறவுகோனீயாகி யுற்பனஞ்செய்யவேண்டும், மொன்றினுக்கொன்ருகி யெண்டிசைகளெங்கினு முண்மையாய் நின்றசிவமே, துறவுசிவஞானிகள் பரவுசன்முகவனே தூண்டாததீபசுடரே, துரைராச தெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணியக்கடவுளே. (எ)

அகண்டபரிபூரண வகாரமுமகாரமா யறிவுமுடலுயிருமாகி, யம்பரசிதம்பர சம்புசிவசம்புவே யதிநடுவுகாரமாகி, நிகண்டபரநாதமாய் ரீங்கார ஓங்காரநிர்மலசொரூபமாகி, நிற்குணநிரஞ்சன சற்குணசடாக்ஷர நிதிசிவமான பொருளே, புகண்டபரமூலமாய் புருவநடுவாகியேபோத மயமாகிநின்று, போதிப்பதற்குமேலாதிசிவகுருவுநீ பொய்யல்லமெய்யுமிதுவே, துகண்டவர்க்கிதமாயகண்ட பரிமயின்மீதில் சொரூபத்தை யென்றுகாண்பேன், துரைராசதெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணியக்கடவுளே. (அ)

அருவமயமாகிய வம்பரமவெளியிலே யறிவுதருகு ருவுமான, வானந்தமோனந்த தானந்தமயமானவாறு முகமானவருளே, புருவமைநயனவொளி பரமவெளி யாமிது பொதுவாக நின்றதொன்றே, புரமெரியமூம்ம லந்தாமெரியவேசுடர் பொங்கிநிற்கின்ற வொளியில், குருவுமயமாக வருமுருகசரவணபவ கோடானகோடி வெளியில், கும்பிட்டுமென்பிறவி பின்விட்டுமோட வே கோணுதுவந்தருளுவாய் சொரூபமயமாகவரு க ருணைதருசண்முகா சொரூபத்தை யென்றுகாண்பேன் துரைராசதெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணி யக்கடவுளே. (கூ)

கந்தநின்கருணையாலென்றனறி யாமையாற்கருதும் வாழ்த்தொன்று சொன்னேன், கருணைதருபெரியோர் களருண் மலர்கமலமென் கபாலத்தில் சூடவேண்டும், எந்தனுடபொருளாகி விந்துனிற்கவொருமௌனமோ ராந்தவெட்டவெளியில், இன்பதுன்பங்கடந் தம்பரம வொருயிலேயென்றும்போதித் தருளுவாய், உந்தனி டசிந்தனை வந்துமனுபூதியா யோமென்று மேலதாக, வொருவரறியாதபர சரவணோற்பவகுகவுண்மையாய் நின்றசிவமே, தொந்தவுடலெந்தவகை வந்தவழிகண்டு னது சொரூபத்தை யென்றுகாண்பேன், துரைராச தெட்சநிகர் திருவேரகத்திலுறை சுப்ரமணியக் கட வுளே. (கO)

அம்பரமதாகிய சம்புசிவசம்புவே யறிவுதருமௌனவாழ்வே, யடியவர்க்கருள்புரியு நெடியபன்னிருகரவானந்தமானவருளே, யும்பரமதாகியே வொளிவெளியினூடுபோ யோங்காரரீங்காரமா, புருவிலருவாகியே யறிவிலுருவாகியே யுண்மையாய் நின்றசிவமே, நம்பரமதாகிய கும்பகமிரேசக நாசியிடநயனநடுவி, னல்லறிவுசொல்லறிவு வல்லதொருபூரக நாதாந்த மானவடிவே, தம்பரமதாகிய சிதம்பரபராபர சச்சிதானந்தசிவமே, சருவமயமாகிய வறுமுகவகுருபர சண்முகசிகாமணியனே. (கக)

மெய்ஞ்ஞானப்பதிகம்

முற்றிற்று.



## கந்தபுராண தோத்திரம்.

இருப்பறங்குறைத்திடு மெஃகவேலுடைப்
பொருப்பரங்குணர்வுறப் புதல்விதன்மிசை
விருப்பரங்கமரிடை விளங்கக்காட்டிய
திருப்பறங்குன்றமர் சேயைப்போற்றுவாம். (க)

காவினன்குடிலுறு காமர்பொன்னகர்
மேவினன்குடிவர விளியச்சூர்முதல்
பூவினன்குடிலையம் பொருக்குமாலுற
ஆவினன்குடிவரு மமலைப்போற்றுவாம். (உ)

ஒன்றுதோருடலை யொருவியாவிமெய்
துன்றுதோருடலை தொடங்கியெவ்வகை
மன்றுதோருடிய வள்ளல்காமுறக்
குன்றுதோருடிய குமரர்போற்றுவாம். (௩)

சூரலைவாயிடைத் தொலைத்துமார்புகின்
றீரலைவாயிடுமெஃகமேந்தியே
வேரலைவாய்தரு வெள்ளிவெற்பேரீஇச்
சீரலைவாய்வருஞ் சேயைப்போற்றுவாம். (௪)

ஏழமதிர்திணைப்புனத் திரவிமுன்புதன்
கிழமுதிரிளநலங் கிடைப்பமுன்னவன்
மழமுதிர்களிறென வருதல்வேண்டிய
பழமுதிர்சோலையம் பகவனைப்போற்றுவாம். (௫)

நீரகத்தேவனை நினைக்குமன்பினோர்
பேரகத்தலம்வரும் பிறவிநீத்திடும்
தாரகத்துருவமாந் தகைமையெய்திய
ஏரகத்தறுமுக னடிகளேற்றுவாம். (௬)

கந்தபுராணம்

முற்றிற்று.



ஆக புத்தகம் 24.

உ

# கொரட்டிச்
# சண்முகன்பதிகம்.



இஃது,
சிறுமணவூர்
முனிசாமி முதலியாரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1908.

8

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் | 4 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| சாதாரணபாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட்டு ஆக்ட்டு | 3 | 0 | 0 |
| கிராமமுன்சிப்கோட்போதினி | 3 | 0 | 0 |
| இந்துலா | 4 | 0 | 0 |
| தஸ்தாவேஜு-களின் சட்டம் | 1 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| வேதாந்தஜட்ஜிமெண்டு | 1 | 0 | 0 |
| கண்கட்டுவித்தை (இரண்டுபாகமும்) | 0 | 10 | 0 |
| போலீசுஆக்ட்டு | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| நாரதர்கலகம் முதற்பாகம் | 0 | 6 | 0 |
| நாரதர்கலகம் இரண்டாம்பாகம் | 0 | 4 | 0 |
| வியாசர் விபரீதம் | 0 | 4 | 0 |

இப்படிக்கு

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.



உ

முருகன்றுணை.

# கொரட்டிச் சண்முகன்பதிகம்.



## காப்பு-வெண்பா.

கொரட்டிப்பதிவாழுங் குமரனறுமுகன்மேல்
திரட்டிப்பாமாலை சூட்ட-கொரட்டிதனில்
ஆலயத்தின்கண்ணுள்ள வெங்கரத்தான்பாதமலர்
சாலவணிகொள்வேன் றலை.

கரணங்கள்ஞானங்கள் நிலைகலங்காமலுன் கழலிணை நினைக்கவைப்பாய், காயத்தின்வலுமையது குன்றுமலுன்னையே கைகுவித்திடவுமருள்வாய். சரவணபவவென்னு நாமமென்னுவினிற் றுழாதிருக்க நினைவாய், தாமதமிராசதமெனு மிருகுணங்களானவைசாராதிருக்கவைப்பாய், இருவினைகளொன்றேனு நலியாமலென் மனத்தை யேகநாட்டத்தில் வைப்பாய், ஏழையேன்வேண்டுவதை யில்லையென்னமலே யீந்திரட்சித்தருளுவாய், மரணவேதனையெனு மாமாயையணுகாமல் வந்தென்னையஞ்சலென்பாய், வானவர்சகாயனே ஞானகுரு தேசிகா மாசில்சண்முகநாதனே. (க)

பன்னகபூஷணன் பெற்றமகவேதிருப் பாற்கடலின்மீதிலுறைவோன், பாவித்தமருகனேவேல்வைத்த

கையனே பார்மீதிறையினேனென்றான், உன்னையேதெய்வ மென நம்பியேயெப்போது முன்கழற் கன்புபுரிவேன், ஓமெனுமெழுத்திஞே டொன்றாரெழுத்தினையு மோயாம லோதகினைவேன், அன்னைநீயப்பநீ யறிவாயெவைக்கு மே யாதாரமானபொருளே, ஆரேனுநினதடிமை யா வரேயெப்போது மவர்களைகாக்ககினைவாய், வன்னெ ஞ்சனேனையும்வாழ்வித்ததின் கடமைவந்தென்னையஞ் சலென்பாய்; வானவர்சகாயனே ஞானகுரு தேசிகா மாசில்சண்முகநாதனே. (௨)

எத்தனைபடிக்கினு முலாவுகினுநாளெலா மித்தே கநிலையற்றதென், றெண்ணினும்பயனில்லை யென்செய் குவேனான் என்மனமொடுங்கவில்லையே, சித்தெனுமிவ் வுடற் சடமெனவு மோதினுந் தேகத்தி லபிமானமே, சேர்ந்தெனைமயக்குது சேராதவண்ணநீ தீர்த்தென் னையாளவேண்டும், பித்தனைப்போலவேபிணிவந்தபொ ழுதுநான் பேதித்தன்மிகவுநன்றோ, பேசாதவானந்த சுகவாரிதன்னிலே பேராதிருக்கவருள்வாய், மத்தமு டன்மதியமுங் கொன்றையு மணிந்தசிவன் வாஞ்சை யோடளித்தபுதல்வா, வானவர்சகாயனே ஞானகுரு தேசிகா மாசில்சண்முகநாதனே. (௩)

மடமையேதருகின்ற விடையசுகமதனிலேவாடி யேகொட்டார்களுனும், வாடாதவண்ணமே யருளினு லல்லவோ மனதினையடக்கலாகும், கடையனேன் வி டையமேகருதிவாணாளை கழிக்காமலருள் புரிகுவாய்

காமாதிதன்னிலே வெகுவாயிருக்காமற் கைவிடாதா ண்டுகொள்வாய், படைகொண்டசூரர்தங் குடல்கின்ற வேலினைப் பற்றியிடு மதிசூரனே, பாவையர்களிருவர் பால் மகிழ்கின்றசிலனே பற்றினேனுன்னை யென்றும், வடவாலிசிழறனி னல்வருக்குபதேசம் வைத்தவன்பெ ற்றபுதல்வா, வானவர்சகாயனே ஞானகுருதேசிகாமா சில்சண்முகநாதனே. (௪)

சென்னிலக் கொரட்டிதனில் வருகின்றபேர்கடம் வினைதீர்த்து விடைகொடுப்பாய், தீராதநோய்களுக் குனதருமருந்தினைக்கொடுத்துஊழ்வினை நீக்குவாய்மந் திரமெனும்பெரியவாரெழுத்துண்மைநெறிமாசறக்கற்க வருள்வாய், மானிடப்பிறவிதனில்வந்தனுனெப்போது ம் வணங்கினதுந்தானுமுண்டோ, சந்ததமு முன்னன் பர்மலரிட்டுன்னையே தாழ்வரப்பணிகின்றனர், தமிய னேனவ்வண்ணஞ் சார்ந்திருந்தாலிந்த தட்டுதலும்வரு வதுண்டோ, வந்தவினை தீரநீயெண்ணிறு லக்கருமமா ருதிருப்பதுண்டோ, வானவர்சகாயனேஞானகுருதே சிகாமாசில்சண்முகநாதனே. (௫)

மின்னனையபொய்யுடலை மெய்யென்று நம்பியேமம தையி லாழ்ந்திருந்தேன், மேலாந்தவத்தொழில்கள்பூ ணவறியாமலேயின்னுமலைகின்றனேநான், என்னுயிர்க் குயிராயிருக்குமுன் றன்மைதனையெப்படி யறிந்துகொ ள்வேன், இகமொடு பரத்தினிலு நீயன்றிவேறுமொரு

ஈசனுமிருப்பதுண்டோ, பன்னுகவி வாணனுப்பாட வறியாவெனைப் பாடும்படிக்கருளுவாய், பார்மீதிலே நல்லகுரு முனிக்கருளினுய்ப் பார்த்தென்னைரட்சைபுரிவாய், வன்னெஞ்சினெடுசூரன் மாவாய்மறைந்தானு வாரியிற்குத்திவீழ்த்தாய், வானவர் சகாயனே ஞான குருதேசிகா மாசில்சண்முகநாதனே. (௬)

தானெனுமாணவம் விடாதநற் கீரனைத்தாழ்வான சிறையில்வைத்தாய், தானவர்கள் வானவரை வைத்த சிறைமீட்டுமவர் தாழ்வினையகற்றிவிட்டாய், நானந்த யமபடர்க்காளாகநேராமனுடோறு மாண்டுகொள்வாய்- நானெனுமகந்தையது வாராமலேயுனது நாட்டத்திலேயமைப்பாய்- தேனுறுங்கொன்றையுந் தும்பையுமணிந்தபர சிவனுக்குகந்தபுதல்வா- தெவிட்டாதவானந்த வாரிதனிலென்னையே தேக்கிடவு மருள்செய்குவாய்-மான்விழியினரிருவர் பக்கத்திருந்து மொருவாதனையுமின்றிநின்றாய்- வானவர்சகாயனே ஞானகுரு தேசிகா மாசில்சண்முகநாதனே. (எ)

ஐம்பொறி யொடைம்புலனடக் கியுனதருள்நாடிலானந்தகிட்டைபெறலாம்- ஐம்புலனடக்குதற்குன்னருளையன்றியோ ராதரவுமில்லைகண்டாய்- பைம்பொன்மணி மாலைபுனை பாவையர்கள் வலையிலே பாடாதிருக்கவேண்டும்- பாவியா மென்னைநீ பாலிப்பையோகினது பழவடியரோடு கூடி-அம்புயாசனனுன்னையறியாதபேயனுதலாற் சிறையிலிட்டாய்- ஆதாரமா

யுன்னை யண்டினேரைக்காக்க வக்ராரவாயினின்ரு ய்- வம்புமலர்மாலையுங்கங்கையுமணிந்தசிவன்மாண்பா யளித்தபுதல்வா- வானவர்சகாயனே ஞானகுரு தேசி காமாசில்சண்முகநாதனே. (அ)

கன்னலின்சுவை யெனக்கற்கண்டுபா கெனக்கண் டுணைப்பருகிலிந்த- காயத்நில்வந்துரள கன்மாதவநீங்கு வென் காட்டிக்கொடுத்தாயிலை- யென்னை யொப்பான வர்களியாரேனுமொருவரை யிப்புவியில்யாவர்காண்ப ர்ஏழையே நின்னடிமை யாகினேன் கைவிடி னெங்கே பிழைப்பதந்தோ- பொன்னையும் மண்ணையும் பொய் மைபாம் பெண்ணையும் போகமாய்க்கொண்டிராது- பூ ராயமாய் நின்னையண்டினேனவையினிப் போதுமனம் வாய்க்கவில்லையோ- வன்னமயின்மீதிலே வருமுனதுகா ட்சிபெறவைப்பயோவறிகிலேனே- வானவர்சகாயனே ஞானகுருதேசிகா மாசில்சண்முகநாதனே. (௯)

இப்பிறவிநற்பிறவி யெங்ஙனெனிலுன்னை யென் றிதயமாஞ் சிறையிலிட்டேன்- யாவருனை விடிவிப்ப ரையனே யென்னைவிட்டெவ்வாறுதப்பலாகும்- அப்ப னே வையனேயென்றுனைப் பணியவும் வரமளித்தென் னையாள்வாய்- ஆறெழுத்தோதியேஐம்புலனடக்கும் வ ழியார்வமொடு காட்டவேண்டும் ஒப்புனக்கொருதெ ய்வமுண்டென நினைந்திடி லோயாதபிறவிவருமே- ஓ மெனு மெழித்தினல்லுண்மைதனை நாயினேனுள்ளத்தி

ணுரவைப்பாய்- மைப்புயற்கூந்தலார் வள்ளிதெய்வா
னையொடு மருவியே வாழுமுருகா- வானவர்சகாய
னேஞானகுருதேசிகா மாசில்சண்முகநாதனே. (க௦)

பூவலயமாகவே போகவறியேனுனைப்
பூவெடுத் துதிக்கவறியேன்
காவென்றுவாழ்த்திடவு நாவிலறியேனிரு
கண்கண்மழை சோரவறியேன்
பாவலர்கள்போலவே பாடவறியே னெனைப்
பார்த்துநீயாளவேண்டும்
தேவலோகத்தவர் பணியுநற்பாதனே
திருகோட்டிபணிவாசனே.

துதிவிருத்தம்.

சுரந்தநீர்வயல்களாலே சூழ்ந்ததோர் கொரட்டி
மேவும்- வரந்தருகாளத்தீசன் வளமையும் ஞானம்பா
ளும்- இரந்தவேரம்பனேடு விடும்பனுங் கடம்பன்கந்த
ன்- பெருந்தனமடைவார்தன்னைப் பெருமையில்வண
ங்கு வோமே.

கொரட்டிச்சண்முகன்பதிகம்
முற்றிற்று.



ஆக புத்தகம் 25.

ஸ்ரீ

தண்டாயுக்கடவுள்பேரில்

# அமுர்தப்பத்து.



சிறுமணவூர் - முனிசாமி முதலியாரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
**1908.**



உ

தண்டபாணிதுணை.

தென்பழனிமலையி லெழுந்தருளிய

தண்டாயுதக் கடவுள்பேரில்

# அமுர்தப்பத்து.



நேரிசை வெண்பா.

சீராருந்தென்பழனி தேசிகனுஞ் சண்முகவேள்
பேராரும்பாமாலை பேசுதற்கிங்—கோராரும்
நிம்பநிழற்குலவு நித்தனருட்பேராங்
கம்பமதவாரணன்ருள் காப்பு.

ஆசிரியவிருத்தம்.

திங்களெனு மதியொளிக் கதிகவொளி யாமுன்
திருநகர் மிதியாதபாவி
தீயவஞ் சகரோடு உரவாகி யேவுனது
திருவடி மறந்தபாவி
செங்கையெனும் வற்ருத பொய்கைசூழ் மலைசுற்றி
போற்றியறி யாதபாவி
சேவல மற்பசுக மங்கையற் காளாகி
வீணுள் கழித்தபாவி

அங்கமுழு வெண்ணீ றணிந்தசிவ ஞானிகளை
அணுவுமதி யாதபாவி
ஐயையோ மாபாவி யென்போலு மொருபாவி
யாருமிலை கொடியபாவி
மங்கைமலை குறவரிட தங்கையுடன் மயிலேரி
தெரிசனந் தந்தருளுவாய்
திங்களணி சங்கரன் மங்கையருள் செல்வமே
தென்பழனி மலையமுர்தமே. (க)

இகமதி லிரண்டுவினை யென்றசுழி யறியாமல்
இரவலரை வைதபாவி
ஈயாத கொடுவஞ்ச ருரவினல் நல்லறிவு
யெள்ளள விலாதபாவி
செகமெனுங் கொடியவொரு பேய்பிடித் தேயுனது
திருவடி மறந்தபாவி
தீயவஞ் சகமெனும் பொய்களவை நம்பியே
திரேகமெய் யென்றபாவி
மகமேரை யொப்பிடா பேரின்ப மோனத்தில்
மனதுவையாதபாவி
மாபாவி யென்போலு மொருபாவி யகிலமதி
லாருமிலை கொடியபாவி
திகைத்துனை யடுத்தசிறு மதலையென் குறைதீர
தீவிரம் வந்தருளுவாய்
திங்களணி சங்கரன் மங்கையருள் செல்வமே
தென்பழனி மலையமுர்தமே. (உ)

பொய்யுடலை மெய்யென்று நியருடனுறவாகிமெய் யறிவிலாதபாவி, பொய்யான மடமாதரெனுமந்தபேய ருடன் பொழுதினைகழித்தபாவி, கையாரநின்கழல்பூசி த்துபேரின்ப காட்சிகாணாதபாவி, கல்லாதபுல்லரிடம் வல்லாண்மைபேசியே காலங்கழித்தபாவி, மெய்யான பேரின்ப நிஷ்டையினதென்றதன் மேன்மையறியாத பாவி. மெல்லியர்க்காளான பாவியென்போலுமொரு பாவியிலை கொடியபாவி, நியனிவனென்றுகைவிட்டி டாதேயடிமை தீவினையகற்றியாள்வாய், திங்களணிசங் கரன் மங்கையருள்செல்வமே தென்பழனி மலையமுர்த மே. (௩)

சற்கரைக்கற்கண்டு தேனுக்குமினிதாசன்மார்க்கமறி யாதபாவி, சன்மார்க்கமகிமையை யின்னதென்றறியா மல் சற்சனரைவைதபாவி, துன்மார்க்கருரவினால்என் மனம்போனபடி தொல்லுலகுழன்றபாவி, தொலையாத சம்சாரமலையெனும் பேயினால் துரியனிலைமறந்தபாவி, துணையெனக்காருமிலை யாதரீயென்றவரை துரத்தியேய டித்தபாவி யாருமிலைகொடியபாவி, திக்கஷ்டகோண மொருநொடியில்வலமாய்வந்ததெய்வமே யெனையாளு வாய், திங்களணிசங்கரன் மங்கையருள்செல்வமேதென் பழனி மலையமுர்தமே. (௪)

ஐயமெனவந்தவர்க் கொருகாசுமீயாமல் அடித்துகு லைசெய்தபாவி, அருப்புண்ட தென்கைசுண்ணாம்புதா வென்று அவர்க்கனுவு முதவாதபாவி, மையாடுவிழி

மாதர்கண்வலையில் சிக்கியேமையலிலுழன்றபாவி, மத மென்ற பேய்பிடித்தேயுடலை மெய்யென்றுமாதவமற ந்தபாவி, தெய்வகுஞ்சரிவள்ளி பாகனே நின்கழல்தியா னமில்லாதபாவி, தீபாவி மாபாவி என்போலுமொரு பாவியாருமிலைகொடியபாவி, திவ்வியசாயுச்சியகிலைமே லானதெய்வமேதிருவடியெனக்கருளுவாய், திங்களணி சங்கரன்மங்கையருள் செல்வமே தென்பழனி மலையமு ர்தமே, (ரு)

கைக்குள்வெண்ணெயைவைத்துநெய்யெடுக்கறியாத கசடர்களையொத்தபாவி, கன்னெஞ்ச வஞ்சமேகுடி கொண்டுசமுசாரகவலையிலுழன்றபாவி, மையாடுதெய் வானைபாகனே நின்கழல்மனதிலுன்னாதபாவி, மாதருல் லாச வைபோகத்தழுத்தியே மதிகெட்டலைந்தபாவி, மாதருல்லாச வைபோகத்தழுந்தியே மதிகெட்டலைந்த பாவி, மதிகெட்டுநின்கழல்துதிவிட்டு உன்னடியர் மகி மையறியாதபாவி- மாபாவியென்போலு மொருபாவி யாருமிலைமண்ணுலகில் கொடியபாவி - திக்கெலாம் போற்றுமொருதெய்வமே உனையன்றி திக்குவேறில்லை யாள்வாய் திங்களணிசங்கரன் மங்கையருள்செல்வமே தென்பழனி மலையமுர்தமே. (சா)

பெரியோர்கள்போல பொய்வேடந்தரித்திந்தபுவித னிலலைந்தபாவி- பேரின்பநிஷ்டையினதென்றதனையறி யாமல்புலவரையிகழ்ந்தபாவி வெறிகொண்டகசடருட

னுறவாகியேதினம்வீணுள்கழித்தபாவி- விண்ணுலகறி
ந்தவர்கள்போலவேபொய்சொல்லி வீண்பொருள்பரித்
தபாவி-நெறியெனும்நின்பூசைகுறியொன்றுமறியாமல்
கிலகெட்டலைந்தபாவி- நீங்காதகன்னெஞ்சபாவியென்
போலுமொருபாவியிலை கொடியபாவி - திரிபுரமெரித்
தவர்க்கொருமொழியுரைத்தமா தெய்வமேஎனையாளு
வாய்- திங்களணிசங்கரன்மங்கையருள்செல்வமேதென்
பழனிமலை யமுர்தமே. (எ)

மட்டிகளிலுங்கொடிய மட்டியுறவாகிமடமாதர் தூ
தானபாவி- மதிகெட்டுதுதிவிட்டு நமனுக்குமிவ்வுடலை
வளமாய்வளர்த்தபாவி - கற்றுநின்புகழ்சொலாமூடரு
டனுறவாகி சர்ச்சனரை வைதபாவி- சண்டாளருக்கு
மாசண்டாளனுங் கொடியசண்டாளனானபாவி-எட்டுட
னிரண்டுசேர்த்தா லெண்ணவறியாம லிகமதிலுழன்ற
பாவி- என்போலுமொருபாவி யாருமிலைமாபாவி இவ்
வுலகில் கொடியபாவி-திட்டெனுசமுசார கடலிலலையா
மலென் தீவினையகற்றியாள்வாய்-திங்களணிசங்கரன்மங்
கையருள் செல்வமே தென்பழனிமலை யமுர்தமே ()

சரவணோற்பவகுக சரணனின்றுளென்று சாற்றவரி
யாதபாவி- சர்ச்சனருடன்கூடி யொருதிரம் சண்முகா
வென்றுமறியாதபாவி- பரமானசாயுச்சியபதவிகிலேமே

ன்மையில்பக்ஷம்வையாதபாவி - பரமனுக்குரைசொன்னதெய்வமே நின்தொண்டர்கூட்ட மரியாதபாவி- திரமாகவெண்ணீறணிந்தநின் தெரிசனம்செய்து மறியாதபாவி- தீவினைச்செய்தமா பாவியென் போலுமொருபாவியிலைகொடியபாவி - சிரமதுவளைத்துநின்னடிமையென்றேனெனது சிறுகவலைமாற்றியருள்வாய் - திங்களணிசங்கரன் மங்கையருள்செல்வமே தென்பழனிமலையமுர்தமே. (கூ)

நின்கோயில்வலமாகவந்து நின்னடிபோற்ற நினைவனுவிலாதபாவி- நிலையிலாமனதையோர் நிலைகொண்டுனைத்தொழுவர்நேசமில்லாதபாவி-இன்னிலமதிக்கவொரு நல்வினைசெய்யாமலே என்னுடல்வளர்த்தபாவி - இவ்வுடல் பிரிந்தாவிபோகுமிது நிலையல்லவென்றுனைதொழாதபாவி- யென்வறுமைதீர்த்தாள்வதுன்கடமையென்றடிமை வினவினேனப்பதிகமாக- ஏனோபராமுகம்நானோ உனக்கெதிர்எனையாள்வதொருபாரமோ-தென்பழனிதெய்வமே நின்னடிமையென்றபின் திகைத்தவர்களொருவருண்டோ - திங்களணிசங்கரன் மங்கையருள் செல்வமே தென்பழனிமலை யமுர்தமே. (கo)

வேறு.

சிவசிவய சரஹணபவாவாயுசாம்பிராச்சிய திருவாணிதேவிவசிய- ஜெகம்வசிய ஓம்நமோநாராயணாவசிய

ஸ்ரீராமஜெயம்வசிபவா- எவருமெனதுளம்வசியவாலை
திரிபுரைபுவனை என்னிதயமாகிவசிய- எனதுமனம்வசி
ய ஜெகராஜராஜேந்திரருமெப்போது மென்னுள்வசிய
அவமிருகமதுவசியபூதப்பசாசசுரர்ஆங்காரஅரவுவசிய
ஆகாதசத்துருவுவென்னடிக்கீழ்வசியவருள்தந்துயெனை
யாளுவாய்- தவம்வசிய மேன்மைதரும்வள்ளிமணவா
ளனே சுவாமிநானுனைநம்பினேன்- சதுர்மறைகளடிமு
டியுநடுமயமு நிறைகின்ற சண்முகசிவாநந்தமே.

தண்டாயுதக்கடவுள்பேரில்
அமுர்தப்பத்து
முற்றிற்று.



ஆக புத்தகம் 26.

உ

திருவாவடுதுறை சுப்பிரமணிய சுவாமிகளியற்றிய

# சுப்பிரமணியர் விருத்தம்.



சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1908.



உ

சிவமயம்

# சுப்பிரமணியர் விருத்தம்.



மாமேவுநவரத்ன கேயூரமணிமகுடமன்னிப்பொ லிந்தமுடியும், வச்சிரதுதற்றிலக வெண்ணீறுமோரா று வதன விம்பத்தினழகும்- பாமேவு பத்தற்கு படைதி றந்தன்பொழுகுடன்னிருவிழிக் கருணையும்- பகரறிய பழமறைபழுத்தொழுகு சிறுநகைப் பவளஞ் சிறந்த வாயும்- காமேவுகரகமல பந்தியுஞ்சேவலுங்கனகமயி லுங்கிண்கிணிக்- காலுமுந்நாலும் வடிவேலுமென்மே லுமெக்காலந்துலங்கவருவாய் - தாமோதரானந்தகோ விந்த வைகுந்த சரசகோ பாலன் மருகா - சதுர்மறை களேதந்தபரமகுருவாய்வந்த சரவணபவாநந்தனே. ()

கண்கொண்டபூச்சக்ரவாளகோளத்தையொருகதி கொண்டெழுந்துசுற்றிக் - கனககூடந்தட்வி யுகசண் டமாருதக்காலொடு·சுழன்று பின்னி விண்கொண்ட மேகபடலத்தைச் சினந்துதன் மெய்யன்பனெனவுக ந்து- விடவரவின்மகுடமுடி சடசடெனவுதரிநடுமேரு வொடுபோய்ந்துகொத்தித் - திக்கொண்டவல்லசுரர்நெ ஞ்சுபறைகொட்டத் திடுக்கிடவெடுத்து மோதித்திறை

கொண்டடித்தமரர் சிறைகொண் டணைத்திலகுதிறை கொண்டமயில்வாகனு- தண்கொண்ட நீபமலர்மாலைய ணிமார்பனே சரசகோபாலன் மருகா சதுர் மறைக ளேதந்த பரமகுருவாய்வந்த சரவணபவாநந்தனே. ()

துன்னிகயிலாயகிரி மேருகிரிகந்தமலை தோகைம லைகயிலைமலைவான்-சோலைமலைமேவியவிராலிமலைமன்னி யசுவாமிமலையுஞ் சிறந்த - சென்னிமலைவேளூர்கடம்ப வனமேலைவயறிருவருணையின் கோபுரம் - திருவாவின் ன்குடிபரங்கிரி திருத்தணிகை சிவாசலந்திருவேரகம் இன்னிலமதிக்குந் திருச்செந்தின் முதலான வெண்ண ப்படாதகோடி- எத்தலமு நீகருணைவைத்துவிளையாட ல்விதமெத்தனையெனச்சொல்லுவேன்- தன்னைநிகரொவ் வாத பன்னிருகைவேலனே சரசகோபாலன் மருகா- சதுர்மறைக ளேதந்த பரம குருவாய்வந்த சரவணப வாநந்தனே.

(ரு)

நதியெங்குமூழ்கித் தலந்தோறுஞ்சுற்றியுநல்லநிய மங்கள்செய்தும் - நானென்றவாணவந் தள்ளினேமெ ன்றுசில ஞானங்கள்பலபேசியும் - கதிகொண்டமவுனி யாயட்டமாசித்தியொடு கற்பந்தனைப்புசித்தும் - கண் ணிமைகண்மூடிச்சிவானந்தமென்றுசெயல்கண் டிருந் தோ மென்னவும்- எதிரொருவருக் கொருவர் தர்க்கி த்துமற்கட்டியிப்படி யனந்தகோடி - இதுவல்லவதுவ ல்லவென்றுபோராடுவது மென்னவகையோ வறிகிலே

ன்- சதமென்ன வுன்னைநா னம்பினேன் நம்பினேன் சரசகோபாலன் மருகா, சதுர்மறைகளேதந்த பரமகுருவாய்வந்த சரவணபவாநந்தனே. (ச)

நாரதப்பிரமாதியமரர்கின்னரருரகர்நாரணன்முதற்பண்ணவர்நடுக்கம்பொருந்திய விடுக்கண் களைந்திட நடக்குங்குழந்தைவயதில்- சூரபத்மாசுரன் கயமுகன் ருருகன் துன்முகன்பானுகோபன் - துட்டவஞ்சக்ரவுஞ்சாசுரன் சிங்கனெடுசுற்றிடவரக்கரையெலாம், சோரசங்காரண தூளிபடலங்கொண்டு கூறுடியுனது வெற்றிக்-கொடியேறவிந்த்ரன்மணி முடியேறவா னுடுகுடியேறவைத்ததுரையே - தாரணியுன் மேவுபரிபூரணவுலாசனே சரசகோபாலன் மருகா- சதுர்மறைகளே தந்த பரமகுருவாய்வந்த சரவணபவா நந்தனே. (ரு)

சீலமிகுதற்பரனையுன்னித் ததேகத்தியானத்தெழுந்துபொங்கிச் - சில்லென்று மெய்மறந் தானந்தமவுனஞ்ஜெனிக்கக்குவிந்து கண்ணீர் ஆலிபொழியக்கருணையுள்ளங்கனிந்துருகவென் புருகவென் புருகவே- அங்கங்குழைந்து புளகிக்க நின்றுருகுவாரப்படி மொன்றறிவனோ-காலங்கழித்துண்டு வீணுக்கலைந்துபல காலப்பிரபஞ்ச மாயக் - கடற்குட்படிந்தே கிடக்கின்ற பாசங் கடக்கும்படிக்கருளுவாய் - தாலமுழுதுண்டு நிலைகண்டகோதண்டமாசரச கோபாலன் மருகா-சதுர்மறைகளேதந்த பரமகுருவாய் வந்தசரவணபவாநந்தனே. (சு)

கல்லாலெறிந்துமுன் னெச்சிலைத் தந்துபின் கண்
ணைப்பறித்துவைத்தும் - கருதுவசை சொல்லியுஞ் செ
ப்பசிறுமைந்தனைக் கறிசமைத்துண்ணவைத்தும் - வி
ல்லாலடித்துமோர் பாயவிற்றன்னுடைய விரதஞ் செ
லுத்துவித்தும் வேலையிற் றாளொடு சுழன்றும் பிரா
ணுக்கு மெய்யன்பனெனநடந்தும் - நல்லாரெனப் பே
று பெற்றார்களது பண்டைநாள்செய்த பூசையீச- ன
ன்கிருபையா மெனக்கருள் கிருபையல்லாது நாடுவது
வேறுமுளதோ- சல்லாப வுல்லாச வில்லேறுவல்லாள
சரசகோபாலன் மருகா- சதுர்மறைகளோ தந்த பரம
குருவாய்வந்த சரவணபவாநந்தனே. (எ)

அற்புதமிகப்புகழ் திருப்புகழ்விருப்பொடுசொல
ருணகிரிதனையுகந்தாய்- அம்புவின் பழுதுகும்பமுனி
முன்புவரவன்புருகு பண்புரைத்தாய் - உற்பனவரக்க
ளொடு சர்ப்பனமப்பய முளுற்றநக்கீரனொருநாள்உன்
சலிகை தஞ்சமெனநெஞ்சுருக வஞ்சகிரவுஞ்சநேர்கிரிபி
ளந்தாய், எப்படியுமுற்படும் வினைப்பயனிலப்புமதையி
ப்புவியிலே மறப்பா, யீதுகலிகாலமென்றெண்ணவொ
ண்ணது நானேழையடியேனுகையால், தற்பரதயாபர
மநோரதர் மகிழ்ந்ததவுசரச கோபாலன்மருகா, சதுர்
மறைகளோதந்த பரமகுருவாய் வந்தசரவணபவாநந்த
னே. (அ)

தீராதமாயச்சுகந்தந்தவிக்கடுஞ் செனனஞ்செழித்
தபின்பு, செகதலமயக்க மதிலேயென்குடித்தலந்தீய

மருளோர் வங்கணம், போராடுசெஞ்சார பாசபந்தம்மி
திற்போகமட வாரிணக்கம், பொறிவாயலைக்கு மீதுள்
ளபடி முன்வினைப்போகந் தொடர்ந்தநெறியால், ஆரா
லுமுடிவாராதானுலிதற்கு நல்லறிவென்றதீபமொன்று
ண்டவ்வழியிலேமனஞ் செல்லாம லலைகின்ற வடியே
னையாட்கொள்ளுவாய், தாரேருபன்னிரு புயாசலக்க
டவுளே சரசகோபாலன்மருகா, சதுர்மறைகளேதந்த
பரமகுரு வாய்வந்த சரவணபவாநந்தனே (கூ)

தருகாமமோகமுறு திமிதிமிங்கிலமிக்க தனமோ
டு மனமுதலையாம், தற்கோபவனல்வடவை மூடத்துவ
ம்பாசிசஞ்சலமெனும் தரங்கம், அரியவெல்லொருகுமி
ழியஞ்ஞானவாரிதியி லலைகின்றசீவராசி- யத்தனையு மீ
னென்ன மீசுவலைவீழ்வரவுயிரில் யானுமொருவன் க
ருதரியாபாரப் பெருங்கடல்கடந்தே கடத்தேரவேணு
மென்றால், கைத்தவலையில்லையினி யென்செய்குவேனு
னதுகாற்றவளைகைப்பற்றினேன், சரியமர்செய்நெடி
யபடைசூரகஜசிங்கமே சரசகோபாலன்மருகா, சதுர்
மறைக ளேதந்தபரமகுருவாய்வந்த சரவண பவாநந்
தனே. (கo)

தூயபொரி யைந்தையுமடக்கிப்புலாதிகள்சுழல்கி
ன்றவழிமறுத்துச், சுழிமுனைதிறந்துமூலாதாரமேலாந்
துவாதசாந்தத்தைமுட்டி, வாயுவைபிறுக்கப் பிலத்து
வருகுண்டலியை வவ்விமேற் கொண்டெடுத்து, வாசி
யைநடத்தியவ்வோசையைத் தாவென்று வழிகொண்

டுநாதவெளியில், தோயும்பரப்பிர்ம்மபூரணவிலாசமது சோதிப்ப தென்னவெளிதோ, தொலையாத நிலையாத தகையாலுன்பதந் துணையே துணைபற்றினேன், தாயக மனோகர மயூரவாகனமுருக சரசகோபாலன் மருகாச துர்மறைகளேதந்த பரமகுரு வாய்வந்த சரவணபவாந ந்தனே. (கக)

கண்ணோறுவாராது பிணியொன்றுசேராதுகவலைப்படாது நெஞ்சங்கலியாது சலியாது கலியாது மெலியாது கலியென்றபேயடாது, விண்ணோறுமணுகாது கன்மவினைதொடராது விஷமாச்சுரம்வராது, வெய்ய பூதம்பில்லிவஞ்சனைகடொடரா விஷம்பரவுசெந்துமடராளண்ணோறுசனனங்கள்கிடையாதுகாலபயமெள்ளலவுமேயிராதிவ்,வேழைக்கிரங்கியருடெய்வமுனையல்லாமலின்னமொருதெய்வமுண்டோ தண்ணோறுதங்கைமலைமங்கையருடங்கமே சரசகோபாலன்மருகா சதுர்மறைகளேதந்தபரமகுருவாய்வந்தசரவணபவாநந்தனே.

முற்றிற்று.



ஆக புத்தகம் 27.

உ

முருகன் துணை.

பழனியாண்டவர் தோத்திரமென்னும்

# சிவசுப்ரமணியர் அகவல்.



சிறும்ணவூர்-முனிசாமி முதலியா ரவர்களது,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1908.

  

உ

ஸ்ரீதண்டபாணியேநம:

# சிவசுப்ரமண்யர் அகவல்.

விநாயகர் காப்பு.

சுந்தராநந்தனெனுஞ் சோதிசுப்ரமண்யன்மேற்
செந்தமிழாலேயகவல் செப்புதற்கு, வந்தருளும்
விந்தைமிகுங்கந்தருக்கு மேலாகிமுன்பிறந்த
தந்திமுகச்சுந்திரன்றுள் காப்பு.

அகவல்.

தந்திமுகற்கிளைய கந்தாசரணம்
அந்திரவானவர்க் கதிபாசரணம்
சரணஞ்சரஹண பவனேசரணம்
அரஹரசத்ரு சங்காராசரணம்
சத்திவேலேந்துஞ் சாமியேசரணம்
சித்திரமயின்மேற் செல்வாசரணம்
அமரர்கள்பணியு மமலாசரணம்
தமியேன்வினையைத் தவிர்ப்பாய்சரணம்
கோலாகலனே குமராசரணம்

பன்னிருகையிற் பரமனூர்மழுவும்
பாங்குடனெடுத்துக் காங்கையாவாவா
பச்சைமயிலேறிப் பாகுமென்மொழியா
நச்சுவேனிகர்விழி நாயகிமார்கள்
இருபுறமிலங்க விமையவர்போற்றச்
சுருதியார்ப்பத் துறந்தவர் துதிப்பக்
கோலாகலத்துடன் குமரனேயென்றன்
மேலேயருள்வைப்பாயேவேலா
கந்தாவாவா கடம்பாவாவா
வந்தாள்மயின்மேல் மணியேவாவா
படிகொடுதூதர்கள் பாசம்விட்டெறிந்துயிர்
கொடுபோவதற்குக் கொடுமையாய் வருங்காற்
பஞ்சமாபாவியேன் பயந்துநடுங்குஞ்
சஞ்சலம்வராமற் சண்முகாகாக்க
பாயும்புலியு நோயுமுளுமல்
மாயவலையில் மயங்கிவில்லாமல்
கார்க்கக்கார்க்கக் கடவுளேகார்த்து
சேர்க்கச்சேர்க்கவுன் றிருவடிநிழலில்
அம்பலவாணு வருமைபுத்ரனே
நம்பினேனுன்னை நமக்கடைக்கலந்தா
மாலோன்மருகா மயிலோய்சரணம்

குரமாதிலங்குங் கொண்காசரணம்
துறவோர்போற்றுந் தூயோய்சரணம்
திங்களைத்தரித்த சிவனதுபுதல்வா
செங்கையில்வேலணி செம்மலேவாவா
சரவணபவவெனு மடியார்தமக்கே
அருகேநிற்கு மண்ணலேவாவா
திருச்செந்தூர்வாழ் செல்வியோய்வாவா
திருப்பெருங்குன்றத் துறைவோய்வாவா
குருபரவேலா குமராவாவா
ஒருகையில்வேலு மொருகையிற்பிரம்பும்
மூன்றுகையில் முனையொளிர்வாளும்
நான்குகையி னல்லசூலமும்
ஐந்துகையி லங்குசபாசமும்
ஆறுகையில் வீறுகோடாலியும்
எழுகையி னிடிக்குந்தெண்டமும்
எட்டுக்கையினிற் பட்டமுமிலங்க
ஒன்பதுகையிற் சங்குசக்கரமும்
பத்துகையிற் படைபீரங்கியும்
பதினொருகையிற்சிதரிடுவெடியும்
அல்லும்பகலும் பில்லிசூனியமும்
ஆடும்பேயு நாட்டைவிட்டோட

அடியடிபிடிபிடி நெறிநெறிமுறிமுறி
பொடிபடபொடிபட எறிஎறிவேலின
அன்னையு நீ என்னப்பனுநீயே
ஜென்மப்பிணிக்குத் தேசிகநீயே
அருமையாய்வந்தே திருவருள்புரிந்து
சிறியனைக்கார்க்குஞ் சிவமலைக்கந்தா
அந்திற்சொக்க ரருளியபாலகா
மந்திரகிரிமேல் வளருகாங்கயனே
அழகாமேருவி லழகுகிரியில்
எழிலோடமரு மெம்பெருமானே
பலமலைகளிலும் பலவிளையாடி
நிலைபெறுவயிர நீண்முடியோனே
அருந்தமிழெனக்கே யன்புடன்றருநீ
குருந்தமாமலையிற் குடிகொண்டவனே
அன்னமுஙுடையு மதியபாக்கியமும்
மன்னுதாநீ மருதக்கிரியோய்
என்றுமென்னை யிடுக்கண்ணுளுமல்
பொன்மலைக்குமரா போற்றினேனுன்னை
அண்டவாத வரையாப்பிருமல்
கண்டமாலையுங் காய்ச்சலுங்குளிரும்
இன்னம்பலபல வியாதிகளெல்லாம்

புள்ளிமாரீன்ற வள்ளிநாயகனே
வெள்ளிக்கிழமை வெளிவரவேணும்
புன்மயிலேறித் தினக்குரத்தியும்நீயும்
சனிக்கிழமைவருவாய் சரவணதுரையே
சவுந்த்ரவல்லி சதாசிவம்பரிதந்த
சரவணபவனே சிக்கந்தமலையில்
தாமரைப்போய்கையில் நேர்மையாய்வளர்ந்து
சோமனைத்தரித்த சொக்கரிடம்நான்
தவிர்ந்துவிடாமல் வரந்தரவேணும்
பழனுபுரியிற் சரவணபவனே
சந்திரன்துலங்க இந்திரனிலங்க
சிந்தையில்வந்து சிவபதந்தாரும்
தஞ்சமென்றுன்னைப் போற்றினேன்முருகா
நெஞ்சுக்குமேலே நின்றிடுகுமரா

முற்றிற்று.



ஆக புத்தகம் 28.

உ

# தணிகாசலர் பஞ்சரத்னம்.

ஆறுமுகசுவாமி பஞ்சரத்தினம்.

சண்முகக்கடவுள் பஞ்சரத்தினம்.



திருமணவூர்-முனிசாமி முதலியாரவர்களது,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

10





தணிகாசலர்பேரில்

# பஞ்சரத்தினம்.



## கணபதி- துதி.

வித்தைதரும்புத்திதரும் வேதவிநாயகரை
சித்திதருமுன்புகழை செப்புதற்கு-முத்திதரும்
அறுமுகன்மேல்யான்பாட வன்பாகமுன்வருவாய்க்
கரிமுகன்கணபதியே காப்பு.

சீர்புகழும் சென்னைபுரி திருவல்லிக்கேணி நகர் செங்குந்தர்வீதிவாழும், சிவனருள்பாலனே சிவசுப்ரமணியனே சிவகாமித்தவப்புதல்வனே, கார்புகழும் போரூரி லசுரர்குலம்வேறரக்கண்டித்தகதிர்வேலனே, கனமயிலேறிவரும் தெய்வானைபாகனே கன்னிவள்ளி நேயனே, பார்புகழுமுனதன்ப ருள்ளங்களித்திடவந் தருள் பன்மைவரந்தந்தபரனே, பங்கயன்சிரைமீட்டுவைத்ததொருபாகனே பழனிமலைவடிவேலனே, தார்புகழுமாயனிட தங்கையுடமைந்தனே ஜெனகன்மகட்பதிமருகனே, தகதகனமயிலேறி திருநடனமாடிவருந் தணிகாசலக்கடவுளே. (க)

சித்திரவிநோதமுடன் திகழானசென்னியும் சிறப்பான பன்னிருகையும், திருமுடியில்மகுடமும் கட்

டியும்பட்டமும் திருநீற்றுக்காப்புமழகும், இரத்தின க்கடுக்கனும் புஜகீர்த்திபளபளென ரவிதைகண்டிதமார்பினில், ரஜிததிருமேனியு முச்சிதப்பூணூலாம் இலட்சணமுகத்தினழகும், நெற்றியிற்றிலதமும் கிகிகென வடிவேலும் கிறைந்தவொட்டியாணமழகும், கிகரான தண்டையும் நீலமயில்சேவலும் கின்பெருமைசொல்ல வெளிதோ, தத்திவருஞ்சூரனை துணித்துநீயமர்செய்த தயாபரமானதுரையே, தகதகனமயிலேறி திருநடனமாடிவருந் தணிகாசலக்கடவுளே. (உ)

ஓராறுமுகமாட ஈராறுபுஜமாட வோங்குவடிவேலுமாட, வுச்சிதக்குண்டலமுங் கச்சிதமுடியாட வொனசுட்டியாட, பாராளத்தண்டையும் பாதச்சிலம்பாடப் பணிந்திடும்பக்தராடப், பன்னிருகரமாடப்பணிந்தபூஷணமாட பவளவெண் குடைகளாடத், தோராதமயிலாடக் கோழித்துசமாடத் துலங்குநீர்க்காவியாட, தொண்டர்கள்முதலான சண்டிகேஸ்வரராடத் தொந்தநவவீரராட, தவிராததவமுனிவர் தாளுடநீயாடி தமியனேன் முன்புவருவாய், தகதகனமயிலேறிதிரு நடனமாடிவருந் தனிகாசலக்கடவுளே. (௩)

தந்தைதாய்தெய்வம் நீயேகதியல்லாமல் தற்காக்கவொருவரில்லை, தயிரியம்சொல்லவும் தாபமதுதீர்க்கவும் தரணியிலெவருமில்லை, சந்ததமுநால்வேதமுனையேபுகழ்ந்து சரணகெதியென்றவர்க்கு, சாலோகசாமீப சாரூபமேலான சாயுச்சந்தந்தகுருவே, வந்தன

ஞ்செய்யுமுன் தன்பர்க்கிதங்கிநீ வண்மையுடன் வரமளிப்பாய், வள்ளிதெய்வானையுடன் வாழுமயிலேறியே வரவேண்டுமெந்தனருகே, தந்திரமுகந்ததிருமாயனிடமருகனே தற்பரானந்தபரனே, தகதகனமயிலேறிதிருநடனமாடிவருந்தணிகாசலக்கடவுளே. (ச)

நஞ்சுண்டபரமகுரு வானதொருதெய்வமே நாதனேகுமரகுருவே, நாயகாவுனைவிட வேறுதுணையில்லையெனை யாதரிப்பவருமில்லை, பஞ்சைமுன் நானென்ன பாவங்கள்செய்தனோ பரதவித்திடவுநீதான், பாராதிருப்பதுந் தர்மமோயுன்னையினி பார்த்தவர்களேசார்களோ, கொஞ்சமென்றென்னைநீ விட்டுவிட்டாலுங்குழந்தைநான்விடுவதில்லை, கோபமோயென்மீதிற் றுபமோயென்செய்வேன் கொத்தடிமை கொண்டமுருகா, தஞ்சமென்றேயுனைக் கெஞ்சியே வருந்திடத் தற்காத்தருள்புரிகுவாய், தகதகனமயிலேறி திருநடனமாடிவருந் தணிகாசலக்கடவுளே. (ரு)

## கண்ணிகள்.

என்னிரண்டுகண்ணே யிவ்வேழைபடுந்துன்பமெல்லா
மன்னிரண்டுகண்ணிருந்தும் பாராதிருந்தனையே [ம்
வேலுக்கரசே விடைக்கரசேநின்னருளாம்
பாலுக்கழுவேனைப் பார்த்துமிருந்தனையே
சத்திவேல்தான்பிடித்த சங்கரனார்தன்மகனே
பத்தியாயுனைப்பணிந்தும் பாராதிருந்தனையே.

---





கடவுள் துணை.

# ஆறுமுகசுவாமிபேரில் பஞ்சரத்தினம்.

திருவளரும் சென்னைபுரி தெய்வப்பிரகாசனே சிவகாமிதவபுதல்வனே, சிங்காரவேலனேகதிர்காமமர்ந்தையனே தெய்வானைகுணநேயனே, மருவுமலரணிகின்ற வள்ளிக்குகந்தனே வையாபுரித்தலைவனே, மயிலேறும் வீரனேசூரசம்மாரனே மாயவன்நன்மருகனே, தருவிற் பருத்த கனிக்காகவொருநொடியிற் பூவலம்வந்தசத்துருசம்மாரதரனே, சங்கரிகொடியிடை தவத்தினூதித் திடுஞ் சரணக்குருகந்தனே, அருமையுடனேவருகுவாய்மயிலேறுமையனே கதிர்காமமுத்தையனேஆறுமுகமானதிருநீறுவொளியானவருளாறுமுகமானகுருவே.

சங்கரன்தனக்குமிகவுபதேசஞ்சொல்லியேசகலருக்குமுர்தமீந்தாய், சாட்சாதிவேடர்மகள்வள்ளியின்கொல்லையில்தனிவேங்கைமரமுமானாய், எங்கும்புகழாகவேயசுரரைச்சம்மரித் திந்திரனுக்குதவிசெய்தாய், ஏகாந்தமாகவே தென்பழனிபுரியினி லிடர்தீர்க்கவந்தமுருகா மங்களாகரமான தணிகை திருப்போரூரில்வாழ்மயிலக்தனிலமர்ந்தாய், மனுநீதிதவறுதகோடானகோடிபேர் வணங்கினோர்க்குதவிசெய்தா, யங்கமுங்கலங்கியேநொந்தயான்தவிக்கும் வேளையப்பனே முன்புவருவாய்,

ஆறுமுகமானதிரு நீறுவொளியானவரு ளாறுமுகமா னகுருவே. (உ)

ஏதுமறியேனென்று மிணக்கமறியேன்சற்று மி ணையடிகள் போற்றவறியேன், எத்தேசகாலமும் பக்த ர்களைப்பூசித் திணக்கமுடன்தொழுதுமறியேன், சுத்த நிஷ்டையறியேன்சற்றும் நிலைகண்டுபுகழவறியேன், நெ டுநாளாயுன்கோவில் வலமாகவந்து நின்றுபூசித்துமறி யேன், வேதமறியேன்நூல் விளக்கமறியேன் பூரணவே தாந்தமுடிவுமறியேன், வினைசெய்தபாவிக்குதுணையாக நீவந்து வேண்டினவரந்தருகுவாய், ஆதிவடிவோராஜ யோகவடிவேநித்ய யருளமுதமானவடிவே, ஐயனே யுனதன்பருக்கருள்தருகுவாய் ஆனந்தவடிவேலனே ஆறுமுகமானதிரு நீறுவொளி யானவருளாறுமுகமா னகுருவே. (ங)

ஏனோதான்நான்செய்த பாவவிதிகர்மமோ எளி யனிடநோன்புபலனோ, எண்ணாமல் முன்னோரைப்பே சினகர்மமோ எளியோரைப்பழித்தவிதமோ, தானுக பூமியில் வழக்கோரஞ்செய்தனோ சத்ராதி கோபமுறை யோ, தாரணியில்கவிபாடும் புலவரைத்தடுத்தனோதாய் க்குபழியென்செய்தனோ, மானுசனமிடும்மறையர்குலை செய்தனோமங்கையர்கள்சாபமிதுவோ, மாருமல்முன் செய்தபாவத்தைநீக்கியே மைந்தர்க்குவரந்தருகுவாய், ஆனுலுமெங்கள்முன் வருகுவாய்மயிலேறுமையனேக திர்வேலவா, ஆறுமுகமானதிருநீறு வொளியானவரு ளாறுமுகமானகுருவே. (ச)

வேலுமசைந்தாடவீரகிண்கிணியாட வெண்டை யங்குலிங்கியாட, விதமானகாலினிற் றண்டைச்சிலம் பாட வேதாந்தகுடைகளாட, நாலுமறைகள்பாடக் கோழித்துசமாட நாதாந்தப்பொருள்களாட, நாகரீக மானதொரு வீரகண்டாமணி நடனமிடும்மயிலுமாட, பாலர்கள்காவடிகள் கொண்டுபுகழ்ந்தாடப் பக்தர்கள் நடனமாட, பாங்கானகாவி நீருடையாட சித்தர்கள் பணிந்துநிர்த்தனங்களாட, ஆலத்தையுண்ட வன்புக் கரனேமாபுரி ஐயனுர்வருகவருக, ஆறுமுகமானதிரு நீறுவொளியானவரு ளாறுமுகமானகுருவே. (ரு)

முற்றிற்று.



உ

## திருப்போரூர்
## சண்முகக்கடவுள்பஞ்சரத்தினம்.

ஆறுமுகன்காண் பன்னிருகண்ணன்காண் அழ குவே லுடையவன்காண், ஏறுமயில் வாகனன்காண் எளியதுயர் தீர்ப்பவன்காண், சண்முக வேலன்காண் சாமிகுருநாதன்காண், பேறுபெரும்போரூர் புண்ணிய ன்காண் பெம்மான்காண்என்னூரு மென்மனமுள் ளானே. (க)

விண்ணவர்துயர்தீர்த்தவன்காண் வேதியனேச்சி றையில்வைத்தவன்காண், பண்ணிறைற்பாடுபவர் பவ மொழிப்பவன்காண் பக்தருளத்திதிக்குஞ் செங்கனி

காண், பெண்ணொருத்தியபயமென வந்தவன்காண்பே யோடாடுபவர்புதல்வன்காண், மண்ணுடோர்தொழுதேற் றும் போரூர்மன்னவன்கா ணென்றனுமென்மனமுள் ளானே. (உ)

கன்னிகளிருவரை மணந்தவன்காண் கானகத்தி ல்வேங்கைமரமானவன்காண், தன்னிகரில்லாததயாப ரன்காண் தந்தைக்கொருமொழி யுரைத்தவன்காண், சென்னிமலை வேலவன்காண் செங்கதிர் வேல்பிடித்த செல்வன்காண், இன்னுடோர் தொழுதேற்றும் போ ரூரீசனிவன்கா ணென்றனு மென்மனமுள்ளானே. ()

செந்திற்பதிவாழுஞ் செங்கல்வராயன்காண்செங்கண் மால்மருமகன்காண்,வந்துபணிவோர்க்கருள் தருபவன் காண்தானவர்கோமான்காண்,பந்தப்பிறவியறுப்பவன் காண் பாவலர்க்குகந்தபரமன்காண், கந்தமணக்கும் போரூர் கற்பகங்காணென்றனுமென்மனமுள்ளானே.

வஞ்சநெஞ்சரை வதைப்பவன்காண் வாதாடுஞ் சூரரைவென்றவன்காண், தஞ்சமென்பாரிடர் தீர்ப்ப வன்காண் தானவர்சிறைவிட்டவர்காண், நஞ்சுண்ட கண்டர்க்குநாயகன்காண் நற்கீரர்பாடலுக்கு நயன்ற வன்காண், சஞ்சலந்தீர்க்கும்போரூர் சரவணன்கா ணென்றனுமென் மனமுள்ளானே. (ரு)

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 31.

உ

முருகன் துணை.

# சுப்பிரமணிய ராட்டகம்.



சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1908.

# இந்து தேசத்து
# சாட்சி ஆக்ட்டு.



இந்த சாட்சிஆக்டில் முன்சீப் கோர்ட்டு, சிவில் கோர்ட்டு, கிரிமினல் கோர்ட்டு, செஷன் கோர்ட்டு முதலிய எல்லா கோர்ட்டுகளின் சாட்சி நிபந்தனைகளும் சாட்சிகளின் யோக்கியதா பரீட்சைகளும், இன்னவிதமாய் சாட்சிநியமிக்க வேணுமென்கிற அமைதிகளும் அனேகர்கூடியசாட்சி பரிவர்த்தனைகளும் இன்னசாட்சி கூடும் கூடாதென்பதையும் சுலபமாய் தெரிந்துக் கொண்டு நடத்தவேண்டிய ரூல்சுகள்யாவும் அடங்கியிருக்கிறது.

இதன்விலை அணா 12.

இப்படிக்கு,
சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,
பெரம்பூர் பாரோக்ஸ், மதராஸ்.



உ

முருகன் றுணை.

# சுப்பிரமணிய ராட்டகம்.



## காப்பு-வெண்பா.

பார்புகழுஞ்சுப்பிர மணியர்மேலாட்டகத்தை
தார்கொண்டுபூசைசெய்து சாற்றுகைக்கு- கார்மேகன்
மாமருகோனை மதகரிவைங்கரன்பாதம்
மாமருவாய்க்கொள்வேன் முடி.

ஆறுமாமுகன்றன்னையே சதாகாலமும்
பணிந் தேத்தினேன்
பாருள்ளோர்க் கதிதந்திடுஞ்சிற
புத்திராவுனைப் பாடினேன்
வீறுகொண்டுனை தாக்கவந்திட்ட
சூரனைக் கொன்றவீரனே
பாருமும்முடை யாறுமாமுகக்
கண்ணுள்ளோர் சிறுகண்ணிலே. (௧)

ஆதிகாலத்தில் மலையாளத்திற் சிறைகொண்
டேகிய குமரனே
ஆதிகாலத்தி நற்கிரனுக்காக்குறும்
போரைத்துளத்த சிலம்பனே
பாதியாயபறு முயிர்ப்பிராணிகட்
குயிர்கொடுத்திடும் புலவனே
பாதிமாமதி சூடுமீசர்தன்
பாலகா மயில்வாகனு. (உ)

சிங்கமாமுக சூரனைக்கொன்ற
வீரனேமிகப் போற்றினேன்
வங்கமானதை வெட்டையாக்கிட
வருள்புரிந்திடு சாமிநீ
தங்கமாக்கிடுஞ் சூதைநீயெனக்
காண்பிவித்திடு மாசனே
பங்கமாகாமற் கல்விநீயெனக்
காண்பிவித்திடு புலவனே. (௩)

புவியிலோர்புரங் கோவில்செய்ததில்
குடியிருந்துகொண் டிருக்குறீர்
பாவியாகிய வெந்தன்பாவத்தை
பார்த்துநீ பரிக்ஷிக்கவே

பூவில்மேவிய போதனைச்சிறை
　　யாக்கினக் கடுஞ்சூரனே
மாவிலேமிகப் பிரீதியாயுள்ள
　　வள்ளியின் மணவாளனே.　　(சு)

கோவிலோர்புரம் கோவிலேயீயுங்
　　கோதையருடன் கூடியே
காவிலேயிருப்பது போன்மிக
　　நேர்த்தியா யிருதிப்பதினால்
பூவிலேயெனக் கோதைமாமனஞ்
　　செய்துவைக்கவே போற்றினேன்
கோவிலேயுள்ளக் கானகமதிற்
　　கூவிநின்றாடும் வாகனா.　　(எ)

கோவிலோரடிமைக்காகவே
　　வைத்தியஞ் செய்தநாதனே
கோவிலேயெனக் கூடியமட்டில்
　　வைத்தியஞ்செயப் போதியும்
பாவிலேயென்ன மாசுவந்தாலும்
　　பாதமேகதி யாதலால்
நாவிலேயெழுத் துள்ளோனாகிய
　　நன்மையாகிய புலவனே.　　(அ)

பூவிலோ ரடிமைக்காகவே
சோதிடம்பார்த்த புலவனே
கோவிலேயெனக் கூடியமட்டிலே
சோதிடம்பார்க்க போதியும்
பாவினுலுந்தன் பாதத்தைசேர
பார்த்துநான் கேட்டுக்கொள்ளுறேன்
பூவிலேயுள்ள கானகமதில்
கூவிநின்ருடும் வாகனு. (எ)

பேதையுமதி பித்தமுங்கொண்ட
வித்தக னருட்புத்திரா
பாதையுமதி புத்தியுந்தெரியாத
நானுனைப் போற்றினேன்
போதையாங்கோவி லின்றுநீயெனைக்
கார்ப்பையென்று நானம்பினேன்
கோதைசாயலன் போலுமாமந்தக்
கோழிமா மயில்வாகனு. (அ)

முற்றிற்று.



வே று.

கயிலை வாழ்பெருஞ் சோதி யீன்றருட்
கந்த னேகுறப் பெண்மணி
குயிலி லின்னிசை வள்ளி நாயகிக்
குகந்த நாயக தணிகைவாழ்
மயிலின் மீதுவந் தடிமை வறுமையை
மாய்த்து குடிதனைக் காத்தரு
ளயனைத் தந்ததே நார ணற்குமா
மருகனே வேற்கை முருகனே. (க)

முருக னேமுதற் கடவு ளேசண்
முகம லர்ந்தெனை நோக்கிநீ
அருகிற் பல்நிதி மணிகட் பொன்வகை
யளித்திவ் வுலகினி லாதரித்
திருவின் மருகசிங் கார வேலனே
தெய்வ யானைசேர் மார்பனே
வருக வருகவென் றழைத்த போதெலாம்
வந்துக ருணைதந் தாளுமே. (உ)

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 32.

# இந்துக்கள்

# தெய்வகுண வெளிச்சம்.

விசுவாவசு என்பவன்—வாதி.
கிருசானு என்பவன்—பிரதிவாதி.

பூலோகத்தினுள்ளே தெய்வங்களையும், தெய்வஸ்தலங்களையுங் குறித்து தேவலோகத்து காந்தருவர்களாகிய (விசுவாவசு என்பவனுக்கும், கிருசானு என்பவனுக்கும்) நடந்த எதிருக்தமான தர்க்கங்களாகையால் படிப்பதற்கு வெகு இனிப்பாயிருப்பதுமன்னியில் அனேக திருட்டுப் புரட்டுகளும், வியாசன் கட்டுப்பாடுகளும் வெளிப்படையாய் விளங்கும். இந்தப் புத்தகமானது (விஸ்வகுண தேரிசனமென்னும்) சாஸ்திரத்தை அப்படியே சமஸ்கிருதத்திலிருந்தும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

இதன் விலை அணு 8. தபாற்கூலி அணு 3.

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

பெரம்பூர் பாரெக்ஸ், மதராஸ்.

உ

பழனி

# ஆறுமுக சுவாமிபேரில்

## அலங்காரவிருத்தம், ஆசிரியவிருத்தம்.



சிறுமண்வூர்-முனிசாமி முதலியா ரவர்களது,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1908.





# ஆறுமுகசுவாமிபேரில்

## அலங்கார விருத்தம்.

சந்திரமுருகாநல்ல தந்திரமுருகாஞான சற்குரு நாதமுருகா, சாரிமுருகாவறுமை தீருமுருகாசுவாமி சச்சிதாநந்தமுருகா, சுந்திரமுருகாமயி லுகந்தமுரு காஎங்கள் சூரசங்காரமுருகா, சோதிமுருகாரத்ன வேதிமுருகாநிதந் தேவர்கடுதிக்குமுருகா, மந்திரமு ருகாஎன்முன் வந்துமுருகாவரந் தந்துகாத்தருளுமு ருகா, வாருமுருகாகிருபை பாருமுருகாஉன்றன மை ந்தனெக்காருமுருகா, அந்தமுருகாசத்தி மைந்தமுரு காவெங்கு மழகானநீதிமுருகா, ஆறுமுருகாகுறை றீருமுருகாபழனி ஆனந்தமானமுருகா. (க)

செய்யமுருகாவீராறு கையமுருகாதேவர் செல்வ ஐய்வந்தமுருகா, செட்டிமுருகாதங்க கட்டிமுருகா குலதேவாதி தேவர்முருகா, மெய்ம்மைமுருகா மயி லேருமுருகாசெய்த தீவினை தீர்க்குமுருகா, வேலுமு ருகாவென்னையாளுமுருகா சீஷர் வேண்டுவரமீயுமுரு கா, தையன்முருகாஅம்புபெய்யுமுருகாகல்விசகலகலை யோதமுருகா, ஐயமுருகாசோதி வையமுருகா வீர

அசுரரைவென்றமுருகா, துய்யமுருகாசுயஞ்சோதிமுருகாதவத்தோர்தொழு மாதிமுருகா, ஆறுமுருகாகுறைதீருமுருகாபழனி ஆனந்தமானமுருகா. (உ)

பொன்னுமுருகாபாதுகாக்குமுருகாதிருப்புகழோதியுன்னுமுருகா, போற்றுமுருகாவனங் காத்தமுருகாவள்ளி பொற்புயமணைந்தமுருகா, கன்னிமுருகாமெய்சொன்னமுருகாவென் கலியெலாந் தீர்த்தமுருகா, காந்திமுருகாதணிகை வாழ்ந்தமுருகாசிவகைலாசநின்றமுருகா, மன்னர்முருகாபணி மின்னமுருகாவேங்கை மரமாகநின்றமுருகா, மயிலுமுருகாமொழிகுயிலுமுருகாதேவர் மகிழுஞ்சங்கீதமுருகா, அன்னமுருகாபஞ்ச வர்னமுருகாவுந்த னடியவர்க் குதவுமுருகா ஆறுமுருகா குறைதீருமுருகாபழனி ஆனந்தமானமுருகா. (ந)

செம்மைமுருகாநம்மை காக்கமுருகாவிருது சேவலங்கொடியமுருகா, செல்வமுருகாயினிய நல்லமுருகாயெங்குஞ் சோதியாய்நின்றமுருகா, நன்மைமுருகாலோக மேன்மைமுருகாதிரு நாரணன்மருகமுருகா, ஞானமுருகா அரிதானமுருகாதிவ்ய நாகமணியானமுருகா, வண்மைமுருகாயெனக் குண்மைமுருகாவரமகிழ்ந்தருள்தாருமுருகா, வாலமுருகாநீறு பாலமுருகாயானை முகவனுக்கிளையமுருகா, அம்மைமுருகாவள்ளி யம்மைமுருகாயெந்தன் வேதனையறுக்குமுருகா ஆறுமுருகா குறைதீருமுருகாபழனி ஆனந்தமானமுருகா. (ச)

சாரிமுருகாவித்தை யுரைசெய்யுமுருகா யிதுசம யம்வரமருளுமுருகா, சத்திமுருகாஉமையாள் பெற்ற முருகாவிந்த தாரணிபுகழோதுமுருகா, கௌரிமுரு காநல்ல சரவணமுருகாயெந்தன் கிலேசமுந்தீருமுரு கா, கீர்த்திமுருகாசிறை மாற்றுமுருகாமனத் திக்கே ற்றவரமீயுமுருகா, கவனமுருகாஉந்தன் தயவுமுரு காயென்னைக் கடைத்தேறப்பாருமுருகா, காசிமுரு காமுன்னில்பேசுமுருகாவீரகபாலசூலமுருகா அவனி முருகாலோப பழனிமுருகாதேவர்க் கருண்மயானந் தமானமுருகா ஆறுமுருகா குறைதீருமுருகாபழனி ஆனந்தமானமுருகா. (ரு)

தெள்ளுமுருகாகுறை சொல்லுமுருகா செவியில் கேட்கவில்லையோ வென்றன்முருகா, தேனுமுருகாவரம் வேணுமுருகாமயில் தெரிசனந்தாருமுருகா, வள்ள ல்முருகாபொன்னு வள்ளிமுருகாசரணம் வந்துகாத் தருளுமுருகா, வாய்த்தமுருகாநிதம் போற்றமுருகா ஒரு மரமாயிராதைமுருகா, சொல்லுமுருகா காசத்தி செல்லுமுருகாவொளி தங்கநவரத்னமுருகா, சோலை முருகாவடி வேலுமுருகாவேண்டி தொழுதவர்க்கரு ளுமுருகா, அல்லுமுருகாபகல் நல்லமுருகாசாமி ஆநந் தகவிக்குதவுமுருகா, ஆறுமுருகாகுறை தீருமுருகா பழனி ஆனந்தமானமுருகா. (சு)

முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# ஆறுமுகசுவாமிபேரில்

## ஆசிரியவிருத்தம்.

ஆறுமுகம் பன்னிரண்டுகையும்வேலும் அலங்கார வாபரணமணிந்தமார்பும், திருமுகமும்வெண்ணீறும் புனைந்தமெய்யும் செகமெலாம்புகழ்படைத்த சுப்ரமணியா, முருகாசரவணபவனே கார்த்திகேயாமுக்கணனார்புத்திரனேஉக்ரவேலா, இருவருமே யுனைப்பணிந்தோம்பழனிவேலாயிது சமயமடியாரைரட்சிப்பாயே.

மயிலேறிவிளையாடுஞ் சுப்ரமணியா வடிவேலாவுன் பாதம்நம்பினேனே, வுயிரிழந்து அபகீர்த்தியாகும்வேளை உன்செயலாலிதுசமயம் உயிரைக்காத்தாய், தயவாகவினிமேலும் உயிரைக்காத்துச் சண்முகமே அடியார்தந்துயரந்தீர்ப்பாய், வைபோகமானமலை பழனிவேலா வரமளித்துஉயிர்காத்து ரட்சிப்பாயே. (உ)

வருந்துமடியாருயிரைக் காக்குந்தெய்வம் வையகத்தில்வேறொருவரில்லையென்று. அறிந்துநான் உனைப்பணிந்தேன்சுப்ரமணியா ஆதரித்துபபிராணபயம் தீருமையா, திரிந்தலைந்து அறுமூணுதிங்களாகச் சிறையி

ருந்து தளைப்பூண்டு சின்னமானேன், பறந்துவருமயி லேரும்பழனிவேலா பாயுகமேயுயிர்காத்து ரட்சிப் பாயே. (௩)

பெருவேங்கைப்புலிபிடித்த பசுவைப்போல பிதுர் கலங்கிமனந்தளர்ந்து புலம்பினோமேயிருவருமேஊனை க்கூவச்செவிகேளாதோ விதுசமயந்தாமசமாயிருக்க லாமோ, குருவாகித்தந்தைதாய்நீயேயாகில் குமரேசா பிராணபயந்திருமையா, முருகேசாவிதுசமயம்பழனி வேலா முன்வந்துஉயிர்காத்து ரட்சிப்பாயே. (௪)

பாம்பின்வாய் சிக்கியதோர் தேரைபோலப் பதைப தைத்துவாடுகிறோம் பாலர்நாங்கள், தேம்பியே புலம் புகிறோம்துயரமாகித் தென்னவனேயுன்செவிக்குக்கே ளாதோதான், நான்புவியிலுன்னைநம்பி மகிழ்ந்திருந் தேன்நாயேனுக்கவதிவர நியாயமோதான்,சாம்பசிவ ன்புத்திரனேபழனிவேலா சமயமிதுஉயிர்காத்து ரட் சிப்பாயே. (௫)

வலையிலகப் பட்டவுயிரதுபோல் மயங்குகிறோமே வடிவேலாவிதுசமயந் துயரந்தீர்ப்பாய். கொலைகளவு பாதகங்களபொ யிருந்ததெல்லாம் கொடும்பழிகள் வஞ்சனைபில்லிசூனியமெல்லாம், தொலையாதசிறுபிணி நோய்வினைகளெல்லாம் துரத்துமையாமயிலேறும் சு ப்ரமண்யா, மலையிலுறைவாசனே பழனிவேலா வரம ளித்துஉயிர்காத்து ரட்சிப்பாயே. (௬)

நாகமதுகெருடனைக்கண் டலைந்தாற்போல நான்ப யந்து அலைதுரும்பாய் அலையுறேனே, தாகமதுதிரு மையாதவிக்கும்வேளை சண்முகமேயிதுசமயம் அடி யேனுக்கு, மேகமதுபயிர்க்குதவி செய்தாற்போலே வேலனேபிராணபயந் தீருமையா, வேகமுடன்வரவே ணும்பழனிவேலா வினைதீர்த்துஉயிர்காத்து ரட்சிப் பாயே. (எ)

பூனைகையில் சிக்கியதோர் கிளியைப்போலப்புலம்பு கிறேன்பிராணபயமிகவுமாகி, நானடிமையும்மைநம்பி யிருக்கும்வேளை நாயகனேபராமுகமாய்ப் பார்க்கலா மோ, மானீன்றவள்ளியம்மை தெய்வானை மணவாளா சரவணனே கருணைசெய்வாய், கானமயில்வாகனனே பழனிவேலா கடவுளே உயிர்காத்து ரட்சிப்பாயே. ()

தூண்டிலகப்பட்ட உயிரதுபோல் துடிக்கிறேனே சுப்ரமணியா விதுசமய மடியேனுக்கு, வேண்டுவரங் கொடுப்பதற்குப்பார்த்து நீயேவேறொருவரில்லையென் றுநம்பினேனே, மீண்டுவரும்வினைதீர்த்து துயரந்தீர் ப்பாய் வேலவனேசூரசம்மாரசங்காரவேலா, ஆண்ட வனேயுனைப்பணிந்தேன்பழனிவேலா அடியார்களுயிர் காத்துரட்சிப்பாயே. (கூ)

நஞ்சுபட்டுவிஷமேறி மயங்குமாபோல் நடுநங்கிடு கிடென்றுபயந்துநாங்கள், தஞ்சமென்றே யுனைப்பணிந் தோம் திருத்தணிகைவாசா சற்குருவேபிராண பயந்

திருமையா, பஞ்சதனேச்சிறைவிடுத்துத் தலையைவாங்கிப் பாதகத்தைப்பரிகரித்துப்பதமேதந்து, வஞ்சனைகள் செய்யாமல்பழனிவேலா வரமளித்து உயிர்காத்து ரட்சிப்பாயே. (௧0)

அத்திமுகனேமுக் கண்ணனுக்கிளையவேலா அறுமுகனேதணிகையிலே அமர்ந்தவாசா, வித்திறத்திற் பேசாதமூடனானும் வேலவனேகின்னருளால் கவியைப்போலே, பத்துமேபதிகமாய்ப் பாடிச்சொன்னேன் என்மீதில்பிழைகள்மனம் பொறுத்தேயாள்வாய், சத்தியமா யுனேப்பணிந்தோம் எங்களையா சண்முகனே யடியாரைரட்சிப்பாயே. (௧௧)

முற்றிற்று.



ஆக புத்தகம் 34.

உ

# பழனிமலை வடிவேலர்

## ஆசிரியவிருத்தம்.



சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1908.



உ

தண்டாயுதபாணி துணை.

# பழனிமலை வடிவேலர்

## ஆசிரியவிருத்தம்.

---

மலர்மகுடமோராறு மலர்வதனமோராறு மலர்க டிகையோராறுமோர், மலர்மதியமோராறு மலருமுடி யோராறு மலர்பவளகாய்களாறும், இலகுசெவி யீரா றுமிலகுகுழையீராறு மிலகுவிழியீராறுநீள், இலகுகர மீராறு மிலகுப்பையீராறு மிலகுபுயமீராறுமேல், அ லர்மருவுபுரிநூலு மறைநூலுமயின்மேலு மன்னையரி ரண்டுபாலும், அணிநூபுரக்காலும் வடிவேலுமாகவந் தடியேனை யஞ்சலென்பாய், பலவமரர் பலமுனிவர் ப லசுருதிபலமிருதி பலகலைகள் புகழ்முதல்வனே, பழ மறைசொல்லிய சிவதொழுமவர்களநுகூல பழனிமலை வடிவேலனே. (க)

திங்குமிகளைந்தமொலி வளரவான் மாதர்புகழ் சோபன முழக்கண்வளரத், தூயகலை மகளுமலர் மக ளுமாலத்திபல சுற்றியவாபத்திவளரச், சந்திரசூரியா

தீபவளரத்திசாநாதர் சாமரைசுழற்றிவளரத், தவமுனிவர்துதிவளர விண்ணவர்கள் பூமழை தலைத்தலைபொழிந்துவளரக், கந்திருவரிசைவளர நால்வேதமோதியெண்கண்ணனெடுகண்ணன்வளரக், கைலாசநாதனும்பெரியநாயகியுமிது கண்டுகண்காட்சிவளரப், பந்திகள்வளர்ந்து நீகொலுவிருக் கையிலுனது பணிவிடைவளர்ப்பதெந்நாள், பழமறைசொல்லியசில தொழுமவர்களநுகூலபழனிமலைவடிவேலனே. (உ)

வயிற்றுவலிசோகைவிப்புருதி நீரிழிவுகாமாலைவெண்குட்டமிருமல், வாதகுன்மம் பெருவியாதி பக்கப்பிளவைவண்டுகடியண்டவாதஞ், சயித்தியமகோதரம்மியஞ்சூலைகாசங் கிராணிபாண்டுரோகந், தலைவலிகருங்குட்ட மீளைதொடைவாழைபடர் தாமரைகிரந்திபடுவன் முயற்பிணிபவுத்திர நடுக்கலெழுஞாயிறு முரைக்காச்சல் மாரடைப்பு, முகசன்னிசுகசன்னி சூலைவலிபெரும்பாடு மூலக்கபாலவாயு, பயித்தியமுதல்வினையெலாம் பரிதிமுன்பனிபோற்பறித்தெரியு மதிகாரனே, பழமறைசொல்லியசில தொழுமவர்களனுகூல பழனிமலைவடிவேலனே. (ங)

காசினிகருப்பனிரிசிருளன்கூளிவேதாளிதாடகைமகாடவீரன், சந்திவீரன்குரளியந்திவீரன்சண்டிதடிவீர

ன்வல்லரக்கி, மோகினியிடாகினிகளிருது குட்டிச்சாத்தி முன்னடியன்வடுகன்கடா, முனிவன்வெட்டுணிகுத்தாணிகாட்டேறி சாமுண்டி பாவாடையப்பன், சோகிபூதப்பிர்மராட்சசப்பண்டாதி தூர்க்கைவைப்பேவல்பில்லிசூனியமுதல்வினையகலவெள்ளளவுநீற்றுதொலைத்துன துதிருவடிமலர்ப், பாதமதில்வைத்தன் பருக்கெலாமேலான பதவிதருமதிகாரனே, பழமறைசொல்லியசிலதொழுமவர்களநுகூல பழனிமலைவடிவேலனே. (ச)

ஆலாலவட்டமயில்விசிறி சாமரைகள் கண்ணடிபொன்னுடைசுகமா, ரத்தடிபிரம்புவளைகன்னி பறிகச்சையிதியடிகிளிக்கூடுகச்சால், சூலாயுதம்பரிசை வில்லம்புமுள்ளம்பு சுரிகைகட்டாரிவாங்கு, தோமரமுலக்கைசக்கரமீட்டி சவளஞ்சுலிக்கி நேரிசம்வல்லயம், வேலாயுதங்கண்டகோடாரி நாராசம் வீசுபாசம்பாகுதார்வீரவளங்குமரபாணங்கள் படைவாணம் விருதுதுப்பாக்கிபிண்டி, பாலாயுதங்கொண்டு விசைவேட்டையாடிவருபன்னிருகைமலை வேலனே, பழமறைசொல்லியசிலதொழுமவர்களநுகூல பழனிமலை வடிவேலனே. (ரு)

ஜெயசண்டமாருதப்பரியேறியங்கையிற்சிங்காணிவிற்பிடித்துச், சிறுகணைதூறிவனமேறுநாலுயிரங்கெருபுலிகளலறிவீழ- முயலம்புதைத்துவிழ கைமரத்துந்து

ண்டுவிழ முப்பன்றிநட்டுவிழ- முழயானைக்குடல்கள்
பீறி விழம்வங்கைமுழமுன்கரடிமந்திவிழ- வியனுண்ட
தெய்நருதி பொங்கமாநதிமேன் மிதப்பஒருநொடியள
விலே- விசைவேட்டையாடி மகிமைகள்காட்டிவருவெ
ற்றி வீரனுணையன்றியுண்டோ- பயமென்றவற்குதவுதெ
ய்வமேயென்னுடைய பங்கிலுறைகுலதெய்வமே- பழ
மறைசொல்லிய சிலதொழுமவர்களநுகூல பழனிமலை
வடிவேலனே. (சு)

திசைதொறுங்கனகவேல் திசைதொறும் வெள்
ளிவேல் திசைதொறுமணிப்பதக்கம்- திசைதொறும்
பொற்சிவிகை திசைதொருபசுமந்தைகள் யசையுமொ
ரு - திசையிலேகுதிரைகள்விமானங்க ளாட்டுக்கடாக்
கள்தேர்க - ளானையொரு திசைபெண்கள் சேனையொ
ருதிசையன்பராடல்பாடலுமோர்திசை- இசைகிளிகள்
காடை கவுதாரிகள்புறுக்கள் வெள்ளெருதுகள் கொலை
ச்சேவல்க- ளிடுசவ்வாதுப்பூனைப் புழுகுபூனைகள் மான்
களெத்திசையு மெவருமிடவே - யசையுமிகலோகபர
லோகசித்திகள்தரும் பரமோபதேசகுருவே- பழமறை
சொல்லியசில தொழுமவர்களநுகூல பழனிமலைவடி
வேலனே. (எ)

காளையெக்காளைசின்னங்கொம்புபூரிகைகாகளந்த
வளசங்கம்- கனதுதித்துத்தாரி நாககுரமத்தளங்கனகத

புத்தவண்டை- தாளடம்மார்மிசைகண்டகைத்தாளடந்
தடாரியோடுடுக்கைபம்பை- வுடல்நவரிபேரிகிடுபிடிசந்
திரவளையமொடடங்காவிடக்கைதட்டை- நீளமுகவீணை
கள்கின்னரி புள்ளாங்குழல்கள் நிர்த்தகிர்த்தங்கள்மிக
வே- நெடியதிரைகடலெனக்குமுறிவருமதனின்சேவை
காண- பாளைவிருகமுகநிறைதிருவாவி னன்குடிப் பதி
கொண்டுவருகந்தனே- பழமறைசொல்லிய சிலதொழு
மவர்களனுகூல பழனிமலைவடிவேலனே. (அ)

மதிமவுலிமார்பில்விளை யாடுகமலங்கௌரிமடித
னிலுதைத்தகமலம் - வண்டமிழ்ச்சங்கத் திருந்தகமல
ம்பிரமன் வந்தனைகள்செய்தகமலம் - மதிகவிதைவரு
ணகிரி சூட்டுகந்தெய்வ யானைகரவாசகமலம் - அணி
மணிதிருத்திப் புனைந்தகமலம்பணிசெ யடியார்வினை
மாற்றுகமலங்- கதிர்முலைக்குறமங்கை தினைவனப்புற்
களுமுறுத்தகமலம் - கானமயிலேறிநட மாடுகமலஞ்
சுரர் கணங்கள்கொண்டாடுகமலம் - பதிதனுமென்னு
டைய வன்மமெனுங்கரும் பாறையின் முளைத்தலரு
மோ - பழமறைசொல்லியசில தொழுமவர்களநுகூல
பழனிமலைவடிவேலனே. (கூ)

வடிமதுக்காவடிகள் சர்க்கரைக்காவடிகள் மாங்க
னிக்காவடிகள்நெய், வார்த்தகாவடிகள் பலதீர்த்தகாவ
டிகள்பால்வைத்தகாவடிகள்நீற்று- பொடிவைத்தகாவ
டிகள் சந்தனக்காவடிகள் பூமலர்க்காவடிகள் - கற்பூர
காவடிகள் சாம்பிராணிகாவடிகள் புழுகுகாவடிகள்வ

ருவோர், முடியெலாங் காவடிகள் தோளெலாங் காவடிகள் முதுகெலாங்காவடிகளாம் - முக்காதவழியகலமெட்போடவிடமின்றிமுக்யமலை மீதிலேரும் - படியெலாங் காவடிகள் காவடிகளாக விப்பாரெலாம் பூசைகொண்டாய்- பழமறை சொல்லியசில தொழுமவர்களநுகூல பழனிமலைவடிவேலனே. (௧0)

தருமிரவியுதவு மதுகண்டு வையாபுரிதனைக்கண்டு சுத்திகண்டு- சண்முகப்புனல்கண்டுகிறமாதிகண்டு பின் சரவணப் பொய்கையாடி - அருள்பெருகுவாவினன்குடிகண்டு கைலாச ரம்பைபெரி யம்மையைக்கண் - டம்பொன் மலைகண்டதி விடும்பர்சந்நதிகண்டனேககண்காட்சிகண்டு- கருணைகண்டருள்வள்ளி தெய்வானைனயக்கண்டு களிகண்டிருக்குமுன்றன் - கமலபாதங்கண்டபேரொருக்காலு மக்காலனைக்கண்டிடுவரோ - பரிதிவலிகண்டபது மாசுரன்தம்பிதன் பராக்கிரமங் கண்டதுரையே- பழமறைசொல்லியசில தொழுமவர்களநுகூல பழனியமலைவடிவேலனே. (௧௧)

முற்றிற்று.



ஆக புத்தகம் 35.

உ

கடவுள் துணை.

திருத்தணிகை

செங்கல்வராய சுவாமிபேரில்

# மாதப்பதிகம்

## வாரப்பதிகம்.

---

இவை.

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டு,





தமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1908.



உ

தெய்வமேதுணை.

# தணிகாசலக்கடவுள் பேரில்

## மாதப்பதிகம்.



### வெண்பா.

தணிகா சலமேவுந் தற்பரனை வேண்டித்
துணிவாயிருபதிகஞ் சொல்ல—மணிசேர்
பணிதுலங்கு தோளான் பகரானை மாமுகன்ற
ளணியாய் தலைக்கணிகு வாம்.

### சித்திரைமாதம்.

அத்திமுகத்தோ னருந்துணைவாவிவ்வகிலமெல்லாஞ்
சுத்தியொருநொடிக் குள்ளேவலஞ்செய்த சூத்திரனே
முத்தமிழ்க்கீர னிடர்தீர்க்கத்தட்சணமுயன்றதுபோல்
சித்திரைமாதம் வருவாய்தணிகையிற் சேவகனே.

### வைகாசிமாதம்.

கையாறநின்கழல் போற்றிசெய்தேனென் கனவிலெ ல்லாம், மெய்யாகநீவந்த தன்மையென்றுலிந்த மேதினியில், செய்யாவினையென்ன செய்திருந்தாலுமச் சீற்ற மற்று, வைகாசிமாதம் வருவாய்தணிகையில் வாழ்பவனே.

## ஆனிமாதம்.

மானிலமளந்த மான்மருகாயிந்த மானிலமும்
ஞானியுமுனிவரும் நான்முகனுந்தொழு நாயகனே
தேனில்விழுந்த யீப்போல்திகைத்துனைத் தேடுகிறேன்
ஆனிமாதத்தில் வருவாய்தணிகையி லாண்டவனே.

## ஆடிமாதம்.

ஓடியுலாவும் பருவத்திலேயிந்த வூழ்வினைதா
ளுடித்துடர்ந்து தையோயிதற்கென்ன நானறிவேன்
பாடித்துதிக்கும் பதங்கொடுத்தாயந்தப் பக்குவம்போ
ஆடிமாதத்தில் வருவாய்தணிகையி லாண்டவனே. [ல்

## ஆவணிமாதம்.

சேவலங்கொடியுடை சேவகனேதுதி செய்பவர்க்குங்
காவடிகொண்டு வருமடியார்க்குங் கருணைவைத்து
மாவினையாவையுந் தீர்க்கவென்றேமலை மேவினின்றாய்
ஆவணிமாதம் வருவாய்தணிகையி லானந்தனே.

## புரட்டாசிமாதம்.

இருட்டானமேனி யசுரரைச்சாய்த்து யிமையவர்மேல், அருட்பார்வைநோக்கிய யாண்டவனேயடியேனவினை, வெருட்டாமல்காக்க வேண்டுகின்றேன்வெற்றி மாமயில்மேல், புரட்டாசிமாதம்வருவாய்தணிகையிற் புண்ணியனே.

ஐப்பிசிமாதம்.

கப்பியவூழ்வினைத் தீர்ப்பையென்றேநின் கமலமதில்
ஒப்புவித்தேன்மனத் துள்ளதெல்லாமிகு வுத்தமனே
தப்பிதமெத்தனைசெய்திருந்தாலுநின் தஞ்சமென்றேன்
ஐப்பிசிமாதம் வருவாய்தணிகையி லற்புதனே.

கார்த்திகைமாதம்.

தீர்த்தமனேகங்கள் மூழ்கிவந்தேன்வினை தீர்ந்திலை யால், மூர்த்திகண்மூவர் முதல்வனுக்கேமறை முடிவுரைத்து, கீர்த்திவகித்த சண்முகனேகதி வேறறியேன், கார்த்திகைமாதம் வருவாய்தணிகையிற் காவலனே.

மார்கழிமாதம்.

சீர்மலிந்தோங்கு முலகமெல்லாநின்சேவடிக்காய் கார்மலிந்தோங்கு வண்ணமன்றோவின்பக் கட்டுரை யால், ஏர்மலிந்தோங்கு கவிவாணரன்பர்சொல் லேற்றதுபோல், மார்கழிமாதம் வருவாய்தணிகையில் மன்னவனே,

தைமாதம்.

பொய்யானவாழ்க்கையை மெய்யாகநம்பியிப்பூதலத்தில், மையாடுகண்ணியர் மயலால்மெலிந்து மயங்குகின்றே, னையாவுனையன்றி திக்கறியேன்வினை யார்தவிர்ப்பார், தைமாந்தன்னில்வருவாய்தணிகைத்தயாபரனே.

மாசிமாதம்.

பூசித்திறைஞ்சு மடியாரிருதயம் பூரிக்கவன்பு
நேசித்துவந்து வினையுங்கவலையும் நீக்குகின்ற
தேசிகனேதெய்வ நாயகனேயுனைத் தேடுகின்றேன்
மாசிமாதத்தில் வருவாய்தணிகையில் மாமணியே.

பங்குனிமாதம்.

எங்கெங்குமோடியும் வினையகலாமலென்னிருதயத்தை
பங்கிட்டுநின்மலர் பதத்தில்வைத்தேனிது பத்தியமாம்
மங்களவள்ளியுந் தெய்வானையோடு மனமகிழ்ந்து
பங்குனிமாதம் வருவாய்தணிகையிற் பண்ணவனே.

மாதப்பதிகம் - முற்றியது.



# வாரப்பதிகம்.

## ஆதிவாரம்.

நீதிக்கிசைந்த தெய்வமென்றேயிந்த நீணிலத்தோர்
ஓதித்துதிக்கு முண்மையினுலெந்த னூழ்வினையைச்
சோதித்துநீக்கிச் சுகத்தைக்கொடுக்கநற்றேகையுடன்
ஆதித்தவாரம் வருவாய்தணிகையி லாண்டவனே.

## சோமவாரம்.

பொங்குகடல்சூழுலகமெல்லாமுன்னேப்போற்றுதலால்
அங்கந்தளர்ந்துமிக மெலிந்தடியேனுனக்கபயமென்றே
எங்குந்திரிந்து உழலாமலென்முறை யேற்றருளித் [ன்
திங்கட்கிழமை வருவாய்தணிகையிற் றேசிகனே.

## மங்களவாரம்.

ஒவ்வாதவாசைப்பெருவாரியில்நெஞ்சு வூஞ்சலிட்டால்
எவ்வாறுநல்ல நிலையினிற்பேனென்ன வூழ்வினையோ
இவ்வாறுயென்னை யயலாய்நினைக்கிலிங் காருதுணை
செவ்வாய்க்கிழமை வருவாய்தணிகையிற் சேவகனே.

## புதவாரம்.

இதமாகநெஞ்சுக் கெத்தனைச்சொன்னுலு மிவ்வுலகைச்
சதமாகவேநம்பி வாதிக்குதேயிந்த சஞ்சலத்தை
பதமாகநீக்கி நினையேதொழப்பச்சை மாமயில்மேல்
புதவாரந்தன்னில் வருவாய்தணிகையிற் புண்ணியனே,

குருவாரம்.

ஒருவருந்துணையிலை யில்லையென்றேயுந்தி னுயர்பதத்
மருவிப்பிடித்து மன்றுடுவேன்மனமேனிரங்காய் [தை
அருமாமறைக்கு ஆதியனேயெனை யாதரிக்கக்
குருவாரந்தன்னில் வருவாய்தணிகைக் கொற்றவனே.

சுக்கிரவாரம்.

கள்ளமனத்தின் கவலையுந்தேகக் கடுவினையும்
எள்ளத்தனையு மில்லாமற்கார்க்க யிதுசமயம்
வள்ளிப்புனத்தில் வெகுவித்தைசெய்த வாலிபன்நீ
வெள்ளிக்கிழமையில் வருவாய்தணிகையில்வேலவனே.

சனிவாரம்.

அனியாயநவக்கிரகச் சேட்டையினல்நொந் தடுக்கு லைந்தேன், முனியாமலென்முறைக் கேட்டருள்வாய் குருமூர்த்தியனே, இனியேதெமக்குக்குறையென்னவென்றிரு மாந்திருக்கச், சனிவாரந்தன்னில்வருவாய்தணிகையிற் சண்முகனே.



பன்னிருமாதமும் வாரங்களேழும் பகலிரவும்
உன்னிருதாட்டொழுங் கடமையுள்ளேனிது வுண்மை கண்டாய், என்னிருதயத்துக் கவலையுமூழு மெடுத்தெறிந்து, முன்னின்றுகார்க்குங் கடனெந்தகாலமு முன்னதுவே.

வாரப்பதிகம்-முற்றிற்று.

# தணிகாசலக்கண்ணிகள்.



செல்வமணியே சிவமணியேபல்லுயிரும்
சொல்லுமணியேயென் சுவாமிதணிகாசலனே. (1)

போற்றவறியேன் புகழறியேனென்குறையை
சாற்றவறியேனென் சுவாமிதணிகாசலனே. (2)

பக்தியறியேன் பணியறியேன்வேறுவித
சித்தியறியேனென் சுவாமிதணிகாசலனே. (3)

ஓதவறியேனொருநூலுங்கற்றறியேன்
சூதுமறியேனென் சுவாமிதணிகாசலனே. (4)

தருணமிதுவினையை தாளமுடியேனடியேன்
சரணஞ்சரணமையா சுவாமிதணிகாசலனே. (5)

கல்லோயிரும்போதான் கடுமனமோதொண்டர்களால்
சொல்லுமுறைக்கேளாதோ சுவாமிதணிசாசலனே. ()

நீதிக்கடவுளென்று நின்னடியைத்தேடிவந்தால்
சோதிக்கக்கூடாதென் சுவாமிதணிகாசலனே. (7)

பிறப்பதற்குமுன்னிழைத்த பாபமோதாய்வயற்றில்
உருப்பெடுத்தபின்னறியேனுண்மைதணிகாசலனே. ()

உன்னைச்சிலகா லுரைக்கமறந்ததினால்
முன்னைவினைக்காளானேன் மோனதணிகாசலனே. ()

சிறுமணவூரென்றளவிற் செகமறிந்ததல்லாது
ஒருமணமும்பெற்றேனோவுரைசெய்தணிகாசலனே. ()

தெய்வமேதுணை.

ஸ்ரீ

வங்காளம் தெண்டாயுதபாணிபேரில்

# ஆசிரியவிருத்தம்.



சிறுமணவூர் - முனிசாமி முதலியா ரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1908.





சிவமயம்.

வங்காளம்

# தெண்டாயுதபாணிபேரில்

## ஆசிரியவிருத்தம்.



மணிகொண்டவுயர்திவ்ய மணிமகுட முடியுமலை மகள்தன்முலையுண்டவாயு, மலர்வதனமோராறும் யில குகரமீராறும் வளர்கருணைபொழிவிழிகளு, மணிகொ ண்டமார்பிற்கடப்பமாலிகையுமே லானநீறணிமேனியு மரியசேவற்கொடியும் வடிவேலுமுன்னூலுமத்தமிசை வைத்ததெண்டும், பணிகொண்டபாதலம் பணிகின்ற வுபையபொற் பதமுமென்கண்காணவே, பச்சைமயில் மேல்வள்ளி தெய்வானையுடன்வந்து பக்ஷம்வைத்தருள் புரிகுவாய், திணிகொண்டபன்னிருபுயாசலக்கடவுளே தெண்டாயுதக்கர்த்தனே, செங்காவிவயல்சூழும்வங்காள நகர்மேவுஞ் சிங்காரமுருகேசனே. (க)

தொண்டருக்கருள்புரியு மாதியேநீதியே சோதி யேமயிலூர்தியே, சூரசம்மாரனே பார்வதிகுமாரனே

சுத்தநீபத்தரானே அண்டருக்கரியசேனுபதித்தலைவனே யலவன்றெழும்புலவனே, அம்மான் மகட்குமண வாள னேயேழைபங்காளனேவேளேகறைக், கண்டருக்கரிய வுப தேசமதுபேசுமென் கனிவாயனேதூயனே, கந்த னேயெந்தையே சுந்தரானந்தனே கங்கைதந்தருள்மைந் தனே, தெண்டனிட்டுனதுபத மலரையே நம்பினேன் தெண்டாயுதக்கர்த்தனே, செங்காவிவயல்சூழும் வங் காளநகர்மேவுஞ் சிங்காரமுருகேசனே. (உ

காதளவுமோடிவா தாடும்வேல்விழிமாதர் காத லாலுனதுபாத, கமலத்தையனுதினம் வணங்கிநெக்கு ருகாத கன்னெஞ்சமுடையபொல்லாப், பாதகனெனக் கான சினங்கொண்டுகொடியயெம பாசம்வீசிச்சமன் கார்ப், பகடேறிவந்தெனைத் தொடருமுனம்நீமயில் பரியேறிவந்தாளுவாய், ஆதரவெனக்குநீயே யல்லா மலிப்பெரிய வகிலத்தில்வேறுமுண்டோ வாறிருபுயத் தனே மீரிருசிரத்தவனே யன்றுதனேயிடுசுத்தனே, சித முழுமதியனைய பூவிருமுகத்தனே தெண்டாயுதக்கர்த் தனே, செங்காவிவயல்சூழும் வங்காளநகர்மேவுஞ் சிங் காரமுருகேசனே. (௩)

புத்தமுதமனையமொழி பேசிப்பசப்பிப் பொருப் புமுலையால்மயக்கிப், போர்வேலையொத்தயிருவிழியால்

மருட்டிடும் பொல்லாதமடமாதர்மேல், மெத்தமயல் கொண்டலையும் வீணாருறவதுதனை விலக்கிநின்னுமை மோது, மெய்யடியரொடுகூடி யுன்னடிக்குரியபணி விடைபுரியவருள் புரிகுவாய், சுத்தவனசத்தைநிகர் பன்னிருகராசிவ சுதாகராகருணாகரா, சுந்தராநவவீரர் தங்கட்குமுன்னவா தும்பிமுகவன்பின்னவா, சித்தமி சைகுடிகொண் டிலங்குகுலதெய்வமே தெண்டாயுதக் கர்த்தனே, செங்காவிவயல்சூழும் வங்காளநகர்மேவுஞ் சிங்காரமுருகேசனே. (௪)

கந்தமிகுநின்னுடைய கோயில்வலமாகவென்காலி ணைகள்சுத்திவரவுங், கமலமலரொத்தவுன் கழலிணைக் கெந்தனிரு கைகள்பணிவிடைசெய்யவு, முந்தனைநிதங் கண்டு கண்கள்தெரிசித்திடவு முன்புகழென்வாய்பா டவு, மோதரியவுனைநினைந் தாறெழுத்தோதிமன முலை யின்மெழுகாயுருகவுஞ், சந்ததமுமன்பாக நின்னையே யென்னுடைய தலைவணங்கவுநல்வரந், தந்தருளுவாய் திரு முகுந்தன்மருகாகுகா சரவணபவாசண்முகா, செந்தமிழ்க்கொண்டுநீ ரன்றுயர்தவிர்த்திடுந் தெண்டா யுதக்கர்த்தனே, செங்காவிவயல்சூழும் வங்காளநகர் மேவுஞ் சிங்காரமுருகேசனே. (௫)

கோலமிகுதென்றிருச் செந்தூர்திருப்பரங் குன்றமுயர் திருவாவினங், குடியேரகந்திருத் தணிகைபழமுதிர்சோலைகுன்றையம்பதிகொடுமளூர், தாலமிசைபுகழ்கொண்டிலங்குகதிர்காமவரை சாமிமலைமயிலம்வேளூர் சலசமலர்வாவிதிகழ் வள்ளியூரருணைநகர்சங்குபழனங்கடனிலே, ஓலமிடுபோரூர் முதற்குன்றுதோறுட் னுடனெண்ணிலாப்பதியெலா முற்றெங்கணுங்கிருபை வைத்து விளையாடிவருமுன் பெருமையென் புகலுவேன், சீலமிகுமிந்திரமிகு மாரிதன்மனோகரா தெண்டாயுதக் கர்த்தனே, செங்காவிவயல்சூழும் வங்காளநகர்மேவுஞ் சிங்காரமுருகேசனே. (சு)

காமொன்செய் நாவொன்றுபேயுடயிணைக் காதொன்றுகேட்கநெடிய, கண்ணொன்றுதனையாவ லுடனிருபுலால் கமழுமெய்யொன்றுசார, உமொன்றுடைமிருபுலால் ... கன்னெஞ்ச மொன்றையெண்ணக்களிப் புற்றேவிரும்புமடியே, னுள்ளன்பதொன்றுமே யின்றிச்செய்பூசையை யுகந்தெவ்விதங்கொள்ளுவாய், புரமொன்றிரண்டை யெரித்தெரித்தவருடைய புதல்வனேமுதல்வனேபோற், புள்ளியொன்றுயர்பச்சை மயிலொன்றிலேறிவரு புண்ணியா வண்ணமுருகும்நற், பரமொன்றிரண்டுமூன் றுடைய சரவணபவா தெண்டாயுதக் கர்த்தனே செங்காவிவயல்சூழும்வங்காளநகர்மேவுஞ்சிங்காரமுருகேசனே. (எ)

அருமையுடனேபெற்ற தாயும்பிதாவுநல் லாசா னுமிகவுமேன்மை, யானகுலதெய்வமும் பிறவிப்பெ ரும்பிணிக்கருமருந் துஞ்சுற்றமும் பெருமைமிகுகுறை வற்ற செல்வமும்துணையும்வெகுபிரியமாயிலகுநட்பும், பேசரியபரகதி கொடுத்தருள்செய்வள்ளலும் பிழைய னைத்தும்பொறுக்குந், தருமதுரையானவனும் நீயென் றுவந்துநின் சரணமேசரணடைந்தேன், நயவாகவே மனமிரங்கிநிர்மலமுத்திதந்தெனையுமடிமைகொள்வாய், திருமயிலேறிவருசேவகாதேவர்தொழு தெண்டாயுதக் கர்த்தனே, செங்காவிவயல்சூழும் வங்காளநகர்மேவுஞ் சிங்காரமுருகேசனே. (அ)

உந்தனைச்சந்தத நினைந்தனலின்மெழுகாக வுருகி யென்றுயரமெல்லா, மோதியுங்கேளாது போலப்பரா முகம தற்றருள்செயாதிருந்தா, லெந்தனைப்பந்தமத கற்றிப்புரந்திடுவ ரெவர்சொல்லுவாய்சிந்துரு, மிப்புவி யிலேயெனக் குனையன்றிவேறு துணை யில்லைநானென் செய்குவேன், பந்தனையகொங்கையுள சுந்தரமிகுங் குறப் பாவையைமணஞ்செய்தவா, பக்கபரிபாலனே வெற்றிமிகுசீலனே பண்ணவர்கள்சேனபதே சிந்தனை செய்வோர்க ளிதயந்தனிலிலங்கிவளர் தெண்டாயுதக்

கர்த்தனே, செங்காவிவயல்சூழும்வங்காள நகர்மேவுஞ்
சிங்காரமுருகேசனே. (கூ)

காரார்நெடுந்தடங் கடல்விடந்தனையுண்ட கயிலா
சவாசருக்குங், காமர்மலைமகளா யுதித்தமங்கைக்குநற்
கங்கைக்குமுரியசுதனே, வாரார்கனத்தன மாதுதெய்
வானைக்கும் வள்ளிக்குமணவாளனே, மலர்மேவுநான்
முகப் பிரமனுக்குமிாதி வரனுக்குமுயர்மைத்துன,
நாராயணற்கும்விண் ணவர்பிரானுக்குநறு நளினமாது
க்குமருகா, நாகமுகனுக்கிளைய தோகைமயில்வாகன
நவவீரர்முன்வந்தவா, சீரார்கடப்பமலர் மாலையணிமா
ர்பனேதெண்டாயுதக்கர்த்தனே, செங்காவிவயல்சூழும்
வங்காளநகர்மேவுஞ் சிங்காரமுருகேசனே. (கo)

வங்காளம் தேண்டாயுதபாணிபேரில் ஆசிரியவிருத்தம்
முற்றுப்பெற்றது.

---

ஆக புத்தகம் 39.

உ

# குன்றக்குடி சுப்பிரமணியர்
# ஆசிரியவிருத்தம்.



சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1908.

13

உ

கடவுள் துணை.

குன்றக்குடி

# சுப்பிரமணியர்பேரில்

## ஆசிரியவிருத்தம்.



பூரணிபராசத்தி தேவியம்பிகைதரும் புதல்வனே பொதிகைமலைவாழ், புகலரியகுருமுனிக்குத்தமிழுரைத்திடும் புலவனேபுலவர்கோவே, காரணிகறைகண் டருக்குவுபதேசமது கருதுமெஞ்ஞானகுருவே, கண்களீராருடைய கர்த்தனேசுத்தனேகரியவண்டார்கடப்பந், தாரணியுமார்பனே தமிழ்கொண்டுநக்கீரர் தன்றுயர்தவிர்த்தருள்செயுஞ், சத்திவடிவேல்கரத் தணியுமுருகையனே தனையர்தந்தருள்புரிகுவாய், கோரமிகுசூரசங்காரசிங்காரனே குறவள்ளிமணவாளனே, கொன்றைசூடியகோல மன்றுளாடுவர்பாலகுன்றைமாநகர்வேலனே.

கந்தாசிலம்பா கரங்களீராறுடைய காங்கையா கார்த்திகேயா, கருணைதருமுருகா குகாசண்முகாவீரா

காவேலணிந்தகுழகா, மந்தாகினிக்கினிய மைந்தாமயூ
ரகிரி வாசாவுயர்ந்ததோகை, மயிலேறுசேவகா வயில்
போலுமிருநயன மாதுதெய்வானைகணவா, செந்தாம
ரைத்தெரிவைகேள்வ னயனந்துதிசெய் திவ்யசரணர
விந்தா, சிலமெய்யன்பரனு கூலாயெனக்குநற் சிறுவர்
தந்தருள்புரிகுவாய், கொந்தார்கடப்பமலர் மாலையணி
மார்பனே குறவள்ளிமணவாளனே, கொன்றைசூடிய
கோல மன்றுளாடுவர்பால குன்றைமாநகர்வேலனே.

அமரர்பதித்தலைவ னனமுருகையனே ஆதிபன்
னிருகையனே, ஆறுமுகனேஉமா தேவிமகனேயர வ
ணைச்செல்வனார்மருகனே, சமராடியசூர பத்மன்முதல
சுரரைச் சங்காரமேசெய்தவா, தாரணிவணங்குபரி பூர
ணகாரண சரவணபவாகடம்பா, யெமராஜனுக்குமஞ்
சாமலெதிர்வார்த்தைக ளியம்பவாயதுதந்திடும், யெந்
தையேசந்ததிகள் தந்துனதுதாளிணைக் கேவல்கொண்
டருள்புரிகுவாய், குமரகுறிஞ்சிக்கு மிறைவனேகுற
வனேகுறவள்ளிமணவாளனே, கொன்றைசூடியகோல
மன்றுளாடுவர்பால குன்றைமாநகர்வேலனே. (௩)

பாகனையகிளிமொழித் தெய்வகுஞ்சரிமாது பாக
னேவாகனேபொற், பங்கயத்தயனைமுன் சிறைவைத்த

குமரகுரு பரனேபரஞ்சோதியே, நாகரிகமானநவ வீர
ர்க்குமுன்னவா நாகமுகவன்பின்னவா, நலமானவரு
ணகிரியானையாடக்கொண்டகுரு நாதனேவேதமுதலே
மாகனகவரைமுதற் குன்றுதோராடல்புரிமயில்வாகன
க்கடவுளே, வரதனேகுகனேசண் முகனேயெனக்கு
நன் மைந்தர்தந்தருள்புரிகுவாய், கோகனகமாதுமண
வாளன்மகிழ்மருகனேகுறவள்ளிமணவாளனே, கொன்
றைசூடியகோல மன்றுளாடுவர்பால குன்றைமாநகர்
வேலனே. (ச)

தஞ்சமெனவன்பினுடன் வந்தடையுமெய்யன்பர்
தமையாதரித்தருள்செயுஞ், சண்முகாசதகோடிசூரியப்
பிரகாசனே சந்திரவதனச்சுந்தரா, கஞ்சமலர்வாழுமுக
மொருநாலுமிருநாலுகண்ணுமுளவேதனுக்குங், காமர்
மிகுகாமன் றனக்குமுயர்மைத்துன கலசமுனிவன்கு
ம்பிடுஞ், செஞ்சரணபங்கேரு கர்த்தனேசுத்தனேசெல்
வச்சிகண்டிமலைவாழ், தேவாதிதேவனேயெந்தனுக்கறி
வுடையசிறுவர்தந்தருள்புரிகுவாய், குஞ்சரமுகற்கிளைய
பச்சைமயில்வாகனு குறவள்ளிமணவாளனே, கொன்
றைசூடியகோல மன்றுளாடுவர்பால குன்றைமாநகர்
வேலனே. (ரு)

விண்டலத்தினில்மேவு முப்பத்துமுக்கோடி விண்ணவருமுனிவோர்களும், வெள்ளைவாரணமீதிலேறு குலிசாயுதனும் விஞ்சையருமளகேசனு, மண்டலத்தவரும்நீள் பாதலத்தவருமுடிமன்னரும் விளங்கநன்னான்மறையுமறையோனுமம் புலியுமாதித்தனொடுமதனனும் பேய்முலைப்பா, லுண்டவச்சுதனுமலர் தூவித்தினம்பணியு முபையசரணாரவிந்தா, உன்னையேநம்பினேனெந்தனுக்குச்சிறுவருதவியேயருள்புரிகுவாய், கொண்டலொத்திடுகருங் குழலுநூலிடையுமுள குறவள்ளிமணவாளனே, கொன்றைசூடியகோல மன்றுளாடுவர்பால குன்றைமாநகர்வேலனே. சூ

முடியாறுடைக்குமர குருபராசதுர்வேத முதல்வனைகருணாநிதே, மும்மதம்பொழிவேழ முகவன்றனக்கிளைய முருகேசனேபரவைசூழ், படியார்வணங்குபொற் பாதாரவிந்தனே படவரவின் மேல்நடிக்கும், பச்சைமால்மருகனே நெக்குநெக்குருகியே பத்தியுடனேதுதிசெயும், அடியாருளத்தினிற் குடிகொண்டிருக்குமென தப்பனேவொப்பிலாத, அய்யனேதுய்யனே அறிவுடையசிறுவர்தந் தருள்புரிகுவாய்சேவலங், கொடியாகடப்பமலர் மாலையணிமார்பனே குறவள்ளிமண

வாளனே, கொன்றைசூடியகோல மன்றுளாடுவர்பா
ல குன்றைமாநகர்வேலனே. (எ)

சுந்தரநிறைந்திலகு கந்தவேளேவால சுப்பிரமணி
யக்கடவுளே- தூரியவடிவேயரிய பெரியபொருளேபர
ஞ்சோதியேகோதிலாத, மந்திரகிரிக்குசிகர் பன்னிரு
புயத்தனே மாயூரகிரிவாசனே- மாசிலாமணியேமிகுங்
கருணைவெள்ளமே வளர்சேவலங்கொடியனே- அந்தர
த்துறையா யிரங்கினன்மருகனே அகிலமுழுதுந்துதிக்
கும்- ஆதியேசோதியே அறிவுடையசிறுவர்தந் தருள்
புரிகுவாய்மஞ்செனுங் - கொந்தளகமும்பவள வாயும்
வேல்விழியுமுள குறவள்ளிமணவாளனே, கொன்றை
சூடியகோல மன்றுளாடுவர்பால குன்றைமாநகர்வேல
னே. அ

வம்பனுகியசூர பத்மனெடுசிங்கமுகன் வலியபுய
பானுகோபன், வஞ்சக்கிரவுஞ்சன்முத லாயசூரர்தமை
யெலாம் வடிவேலினல்மடித்து, உம்பரானவர்கள்சிறை
மீட்டுயிந்திரனுக் குயர்ந்தமணிமுடிதரித்து, வோதரிய
வானாடு குடியேற்றிவைத்தஜெயஉல்லாசமிகுவாசனே,
செம்பவளவாயனே அன்பர்கள்சகாயனே தேடுதற்கரி
யபொருளே, தேவாதிதேவனே யெந்தனுக்கறிவுடைய

சிறுவர்தந்தருள்புரிகுவாய், கும்பமுனிவர்க்கருள் புரிந்தகுமரேசனே குறவள்ளிமணவாளனே, கொன்றைசூடியகோல மன்றுளாடுவர்பால குன்றைமாநகர்வேலனே. ௬

திருவேயுயர்ந்தநவ ரசமிகுந்தேனே தெவிட்டாத தெள்ளமுதமே, தித்திக்குமதுரமுக் கனியேகரும்பே சிறந்தமுத்தேரத்நமே, அருவேவிளங்கிவள ரரியவுருவேநல் லகண்டவடி வேயப்பனே, ஆதிநடுமுடிவாகியெங்கும் நிறைசோதியே அன்பர்வேண்டியதளிக்குந், தருவேசிகண்டிமலை தனில்வீற்றிருக்கின்றசாமியேமுத்திவித்தே, சண்முகாசரவண பவாகடம்பாசிறுவர் தந்தருளுவாய்சிவாய, குருவேமயூரவா கனவகிலநாயகா குறவள்ளிமணவாளனே, கொன்றைசூடியகோல மன்றுளாடுவர்பால குன்றைமாநகர்வேலனே. ௧௦

குன்றக்குடிச் சுப்பிரமணிய சுவாமிபேரில்
ஆசிரியவிருத்தம்
முற்றிற்று.

---

இ ஃ தி
முத்துக்கருப்பஞ்செட்டியாரவர்களால் பாடியது.

உ

கடவுள் துணை.

திருத்தணிகை

செங்கல்வராய சுவாமிபேரில்

# தோத்திரம்.

இஃது.

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களால்

இயற்றப்பட்டு,




தமது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

முருகன் றுணை.

திருத்தணிகை

# செங்கல்வரராயசுவாமி

## தோத்திரம்.



சீர்கொண்ட மணிவேறு முடியாறு வதனமுஞ் செழித்தபன் னிருவிழிகளுந், திருநீற்று காப்பும் பளிச்சென்ற திலர்தமுஞ் செந்தமிழ் பிறந்தவாயும் மார்கொண்ட ஜீவமாணிக்கப் பதக்கமும் மலையொத்த புயமிராறும், மணிமந்த்ரவேலாயுதந்தொட்ட செங்கையும் மருவுமலர் மாலையழகும், ஏர்கொண்ட திருமாது மகளோடுதெய்வானை யிருபாற்றுலங்குமழகும், இணையற்ற தண்டைச் சிலம்பார்த்த பாதங்க ளேழையான் காணவருவாய், தார்கொண்ட கோதண்ட பாணிக்கு மருகனே, தரையெலாம் புகழ்தெய்வமே, தணிகின்ற குணராஜ பணிகின்றமனுநேசதணிகையங் கிரிவாசனே. (க)

புத்தியெள் ளளவேனு மில்லா தகந்தையால் பூர்வீக ஜென்மவினையால், பூததய வெண்ணுத கன்மனச் சேட்

டையால் பொல்லாத காலதிசையால், உத்திரவுபெற்ற நவ கிரகபே தத்தினு லுத்தமர்கள் சாபத்தினுல், உன் னடித் தஞ்சமென் றடையாமலுலகெலா மோடித் திரி ந்தபிழையால்- இத்தனைக் கடூரவிர ணங்களுக் காளாக யென்னபா வஞ்செய்தனே- இனிவேறு துணையாரு மிலைகாரு மென்றெனது விதயத்தை பலிகொடுத்தேன் தத்திமி யெனப்பரதசிர்த்தமிடு மஞ்ஞைமேற் றரிசனந் தந்தருளுவாய்- தணிகின்ற குணராஜ பணிகின்ற மனு நேச தணிகையங் கிரிவாசனே. (௨)

நாசிமேற் றெண்டையில் நாக்கடியிலுந்தியில் நடைகா லிடத்திடையினில்- நடுமுதுகி னிற்றேளில் நயனமேன் னெற்றியில் நரைநீர் சுரந்தபுண்ணுய்ப்- பே சவு மிருக்கவும் நடக்கவும் வசப்படா பிணிகொண்ட பேருமுளரோ- பூதலந் தனிற்கொடிய பாவியா னுனு முன் பொன்னடிக் கபயமென்றேன்- மாசிலா நின்க மல வழகையும்புகழையும் மைந்தனுற்சொல்லவசமோ மாயவன் மருகனே முருகனே ஷண்முகா மாதவர் தொழுந்தெய்வமே- தேசிகனெனும்பெரியபேர்பெற்ற கடவுளே திக்குவே றில்லைகண்டாய்- தணிகின்ற குண ராஜபணிகின்ற மனுநேசதணிகையங்கிரிவாசனே. (௩)

அருளில்லை யேதொழுந் தெருளில்லை யேபுல
னகந்தைக ளொடுங்கவில்லையே, அடக்கமில்லையேமனமொ
டுக்கமில்லையேநல்லஅறிவென்பதணுவுமில்லையேகுருவில்லை
யேதர்மகுணமில்லையேவரங்கொண்டுகரையேறவென்று
ல், குறைவற்றசெல்வமும் மில்லையேநானெந்த குறிகொ
ண்டு நெறிநிற்பனோ, வெறிகொண்ட பித்தர்போல்நித்த
முன்னைத்தொழும்விரகமொன் றேனுமருள்வாய், வேத
னொடுமாதவன் பூதகண நாதர்முதல்விண்ணவர்தொழுந்
தலைவனே, தருவரசனீன்றபரு வக்குமரிகணவனேதண்
டா யுதக்கடவுளே, தணிகின்ற குணராஜ பணிகின்ற
மனுநேச தணிகையங் கிரிவாசனே. (௪)

பாருக்குள் யானுமோ ருருகொண்டு பூமிக்குள்
பாரமா யிரவுபகலும், பஞ்சுக்கு நிகரான பாடுபட்டே
னெஞ்சு பச்சைபுண் ணாகுதையோ, பேருக்குமனித
னாய்த் தோற்றமேயல்லாது பிணியற்ற பாடில்லையே-
பகைவனே யானலு மித்தகைய தருணத்தில் பார்க்க
வும் மனதுவருமோ, ஊருக்கு ளென்குறைக ளாருக்
குச் சொல்லுவே னுன்மன மிரங்கவில்லையோ, ஒருகோ
டி யல்லவே யெண்ணற்ற கோடிபேர்க் குதவிசெய் தக்
கடவுள்நீ, தாருக்கு ளுன்னையன்றி யினிவேறு தெய்வமி

மூல் தஞ்சமென் னெஞ்சில்நினையேன், தணிகின்ற குண ராஜ பணிகின்றமனுநேசதணிகையங் கிரிவாசனே.(௫)

மதிகொடு நினைத்தொழு மயக்கத்தை யேகொடு மாசற்ற நன்னெறிகொடு, மந்திரங் கொடுநல்ல யெந்திரங் கொடுவுலக மாய்கையை விலக்கிக்கொடு, துதிகொடு நின்னடியர் துணைகொடு வூழ்வினைத் துயரெலாந் தீர்த்துக்கொடு, துரைகொடு பேரின்ப கரைகொடு வடிக்கடித் தூண்டாத ஞானங்கொடு, நிதிகொடு நிலைகொடு நினைக்கின்ற போதெலாம் நினதுமலர் காணக்கொடு நிந்தையு மகந்தையும் லோபமும் மோகமும் நீக்கிநல் வாக்கைக்கொடு, ததியென்ற கோடான கோடியடியாரெலாந் தடுத்தாண்டு கொண்டையன்றோ, தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. (௬)

என்றிந்த மேகவிர ணச்சிறையை மீட்டெனதுயிதயத்தை மலரவைப்பாய், நின்றுநின்னடியார்கள் போலநிர்ச் சிந்தையா யென்னையு மிருக்கவைப்பாய் நன்றியறி யாக்கொடிய பாவியானாலுமுன் னாமம் மறந்ததுண்டோ, நாலிரண்டாண்டாக பட்டதுயர் போதுமென் றுதனே கருணைபுரிவாய், கன்றான துத்தாயின்

முகனேக்கி யாவெனக் கத்துமுறை போலவிதமுன், காலுக்கு அபயமென் றடிமையிரவும்பகற் கதறுமுறை கேட்கவில்லையோ, தன்னிகரிலாதவெம் பிரனே வீரனே தனிவே லெடுத்தகரனே, தணிகின்ற குணராஜ பணி கின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. (எ)

வாதமெண் பதுசீத ஜன்னிபதின் மூன்றுஜுர வகையாறு பத்துநாலும், வட்டகுன் மஞ்சூலை பதினெ ட்டு குட்டமொடு வருபித்த மொருநாற்பதும், மாத ராற் றுடர்மேக மிருபத்தி யொன்றுகா மாலைசோ கைப்பாண்டுடன், மாசிலா கண்ணேய்கள் தொண்ணூ ற்றி யாறந்த மொத்தசேத் துமரோகமுந், தீதான கிரா ணிநவ மூலவை சூரிவகை தீண்டுபல பூச்சிவிடமும் தினகரன் சுடர்பட்டபனிபோல நின்னுடைய திருவரு ட் கெதிர்நிற்குமோ, தாதா வெனக்குநீ தந்தைநீ தா யுநீ தமியனென் குலதெய்வநீ, தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. (அ)

ஒருதரைவு மறியாம லலைகின்ற னேயென்ன லூழென் றெடுத்துரைப்பேன், உனதுகம லப்பாத மிவ் வாறு துதியென் றுரைப்பாரு மொருவரில்லையே, பரனு லகு விண்டுலகு பிரம்மனுல கும்மற்ற பாதலம் பூதல

மெலாம், பக்திசெய் தல்லவோ வினதுதிரு வருளுக்கு பாத்ரராய்க் கீர்த்திபெற்றுர், சிறுமையே னறிவிலே னொருநெறியுமற்றநான் சீர்படுவதெந்தநாளோ, சித்தர் வித் யா தரர் கருடகாந் தருவாதி சேவிதா சிவதேசிகா தருணத்தில் வந்துதவி செய்தகுல ரக்ஷகா தற்போது மெனேயாளுவாய், தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. (௯)

குஞ்சரச் கோடனைய குறியிட்ட முலேயிலே கூரிட்ட வேல்விழியிலே, குதலேவாய் மொழியிளஞ் சொல்லியே பல்லிலே குலவுகந் தப்பொடியிலே, மஞ்ஞைநிகர் நடையிலே யிடையிலேதுடையிலே மலரிட்டசிகை முடியிலே, மணியிலே யணியிலேதுணியிலே நடுநெற்றி மையிட்ட சிறுபொட்டிலே, பஞ்சிளங் காலிலே மேனிலே யிளேஞரைப் பார்த்துவீ சும்வலேயிலே, பட்டுகெட்டழியாம னின்னடிய ரடிமையாம் பக்குவ மெனக்கருளுவாய், தஞ்சமென் றடைகின்ற தொண்டருக் குடனுதவு தந்தையேகந்தவேளே, தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேசதணிகையங் கிரிவாசனே. (௧0)

ஆடித் திரிந்தவென் னிளமையில் வலியவந் தறிவைத் திருத்தினதுவும், ஆபத்து காலங்க டோறுமக்

க்ணமோடி வந்தா தரித்தவிதமும், பீடித்த சமுசார
பேய்கொண்ட போதுபிணி வருதென்று முன்சொன்
னதும், பொருளற்றவேழைக்கு யில்லமுஞ் செல்வமும்
போதுமட் டீந்தந்ததும், வாடியூழ் வினையினைந் தழு
மெனைப் பொருவென்று வந்துவந் துரைசெய்ததும்,
வகிலத்தி லிவ்வுதவி யார்புரிவர் நின்கருணை வாயினுற்
சொல்லவசமோ, தேடரியவென்குலத் தெய்வமேயடி
யேனைதற்போ திலுங்கார்த்தருள், தணிகின்றகுணராஜ
பணிகின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. (கக)

தோத்திரம்

முற்றிற்று.



ஆக புத்தகம் 41.

உ

# பழனியாண்டவர் பதிகம்.

இஃது, பழனிஸ்தலத்தில் வசிக்கும்
வே. முத்தனுசாரியரால் இயற்றியது.



சிறுமணவூர் - முனிசாமி முதலியாரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
1908.

உ

கடவுள் துணை.

# பழனியாண்டவர்பதிகம்.



## இரட்டையாசிரியவிருத்தம்.

கனகமலி நவரத்ன மகுடமொளி சென்னியும்
காந்திமதி வதன மழகுங்
கருணையுடனன்பருக் கருள்புரியநோக்குமிரு
கஞ்சமலர் விழியினழகும்
வினவியவரன்றனக்குப் பிரணவப்பொருள்
விரித்தகனி வாயினழகும்
மின்னுபொற்குவளை ருத்ராக்ஷமணிமாலிகை
மிலைந்ததிட மார்பினழகும்
மனவலிமையுற்ற சூரன்றனை வதைத்தகூர்
வடிவேற் கரத்தினழகும்
மங்கைகுற வள்ளிகுஞ் சரியிருமருங்கினும்
மருவு சிங்காரவழகுந்
தினகரன் கிரணபத சேவையுங்கண்டுநான்
றெரிசிக்க வருள்புரிகுவாய்
செம்பதும ரரியய ரும்பர்பர வியதுய்ய
தென்பழனி முருகையனே. (க)

என்னுளத் தினிலுற்ற சஞ்சல மனைத்தையு
மெடுத்தெடுத்துச் சொல்லியும்

எள்ளளவு கருணையில்லாமற் பராக்கா
யிருப்பதேன் மனதுகல்லோ
அன்னையானவள்மதலை யழுதிடிற்பாற்கொடுத்
தாதரித் திடுவ ளல்லால்
யாருக்குவந்ததோ வடுகமாங்காயென
வசட்டையுட் கொள்ளுவாளோ
பன்னிருவிலோசனந் தன்னிலொருகடைவிழிப்
பார்வையென் மீதுவைத்தாற்
பானுவைக்கண்டபனி போலவென்கலிபிணி
பறந்திடத் தடையுமுளதோ
தென்னவன் கூன்சுர வியாதியை விலக்கிய
சிலாக்கியபண்டித வேலனே
செம்பதும ரரியய ரும்பர்பர வியதுய்ய
தென்பழனி முருகையனே. (உ)

ஐயையோ வெண்பத்து நான்குலட்சம்பேத
மானஜென் மத்தினுக்குள்
அரிதான மானிடப் பிறவியா யுற்பத்தி
யானதற் கடையாளமாய்த்
துய்யநின் பாதார விந்தகமலங்களைத்
துதிசெய நினைந்தபோதே
சும்மாவிராமலே கனமானுபவமது
தொடர்ந்துசம் சாரமான
பொய்யுலக வாழ்க்கையை விரும்புதேயல்லாது
பூஜிக்கவிடமில்லையே

புத்தியைமயக்குமச் சித்தினை யகற்றியுன்
　　பொன்னடிக் கென்னையாளாய்ச்
செய்பவித்து நற்றருண மையனே மெய்யனே
　　செங்கைவடிவேற்கையனே
செம்பதும ரரியய ரும்பர்பர வியதய்ய
　　தென்பழனி முருகையனே. (ரு)

வெறியுடைய பித்தனைப் போலெனைக்கைதவற
　　விட்டுவிடுவது ஞாயமோ
வேலவாவென்றொருக் காற்சொனலவர்கள்பவ
　　வினையெலா நீங்கிவிடுமே
மறிஞர்களுனைச்சற்று மனதினில்நினைந்திடின்
　　மாறுமே யவர்கள் கலியும்
மடமையுடையோருனைத் துதிசெயின்மெஞ்ஞான
　　மார்க்கமது சித்திக்குமே
நெறியான தெய்வமது நீயலாற் புவியிலொரு
　　நிஜதெய்வம் வேறுமுளதோ
நீயெனக் காதரவு நானுனக்கடிமையென
　　நித்தியம் பத்தியுடனே
சிறியவன் செய்தவிண் ணப்பமெல்லாமுனது
　　திருவுள மறிந்திடாதோ
செம்பதும ரரியயரும்பர்பர வியதய்ய
　　தென்பழனி முருகையனே. (சா)

அன் றுமுருகாவென் றழைத்தவோர் பெண்முன்வந்
　　தருள்புரிந் தாளவில்லையோ

அருணகிரிநாவினி லிருந்துவிளையாடியவ
 னூற்கவிதை பெறவில்லையோ
மன்றிலாடிய சங்கரர்க்கு ப்ரணவமந்த்ர
 மகிமையை யுரைக்கவில்லையோ
வானவர்கள் கோமான் றனக்குநவ மணிகொண்ட
 மகுடந் தரிக்கவில்லையோ
என்றுமுனை நம்பிய வகத்யர்க்கு நன்முத்தி
 யீந்து ரக்ஷிக்கவில்லையோ
என்பங்கினுஞ்சற் றிருந்துபத சேவைதந்
 தீடேற்றுவது பாரமோ
தென்றலின் றேர்கொண்ட காமனை தமைத்தனை
 திருநடன மயில்வாகனு
செம்பதும ரரியய ரும்பர்ப்ர வியதுய்ய
 தென்பழனி முருகையனே. (ரு)

மாடமாளிகையில்லை கூடகோபுரமில்லை
 மண்டப விமானமில்லை
மனையாட்டியில்லை மைந்தர்களில்லை கஞ்சிக்கு
 வகையில்லை நகையுமில்லை
ஆடுமாடில்லைபண மில்லையுத்யோகமில்லை
 யரிதான வித்தையில்லை
அங்கத்தைமூடுதற் கானதுகிலில்லைநமை
 யாதரிப்பவர்களில்லை
பாடுபடவுங் கையிலாகவில்லை யென்றுபற்
 பலவாகவே மயங்கும்

பாழ்மனதை யொருமைப் படுத்தினின் செம்பொற்
பதம்பணிய வருள்செய்குவாய்
தேடரிய கற்பகத் தேவதரு வேஞான
தேவா மகானுபாவா
செம்பதும ரரியய ரும்பர்பர வியதுய்ய
தென்பழனி முருகையனே. (௬)

வட்டமிட்டுப்பரந் தண்ணார்ந்தெழுந் துகரி
மத்தகத்தோ டெதிர்த்து
மல்லிகை மலர்ச்செண்டுடன் சண்டைசெய்துமதன்
மகுடத்தையுங் கடிந்து
பட்டிகைக் குள்ளடங்காமற் றிரண்டுகும்
பத்தைச்சினந்து விம்மிப்
பம்பரத்தைப்போ லுருக்கொண்டுதேமற்
படர்ந்தமுலை மாதர்வலையிற்
கட்டுண்ண விட்டுமை யற்கடற்குள்ளே
கலந்துபலபேர் நகைக்குங்
காரணம்வராமற் கருத்தைத்திரித்தியே
கார்ப்பதுன் கடமைகண்டாய்
சிட்டர்துதிபாதனே தட்டர்குலகாதனே
தெய்வகுஞ்சரி நாதனே
செம்பதும ரரியய ரும்பர்பர வியதுய்ய
தென்பழனி முருகையனே. (௭)

ஓலமிட்டலறிய கஜேந்த்ரனிடரைத்தவிர்த்
துய்த்திடும் வழிகாட்டியும்

உக்ரமுடனே தூணுதைத்த விரணியனையன்
    றுடலைப் பிளந்தெறிந்துங்
கோலபாஞ்சாலிக்கு வஸ்திராபரணங்
    கொடுத்துமனை சீதைதன்னைக்
கொடுபோனராவணன்றச்சிரமறுத்துமிகு
    கோலா கலங்கள்செய்த
நீலநிறவர்ணனது மருகனே மருவுலவு
    நீபமலர் மாலைமார்பா
நின்சமுகமதனில்யான் றஞ்சமெனவந்துமுன்
    னெஞ்சமதிரங்கவில்லையோ
சீலமுடனேயுனது தரிசனந்தருகவே
    சித்ரமயிலேறி வருவாய்
செம்பதும ரரியய ரும்பர்பர வியதுய்ய
    தென்பழனி முருகையனே. (அ)

அண்டவாதஞ்சூலை மேகமெரிகுன்மநோ
    யரையாப்புவெள்ளை தலைநோய்
அதிசாரமூலமுளை துடைவாழை வெட்டைபாண்
    டரிசிரங் கிரும வீழை
மண்டையில் வரக்ஷிதிமிர் வாதஞ் சிலேட்டும
    மகோதரங் குஷ்ட ரோகம்
மந்தாரகாசம் பவுத்திரங் காந்தல்
    காமாலை விப்பிரதி வாய்வு
கண்டமதில் மாலைநீரழி கன்னப்புத்து
    கபரோகம் ராஜபிளவை

கடினசூனியபில்லி வஞ்சனைகளணுகாது
காத்துரட்சித் தருளுவாய்
செண்டுமுலை மாதுகுற வள்ளிமண மாளனே
திடமருவு திண்டோளனே
செம்பதும ரரியய ரும்பர்பர வியதுய்ய
தென்பழனி முருகையனே. (௯)

அருமறையின் முடிவில்நின் றுடுபொற்பாதனே
யன்பருக் கருள் போதனே
அம்பிகைசுதாகரா வள்ளியின்மனோகரா
யானைமுகனார் சோதரா
மரகதமயூரமிசை வருதணிகைவேலனே
மங்கைகுஞ்சரி லோலனே
மதுரகவி முத்தயன் றமிழாம்புனைந்தபா
மாலைசூடிய பிரானே
கரகமுனிவர்க்கன்று பிரணவசொரூபங்
கடாக்ஷித்த கருணாகரா
கருதியபடிக்குநல் வரமதுகொடுத்தெனைக்
கைதூக்கி யாளல்வேண்டுந்
திரிபுவனகாரணா பரமகுணபூரணா
தேவர்சிறை மீட்டகோவே
செம்பதும ரரியய ரும்பர்பர வியதுய்ய
தென்பழனி முருகையனே. (௧௦)

பழனியாண்டவர் பதிகம்-முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

# திருப்போரூர்ச்
# சுப்பிரமண்ணியர்
# நவரத்திநம்.

இஃது.

சிவகுருதாசனென்னுங் காரணப்பெயரெய்திய
தோழுவூர் - வேங்கடாசல ஆசாரியாரவர்களால்
இயற்றப்பட்டு,




சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது
சென்னை - சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1908.

உ

கணபதி துணை.

# திருப்போரூர்ச் சுப்பிரமணியர் நவரத்திநம்.

காப்பு - நேரிசைவெண்பா.

பூவுலகம் போற்றுதிருப் போரூர்க் குகன்பதத்தின்
மேவுநவ ரத்நவிருத் தஞ்சூட்டத்-தாவும்
வளைக்கரமா தங்கத்தே வாழ்பரமனீன்ற
துளைக்கரமா தங்கந் துணை.

## இரட்டையாசிரியவிருத்தம்.

திருமருவுபஞ்சபூ தங்களென்றுந்திகழ் திவாகரஸ்வரூப மென்றுஞ் - செப்பரிய மூலமுத லாறினு நிறைந்தொளி சிறந் திலகுதீபமென்றுஞ் - செயநாதபிந்தமுற கருவிகரணாதியுஞ் சித்தமொடுபுத்தியென்றுஞ்-செகமிசைவிளங்குஞ் சராசரமனைத்தினுட் டிகழ்சிவபரமதென்றுஞ்- சுருதியென்றுஞ்சுருதிமுடிவிற்குமெட்டாத சோதியாம்வெளியதென்றுஞ் - சூக்மாதி சூக்கும வதீதபேரின்பச் சுகோதயவிலாசமென்றுஞ் - சொற்பெறு சிருட்டிதிதி சங்காரமெனுமூன்று தொழிலினுக்குடையதென்றுந் - தொண்டர்கணி த்தபடி வந்தினி தளிக்குந்துலங்குமருணிதியமென்றம் - பொருவிலாச்சரிதைமுத லன்கினுமியைந் தருள் பொருந்துசின்மயமதென்றும் - புவிமுழுதுமெள்ளிற்கு ளெண்ணெயென நிறைகின்ற பூரணசுயம்ப்ரகாசப் - பொருளென்றுமிவ்வகைப் பலபலவிதங்களாப் புராணகாவியமெவைகளும்- புகல்கின்றதாதலா லெவ்வணமுனைத்தேர்ந்து போற்றி

த்துதிப்பததனுற்- றருவினிழலுறைபுரிதனரிபிரமணிமயவர்கட
வமுனிவரனேவோர்களுஞ் - சந்ததமுநின்றுதொழுதேத்து
மின்சைதன்ய தரிசனமெனக்களித்துச் - சதியானவென்றன்
வினைப்பிணி யகற்றிநின் ருளிணை துதிக்கவருள்வாய் - சம
ரசசிவாநந்த குமரகுருவாய்வந்த சமரபுரிவாழ் கந்தனே (க)

தொலையாதஜநநக் கருப்பைக்குள் வீழ்சிறியசுக்கிலசுரோ
ணிதத்தாற்- சூக்மவுருவாய்ப்பண்டுவினையினதுதொடர்பினுற்
றொல்லுலகில்வந்துதித்துத் - தூண்போல்வளர்ந்துபின்னுமம
வ்வழிக்குரிய துர்க்குணச் செய்கைகளினுந்- தொந்தமிகுபந்த
பா சாடவியினும்பரவு துன்பவெள்ளக்கடலினும்-கிலையாதவை
ம்புலக் கொலைவேடர்கையினுநெருங்கு கா மாதிகளினும்-நீங்கரி
யசமுசாரபடுகுழியினும்வஞ்ச நெஞ்சமட மாதர்வீசு- கிறைவிழி
ப்பாசக் கயிற்றினுங்குடியாக நின்றுநாடொறும்வருத்து- கிகரி
லாவறுமைப் பெருஞ்சேற்றினும்புன்மை நீடுமஞ்ஞானமென்
னுங்- குலையாதவல்லிருளினுங் கனன்றெழுமொரு கொடும்பசி
யெனுந்தழலினும்- கூறரியபக்கவாதச்சூலைமேகங்குணங்கெட்
டமூலவாயு-கொதிகொண்டபித்தசுர வேதைதலைவலிகால்கள்
குடைதலொடுபென்னோய்முதற்-குறியற்றவுட்டணம் யாவையு
மியைந்துளங் குன்றிமிக மெலிவனதனுற்- றலையாலு மலராலு
நின்னடிபணிந்துமர்ச் சனைசெய்தும் வாழ்கிலேன்யான்- றஞ்ச
மினியாகிலு மிரக்கம்வைத்தென்குறைகள் சகலமுமொழித்த
ழிவிலாச் - சச்சிதாநந்தஞானதீரவின்பமது தந்தினிது காத்த
ருள்செய்வாய்- சமரசசிவாநந்தகுமரகுருவாய்வந்தசமரபுரிவாழ்
கந்தனே. (உ)

அரவணைச்செல்வனுெடு பிரமனிருவருமுன மளப்பருஞ்
சோதிமயமா-வண்டபகிரண்டப்ரம்மாண்ட மூடுருவியவகண்ட

பூரணவிலாச-அருணமலைமுடிதனை வணக்கியொருபிரணவ வ
ரும்பொருளுணர்த்தியபிரா- னன்றியும்பண்டுகெடலுண்டமாத
வமுநி யகத்தியற்கன்புகூர்ந்து- வரமிகுங்கலைஞானவிதிமுறை
யடங்கலும் வழக்கறவழங்கியபிரான்-வலிமையினெதிர்த்தவெ
ஞ்சூர்க்குலமனைத்தையும் வதைத்துளநடுங்கிவாடும்- வானவர்க
டஞ்சிறையகற்றியபிரான்றெய்வ வாரணமணந்தருள்பிரான்-ம
றைநெறிசிறந்த நாரதமுநிமகத்தினில் வருந்தகரிலேறியபிரா
ன்-பரவுதொண்டர்களிதய கமலாசனத்திற் பரிந்துவிளையாடிய
பிரான் -பாரகாவியமுழுது மாருததுத்வளமை பகரெம்பிரா
னென்றன்னைப்-பலநாளுநம்பிப் பணிந்துமென்மீதிலருள் பா
லியாதென்னேசொலாய் - பண்டொருமடந்தைநின் றிருநாம
மோதிநற் பயனடைந்திடவில்லையோ - சரவணபவா கடம்பா
விஜயதேசிகா சண்முககுகா விசாகா - தருணமயின்மிசைநட
மிடுகுருபராகுறத் தையன்மகிழ்கார்த்திகேயா சர்வஜீவாத்மபூ
சிதரக்ஷகாநினது தயைபுரிந்தாள்வதென்றோ - சமரசசிவா
நந்த குமரகுருவாய்வந்த சமரபுரிவாழ்கந்தனே. (௩)

கதியென்றுசித்தபரி சுத்தத்திடங்கொண்டு காலைகருமமு
முடித்துக்- கருதுதிருநீறுகந் தாட்சதையுமிட்டுளக் கவலையெ
ள்ளவுமின்றி- காரணமிகுஞ்சடாட்சரமந்த்ரதியானங் கருத்திற்
செபித்தவர்கடாங் - கன்மக்கடற்கொடிய ஜன்மக்கருக்குழிக
டந்துகலியிருளகன்று- புதியவினையொடு பழையவினையுந்தொ
லைந்துபெண் பொன்புவிவிருப்பமற்றுப்- புகலரியதிமிரபல மா
யையை யொழிந்துநின் பொன்னடிக்காளதாகிப்-புதனுதிகுரு
ராகு சனியெனும்வக்கிரக போராட்டம்யாதுமின்றிப் - பொல்
லாப்பகட்டினில் விரைந்துவருகூற்றினர் புரியும்வெஞ்சமரதி
ன்றி - விதியினதுசெயலின்றி நன்மைதீமையுமின்றி வேறு
மொருசெயலுமின்றி - மெலிவின்றியனுதிந மடங்காதவாநந்த

வெள்ளத்தழுந்திவீறும் - விரிமனமடக்கிய துதமதுகைவயம்பெற்றுமேவுமெய்யடியவரொடும் - வெற்றிப்பெருந்துவசநாட்டிநான்காம்பதவி வீட்டிற்கியைந்திடுவோர்காண்- ததியென்றடுத்தவர் தமக்கஞ்சலென்றருடருங்கற்பகத்தாருவே-சாற்றுமுருகாற்றுப்படைக்குருகிநக்கீரர் தனையாண்டளித்தகோவே-தலையாறிலங்குகரதலமாறிரண்டொடு தழைத்தபவளப்பொருப்பே - சமரசசிவாநந்த குமரகுருவாய்வந்த சமரபுரிவாழ்கந்தனே. (சு)

பண்டுதெரியாதுசெய் குற்றமிவ்வளவென்று பகரொணாததனையெண்ணிப் - பார்க்கிலிவ்வுகமுடிவு மளவும்யான்ஜநநமது பண்ணினும் பதிறுயிரம் - பங்கிலொருபங்குந்தொலைந்திடுவதரிதுள்ள பரிசிதுவெனத்தெரிந்தே - பலநாளுமதனையே பாராட்டிடாதென்பவர்தீர வஞ்சலென்று - மண்டுபுவியின்கணுனையன்றிவேறிங்கெனை வருத்தும்வெந்துயரிவையெலா- மாற்றுதற்கியாவருள ரென்றுநின்மலரடியை வாழ்த்தி வந்தனைசெய்யவும் - வருமிதனிலும்பதின்மடங்கதிகதுக்கங்கள் வந்தெய்திலுமுன்றன்- மருவுதிருநாமமு மெடுத்தெனதுநாவால் வழுத்திடவுமொருகாலமுந்- தொண்டுபுரிசெய்கையிற் சோர்வுறுத்தன்மையுஞ்சுருகிமுறைதவறுமலித்- தொல்புவியினல்வழி நடந்திடவுமதியினர் தொடர்பினையகன்றிடவுமே - சுத்தப்படும்படி திருத்தியின்னன்பர்க டொழும்பனும்படி செய்குவாய் - சாதமதரதிபரவு வரதகுறமகண்மருவுதுணைவலயமிலகுபுயமுந்-தண்டளவணிந்தவனதுந்திவழிவந்தவனி தந்தபிரமன்றனைமுனந்-தங்குப்ரணவந்தனதரும் பொருள்சொலென்றெதிர் தகைந்தொருசிரங்குழம்பத்- தாக்கியசெழுங்கரமு நோக்கரியவிருபதசரோருகமுமேவுமுதலே - சமரசசிவாநந்த குமரகுருவாய்வந்த சமரபுரிவாழ்கந்தனே. (௭)

உலகேழுமொருகுடையி லாளுமாபலிதனக் கொத்தவர்களாயினுமிகுந் - தோங்குதனதான்யசம் பத்திற்குபேரனிலுயர்ந்தவர்களாயினுநிறைந் - தொளிர்மணித்தண்டிகையின் மீதுரதிபதியென வுலாவிவாழ்ந்திடுவரேனும் - உற்றகுலமும்புஜ பலத்தில்வீமனுமெச்சு மொருசௌர்யவந்தரெனினும் - பலதானதருமங்களிற்சிறந்தவரெனப் பகரும்வள்ளல்கட்குமேற் - பட்டவர்களாயினு மருங்கலைச்சேடனிற் பதின்மடங்கதிகமாகப் - பாரகாவியமெலாங் கற்றவர்களெனினுமறை பயிலுநான்முகனையொக்கும் - பண்டிதர்களாயினு மகத்தில்வாசவனைப் பழித்தவர்களெனினுமைந்து - புலனுதியுங்கெடக் கோசிகனெனத்தவம் புரியினுங்கதிபெறுவரோ - போற்றிநான்மறைமுடிவினனுதிர நடிக்குநின் புதுமுளரியம்பதத்தைப் - புநிதவுளமலர்கொண்டருச்சனைசெய்தன்பினொடு பூசித்துனைத்துதிக்கிற் - புகலருமிகத்தூர் பரத்துநித்யானந்த போகத்தையடைவர்கண்டாய் - தலமாறினுஞ்சென்று விளையாடுமதுலசிவ சமயசாட்சாத்காரமே - தடமருவுதிரைகடன் முகட்டுதயமாய் வருசகஸ்ரசூரியஜோதியே - தனிமுதலுமாய்முடிவுமாகிய சுயம்பேதமைத்த பேரின்பவாழ்வே - சமரசசிவாநந்த குமரகுருவாய்வந்த சமரபுரிவாழ்கந்தனே.

கொஞ்சமாயினுநல்வழிச்செலாநெஞ்சக் குரங்கைநானென்செய்குவேன் - கோதற்றநின்னடிய ரோடுறவுசெய்யாது குலவுநின்மாட்சிமை நினைக் - கொண்டாடியநுதினமு மிருவிழிப்புனலுகக் குறைகழற்றிணைபற்றியே - கோவென்றழாதுநற்சைதந்யமாநினைக் கூடிக்கலந்திடாது - நஞ்சனையகயவர்களிணைக்கமுமேலோபர்தமை நாடிப்புகழ்ந்திடுவது - நண்ணுமதனூற்சிறிது பரிசும்பெருதரியாவிவுற்றலைந்திடுவது - நமனென்றெருதுமடமாதரேகதியென்று நம்பிமயல்கொண்டுருகியெந் - நாளுமறிவித்திருந் துழல்வதன்றியுமினிய ஞானநெறியறிவதுமிலை

வஞ்சகமறப்பலநயத்தொடுபெயத்திறும் வகுக்கினுங்கேளாமலே- மாறுதுபொறியைந் தினுஞ்சென்றலைந்திடு மயக்கறுத்தன்பு கூர்ந்து- மன்னுமெழுபிறவியிற் றூழாடலின்னுமொருவாதனை யுறுமலென்று- மாசற்றசிர்சுகப் பேரின்பமானநல் வாழ்வெனைக்கருளொணுதோ- தஞ்சமென்றாலுள மிரங்காதிருக்கின்றதன்மையென்னேவறிகிலேன்- றாய்தந்தைகுருதெய்வ நீயன்றிமற்றுமா தரவிங்கெனுக்குமுளதோ- சகளநிட்களசுமங் களசுகாநீதப்ர தாபமிகுக்ருபைவாரியே- சமரசசிவானந்த குமரகுருவாய் வந்த சமரபுரிவாழ்கந்தனே. (எ)

மங்குலினிருண்டகுழ லுங்கொடி மருங்குமெழில்வளர்குவளைமலர்விழிகளுமருவுகுறமகளிரு சுகந்தகுங்குமகளப மணிவடமிலங்குகொங்கை - வடவரையுடன்பொருது புயவரையிரண்டினும் வதிந்தமுகைவாய்விண்டுதண் - மதுமழைபொழிந்திடு மணக்கடம்புஞ்சமய வாதிகடமைக்கிழித்துப்- பொங்குகுருதித்திசை நிணத்தொடுகணம்பல புசித்திடவளிக்கும்விஜயம் பூண்டவடிவேலுமுல கேழுமோரிமைப் போதில்வலமாகவந்த-பொற்சித்ரமரகத மயூரமுமனத்தனைப் போற்றியுடல்புளகிதமெழப் - பூரித்துமுருகவென்றொருகாலுன்னுமத புகலும்வர்தமதருவினைக் - கங்குலையகற்றி ஞாநாநந்த வெய்யவன் கடிதுவந்ததயமாகக்- கடியகுரலிட்டழைக்குஞ்செய்ய சேவலுங்காணவிவையுடனேமைமயென்- கண்ணிணைகளிக்கவந் திடைவிடாதெனையருங் காவலிலிருத்திவேறோர் - கன்மவழிநுழையாது புன்னெறியிலொழுகாது கயவர்களிடஞ்செலாது- தங்குபலபொய்ம்மதத்திற் புகாதத்தேவர் தமைவணங்காதுநின்பொற்- சரணகமலத்தையே கதியென்றுநம்பிச் சதாகாலமுந்துதித்துத் - தமியேனினிக்கடைத் தேறுமாறிங்கினிது தயைபுரிநாள்வதென்றோ- சமரசசிவாநந்த குமரகுருவாய்வந்த சமரபுரிவாழ்கந்தனே. (அ)

கல்லாக்கொடுங்கயவ னல்லன்முழுதினுமாய்ந்துகற்றுண
ர்ந்தவனுமல்லன்- காமாந்தகாரத்தி லுழன்மூடனியாதோகருத்
தியைத்தன்பினுருகிக் கழறமிப்புன்மொழியைக்கினதடியர்நெஞ்
சங் கனிந்தியல்சிறந்துகூறுங்- கனமேன்மைதங்குபா மாலையெ
னமேற்கொண்டு கரமசைத்தஞ்சலென்று- பொல்லாப்பெரும்
பிழை யனைத்தையுமனத்துட்பொறுத்தும் வெறுத்திடாமற்-புற
ம்பினில்விடாதருகில் வரவணைத்தேக்கமிகுபுந்தியினுறுந்துயர்
கெடப் - புகலரியுமிடியலகை யின்றுமுதலஞ்சலி புரிந்தோட
விடைகொடுத்துப்- போக்கியுஞ்சுலைபல நோய்சற்றுமெய்யிற்
பொருந்தாமல்வேர்களைந்தென்- சொல்லாருமுடலாவி பொரு
ண்மூன்றுநின்பெருசுதந்தரமதாகவெனைநின்- றுணைமலர்ச்சே
வடி தனைத்துதிக்குஞ்சிறியதொண்டனெனவாதரித்துத்-தொ
டர்வினையறுத்தென்று மகலாதவின்பச் சுகந்தந்துகாத்தருளு
வாய்- ச்கிர்தசுரவந்தித சுமங்கள்சுபாஷித சுகோதயசுவயம்ப்ர
காச - சல்லாபஜயவிபவவிமலதத்துவஞாந சாம்ப்ராஜ்யசார்வ
பௌமா - சர்வஜநரக்ஷக தயாப்ரபாவாசமய சதுர்வேதசிம்மாச
நா- சகிதநயகுணசாதுசமுகவிகசிதநித்ய சாஸ்விதாதேவசிரே
ஷ்டா-சமரசசிவாநந்தகுமரகுருவாய்வந்தசமரபுரிவாழ்கர்த்தனே.

சுப்பிரமண்ணியர் நவரத்திநம்

முற்றிற்று.



ஆக புத்தகம் 43.

உ

சிவமயம்.

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம் - இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# தெய்வமணிமாலை.




இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சென்னை - சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

கணபதிதுணை.

# தெய்வமணிமாலை.

திருச்சிற்றம்பலம்.

திருவோங்குபுண்ணியச் செயலோங்கியன்பருட் டிற லோங்குசெல்வமோங்கச், செறிவோங்கவறிவோங்கி நிறைவானவின்பந் திகழ்ந்தோங்கவருள்கொடுத்து, மரு வோங்குசெங்கமல மலரோங்குவணமோங்க வளர்கரு ணைமயமோங்கியோர், வரமோங்குதெள்ளமுத வய மோங்கியானந்த வடிவாகியோங்கிஞான, உருவோங்கு முணர்வினிறை யொளியோங்குயோங்கிமயி லூர்ந்தோ ங்கியெவ்வுயிர்க்கும், உறவோங்குமின்பதமே னுள மோங்கிவளமோங்க வுய்கின்றநாளெந்நாள், தரு வோங்குசென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தல மோங்குகந்தவேளே, தண்முகத் துய்யமணி யுண்முகச் சைவமணி சண்முகத் தெய்வமணியே. (க)

பரமேதுவினைசெயும் பயனேதுபதியேது பசுவேது பாசமேது, பத்தியேதடைகின்ற முத்தியேதருளேது

பாவபுண்யங்களேது, வரமேது தவமேது விரதமேதொன்றுமில்லை மனம்விரும்புணவுண்டுநல், வத்திரமணிந்து மட மாதர்தமைநாடிநறுமலர் சூடிவிளையாடிமேற், சுரமேவவிட்டுமுலை தொட்டுவாழ்ந்தவரொடு கலந்துமகிழ்கின்றசுகமே, கண்கண்டசுகமிதே கைகண்டபலனென்றுங் கயவரைக்கூடாதருள், தரமேவுசென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வமணியே. (௨)

துடியென்னு மிடையனம் பிடியென்னுநடைமுகிற் றுணையெனும்பிணையலளகஞ், சூதென்னுமுலைசெழுந் தாதென்னும்மலையுனற் சுழியென்னமொழிசெயுந்தி, வடியென்னும்விழிநிறையும் மதியென்னும்வதனமென மங்கையர்தமங்கமுற்றே, மனமென்னுமொருபாவி மயலென்னுமதுமேவி மாழ்கநான்வாழ்கவிந்தப், படியென்னுமாசையைக் கடியென்னவென்சொலிப் படியென்னவறியாதுநின், படியென்னவென்மொழிப் படிபின்னவித்தைநீ படியென்னுமென்செய்குவேன், தடிதுன்னுமதில்சென்னை கந்தகோட்டத்துள்வளர் தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வமணியே. (௩)

வள்ளலுனையுள்ளபடி வாழ்த்துகின்றோர்தமை மதித்திடுவதன்றிமற்றை, வானவரைமதியென்னி னவரை யொருகனவின் மாட்டினுமறந்துமதியேன், கள்ளமறுமுள்ளமுறு நின்பதமலால்வேறு கடவுளர்பதத்தையவரேன், கண்ணெதிரடுத்தைய நண்ணெனவளிப்பினுங் கடுவெனவெறுத்துநிற்பேன், எள்ளளவுமின்மொழியிலேசுமொழியன்றுண்மை யென்னையாண்டருள்புரிவா, யென்றந்தையேயெனதுதாயேயெனின்பமே யென்றனறிவேயெனன்பே,தள்ளரியசென்னையிற் கந்தகோட்டத் துள்வளர் தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வமணியே.

பதிபூசைமுதலநற் கிரியையான்மனமெனும் பசுகரணமீங்கசுத்த,பாவனையறச்சுத்தபாவனையினிற்குமெய்ப் பதியோகநிலைமையதனுன், மதிபாசமற்றதி னடங்கிடுமடக்கவே மலைவின்மெய்ஞ்ஞானமயமாய், வரவுபோக்கற்றநிலை கூடுமெனவெனதுளே வந்துணர்வுதந்தகுருவே, துதிவாய்மைபெறுசாந்த பதமேவுமதியமே துரிசறுசுயஞ்சோதியே,தோகைவாகனமீதி லங்கவருதோன்றலே சொல்லரியநல்லதுணையே, ததிபெறுஞ்சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வமணியே. (ரு)

காமவுட்பகைவனுங் கோபவெங்கொடியனுங் கன லோபமுழுமூடனுங், கடுமோகவீனனுங் கொடுமத மெனுந்துட்ட கண்கெட்டவாங்காரியும், ஏமமறுமாச் சரிய விழலனுங்கொலையென் றியம்பாதகனுமாமிவ்,வெ ழுவருமிவர்க்குற்ற வுறவானபேர்களு மெனைப்பற்றிடா மலருள்வாய், சேமமிகுமாமறையி னேமெனுமருட்ப தத்திற னருளிமலயமுனிவன்,சிந்தனையின்வந்தனையுவந் தமெய்ஞ்ஞானசிவ தேசிகசிகாரத்னமே, தாமமொளிர் சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்குகந்த வேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வமணியே.

(கூ)

நிலையுறுநிராசையா முயர்குலப்பெண்டிரொடு நிகழ் சாந்தமாம்புதல்வனும், நெறிபெறுமுதாரகுண மென் னுநற்பொருளுமரு ணிக்குமறிவாந்துணைவனும், மலை வறுநிராங்கார நண்பனுஞ்சுத்தமுறு மனமென்னுநல் லேவலும், வருசசலகேவல மிலாதவிடமும்பெற்று வா ழ்கின்றவாழ்வருளுவாய்,அலையிலாச்சிவஞான வாரியே யானந்த வமுதமேகுமுதமலர்வா, யணிகள்பொற்கொ டிபசுங் கொடியிருபுறம்படர்ந் தழகுபெறவருபொன் மலையே, தலைவர்புகழ்சென்னையிற் கந்தகோட்டத்துள்

வளர் தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வமணியே. (௭)

ஒருமையுடனினதுதிரு மலரடிநினைக்கின்ற வுத்தமர்தமுறவுவேண்டும், உள்ளொன்றுவைத்துப் புறம்பொன்றுபேசுவா ருறவுகலவாமைவேண்டும், பெருமைபெறுநினதுபுகழ் பேசவேண்டும்பொய்மை பேசாதிருக்கவேண்டும், பெருநெறிபிடித்தொழுக வேண்டுமதமானபேய் பிடியாதிருக்கவேண்டும், மருவுபெண்ணாசையை மறக்கவேவேண்டுமுனை மறவாதிருக்கவேண்டும், மதிவேண்டுநின்கருணை நிதிவேண்டுநோயற்ற வாழ்வினான்வாழவேண்டுந், தருமமிகுசென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி சண்முகத்தெய்வமணியே.

ஈயென்றுநானொருவ ரிடநின்றுகேளாத வியல்புமென்னிடமொருவரீந், திடுவென்றபோதவர்க்கில்லையென்றுசொல்லாம லிடுகின்றதிறமுமிறையாம், நீயென்றுமெனைவிடா நிலையுநானென்றுமுன் னினைவிடாநெறியுமயலார், நிதியொன்றுநயவாத மனமுமெய்ந்நிலையுமென்றுநெகிழாததிடமுமுலகிற், சீயென்றுபேயென்று நாயென்றுபிறர்தமைத் தீங்குசொல்லாததெளிவும், திரமொ

ன்றுவாய்மையுந் தூய்மையுந்தந்துநின் றிருவடிக்கா ளாக்குவாய், தாயொன்றுசென்னையிற் கந்தகோட்டத் துள்வளர் தலமோங்குகந்தவேளே, தண்முகத்துய்யம ணி யுண்முகச்சைவமணிசண்முகத்தெய்வமணியே.(கூ)

கரையில்வீண்கதையெலா முதிர்கருங்காக்கைபோற் கதறுவார்கள்ளுண்டதீக், கந்தநாறிடவூத்தை காதநா றிவுறு கடும்பொயிருகாதநாற, வரையில்வாய் கொடு தர்க்கவாதமிடுவோர்சிவமணங் கமழ்மலர்ப்பொன்வாய் க்கு,மவுனமிடுவாரிவரை மூடரெனவோதுறுவழக்குநல் வழக்கெனினுநான்.உரையிலவர்தமையுறு துனதுபுகழ் பேசுமவ ரோடுறவுபெறவருளுவா, யுயர்தெய்வயானை யொடு குறவர்மடமானுமுளு வப்புறுகுணக்குன்றமே, தரையினுயர்சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தல மோங்குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச் சைவமணி சண்முகத்தெய்வமணியே. (கo)

நாம்பிரமநமையன்றி யாம்பிரமம்வேறில்லை நன் மைதீமைகளுமில்லை, நவில்கின்றவாகியாந் தாமிரண்டி னுமொன்றநின்றதென் றுவீணாட்,போம்பிரமநீதிகேட் போர்பிரமையாகவே போதிப்பர்சாதிப்பர்தாம், புன் மைநெறிகைவிடார் தம்பிரமம்வினையொன்று போந்தி

டிற்போகவிடுவார், சாம்பிரமமாமிவர்கட்காம் பிரமமெ
னுமறிவுதாம்பு பாம்பெனுமறிவுகாண், சத்துவவகண்
டபரி பூரணாகாரவுப சாரசிவசிற்பிரமமே, தாம்பிரிவில்
சென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்குகந்த
வேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவமணி
சண்முகத்தெய்வமணியே. (௧௧)

பார்கொண்டநடையில்வன் பசிகொண்டுவந்திரப்பா
ர்முகம்பார்த்திரங்கும், பண்புநின்றிருவடிக் கன்புநி
றையாயுளும் பதியுநன்னிதியுமுணர்வும், சீர்கொண்ட
நிறையுமுட் பொறையுமெய்ப்புகழுநோய்த் தீமையொ
ருசற்றுமணுகாத், திறமுமெய்த்திடமுநல் லிடமுநின்
னடியர்புகழ் செப்புகின்றோரடைவர்காண், கூர்கொண்
டநெட்டிலைக் கதிர்வேலுமயிலுமொரு கோழியங்கொ
டியும்விண்ணோர், கோமான்றன்மகளுமொரு மாமான்
றன்மகளுமால் கொண்டநின்கோலமறவேன், தார்கொ
ண்டசென்னையிற் கந்தகோட்டத்துள்வளர் தலமோங்
குகந்தவேளே, தண்முகத்துய்யமணி யுண்முகச்சைவ
மணி சண்முகத்தெய்வமணியே. (௧௨)

---

உ

சிவமயம்.

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

சிதம்பரம்-இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# ஜீவசாக்ஷிமாலை.




இஃது

சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரவர்களது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

சிவமயம்

# ஜீவசாக்ஷிமாலை.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பண்ணேறுமொழியடியர்பரவிவாழ்த்தும் பாதமலர முகிணையிப்பாவிபார்க்கிற், கண்ணேறுபடுமென்றோகன விலேனுங் காட்டென்றாற்காட்டுகிலாய்கருணையீதோ, விண்ணேறுமரிமுதலோர்க்கரியஞான விளக்கேயென் கண்ணேமெய்வீட்டின்வித்தே, தண்ணேறுபொழிற்ற ணிகை.மணியேஜீவ சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகச வாழ்வே. (க)

பண்டுமனதுவந்துகுணஞ்சிறிதுமில்லாப் பாவியேன் றனையாண்டாய்பரிவாலின்று, கொண்டுகுலம்பேசுதல் போலெளியேன்குற்றங் குறித்துவிடிலென்செய்கேன் கொடியனேனைக், கண்டுதிருத்தொண்டர்நகைசெய்வா

ரெந்தாய்கைவிடேலுன்றுணைகாண்முக்காலும், தண்
டளவன்புகழ்தணிகைமணியே ஜீவசாக்ஷியாய்நிறைந்த
ருளுஞ்சகசவாழ்வே. (௨)

புன்புலையவஞ்சகர்பாற் சென்றுவீணே புகழ்ந்தும
னமயர்ந்துறுகண் பொருந்திப்பொய்யாம், வன்புலைய
வயிறோம்பிப் பிறவிநோய்க்கு மருந்தாயநின்னடியை
மறந்தேனந்தோ, வின்புலையவுயிர்கொள்வான்வரிலென்
பாலவ்வியமனுக் கிங்கென்சொல் கேனென்செய்கேனே
தன்புகழ்காணருந்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய்
நிறைந்தருளுஞ் சகசவாழ்வே. (௩)

பெருங்களபமுலைமடவா ரென்னும்பொல்லாப் பே
ய்க்கோட்பட்டாடுகின்ற பித்தனேனுக்,கிரும்புலவர்க்
கரியதிரு வருளீவாயேலென்சொல் வாரடியாதற்கெந்
தாயெந்தாய், கரும்பினிழிந் தொழுகும்மருட் சுவை
யேமுக்கட் கனிகனிந்ததேனேயென் கண்ணேஞானந்,
தரும்புனிதர்புகழ்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய்
நிறைந்தருளுஞ் சகசவாழ்வே. (௪)

கல்லளவாநெஞ்சமென வஞ்சமாதர் கண்மாயமெனு
ங்கயிற்றாற் கட்டுவித்துச்,சொல்லளவாத்துன்பமெனுங்
கடலில்வீழ்த்தச் சோர்கின்றேனந்தோநற் றுணைபொ

ன்றில்லேன், மல்லளவாய்ப்பவமாய்க்கு மருந்தாமுன் றன் மலர்ப்பாதப்புணை தந்தால் மயங்கேனெந்தாய், * சல்லமுலாத்தருந்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகசவாழ்வே. (ரு)

அன்னைமுதலாம்பந்தத்தழுங்கிநாளுமலைந்துவயிறோம் பிமனமயர்ந்து நாயேன்,முன்னைவினையாற்படும் பாடெல்லாஞ் சொல்லிமுடியேன்செய்பிழைகருதி முனியேலையா, பொன்னைநிகரருட்குன்றே பொன்றேமுக்கட் பூமணமேநறவேநற் புலவர்போற்றத், தன்னைநிகர்தருந்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகசவாழ்வே. (௬)

பன்னரும்வன்றுயரா னெஞ்சழிந்து நாளும்பதைத் துருகிநின்னருட் பால்பருகக்கிட்டா, தன்னரும்பொய் வாழ்க்கையெனுங் கானத்திந்த வூர்நகைக்கப்பாவியழு துணர்ந்திலாயோ, 'வென்னருமையப்பாவென் னையா வென்ற னின்னுயிர்க்குத்தலைவாவிங்கெவர்க்குந்தேவா தன்னியற்சீர்வளர்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகசவாழ்வே. (எ)

---

* சல்லம்- பன்றிக்கோடு.

கோவேநின்பதந்துதியா வஞ்சநெஞ்சக்கொடியோர் பான்மனவருத்தங் கொண்டாழ்கின்றேன், சாவேனு மல்லனின்பொன் னருளைக்காணேன் றமியேனையுய்யும் வண்ணந்தருவதென்றோ,சேவேறுஞ்சிவபெருமானரிதி னீன்றசெல்வமே யருண்ஞானத்தேனேயன்பர், தாவே தந்தெறுந்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய்நிறைந்தரு ளுஞ் சகசவாழ்வே. (அ)

ஓயாதுவருமிடியான் வஞ்சர்பாற்சென் றுளங்கலங்கி நாணியிரந் துழன்றெந்நாளும், மாயாததுயரடைந்து வருந்திற்தெய்வ மருந்தாயநின்னடியை மறந்திட்டே னே, தாயாகித்தந்தையாய்த்தமராய்ஞான சற்குருவா ய்த்தேவாகித் தழைத்தவொன்றே, சாயாதபுகழ்த்தணி கைமணியேஜீவ சாக்ஷியாய்நிறைந்தருளுஞ் சகசவாழ் வே. (௯)

மின்னுமிடைமடவா ரல்குலாய வெங்குழியில் வீழ்ந்தாழ்ந்து மெலிந்தேனல்லா, லெந்நாளுமுனைப் போற்றி யறியேனென்னே யேழைமதிகொண்டேனிங் கென்செய்கேனே, யன்னையென்னப்பாவென் றரற்று மன்பர்க் காரமுதேயருட்கடலே யமரர்கோவே, தன் னூர்வத்தமர்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய்நிறைந்த ருளுஞ் சகசவாழ்வே. (௧0)

வன்சொலினரிடையடைந்துமாழ்குமிந்தமாபாவியே ன்குறையை வருத்துநாளு,மென்சொலினுமிரங்காமலந் தோவாளா விருக்கின்றுயென்னேநின் னிரக்கமெந்தா, யின்சொலடியவர்மகிழ மின்பமேயுள் ளிருளகற்றுஞ் செஞ்சுடரே யெவர்க்குங்கோவே, தன்சொல்வளர்தரு ந்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய்நிறைந்தருளுஞ் சக சவாழ்வே. (கக)

மீளாதவன்றுயர்கொண் டுனர்தம்மான் மெலிந்து நினையழைத்தலறி விம்மாநின்றேன், கேளாதகேள்வி யெலாங் கேட்பிப்பாய்நீ கேட்கிலேயோவென்னளவிற் கேள்வியின்றே, மாளாததொண்டரக விருளைநீக்கு மதியேசிற்சுகஞான மழைபெய்விண்ணே, தாளாளர் புகழ்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய்நிறைந்தருளுஞ் சகசவாழ்வே. (கஉ)

மண்ணினுன்மங்கையராற் பொருளாலந்தோவ ருந் திமனமயங்கிமிக வாடிநின்றேன், புண்ணியாநின்னரு ளை யின்னுங்காணேன் பொறுத்துமுடியேன் றுயரம்பு கல்வதென்னே, யெண்ணினுலளப்பரிய பெரியமோன வின்பமேயன்பர்தம திதயத்தோங்குந், தண்ணிறற் பொருற்றணிகை மணியேஜீவ சாக்ஷியாய்நிறைந்தரு ளுஞ்சகசவாழ்வே. (கங)

வஞ்சகராங்கானினிடை யடைந்தேநெஞ்சம் வருந் தியுறுகண்வெயிலான் மாழாந்தந்தோ, தஞ்சமென்பாரி ன்றியொருபாவிநானே தனித்தருணீர்த்தாகமுற்றேன் றயைசெய்வாயோ, செஞ்சொன்மறை முடிவிளக்கே யுண்மைஞானத் தேறலேமுத்தொழில்செய் தேவர்தே வே, சஞ்சலநீத்தருடணிகை மணியேஜீவ சாக்ஷியாய் நிறைந்தருளுஞ் சகசவாழ்வே. (௧௪)

வாழாதவண்ணமெனைக் கெடுக்கும்பொல்லா வஞ்ச கநெஞ்சாலுலகின் மாழாந்தந்தோ, பாழானமடந்தை யர்பாற் சிந்தைவைக்கும் பாவியேன்முகம்பார்க்கப் ப டுவதேயோ, யேழாயவன்பதத்தை நீக்குஞான வின்ப மேயென்னரசே யிறையேசற்றுந், தாழாதபுகழ்த்தணி கை மணியேஜீவ சாக்ஷியாய்நிறைந்தருளுஞ் சகசவாழ் வே. (௧௫)

உளந்தளரவிழிசுருக்கும் வஞ்சர்பாற்சென் றுத்தம கின்னடியைமறந் தோயாவெய்யி, லிளந்தளிர்போன லிந்திரந்தின் குழலுமிந்த வேழைமுகம்பார்த்திரங்கா யென்னேயென்னே, வளந்தருசற்குணமலையே முக்கட் சோதி மணியினிருந்தொளிரொளியே மயிலூர்மன்னே தளந்தரும்பூம்பொழிற்றணிகை மணியேஜீவ சாக்ஷி யாய்நிறைந்தளுஞ் சகசவாழ்வே. (௧௬)

கல்லாதவஞ்சகர்பாற் சென்றுவீணுள் கழித்துகிற் குங்கடையனிவன் கருணேயில்லாப், பொல்லாதபாவி யென வெண்ணியென்னேப் புறம்போக்கிலேயாயான் பு ரிவனென்னே, யெல்லாஞ்செய்வல்லவனே தேவர்யார் க்கு மிறைவனேமயிலேறு மெம்பிரானே, சல்லாபவ ளத்தணிகை மணியேஜீவ சாக்ஷியாய்கிறைந்தருளுஞ் சகசவாழ்வே. (கஎ)

கன்னேயநெஞ்சகர்மாட் டணுகியையோ கரைந்து ருகியெந்தாய்கின் கருணேகாணு, தென்னேயென்றேங் கியழும் பாவியேனுக் கிருக்கவிடமிலேயோகின் னிதயங் கல்லோ, பொன்னேயென்னுயிர்க்குயிராய்ப் பொருங் துஞான பூரணமேபுண்ணியமே புனிதவைப்பே, தன் னேரிறென்றணிகை மணியேஜீவ சாக்ஷியாய்கிறைந்த ருளுஞ் சகசவாழ்வே. (கஅ)



ஆக புத்தகம் 45.

உ

சிவமயம்.

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம் - இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# கந்தர் சரணப்பத்து.

சண்முகர் கொம்மி.




இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சென்னை - சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

கடவுள் துணை.

# கந்தர் சரணப்பத்து.



திருச்சிற்றம்பலம்,

அருளாரமுதே சரணஞ்சரணம் அழகாவமலா சரணஞ்சரணம், பொருளாவெனையாள் புனிதாசரணம் பொன்னேமணியே சரணஞ்சரணம், மருள்வார்க்கரியாய் சரணஞ்சரணம் மயில்வாகனனே சரணஞ்சரணங் கருணாலயனே சரணஞ்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம். (க)

பண்ணேர்மறையின் பயனேசரணம் பதியேபரமே சரணஞ்சரணம், விண்ணேரொளியே வெளியேசரணம் வெளியின்விளைவே சரணஞ்சரணம், உண்ணேருயிரே யுணர்வேசரணம் உருவேயருவே யுறவேசரணங், கண்ணேமணியே சரணஞ்சரணம் கந்தாசரணஞ் சரணஞ்சரணம். (உ)

முடியாமுதலே சரணஞ்சரணம் முருகாகுமரா சரணஞ்சரணம், வடிவேலரசே சரணஞ்சரணம் மயிலூர்மணியே சரணஞ்சரணம், அடியார்க்கெளியாய் சரணஞ்

சரணம் அரியாய்பெரியாய் சரணஞ்சரணங், கடிபாக்க தியே சரணஞ்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம்.()

பூவேமணமே சரணஞ்சரணம்பொருளேயருளே சரணஞ்சரணங், கோவேகுகனே சரணஞ்சரணங் குருவே திருவே சரணஞ்சரணந், தேவேதெளிவே சரணஞ்சரணஞ் சிவசண்முகனே சரணஞ்சரணங், காவேர்தருவே சரணஞ்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம். (ச)

நடவுந்தனிமா மயிலோய்சரணம் நல்லார்புகழும்வல்லோய்சரணந், திடமுந்திருவுந் தருவோய்சரணந் தேவர்க்கரியாய் சரணஞ்சரணந், தடவண்புயனே சரணஞ்சரணந் தனிமாமுதலே சரணஞ்சரணங், கடவுண்மணியேசரணஞ்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம். (ரு)

கோலக்குறமான் கணவாசரணங் குலமாமணியே சரணஞ்சரணஞ், சீலத்தவருக் கருள்வோய்சரணஞ் சிவனார்புதல்வாசரணஞ்சரணம், ஞாலத்துயர்தீர்நலனேசரணம் நடுவாகியநல் லொளியேசரணங்,காலற்றெறுவோய் சரணஞ்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம். (சு)

நங்கட்கினியாய் சரணஞ்சரணம் நந்தாவுயர்சம் பந்தாசரணந்,திங்கட்சடையான் மகனேசரணஞ் சிவைதந்தருளும் புதல்வாசரணந், துங்கச்சுகநன் றருள்வோய் சரணஞ் சரர்வாழ்த்திடுநந் துரையேசரணங், கங்கைக்கொருமா மதலாய்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம். (எ)

ஒளியுள்ளொளியே சரணஞ்சரணம் ஒன்றேபலவே சரணஞ்சரணந், தெளியுந்தெருளே சரணஞ்சரணஞ் சிவமேதவமே சரணஞ்சரணம், அளியுங்கனியே சரணஞ்சரணம் அமுதேயறிவே சரணஞ்சரணங், களிபொன்றருள்வோய் சரணஞ்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம். (அ)

மன்னேயெனையாள் வரதாசரணம் மதியேயடியேன் வாழ்வேசரணம், பொன்னேபுனிதா சரணஞ்சரணம் புகழ்வாரிதயம் புகுவாய்சரணம், அன்லேவடிவே லரசேசரணம் அறுமாமுகனே சரணஞ்சரணங், கன்னேர்புயனே சரணஞ்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம்.

வேதப்பொருளே சரணஞ்சரணம் விண்ணோர்பெருமான் சரணஞ்சரணம், போதத்திறனே சரணஞ்சரணம் புனைமாமயிலோய் சரணஞ்சரணம், நாதத்தொலியேசரணஞ்சரணம் நவையில்லவனே சரணஞ்சரணங், காதுக்கினிதாம் புகழோய்சரணங் கந்தாசரணஞ் சரணஞ்சரணம். (கo)

திருச்சிற்றம்பலம்,

---

சிவமயம்.

# சண்முகர்கொம்மி.

திருச்சிற்றம்பலம்.

குறவர்குடிசை நுழைந்தாண்டி - அந்த
கோமாட்டிபெச்சில் விழைந்தாண்டி
திறவர்வணங்கும் புகழாண்டி - அவன்
தோற்றற்றைப் பாடியடியுங்கடி. (க)

மாமயிலேறி வருவாண்டி - அந்த
வாழ்த்தவரங்கள் தருவாண்டி
தீமையிலாத புகழாண்டி - அவன்
சீர்த்தியைப் பாடியடியுங்கடி. (உ)

பன்னிருதோள்க ளுடையாண்டி - கொடும்
பாவிகள்தன்னை யடையாண்டி
என்னிருகண்க ளனையாண்டி - அவன்
ஏற்றத்தைப்பாடி யடியுங்கடி (ங)

வேங்கைமரமாகி நின்றாண்டி - வந்த
வேடர்தமைபெலாம் வென்றாண்டி
தீங்குசெய்சூரனைக் கொன்றாண்டி - அந்த
தீரனைப்பாடி யடியுங்கடி. (ச)

சீர்திகழ்தோகை மயின்மேலே - இளஞ்
செஞ்சுடர்தோன்றுந் திறம்போலே
கூர்வடிவேல்கொண்டு நம்பெருமான் - வருங்
கோலத்தைப்பாருங்கள் கோதையர்காள். (ரு)

ஆறுமுகங்களிற் புன்சிரிப்பும் - இரண்
டாறுபுயந்திக ழற்புதமும்
வீறுபரஞ்சுடர் வண்ணமுமோர் - திரு
மேனியும்பாருங்கள் வெள்வளைகாள். (சு)

ஆனந்தமான வமுதனடி - பர
மானந்தநாட்டுக் கரசனடி
தானந்தமில்லாச் சதுரனடி - சிவ
சண்முகநங்குரு சாமியடி. (எ)

வேதமுடிசொல்லு நாதனடி - சதுர்
வேதமுடிதிகழ் பாதனடி
நாதவடிவுகொ ணீதனடி - பர
நாதங்கடந்த நலத்தனடி. (அ)

தத்துவத்துள்ளே யடங்காண்டி - பர
தத்துவமன்றித் தடங்காண்டி
சத்துவஞான வடிவாண்டி - சிவ
சண்முகநாதனைப் பாடுங்கடி. (கூ)

சச்சிதானந்த வுருவாண்டி - பர
தற்பரபோகந் தருவாண்டி

உச்சிதாழன்பர்க் குறவாண்டி - அந்த
உத்தமதேவனைப் பாடுங்கடி. (௧0)

அற்புதமான வழகனடி - துதி
அன்பர்க்கருள்செல் குழகனடி
சிற்பரயோகத் திறத்தனடி-அந்த
சேவகன்கீர்த்தியைப் பாடுங்கடி. (௧௧)

சைவந்தழைக்க தழைத்தாண்டி - ஞான
சம்பந்தப்பேர்கொண் டழைத்தாண்டி
பொய்வந்தவுள்ளத்திற் போகாண்டி - அந்த
புண்ணியன்பொன்னடி போற்றுங்கடி. (௧௨)

வாசிநடத்தித் தருவாண்டி - ஒரு
வாசியிலிங்கே வருவாண்டி
ஆசில்கருணை யுருவாண்டி - அவன்
அற்புதத்தாண்மல ரேத்துங்கடி. (௧௩)

இராப்பகலில்லா விடத்தாண்டி - அன்பர்
இன்பவுளங்கொ ணடத்தாண்டி
அராப்பளியீந்த திடத்தாண்டி - அந்த
அண்ணலைப்பாடி யடியுங்கடி. (௧௪)

ஒன்றிரண்டான வுளவாண்டி - அந்த
ஒன்றிரண்டாகா வளவாண்டி
மின்றிரண்டன்ன வடிவாண்டி - அந்த
மேலவன்சீர்த்தியைப் பாடுங்கடி. (௧௫)

திருச்சிற்றம்பலம்.

அறுசீரடியாசிரிய விருத்தம்.

கறிபிடித்தவூன்கடையிற் கண்டவர்தங் கால்பிடித்துக் கவ்வும்பொல்லா, வெறிபிடித்தநாய்க்கேனும் வித்தைபயிற்றிடவாகும் வேண்டிவேண்டி, மறிபிடித்தசிறுவனைப்போல் வாத்தியார்மனமறுகி வருந்தத்தங்கள், குறிபிடித்துக்காட்டுவோர்க் கியாவர்படிப்பிக்க வலார் குமரவேளே. (க)

கொச்சகக்கலிப்பா.

கூழுக்கழுவேனோ கோத்தணிகைக் கோவேயென்
னூழுக்கழுவேனோ வோயாத் துயர்ப்பிறவி
யேழுக்கழுவேனோ வென்செய்கே னென்செய்கேன்
பாழுக்கிறைத்தேனீ துன்செயலோ பார்க்குமிடம். (உ)

கட்டளைக்கலிப்பா.

சிந்தைக்கும்வழியில்லை யுன்றன்மையைத்
தெரிதற்கென்னுந் திருத்தணிகேசனே
யுந்தைக்கும்வழியில்லை யென்றாலிந்த
வுலகில்யாவருனை யன்றிநீர்மொள்ள
மொந்தைக்கும்வழியில்லை வரத்திரு
முன்னடைக்கும்வழியில்லை யரையிற்சாண்
கந்தைக்கும்வழியில்லை யரகர
கஞ்சிக்கும்வழியில்லை யிங்கையனே. (ங)

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

சிதம்பரம்-இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# குறையிரந்தபத்து

## சண்முகர் காலைப்பாட்டு.

—•••••—





இஃது

சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரவர்களது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

கணபதிதுணை.

# குறையிரந்தபத்து.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சீர்பூத்தவருட்கடலே கரும்பேதேனே
செம்பாகேயெனதுகுல தெய்வமேநற்
கூர்பூத்தவேன்மலர்க் கையரசேசாந்த
குணக்குன்றேதணிகைமலைக் கோவேஞானப்
பேர்பூத்தநின்புகழைக் கருதியேழை
பிழைக்கவருள்செய்வாயோ பிழையைநோக்கிப்
பார்பூத்தபவத்திலுற விடினென்செய்கேன்
பாவியேனந்தோவன் பயந்தீரேனே. (க)

தீராததுயர்க்கடலி லழுந்திநாளுந்
தியங்கியழுதேங்குமிந்தச் சேய்க்குநீகண்
பாராதசெயலென்னே யெந்தாயெந்தாய்
பாவியெனைவிட்டனையோ பன்னாளாக

வேராயவருடருவா யென்றேயேமாந்
திருந்தேனேயென்செய்கேன் யாருமில்லேன்
சீராருந்தணிகைவரை யமுதேயாதி
தெய்வமேநின்கருத்தைத் தெளிந்திலேனே. (உ)

தெளிக்குமறைபொருளே யெனன்பேயென்றன்
செல்வமேதிருத்தணிகைத் தேவேயன்பர்
களிக்குமறைக்கருத்தேமெய்ஞ் ஞானநீதிக்
கடவுளேநின்னருளைக் காணேனின்னும்
சுளிக்குமிடித்துயரும்யமன் கயிறுமீனத்
தொடர்புமலத்தடர்புமனச் சோர்வுமந்தோ
வளிக்குமெனையென்செயுமோ வறியேனின்ற
னடித்துணையேயுறுதுணைமற் றன்றியுண்டோ. (ங)

உண்டாயவுலகுயிர்க டம்மைக்காக்க
வொளித்திருந்தவ்வுயிர்வினைக ளொருங்கேநாளுங்
கண்டாயேயிவ்வேழை கலங்குந்தன்மை
காணுயோபன்னிரண்டு கண்கள்கொண்டோய்
தண்டாதநின்னருட்குத் தகுமோவிட்டாற்
றருமமோதணிகைவரைத் தலத்தின்வாழ்வே
விண்டாதிதேவர்தொழு முதலேமுத்தி
வித்தேசொற்பதங்கடந்த வேற்கையானே. (ச)

கையாதவன்புடையா ரங்கைமேவுங்
கனியேயென் னுயிரேயென் கண்ணேயென் றும்
பொய்யாதமரணமே தணிகைஞானப்
பொருளேநின்பொன்னருளிப்போதியான்பெற்
றுய்யாதகுறையுண்டோ துயர்சொல்லாம
லோடுமேயமன்பாச மோய்ந்துபோமென்
னையாநின்னடியரொடு வாழ்குவேனிங்
காருனையல்லாலெனக் கின்றருள்செய்வாயே. (ரு)

வாய்க்குமுன தருளென்றே யந்தோநாளும்
வழிபார்த்திக்கிளைக்கின்றேன் வருத்தும்பொல்லா
நோய்க்குமுறு துயர்க்குமிலக் கானேன்மாழ்கி
நொந்தேனின்னருள்காணே னுவலும்பாகத்
தேய்க்குமவன்வரிலவனுக் கியாதுசொல்வே
னென்செய்கேன் துணையறியா லேழையேனே
தாய்க்குமரகுருவேதென் றணிகைமேவுஞ்
சோதியேயிரங்காயோ தொழும்பாளற்கே. (சா)

ஆளாயோ துயரளக்கர் வீழ்ந்துமாழ்கி
யையாவோவெனுமுறையை யந்தோசற்றுங்
கேளாயோயென்செய்கே னெந்தாயன்பர்
கிளத்துமுன தருளெனக்குக் கிடையாதாகி

ளாயோர்நடுவன்வரி லென்செய்வானே
நாயினேனென்னென்சொல்வே னுணுவேனு
தோளாவோர்மணியேதென் றணிகைமேவுஞ்
சுடரேயென்னறிவேசிற் சுகங்கொள்வாழ்வே (எ)

வாழ்வேநற்பொருளேநன் மருந்தேஞான
வாரிதியேதணிகைமலை வள்ளலேயான்
பாழ்வேலையெனுங்கொடிய துயருண்மாழ்கிப்
பதைத்தையாமுறையோநின்பதத்துக்கென்றே
தாழ்வேனீதறிந்திலையே நாயேன்மட்டுந்
தயவிலையோநான்பாவி தானேபார்க்கு
ளாழ்வேனென்றயல்விட்டா னீதியேயோ
வச்சோவிங்கென்செய்கே னண்ணலண்ணல். (அ)

அண்ணாவேநின்னடியை யன்றிவேறே
ராதரவிங்கறியேனெஞ் சழிந்துதன்பாற்
புண்ணாவேன்றன்னையின்னும் வஞ்சர்பாற்போய்ப்
புலர்ந்துமுகவாட்டமுடன் புலம்பிநிற்கப்
பண்ணாதேயாவனிவன் பாவிக்குள்ளும்
படுபாவியென்றென்னைப் பரிந்துதள்ள
வெண்ணாதேயான்மிகவு மேழைகண்டா
யிசைக்கரியதணிகையில்வீற் றிருக்குங்கோவே.

கோவேநற்றணிகைவரை யமர்ந்தஞான
குலமணியேகுகனேசற் குருவேயார்க்குந்
தேவேயென்விண்ணப்ப மொன்றுகேண்மோ
சிந்தைதனினினைக்கவருள் செய்வாய்நாளும்
பூவேயுமயறிருமால் புலன்வர்முற்றும்
போற்றுமெழிற்புரந்தரனெப் புவியுமோங்கச்
சேவேறும்பெருமானிங் கிவர்கள்வாழ்த்தல்
செய்துவக்குநின்னிரண்டு திருத்தாட்சிரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.





உ

கணபதிதுணை.

# சண்முகர் காவலைப்பாட்டு.

திருச்சிற்றம்பலம்.

வாரும்வாருந் தெய்வவடிவேல் முருகரே
வள்ளி மணாளரே வாரும்
புள்ளிமயி லோரே வாரும். (க)

சங்கமொலித்தது தாழ்கடல் விம்மிற்றுச்
சண்முக நாதரே வாரும்
உண்மை விநோதரே வாரும். (உ)

பொழுதுவிடிந்தது பொற்கோழி கூவிற்றுப்
பொன்னான வேலரே வாரும்
மின்னார் முந்நூலரே வாரும். (௩)

காகங்கறைந்தது காலையு மாயிற்றுக்
கண்ணுதல் சேயரே வாரும்
ஒண்ணுதல் நேயரே வாரும். (ச)

செங்கதிர்தோன்றிற்றுத் தேவர்கள் சூழ்ந்தனர்
செங்கல்வ ராயரே வாரும்
எங்குரு நாதரே வாரும். (ரு)

அருணனுதித்தன னன்பர்கள் சூழ்ந்தனர்
ஆறுமுகத் தோரே வாரும்
மாறிலகத் தோரே வாரும். (௬)

சூரியன் றோன்றினன் றொண்டர்கள் சூழ்ந்தனர்
சூரசங் காரரே வாரும்
வீரசிங் காரரே வாரும். (௭)

வீணைமுரன்றது வேதியர் சூழ்ந்தனர்
வேலாயுதத் தோரே வாரும்
காலாயுதத் தோரே வாரும். (௮)

சேவலொலித்தது சின்னம் பிடித்தன
தேவர்கள் தேவரே வாரும்
மூவர் முதல்வரே வாரும். (௯)

பத்தர்கள் சூழ்ந்தனர் பாடல்பயின்றனர்
பன்னிரு தோளரே வாரும்
பொன்மலர்த் தாளரே வாரும். (௧௦)

மாலைகொணர்ந்தனர் மஞ்சனம் போந்தது
மாமயில் வீரரே வாரும்
தீமையில் தீரரே வாரும். (௧௧)

தொண்டர்கள் நாடினர் தோத்திரம் பாடினர்
சுப்பிர மணியரே வாரும்
வைப்பி னணியரே வாரும். (௧௨)

திருச்சிற்றம்பலம்.

---

ஆக புத்தகம் 48.

உ

சிவமயம்.

திருச்செந்தூர்

சுப்ரமண்யக்கடவுள்பேரில்

# மாதப்பதிகம்.

திருப்பழனிவடிவேலர்பேரில்

# வாரப்பதிகம்.






இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சென்னை - சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

இந்துக்கள்

# தெய்வகுண வெளிச்சம்.

---

விசுவாவசு என்பவன்—வாதி.

கிருசானு என்பவன்—பிரதிவாதி.

பூலோகத்தினுள்ளே தெய்வங்களையும், தெய்வஸ்தலங்களையுங் குறித்து தேவலோகத்து காந்தருவர்களாகிய (விசுவாவசு என்பவனுக்கும், கிருசானு என்பவனுக்கும்) நடந்த எதிருக்தமான தர்க்கங்களாகையால் படிப்பதற்கு வெகு இனிப்பாயிருப்பதுமன்னியில் அனேக திருட்டுப் புரட்டுகளும், வியாசன் கட்டுப்பாடுகளும் வெளிப்படையாய் விளங்கும். இந்தப் புத்தகமானது (விஸ்வகுண தெரிசனமேன்னும்) சாஸ்திரத்தை அப்படியே சமஸ்கிருதத்திலிருந்தும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

இதன் விலை அணு 8. தபாற்கூலி அணு 3.

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

பேரம்பூர் பாரேக்ஸ், மதராஸ்.



உ

கணபதி துணை.

---

திருச்செந்தூர்

சுப்ரமண்யக்கடவுள்பேரில்

# மாதப்பதிகம்.

கலித்துறை.

சித்திரைமாதம்.

சித்திரை தன்னிலும் பாதாரவிந்தம் நிதந்தொழு வேன், உத்திரஞ் சொல்லென்று போற்றி நிற்பே னு மையாள்மகனே, சத்துருசங்கார வேலையு முன்னையுந் தான்மறவேன், சித்திரைமாதம்வருவேன் திருச்செந் திலாதிபனே.

வைகாசி மாதம்.

ஒய்யாரமயின்மீதிலேறி உகந்தெனக்கு
ஐயாவரங்கொடுத் தருள்புரிவாயரிமான்மருகா
மெய்யாறுவாயுமுகமாறு முன்னைகண்டுதொழ
வைகாசிமாதம்வருவேன் செந்தூரினில்வாழ்பவனே.

## ஆனிமாதம்.

வானிலுலகையளந்தோன்மருகா வடிவேல்முருகா
மேனிமெலிந்துவாடுவனே வினைதீருமென்று
நானிலந்தன்னிலிருந்தே யென்றுலும்நடந்தபடி
ஆனிப்பிறந்துவருவேன் செந்தூரினிலாண்டவனே.

## ஆடிமாதம்.

தேடியநானுமுன்பாதாரவிந்தந் தினந்தொழுவேன்
வாடியிருந்துமயங்குவனே வடிவேல்முருகா
கூடியகொன்றைக்குறமாதை யுன்னையுங்கும்பிடநான்
ஆடிபிறந்துவருவேன் செந்தூரினில்வாழ்கந்தனே.

## ஆவணிமாதம்.

பூவணிபூண்டகுறமாதைத் தேடிப்புனத்தருகே
மாவணிமேறியேவந்து நிற்பாய்மதுராபுரியில்
தாரணிதன்னில் நரியைப்பரியென்றுதானகட்டும்
ஆவணிமாதம்வருவேன் செந்தூரினிலாண்டவனே.

## புரட்டாசிமாதம்.

நிகட்டாதசெங்கனிவா யமுதுண்டு தினைப்புனத்தில்
அருட்டாமலோடிவருகுருவாய் அரனார்மகனே [முது
நிரட்டானவள்ளிதெய்வ யானையுநின்னையும் நிதந்தொ
புரட்டாசிமாதம்வருவேன்செந்தூரினில்புண்ணியனே.

### அற்பசிமாதம்.

கற்பழியாதமாதைத் தேடிக்கானகத்தில்
கொப்பிலும்நாடியுகந்து திற்பாயுமையாள்மகனே
செப்பிலுஞ்செய்ய மொழியாளை யும்மையுஞ்சேவைசெ
ய்ய, அற்பிசிமாதம்வருவேன்செந்தூரினில்வாழ்பவனே

### கார்த்திகைமாதம்.

போத்தியநானுன் பாதாரவிந்தம்புகழ்பெறவே
நேத்தியதாக அருள்புரிவாய் நெடியோன்மருகா
சாத்தியமாலையுந் தெய்வானையுன்னையுங்கண்டுதொழக்
கார்த்திகைமாதம்வருவேன் செந்தூரினில்வாழ்பவனே

### மார்கழிமாதம்.

ஆறுகையின்மயின்மீதினி லேறியனுதினமும்
பேறுகமாக அருள்புரிவாய் புவியாளவந்த
தாருகமானசூரமாதை யுன்னையுந்தான்றொழுக
மார்கழிமாதம்வருவேன் செந்தூரினில்வாழ்பவனே.

### தைமாதம்.

மையாரும் பூங்குழல் மன்னனைத்தேடி வனத்த
ருகே, ஒய்யாரமாக நடந்துவந்தா யுமையாள்மகனே,
மெய்யானதெய்வமென்றே யெண்ணித்தேடி விரும்பி
நான், தைமாதந்தோறும்வருவேன் செந்தூரினிற்சண்
முகனே.

## மாசிமாதம்.

மாசிப்பழனி திருவேரகம் கன்னியாகுமரி
தேசிப்பரிஎன்னுஞ் சேவிக்குஞ் செங்கண்மால்மருகா
பூசியகீரையுங் கைவேலையுங்கண்டு புகழ்பெறநான்
மாசிமாதம்வருவேன் செந்தூரில்வாழ்பனே.

## பங்குனி மாதம்.

சங்குநீராடித்திருப்பாற்கடல்தன்னில்தையல்மாமருகா
எங்குநீராகநிறைந்துநிற்பா யென்னைக்காத்தருள்வாய்
கங்குலமான குறமாதையுன்னையுங் கண்டுதொழப்
பங்குனிமாதம்வருவேன் செந்தூரிற்பதிதனிலே.

திருச்செந்தூர் சுப்பிரமணிய சுவாமிபேரில்

மாதப்பதிகம்

முற்றிற்று.

---



உ

கடவுள் துணை.

சுப்ரமண்யக் கடவுள்பேரில்

# வாரப்பதிகம்.

கலித்துறை.

ஆதித்தவாரம்.

வாதித்தசூரரை வடிவேலெடுத்து வளைந்துக்கொண்டு
சாதித்துவென்ற தயாபரனே யெந்தன்சஞ்சலத்தைச்
சோதித்துபார்த்து துயர்தனைநீக்கி நற்றேகையுடன்
ஆதித்தவாரம் வருவாய் பழனிநல் லாண்டவனே.

சோமவாரம்.

உங்கள்தகப்பன் தாக்கக்கா யுலகேழுஞ்சுற்றி
கண்கள்சிவந்திடவந்து நின்றுயந்தகபடதுபோல்
எங்கள்மேற்குற்ற மியாதிருந்தா லுமிறங்கிமனந்
திங்கட்கிழமை வருவாய் பழனிநற்றேசிகனே.

மங்களவாரம்.

கொள்வாயிதழுண்ணும், வள்ளிதெய்வானைக்குகந்த
தவ்வாயகப்பட்டபாம்பதுபோலு தமிழ்மறையோன்
அவ்வாயிற்சிக்கி அலையப்படாதடி யாற்கிரங்கிச்
செவ்வாய்க்கிழமையில் வருவாய்பழனிநற்றேசிகனே.

சௌமியவாரம்.

சதமெனும் வேதமுத லெழுத்தோத தலையிற்குட்டி
விதமெனக்கேட்டருள் வேலவனேயென்வினையகல
பதமதுபாடக் கலித்துறைசொல்லவும் பண்புதந்து
புதனெனும்வாரம்வருவாய் பழனிநற்புண்ணியனே.

குருவாரம்.

கருவாயெழுந் திருகைகான்முளைத்துக் கழிந்துபின்பு
உருவாய்பிறப்பித்த வுத்தமனே ஒருவுண்மைதனை
திருவாய்மலர்ந்துமுன்னின் றிடவாய்நற்சேவலுடன்
குருவாரநாளில்வருவாய் பழனிநற்குருபரனே.

சுக்கிரவாரம்.

உள்ளிற்கருதிகின் றஞ்சலிசெய்வோர்க் குவந்துவந்து
அள்ளிவிபூதியிடு மையனேயடியார்க்கிரங்கி
வள்ளிதெய்வானையுடன் மயிலேறிமனதுகந்து
வெள்ளிக்கிழமைவருவாய் பழனிநல்வேலவனே.

சனிவாரம்.

சனியானபாவி யிளமையிலே யென்னைத் தான்றொடுத்
இனியாகிலுஞ்சற்றிரங்கலையே மனதெப்படியோ [தார்
பனியானதைவந்துகதிரோன் விலக்கிடும்பாவனைபோல்
சனிவாரநாளில்வருவாய் பழனிச்சண்முகனே.

வாரப்பதிகம்-முற்றிற்று.



உ

கடவுள் துணை.

பழனியங்கிரி அறுமுகவர்

# திருநீற்றுப் பதிகம்.



சிறுமணவூர்-முனிசாமி முதலியா ரவர்களது,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1908.



உ

கடவுள் துணை.

பழனியங்கிரி அறுமுகவர்

# திருநீற்றுப் பதிகம்.

ஆசிரியவிருத்தம்.

கொண்டகொண்டிட்ட வெகு சொரூபங்களுக்கழகு கொடுக்கச் சமைந்தநீறு, கொடியவெண்ணுபிரஞ் சமணரைக்கழுவினிற் கொலைசெய்து கண்டநீறு, துண்ட கண்டப்படக் கொடூரவெஞ்சூரனுடல் துணிக்கவேல் தொட்டநீறு, சொல்லரியபூதப் பிசாசுபில்லி சூனியஞ் சுடரிட் டெரித்தநீறு, செண்டுபோற் கயிலைமலை யெடுத்தவன் கூன்முதுகுசெவ்வையாய் நிமிர்ந்தநீறு, சிவபத்தியில்லாத மூழமூடர் நெஞ்சந் திடுக்கிடக்கொடுத்த நீறு, அண்டரவ கண்டமுதல் வணங்கித் துதித்திட ஆண்மையாய் வந்தநீறு, அடியவர்க் கருள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (க)

சம்பந்தராகவே தென்னவென்கூடலிற் சமணரை பழித்தநீறு, சகலகுருபரனாக அரனுக்குவுபதேசந் தா

ணுயுரைத்தநீறு, நம்பினவடியவர்க ளீடேற வினையோ டநாதனுய் வந்தநீறு, நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகள் முனிசித்தர்கள் நம்பியேபூசுநீறு, கம்பமதை யானைமா முகவனுக்கிளையவன் கருதியே தந்தநீறு, காலனிட துதனை நாடாமலென்னளும் காக்கவே வந்தநீறு, அம் பிகைதிரிசூலி சுந்தரி சவுந்தரி அபிராமி வல்லிதந்த, அரியவர்க்கருள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமு கவர் திருவெண்ணீறே. (௨)

அரவங்கள் பூதங்கள் மிருகங்கள் பேய்களை அ டைக்கவே யிட்டநீறு, அஷ்டபாக்கிய லட்சுமியிஷ்ட முடனென்னளு மகலாமலிட்டநீறு, இரவுபகல்மறவா மல் முருகர்திருநாமமே யிறைஞ்சித்தரித்தநீறு, எதிரா ளிநெஞ்சங் கலங்கிப்பயந்தோட யேற்கவேயிட்டநீறு, பரவுபலபிணிகளும் உரவுகெடுகோள்களும் பணிந்தோ டவிட்டநீறு, பஞ்சபாதகமுடன்மிஞ்சிடுவல்வினைபணி ந்திடவணிந்தநீறு, அரசனுடன்மந்திரி யாண்புலிவீரரு மதிவசிய மானநீறு, அடியவர்க்கருள்கிருபை பொழி பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (௩)

இருப்பான தலமெலா மென்றுந்துதிப்பதற்கிடே த்தஞ் செய்யுநீறு, எங்கெங் கிருந்தாலுமேத்திப்பணிர்

திடவெதிராககிற்குநீறு, திருப்பரங் குன்றமுஞ் செந் திகதிர்காமமுந் திருச்சோலைக்குகந்தநீறு, திருத்தணி சுவாமிமலை திருவேரகம்புகழ் செவ்வேலர் தந்தநீறு, பொருப்புகள் முடிதோறும் பதகமலமுத்திரை புகழ் பெருக வந்தநீறு, பூசைசெய்யைவராற் றிருவாவினன் குடிபோதிக்கவந்தநீறு, அருட்பாதநத்தியேநினைப்பவ ர்கள்நெஞ்சினில் அகலா திருந்தநீறு, அடியவர்க் கரு ள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமுகவர் திருவெ ண்ணீறே. (௪)

நாலைப்பகுந்திடை மாதர்க்குவேலாக நுதலிற்ற றித்தநீறு, நாறுநூறுயிர மிமிசைவந்தாலுமொரு நொ டியிற் றொலைக்குநீறு, வேலைக்கடிந்துவெகு சூரர்கள் மடியவே வெற்றிவேல் தொட்டநீறு, வேதனைச்சிறை யிட்டு பிரணவத் திட்பொருள் விமலற் குறைத்தநீறு, வாலைப்பருவமாய் வயதுநூறுகவே வசியகரமானநீறு, மாறுதசெல்வமும் பேறுனவாழ்வுடன் வரிசைதறவந்த நீறு, ஆலவாய்ச் சொக்கருடன் ஆனந்த தாண்டவம் ஆடிச்செழித்தநீறு, அடியவர்க் கருள்கிருபை பொழி பழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (ரு)

ஓராறுசென்னியு மீராறுபுயமுமென் னுள்ளம்ப திந்தநீறு, ஓதுதமிழ் மதுரையி லுமைபெண் பேசவே உபதேசமானநீறு, காரணையமுகவனுக் கிளையவன்வி ராலிமலைக் காங்கேயன் தந்தநீறு, கயிலைமலை யொரு நொடியில் அரனைவல மாகவே காணவே வந்தநீறு, பேரானவசுரருங் குன்றமும்வேலாற் பொடிபடத் து ணித்தநீறு, பொற்சந்தி மலையிலுறை வள்ளியிடநாயக ன் பொன்னடி வணங்குநீறு, ஆறோடு செஞ்சடைக் கையிலை நாயகனுமைக் கழுகுபெறவந்தநீறு, அடியவ ர்க் கருள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமுகவர் திரு வெண்ணீறே. (சு)

எத்தேசகாலமும் முத்தையரென்பவர் கேழைக் கிரங்குநீறு, எழிலானகிருத்திகை தவறுமலனுஷ்டிக்க வின்பங்கள் தந்தநீறு, சிற்றிடை வள்ளியுடன் திணைப்பு னங்காத்திடச் சிவசித்தாய் நின்றநீறு, சிற்றாறுவேடர் கள் சிவபத்தராகவே திருவுருக் கொண்டநீறு, முத்த மிழ்க்காகவே அருணகிரிநாதர்க்கு மோட்சங்கொடுத்த நீறு, முப்பத்துமுக்கோடி தேவாதிதேவரும் முருகனெ ன வந்தநீறு, அத்தனருள் கந்தனர் நித்தம்விளையாட வே யகலாமலிட்டநீறு, அடியவர்க்கருள்கிருபை பொ ழிபழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (எ)

வேதாளபூதப் பிசாசுபில்லி சூனியமிரட்டித் துரத்துநீறு, வெண்டையந் தண்டையொடு, கிண்கிணி சிலம்பசைய வீரவேல் தொட்டநீறு, சூதானகளபமுலை வள்ளியிடநாயகன் சுப்பிரமணியர் தந்தநீறு, தும்புரு நாரதர் கிம்புருடர்போற்றித் துலங்கவேவந்தநீறு, ஓது முருகாவென்று உள்ளங் குளிரவே உற்றதுணையான நீறு, ஓம்நமசி வாயகுரு ஞானதி தேசிகன் ஒழிவாகி வந்தநீறு, ஆதாரமாகவே நெஞ்சினி லெப்பொழுது மறிவாகநின்றநீறு, அடியவர்க் கருள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (அ)

துஷ்டப்பிசாசுபிணி கிட்டவொட்டாமலே சுட்டெரித்தநீறு, சுற்றவே நிற்கின்ற அஷ்டதிசை பாலரும் சொல்லுமுன் வணங்குநீறு, வட்டமாய்ப் படர்மேகம் பதினெட்டுகுஷ்டமும் வாராமற் பூசுநீறு, வாமூரவம் வண்டுகெடி சிலந்திதேள் விஷமெலாம் வாங்கவுமணிந்தநீறு, கொட்டமிடு சூரரை வெட்டிபலி யிட்டுசெயங்கொள்ளவே வந்தநீறு, கூறுமொருநக்கீரர்மேன்மைபெற வேல்வாங்கி குன்றைப்பிளந்தநீறு, அஷ்டதிசைபதினாறு முட்கோண சட்கோண மறுபத்துநாலுகலையும், அடியவர்க் கருள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (௯)

மருமலர்க் கமலத்துதித்தவன் கிளைவழி வாழ்விக்கவந்தநீறு, மன்னுபிரமாமுனி அகஸ்தியர் போகருடன் வழிகொள்ளவந்தநீறு, சரணமல ரன்பனுங் குலாலகுலத்திருக்கை தண்டமிட்டுதெவுநீறு, சண்முகநதிமூழ்கி கிரிவலம் வந்தோர்க்கு சகலபிணிதீர்த்தநீறு, வறுமைபடுமெளியார்க்கு கொலைசெய்தபாவர்க்கும் வருவிரதமொத்தநீறு, வாழ்வுகிர்த்திகை சோம சுக்கிரவாரஞ்சஷ்டி வந்திப்போர்க் கருளுநீறு, அறுமறைகள்பறவுகுரு சிவசமயந்தழைக்கவே யவதரித்தருளுநீறு, அடியவர்க்கருள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (௧௦)

பத்துக் கவிதையு மனத்திற் றுதிப்போர்க்குப் பாக்கியந் தந்தநீறு, பரிவாக வெந்நாளுஞ் சரவணபவாவென்ன பரிசுபெறவைக்குநீறு, கஸ்தூரிகுங்குமங் கமழ்வெள்ளிநாயகன் காங்கேயன் தந்தநீறு, கார்த்திகை நாள்தோன்றி வெற்றிவேலாயுதன் கடம்பனூர் கந்தநீறு, முத்துநவரத்தினத் தண்டையணிபாதனன் முடிமேற் றரித்தநீறு, முழுநில மயிலேறி வந்துமுன் நின்றுமே முன்கையிற்றந்தநீறு, அத்தனூர் பங்கினிற்

சத்துரு சங்காரியால் அபிராமிவல்லிதந்த அடியவர்க்கருள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (௧௧)

வட்டச்சடாட்சரச் சரவண பவாவென்று மதியிற்றுதிக்கும்நீறு, வாதாடிவந் தெதிர்த்திட்ட பூதங்களைமார்பைப்பிளந்தநீறு, இஷ்டமுடன் சரியையொடு கிரியையோகஞான மேற்கவேதந்தநீறு, இன்பாகவேகயிலை மலையேறிமோட்சத்தி லிருக்கத்தந்தநீறு, எட்டுத்திசையதிர மயிலேறி யுலகைவல மிமைக்குமுன் வந்தநீறு, இமையவர் முனிவர்கள்தேவேந்திரன்றுதி யிடர்களைந்திட்டநீறு, அஷ்டதிசைபெற்றதீவேழுமீரேழுலகராசாளவந்தநீறு, அடியவர்க்கருள்கிருபை பொழிபழனியங்கிரி அறுமுகவர் திருவெண்ணீறே. (௧உ)

திருநீற்றுப்பதிகம்

முற்றிற்று.



ஆக புத்தகம் 50.

உ

சிவமயம்.

திருவருட்பிரகாசவள்ளலாரென்னும்

## சிதம்பரம்-இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருத்தணிகைப்

# பிரார்த்தனைமாலை.




இஃது

சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரவர்களது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தணிகைப் பிரார்த்தனைமாலை.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

சீர்கொண்டதெய்வ வதனங்களாறுந் திகழ்கடப்பந், தார்கொண்டபன்னிரு தோள்களுந்தாமரைத் தாள்களுமோர், கூர்கொண்டவேலு மயிலுநற்கோழிக் கொடியுமருட், கார்கொண்டவண்மைத் தணிகாசலமுமென் * கண்ணுற்றதே. (க)

கண்மூன் றுறுசெங் கரும்பின்முத்தே பதங்கண்டிடுவான், மண்மூன் றுலகும் வழுத்தும்பவள மணிக்குன்றமே, திண்மூன் றுநான்கு புயங்கொண்டொளிர் வச்சிரமணியே, வண்மூன் றலர்மலை வாழ்மயிலேறிய மாணிக்கமே. (உ)

---

* கண்ணுற்றதென்பது ஒருமைபன்மை மயக்கம்.

மாணித்தஞான மருந்தேயென் கண்ணினுண்மா
மணியே, யாணிப்பொன்னேயென தாருயுரே தணிகா
சலனே, தாணிற்கிலேனினைத் தாழாதவஞ்சர் தமதிடம்
போய்ப், பேணித்திரிந்த னனந்தோவென்செய்வ னிப்
பேதையனே. (௩)

அன்னையெனைத்தந்த வப்பாயென்றேங்கி யலறு
கின்றே, னென்னையிவ்வேழைக் கிரங்காதுநீட்டித் தி
ருத்தவெந்தாய், பொன்னேசுகுணப் பொருப்பேதணி
கைப் பொருப்பமர்ந்த,மன்னேகலாபமயின்மேலழகிய
மாமணியே. (௪)

மணியேதினைப்புன வல்லியைவேண்டி வளர்மறைவான்
கனியேயெனநின்ற கண்ணேயென் னுள்ளக் கனிநறவே
பணியேனெனினுமெனை வலிந்தாண்டுன் பதந்தரவே
கணியேதணிகைக்கு வாவெனவோர் மொழிநல்குவை
யே. (௫)

நல்காதவீனர்தம் பாற்சென்றிரந்துந வைப்படுதன்
மல்காதவண்ணமருள் செய்கண்டாய்மயில் வாகனனே
பல்காதனீக்கிய நல்லோர்க்கருளும் பரஞ்சுடரே
யல்காதவண்மைத் தணிகாசலத்தி லமர்ந்தவனே. (௬)

அமராவதியிறைக் காருயிரீந்த வருட்குன்றமே
சமராபுரிக்கரசே தணிகாசலத் தற்பரனே
குமாரபரமகுரு வேதகாவெனக் கூவிநிற்பே [னே.
னெமராஜன்வந்திடுங் காலையிலேயெனை யேன்றுகொள்

கொள்ளுண்டவஞ்சர்தங் கூட்டுண்டுவாழ்க்கையிற்
கூட்டுண்டுமேற், துள்ளுண்டநோயினிற் சூடுண்டுமங்
கையர் தோய்வெனுமோர், கள்ளுண்டுநாய்க்குன் கரு
ணையுண்டேநற் கடலமுதத், தெள்ளுண்டதேவர் புகழ்
தணிகாசலச் சிற்பரனே. (அ)

சிற்பகன்மேவு மித்தேகத்தையோம்பித் திருவனையார்
* தற்பகமேவிழைந் தாழ்ந்தேன் றணிகை தனிலமர்ந்த
சற்பசமேநின்கழல் கருதேனிக் கடைப்படுதென்
பொற்பகமேவியநின்னருளென்னென்றுபோற்றுவதே.

போற்றேனெனினும்பொறுத்திடல்வேண்டும் புவிநடை
யாஞ், சேற்றேவிழுந்து தியங்குகின்றேனைச் சிறிதுமினி
யாற்றேனெனதரசே யமுதேயெ னருட்செல்வமே
மேற்றேன்பெருகுபொழிற் றணிகாசல வேலவனே. ()

வேல்கொண்டகையும் விறல்கொண்டதோளும் வி
ளங்குமயின், மேல்கொண்டவீறு மலர்முகமாறும் வி
ரைக்கமலக், கால்கொண்டவீரக் கழலுங்கண்டாலன்றி
க் காமனெய்யுங், கோல்கொண்டவண்மை யறுமோத
ணிகைக் குருபரனே. (கக)

குருவேயயனரி யாதியர்போற்றக் குறைதவிர்ப்பான்
ஒருவேல்பிடித்து மகிழ்வள்ளலேகுண மாமலையே
தருவே தணிகைத் தயாநிதியே துன்பச் சாகரமாங்
கருவேரறுத்திக் கடையனைக்காக்கக் கடனுனக்கே. ()

* தன் - என்பது அசைநிலை.

உனக்கேவிழைவு கொண்டோலமிட்டோங்கி யுல றுகின்றேற, னெனக்கேயருளித் தமியேன்பிழையுளத் தெண்ணிபிடேல், புனக்கேழ்மணிவல்லியைப் புணர்ந் தாண்டருள் புண்ணியனே,மனக்கேதமாற்றுந் தணிகா சலத்தமர் வானவனே. (கங)

வானோர்குடிகளை வாழ்வித்ததெய்வ மணிச்சுடரே நானேரெளியனென் றுன்பறுத்தாளென நண்ணிநின் றேற,னேனோநின்னெஞ்ச மிரங்காதவண்ண மிருங்கணிப் பூந்,தேனோடருவி பயிலுந்தணிகைச் சிவகுருவே (கச)

கையாததுன்பக் கடன்மூழ்கிநெஞ்சங் கலங்கியெ ன்ற, னையாநின்பொன்னடிக் கோலமிட்டேனென்னை யாண்டுகொளாய், மையார்தடங்கண் மலைமகள்கண்டு மகிழ்செல்வமே, செய்யார்தணிகை மலையரசேயயிற் செங்கையனே. (கரு)

செங்கையங்காந்த ளனையமின்னார்தந் திறத்துழன்றே வெங்கயமுண்ட விளவாயினேன்விறல் வேலினையோ ரங்கையிலேந்தி யவையாதுவ ரரிதிற்பெற்ற மங்கைமகிழுந் தணிகேசனேயருள் வந்தெனக்கே.(கசு)

கேளாதுபோலிருக் கின்றனையேழைபிக் கீழ்நடையில் வாளாவிடர்கொண் டலறிடுமோலத்தை மாமருந்தே தோளாமணிச்சுடரே தணிகாசலத் தாய்ப்பொருளே நாளாயினென் செய்குவேனிறப்பாய நவைவருமே. ()

நவையேதருவஞ்ச நெஞ்சகமாயவு நானுன்னன்ப
ரவையேயணுகவு மானந்தவாரியி லாடிடவுஞ்
சுவையேயமுதன்ன நின்றிருநாமந் துதிக்கவுமா
யிவையேயெனெண்ணந் தணிகாசலத்து ளிருப்பவனே.

இருப்பாயமாய மனத்தால்வருந்தி யிளைத்துநின்றேன், பொருப்பாயகன்மப் புதவாழ்வி லாழ்ந்தது போதுமின்றே, கருப்பாழ்செயுமுன் கழலடிக்கேயிக் கடையவனைத், திருப்பாயெனிலென் செய்கேன்றணிகாசலத் தெள்ளமுதே. (கசு)

தெள்ளகத்தோங்கிய செஞ்சடரேசிவ தேசிகனே கள்ளகத்தேமலர்க் காவார்தணிகையென் கண்மணியே யெள்ளகத்தேயுமுன் றெண்ணின்றலைத்தெழூந் திங்குமங்குந், துள்ளகத்தேன்சிரஞ் சேருங்கொலோநின் றுணையடியே. (உ0)

அடியேனெனச்சொல்வ தல்லாநின்றுருளடைந் தாரைக்கண்டே, கடியேனருணகிரி பாடுநின்னருட்டோய் புகழைப், படியேன்பதைத்தருகேன் பணியேன்மனப் பந்தமெலாங், கடியேன்றணிகையைக் காணேனென்செய்வேனெங்காதலனே. (உக)

தலனேயடியர்தணி மனமாம்புகழ் சார்தணிகா, சலனேயனரி யாதியர்வாழ்ந்திடத் தாங்கயில்வேல், வலனேநின்பொன்னருள் வாரியின்மூழ்கமனேலயம்வாய்ந் திலனேல்சனன மரணமென்னுங்கடற் கென்செய்வனே.

என்செய்கையென்செய்கை யென்தாய்நின்பொன்
னடிக்கே யலங்கல், வன்செய்கைநீங்கமகிழ்ந் தணியே
ன்றுதி வாயுரைக்க, மென்செய்கைகூப்ப விழிநீர் துளித்
திட மெய்சிலிர்க்கத், தன்செய்கையென்பதற்றே தணி
காசலஞ் சார்ந்திலனே. (உ௩)

சாருந்தணிகையிற் சார்ந்தோய்நின்றாமரைத் தா
ட்டுணையைச், சேருந்தொழும்பர் திருப்பதமன்றியிச் சி
ற்றடியே, னூருந்தனமு முறவும்புகழு முறைமடவார்,
வாருந்தனிமுலைப் போகமும்வேண்டிலன் மன்விண்
ணிலே. (உச)

மண்ணீரனல்வளி வானாகின்றருள் வத்துவென்
றே, தெண்ணீர்மையாற் புகழ்மாலயனே முதற்றேவர்
கடங், கண்ணீர்தொடைத்தருள் கற்பகமேயுனைக் கண்
டுகொண்டேன், றண்ணீர்பொழிற்கண் மதிவந்துலாவுந்
தணிகையிலே. (உரு)

தணியாததுன்பத் தடங்கடனீங்கநின் றன்மலர்த்தாட்
பணியாதபாவிக் கருளுமுண்டோபசு பாசமற்றோர்க்
கணியாகநின்றவருட் செல்வமே தணிகாசலனே
பணியாதவன்முதலா மட்டமூர்த்த மடைந்தவனே. ()

அடையாதவஞ்சகர் பாற்சென்றிரந்திங் கலைந்த
லைந்தே, கடையானநாய்க்குன் கருணையுண்டேதணி
கைக்குணின்றே, யுடையாதநன்னெஞ்சர்க் குண்மை

வைக்காண்பிக்கு முத்தமனே, படையாததேவர் சிறை மீட்டளித்தருள் பண்ணவனே. (உஎ)

பண்ணவனேநின்பத மலரேத்தும் பயனுடையோர், கண்ணவனே தணி காசலனேயயிற் கையவனே,விண்ணவரேத்திய மேலவனேமயன் மேவுமனம், புண்ணவனேனையுஞ் சேர்ந்தாயென்னேயுன்றன் பொன்னருளே.

பொன்னார்புயத்தனும் பூவுடையோனும் புகழ்மணியே யென்னாவிபின்றுணை யேதணிகாசலத் தேயமர்ந்த மன்னாநின்பொன்னடிவாழ்த்தா தவீணில் வருந்துறவே னின்னாவியற்று மியமன்வந்தாலவற்கென் சொல்வனே.

சொல்லார்மலர்புனை யன்பகத்தோர்க்கருள் சொல்லுமெல்லாம், வல்லாயென்றேத்த வறிந்தேனினியென்றன் வல்வினைக, ளெல்லாம்விடைசொண் டிரியுமென் மேலியமன்சினமுஞ், செல்லாதுகாணையனே தணிகாசலச் சீரரசே. (௩௰)

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம் - இராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# குறைநேர்ந்தபத்து.

# முறையிட்டபத்து.






இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சென்னை - சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

கணபதிதுணை.

# குறைநேர்ந்தபத்து.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வான்பிறந்தார்புகழ் தணிகைமலையைக்கண்டு வள்
ளலேநின்புகழை மகிழ்ந்துகூறேன், றேன்பிறந்தமலர்க்
குழலார்க்காளாவாளா திரிகின்றேன்புரிகின்றேன்றீமை
நாளு, மூன்பிறந்தவுடலோம்பியவமே வாழ்நாளொழிக்
கின்றேன் பழிக்காளாயுற்றே னந்தோ, யேன்பிறந்தே
னேன்பிறந்தேன் பாவியேன்யானென்குறையை யெவ
ர்க்கெடுத்திங் கியம்புகேனே. (க)

மெய்யாவோநற்றணிகை மலையைச்சார்ந்து மேன்
மையுறநின்புகழை விரும்பியேத்தே, னுய்யாவோவன்
னறியேன் பயன்படாத வொதியனையேனெட்டி தனை
யொத்தேனன்பர், பொய்யாவோடெனமடவார் போ
கம்வேட்டேன் புலையனேன்சற்றேனும் புனிதமில்லே,
னையாவோநாணுமற் பாவியேன்யான் யார்க்கெடுத்தெ
ன்குறைதன்னை யறைகுவேனே. (உ)

வாட்செல்லாநெடுங்கண்ணார் மயலில்வீழ்ந்து மனம்போனவழிசென்று வருந்தாநின்றேன், சேட்செல்லார்வரைத்தணிகைத் தேவதேவே சிவபெருமான்பெற்றபெருஞ் செல்வமேநா, ணட்செல்லாநின்றதினி யென்செய்கேனே நாயினேன்பிழைதன்னை நாடிநின்பாற், கோட்சொல்லாநிற்பரெனி லென்னாமோவென் குறையையெடுத்தெவர்க்கெளியேன் கூறுகேனே. (௩)

பொல்லாதமங்கையர்த மயற்குள்ளாகும் புலையமனத்தால்வாடிப் புலம்புகின்றேன், கல்லாதபாவியென்று கைவிட்டாயோ கருணையுருவாகியசெங் கரும்பே மேரு, வில்லான்றன்செல்வமே தணிகைமேவு மெய்ஞ்ஞானவொளியேயிவ் வினையேன்றுன்ப, மெல்லாநீயறிவாயே யறிந்தும்வாரா திருந்தாலென்குறையையெவர்க் கியம்புகேனே. (௪)

முன்னறியேன்பின்னறியேன் மாதர்பாலென் மூடமனமிழுத்தோடப் பின்சென்றெய்த்தேன், புன்னெறியேன்பொய்யரொடும் பயின்றேனின்றன் புனிதவருட்கடலாடேன் புளகமுடேன், பொன்னரையன்றெருழுஞ்சடிலப் புனிதனீன்ற புண்ணியமேதணிகைவளர்போ

தவாழ்வே, யென்னரசேயென்னமுதே நின்பாலன்றி
யெவர்க்கெடுத்தென் குறைதன்னை யியம்புகேனே. (ரு)

விடுமாட்டிற்றிரிந்துமட மாதரார்தம் வெய்யநீர்க்
குழிவீழ்ந்து மீளாநெஞ்சத், தடுமாற்றத்தொடும்புலைய
வுடலையோம்பிச் சார்ந்தவர்க்கோரணுவளவுந் தானியா
து, படுகாட்டிற்பலனுதவாப் பனைபோனின்றேன் பா
வியேனுடற்சுமையைப் பலருங்கூடி, யிடுகாட்டில்வை
க்குங்கா லென்செய்வேனோ வென்குறைவையெவர்க்
கெடுத்திங் கியம்புகேனே. (சு)

மின்னைநேரிடைமடவார் மயல்செய்கின்ற வெங்கு
ழிபில்வீழ்ந்தழுந்தி வெறுத்தேன்போலப், பின்னையே
யெழுந்தெழுந்து மீட்டுமீட்டும் பேய்போலவீழ்ந்தாடி
மயற்குண்மூழ்கிப், பொன்னையேயொத்தவுன தருளை
வேண்டிப் போற்றுதவீணேநாட் போக்குகின்ற,வென்
னையேயான்சிரிப்பே னுகிலந்தோ வென்குறையையெ
வர்க்கெடுத்திங் கியம்புகேனே. (எ)

முலையொருபான்முகமொருபால் காட்டும்பொல்
லா மூடமடவார்கடமை முயங்கிநின்றே, னிலையொரு
பாலனமொருபான் மலஞ்சேர்த்துண்ணு மேழைமதி
யேன்றணிகை யேந்தலேபொன், மலையொருபால்வாங்

கியசெவ் வண்ணமேனி வள்ளறருமருந்தேகின் மலர்த் தாளேத்தேன், புலையொருவாவஞ்சகநெஞ் சுடையே னென்றன் புன்மைதனையெவர்க்கெடுத்துப் புகலுவே னே. (அ)

வேய்ப்பான்மென்றோண்மடவார் மறைக்குமாய வெம்புழுச்சேர்வெடிப்பினிடை வீழ்ந்துநின்றேன், றுய்ப்பாலையுண்ணுது நாய்ப்பாலுண்ணுந் தகையனேன்றிருத்தணிகை தன்னைச்சார்ந்து, யாய்ப்பாலையொருமருங்கா னீன்றசெல்வத் தாரமுதேகின்னருளை யடையேன் கண்டா,யேய்ப்பாலைநடுங்கருங்கல் போனின்றெய்த்தே னென்குறையையெவர்க்கெடுத்திங் கியம்புகேனே. (கூ)

வஞ்சமடமாதரார் போகமென்னு மலத்தினிடைக்கிருமியென வாளாவீழ்ந்தேன், கஞ்சமலர்மனையானு மாலுந்தேடாக் காணுதசெங்கனியிற் கனிந்ததேனே, தஞ்சமென்போர்க்கருள்புரியும் வள்ளலேநற் றணிகை யரைசேயுனது தாளைப்போற்றே, னெஞ்சலிலாவினைச் சேம விடமாயுற்றே னென்குறையையெவர்க்கெடுத்திங் கியம்புகேனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---



உ
கணபதிதுணை.

# முறையிட்டபத்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பொன்னைப்பொருளாகினைப்போர் பாற்போந்து மிடியா லிரந்தலுத்தே, னின்னைப்பொருளென்றுணராத நீசனினியோர்கிலைகாணேன், மின்னைப்பொருவுஞ்சடைப்பவள வெற்பில்விளங்கவியன்கரும்பே, முன்னைப்பொருளேதணிகையனே முறையோமுறையோ முறையேயோ. (க)

மக்கட்பிறவியெடுத்துமுனை வழுத்தாக்கொடியமரமனையேன், றுக்கக்கடலில்வீழ்ந்துமனஞ் சோர்கின்றேனேர் துணைகாணேன், செக்கர்ப்பொருவுவடிவேற்கைத் தேவேதெவிட்டாத்தெள்ளமுதே, முக்கட்கரும்பின் முழுமுத்தே முறையோமுறையோமுறையேயோ. (உ)

அன்பினுனது திருவடிக்கே யாளாய்த்தொண்டொன்றுற்றுதே, அன்பினுடையோர்பாலணுகிச் சோர்ந்தேனினிபோர் துணைகாணே, னென்பின்மலிந்தமா

லைபுனை யெம்மான்றந்தபெம்மானே, முன்பினடுவாய்
முளைத்தோனே முறையோமுறையோமுறையேயோ.

அருகாமலத்தினலைந்திரக்க மறியாவஞ்சநெஞ்சகர்
பா, லுருகாவருந்தியுழன்றலைந்தே னுன்றாளன்றித்து
ணைகாணேன், பெருகாதரவிற்சிவன்பெறுநற் பேறேத
ணிகைப்பெருவாழ்வே, முருகாமுகமூவிரண்டுடையாய்
முறையோமுறையோமுறையேயோ. (௪)

பொன்னின்றொளிருமார்பனயன் போற்றுமுன்றா
ட்புகழ்மறந்தே, கன்னின்றணங்குமனத்தார்பாற் கனி
ந்தேனினியோர் துணைகாணேன், மின்னின்றிலங்குச
டைக்கனியுள் விளைந்தநறவேமெய்யடியர், முன்னின்ற
ருளுந்தணிகையனே முறையோமுறையோ முறையே
யோ. (௫)

வெதிருள்ளவரின்மொழிகேளா வீணரிடம்போய்
மிசமெலிந்தே, யதிருங்கழற்சேவடிமறந்தே னந்தோவி
னியோர்துணைகாணே, னெதிருங்குயின்மேற்றவழ்தணி
கை யிறையேமுக்கணியற்கனியின், முதிருஞ்சுவையே
முதற்பொருளே முறையோமுறையோமுறையேயோ.

ஈனத்திவறுமனக்கொடியோ ரிடம்போய்மெலிந்
துநாடோறு, ஞானத்திருத்தாட்டுணைச்சிறிது நாடேனி

னியோர்துணைகாணேன், ஞானத்தறுகண்மலையுரியின் சட்டைபுனைந்தோன்றரும்பேறே, மோனத்தவர்தமகவிளக்கே முறையோமுறையோமுறையேயோ. (எ)

தேவேயெனநிற்போற்றாத சிறியரிடம்போய்த்தியங்கியென்றன், கோவேநின்றன்றிருத்தாளைக் குறிக்கமறந்தேன்றுணைகாணேன், மாவேழத்தினுரிபுனைந்த வள்ளற்கினியமகப்பேறே,மூவேதனையையறுத்தருள்வோய் முறையோமுறையோமுறையேயோ. (அ)

வேதாநந்தநெடுபோற்றி மேவப்படுநின்பதமறந்தே, யிதானந்தந்திடுவீரென் மீனரிடம்போயிரந்தலைந்தேன், போதானந்தப்பரசிவத்திற் போந்தபொருளே பூரணமே, மூதானந்தவாரிதியே முறையோமுறையோ முறையேயோ. (கூ)

படியாக்கருணைவாரிதியாம் வள்ளலுன்றுண்மலர் மறந்தே, கொடியாரிடம்போய்க்குறையிரந்தேன் கொடியேனினியோர்துணைகாணே, னடியார்க்கெளியமுக்கணுடை யம்மானளித்தவருமருந்தே, முடியாமுதன்மைப்பெரும்பொருளே முறையோமுறையோமுறையேயோ. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

ஆக புத்தகம் 53.

உ

திருவண்ணாமலையி லெழுந்தருளியிருந்த
அருணகிரிநாத ரருளிச்செய்த

# வேல்விருத்தம்.



சிறுமணவூர்-முனிசாமி முதலியா ரவர்களது,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
1908.



உ

கடவுள் துணை.

# வேல்விருத்தம்.



மகரமளறிடைபுரள வுரககண பணமவுலி
மதியுமிரவியு மலையவே
வளரெழிலிகுடருழல விமையவர்கடியரகல
மகிழ்பெறுமறு சிறையவாஞ்
சிகரவரைமனைமறுகு தொறுநுளைய மகளிர்செழு
செனல்களொடு தரளமிடவே
செகசிரபகிரதிமுதனதிகள் கதிபெறவுததி
திடரடைய நுகரும்வடிவேல்
தகரமிருகமதமென மணமருவு கடகலுழி
தருகவுளு முறுவளெயிறுந்
தழைசெவியுநுதல்விழியு முடையவொருகடவுண்மகிழ்
தருதுணைவ னமரர்குயிலுங்
குகரமலையெயினர்குல மடமயிலுமெனவிருவர்
குயமொடமர் புரியுமுருகன்
குமரனறுமுகனெதிரும் விருதநிசிசாரணிகள்
குலையவிடு கொடியவேலே. (க)

வெங்காளகண்டர்கைச் சூலமுந்திருமாயன்
வெற்றிபெறு சுடராழியும்

விபுதர்பதிகுலிசமுஞ் சூரனகுலங்கல்வி
வெல்லாவெனக் கருதியே
சங்கராபிச்சயித் தருளெனத்தேவருஞ்
சதுர்முகனு மின்றிரப்பச்
சயிலமொடுசூரனுட லொருநொடியிலுருவியே
தனியாண்மை கொண்டநெடுவேல்
கங்காளிசாமுண்டி வாராகியிந்திராணி
கௌமாரி கமலாசனக்
கன்னிநாரணிகுமரி திரிபுரைபயிரவிய
மலைகௌரி காமாட்சிசைவ
சிங்காரிசாமளைபவானி கார்த்திகைகொற்றி
திரியம்பகி யளித்தசெல்வச்
சிறுவனறுமுகன்முருக னிருதர்கள்குலாந்தகன்
செம்பொற் றிருக்கைவேலே. (உ)

வேதாளபூதமொடு காளிகாளாத்ரிகளும்
வெருளுறு பசாசகணமும்
வெங்கழுகுடன்கொடி பருந்துசேம்புவனத்தில்
வெம்பசி யொழிக்கவந்தே
ஆதாரமடமுங் கணபணவியாளமு
மடக்கிய தடங்கிரியெலா
மலையநடமிடுநெடுந் தானவர்நிணத்தசை
யருந்திப் புறத்தவைவேல்
தாதார்மலர்ச்சுனைப் பழனிமலைசோலைமலர்
தனிப்பரங் குன்றேரகந்

தணிகைசெந்தூரிடைக் கழியாவினன்குடி
தடங்கட லிலங்கையதனில்
போதார்பொழிற்கதிர் காமலத்தலத்தினைப்
புகழுமவரவர் நாவினிற்
புந்தியிலமர்ந்தவன் கந்தன்முருகன்குகன்
புங்கவன் செங்கைவேலே. (ரு)

அண்டருலகுஞ்சுழல வெண்டிசைகளுஞ்சுழல
வங்கியமுடன் சுழலவே
யலைகடல்களுஞ்சுழல வவுணருயிருஞ்சுழல
வகிலதலமுஞ் சுழலவே
மண்டலநிறைந்தரவி சதகோடிமதியுதிர
மாணப்பிறங்கியணியு
மணியொலியினிற்சகல தலமுமருளச்சிரம
வகைவகையினிற் சுழலவே
தண்டமுடனுங்கொடிய பாசமுடனுங்கரிய
சந்தமுடனும் பிறைகள்போற்
றந்தமுடனுந்தழலும் வெங்கணுடனும்பகடு
தன்புறம்வருஞ் சமனையான்
கண்டுகுலையும்பொழுதி லஞ்சலெனமென்சரண
கஞ்சமுதவுங் கருணைவேல்
கந்தன்முருகன்குமரன் வண்குறவர்தம்புவி
கணவனடல் கொண்டவேலே. (சு)

ஆலமாயவுணருக் கமரருக்கமுதமா
யாதவனில் வெம்மையொளிமீ

தரியதவமுனிவருக் கீந்தவித்தகனன்
　　றமைந்தன் பருக்குமுற்ற
மூலமாம்வினையறுத் தவர்கள்வெம்பகையினை
　　முடித்திந்திரர்க்கு மெட்டா
முடிவிலாநந்தநல் கும்பதமளித்தெந்த
　　மூதண்டமும் புகழும்வேல்
ஏலவம்யானையின் கோடதிற்சொரிமுத்து
　　மின்பணிகளு மிழுமுத்து
மினிவாடைமான்மத மகிலோடுசந்தன
　　மிலவங்க நறவமாறுந்
தாலமாமாமுதற் பொருள்படைத்திடு மெயினர்
　　தருவனிதை குறவனையன்
தனிநடம்புரிசமர முருகனறுமுகன்குகன்
　　சரவணக் குமரன்வேலே. (ரு)

பந்தாலடிக்கழங் காடலிற்சுடருசல்
　　பாடலினெ டாடலெனலாம்
பழந்தெய்வர்கட்கந் துணிந்திரற்கரசு
　　பாலித்ததிறல் புகழ்ந்தே
சந்தாருநாண்மலர்க் குழலரம்பையர்களுஞ்
　　சசிமங்கை யனைவர்தாமுந்
தன்னையன்பொடுபாடி யாடும்ப்ரதாபமுந்
　　தலைமையும் பெற்றவைவேல்
மந்தாகினித்தரங்கச் சடிலரக்கரிய
　　மந்த்ரவுபதேச நல்கும்

வரதேசிகன்கிஞ்சு கச்சிகாலங்கார
வாரணக்கொடி யுயர்த்தோன்
கொந்தார்மலர்க்கடம் பஞ்செச்சைமாலையுங்
குவளையுஞ் செங்காந்தளும்
கூதாளமலருந் தொடித்தணியுமார்பினன்
கோளத் திருக்கைவேலே. (சு)

அண்டங்களொருகோடி யாயினுங்குலகிரி
யானந்தமாயினு மேவினு
லடையவொருவிப்புரம் போவதல்லதுதங்க
லறியாது சூரனுடலைக்
கண்டம்படப்பொருது காலனுங்குலைவறுங்
கடிகைகொளை புரியுமதுசெங்
கனகாசலத்தைக் கடந்துமுனையிட்டுக்
கடுக்கின்ற துங்கநடுவேல்
தண்டந்தனுத்திகிரிசங்குகட்கங்கொண்ட
தானவாந்தகன் மாயவன்
தழைவிழிக்கொடுவரிப் பருவுடற்பகவலைத்
தமனியச் சுடுகையின்மேல்
வண்டொன்றுகமலத்து மங்கையுங்கடலாடை
மங்கையும் பதம்வருடவே
மதுமலர்க்கண்டுயில் முகுந்தன்மருகன்குகன்
வாகைத் திருக்கைவேலே. (எ)

மாமுதறடிந்துதண மல்குகிரியூடுபோய்
வலியதானவர் மார்பிடம்

வழிகண்டுகமலபவ னத்தனைச்சிறையிட்டு
மகவான்றனைச் சிறைவிடுத்
தொடியவிருடித்தலைவராசி பெற்றுயர்வானி
லும்பர்சொற் றுதிபெற்றதா
வுடையகிரன்றனது பாடல்பெற்றிலகுதனி
லொப்பில்புகழ் பெற்றவைவேல்
சோமகலசப்ரலா லங்காரதாஜடா
சூடிகா லாந்தகாலா
துங்கரட்சகதுரோண கட்கருலிசஞ்சூல
தாரககேசர மாம்பரச்
சேமவடவாபுயப் பரணசங்காபரண
திகம்பரதி ரியம்பகமகா
தேவநந்தனகஜானன சகோதரகுகன்
செம்பொற் றிருக்கைவேலே. (அ)

தேடுதற்கரிதான நவமணியழுந்திய
செங்கரனை யமுதம்வாய்கொள்
செயமளித்தருளெனக் கெனவுவப்பொடுவந்து
சேவடிபிடித்த தெனவும்
நீடுமைக்கடல்சுட்ட கிற்கடைந்தெழுகட்லு
நீயெமைக் காக்கவெனவு
கிபூடமுடிநெடியகிரி யெந்தமைக்காக்கவெனு
நிகர்கின்ற துங்கநெடுவேல்
ஆடுமக்கணபணக் கதிர்முடிப்புடையெயிற்
றடலெரிக் கொடியவுக்ர

வழல்விழிப்படுகொலைக் கடையகட்செவியினுக்
கரசினைத் தனியெடுத்தே
சாடுமைப்புயலெனப் பசுநிறச்சிகரியிற்
ருதிமித் திடனடிக்குஞ்
சமரமயில்வாகன னமரர்தொழுநாயகன்
சண்முகன் றன்கைவேலே. (௯)

வலாரிபலலாகுல மிலாதகலவேகரிய
மலாறியு நாலுமறைநூய்
வலானலைவிலானகி கிலான்மலைவிலானிவர்
மனோதய வுலாசமுறவே
புலாவருகலோல மகராலயசலங்களு
முலோகநிலை நீர்நிலையிலா
வொலாவொலிநிசாசர ருலோகமதெலாமழ
லுலாவியநிலாவி கொலைவேல்
சிலாவடகலாவினோ கவாசிலிமிகாவிலோ
சனுசினசிலா தணிவிலா
கிலாமலரெலாமதிய மோதிமதிசேலொழிய
சேவக சராபமுகிலாம்
விலாசகலியாணகலை சேரபசுமேலைமுலை
மேவிய விலாசவுகலன்
விலாழியினிவாழிய கலவானிலனவாரரிடு
வேழமிளைஞன் கைவேலே. (௧௦)

வேல்விருத்தம்-முற்றிற்று.

உ

சிவமயம்.

திருப்போரூர் கந்தர்

# மயில் விருத்தம்.



இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களாது

சென்னை - சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.





சிவமயம்.

# மயில்விருத்தம்.

## காப்பு.

கட்டளைக்கலித்துறை.

காரூர்மலர்ப்பூஞ்சோலை வாசங்கத்திக்குமெழிற்
போரூர்மருவுமணு முருகேசன் பொருவிலம்பன்
வாரூர்குறவள்ளி மாரன்மயூர வளம்புகல
நீரூர்முகிற்கரி * யானனத்தானை நினைநெஞ்சமே.

அறுசீர் இரட்டையாசிரிய விருத்தம்.

அண்டரண்டங்களுட னீரேழுபுவனங்க ளதிரநட மாடுமயிலே, அரகராவென்றுமாற் பிரமன்முதன்முனி வர்க ளர்ச்சிக்கவந்தமயிலே, தண்டையொடுகிண்கிணி சிலம்பொலிமுழங்கவே தாண்டவம்புரியுமயிலே, தர்க் கமிடுசூரனுட னெக்குநீராகவே சாரிவருதோகைமயி லே, கண்டதொருபேய்ப்பூத பிர்ம்மராட்சதர்களுடல்

---

* ஆனனம்-முகம்.

கதரிடமிதிக்குமயிலே, கரடிபுலியாளி * யரிமிருகங் களியானையுங் காலாக்கினைகொண்டமயிலே, தெண்ட னிட்டேபணியு மடியவர்களீடேற சேவைதந்தாளுமயி லே, திருப்போரியூரில்வளர் கந்தப்பரேறிவரு சித்திரக் கலாபமயிலே. (க)

அஞ்சிப்பயந்தோர்க டாய்தந்தையாகவந் தாதரிக் கின்றமயிலே, யாருமற்றோர்கடஞ் சுற்றமேநானென்ற டுத்தாண் டளிக்குமயிலே, வஞ்சகப்பில்லிசூனிய மே வல்செய்வோர்கண் மார்பைப்பிளக்குமயிலே, மட்டுக் கடங்காத துஷ்டப்பசாசுகளை மாரணஞ்செய்யுமயி லே, நஞ்சானவிடமமுத சஞ்சீவியாகவே நடனமிடு தோகைமயிலே, ராஜபரமேஸ்வரி தருங்குமரனைக் கொண்டு நாட்டியம்புரியுமயிலே, செஞ்சொற்றமிழ்க் கும்ப முனிமகிழ்ந்தோதவே திவ்யநடமாடுமயிலே, தி ருப்போரியூரில்வளர் கந்தப்பரேறிவரு சித்திரக்கலாப மயிலே. (உ)

அட்டதிக்கெங்குமொரு நொடியில்வலமாய்வந்த வற்புதக்கலாபமயிலே, ஆயிரத்தெண்பணு முடியுரக

* அரி - சிங்கம்.

னுடல்குழைய வாக்கிரமித்தாடுமயிலே, கட்டழகர்நவ வீரர் வீரபத்திரன்பத்திர காளியும்வணங்குமயிலே,கன மானவைரவன் சரணெனப்போற்றவே கலகலென்றாடு மயிலே, துஷ்டரைச்சயங்கொண்டு சிஷ்டபரிபாலனந் தோலரதியற்றுமயிலே, துதிசெயடியேனுனக் கோரிக் கைநிறைவுறத் தொந்தோமென் றாடுமயிலே, சிட்டர் புகழ்குறவள்ளி மகிழ்தெய்வயானையிவர் சித்தங்களிக்கு மயிலே, திருப்போரியூரில்வளர் கந்தப்பரேறிவரு சித் திரக்கலாபமயிலே. (௩)

நந்திமத்தளமதைத் தொந்தோமெனக்கொட்ட நாட்டியஞ் செய்யுமயிலே, நாரதமகாமுனிவன் வீணை வாத்தியஞ்செய்ய நன்காய் நடிக்குமயிலே, சுந்தரர்ச ம்பந்த ரப்பர்மாணிகக்ரோடு துறவோ ரிறஞ்சுமயிலே, சொற்பெரியதில்லை மூவாயிரவரநுதினந் தோத்திரஞ் செய்யுமயிலே, கந்தமிகுநவரத்தின மாலையம்பொன் னாங் கடம்பணிந்தாடுமயிலே, கதிர்மதிகளிருபுரந் தீப ங்களெனவொளிக் காலநின்றாடுமயிலே, சிந்தையிற்று யர்நீக்கி யென்றென்னையாண்ட செஞ்சிலக்கலாபமயி லே, திருப்போரியூரில்வளர் கந்தப்பரேறிவரு சித்திரக் கலாபமயிலே. (௪)

வாடித்தவிக்கின்ற வேழையடியேனுன் மனத்துய ரகற்றுமயிலே, வையாபுரிக்குமரரேறியேவிளையாடு மரகதமயூரமயிலே, பாடிப்படிக்கின்ற பாவாணர்நாவேறி பரதநடமாடுமயிலே,பட்சமாயன்பருக் கதிகசம்பத்தெலாம் பரிவாயளிக்கு மயிலே, கோடிசூரியப்பிரகாசத் தெய்வயானை பூங்குறவள்ளி மகிழுமயிலே, குன்றைத் துளைத்துமோர் நற்கீரைக்காத்த குங்குமப்படீரமயிலே, தேடித்தினந்தேவர் பரவமெய்ஞ்ஞானச் செழுங்கருணை பொழியுமயிலே, திருப்போரியூரில்வளர் கந்தப்பரேறி வரு சித்திரக்கலாபமயிலே. (௫)

மார்கொண்டு தாங்கியே யென்றனை வளர்க்கின்ற மாதாவுமானமயிலே, மகமேருகிரியதனி லிரைதேர்க் துவிளையாடி வட்டமிட்டாடு மயிலே, பேர்கொண்ட சூரனுட லிருதுண்டமாகப் பிளந்திடநிமிர்ந்தமயிலே, பெருகுவடகைலைநிகர் பழனிமலைவேலனைப் பிலனுட னேந்துமயிலே, கார்கொண்ட * முகிறனைக் கண்டின்பமாகவே கல்லென நடிக்குமயிலே, கண்டிகதிர்காமத் திலங்குமுருகேசனை கனமாயெடுக்குமயிலே, சீர்கொண்டுவளரட்ட லட்சுமிகடாட்சமிச் சிறியோர்களிக்கு

---

* முகில் - மேக.

மயிலே, திருப்போரியூரில்வளர் கந்தப்பரேறிவரு சித்திரக்கலாபமயிலே. (௬)

* அக்கரவுகுற்றியே யுக்கிரதாண்டவமாடி யரகராவென்றமயிலே, அறனைவலம்வந்துதான் சரணாரவிந்தமதை யகமகிழ்ந் தேத்துமயிலே, குக்குடத்தவசகரதலவிசெய || வேளைமேற் கொண்டுவிளை யாடுமயிலே, குருநாதர்தம்மைச் சுமந்துதினைப்புனங் குலவிமிகவந்தமயிலே, மக்கண்மானையாடந்தை தாய்சுற்றமென்றெனை மகிழ்ந்தளித் தருளுமயிலே, வையகந்தனிலானை சேனைமுதல்வாழ்வெலா மான்றுமனுதவுமயிலே, திக்குன்னையன்றிவே றில்லையென்போர்க்குதவி செய்தாதரிக்குமயிலே, திருப்போரியூரில்வளர் கந்தப்பரேறிவரு சித்திரக்கலாபமயிலே. (௭)

கரிமுகனுக்கிளைய துரைமுருகர்தண்டையங் காலுக்கிசைந்தமயிலே, கைக்கனிக்காக உலகொருநொடியில் வலம்வந்த காம்பீரநீலமயிலே, சரியைகிரி யாயோக ஞானமார்க்கத்தின் சதுர்ப்பதவி தந்தமயிலே,

---

* அக்கரவு - சருப்பம்.

|| வேள் - முருகன்.

* சாலோக சாமீபம் சாரூப சாயுச்சிய சம்பத் தளிக்குமயிலே, திரிதமாய்ச்சமணரை வதைத்துக்கிர மாகவே தொந்தோமென்றுடுமயிலே, தோகைகுறமா ன்றனைத் தேடித்தினைப்புனஞ் சுற்றித்திரிந்தமயிலே, திருமருவுகல்வியு மொழுக்கமும் அடக்கமுஞ் செல் வமுமளிக்குமயிலே, திருப்போரியூரில்வளர் கந்தப்ப ரேறிவரு சித்திரகலாபவயிலே. (அ)

கெங்காபகிரதிச் சேயேறமலைதோறுங் கேளிக்கை யாடுமயிலே, கின்னரர்கள்கிம்புருடர் கருடகாந்தருவர் தொழு கிண்கிணித்தாள் கொண்டமயிலே, வங்காரவ டிவேலர் தெய்வானைவள்ளிக்கு வாகனமுமானமயிலே, வந்தடிபணிந்தோர்க்கு சந்தானசௌபாக்கிய வாழ்வ ளித்தாடுமயிலே, மங்காதபெரியோர்கள் குலமெலாம் விர்த்திக்க வட்டமிட்டாடுமயிலே, மாறுப்பிணிக்கென் று மணிமருந்தாகவே வந்துதவு தோகைமயிலே, சிந்

* சாலோகம் - கடவுளுலகத்தில்வாழுதல்
சாமீபம் - கடவுள் சமீபத்தில்வாழுதல்
சாரூபம் - கடவுளிருப்பிடத்தில்வாழுதல்
சாயுச்சியம் - கடவுளோடுகலந்துவாழுதல்.

காரமங்கை யரி தங்கையுமையாளீன்ற செல்வனைத் தாங்குமயிலே, திருப்போரியூரில்வளர் கந்தப்பரேறி வரு சித்திரக்கலாபமயிலே. (௯)

பத்தியாகினதுபா மாலையைப்பாடினோர் பங்கினின்றுடுமயிலே, பரிபுரையளித்தவேண் முருகரைத்தாங் கிப் பரந்தாடுகின்றமயிலே, சுத்தமுக்காலந் துதிக்குமா னிடர்நடந் துன்பந்தவிர்க்குமயிலே, துய்யசெஞ்சேவக பதாகரைப்போற்றியே சுகமுநறிக்குமயிலே, தொத் தியேவருநெடிய கொக்கினைச்சட்டியிற் சுட்டெரித்துட வுமயிலே, சுரருலகுளோர்புனித மலர்மாரிபொழியத் துதைந்துவிளையாடுமயிலே, சித்தமகிழ்வாயென்னை இர ட்சிக்கவந்துற்ற சின்மயானந்தமயிலே, திருப்போரியூரி ல்வளர் கந்தப்பரேறிவரு சித்திரக்கலாபமயிலே. (௧௦)

மயில்விருத்தம்-முற்றிற்று.



ஆக புத்தகம் 55.

உ

திருச்சிற்றம்பலம்.

# சுயம்பிரகாசரநுபூதி.

# சதுர்கோணமாலை,

# திருத்தொண்டத்தொகை.






இவை

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சென்னை - குளா.

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

20



உ

ஸ்ரீபரப்பிரம்மணேநமஃ.

# சுயம்பிரகாசரநுபூதி.



## காப்பு.

பூமே வியபுங் கவன்மான் முதலோர்
தாமே வியவடைந் திடுதற் பரவென்
நாமே வியுனைச் சொலநல் குவையே
மாமே வியநான் மறைவான் பொருளே. (௧)

மன்னு வுலகத் துனைவாழ்த் தறியேன்
இன்னு பலசெய் திவணே திரிவேன்
நின்னு மகிழ்னைத் தினிநீ டுதலங்
துன்னு தரநல் குசுகோ ததியே. (௨)

மாவென் றதனைத் தியர்மை யல்வலைக்
காவென் றயர்வே னறியுந் தரமோ
பூவென் றகமுற் பொடியென் முடிவைத்
தேவென் றனையான் டவிரும் பரமே. (௩)

ஆறுங் கிதியா முனையன் பினடைந்
தாறு முடல்பொய் யெனவோர் குவனோ

தேனா ரமுதே சிவசின் மயனே
வானா டர்பரா வியமா மலையே. (௪)

என்னே யுலகத் தயரென் னைபொறுத்
தின்னே மயர்வெய் தவிருப் பதுகண்
டன்னே யனையா யருளாய் தகவே
பொன்னே மணியே புனிதப் பொருளே. (௫)

நானா கியவந் நிலைநா னுணரா
தேனா யிடையின் னலினைந் தழுகேன்
தானா கியதத் துவனே தனிமெய்ஞ்
ஞானா கரனே நவிலா ரணனே. (௬)

மாலேந் தியநெஞ் சொடுமோழ் குறுவேன்
நூலேந் தியநுண் ணறிவே தமிலேன்
நீலேந் தியநின் மலனுந் தொழுமின்
பாலேந் தியசிற் பரசிற் சுகமே. (௭)

மதிகொண் டசடா டவிவா னமுதே
விதிகொண் டயரும் வினைமா சறுமோ
துதிகொண் டபெருஞ் சுடரே தொலையா
நிதிகொண் டநிரந் தரநின் மலனே. (௮)

நானா னெனநா டிடுபொய் யுடலைத்
தானா தரமா கவெணித் தளர்வேன்
ஞானா கரநான் மறையின் பொருளாந்
தானா கிநல்குதயா பரனே. (௯)

மூப்பா ழுமகன் றமுதற் பொருளே
அப்பா டுசடைக் கனியே யடியேன்
இப்பா டுபடப் படுமோ விறையுந்
தப்பா டுவனோ தனிநா யகமே. (௧௦)

காரோ திகயற் கண்மடந் தையர்தஞ்
சீரோ திபிடைந் திதிரிந் தயர்வேன்
பாரோ தறியா தபசம் பரகின்
பேரோ துபெரும் பயநல் குதியே. (௧௧)

கண்ணைக் கயலென் றுகருக் குழியா
புண்ணைச் சுகமென் றுபுணைந் தொழிவேன்
எண்ணற் கரிதென் றெழிஞன் மறையும்
நண்ணற் புதஞா னவரோ தயனே. (௧௨)

துவிதப் பெருமா துயர்சென் றிழியா
வவிதத் தையெனக் கருள்செய் குவையே
விவிதப் பெருமா மறைமே லவனே
கவிதைக் குருகுங் கருணா கரனே. (௧௩)

கருநா ஞனையேத் தகிலா ததுகாண்
திருநா ஞனையேத் திடுநா டிகழேன்
கருணா கரகா சணுகா தசுயம்
பிரகா சபரம் பரமீப் பெரிதே. (௧௪)

நானே யதுவென் னுநலத் தகுமெய்ஞ்
ஞானா னுபவந் தனைநல் குவையே

யானா யெனையல் லதுமொன் றுமிலா
வானா டர்பெறு தவரோ தயனே. (௧௫)

போதா சனனோ டுபுரந் தரன்மால்
நீதா வெனநே டுமிரா மயனே
மேதா வியரேத் திடுவித் தகநின்
பாதாம் புயமே புகலெம் பரமே. (௧௬)

நின்னா டிநினைந் துநினைந் துருகென்
னின்னா மையையென் றுவிடப் பெறுகேன்
கன்னா லுமுளத் தவர்கா ணறியா
மன்னா மறைநா டியயா மணியே. (௧௭)

இஞ்சென் றனைநா டியிருந் தறியேன்
வஞ்சந் தனையோ ருருவங் கொடுநின்
றஞ்சந் தரமென் னைகொலா ளுடையா
தஞ்சென் றடைவேன் றனையாண் டருளே. (௧௮)

இமையோ ரையுமுன் னையிசைத் தறியேன்
சுமையா கியதூ வுடல்கொண் டுழல்வேன்
இமையோ ரறியா விறையே யெமையா
ளமையோர் புடைகொண் டவருட் கடலே. (௧௯)

மைவைத் தமலர்க் கண்மடந் தையர்தம்
பொய்வைத் தநிலைக் கருபுந் தியினேன்
உய்வைத் தரவென் றுளநா டுவைநற்
சைவத் தரசே தனிநா யகனே. (௨௦)

ஆதா ரகிரு துகழற் பதமென்
றோதா திவணைந் துழிதந் தயர்வேன்
மாதா வனையாய் மதிசே கரனே
பூதா திபவஞ் சமுதற் பொருளே. (௨௧)

பகலோ டிரவில் லதோர்மெய்ப் பரம
சுகநா டியடைந் தனன்சோ தியனே
தகவே துமிலார் தொழுதன் மையனே
நிகரோ தறியா தவிரா மயனே. (௨௨)

புன்மைக் கிடனுப் புலைநெஞ் சழிவேன்
வன்மைப் பெருமா யைவலத் துழல்வேன்
தன்மைக் கினிநீ யலதா தணவா
நன்மைப் பதநல் குவர்நா யகனே. (௨௩)

பற்றே துமிலா தவர்பா லடையே
யுற்றே னுனசந் நிதியுத் தமனே
கற்றே னலநின் கருணைக் கழலா
நற்று ளருளுன் மறைநா யகனே. (௨௪)

வாட்டந் தவிர்மா சுகஞா னமெனும்
நாட்டந் தனைநல் குதிநா னவலத்
தேட்டந் தனினெய் தியசெந் நெறியோர்
கூட்டந் தருவாய் குருமா மணியே. (௨௫)

திணைபா லிடமில் லதுமுள் ளதிலக்
கணியா வருநன் னவருங் கரிநீர்

துணிபா கியதா ளையுறு துதயர்க்
தெணியா னயருந் தரமீ தழகே. (௨௬)

வஞ்சஞ் செறிநெஞ் சுடையே னைவலிந்
தஞ்சும் பரிசென் றகல்விப் பதுவே
தஞ்சம் மெனுமன் பர்கடாங் கியதோர்
விஞ்சும் மறைநான் கின்விழுப் பொருளே. (௨௭)

வேதா வொடுவிண் டுவுமே வறியா
நாதா வெனநா டிமனங் குழையேன்
மேதா வியர்மே வியவித் தகனே
வாதா முனதின் னருளென் வயினே. (௨௮)

நஞ்சே யெனுமா தர்நலங் கவர்வான்
உய்ஞ்சே னெனலிங் கிவனோ தரியேன்
தஞ்சே யெனநின் றனதா ளணைவேன்
அஞ்சே லெனவா ளருளா ரமுதே. (௨௯)

நிருபா திகமா னநெறிக் கணெனைத்
தருவா யெனநின் னடிதாழ் குவனால்
பிரமா திகளோர் வருபித் தசுயம்
பிரகா சசதோ தயபே ரொளியே. (௩0)

அயலா கவெனைக் கருதா தறிவா
நயனா குநலந் தனைநா டுவனோ
மயலே துமிலார் தொழுமாண் பினனே
வியனா ருருவா யொளிவிண் ணவனே. (௩௧)

செய்வான் செயல்செய் பவனன் றியிரா
தய்வா ருணரும் பரிசிங் கிதுவென்
மெய்வாய் மையுணர்த் தினமே தகையோய்
சைவா வுனையன் றியொர் சார்பிலனே. (௫௨)

நறுகிற் குயிலக் கணைமூன் றினயர்
தளரிற் றுணிந்தென் னியல்சோ தனைகண்
டறுகிற் கிலனங் கணவா ரியமெய்
யெனுமன் பருளத் தவரென் னையனே. (௫௩)

ஞானா திகமா னநெறிக் கனுமைழந்
தானா மையெனக் கருளா ரியனே
வானா தியைம்பூ தமெனும் வகையா
னானா திபநான் மறையுட் பொருளே. (௫௪)

தன்னந் தனிநின் றசதோ தயவாழ்
வின்னந் தமியே னுறவென் னுவையே
மன்னும் மறைநான் கும்வகுத் தனைசெய்
தின்னுஞ் சுயஞ்சோ தியதா முருவே. (௫௫)

மாவாள் விழிமங் கையர்கொங் கைவலத்
தாவா வயர்வே னயரத் தகுமோ
பூவா ரடிப்புண் ணியனே புகன்மா
தேவா சிவசின் மயதே சிகனே. (௫௬)

---

ஆக புத்தகம் 56.



உ

சிவமயம்.

# சதுர்கோணமாலை



உற்றதலம் பெருந்துறைநா டென்னுந்தேச
முட்புகுந்துசங்கநதி தீர்த்தமாடிக்
கொற்றமொடு கித்தவளநாடுபோய்வை
குந்தமுற்றுநெடியோனையடிவணங்கக்
கற்றனையே காலைமாலை யுச்சிமூன்று
காலமுநீபூசித்துக்கவலைதீரப்
பெற்றனையேநெஞ்சகமே யிந்தப்பேறு
பெற்றவற்குப் பிறவியுமுண் டென்னலாமோ. ௧

ஊறல்வந்துபாயுமடைதன்னின்மூழ்கி
யுச்சிமலைமீதேறு மடையிற்பூத்த
நாறுமலர்தனையெட்டிப் பறித்துக்கொண்டு
நடுவீடுசென்றுமணிமண்டபத்தில்
ஏறிமயிர்ப்பாலத்தி னின்றுகொண்டெம்
மீசன்மேலம்மலணச் சாத்தநீயும்
பேறுபெற்றாய்நெஞ்சகமேயிந்தப்பேறு
பெற்றவற்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௨

நீடுகதிர்சந்திரனு மாடும்பொய்கை
நீர்தன்னின்மூழ்கிமலர் கொய்தப்பாலே
ஆடுமலர்ப்பாதமுடையழகன்கோயி
லணுகியரன்றிருமுடியி லந்தப்பூவைச்
சூடிவலமிடமாகவீழ்ந்தெழுந்து
தொழுதுகரங்குவித்திறைஞ்சித்துயரந்தீரப்
பீடுபெற்ருய்நெஞ்சகமேயிந்தப்பேறு
பெற்றவற்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௩

ஒவ்விருந்தகுளத்தில்வீழ்ந் தலைநீக்கி
யோங்காரகம்பவழி தொற்றயேறிச்
சவ்விருந்தமனைபுகுந்து சிவந்தபாதத்
தாமரையைத்தரிசித்துத் தற்சொரூபம்
அவ்விருந்தவிடந்தேடிப் புகுந்துசோதி
யத்தனரனருள்பெற்ருனந்தக்கண்ணீர்
பெய்வ்வுபெற்ருய்நெஞ்சகமேயிந்தப்பேறு
பெற்றவற்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௪

நவ்வுமவ்வுமிருந்தவிருபதியினுள்ளே
நடுவிருந்துஞாலமதை யாண்டிருந்த
சிவ்வும்வவ்வுமிரண்டனையுந்தரிசித்தப்பாற்
சங்கமலமலர்ப்பாதவிருப்பிடஞ்சென்
றவ்வுமுவ்வுமிருந்தவிட மேவியல்ல
லற்றிடமுற்றருள்பெற்ரு னந்தபாஷ்பம்
பெய்வ்வுபெற்ருய்நெஞ்சகமேயிந்தப்பேறு
பெற்றவற்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௫

நாற்சதுரக்கூடத்து வாசற்சென்று
நல்லநீர்க்கடலிலனுட்டானஞ்செய்து
தீச்சுடரதாகுநெருப்பாறுதாண்டிச்
சிறப்பானதானபரவெளியுட்சென்று
மாட்சிபெறுமம்மையுளங்களிக்கநோக்கி
மகிழ்ந்தாடுஞ்சிவனிருத்தம்பார்த்துநல்ல
பேட்சையுற்றுய்நெஞ்சகமேயிந்தப்பேறு
பெற்றவர்க்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௬

பயமிருந்தமனைகடந்து முப்பாழ்தாண்டிப்
பதமந்திதீர்த்தத்திற் பூசைதான்செய்
தயனையளித்தவன்வீட்டுக்கப்பாலேகி
யறுத்தடைத்தவாசல்கடந் தருளினாலே
சுயம்பதியாயெழுந்துபடைத் தளித்த மூர்த்தி
சோதிபராபரத்தையடிவணங்கிநல்ல
பெயர்பெற்றுய்நெஞ்சகமேயிந்தப்பேறு
பெற்றவர்க்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௭

மூலையிருந்தவிடத்தையறிந் தமிர்தமுண்டு
மூன்றுகணின்பிரகாசத் தெளியிற்சென்று
தலையிருந்த விடமறிபாலுத்திமூழ்கித்
தற்பரத்தின்விட னுகித் தற்சொரூபக்
கலைவரவுபோக்கு நினைவாலேகண்டு
கங்குல்பகலற்றவிடத்திருந்துவாழப்
பெலம்பெற்றுய்நெஞ்சகமே யிந்தப்பேறு
பெற்றவர்க்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௮

உந்தியெனுஞ்சுழிமுனையைப் பற்றியன்பா
லூறுகின்றதாரைசங்கி னிலைமைதான்கண்
டிந்திரனுமாலயனு மறியொணாத
விருதலைமாணிக்க மிருந்திடமேசென்று
நந்திவாகனமூர்த்தி கோயின்முன்னு
நடுவெழுந்தபீடலியார் தன்னைப்போற்றிப்
பிந்திலாய் நெஞ்சகமேயிந்தப்பேறு
பெற்றவற்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௯

சிற்புடையவைகுந்தம் பிரமலோகந்
தேடரியசிவலோக மகேசலோகந்
திறப்பறிந்துசென்றுசதாசிவனார்லோகஞ்
சேர்ந்துபரலோக நெடுநாளிருந்து
துறப்பறிந்து மயிர்ப்பால மீதிலேறிச்
சொர்க்கலோகம் புகுந்துபரத்தைச்சேர்ந்தாய்
பிறப்புமுண்டோநெஞ்சகமேயிந்தப்பேறு
பெற்றவற்குப்பிறவியு முண்டென்னலாமோ. ௧௦

சதுர்கோணமாலை

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 57.

திருச்சிற்றம்பலம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# திருத்தொண்டத்தொகை.

உலகெலா முணர்ந் தோதற் கரியவன்
நிலவு லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

பண்-கொல்லிக்கௌவாணம்.

தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே யென்னாத இயற்பகைக்கு மடியேன்
இளையான்றன் குடிமாற னடியார்க்கு மடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார்விறன்மிண்டற்கடியேன்
அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (க)

இலைமலிந்த வேல்னம்பி யெறிபத்தர்க் கடியேன்
ஏனாதி நாதன்ற னடியார்க்கு மடியேன்
கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்க் கடியேன்
கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்
மலைமலிந்த தோள்வள்ளல் மானக் கஞ்சாற
னெஞ்சாத வாள்தாய னடியார்க்கு மடியேன்
அலைமலிந்த புனன்மங்கை யானாயர்க் கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௨)

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்
முருகனுக்கும் உருத்திர பசுபதிக்கு மடியேன்
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினா லெறிந்த
அம்மையா னடித்தண்டிப் பெருமானுக் கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௩)

திருநின்ற செம்மையேசெம்மையாக் கொண்ட
திருநாவுக் கரையன்ற னடியார்க்கு மடியேன்
பெருநம்பி குலச்சிறைதன் னடியார்க்கு மடியேன்
பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன்
ஒருநம்பி யப்பூதி யடியார்க்கு மடியேன்
ஒலிபுனல்சூழ் சாத்தமங்கை நீலநக்கர்க் கடியேன்
அருநம்பி நமிநந்தி யடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௪)

வம்பறு வரிவண்டு மணநாற மலரு
மதுமலர்நற் கொன்றையா னடியலாற்பேணு
வெம்பிரான் சம்பந்த னடியார்க்கு மடியேன்
எயர்கோன் கலிக்காம னடியார்க்கு மடியேன்
எம்பிரான் திருமூல னடியார்க்கு மடியேன்
ஆட்டமிகு தண்டிக்கு மூர்க்கர்க்கு மடியேன்
அம்பரான் சோமாசி மாறனுக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௫)

வார்கொண்ட வனமுலையா ளுமைபங்கன் கழலே
மறவாது கல்லெறிந்த சாக்கியர்க்கு மடியேன்
சீர்கொண்ட புகழ்வள்ளல் சிறப்புலிக்கு மடியேன்
செங்காட்டங்குடிமேய சிறுத்தொண்டர்க் கடியேன்
கார்கொண்ட கொடைக்கழறிற் றறிவார்க்குமடியேன்
கடற்காழிக் கணநாத னடியார்க்கு மடியேன்
ஆர்கொண்ட வேற்கூற்றன் களந்தைக்கோ னடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௬)

பொய்யடிமை யில்லாத புலவர்க்கு மடியேன்
பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்க் கடியேன்
மெய்யடிய நரசிங்கமுனையரையர்க் கடியேன்
விரிதிரைசூழ் கடனாகை யதிபத்தர்க் கடியேன்
கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன்
கழற்சத்தி வரிஞ்சையர்கோ னடியார்க்கு மடியேன்
ஐயடிகள் காடவர்கோ னடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௭)

கறைக்கண்டன் கழலடியே காப்புக் கொண்டிருந்த
கணம்புல்ல னம்பிக்குங் காரிக்கு மடியேன்
நிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலி வென்ற
நின்றசீர் நெடுமாற னடியார்க்கு மடியேன்
துறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ் சோதித்
தொன்மயிலை வாயிலா னடியார்க்கு மடியேன்
மறைக்கொண்ட வேல்னம்பி முனையடுவார்க்கடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௮)

கடல்சூழ்ந்த வுலகெலாங் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்க னடியார்க்கு மடியேன்
மடல்சூழ்ந்த தார்நம்பி யிடங்கழிக்குந் தஞ்சை
மன்னவனாஞ் செருத்துணைத னடியார்க்கு மடியேன்
புடைசூழ்ந்த புலியதண்மே லரவாட வாடி
பொன்னடிக்கே மனம்வைத்த புகழ்த்துணைக் கடியேன்
அடல்சூழ்ந்த வேல்நம்பி கோட்புலிக்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௯)

பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்க ளெல்லார்க்கு மடியேன்
முப்போதுந் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கு மடியேன்
அப்பாலு மடிச்சார்ந்தா ரடியார்க்கு மடியேன்
ஆரூரன் ஆரூரி லம்மானுக் காளே. (௧௦)

மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல்
வரிவளையாள் மானிக்கும் நேசனுக்கு மடியேன்
தென்னவனா யுலகாண்ட செங்கணார்க் கடியேன்
திருநீல கண்டத்துப் பாணனார்க் கடியேன்
அன்னவனா மரனடியே யடைந்திட்ட சடையன்
இசைஞானி காதலன் திருநாவ லூர்க்கோன்
அன்னவனா மாரூர னடிமைகேட் டுவப்பார்
ஆரூரி லம்மானுக் கன்பரா வாரே. (௧௧)

உ

கடவுள் துணை.

பழனியாண்டவர் தோத்திரமென்னும்

# சிவசுப்ரமண்யர் அகவல்.



இஃது

சிறுமணலூர்

முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910.

நச்சுவேனிகர்விழி நாயகிமார்கள்
இருபுறமிலங்க விமையவர்போற்றச்
சுருதியார்ப்பத் துறந்தவர் துதிப்பக்
கோலாகலத்துடன் குமரனேயென்றன்
மேலேயருள்வைப் பாயேவேலா
கந்தாவாவா கடம்பாவாவா
வந்தாள்மயின்மேல் மணியேவாவா
படிகொடுதூதர்கள் பாசம்விட்டெறிந்துயிர்
கொடுபோவதற்குக் கொடுமையாய்வருங்காற்
பஞ்சமாபாவியேன் பயந்துநடுங்குஞ்
சஞ்சலம்வாராமற் சண்முகாகாக்க
பாயும்புலியு நோயுமுளுமல்
மாயவலேயில் மயங்கியில்லாமல்
கார்க்கக்கார்க்கக் கடவுளேகார்த்து
சேர்க்கச்சேர்க்கவுன் றிருவடிநிழலில்
அம்பலவாண னருமைபுத்திரனே
நம்பினேனுன்னை நமக்கடைக்கலந்தா
மாலோன்மருகா மயிலோய்சரணம்
குறமாதிலங்குக் கொண்காசரணம்
துறவோர்போற்றுந் தூயோய்சரணம்
திங்களைத்தரித்த சிவனதுபுதல்வா
செங்கையில்வேலணி செம்மலேவாவா
சரவணபவனெனு மடியார்தமக்கே
அருகேயிற்கு மண்ணலேவாவா

திருஞ்செந்தூர்வாழ் செவ்வியோய்வாவா
திருப்பெருங்குன்றன் துறைவோய்வாவா
குருபரவேலா குமராவாவா
ஒருகையிற்வேலு மொருகையிற்பிரம்பும்
மூன்றுகையில் முளையொளிர்வாளும்
நான்குகையி னல்லசூலமும்
ஐந்துகையி லங்குசபாசமும்
ஆறுகையில் விறுகோடாலியும்
ஏழுகையி னிடிக்குந்தெண்டமும்
எட்டுக்கையினிற் பட்டமுமிலங்க
ஒன்பதுகையிற் சங்குசக்கரமும்
பத்துக்கையிற் படைபீறங்கியும்
பதினொருகையிற் சிதரிடுவெடியும்
அல்லும்பகலும் பில்லிசூனியமும்
ஆடும்பேயு நாட்டைவிட்டோட
அடியடிபிடிபிடி நெறிநெறிமுறிமுறி
பொடிபடபொடிபட எறிஎறிவேலினால்
அன்னையுநீ யென்னப்பனுநீயே
சென்மப்பிணிக்குத் தேசிகநீயே
அருமையாய்வந்தே திருவருள்புரிந்து
சிறியனேக்கார்க்குஞ் சிவமலைக்கந்தா
அந்திற்சொக்க ரருளியபாலகா
மந்திரகிரிமேல் வளருங்காங்கயனே
அழகாமேருவி லழகுகிரியில்

எழிலோடமரு மெம்பெருமானே
பலமலேகளிலும் பலவிளையாடி
நிலேபெறுவ்விர நீண்முடியோனே
அருந்தமிழெனக்கே யன்புடன்றருநீ
குருந்தமாமலேயிற் குடிகொண்டவனே
அன்னமுமுடையு மதிகபாக்கியமும்
மன்னுதாநீ மருத்தக்கிரியோய்
என்றுமென்னே யிடுக்கணுளுமல்
மொன்மலேக்குமரா போற்றினேனுன்னே
அண்டவாத வரையாப்பிருமல்
கண்டமாலேயுங் காய்ச்சலுங்குளிரும்
இன்னம்பலபல வியாதிகளெல்லாம்
உன்றன்பெயரு முன்னண்ணன்பெயரும்
நினைத்துநீறள்ளி நீட்டியேபோட்டால்
கனத்தகாற்றிற் பஞ்சுபோற்கடிதில்
ஓடிடுமென்றே வொண்ணுதலுமையாள்
பீடுறுசுதனே வாழ்பெருமானே
ஆதியில்செய்த வினையுமூதேவி
முறிஞ்சோடவு முடுக்குமுருகையா
உன்றிருநீறுகண்டால் சீரிவருமிருகம்
சிங்கமண்டாது சிவகிரிக்கந்தா
அன்னுடமயிலேறி என்னேரம்வருவாய்
இடும்பனைக்கூட்டி இக்ஷணம்வருவீர்
அந்தமுநாளும் சித்திரைமாதம்

நித்தியம்வருவாய் வெற்றிவேலவனே
வைகாசிமாதம் ஒய்யாரமாக
மெய்யாவாவா வேலாயுதனே
ஆனியிலொருநாள் சரவணமுருகா
ஆடிமாதம் நாடுவேனுன்னைத்
தேடியேவந்து சிவபதந்தாரும்
ஆவணிதனிலுன் சேவடிகாணக்
கோபுரம்விட்டுக் குமராவாவா
எப்போதும்நீயும் இப்பவேவந்து
அற்பசிமாதம் அருள்தருவாயே
நித்தியமுன்னைத் தோத்திரம்செய்யக்
கார்த்திகைமாதம் கருதிவாகந்தா
ஆரணப்பொருளே காரணமூர்த்தி
மார்கழிமாதம் வந்தெனைக்காரும்
ஐயாஐயா வையாபுரியான்
பையவேவாரும் சாமிசண்முகனே
பாசுபதமும் அமார்வைபோகமும்
மாசியில்வந்து வரந்தாவேண்டும்
சங்கரிபெற்ற தங்காதங்கா
பங்குனிமாதம் பழனிபண்டிதனே
ஆயன்மருகா மலையேஸ்பரனே
ஞாயிறுவாரம் ரட்சிப்பாய்வந்து
மங்கைபங்கானா செங்கையில்வேலா
திங்கட்கிழமைவாருஞ் சேவலங்கொடியோய்

பவமதைநீக்கித் தவமதுவருக
செவ்வாய்க்கிழமை மெய்யாவாரும்
பதமதுகொடுத்து விதவிதமான
புதன்கிழமைவாரும் பொன்மலைவேலா
வீசம்புகொண்டு கெடாமிரட்டி
வியாழன்வாரும் வேலாயுதனே
புள்ளினிமான்ற வெள்ளிநாயகனே
வெள்ளிக்கிழமை வெளிவரவேணும்
புன்மயிலேறித் தினக்குறத்தியும்நீயும்
சனிக்கிழமைவருவாய் சரவணைத்துரையே
சவுந்தரவல்லி சதாசிதம்பரிதந்த
சரவணபவனே சிக்கந்தமலையில்
தாமரைபொய்கையில் நேர்மையாய்வளர்ந்து
சோமனைத்தரித்த சொக்கரிடம்நான்
தவிர்ந்துவிடாமல் வரந்தரவேணும்
பழனுபுரியிற் சரவணபவனே
சந்திரன்துலங்க இந்திரனிலங்க
சிந்தையில்வந்து சிவபதந்தாரும்
தஞ்சமென்றுன்னைப் போற்றினேன்முருகா
நெஞ்சுக்குமேலே நின்றிடுகுமரா.

சுப்ரமண்யர் அகவல்
முற்றிற்று.

உ

கடவுள்துணை.

திருச்சிற்றம்பலம்.

ஔவையார் அருளிச்செய்த

# கணபதி ஆசிரிய விருத்தம்.




இவை

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910.

கணபதிதுணை.

# கணபதி ஆசிரியவிருத்தம்.



துதிகொண்டநின்னடி தொழுங்கருணை தாதமிழ் தொடுக்கின்ற வெகுவித்தைதா, துன்பங்களணுகாதவி ன்பங்கள்தாநல்லசுகசீவனப்பெருமைதா, பதிகொண்ட புத்திரமித்திரகளத்திராதிபர் பரிந்துதவவந்தவரெலாம் பசியாறவெப்பொழுது முசியாமலன்னம் படைக்கின்ற கனபவுசுதா, மதிகொண்டபிரபைத்தின்வல்லபையிடத் தனே வலியபதினொருகரவனே, மத்தப்ரமத்தனே சித் தப்ரசித்தனே வசிகரக்கிருபையாளனே, குதிகொண்ட மந்தாரைக் குதிகெனவேபெருகு குஞ்சரத்திருமுகவ னே, குணபதிஸ்ரீமகாகணபதீ விகடதடகும்ப கெம்பீ தரனே. (க)

பாடிடும்பெரியோர்க ளிகழாதவசிகரம் பகைஞர்தொழவலவசிகரம், பன்னுதமிழ்வசிகரம் பாலவயர்கள்வசிகரம் பல்வளந்திகழ்வசிகரம், 'சூடித்தமானிடர்களிகழாதவசிகரந்துங்கமன்னர்வசிகரந், துட்டமிருகபயம்திட்டமுடனே தந்து துன்பமற வெனையாளுவாய், மாடித்தலங்கிர்தபயோதரிமனோன்மணி மகோதரிசடாதரிமகா, மந்த்ரதந்த்ரப் பிரகிர்தியிந்த்ரவிம்பச்சுகிர்த்திவல்லபையிடப்பாகனே, கோடித்தவேதாக மம்பரவமிழ்கின்ற குஞ்சரத்திருமுகவனே,குணபதிஸ்ரீமகாகணபதிவிகடதட கும்பகெம்பீரதரனே. (௨)

பட்சிக்கு மாகார நித்திரைமைதுனப் பலசயனைத்திசையிலானைப், பழியனையிசையிலா மொழியனைக்கொடியவாபாசனைப் பாதகவெறுங், கட்சிக்குரித்தான கன்மனைச்சன்மனைக் கட்டதுட்டக்கபடனைக், கலியனைக்குரோதகிங்கிலியனைப்பிரேதவெங் காமுகனை யாளநினைவாய், மட்சிக்குரித்தானதெள்ளப்பமெட்பயறு வள்ளிக்கிழங்கினுடனே, வாழைக்கொழுங்கனியு மாவின்செழுங்கனியுமட்டற்றவெகுபட்சணு, 'குட்சிப்பிரதாபனே ரட்சிக்கவேவர்தகுஞ்சரத்திருமுகவனே, குணபதிஸ்ரீமகாகணபதிவிகடகட கும்பகெம்பீரதரனே. (௩)

இருநாழிநெற்கொண்டு முப்பத்திரண்டறமிரட்சிக்குமேன்மையுடையாள், இடமாகவேவந்து திடமான வசிகாம்யாவர்க்குமருள்கையாலே, ஒருநாழிப்பொழுதுமுனை மறந்தறியே னுனக்கியா னடிமை யானேன், உன்பாதமேதஞ்ச முன்காமலன்றி மற்றோர்காவல் வேறுமுளதோ, திருநாமமோதிப்படிக்கச் செபிக்கத்தியானிக்கநேசிக்கவர், திருக்கத்துதிக்கக்களிக்கச் சதாபத்திசெய்விக்க வாழ்விக்கவென், குருநாதனே முத்திதருநாதனே நல்லகுஞ்சரத்திருமுகவனே, குணபதீஸ்ரீமகாகணபதீவிகடதட கும்பகெம்பீரதரனே. (௮)

அடைமட மெனுதபடிபடியேனிருக்குமிட மன்னதானம்பகிரவும், அந்தணர்தபோதனர்கள் செந்தமிழ்ப்புலவர்களரதேசிபரதேசியார்க் கிடமுடையமனதினுடனெங்கும்பிரகாசமா யிட்டுண்டிரட்சை பெறவும், இகலோகபரலோகமெளிதாகவேயற் றிரங்கியெனையாண்டருளுவாய், கடலைபொரியவல்பயறுவடைதுவரை மதுரமிகுகறியமுதுநறு நெய்தயிர்பால், கண்டுசர்க்கரைநல்லகதலிபலமாவிளங்கனி செங்கரும்பொடிளநீர், குடவயிறுதனிலடையுமிடமுடைய பொழிக்குணே குஞ்சரத்திருமுகவனே, குணபதீஸ்ரீமகாகணபதீ விகடகடகும்பகெம்பீரதரனே. (௯)

மிடிகெடமகரமந்த்ர யந்த்ரதந்த்ரக்கிரியை விளங்க க்களங்கமறவே, விட்டகலநிட்டை நியமங்கள்கைவரவு நலமெய்ப்பாதகமல நினையும், படிகிருபைவரவுமுற்பழ வினையறுத்தனன்பரிபாலனம்பெருகவே; பன்னுதமிழி சைசெய்த பரியந்தமேவரும்படித்திட விரட்சைபுரிவா ய், வடிவுடையவல்லபையைவாமத்திலேதவத்தமைத்த னேசித்ரரூபா, வச்சிரமாணிக்கமணி கும்பச்சரோருகா வளமருவுருசிகரமுளாய், கொடியவினை பொடிபடநடி க்கும் பிரதாபனே குஞ்சரத்திருமுகவனே, குணபதீ ஸ்ரீமகாகணபதீவிகடதடகும்பகெம்பீரதரனே. (௬)

மாதுளங்கனிபொருகை தண்டொருகைதனுவொ ருகைமன்னுமொளிர் சூலமொருகை, வலியசக்கரமொ ருகை வளமிலகுபுண்டரிக மலரொருகை கபிறொருகை நீர், மீதிலுற்பலமொருகைசேரதிநெற்கதிரொருகைவெ ண்கோடுமொருகைநடுவே, வீசியதுதிக்கையி லிரத்தி னகலசத்துடன் விளங்கியேயெனையாளுவாய், தாதளக வல்லபையிடப்பாகனேயமரர் தலைவனேசகநாதனே, ச ருவவசிகரமுதவுபெருமதிரிநயனமுளசந்திரசேகரவிகிர் தனே, கோதறுசெழும்பாகு முப்பழமோ டப்பநுகர்

குஞ்சரத்திருமுகவனே குணபதீஸ்ரீமகா கணபதிவிகட தடகும்பகெம்பீரதரனே. (எ)

வீமனெனவோதனுவில் விசயனெனவோகனகமேரு வெனவோமயிலின்மேல், வீரனெனவோகொடிய சூரனெனவோவுக்ர விக்கிரமாதித்தனெனவோ, காமனெனெனவோபெரியசோமனெனவேகொடைக்கன்னனெனவோவுனையெணுக், கடையரிற்கடையரைப் புகழ்சொல்லியவர்வாயில் காவாதபடியருளுவாய், சாமளிசவுந்தந் திரியட்சிபகவதி குமரிசங்கரிபரம்பரி, கிராதரிகௌரிமகமாயிபரிபூரமணிந்திலகு சரணிவனசக்கொங்கையாள், கோமளிபவானிபரையாமளையளித்தவா குஞ்சரத்திருமுகவனே, குணபதீஸ்ரீமகாகணபதிவிகடதடகும்பகெம்பீரதரனே. (அ)

தழைகின்றசெவிகளும் ரத்னக்கிரீடமுந் தந்தத்திரியட்சமுடனே, தண்களபமணிமார்பு மையிருபுயங்களுஞ் சகலவசிகரமேன்மையும், இழைகின்றபுரிநூலுமீரைந்துகத்தலமு மெம்மையாள்வருதுதிகையும், இன்பக்குறுந்தாளும்மாணிக்கபீடத் தெழுந்தருளிருந்தபடியே, விழைகின்றபோத்திபாகத்திவிண்மகன் விசுமலர் மெய்க்கருணையாள், வில்லபயமென்னு நுதல்வல்லபை

யலங்கார விம்பத்தனர்தழுவவே, குழைகின்றசெம்ப
வளமேனிப்ரகாசனே குஞ்சரத்திருமுகவனே, குணப
தீஸ்ரீமகரகணபதிவிகடதட கும்பகெம்பீரதரனே. (௯)

சீறுகிறபகைஞர்குல நிர்ம்மூலமாகத்திரிபுவனங்க
ள்வந்துதொடவே, சித்தவித்யாதரர் தமிழ்க்கிறைகவி
த்துவந்திகுதிகெனவுதவியதனைப், பேரொடுபடிப்பவர்க
ள்கிளை வாழ்வேவரும் பிரசண்டகவிராசராய்ப் பிரகாச
வசிகரந்தந்தென்னையன்புடன் பிரபலமுறவே யாளுவா
ய், ஆறுசமயங்களினும் பூசைகொண்டருளு மப்பனே
தொப்பைவயிறு, அழகானசெம்பவள மேனிப்பிரகாச
னேபடியார்களுளவாசனே, கூறரியமுப்பத்துமுக்கோ
டிதேவர்பணி குஞ்சரத்திருமுகவனே, குணபதிஸ்ரீமகா
கணபதிவிகடதடகும்பகெம்பீரதரனே. (௧0)

அரகராசிவசிவசங் கராநமசிவாயநம வாயநமவசிய
நமவென், றரியபஞ்சாக்கரப்பொருளையுணராதவனையா
காமுழுக்கபடனை, பரகதிக்கயலானபண்டனைப்பஞ்சமா

பாதகனை யரிபதகனைப், பதரனைச்செறியு மலவுசுரனை ச்சிதடனைப்பட்சமொடெரட்சைபுரிவாய், மாகதப்பிரபை சந்திரவதனிசர்வாபரணி மங்கிலிசுமங்கலிமகா, மகுட பதிசுகுடிமிர்கமதகளபமிகுமோக வல்லபைபிடப்பாக னே, குரைகடல்தனிற்றுயிலரிக்கு மருகேசனே குஞ் சரத்திருமுகவனே, குணபதிஸ்ரீமகா கணபதிவிகடதட கும்பகெம்பீரதரனே. (௧௧)

கணபதிபேரில் ஆசிரியவிருத்தம்

முற்றிற்று.



ஆக புத்தகம்-60.

உ

வேலுமயிலுந்துணை.

திருத்தணிகை

# செங்கல்வராயசுவாமி தோத்திரம்.



இஃது
சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களாலியற்றி
தமது, சென்னை சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது

1908.

உ

முருகன் றுணை.

திருத்தணிகை

# செங்கல்வராயசுவாமி

## தோத்திரம்.

சீர்கொண்ட மணியேறு முடியாறு வதனமுஞ்
செழித்தபன் னிருவிழிகளுந்
திருநீற்று காப்பும் பளிச்சென்ற திலர்தமுஞ்
செந்தமிழ் பிறந்தவாயும்
மார்கொண்ட ஜீவமா ணிக்கப் பதக்கமும்
மலையொத்த புயமீராறும்
மணிமந்த்ர வேலா யுதந்தொட்ட செங்கையும்
மருவுமலர் மாலையழகும்
ஏர்கொண்ட திருமாது மகளோடு தெய்வானை
யிருபாற் றுலங்குமழகும்
இணையற்ற தண்டைச் சிலம்பார்ந்த பாதங்க
ளேழையான் காணவருவாய்
தார்கொண்ட கோதண்ட பாணிக்கு மருகனே
தரையெலாம் புகழ்தெய்வமே
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 1

புத்தியெள் ளளவேனு மில்லா தகந்தையால்
பூர்வீக ஜென்மவினையால்
பூததய வெண்ணாத கன்மனச் சேட்டையால்
பொல்லாத காலதிசையால்
உத்திரவு பெற்றநவ கிரகபே தத்தினா
லுத்தமர்கள் சாபத்தினால்
உன்னடித் தஞ்சமென் றடையாம லுலகெலா
மோடித் திரிந்தபிழையால்
இத்தனைக் கடூரவிர ணங்களுக் காளாக
யென்னபா வஞ்செய்தனோ
இனிவேறு துணையாரு மிலைகாரு மென்றெனது
யிசயத்தை பலிகொடுத்தேன்
தத்திமி யெனப்பரத நிர்த்தமிடு மஞ்சைமேற்
றரிசனந் தந்தருளுவாய்
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 2

நாசிமேற் றொண்டையில் நாக்கடி யிலுந்தியில்
நடைகா லிடத்துடையினில்
நடுமுதுகி னிற்றோளில் நயனமேல் நெற்றியில்
நரைநீர் சுரந்தபுண்ணாய்ப்
பேசவு மிருக்கவும் நடக்கவும் வசப்படா
பிணிகொண்ட பேருமுளரோ
புதலந் தனிற்கொடிய பாவியா னொருமுன்
பொன்னடிக் கபயமென்றேன்

மாசிலா நின்கமல வழனைகயும் புகழையும்
    மைந்தனாற் சொல்லவசமோ
மாயவன் மருகனே முருகனே ஷண்முகா
    மாதவர் தொழுந்தெய்வமே
தேசிக னெனும்பெரிய பேர்பெற்ற கடவுளே
    திக்குவே றில்லைகண்டாய்
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
    தணிகையங் கிரிவாசனே. 3

அருளில்லை யேதொழுந் தெருளில்லை யேபுல
    னகந்தைக ளொடுங்கவில்லையே
அடக்கமில்லை யேமன மொடுக்கமில்லை யேநல்ல
    அறிவென்ப தணுவுமில்லையே
குருவில்லை யேதர்ம குணமில்லை யேவரங்
    கொண்டுகரை யேறவென்றால்
குறைவற்ற செல்வமு மில்லையே நானெந்த
    குறிகொண்டு நெறிநிற்பனோ
வெறிகொண்ட பித்தர்போல் நித்தமுன் னைத்தொ[ழும்
    விரகமொன் றேனுமருள்வாய்
போதனொடு மாதவன் பூதகண நாதர்முதல்
    விண்ணவர் தொழுந்தலைவனே
தருவாச னீன்றபரு வக்குமரி கணவனே
    தண்டா யுதக்கடவுளே
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
    தணிகையங் கிரிவாசனே. 4

பாருக்குள் யானுமோ ருருகொண்டு பூமிக்குள்
பாரமா யிரவுபகலும்
பஞ்சுக்கு நிகரான பாடுபட் டேனெஞ்சு
பச்சைபுண் ணாதையோ
பேருக்கு மனிதனாய்த் தோற்றமே யல்லாது
பிணியற்ற பாடில்லையே
பகைவனே யானாலு மித்தகைய தருணத்தில்
பார்க்கவும் மனதுவருமோ
ஊருக்கு ளென்குறைக ளாருக்குச் சொல்லுவே
னுன்மன மிரங்கவில்லையோ
ஒருகோடி யல்லவே யெண்ணற்ற கோடிபேர்க்
குதவிசெய் தக்கடவுள்நீ
தாருக்கு ளுனையன்றி யினிவேறு தெய்வமிழல்
தஞ்சமென் னெஞ்சில்நினையேன்
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 5

மதிகொடு நினைத்தொழ மபக்கத்தை யேகொடு
மாசற்ற நன்னெறிகொடு
மந்திரங் கொடுநல்ல யெந்திரங் கொடுவுலக
மாய்கையை விலக்கிக்கொடு
துதிகொடு நின்னடியர் துணைகொடு வூழ்வினைத்
துயரெலாந் தீர்த்துக்கொடு
துரைகொடு பேரின்ப கரைகொடு வடிக்கடித்
தூண்டாத ஞானங்கொடு

நிதிகொடு நிலைகொடு நினைக்கின்ற போதெலாம்
நினதுமலர் சரணக்கொடு
நிந்தையு மகந்தையும் லோபமும் மோகமும்
நீக்கிநல் வாக்கைக்கொடு
ததியென்ற கோடான கோடியடி யாரெலாந்
தடுத்தாண்டு கொண்டையன்றோ
தணிகின்ற குணராஜ பணிகின்ற மனுநேச
தணிகையங் கிரிவாசனே. 6

என்றிந்த மேகவிர ணச்சிறையை மீட்டெனது
ரிதயத்தை மலரவைப்பாய், என்றுநின் னடியார்கள்
போல்நிர்ச் சிந்தையா யென்னையு மிருக்கவைப்பாய்,
நன்றியறி யாக்கொடிய பாவியானாலுமுன் னாமம் மறந்
ததுண்டோ, நாலிரண் டாண்டாக பட்டதுயர் போது
மென்னாதனே கருணைபுரிவாய், கன்றுனதுத்தாயின்
முகநோக்கி யாவெனக் கத்துமுறை போலநிதமுன்,
காலுக்கு அபயமென் றடிமையிர வும்பகற்கதறுமுறை
கேட்கவில்லையோ, தன்னிக ரிலாதஎம் பிரனே வீரனே
தனிவேலெடுத்தகரனே, தணிகின்ற குணராஜ பணி
கின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. 7

வாதமென் பகசித ஜன்னிபதின் மூன்றுஜுர
வகையாறு பத்துநாலும், வட்டகுன் மஞ்சூலை பதினெ
ட்டு குட்டமொடு வருவித்த மொருநாற்பதும், மாத
ராற் றுடர்மேக மிருபத்தி யொன்றுகா மாலைசோகைப்

பாண்டுடன், மாகிலா கண்ணோய்கள் தொண்ணூற்றி யாறந்த மொத்தசேத் துமரோகமுந், தீரான கிராணி நவ மூலவை சூரிவகை தீண்டுபல பூச்சிவிடமும், தின கரன் சுடர்பட்ட பனிபோல நின்னுடைய திருவருட் கெதிர்நிற்குமோ, தாதா வெனக்குநீ தந்தைநீ தாயுநீ தமியனென் குலதெய்வநீ, தணிகின்ற குணராஜ பணி கின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. 8

ஒருதுரையு மறியாம லலைகின்ற னேயென்ன லூ ழென் றெடுத்துரைப்பேன், உனதுகம லப்பாத மிவ் வாறு துதியென் றுரைப்பாரு மொருவரிலையே, பானு லகு விண்டுலகு பிரம்மனுல கும்மற்ற பாதலம் பூதல மெலாம், பக்திசெய் தல்லவோ நினதுதிரு வருளுக்கு பாத்திரராய்க் கீர்த்திபெற்றார், சிறுமையே னறிவிலே னொருநெறியு மற்றநான் சீர்படுவ தெந்தநாளோ, சித் தர்வித் யாதரர் கருடகாந் தருவாதி சேவிதா சிவதே சிகா, தருணத்தில் வந்துதவி செய்தகுல ரக்ஷகா தற் போது மெனையாளுவாய், தணிகின்ற குணராஜ பணி கின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. 9

குஞ்சரக் கோடனைய குறிபிட்ட முலையிலே கூரிட் ட வேல்விழியிலே, குதலைவாய் மொழியிளஞ் சொல்லி லே பல்லிலே குலவுகந் தப்பொடியிலே, மஞ்சைநிகர் நடையிலே யிடையிலே தொடையிலே மலரிட்ட சிகை முடியிலே, மணியிலே யணியிலே துணியிலே நடுநெற்றி

மையிட்ட சிறுபொட்டிலே, பஞ்சிளங் காலிலே மேவி
லே யிளைஞரைப் பார்த்துவி சும்வலையிலே, பட்டுகெட்
டழியாம னின்னடிய ரடிமையாம் பக்குவ மெனக்கரு
ளுவாய், தஞ்சமென் றடைகின்ற தொண்டருக் குடனு
தவும் தந்தையே கந்தவேளே, தணிகின்ற குணராஜ ப
ணிகின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. 10

ஆடித் திரிந்தவென் னிளமையில் வலியவந் தறிவை
த் திருத்தினதவும், ஆபத்து காலங்க டோறுமக் கண
மோடிவந்தா தரித்தவிதமும் பிடித்த சமுசாரபேய்கொ
ண்டபோதுபிணி வருமென்று முன்சொன்னதும், பொ
ருளற்ற வேழைக்கு யில்லமுஞ் செல்வமும் போதுமட்
டுந்தந்ததும், வாடியூழ் வினையினை தமுமெனைப் பொ
ருவென்று வந்துவந் துரைசெய்ததும, வகிலத்தி லிவ்வு
தவி யார்புரிவார் நின்கருணை வாயினாற் சொல்லவச
மோ, தேடறிய வென்குலத் தெய்வமே யடியேனை
தற்போ திலுங்காத்தருள், தணிகின்ற குணராஜ பணி
கின்ற மனுநேச தணிகையங் கிரிவாசனே. 11

திருத்தணிகை

செங்கல்வராயசுவாமி

தோத்திரம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிதம்பரம் நடராஜர்

# பஞ்சாட்சரப்பதிகம்.

## சங்கப்புலவர் கண்டசுத்தி,



இவை,

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

---

1908.



உ

முருகன் றுணை.

---

சிதம்பரம் நடராஜர்

# பஞ்சாட்சரப்பதிகம்.

வசியசிவசங்கரா வசியகெங்காதரா வசியகைலாச வாசா, வசியபணி யணியுரா வசியமான்மழுசரா வசியசிவகாமிநேசா, வசியதிருநேத்திரா வசியபுவனேஸ்வராவசியஓம் நடனபாதா, வசியகரியுரியழக வசியபுலியிடையழக வசியசிர மாலையழகா, வசியமதி முடியழகவசியபசுபதியழக வசியமென்மனதில்வாசா, வசிய முன்னூலழக வசிய வெண்ணீரழக வசியமறை பரவுமழகா வசியவென உனையனு தினம்போற்று மடியார்க்கு அருள்மடைதிரந்ததில்லைக், கதிபதீஜனகாதிமுநிபதிசிவகாமி அன்பிலுறை நடனபதியே. (க)

சிவயநமவென்றுதின மூழ்கியுருவேற்றுவார் செய்தொழிலெலலாம் வசியமாம், ஜெகவசியமாம் சகலமுக வசியமாம்செய்ய சித்துகளெலாம் வசியமாம், வயநமசி

யென்றுவருமாட்டுவோர் சத்ராதி வானுடவிட்டபந்தா
ம், வடங்காதபூதபேதம்பசா சிவையெலாம் வளர்கு
லாலன் திகிரியாம், யநமசிவ வயநமசி சிவயநம யெல்
லாமுன்னடலமன்றோ, யிவ்வுலகபொருளுதவி அவ்
வுலகமருளுதவி யீயவிரு தெய்வமுளவோ, அவுணாதி
புவனாதி கௌணாதி முத்தர்க்கு அருள்மடை திரந்த
தில்லை, அதிபதி ஜெனகாதி துதிபதிசிவகாமி அன்பி
னுரைநடனபதியே. (௨)

புல்லாய்ப்பிறந்தாலு மிருகாதிஜெனனங்கள் பசியா
ரிமகிழுமன்றோ, பூண்டாய்ப்பிறந்தாலும்புலத்தியர்கள்
கொண்டுசில பிணிதீர்த்து புகழ்வரன்றோ, கல்லாய்ப்
பிறந்தாலும்நல்லவர்கள் மிதிகொண்டு காட்சிக்குருத்
துமன்றோ, கழுதையுருவந்தாலும் ஆவெனக்கத்தினு
ல் கைக்கண்ட சகுனமென்பார், எல்லா மிலாமலே
யிப்பிறவிதந்தென்னை யேங்கவிட்டகலநின்றாய், எத்
தனை அன்னையின மெத்தனை தந்தையின மெத்தனை
பிறவிவருமோ, அல்லலெனுமாசருத்தாட்கொளுந்தெ
ய்வமே அப்பனே தில்லைநகர்வாழ், அதிபதிஜனகாதி
துதிபதிசிவகாமி அன்பினுணா நடனபதியே. (௩)

கல்லாதமூடரைக் கயவரைக் காமுகரை கன்னெஞ்
சவஞ்சரிவரை, கற்றுமறிவில்லாத மோழையைக்கோ

ழையைக் கார்க்கவைத்துண்டபேரை, பொல்லாதமூர்
க்கரை மிருகங்கள் போன்றவரைபொய்க்கு அஞ்சாத
பேரை, பூமியிற் பிறருக்கு யிடுக்கமுயல் வோர்களை
பிணமொத்த பேரைபலரை, நல்லாரெனக் கவிகள்
சொல்லியலையாமல்நா ளுளாவதென்றுசிவமே, நான
ன்றிநீயேது நீயன்றிநானேது நானுயுரைத்ததேது, அ
ல்லிலும்பகலிலும் நீயிலாதசைவேது அருள்மடைதிர
ந்ததில்லைச், கதிபதிஜனகாதி துதிபதிசிவகாமி அன்
பிலுரை நடனபதியே. (௪)

ஜெகமெட்டுதிசைகளுங்கிரிகள் பலதெய்வமுஞ்செம்
பொன்மணி மாடமேடை, சேயன்னை தந்தையும் நா
னென்றஆணவஞ் செல்வமும் வல்லசித்தும், முகடே
றுமெமனுக்கு முன்வந்துஉதவுமோ முத்திக்குவித்து
முளதோ, மூவாசைவிட்டுகெனிசறுகாதிதின்றாலும் மு
ன்செய்த விணையகலுமோ, யிகமினியசுகபோகம் நின்
னருளலாதேதுயில்லையவ்வுலகமென்றால், யீசநீகாணு
துயிருளேது வெளியேது நினைவேதுகனவுமேது, அ
கவுறவுபற்றற்று துறவுறவுமுற்றுற்ற ஆரியர்கள்பர
வுதில்லை, அதிபதி ஜெனகாதி துதிபதிசிவகாமி அன்
பிலுரைநடனபதியே. (௫)

பஞ்சாட்சாப்பதிகம் முற்றிற்று.

---



உ

கடவுள் துணை.

# கண்டசுத்தி.



விருத்தம்.

பணந்தேடியாரிருந்தார் உலகமீதில்
 பாவிதிரி யோதிரனும் பாட்டனரும்
குணமான துரோணனவர் கருணன்பூரி
 கூரியதோர் தேசத்தாசன் சகுனிசல்லி
பிணமானர் அர்ச்சுனன்கை அம்பினலே
 பெண்டிரும் பணங்காசும் பிறகேபோச்சா
மணமான வாழ்வுபொருள் ஆடுமாடும்
 மாய்கையடா மாய்கையடா மதித்துப்பாரே.

ஆலித்தெழுந்து அபிராமன்மீது அணங்கனுற் றுள், பாலிக்கும்போது மென்செய்குவாள் பஞ்சபாண னன்பு, தாலிக்குமேபழந் தட்டுக்குமேதனித் தொண் ணைத்தாரடி தழும்புபட, கூலிக்கிமேவெட்டுய் பெரு மாளிரவி குலோத்துங்கனே. (க)

கரண்டகத்தொனிக் கஞ்சிய மான்மழுக் கங்கு லிலே, திரண்டவெள்ளத்தின் பிணமீதுசென்றனள் சேர்ந்தவளே, அறண்ட இன்பங்கொடு மீளக்கருபற்றி அங்கொலுசால், குறண்டகன்னத்தி லுதைத்தனள் காணங் குலோத்துங்கனே. (௨)

கடிமலர் பந்துகொண்டு கணவனுங் கடியைக் காய்ந்து, இடியெனச் சோர்ந்துவீழ்ந்தாள் பென முலைக் கொடியனல்லாள், முடியதுமுடவன் கையால் முன்பதாய்ச் சுத்திக்சொண்டு அவள், அடிபடக்கண் டதெல்லாம் அம்பலத்ததி சயந்தான். (௩)

வாறிடைபிடிங்கிமூட்டி வளறிளங் கொங்கைநல் லாள், நீர்விழிகண்கள்சோர நேரிழையெறித்துச் செ ன்றும்,மார்சிகை தன்னைப்பற்றி மற்றவனடியும்பட்டு, ஆர்பறத்தழுவிக்கொண்ட தம்பலத்ததிசயந்தான். ()

கம்பத்தூணைட்டி கனகவிளக்கெரிய,செம்பொன் அமளியின்மேல்சோராம செம்புருள புல்லுரால்மாறி பு கைச்சல் புகைக்ந்தனளே, கல்லுருள முத்துருளக் கண்டு. (௫)

சொன்னசொற் கேளாவேந்தன் துடியிடை மடைவாள்கையால் மன்னவன்கழுத்தறுக்க மனமதுதுணிந்துவிட்டாள், தென்னிலைவேலனரே திருத்தணிமலையில்வாழும், அண்ணலும் நீரும்வந்துமென் அரசனையெழுப்பிட்டீரே. (௬)

ஜாதிமார்க்கந்தவிழ்ந்தூணதியூன்தின்ற தாழ்வினைதனக்கழுவனோ, தடம்பெரியமைந்தனைத் தனியவைத்தேவேந்தன்தலைகொய்த தற்கழுவனோ, ஆதினாள்தரிதந் தாரியன்றனைக்கொன்ற அரசனுக்கேயழுவனோ, அக்கானகம்புகுந் தருமன்னர் ஊர்வேசி யானதற்கேழுவனோ, வேதநூல் முறையிலாமைந்தனைத்தழுவியே வெந்தணலுக்கோயழுவனோ, வெள்ளம் பிறந்துமே தள்ளாடி இடையரிடம் விட்டதற்கேயழுவனோ, நீதியாவுலகத்தை ஒருகுடையி லாள்கின்ற நீதிமகாராஜபோஜ, இப்பெண்ணிர்ணயமாய் விர்க்கவந்த விலைமோர் தனக்கழுவனோ. (௭)

அன்றுதான் அன்னையுந் தந்தையுங் கூடியே அநுபவிப்பதும் சஞ்சலம, அங்கொரு ஜெலத்துளி தறிப்பதுஞ்சஞ்சலந் தறித்துபின் ஆளானதும் சஞ்சலம், பெண்ணையும் மண்ணையும் விரும்புவதுஞ் சஞ்சலம்

பெண்டிலாதிருப்பதுஞ் சஞ்சலம், பெற்றமகவில்லா திருப்பதுஞ்சஞ்சலம் பெற்றபின்புஞ்சஞ்சலம், எண்ணரிய திரவியந்தேடியுஞ்சஞ்சலம்தேடாதிருப்பதுஞ் சஞ்சலம், யென்றுதான்சஞ்சலம்ஒழிந்துயான்உன்திருவடிக்காளாவனோ, விண்ணவர்தொழுங் கருணைவள்ளி தெய்வானையுடன் வாழுமயிலேறியே வரவேண்டுமெந்தனருகே. (அ)

தெலுங்கருழிசென்று தமிழ் பாடினால் மாக்கு அரவம்தெலியது ஒப்பிச்சிவாடா என்பராம், நீவிசெப்பேதிசிந்தலோ ருள்வேசிதிப்பினட்டுன்னதி செப்ப ஒத்தே என்பரும், அலங்கொடு துலுக்கர்தாம் அரிவில் அர்ச்சானா துமாரிபாஞ்சோ தென்பரும், துலங்கும் கன்னடர்கள்தாம் குங்குமத்தோதுமது தெளிதல்லவோ, ஒந்துகாசாரு கொட்டாருசுன்னிகோ ஓகென்பரும், நிலையானபுவியாளும் இங்கிலீஷ்காரரும் டமிள் னோகோவென்பரும், இவரெலாம் இத்தமிழ்க் குறியவரோவரோ சொல்லுமென் அற்புதநடராஜனே. (க)

கண்டசுத்தி முற்றிற்று.

---

ஆக புத்தகம் 62.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இஷ்டலிங்கப்பதிகம்.



இஃது,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்

அவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.

# இந்துக்கள்

# தெய்வகுண வெளிச்சம்.

விசுவாவசு என்பவன்—வாதி.
கிருசானு என்பவன்—பிரதிவாதி.

பூலோகத்தினுள்ளே தெய்வங்களையும், தெய்வஸ்தலங்களையுங் குறித்து தேவலோகத்து காந்தருவர்களாகிய (விசுவாவசு என்பவனுக்கும், கிருசானு என்பவனுக்கும்) நடந்த எதிருக்தமான தர்க்கங்களாகையால் படிப்பதற்கு வெகு இனிப்பாயிருப்பதுமன்னியில் அனேக திருட்டுப் புரட்டுகளும், வியாசன் கட்டுப்பாடுகளும் வெளிப்படையாய் விளங்கும். இந்தப் புத்தகமானது (விஸ்வகுண தேரிசனமேன்னும்) சாஸ்திரத்தை அப்படியே சமஸ்கிருதத்திலிருந்தும் தமிழ்மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

இதன் விலை அணு 8. தபாற்கூலி அணு 3.

இப்படிக்கு,

சிறும்மணவூர்-முனிசாமி முதலியார்,

பேரம்பூர் பாரேக்ஸ், மதராஸ்.

உ

கணபதி துணை.

---

திருவண்ணாமலை

# இஷ்டலிங்கப்பதிகம்.

மூவர்சீர்முதலே மூலமாகியதோர் மூர்த்தியே முக்கண்ணனவனே, முதுமறைப்பொருளே பரமரகசியனே முயல்மெரித் தாடியசிவனே, தேவருமயன்மால் தேடியுங்காணச் சிவசிவ தேவனைப்பின்று, திருச்சடைமீதில் கங்கையைத்தரித்து திரியிறைதன்னையே முடித்து, அஞ்சலென்றடியார்க் கன்புடன்காட்சி அளித்திடும் ஆனந்தபரனே, அரகரசிவனே ஆனந்தக்கடலே ஆடிடும்பாதமே யருள்வாய், இன்சொலாகியதோர் இசைந்தபார்வதியும் ரிஷபவாகனனுமாய்வருவாய், இஷ்டலிங்கேசா என்கருத்தினிலிருக்கும் ஈசனே மாசிலாமணியே. (க)

ஆலகாலம்போல்சீறி வருகிறவிஷத்தை அள்ளியேவுண்டிடும்பரனே, ஐயனே கண்டங்கறுப்பதானவனே

அம்பலத்தாடியசிவனே, காலகாலனையுங்காய்ந்துதை
த்தருளிகடுந்தழல்மேனியானவனே, கச்சிமான்காண
வடிவுகொண் டெழுந்தவள்ளலே அருணைமாநகரில்,
மலையதாயோங்கி வல்வினைதீர்த்து மானிடகாட்சியே
கொடுப்பாய், வஞ்சனையில்லி சூனியமுதலும்மாய்த்தி
டும்மூலநாயகனே, ஏலவார்க்குழலி இசைந்தபார்வதி
யும் ரிஷபவாகனனுமாய்வருவாய், இஷ்டலிங்கேசா
யென்கருத்தினிலிருக்கும் ஈசனேமாசிலாமணியே. ()

அஞ்செழுத்ததனி லமர்ந்திடும்பரனேஐயனே கட
வுளாகியதோர், அப்பனேபுலியூ ரமர்ந்தநாயகனே ஆ
தியே சோதிமாமணியே, மனுசனீராடிகரியுரித்தாடை
வகையுடனணிந்து மேலிடத்து, மாதுபார்வதியைசே
ரவேபாகம் வைத்திடும்வள்ளல்நாயகனே, கொஞ்சிய
சபையில் நடனமேபுரியுங்கோமளக்குஞ்சிசெஞ்சடை
யும், கொன்றைமாமலருங் கொன்றையுந்தும்பைகொ
ழுந்திடுவில்வமேயணிந்து, இன்சொலாகியதோர்யிசை
ந்தபார்வதியும் ரிஷபவாகனனுமாய்வருவாய், இஷ்ட
லிங்கேசா யென்கருத்தினிலிருக்கும் ஈசனே மாசிலா
மணியே. (௩)

முப்புராதிகளை பர்ப்பமாய்நகைத்த மூர்த்தியேமு க்கணனவனே, முன்கையில்சூலமான்மழுதரித்து முடியில்வெள்ளருகுமேயணிந்து, அப்பர்சுந்தரர்க் காகியேயிசைய ஐயனேவாதவூரானே, அப்பர்மாணிக்கர்க் காகியேநரியை அரும்பரியாக்கியசிவனே, செப்பமாய்வேடனெச்சிலுண்டவனே தென்கயிலை வாழ்கின்ற ஈசா, சேடனுபரணமணிந்தநற்பரனே சிலைநுதல்மான் மழுதரித்து, இப்பொழுதுமையாள் ஈஸ்வரியுடனே ரிஷபவாகனனுமாய்வருவாய், இஷ்டலிங்கேசா வென் கருத்தினிலிருக்கும் ஈசனேமாசிலாமணியே. (௪)

தக்கன்யாகத்தை யழித்திடும்வீரன் தன்னையும்வேர்வையாலளித்த, தக்கன்மாமதனே விழியினலெரித்த சம்புவே சதாசிவப்பொருளே, அக்கணத்தயன்மாலடி பணிந்துனது அம்பிகை யாளினுஞ்சேர, அகன்றிடும் மலையரையன் மகளைநேர்புனைந்து அறுமுகன்றன்னையே யளித்த, சொக்கநாயகனே மதுரைமாங்கிரியிற் சோதியாமாதியாம்பரனே, சொர்ணமாம்சுரூப வண்ணனே கண்ணாய் செம்புகாஅம்புலிதரித்து, இக்கணத்துமையாள் ஈஸ்பரியுடனே ரிஷபவாகனனுமாய் வருவாய், இஷ்டலிங்கேசா யென்கருத்தினிலிருக்கும் ஈசனே மாசிலாமணியே. (௫)

கஞ்சுளிதரித்து காவியுமணிந்து கையினிற் கபால
முமேந்தி, கரியுரித்தாடை வேங்கையாசனமுங் கழுக்
தினிலுத்திராக்ஷமுமணிந்து, செஞ்சடைமீதில் கங்
கையைத்தரித்து திங்களைதன்னையேமுடித்து, சிவந்த
ணல்முகத்தில் விபூதியுமணிந்து சேடனுபரணமே
பூண்டு, அஞ்சலென்றடியார்க் கன்புடன்காட்சியளித்
திடும்பாதபக்சயனே, அரகரசிவனே ஆநந்தக்கடலே
ஆடிடும்பாதமேயருள்வாய், இன்சொலாகியதோர் யி
சைந்தபார்வதியும் ரிடபவாகனனுமாய்வருவாய், இஷ்
டலிங்கேசா யென்கருத்தினிலிருக்கும் ஈசனே மாசி
லாமணியே. (௬)

அத்தனே அரனே ஆலங்காட்டானே அண்ணலே
காளியோடாடும், அருமறைப்பொருளே ஆனந்த அர
னே ஐயனேகடுந்தழ லொளியே, சித்தனே சிவனே
சிவகுலக் கொழுந்தே சிறுபுலித் தோலுடை யுடுத்தி,
சிறுபிள்ளைகரியும் தலையறிந்துண்டு சிறுவனுக்காட்சி
யேகொடுத்து, முத்தனேமுதல்வா முக்கணு முனியே
மூஷிகன்தன்னையேயளித்த, மூர்த்தியேயெனது பாவ
மேயகற்றி முன்வந்துஎன்னையாண்டருள்வாய், எத்த
னேதேவர் சூழவேயிடத்தில் ஈஸ்பரியாளுடன் வரு
வாய், இஷ்டலிங்கேசா யென்கருத்தினிலிருக்கும் ஈச
னேமாசிலாமணியே. (௭)

கயிலையங்கிரியில் கொடிமுடிபதினாயிரம் படைத்த கண்ணனே கடவுளேயெவரும், காணொணாவடிவேகன கமாங்கிரியினிலமர்ந்த, நயனமுன்னடியார் நற்பதப் பொருளே நான்முகன்சென்னியேகளைந்து, கையினிற்கபாலங்கொண்டிரந்துண்ட கண்ணனே கடுந்தழலொளியே, கயவர்களிருள்கட்டறுத்தாண்ட கச்சிவாழே கம்பநாதா, கம்பையாற்றறுகி லின்பமாயுமைக்குகாட்சியேகொடுத்திடும்பரனே, இன்பமாயிங்கு மிசைந்த பார்வதியும் ரிடபவாகனனுமாய்வருவாய் இஷ்டலிங்கேசா யென்கருத்தினி லிருக்கும் ஈசனே மாசிலாமணியே. (௮)

மாதுமைபங்காளா மாலயன்சூழ வந்தெனக்காட்சியே கொடுப்பாய், மண்டலத்துனதுபாதமேயல்லாமற்றெனக்காதரவறியேன், தாதுலாதுனது யூகபூடணனே தன்மையாய்மாய்கவுமறியேன், உகந்துடன்பஞ்சாட்சரத்தைநெஞ்சினி லூறதியாய்துதிக்கவுமறியேன், தீதுசெய்தடியேன் திலங்கவேதனையில் சிக்கியேமனந்தளர்ந்துழன்றேன், தீவினையகற்றியுன் திருவடிதன்னில் சேர்க்குநாளெந்தநாளுளதோ, எதெனுமறியாரடியன் முன்னிங்கு ரிடபவாகனனுமாய்வருவாய், இஷ்டலிங்கேசா யென்கருத்தினி லிருக்கும் ஈசனே மாசிலாமணியே. (௯)

செய்வதுங்குலேயே செப்புவதும்பொய்யே செகத்தினில்நடப்பதுமகந்தை, ஜெகத்துமானிடர்கள் கள்ளனென்றிடவேஜெனனமே யிவ்வுலகெடுத்தேன், அவ்வதாகியபின் அறிவுவந்ததினலவதியே அனுபவித்தலேந்தேன், அமையுமிவ்வளவு அடியெனக்குனது அம்புயபாதமேயருள்வாய், தையல்நாயகியைத் தரித்திடும் பாகா சரசமாயமர்ந்திடும்பரனே, தங்கமேனியனே சம்புசங்கரனே தயாளனேயெய்யுமேல்மதனை, யெரித்தநேத்திரமு டிங்கெனையாள ரிடபவாகனனுமாய் வருவாய் இஷ்டலிங்கேசா யென்கருத்தினிலிருக்கும் ஈசனேமாசிலாமணியே. (௧௦)

அண்டர்களமரர்கள் துதித்திடும்லிங்கம் அரியவன் போற்றிடும்லிங்கம் அகத்தியர்பூசை புரிந்திடும் லிங்கம் அடியவர்கெளிதானலிங்கம், திண்டிசையோர்கள் புகழ்ந்திடும்லிங்கம் சித்தவித்தியாதரர் தொழுதிடுலிங்கம், தசரதமகனர் பூசைபுரிந்திடு லிங்கம் சிவசிவாராமலிங்கம், உண்டனையவர்க்கு மொருதுணைலிங்கம் மூர்த்தியாய் போற்றிடுலிங்கம், முத்தமகாசிவிஸ்வநாதலிங்கம் உம்பர்க்குகந்ததே ராமலிங்கம், எண்டிசையதிர யிசைந்தபார்வதியும் ரிடபவாகனனுமாய் வருவாம் இஷ்டலிங்கேசா யென் கருத்தினிலிருக்கும் ஈசனே மாசிலாமணியே. (௧௧)

இஷ்டலிங்கப்பதிகம்-முற்றிற்று.

---

உ

# தில்லைநடராஜர்பதிகம்.



சென்னை-ருனா,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1908.

உ

கடவுள் துணை.

# தில்லை நடராஜர்பேரில் பதிகம்.

காப்பு—நேரிசைவெண்பா.

சீர்கமலத்தேன்பொழியும் தில்லைநடராஜர் தம்மேற்
சீர்புகழும் செந்தமிழைப்பாடுதற்கு-கார்புனையும்
ஷண்முகர்க்குமுன்னாகத் தந்திமுகத்தெந்தைபலம்
வண்மைபெறவாழ்த்துகவென் வாய்.

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

பூரணமிகுங்கிரண பருதியென வொளிபரவு பொன்மகுடமுடியினழகும், புகலரியயிருசெவியில் நவமணிக்குழைகளும்பொறுகண்டசரத்தினழகும், காரண்மதாகவரு சிஷ்டிபைக்காக்குமுன் கருணைகடைவிழியினழகும், கஸ்தூரித்திலகமும் வெண்ணீறுமுன்னிய கமலவதனத்தினழகும், வாரணமதுரியாடை திருமேனிப்போர்வையும் வச்சிரமணி பாதகுறடும், வரிசை

பெறபௌனிவர கொலுசிலம் பதிரவெகு வடிவுள்ள
நடையினழகும், ஆரணமுதற்பொருள தாய்நின்றவுன்
பெருமை யடியனுல்பகரவெளிதோ, அன்பருளவாச
னே உம்பர்பணிசசனே ஆனந்தநடராஜனே. (௧)

[illegible] விண்டலத்தோர்கூட வேதகிதம்பாட விரித்தசெஞ்
சடையுமாட, விடையாடயிடையாட கையிற்சண்கண
மாடவிரிசூலகரமுமாட, சண்டமதில் ருத்திராக்ஷத்தா
ழ்வடமுமாடவும் கங்கையணிவேணியாட, கந்தமிகுமு
ல்லிகை மலராரம் விரிமார்பில் கனகமணி ஊசலாட,
வெண்டறளமணியாட வேதவேதியர்நாட விரலறியும
யனுமாட, மேனகைஅரம்பையொடு ஊர்வசிதிலோர்
த்தமை வெண்சாமரங்களாட, அண்டர்தொழநின்றுடி
முண்டகப்பாதகனே அடியனேற்கருளவருவாய், அன்
பருளவாசனேஉம்பர்பணியீசனே ஆனந்தசடராஜனே

சிவசிவாவென்றநின் திருநாமமந்திரம் சிந்தைதனி
லென்றமறியேன், சிற்பராபரமானதற்பராயோகசுக
சிவநிஷ்டையேதுமறியேன், தவமோங்குபத்தரின்தரி
சனங்கண்டிலேன்சற்சனர்களுறவுமறியேன், தலமதா
ய்மகிமையுறு சன்னதிதனிற்சென்று சரணங்கள்செய்
துமறியேன், குவலயந்தன்னில்வளர் மானிடப்பிறவி

தனிற் கொடியனுகியனுயினேன், குலைகளவு கட்காம மிவையெலாம் நிறைபெருகக் குடிகொண்டவம்பனேனே, அவசியம் உனதுதிருக் கண்பார்த்துரக்ஷியும் அண்ணலேயமுதவடிவே அன்பருளவாசனே உம்பர்பணிஈசனே ஆனந்தநடராஜனே. (௩)

தீதுநலமிதுவென்று சிந்தையுள்ளுணராதசிரிலாநண்பருறரும், தீயோர்கள் தரிசனமும் அய்யமறமேலிட்டஜெகமாய்கைமூழ்கியானும், கோதிலாவாகம புராணநெறியறியாத குருடனையனேகவிதமாய், குற்றங்களெத்தனை செய்திருந்தாலுமுன் குழந்தையென்றெண்ணலலென், மீதுமனவர்மங்கள் வைத்திருந்தாலிந்தமேதினியிற்புகழதாமோ, வேண்டாமிவ்வேளைதனில் ஆண்டவாவேண்டினேன் இவ்வினையகலவேணுமையா, ஆதரவுநினைவிட திக்கெனக்கிலமதி லாருளாரமலநாதா, அன்பருளவாசனே உம்பர்பணியீசனே ஆனந்தநடராஜனே. (௪)

மாயாவிகாரமது ஓயாமலோங்கிவளர் மானிலந்தன்னிலடியேன், மாவினைகள் வேரூன்றும் பாவங்கள் வெகுகோடி மதியாது செய்தனன்யான், பேயாய்த்திரிந்துநின் திருவடியைவிட்டுயிப் பேருலகிலாசைதொ

ட்டு, பித்தனையனேவகை குற்றங்கள்செய்துவரும்பி ழையெலாமகற்றிடாமல், சேயனுனென்மீதுவர்மம்சா திக்கலால் சிறுவனுன்சசிக்கவசமோ, தேசமெல்லாம் புகழு மாசற்றரூபனே தேஜோமயானந்தனே, ஆயும ப்புகழ்தில்லை யம்பலத்தரசனே அடிநடுவு முடிவான வா, அன்பருளவாசனே உம்பர்பணிஈசனே ஆனந்த நடராஜனே. (௫)

சஞ்சலமிகுந்துறவு பாழ்படுக்குழியதாம் தையலர் கள்யோனியழுதில், தள்ளுண்டுழன்றுமே தயங்கிமிக வாடிடும் தமியனேனைசலாமலென், வஞ்சமுறுமனதிரு ளை மாற்றவனுபாஜுவென மாமகிமை யுற்றவுனது, ம ணியந்திரவாளினல் வசைகள்வறுத்தெனது வல்வினை யை நீக்கியருள்வாய், கஞ்சமலரடிதனை யென்னுளுமர்ச் சிக்கக்கருணைதர மிதுதருணமே, காலாகாலாகண்டா நீலகண்டா சிவகங்காதரக்கடவுளே, அஞ்சலென்றுன் பதம் நம்பினேனெப்பொழுதும் அடியேனையாளவரு வாய், அன்பருளவாசனே உம்பர்பணிஈசனே ஆனந்த நடராஜனே. (௬)

பெருகுந்திவெழுகுமிழியென வருகுசெல்வமும் பெ ருமைபெருமகழுமிக்க, பெற்றதாய்தந்தையர்கள் பெ ண்டிருமக்களும் பேருறவுசுற்றங்களும், கருதரியவிறை

களும்பிதுவெலாங் கனவினிற்கண்டிடும்காக்ஷியன்றோ,
காயமில்லையென்றிடவு மொண்ணுதனைக்கணம் கருதிட
வுமெய்யல்லவே, மருவுமல்லிகைமுல்லை செண்பகம்ம
லர்புனையும்மங்கைமகிழ்ந்நின்றநேயா, மாராதபவபிணி
யில்திராதகவலையுறும் வாதனையை மாற்றியருள்வாய்,
அருகுடன்கொன்றையுந் தும்பைமலரணிகின்ற அம
லனேயென்னையாளும், அன்பருளவாசனே உம்பர்பணி
ஈசனே ஆனந்தநடராஜனே. (எ)

பொங்குமதயானையா விடவுற்றவம்பரைப் புசழ்பெ
றப்பாதுகாத்தீர், பூவுலகிலுன்னன்பர் யெவர்களையு
முன்னாளிற் பொருந்தவே காக்கவில்லையா, அங்கஜன்
கணைதொட நுதல்விழிதிறந்தெறித் தவர்க்கருள்புரிய
வில்லையா, அந்தமுப்புரமெறிய நகைசெய்ய வண்டமொ
டுஆளிகளுமதிரவில்லையா, பங்கப்பேர்கொள்ளாமலிங்
கெனம்வந்தெனைப் பாலிப்பதென்னமலையா, டாராதி
ருப்பதுவும் யார்தெய்த போதினையோ பாலனுக்கது
சொல்லையா, ஐங்கரனுமறுமுகனும் செங்கனிக்காதவ
லம் அருகில்வரும்பரமசிவனே, அன்பருளவாசனே
உம்பர்பணிஈசனே ஆனந்தநடராஜனே. (அ)

தில்லைநடராஜர்பதிகம்-முற்றிற்று.

---

ஆக புத்தகம் 64.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

அருப்புக்கோட்டையென விளக்கும்

திருநல்லூர்

# அமுதலிங்கர் பதிகம்.

இஃது,

சிறுக்குளம் வித்வான்

தாமோதரம்பிள்ளை யவர்களால்

இயற்றப்பட்டு,


சிறுமணவூர்-முனிசாமி முதலியார்

அவர்களது

சிவசாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

அறுப்புக்கோட்டையெனவிளங்கும்

# திருநல்லூர்

# அமுதலிங்கர்பதிகம்.

## காப்பு.

நேரிசைவெண்பா.

தாலம்புகழ்பாலசந்திரவிநாயகனூர்
காலம்புயமெனக்கோர்காப்பாகுங்-கோலநல்லூர்
மேவமுதலிங்கேசர்மேற்சொறமிழ்ப்பதிகப்
பாவமுதநேரும்படி.

ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்டகங்கைமதிவில்வமொடுகொன்றைபுனை
செஞ்சடாமகுடமுடியுந்
திகழ்கமலவதனங்களோரைந்துமுவைந்து
திருநயனமாமலர்களு

மேர்கொண்டசெம்பவளநிகர்வாயும்
வெண்டாளமெனநிலவுபுன்மூரலு
மீசையுணவுகொண்டுமகிழ்குண்டலபணிந்திடுமை
யிருகுழையுமணிமிடறுநீள்
தார்கொண்டமகமேருநிகர்தோளுமினியவர
தாபயச்செங்கைமலருஞ்
சந்ததமும்வாடாதபேரின்பவீடுதவு
தாண்மலர்களுந்துலங்க
வார்கொண்டவெள்விடையின்மேல்வந்துகாட்சியருள்
வளமருவுநல்லூரில்வாழ்
மன்னவதினம்பேசுநன்னயமுறுந்தேசு
மன்னமுதலிங்கேசனே. (௪)

தேனேயெனக்குலவுசெந்தமிழ்த்தோத்திரஞ்
செவிவாய்மடுத்தல்செய்யுஞ்
சிற்பரமகாதேவசம்புசிவசங்கர
திகம்பரநல்வாமதேவ
ஞானோதயங்குலவுமோனசுயம்புவேணு
நாதாவிநோதாகமஞ்
நானுகரக்கொங்கைமலைமங்கையொருபங்கி
னங்கனேயென்றுநான்
மானார்தமயல்விட்டுநானுவிதங்கற்ற
வாயாலுனைத்துதித்து
வாழ்த்தவருள்செய்துமிடிதாழ்த்தியுயர்பேரின்ப
வாழ்க்கைதரலெந்நாளோ

வாளுடர்வந்துதொழுமேனுடெனக்கிளரும்
வளமருவுநல்லூரில்வாழ்
மன்னவதினம்பேசுநன்னயமுறுந்தேசு
மன்னமுதலிங்கேசனே. (௨)

ஆழியம்புவிமாதவாழவொருசீகாழி
யம்பதியில்வேதியர்குலத்
தவதாரமானதிருஞானசம்பந்தருக்
கம்மையுமைதிருமுலைப்பால்
கேழின்மிகுபொன்வள்ளமதனிற்கறந்தூநற்
கேண்மையுடனூட்டுவித்துங்
கிளரபரபரஞானமருவுபலசெந்தமிழ்க்
கீர்த்திதழைபாடல்கேட்டு
மேழிசைக்கமைவாயபொற்றுளமொடுசிவிகை
யினியகிழலுதவுகவிகை
யீய்ந்துமலரயனுணவென்பினொருபூம்பாவை
யெழுமாறுகருணைசெய்தும்
வாழிசிதியுந்தந்தவாறெமையுமருள்வையோ
வளமருவுநல்லூரில்வாழ்
மன்னவதினம்பேசுநன்னயமுறுந்தேசு
மன்னமுதலிங்கேசனே. (௩)

திருவதிகைதனில்வந்தசமண்மேவியொளிர்தரும
சேனரெனும்வாகீசரைத்
திலகவதிவேண்டலிற்சூலைவிடுத்தினிய
சீலமிகுசைவநெறியிற்

பருவரலிலாதுபுகவைத்தருள்வழங்கிமெய்ப்
பாங்குசெறிதீந்தமிழினிற்
பாகனையபல்லாயிரம்பதிகமன்பினொடு
பாடவுண்மகிழ்ந்துகேட்டுக்
கருவளர்பிறப்பைக்கடத்தலெனவாரியைக்
கற்புணையினாற்கடத்திக்
கைலைவரையையாற்றினிற்காட்டிவாழையின்
கனியெனவுமவரையுண்டு
மருசுவைகண்டசெவ்வாயனேநேயமருள்
வளமருவுநல்லூரில்வாழ்
மன்னவதினம்பேசுநன்னயமுறுந்தேசு
மன்னமுதலிங்கேசனே. (௪)

திருநாவலூரில்வருசுந்தரர்முனஞ்சென்று
திருமணம்புரிபோதினிற்
சிறுவநீநமதடிமையென்றொருபொய்யாவணஞ்
செங்கைமலர்கொண்டுகாட்டி
பெருநாவின்வல்லமறையோர்களவைமுன்புமெய்ப்
பித்தவரைவலிதினாண்டு
பித்தவெனநந்தமைப்பாடுகெனவருளியிரு
பேதையர்கள்காதல்பூட்டி
யொருநாளிராப்போதுதூதுஞ்சென்றும்பரவை
யூடலையுமெளிதின்மாற்றி
யுணவுகிதிநெல்லாதியுந்தந்துமுதலைவா
யுறுமதலைவரநல்கியு

மருநாண்மலர்க்கழலளித்தவாறெமையுமருள்
வளமருவுநல்லூரில்வாழ்
மன்னவதினம்பேசுநன்னயமுறுந்தேசு
மன்னமுதலிங்கேசனே. (௫)

மந்திரத்தலைவரெனவழுதியருண்மிக்கவரி
மர்த்தனுக்கிருகண்மணிநேர்
வாதவூரடிகளைக்குருவாகியாட்கொண்டு
மன்னியபெருந்துறையினிற்
சுந்தரப்புரவிகொளவேந்தனருணிதிதனது
தூயசந்நிதிக்காக்கியுந்
தொன்னரிகள்பரியெனச்செய்துமவைமுன்னையுரு
தோயப்புரிந்துவந்துந்
தந்திரத்தொடுவைகைமண்முடிசுமந்தொருமெய்
தன்னிலடிதாங்கிநின்றுந்
தக்கதிருவாசகங்கேட்டுந்திருக்கோவை
தான்சொலவரைந்துமன்றில்
வந்தணைவுறத்தந்தபேறெனக்கருள்வையோ
வளமருவுநல்லூரில்வாழ்
மன்னவதினம்பேசுநன்னயமுறுந்தேசு
மன்னமுதலிங்கேசனே. (௬)

தாதையைத்தாளற வெறிந்தநற்றண்டீசர் தமதிரு
கண்மலர்பறித்துச், சாத்துமொருகண்ணப்பரன்பினொ
டுசேய்க்கறி சமைத்தருள்சிறுத் தொண்டர்தம்,பேதை
யாணையினின்ற திருநீலகண்டர்மெய்ப் பேறுதரு திரு

மந்திரம், பேசுதிருமூலராதியர்பெற்றசித்தியொடு பெ
ரியபர முத்திமேவ, வாதரித்தருள்வையென நினது
பாதாரவிந் தங்களைப் பாடுகின்றேற, னம்மையிற்றருவ
மென விம்மையிற்சிறியனெனை யாளாதகை விட்டிடே
ல், மாதமுதவல்லிமகிழ் மணவாளனேயினிய வளமருவு
நல்லூரில்வாழ்,மன்னவதினம்பேசு நன்னயமுறுந்தேசு
மன்னமுத லிங்கேசனே. (எ)

ஓராழியந்தேரில்வருமிரவிமூவொன்ப துடுமாதர்
மகிழ்நாயக, னுருளையெனநான்மறைகள் பரியெனப்
பாரதி யுவந்தவிதிசாரதியென, நீராழியம்புவிதடந்தே
ரெனக்குலவ கிலவுவாசுகிநாணென, நீளுமகமேருமலை
சிலையெனமருந்தங்கி நீலமுகில்போலவொளிருங், கூரா
ழியங்கைமால்வேகநுதியம்பெனக் கொண்டுமுப்புரமு
நீறக், கோபித்தபிரதாப மிகுதாளவாணகைக் கொற்ற
வாமுற்றுமெனையாள், வாராழியெனமுரச மதிர்வாயி
லொளிர்கோயில் வளமருவு நல்லூரில்வாழ், மன்னவ
தினம்பேசுநன்னயமுறுந்தேசு மன்னமுதலிங்கேசனே.

பாருலகுசெய்த புண்ணியமோருருக்கொண்ட ப
ரிசிலொளிர்கயிலைவரையைப், பத்திருதடந்தோளில் வலி
கொடுபெயர்த்தவன் பாதலத்தினிலொடுங்கச், சிருலவு
திருவடிப் பெருவிரலினூன்றியிட்ர் செய்துபின் னவ்வ
ரக்கன், செங்கையாழ்சுடவி யிசைவேதகீதங்களிரு செ
வியேற மகிழ்வுகொண்டு, நாருலவுபேரருளின் மூன்ற

னைக்கோடிவா ணனுமொரு வாளுமந்நா, ணல்கியபெ
ருங்கருணை சூழ்வொளிரருளாழி நம்பனே நம்புமெனை
யாள், வாருலவுவல்லின்முலை நல்லமுதவல்லியொடுவள
மருவு நல்லூரில்வாழ், மன்னவதினம்பேசு நன்னயமு
ழங்கேச, மன்னமுத லிங்கேசனே. (௯)

இல்லாமையோடுபுன் கல்லாமைதிரவு மிடைந்தெ
னை யடைந்தபோதுக், கில்லையென்றுசொல்லாம லில்லையெ
ன்றுநிதிபுகலி யிதயமகிழ் கூர்விக்கவு, நல்லாரிணக்க
முடனொல்கா தமிழ்க்கசிவ ஞானநெறி யெல்லாமெனுள்,
நன்றுதவாராய்ந்து குன்றுதவருள்வாய்ந்து நாடின்ப
வாரிதோய்ந்து, பொல்லாதவெம்பிறவி நில்லாதகன்று
நின் பொருவில்பர முத்தியுறவும், பொய்யேனையாண்ட
ருள்க நையாமலோங்குனது பூங்கழலையிங்கடைந்தேன்,
வல்லாரெனும்புலவர் சல்லாபமிஞ்சுபல வளமருவு நல்
லூரில்வாழ், மன்னவதினம்பேசு நன்னயமுழங்கேச
மன்னமுதலிங்கேசனே. (௧௦)

திருநல்லூரமுதலிங்கர்பதிக முற்றியது.

திருச்சிற்றம்பலம்.

மலைமகள்கணவன் மாணடிவாழ்க.

---

ஆக புத்தகம் 65.

உ

கணபதிதுணை.

# திருமுல்லைவாயில்

# மாசிலாமணியீசுரர்பதிகம்.



இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

முருகன்றுணை.

# மாசிலாமணியீசுரர் பதிகம்.

## கடவுள்வாழ்த்து.

முக்கணனென்னு முதல்வனையேத்தப்
பக்குவப்பதிகம் பத்தும்வருமே.

## ஆசிரிய விருத்தம்.

ஆதியேயரனே யருட்பெருங்கடலே
யப்பனே பிரமன்மாற்கரிய
சோதியேசுடரே சுடர்மணிக்குன்றே
சுத்தனேயென்னை யாண்டருள்கூர்
நீதியேநிறைவே நின்மலவொளியே
நித்தனே திருமுல்லைவாயில்
றீதிலாதுறையுஞ் சச்சிதானந்த
தேசனே மாசிலாமணியே. ௧

மாலொடுவிதியுந் தேடியுங்காணு
மன்னனே மன்னவர்க்கரசே

பாலொடுகலந்த தேனிநற்சுவையே
பன்னகாபரணனே வடியேன்
காலனுக்கஞ்சா துன்கழலடியை
கருணைசெய் கருணைவாரிதியே
சீலமாதவர்சூழ் திருமுல்லைவாயில்
தேசனே மாசிலாமணியே. ௨

வானவர்போற்றும் வள்ளலேசோதி
வரையுருவாகியே முன்னம்
ஏனமாலயனுஞ் செருக்களனின்ற
வெந்தையே தீவினைக்காட்டை
ஞானநற்றீயால் கொளுத்தியுட்புலத்தை
நலம்பெறத்திருத்தி யேற்கருள்கூர்
தேனலர்பொழில்சூழ் திருமுல்லைவாயில்
தேசனே மாசிலாமணியே. ௩

கடவுளர்காணுக் காரணவொளியே
கவினுலாங்கைலைநாயகனே
கொடியிடைவல்லி யிடம்படர்பவளக்
குன்றமே கோதிலாவமுதே
கடைனேன்றன்னை யாள்வதுன்பாமே
கற்பகப்பூந் துணர்க்காவே

திடமதிற்சிகரி திருமுல்லைவாயில்
தேசனே மாசிலாமணியே. ௪

பிரமனுங்காணாத் திருமுடிவளைத்து
பிராமணப்பிள்ளை முன்காண
அருளுநல்வழிக்குத் துணைவனென்றறிந்து
மன்பிலே னெவ்வகையுய்வேன்
திருவடிகாட்டித் தீவினையோட்டித்
சிவானந்தத் தெள்ளமுதூட்டித்
தெருளினைக்கூட்டி யருண்முல்லைவாயில்
தேசனே மாசிலாமணியே. ௫

கதிமதியனன்முக் கண்ணனேவிண்ணோர்
கண்ணனென் கண்ணற்குமரிதாய்
துதியடியவர்முன் னெளியதாய்வருமெய்ச்
சோதியே யாதியம்பரனே
ததியிதென்கோப தாபமுந்தீர்த்து
தண்ணருள்புரி தயாபரவ
திதியருக்கன்னந் தருமுல்லைவாயில்
தேசனே மாசிலாமணியே. ௬

மாயவன்சால வன்பினாலுருகி
மலர்க்கணா லருச்சனைபுரிய

நேயமாயுவந்து நேமிமுன்னளித்த
நித்தனே நிராமயச்சோதி
தூயமேனியனே கொடியிடைத்துணைவி
துணைவனே தோன்றிடாத்துணையே
தீயனேற்கருளுந் திருமுல்லைவாயில்
தேசனே மாசிலாமணியே. எ

கன்மியாமடியேன் கலவிநோய்தீரக்
கருணைமாமருந்தினை யளித்துன்
றன்மயமாக்கி யென்மயநீக்கிச்
சன்மவாதனை வலிபோக்கி
நன்மையதாகு நின்மயந்தருவாய்
நதிமதிமுடித்த வேணியனே
சின்மயமான திருமுல்லைவாயில்
தேசனே மாசிலாமணியே. அ

மன்னவர்மன்ன னாகியசோழன்
மகிழ்வுறத்தடுத்துவந் தருள்கூர்
அன்னையேயென்ற னப்பனேகுருவே
ஆதரித்தாளுந் தெய்வதமே
வன்னிமாமலையாய் மாலயற்கரிதாய்
வளர்ந்தமெய்ப் பரஞ்சுடர்க்கொழுந்தே
தென்னவன்முதலோர் தொழுமுல்லைவாயிற்
றேசனே மாசிலாமணியே. கூ

அகரமாயானந்த பேதமாமுயிரை
யளித்ததினிறைந் தழித்தழிக்க
நிகரிலாமூன்று வுருவமாய்நின்ற
நித்தனே மெய்தவர்வாழ்வே
பகருமறையின் முடிவினிற்படர்ந்த
பராபரநிராமய வொளியே
சிகரகோபுரசீ டிருமுல்லைவாயிற்
றேசனே மாசிலாமணியே. ௧௦

## வாழி விருத்தம்.

மூவரும் வாழ்கமோன
மந்திர முதலாயுள்ள
தேவரும் வாழ்கநல்ல
சிவனடி யார்கள்வாழ்க
யாவரும் வாழ்கஞான
வஞ்செழுத் தென்றும்வாழ்க
மாவருந் தவத்தோர்வாழ்க
மாசிலா மணியேவாழ்க.

மாசிலாமணியீசுரர் பதிகம்

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 66.

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் | 4 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| சாதாரணபாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட்டு ஆக்ட்டு | 3 | 0 | 0 |
| கிராமமுன்சிப்கோட்போதினி | 3 | 0 | 0 |
| இந்துலா | 4 | 0 | 0 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| வேதாந்தஜட்ஜிமெண்டு | 1 | 0 | 0 |
| கண்கட்டுவித்தை (இரண்டுபாகமும்) | 0 | 10 | 0 |
| போலீசுஆக்ட்டு | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| நாரதர்கலகம் முதற்பாகம் | 0 | 6 | 0 |
| நாரதர்கலகம் இரண்டாம்பாகம் | 0 | 4 | 0 |
| வியாசர் விபரீதம் | 0 | 4 | 0 |

இப்படிக்கு

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருக்குடந்தைக்

# கும்பேசர்பதிகம்

இஃது

ஆலந்தூர் - முத்துசாமி முதலியாரால்

இயற்றப்பட்டு,

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

கணேசாயநம:

---

# திருக்குடந்தைக்

# கும்பேசர்பதிகம்.



## ஆதிவிநாயகர் காப்பு.

### வெண்பா.

குவலயத்தோர் சூழ்குடந்தைக் கும்பேசர் மீது
பவமறவே யோர்பதிகம் பாடத்—தவமறையோர்
விண்ணவர்தா மாதி விநாயகனுர் செம்பதும
வண்ணமலர்த் தாடுதிசெய் வாம்.

## முத்தபிள்ளையார் முத்துக்குமாரசுவாமி

## திருநந்தித்தேவர் முதலியோர் துதி.

### கட்டளைக்கலித்துறை.

மூல நிலத்து ளுறைதா ரகமுக முன்னவனைச்
சாலப் பணிந்து வடிவேற் பிரானடி சார்ந்துபத்தி
சிலமிகுநந்தியெந்தை திருத்தொண்டர் சீர்மைதுதித்
தேவுஞ் சிவாங்க வுபாங்கத்தை நாளுநின் றேத்துநெஞ்சே.

### பன்னிருசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சீர்வளம் பெறுகங்கை கொன்றையங் கதமருகு
திங்களணி சடையெழிலுமா தித்தனம் புலியங்கி யெ
னவோது முச்சுடர்த் திருநயன மெழிலுமேறைட்,
போர்வளர வெழுமுப்புரங்களெரி புன்னகைப் பொற்
பினெழி லுந்தொண்டரற் புதமிகும் பனுவல்கேட்
டருள்செவியி னெழிலுமுயர் பொருவின்மணி கண்ட
வெழிலும், ஏர்வளரும்வரதா பயந்தழுவுமழமா னிரு
ங்கரத் தெழிலுமுமையா- ளிடங்துலவு மெழிலுநின்
னுபயபத கோகனக வெழிலும்யான் கண்டுளமகிழ்,
கூர்வளம் பெறவருள்செய் நால்வர்க்கும் வடநிழற்
குருவா யமர்ந்த பரனேகுடங்கையி னருந்துணை ரொ
டுங்குவல யந்துதி குடந்தையுறை கும்பேசனே. (க)

கல்லாத மாந்தர்கழ கத்தின்மரு வுங்கொடிய
கபவனுள்ளக்கிளர்ச்சி கடுகளவு மில்லாத விழுமைநீ
வர்கண்மீது கருணையில் லாதசிதடன், நில்லாத வாழ்
வையே நிலையாக வெண்ணியதி நேசம்வைந் துழலு
மூடன் நித்தமட வியரைமோகித்தவர் நிதம்பமா நீர்க்
குழி யமிழ்ந்தபேதை, பொல்லாத விக்குண மெலா
முடைய யான்முன் புரிந்தபாதகமனைத்தும் போக்கிநீ
யருள்புரிந் திலையெனிற் புவனியிற் புகலிடம் பிறி
தில்லைகாண், கொல்லாத நிலவிரத நால்வர்க்கும் வட
நிழற் குருவாயமர்ந்தபரனே குடங்கையி னருந்துணை
ரொடுங்குவ லயந்துதி குடந்தையுறை கும்பேசனே.

எத்தனை விதக்குறை யிழைத்திடினு மகவதனை
யின்றவர்கள் கைவிடாரிவ் விருநிலத் துத்தொண்டர்
செய்பிழையை யாரியர்க ளேழையர்கள் குறையைமே
லோர், சுத்தவறி வில்லாத சிறியோர்செய் புரைபெரி
யர் துட்டர்வசை சறசனர்களுஞ் சோதித்த னீதியன்
றென்னவே தாகமங் துகளறச் சாற்றுமாற்றால், பித்
தனே னறியா தியற்றியுள பிழைகளும் பிறவியி லுஞ
ற்றுநவையும் பேரருளி னுறபொறுத் தாள்வதுன் பர
மெனப் பேதைநின் சரணண்டினேன், கொத்தடிமை
யானவொரு நால்வர்க்கும் வடநிழற் குருவாயமர்ந்த
பரனே குடங்கையினருந் துணை ரொடுங்குவ லயந்துதி
குடந்தையுறை கும்பேசனே. (௫)

பணமுடைய வரவுவெங்கருடன்முன் னில்லாது
பரிதிமுன் பனிநிலாது பகரொளிமு னிருணிலா தழல
தன்மு னுயரும்வெண்பஞ்சுபொதி நில்லாதுவன், சுண
ர்முனல் லோக்கணிறை நில்லாது பேய்முதற் கண
ஞானி முன்னிலாது கற்றபெரி யோர்முன்க லார்மொ
ழி நிலாகருங் கடல்வெளமு னகிலநில்லா துணர்வரிய
நின்றிரு வருட்பயனு ளோர்கண்முன் னூழ்வினை நி
லாதுண்மையிவ், வுணர்விலேற் குன்னருளடைந்திடி
லென் வெவ்வினைக ளோடவழி தேடுமன்றே, குண
நிதி யெனச்சொலொரு நால்வர்க்கும் வடநிழற்குரு
வாயமர்ந்த பரனே குடங்கையி னருந்துணை ரொடுங்
குவ லயந்துதி குடந்தையுறை கும்பேசனே. (௬)

பற்றறக் கோயிலல கிடுதன்மெழு குதலுளப் பரி வோடு மலர்கொய்தலப் பைந்துணரி ஞற்றுர் தொடுத் தணிதறீபமெய்ப் பத்தர்பணி; புரிதலிலையன், புற்ற ளவி லாகமத்தோதுபூ சாவிதிக ளொருசிறிது மோர் தலிலைமிக் கோங்குமியமாதியட் டாங்கயோ கங்கடமி லொன்றினு முயன்றதிலைமா, லற்றவர் தமக்குமிரு விளையொப்பு வந்தபினு மணுகுதற் கரியதான வான ந்த ஞானநிலை கிட்டவிலை யறிவிலேற் கருள்வையோ காமாதியாங், குற்றமில் லாதவொரு நால்வர்க்கும் வட நிழற் குருவாயமர்ந்த பரனே குடங்கையி னருந்தவ ரொடுங்குவல யந்துதி குடந்தையுறை கும்பேசனே.

பாலர்கட் குத்தந்தை தாயலாற் கதியேது பட ர்கொடிக் குக்கொம்பலாற் பற்றுகதி யேதுநல் குரவி னோர்க் குப்பொருள் படைத்தோர லாதுகதியே, தேலவார் குழலியர்க் குப்பதிய லாதுகதி யேதுவான் பயிர்கட்கெலாமெழிலியல்லாதுகதி யேதுவாணுளவி ணைகழித் திவ்வம்புவி, மேலலைந் திடுமெனக் குன்ன ருள லாமலினி வேறுகதி யேதுசொல்லாய் விந்தியா னந்தரொடு நித்தியா னநதர்தொழும்வேதாந்த நாதா ந்தனே, கோலமொடு பிரமமுனி நால்வர்க்கும் வட நிழற் குருவாயமர்ந்தபரனே குடங்கையி னருந்துவ ரொடுங்குவ லயந்துதி குடந்தையுறை கும்பேசனே.

என்றவனி தனிலன்னை கர்ப்பத்தி லுற்பவித் திட்டதோ வன்றுமுதலாயிதுகாறு மின்பனுப விதத

துன் டோயாது மில்லையென வந்திரந்து, நின்றவர்க்
கணுவளவு மீயநன் னேயமொடு நெஞ்சினி னினைந்த
துண்டோ நியமமொடு மைந்தக் கரத்தைச் செபிக்கு
நன்னெறியுட் குறித்ததுண்டோ, சென்றபலபிறவிக
டோறுங்கருத் தொடுநின்றிருத்தொண்டு செய்தது
ண்டோ சித்தமதி வித்தகைய தியகுண முளவெனது
தீவினை யொழித்தருள்குணக், குன்றிவர்ந் தோங்கு
மொரு நால்வர்க்கும்வடநிழற் குருவாயமர்ந்த பரனே
குடங்கையி னருந்துணை ரொடுங்குவல யந்துதிகுடந்
தையுறை கும்பேசனே. (எ)

நீதியறி யாதமாபாதகந் தீர்த்தவரு ணிலையின்று
குலைவுற்றதோ நீணிறத் தாலமுண் டமரரைக் காத்
தருளு நேயமின் றேய்வுற்றதோ, பூதிநெறி போற்று
மார்க் கண்டர்முன் மறலிவருபோதெதிரில் வந்தவனு
டல் பொன்றச்செய் நின்னருட் பொற்பினு ளற்பம்
பொருந்தியதெனக் கூடுமோ, மாதிரத் தன்பர்துயர்
மாற்றவலாயுனது வன்மையின் றின்மையாச்சோ மதி
யிலேற் கிதுவரையு முன்னுள மிரங்காத வண்ணமறி
கின்றிலேனல், கோதிறவ மேவுமொரு நால்வர்க்கும்
வடநிழற் குருவாயமர்ந்த பரனே குடங்கையி னருந்
துணை ரொடுங்குவ லயந்துதி குடந்தையுறை கும்பே
சனே. (அ)

வாடாத வானளின வனிதைபதி யாம்விதி வனை
ந்தமங்கலமாம்படி வந்தைநீர்வரியெழுந் திறகுவமை

யெனவுமதில் வளரிளமை யுதகத்திலே, நீடாம லழி
குமிழி யெனவுமிகு செல்வமது நீர்த்திரை நிகர்க்கு
மெனவும் நெடியவூகத்தினொடு முன்னோருரைத்தபடி
நேரினிற் கண்டுமெந்தோ, விடாத வென்றெண்ணி யம்
மூன்றின் மீததிகவிழைவுவைத் துழலனன்றோ வேத
ண்ட னேயுள மிரங்கியினி யேனுமென் வேதனை தவி
ர்த்தாளுவாய், கோடாத நெறியருள நால்வர்க்கும்
வடநிழற் குருவாயமர்ந்த பரனே குடங்கை யினருந்
துணை ரொடுங்குவ லயந்துதி குடந்தையுறை கும்பே
சனே. (௬)

அட்டசித் திகளெலாம் பெறலாகு மொருகுளி
கை யதுகொடன் டாண்டமெல்லா மரைநொடியில்
வலமாக வரலாகுமெந்திரத் தாலோங்கி யுயர்வான
மேற், கட்டமில்லாது திரிதரலாகுமற்புதக் காட்சிபல
காட்டலாகுங் கருதியபடிக்குநற் போனகமதாதியாக்
கண்முனர்க் கொணரலாகு, மிட்டமொடு லோகங்க
ளொன்றையொன் றாகமிக வெளிதில் வேதிகலாகு
மிமையளவு மெனதுமன முனதொருமை நிலையெய்த
லென்றறைந்து புலவேடர்தங் கொட்டம டக்கியெ
னிர் நால்வர்க்கும் வடநிழற் குருவாயமர்ந்த பரனே
குடங்கையி னருந்துணை ரொடுங்குவ லயந்துதி குடந்
தையுறை கும்பேசனே. (௰)

அறைகின்ற வம்புவியி லடியன்வின் ணப்பமெம
றதனையுன் செவிமடுந்துள் ளன்பினத்தகையவொரு

வரமளிக்தருள் புரிவை யஃதென் னெனிற்புகலுவேன், உறையமிவ்வுடலிலுயி ருள்ளளவு முப்பிணியி னுறுக ணௌ ளளவுமணுகா துலவுமிருகாதுகளி னுற்றன்பு ருமலு முடன், மறையநேரிடுமந்த நிமிடவனை யுன துதிரு வடியைமற வாப்பத்தியும் மற்றுமுள வென தெண்ண மீடேற வருள்செய்தல் மாதவப். பேற்றி லொன்றுங், குறைவிலா தோங்குமொரு நால்வர்க்கும் வடநிழற் குருவா யமர்ந்தபரனே குடங்கையின ருந்துண ரொடுங்குவ லயந்துதிகுடந்தையுறை கும் பேசனே. (௧௧)

உனதைந்து மந்திரமும் வாழிநால் வர்கள்வாழி
யோங்குசந் தானகுரவுப்
புனிதர்தவ வாழுதிரு முறைபன்னி ரண்டுடன்
புகல்வேத நூல்கள்வாழி
கனிதமிழ்க் கும்பபுரி வாழியுமை பாகநிற்
கருதும்வே தியர்கள்வாழி
யினியகவி வாணர்மா மழைவாழி நின்கருணை
யென்றுமெம்பால்வாழியே.

திருக்குடந்தைக் கும்பேசர் பதிகம்.

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 67.

உ

# பக்திஸ்தோத்திரப்பதிகம்.



சென்னை - சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.
1[illegible]03.



உ

கணபதிதுணை.

# கணேசர் தோத்திரம்.



சீர்பெற்ற மூஷிகமீதேறிவந் தென்முனே சிங்காரஜோதிமின்ன, பார்வதியும்பரமனும் முருகனொடு வரனவர் ரிஷிமுனிவர் சித்தரின்னம், கார்மேகவண்ணனும் கஞ்சனும்ஜெயஜெயா கணபதிதுணையென்னவும், பேர்பெற்ற தேவர்யென் சிந்தையில்விளையாடும் சுந்தரகணேசகுருவே. (க)

அன்னையும் தந்தையும் குருதெய்வம்நீயென் றகத்தினில்யானினைந்தேன், பன்னுமா மறைகள் புகழ் பரமனிடபாலனே பக்தர்கட்கினியவமுதே, நன்னயமாகவென் மார்பில்லட்சுமிவாழ, நாவில் சரஸ்வதியும் வாழ, அன்னலேசெய்யுமென் சிந்தையில்விளையாடும்சுந்தரகணேசகுருவே. (உ)

இலக்கணவிளக்கியந் தாளமும்சங்கீதராகமுந்தவராமலே, கலக்கமில்லாமலே யான்கவிகள்பாடவுங் கஜமுகாதுணைசெய்குவாய், உலகினுனைவிடயெனக் காருதவிசெய்குவார்ஓங்காரகணநாதனே, பலநாளுமென் தனிட சிந்தையில்விளையாடும் சுந்தரகணேசகுருவே.

வறுமைபிணி துன்பமும் தொந்திரவு மெந்தனையணுகாமலேதுரத்தி, தருமநெறிதவறாமல் தரணியில்

வாழவும் வரமருளுமெந்தனுக்கு, பரமனருள்செல்வமேபக்தர்கள் சகாயமே முத்திக்கு கர்த்தவ்யமே, பிரகாசவடிவேயென்சிந்தையில்விளையாடும் சுந்தரகணேசகுருவே.

முப்பழச்சர்க்கரை யவலுடன்கடலையும்சீனிகற்கண்டுதேனும், அப்பளம்போளியும்வடைதோசையெள்ளுண்டை ஆமவடை மோர்க்குழம்பும், செப்பொணுமகிழ்ச்சியா லுண்டிடுந்தேவனே சிவனுக்குகந்தமகனே, எப்போதுமுன்னடியர் சிந்தையில்விளையாடும் சுந்தரகணேசகுருவே. (௫)

---

திருப்போரூர் திருமுருக

# வடிவேலர்தோத்திரப்பதிகம்.

---

திருமேனியெங்குந் திருவெண்ணீறிலங்க திருக்கைகளில் வேலணிந்து, பெருமைசேர்மயில்மீதில் பிரியமுடனேறியேபக்தர்கள்கண்டுமகிழ, திருநடனமாடிவருந்தேவர்கள்சேனைபதியென் தீவினையைபோக்குகறகுன், திருவடியைநம்பினேன் காருந்திரும்போரூர் திருமுருகவடிவேலனே. (௧)

புண்ணியவசத்தினு லுன்பக்தனுகவிவ வுலகத்தி
ல்யான்பிறந்தேன், பண்ணவர்சேனுபதி தெய்வானைவ
ள்ளிமகிழ் பரமகுருவானபொருளே, விண்ணுடர்போ
ற்றும்வடி வேலனே யெந்தனிரு கண்ணே யெந்தன்
கருத்தே, நண்ணினே னுன்பாதங் காருந்திருப்போரூ
ர் திருமுருகவடிவேலனே. (௨)

நாட்டமா யிலக்கண விலக்கியமறிந்திலேன் நாத
னே யுந்தனருளால், பாட்டுகளும் வெண்பாவிருத்த
ராகங்களும் பதிகங்கள் கீர்த்தனைகளும், கூட்டியே
செந்தமிழ் கவிக்கொடியும் நாட்டியே குவலயத்தோ
ர்கள்மகிழ, தாஷ்டியாய்பாடவரந்தாருந் திருப்போரூ
ர் திருமுருகவடிவேலனே. (௩)

வஞ்சனைசூனியம் பேய்ப்பில்லியேவலும் விஷக்
கடியும் சூதுவாதும், நெஞ்சந்திடுக்கிட்டு என்னிடம்
வராமலேதடுமாறிநிலைகலங்கி, அஞ்சியேயறுநூறு கா
தவழியோடவே!யடித்துத்துரத்துமையா, நஞ்சுண்ட
கண்டனருள் பாலாதிருப்போரூர் திருமுருக வடிவே
லனே. (௪)

தாருகாசுரனை வதைத்தமரர் துயர்தீர்த்த தணி
கைவாழ் முருகையனே, ஓராறுதிருமுகந் துலங்கவெ
ண்ணீறணிச் தொய்யார மயிலேறியே, பாரோர்துதித்
துமகிழ் திருநடனமாடிவரும் பன்னிருகை சிங்கார
னே, நேராகவந்தெனைக் காருந்திருப்போரூர் திருமு
ருகவடிவேலனே. (௫)

பன்னிருகைவடிவேலனென்றனை யிருக்கையில் பயமில்லையெந்தனுக்கென், றன்னியுன்பாதார விந்தத்தைமறவாமல் பன்னினேன்பாடலாக, சென்னியில் சந்திரர் கங்கையைதாங்கிய சிவனுக்குகந்த புதல்வா, என்னிடரைதீரத்தெனைக்காருந்திருப்போரூர் திருமுருகவடிவேலனே. (௬)

பரமனருள்பாலனே பக்தர்கள்சகாயனே சரணடைந்துனைநம்பினேன், பிறவிபிணிபாபமுந் தீவினையுமெந்தனை யணுகாமலேதுரத்தி, தரணியில் கீர்த்திகள்பெற்று பெருமையாய்வாழவும் வரமருளுமெந்தனுக்கு, சரவணையிலேவிளையாடுந் திருப்போரூர்திருமுருகவடிவேலனே. (௭)

முருகேசனேயருண கிரிநாதருக்குப்பர குருவாக வந்தபொருளே, திருமால்தனக்குமருமகனேகுறச்சிறுமி தழுவும்பணைத்தோளனே, திருவானஜோதிமய மயில்மீதிலேறிபுகழ் தெய்வானைவள்ளியுடனே, வருவாய் எனக்குவரந் தருவாய்திருப்போரூர் திருமுருகவடிவேலனே. (௮)

தண்டாயுதக்கடவுளென்றால் பேயேவலுந் தீண்டாதுமண்டலத்தோர், கொண்டாடுந்தெய்வசிகாமணியேயுனைப்பணிந்தின்னேரமெந்தனுவால், பண்டோருரைத்தசெந் தமிழாலுந்தன்பெருமை பாடினேன்பரமகுருவே, விண்டேனென் தீவினைகளெல்லாந் திருப்போரூர்திருமுருகவடிவேலனே. (௯)

ஆலகாலமுண்டபர மேசனிடபாகமதிலன்புடன் வாழுமுமையாள், பாலா அரக்கர்குல காலனே குணசீல கந்தமலைதனிலமர்ந்த, மூலாதாரப்பொருளே முத்திக்குகர்த்தவ்ய மெய்ஞ்ஞான கந்தஸ்வாமி, வேலாயுதா எனைக்கார்க்குந்திருப்போரூர் திருமுருகவடிவேலனே. (கo)

---

# சிவசம்புலிங்கநாதர்பதிகம்.

---

திருமேனிதனி வரவாபரணந்துலங்கவுந் திருநீறணிந்தவுருவே, முருகனுக்கழியாவரந்தந்து ரட்சித்த முக்கண்ணஜோதிபரமே, திருமாதிலட்சுமிஎன்மார்பில்கொலுவீற்றிருந் தென்னாளும்வாழ்ந்திருக்க, பெருமானுமாபதிவரதந்திரகூடியும் சிவசம்புலிங்கேசனே.

எறும்பு ஈயானைமுனி ரிஷிமனிதரமரர்கள் சகலஜீவராசிகட்கும், குறையொன்றுமில்லாமல் படியளந்திடுமெழுதே சர்வரட்சகநாயகா, வறுமைபிணி துன்பமும் என்னாளும் அடையாமல் வையகந்தனில்மேன்மையாய், பெருமையாய்ப்பிழைக்கவரந் தந்தென்னைரட்சியும் சிவசம்புலிங்கேசனே. (உ)

மறலியை யுதைத்துமார்க் கண்டனுக்கிரெட்டு வயதளித்தன்பருக்கு, குறையொன்றுமில்லாமல் வரந்தந்திரட்சிக்கும் கைலைவாழ்சர்வேசனே, மறவேனுன்பாதத்தை யொருநாளுமென்னுயிர்க் காதாரமான சிவமே, பிறைசூடியுமைநேச னேயுன்னைநம்பினேன் சிவசம்புலிங்கேசனே. (௩)

கரிதனையுரித்தசுரர் நெஞ்சங்கலங்கிட திரிபுரமெரித்தசிவமே, அரியயன்தேடியுங் காணாதஜோதியே திருவண்ணாமலைவாசனே, நரியைபரியாகவே செய்தடியர்துயர்தீர்த்த நாதாந்தஜோதிமயமே, அரகரா சங்கரா வரந்தந்திரட்சியும் சிவசம்புலிங்கேசனே. (௪)

காலனெந்தனைமெத்த கஷ்டப்படுத்த வொட்டாமலேகொருமையா, நீலகண்டேசனே நித்தனே சுத்தபரிபூரணயமூர்த்தலிங்கா, ஆலாலமுண்டகுண சீலாயென்தன்மனதமர்ந்திடும் சொக்கலிங்கா, லீலாவிநோதனே வரந்தந்திரட்சியும் சிவசம்புலிங்கேசனே. (௫)

அம்புலியைசெஞ்சடை யணிந்திடுமுக் கண்ணனே அகிலபுவனங்கள்புகழும், கம்பமாமதயானைமாமுகம்விளங்கிடும் கணபதியையீன்றசிவமே, சம்போமகாதேவாவென் றமர்தொழுதிடும் சத்துசித்தானந்தமே, நம்பினேனுன்பாதம் வரந்தந்திரட்சியும் சிவசம்புலிங்கேசனே. (௬)

துன்பமும்பிணிகளுங் கன்மமுமெந்தனை யென்னுளுமணுகாமலே, இன்பம்வைத்தென்மீதிலுன்னரு

ளிருக்கவே யீசாவரந்தாருமென், றுன்னடிவணங்கி யுன்பாதாரவிந்தமென் சென்னியில்சூடினேன் யான், பன்னுமறைபுகழ்பரமே வரந்தந்திரட்சியும் சிவசம்பு லிங்கேசனே. (எ)

பூமியில்யான்பிறந்தே தேதோகஷ்டங்க ளனுப வித்தேனையனே, காமக்குரோதலோப மோகமதமாச் சரிய மென்னையணுகாமல்செய்யும், சோமனைசிரத்தி லும் மான்மழுகரத்திலும் துலங்கவே யணிந்தமெய் யா, ராமலிங்கையனே வரந்தந்திரட்சியும் சிவசம்புலி ங்கேசனே. (அ)

பர்வதராஜன்பெற்ற பார்வதிமகிழ்ந்திடும் பரம சிவஜோதியொளியே, பிரியம்வைத்தெந்தனைக் காரு ம்மையாநட ராஜனேயென்னிடத்தில், துர்வியாதி துர் மரண மென்றைக்கும்வாராமல் செய்யுமையாயீஸ்வ ரா, சர்வபரிபூரண வரந்தந்திரட்சியும் சிவசம்புலிங் கேசனே. (கூ)

சந்திரனைகங்கையை சடையிற் றரித்துமையை யிடபாகம்வைத்தசிவமே, அந்தரத்தமரர்புகழ் நந்தி கேஸ்வரர்தாழ கந்தன்கணபதியும்சூழ, சுந்தரஜெய வீரசூரதீரகவிராஜ கந்தசாமிப்பிள்ளையின், சிந்தை யில்கொலுவமர்ந் தென்னுளும்நீங்காத சிவசம்புலிங் கேசனே. (க0)

பக்திதோத்திரப்பதிகம்முற்றிற்று.

உ

சிவமயம்.

---

காட்டங்குளத்தார்

# காளத்திநாதர்மீது பதிகம்.

---

அஷ்டாவதானம்

பூவை-கலியாணசுந்தரமுதலியார்

அவர்களியற்றியது.

இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.



உ

சிவமயம்.



காட்டாங்குளத்தூர்

# காளத்திநாதர்மீது பதிகம்.

காப்பு.

வெண்பா.

காட்டாங் குளத்தூர்வாழ் காளத்தி நாதரின்மேற்
பாட்டாற் பதிகமொன்று பாடுதற்கு—வேட்டேன்
புரிமுகத்தில் வீற்றிருந்துபோற்றுவர்தோம்போக்குங்
கரிமுகவி நாயகரின் கால்.

## நூல்.



எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சுடர்மணித் தோடுந் துலங்குசெஞ்சடையுந்
    தோன்றுவெண் ணீறணி நுதலும்
கடனிகர் கருணை பொழிந்திடு நோக்குங்
    கண்டிகை பூண்டிடு மார்பும்
அடற்புலி யதளு மழகிய பதமு
    மடியனேன் கண்டிட வருவாய்
கடியலர் காட்டாங் குளத்தினில் வைகுங்
    காளத்தி நாதவென் கோவே. 1

உன்னைநா னறியே னென்னைநீ யறியா
    யுறும்வழி யேநகா ணைந்தாய்
மன்னிய வினையின் வழியது நடக்கு
    மற்றதற் கேதுதான் செய்கேன்
என்னிடி லந்தோ சடந்தனுக் கியக்க
    மெங்ஙனம் வந்தது புகலாய்
கன்னல்செய் காட்டாங்குளத்தினில் வைகுங்
    காளத்திநாதவென் கோவே. 2

மெய்யடி யார்கள் வேட்டவை யெல்லா
மேவிட தந்தகற் பகமே
துய்யநற் பொருளே தொன்மையாந் துணையே
தோன்றுமிப் புவிதனக் கிறையே
பையவல் வினையை நுதல்விழி தன்னாற்
பார்த்துநீ றாக்கிடச் செய்வாய்
கையரில் காட்டாங் குளத்தினில் வைகுங்
காளத்தி நாதவென் கோவே. 3

பாயுமா கடலி னலைதனக் கயர்வு
பகர்ந்திடி லோர்பொழு தெந்தன்
ஓய்விலாப் பிறவி யொழியுநா ளுண்டா
முலகினை மெய்யெனக் கருதிப்
பேயனு யலையும் பித்தனேற் கெந்தாய்
பேரின்ப முன்னுமா றருளாய்
காயலர் காட்டாங் குளத்தினில் வைகுங்
காளத்தி நாதவென் கோவே. 4

வையகச் சுகத்தை வாழ்ந்துநா னறிந்தேன்
வானகச் சுகத்தினை நன்கு
மையவே படித்துப் பார்த்துநா னறிந்தேன்
பாவியே னுய்ந்திட வுந்தன்

செய்யதாட் சுகத்தைச் சிற்பர வெளியிற்
சேயனேன் பெற்றிட வருளாய்
கையடைக் காட்டாங் குளத்தினில் வைகுங்
காளத்தி நாதவென் கோவே. 5

எத்தனைப் பிறப்பிங் ககிலம தனி
லெடுத்துநான் வாழினுஞ் சலியேன்
அத்தனை தனிலுஞ் சைவனு யுதித்தே
யாண்டிடப் பெறுவனே லெந்தாய்
உத்தமர் போற்று முயர்பெருந் தேவே
வும்பர்கட் கரசே வுயர்வே
கைத்தலில் காட்டாங் குளத்தினில் வைகுங்
காளத்தி நாதவென் கோவே. 9

அருவமே நின்றன் படிவம தென்னி
லறிபவ ரொருவரு மில்லை
உருவமே யென்முற் காட்சியிற் கிலக்கா
யொழிந்திடுஞ் சடமதா யதனல்
அருவுரு வாகி யாலயத் தமர்ந்திங் கடியருக்
கின்னருள் புரிவாய்
கருதிடுங் காட்டாங் குளத்தினில் வைகுங்
காளத்தி நாதவென் கோவே. 7

ஆகம பூசை யடியவ ருணர
　　வனாதியே யம்மையார் செய்ய
வூகமாய்க் கொண்டே யொண்சிவ நிசியி
　　லொளிபெற நடித்தனைய தனால்
ஏகனே நினது மதுகையை யறிய
　　வெவர்திற மம்பிகை யல்லால்
காகவின் காட்டாங் குளத்தினில் வைகுங்
　　காளத்தி நாதவென் கோவே. 8

அக்கர மெல்லா மகரம ததனு
　　லசைந்திடுந் தன்மையே போன்று
முக்கிய பிரமன் முதலெனும் பந்த
　　முயலுதல் நின்செய லன்றோ
தக்கவ ரறிவர் தகாதவ ரறியார்
　　தானுவே நின்னிடத் தொழிலைக்
கக்கமில் காட்டாங் குளத்தினில் வைகுங்
　　காளத்தி நாதவென் கோவே. 9

பொறுமையுந் தயவு மடக்கமுங் கொடையும்
　　புகலுநல் வாக்குட னறிவும்
மறையவர் தொடர்பு மாக்களி லன்பு
　　மன்னியமௌனமா மனமும்

அறைதரு முலகி லடியனேன் பெற்றுன்
னருளினில் மூழ்கிட வருளாய்
கறைதபு காட்டாங் குளத்தினில் வைகுங்
காளத்தி நாதவென் கோவே. 10

## வெண்பா.

பண்டைதிருக் கச்சூர்ப் பதியின் வடதிசையைக்
கொண்டநற் காட்டாங் குளத்தூரி—லண்டர்தொழ
நின்றநங் காளத்தி நின்மலன்றுள் போற்றுபவர்
வென்றிபெற வாழ்வரினி மேல்,

முற்றிற்று.



உ

கடவுள் துணை.

---

# சிதம்பரநாதர்பதிகம்.



இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1903.

இந்துக்கள்

# தெய்வகுண வெளிச்சம்.

விசுவாவசு என்பவன்—வாதி.

கிருசானு என்பவன்—பிரதிவாதி.

பூலோகத்திலுள்ளே தெய்வங்களையும், தெய்வஸ்தலங்களையுங் குறித்து தேவலோகத்து காந்தருவர்களாகிய (விசுவாவசு என்பவனுக்கும், கிருசானு என்பவனுக்கும்) நடந்த எதிருக்தமான தர்க்கங்களாகையால் படிப்பதற்கு வெகு இனிப்பாயிருப்பதுமன்னியில் அனேக திருட்டுப் புரட்டுகளும், வியாசன் கட்டுப்பாடுகளும் வெளிப்படையாய் விளங்கும். இந்தப் புத்தகமானது (விஸ்வகுண தேரிசனமென்னும்) சாஸ்திரத்தை அப்படியே சமஸ்கிருதத்திலிருந்தும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது.

இதன் விலை அணு 8. தபாற்கூலி அணு

இப்படிக்கு,

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்.

பெரம்பூர் பாரெக்ஸ், மதராஸ்.



உ

கடவுள் துணை.

---

# சிதம்பரநாதர் பதிகம்.



விரித்தசெஞ்சடையாட வதனசந்திரனாட் விரிகமல நயனமாட, வெண்முருவலிலவாட நண்ணுதமருகமாடவீசுமொருசெங்கையாடத், தரித்தபுலியதளாட அபயகரமாட இருதங்குதோடசெலாடத், தாங்குனூலாடமேலோங்குநீராடவொளிர் தன்பவளமேனியாட, உரித்தகரியுரியாடஉரககங்கணமாட உபயபரிபுரமுமாட ஒருபதமெடுத்தாடஒருபதமிதித்தாட உள்ளேமகிழ்ந்துசற்றே, சிரித்துமலை மங்கைகொண்டாட நின்றுடு முன் திருநடன மென்றுகாண்பேன், செகம்பணிதிகம்பரசிதம்பரநடேசனே சிற்சொரூபாநந்தனே. க

தங்குபூதாதிநாதாந்தமென்றெண்ணவரு தநுகாணபுவனபோகஞ், சதுர்விதமடங்களுங் கானனீராகவுஞ்

சார்வாகமுதலாகவே, மங்குபரசமயகுருடர்க் கிருட்டாகவும் வளர்சைவ சம்பிரதாயம், வந்தசித்தாந்திகளெனுந்தெரியும் விழியினோர் மலவிருளனந்தகோடி, பங்கமுற்றேயோடிவிடியவுமவரிதய பங்கயம்விகசிக்கவும், பரையாதிபஞ்ச சத்திகளெனுங் கிரகணம்பரப்பியே நடனமிடுமோர், செங்கதிரவன்றீயுனைப்பரவியென் விழிதெரிந்து தரிசிப்பதெந்நாள், செகம்பணிதிகம்பர சிதம்பரநடேசனே சிற்சொரூபாநந்தனே. ௨

அம்புவியிலண்டந் தொடுத்தகிலபுவனங்களாவதேயுன்னுருவமும், அங்கங்குறுஞ்சரா சரமென்பதேஉருவினங்சமும் பொங்கபின்ன, சம்பந்தசிற்சத்தியென்கின்றவிச்சையொடுசபரூபஞானகிரியைதங்குமுட்கரணமுமங்காமலெங்குமே தாவிடும்பசுவர்க்கமும், நம்பும்புலன்களும் அவைக்கறி வளித்திடவும் நண்ணும்ஐந்தொழிலேதிரு, நடமுமாய்நீநின்று நாடகஞ்செய்திடில்நாடுமிடம் வேறுகாணேன், செம்பொனம்பலமென்பதென்பதென்னுளமாக செய்துகொண்டே நடப்பாய், செகம்பணி திகம்பர சிதம்பர நடேசனே சிற்சொரூபாநந்தனே. ௩

ஒருக்கணக்கில்லாத ஆத்துமவர்க்கங்களுக்கொருகை
த்தலத்தமருகம், உடல்கரணபுவனபோகங்களையுதிப்
பிக்கும்ஓரபயகரதலம்பின், பெருகத் துதிக்குமொரு
செங்கைத்தலத்தங்கிபேர்பெறச்சங்கரிக்கும்,பேதமற
வூன்றுமொருபாதபங்கயசுகம் பேசத்திரோபவிக்கும்,
அருளென்றுதூக்கியாடியபாதமும் மலங்களையுமறவே
ர்பிடுங்கி, அகண்டபரிபூரண சிதானந்தவாரியையளிக்
குமுன்னருளற்புதத், திருநடனமகிமைதனையாருள்ள
படிகண்டு தெரிசித்திருக்கவல்லார், செகம்பணிதிகம்
பரசிதம்பரநடேசனே சிற்சொரூபாநந்தனே. ௪

பவங்களாகிய பசியினுல்வாடியோடிப் பரக்குமென்
சிந்தைகண்டு, பரநாதபரவிந்து சிரமாகவருமென்றுப
க்ரபரவிந்துநாதம், உவந்திடுசதாசிவமகேசுரனுருத்தி
ரனுலவும்அலைகடலினடுவே, உரகசயனத்தினரியைம
டையுடைத்தொழுகுமொரு கமலமேலயனெனும், நல
ந்தருவிதங்கலைகள் வன்னபுதமந்திர புவனங்கள் பூதா
திவிந்துநாத முடிவானதொருபோத பரமானந்த நடு
வெளியிலேநடித்துச்,சிவந்தவுன்சரணமலர்த்தேனையு
ண்டுண்டு தேக்கிட்டிருப்பதெந்நாள்,செகம்பணிதிகம்
பர சிதம்பரநடேசனே சிற்சொரூபாநந்தனே. ௫

ஆயிரங்கிரணம்விடு பானுபதினாறுபத்ததிகாரம்வந்
திறந்தால், அம்போருகத்திலுறை பிரமனுக்கோர்பக
லக்கவர்னகோடியழியில், மாயனுக்கோர்பகநூறுனூ
ருயிரமாலிறந்தாலெமக்கோர், மாத்திரைப்போதெனு
மில்லையெனவேயுள மகிழ்ந்துசற்றேநகைத்தும், தூய
நகையெரியாற் பிரபஞ்சமெல்லாத்தையுஞ்சுட்டுவெண்
சாம்பலாக்கிச், சுட்டசாம்பலையெடுத்துத்துளித்துச்ச
ர்வசூனியமானத்திலோர்,சேயிழையுடன்றளித்தானந்
தநிர்த்தமிடு தெய்வமிங் கென்னையாள்வாய், செகம்ப
ணி திகம்பரசிதம்பரநடேசனே சிற்சொரூபாநந்தனே.

உருவல்லஅருவல்லஉருவருவுமல்லவிங் கொருவித
த்தறிவுமல்ல, ஒன்றலவிரண்டுமல உள்ளல்லவெளியல்
லஒன்றினுந்தோய்வதல்ல, இருளல்லஒளியல்லயிலதல்
லஉளதல்லஇன்பதுன்பங்களல்ல, இங்குநிர்ச்சித்தல்ல
வெங்குநிறச்சத்தல்லவிறமுதலுடையதல்ல, மருளின்
றி பகலின்றி யிரவின்றி நின்றவர்கள் மாசற்றமனவெ
ளியெனும், மாகனகசபைநடுவி லேயென்றமொழியா
மனோலயானந்தமயமாய்த், தெருளென்றுநின்றநின்கு
ஞ்சிதபதத்தையென் சிந்தைமறவாதுகண்டாய், செக
ம்பணி திகம்பரசிதம்பர நடேசனே சிற்சொரூ பாநந
தனே. எ

சத்திபாதாளத்தி னப்புரத்தேயேகசரணபங்கயமுயலகன், சந்தொடியவேயுதைத்தண்டகோடிகளின்மேற்சடாடவியெலாம் விரித்துக், கைத்தலங்களு நிறுவிவைத்திடு புயங்களுங் கருணைவளருங்குஞ்சிதக், கஞ்சமலரடியொன்றுவிஞ்செண்டிசாமுகங் களையுங்கடந்துநிற்க, மொய்த்தநூறுயிரங் கோடிசூரியர்சந்திரர்முதலொளியெலாமழுங்கி, மூழ்கவொருமேனியொளிகாட்டிநின்றுடுமுன் முடிவினடனங்கொஞ்சமோ, சித்தமாகியசபையினுள்ளே யடங்கிடுந் தெய்வீகமென்னசொல்வேன், செகம்பணி திகம்பரசிதம்பர நடேசனே சிற்சொருபாநந்தனே. அ

கைத்தலமிரண்டினுஞ்சங்குசக்கிராயுதங்காட்டியேரட்சிப்பதும், கண்டகண்டங்களையெலாம்படைத்தருள்பெரியகமலாசனத்துறைவதும், மத்தகெஜகும்பமுலைவனிதையர்கணடமாடவண்டுகீதம்பாடவே, மண்டுகற்பகநிழலிலண்டர்தொழ அரியணையில்வாழுமிந்திரபதமுமே, எத்தனையடைந்தாலுமத்தனையும்வெகுதுயரமெனவெறுத்தே யெனக்குன் இணையிலாநந்தங்களைக்கண்டிருக்குமேலிட்டபித்தின்னமின்னம், செத்துப்பிறக்கினு மொருக்காலு மொழியாது திருவுளமிரங்கி

யருள்வாய் செகம்பணி திகம்பர சிதம்பர நடேசனே சிற்சொரூபாநந்தனே. ௯

உம்முடையநடனத்தைஉள்ளபடி பொளியாமலொருநிமிடமாகிலுங்கண், டுத்தமர்கள்பெற்றிடுவர்முத்தியினையென்றன் றுரைக்குமறை யுண்மையானால், முன்வந்தசனனந்திலேயெனக்குக்கண்டுமுடியக்கிடைத்ததனால்,முற்பந்தமோடிவிடுமிப்பந்தவாராதுமுடியுமுன்னப்பவந்தே, புன்மையறிவோ டாகிலுங்காணவருகின்றபோலினால்மேற்பிறப்பு, போனதேபோவதற்கேதுவிதாதலாற்புண்ணியமிருந்தவிந்தச்சென்மமன்றோசென்மமெண்பத்துநான்கு நூறாயிரஞ் சென்மத்திலுஞ், செகம்பணி திகம்பர சிதம்பரநடேசனே சிற்சொரூபாநந்தனே. ௰

சிதம்பரநாதர்பதிகம்

முற்றிற்று.



ஆக புத்தகம் 70.

உ

கடவுள் துணை.

மைலாப்பூர்

# கபாலீசர் பதிகம்.

## கற்பகவல்லியம்மன் பதிகம்.



சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

சிவமயம்.

# வியாசன் விபரீதம்.

---

வியாசோ நாராயணோஹரி என்றபடி ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே வியாசபகவானாய் வந்தபடியால் மந்திரம் யெந்திரம் சந்தியாவந்தனம் முதலானதும் அவர் வாக்கினால் வந்தபிரகாரம் இட்டதேபிச்சைபென்று ஆயிரத்தெட்டண்டமும் ஆட்டிப்படைக்கிறது (இதுவுமன்றி) குருக்குநெடுக்காய்த் திருப்பிய வேதசாஸ்திர புராணமெல்லாம் அசைப்பாரில்லாமல் ஆச்சாவைரமாய்க் குந்திக்கொண்டது (வியாச விபரீதமென்றால்) அதிகமாய் விரித்துச் சொல்வதற்கு நாமெல்லாம் பெரியோரல்ல உலக மயக்கமெல்லாம் வியாசர் கட்டுப்பாடென்று சகலருக்குந் தெரிந்தவிஷயம்.

இதன் விலை அணா 4.

இப்படிக்கு
சிறுமணவூர்- முனிசாமி முதலியார்,
பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.

உ

கடவுள் துணை.

# கபாலீசர் பதிகம்.

காப்பு—வெண்பா.

மண்டலத்தோர் சூழ்மயிலை வாழுங் கபாலீசர்
தண்டமிழ்ப்பாமாலைதனைச் சாற்றவே - அண்டம்பூத்
தாடுணைவ னேடுகரந் தாங்கிமகிழ் கூர்ந்திடுகூத்
தாடுமிளங் களிறே யாள்.

சொல்லரிய சதுர்மறையின் முடிவினின இணையடிக
டுதிபுரியுமடியரினமா, நல்லவர்க ளுளமதனி னடனமி
டுதெய்வமே நாதனேநாயடியனே-னல்லல்க ளறக்கரு
ணைபுரிகின்ற நாளெந்தநாளோவருந்திலேன்சிர், மல்ல
ல்வனமோங்குதிரு மயிலையம் பதியினிதமருவுறு கபா
லீசனே. (க)

கூவிளநறுங்கொன்றை மாலைபுனை சங்கரா குவலய
மெலாந்தருமுமா, தேவியொரு புடைமேவு தேவனே
சிறியனின் றிருவடி தொழாதபொல்லாப், பாவியெனி
னுங் கடைக்கண் பார்த்திரட்சைசெய்பரமுனக்கேபங்
கய, வாவிசூழ்ந்தியிலகுதிருமயிலை யம்பதியினிதமருவு
று கபாலீசனே. (உ)

கஞ்சனொடு கண்ணனுங் காணவரிதாயமுக் கண்ண
னேகடலில்வந்த, நஞ்சணிக ளாகுருதிநாயகாநாயினே
னுனிலந் தன்னிளிதமுஞ், சஞ்சலப் படுதனின் றண்
ணருட்கழகோ சதானந்தனேசம்புவே,மஞ்சளவுசோ
லைசூழ் திருமயிலையம்பதியின் மருவுறுகபாலீசனே. ()

மின்னுசெஞ் சடைதன்னி லரவமோடறுகுமதிவே
ணியுமணிந்தவிமலா, என்னுடைய மனவிரு ளகற்றிநி
ன்னதநா ளிணைக்கன்ப னுக்கியருள் இன்னு மெத்த
னைநாள்கள் செல்லுமோ வறிகிலேனென்செய்வனெந்
தநாளு, மன்னுதிரு மயிலையம் பதியிலுறை யடியரக ம
ருவுறு கபாலீசனே. (௪)

ஐயனேயெனக்கருள் செயப்பனே யென்றுநின தி
ணையடிகடொழுபவர்வினை, நையவேயருள்செய்யு நாக
பூஷணனேவி னுடர்கடுதிக்கு பழுமான், கையனேக
டையனேன் கவலைதீர்த் தாள்வதெக் காலமோவறிகி
லேன்யான், வையமேத்தித்துதிசெய் திருமயிலை யம்ப
தியின்மருவுறு கபாலீசனே. (௫)

பானனமொழி யாளுமையொர் பாகனேபரமனேப
கவனே பாபஹரனே, ஞானசொரு பாவடியர் நாடுபு
னி தாசெய்ய நளினபா தாதற்பரா, யீனனெனை யாள
வுன் னுளமிரங்கா வண்ணமேதெனக்குளவு புகலாய்,
வானமளாவியமாடமல்கு,திருமயிலையினின் மருவுறு க
பாலீசனே. (௬)

பொங்குகடல்சூழுமிப் புடவிதனி லுழலுமென்புந்
தியை மயக்கிடுமலக், கந்நுலறநின்கருணையெனுஞான

வொளிதந்து காத்திடா விடிலடியனே, னெக்குசென்
றூர்க்குரைப்பேனெனுட் குறையெலா மினியேனு நீக்
கியருள்வாய், மங்குறவழ் புன்னைவளர் திருமயிலை யம்
பதியின்மருவுறு கபாலீசனே. (எ)

கறைமிடற்றண்ணலே கரைதிரைபி லாதவுயர் கரு
ணையங் கடலேபசுஞ், சிறையடைக் கலபவுருவா யம்
மைபூசித்த செல்வமே சிறியனேனுட், குறைகளைந்தா
ளற்குனுளமினுமிரங்காத கொள்கையேதோவறிகிலே
ன், மறையவர்செய் மகநீடு திருமயிலையமபதியின்மரு
வுறுகபாலீசனே. (அ)

காரிகையர் காமவாரிதிபடிந் தேறவொருகரையறி
கிலாதுழலுமிப், பூரியனினடியர்பணி விடைபுரிய வ
ருள்செய் பரிபூரண கமழ்கடுக்கைத், தாரிலகு மணி
மார்பனே சந்த்ரசேகர சதாசிவ பராமாதமும், மாரி
பொழி திருமயிலை யம்பதியிலடியரக மருவுறு கபாலீ
சனே. (௯)

அளவரிய வொருபரம் பொருளாகி நின்றிலகு மப்ப
னேவொப்பிலாயென், னுளமதனி லுறுதுயர்க ளுரை
செயவென்வசமலநினுளமறியுமருள்புரிவையே, கோ
மளவுமை யொடொரு விடையிலடியர்துய ரகலவரும்
வள்ளலே தெள்ளமுதமே, வளமைமிகுதிருமயிலையம்
பதியிலடியரக மருவுறுகபாலீசனே. (௧௦)

திருமயிலைக் கபாலீசர்பதிகம்
முற்றிற்று.



# திருமயிலைக்கற்பகவல்லியம்மைபதிகம்.



காப்பு-வெண்பா,

காரூர்பொழின்மயிலைக் கற்பகவல்லிக்கன்பாய்ச்
சீரூர்பதிகம்யான் செப்பவருள்—நீரூரும்
கூத்தாடையாளந்த கோபாலனார்மருகா
கூத்தாடையானைமுகா கூர்ந்து.

நூல்.

மேகங்கிரானகுழ லழகும்விற்கணையி னுதல் விழியி னழகும்பசியசெம்-பூகமொப்பாகுங்கழுத்தழகு மம்புயப் போதனைய வடியினழகுஞ், சோகமிக்கிழிஞர் குழுவிழைகடையனேனுளத்துயறக்காண்ப தென்றோ, மாகமளவியசோலை மயிலைகபாலீசர்பான் மருவுகற்பகவல்லியே. (க)

பூசனைசெ யடியர்வினைபொடிபடுத் திடுமென்ன பூரணிபுராந்தகியுனை, நேசமுடனேதுதித்துனது நாமங்களென்னெஞ்சிற்பதித்திவுலகப், பாசமதறக்கருணைகூர் சவுந்தரி பராசத்தி பார்பதிபகவதி, வாசவனோடமரர்துதி மயிலைக்கபாலீசர் மருவுகற்பகவல்லியே. (உ)

பூதாவிலேந்தபரி பூரணி தயாபரி புராதனிபவானி பொல்லா, வேதமுடையாய் நினது பாதமலரேத்தவர

யீதுகிருபையிலாவிடிலெனக், காதரவதேது புகலந்தரி
த்ரியம்பகிபகோரிபைரவிவராகி, மாதர்கண்டிக்கு மயி
லைக்கபாலீசர் பான்மருவு கற்பகவல்லியே. (௩)

அண்டரண்டங் களுக்கொ ரன்னையேயென்ற நாவி
யேயாரமுதமே, தண்டமிழ்ச்சொன்மாலை சாத்துவோ
ர்க் கருளுந் தயாபரிபுராணிகௌரி, விண்டையன்று
முதலின சரணி சர்ப்பாபரணி விமலையென் வினைகளை
குவாய், மண்டலந் துதிசெய்மயிலைக் கபாலீசர் பான்
மருவு கற்பகவல்லியே. (௪)

பழுதினற்பத்தர் தமதிதையமாகுஞ்செய்ய பதுமவா
சனிபூசல், முழுதாமுன மிருநாழி நெற்கொண் டிரட்
சித்தமுக் கண்ணிதிரிசூலியினியெப், பொழுதினருள்கூர்
ந்தெனது புன்கணறமாற்றுவாய் புங்கவிபுவனேஸ்வரி
மழுவலனிலங்கு மயிலைக்கபாலீசர் பான்மருவு கற்பக
வல்லியே. (௫)

வீரியபிராமிசிவ காமிகருணாகரிவிணுடர் கடுதிக்கு
மிருசிங், காரிவிசுவேஸ்வரி சுபாகரிகுணாகரி கடாக்ஷ
வீக்ஷணி புனிதையோங், காரியுபகாரி யொய்யாசிவ
ரையரையனருள்கௌமாரியடியேனையாள், வாரியுடை
நிலவு மயிலைக் கபாலீசர் பான்மருவு கற்பகவல்லியே.

சங்கரி சதானந்திசுந்தரிசர்வேஸ்வரி சகஸ்த்ராபிதா
ளிவாமி, சிங்கவா கனிநீலி யந்தரி துரந்தரி திரோதை
திரிபுரசுந்தரி, திங்களணி செஞ்சடிலதேவி பகவதிசச்

சிதானந்தி யகிலஜனனி, மங்களாகரி யருள்செய்மயிலைக்கபாலீசர் மருவுகற்பகவல்லியே. (எ)

பாம்பரி சனார்த்தனர் சகோதரி சுகாரம்பபர்வதேஸ்வரிசுபுத்திரி, நிரந்தரி நிராதரி நீதகந்தரி நிமலைநித்தியகல்யாணி நளினக், கரந்தனிற் கிள்ளையேந் தம்பிகை புரந்தரிகராசலாம்பரியானெனும், வரங்கடந்தருள்செய்மயிலைக்கபாலீசர் பான்மருவு கற்பகவல்லியே. (அ)

சத்தியம்பிகையம்மையபிராணி யமலைசிவைசாமளையுருத்திரையுமை, பத்தியொடு தொழு மடியவர்க்கருளிமயவல்லி பரைபராசத்தி விமலை, நித்திய நிரஞ்சனி நிதானி மரகதவல்லி நிற்குணி மனோன்மணிமலர், வத்தியா மலையருள்செய் மயிலைக்கபாலீசர் மருவுகற்பகவல்லியே. (கூ)

அம்புவியின் மைந்தர்பிழை யாயாமலாள்வது அன்னைதன் கடனாதலா, னம்பினேனுன்றனிரு நளினபொற்பாதமதை நாயினுங்கடையனேன்யா, னென்பிரானனார்தமிடமேவுமன்னையே யேங்கிடாதெனையாளுவாய், வம்பவிழ்மலர்ச்சோலை மயிலைக்கபாலீசர் மருவுகற்பகவல்லியே, (க0)

திருமயிலைக்கற்பகவல்லியம்மைபதிகம்

முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# அருணாசலேசுரர் பதிகம்.

## உண்ணாமுலையம்மை பதிகம்.



இவை,

திருமணவூர்-முனிசாமி முதலியார்

அவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1908.

உ

கடவுள் துணை.

---

திருவண்ணாமலை

# அருணாசலேசுரர் பதிகம்.

---

காப்பு—வெண்பா.

கண்ணனும்வண்ணக் கமலனுங்காண்டற்கரிய
அண்ணாமலையாரடிமீதி—லெண்ணார்
துதியுரைக்கநாளுந் துணையாயன்பர்க்குக்
கதியளிக்குந் தும்பிமுகன் காப்பு.

ஆசிரிய விருத்தம்.

நினைவாகிமூல நிலையாகிநேச நிஜரூபமானவடிவே, மனமாய்கைமூடி யறிவேகலங்கி மனமுந்தியங்கிவெகு வாய், இனமோடிருந்துஅவதீமிலைந்து எமதூதரோடி வருமுன், மனவேகமாக அருணாசலேசர்வரவேண்டு மென்றனருகே. (௧)

கயிலாயமேரு யதிலாறுவீடு க்ரைகண்ட தில்லை யொருவர், வெயிலானஜோதி விளையாடும்வீதி வெளி மாய்கையேதுமறியேன், பயிலானகொம்பின்பகர்காயு

மாகிபழமாயுதிர்ந்துவிழுமுன், மயிலாடுசோலை அரு ணாசலேசர் வரவேண்டுமென்றனருகே. (உ)

நதியோடுதும்பை முடிமீதணிந்து நலமானவெள் ளைவிடைமேல், பதியாயிருந்து உமைபாதிகொண்ட பரனேயுன் நாமமறவேன். விதியாதனேவவெமதூதர் வந்து வெகுவாதை செய்துவிடுமுன், மதியேபுனைந்த அருணாசலேசர் வரவேண்டுமென்றனருகே. (ங)

உற்றாருமில்லை யுறவில்லையாரு முரைசொல்லி யொ ப்பிவரவே, பெற்றாருமில்லை மறைதேடுகின்ற பிரானே யுன் நாமமறவேன், கற்றாருமேற்ற வடியாருருந்து கனியாயமர்ந்தகனியே, மற்றாருமில்லை அருணாசலே சர் வரவேண்டுமென்றனருகே. (ச)

கொங்கைக்குரும்பை முலைமாதராசை கொடிதான மோகமதனாற், சங்கற்பமொன்று மறியாமல்வீணில் தடுமாறியாவிவிடுமுன், திங்கட்கொழுந்து முடிமீதணி ந்த சிவனேயுன்நாமமறவேன், மங்கைக்கிரங்கும் அரு ணாசலேசர் வரவேண்டுமென்றனருகே. (ரு)

உருவானகாய மதிலாறுவீடு உதிரங்கலந்த வுடலு ங், கருவாகிநின்று புவிமீதில்வந்துகபடேதுமொன்று மறியேன், குருவாகிநின்ற சிவஞானஜோதி குருவே நின்நாமமறவேன், மருவீசுசோலை அருணாசலேசர்வ ரவேண்டுமென்றனருகே. (சா)

பணியாதகோயி லணியாதநீறு பசியாதசோறுதரு வாய், துணியானவாசி சிவஞானமோன சுகமேயென க்கருள்செயாய். தணியாதகோப முடலோடிருந்து சலியாதமாய்கை வெளியே, மணியாடுநாதர் அருணசலேசர் வரவேண்டுமென் றனருகே. (எ)

சூதாடிநின்ற சிவசூத்திரங்கள் சுழுவாயமர்ந்த சுழியே, பாதாதிகேச முடலோடிருந்து படுகானிலாடு நடனம், வேதாவுமாட டதியாடமூவர் விளையாடிநின் றவெளியே, வாதாடிநின்ற அருணசலேசர் வரவேண்டு மென்றனருகே. (அ)

அடிமூலவட்ட மதிலாறுதிட்ட மதிமேலிருந்த பரனே, துடியானசத்தி சிவரூபவல்லி சுகமானவேதவடிவே, அடியாருளத்தில் தெளிவாய் விளங்குமரனே நின்னாமமறவேன், வடிவானஜோதிஅருணசலேசர்வர வேண்டு மென்றனருகே. (கூ)

கல்லாலிநீழ லினிநால்வர்முன்பு காணுதயோகநிலையைச், சொல்லாதுசொன்ன மெய்ஞ்ஞானமூர்த்திசுடராயிலங்குமரசே, வல்லாளமன்ன னருமைந்தனுகிவருஞானமானவடிவே, வல்லானுகந்த அருணசலேசர்வர வேண்டு மென்றனருகே. (௧0)

உரைதங்கிநின்ற வுயிரெங்குமாகி யுலகெங்குமேக வடிவாய், கரைகண்டதில்லை வெகுகோடிகாலகலிகாலமாய்கையதனுல், இரைதேடியாசை பசியால்மெலிந்

தா இருகண்டியங்கிவிழுமுன், வரைதங்கிநின்ற அரு
ணாசலேசர் வரவேண்டுமென்றனருகே. (௧௧)

கட்டளைக்கலித்துறை.

கண்மணியே யைங்கரக்களிற்றைதருகு காதலியாம்
பெண்மணியே புறக்காடுறை பேய்மணியேபிறக்குந்
திண்மணியே யன்பர்தீவினைபோக்குந் திதிமணியே
விண்மணியே திருவண்ணாமலை திகழ்வேதியனே.

அருணாசலேசுரர்பதிகம் முற்றிற்று.

---

உ

அம்பாள்துணை.

திருவண்ணாமலை

# உண்ணாமுலையம்மன் பதிகம்.

காப்பு—வெண்பா.

ஓங்குபெரும்பாருதவு முண்ணாமலையவண்மேற்
பாங்குபெருஞ்செந்தமிழிற் பாவுரைக்க-நீங்கரிய
வெந்துயரெலாம்போக்கும் வேழமுகன் செய்யதிருக்
கந்தமலர்ச் செஞ்சரணங் காப்பு.

## ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்டவாழி மிசைபள்ளிகொண்ட திருமாலுமுண்டகமிடை, யூர்கொண்டநான்கு முகனும்பரந் துவுடைகொண்ட சிந்தையொடுதே, பேர்கொண்டவன்னி மலைநாதர்நாம மிழைகொண்ட மின்னலிடையாய், வார்கொண்டவுண்ணமுலைநாமதேவி வரவேண்டுமென்றனருகே. (க)

நறவாடரும்பு வனசம்பிறங்கு நனிவாவி சூழுமிளவெண், பிறைநீடுசெஞ்சாடவிகண்டனுலு பெருகுஞ்சிறந்தவெழிலார், நிறைமேடுநின்ற கிரியும்விளங்க நிலவாமவாலைநெடுநாண், மறைதேடுமுண்ணமுலைநாமதேவி வரவேண்டுமென்றனருகே. (உ)

கலையாய்மிலைந்த விரிநீருடுத்த கவினார்புவிப்பெண்வளொண், டலையாய்விளங்கி பணவாதிசேட சயனஞ்சிரங்கணைளிருஞ். சிலையாய்நிவந்த தனிஞானதீப சிகைகொண்டளாவுநெடிய, மலைமேவுமுண்ணமுலைநாமதேவி வரவேண்டுமென்றனருகே. (ங)

பொன்னிற்பறந்த புவியிற்பொருந்து புளகுற்றமாதர்மயலிற், சென்னிக்கண்வைத்துமருள்வேலைபொய்யில் திரிவேனைசற்றுமிளகாக், கொன்னைச்சொலேனைகொடுமைக்குளேனை குறைதீரவுன்கணருளான், மன்னிக்குமுண்ணமுலைநாமதேவி வரவேண்டுமென்றனருகே. (ச)

எந்தாய்விண்ணின்க ணிமையோர்பராவு மிமயந்தரு
ம்பெணுமையென், சிந்தாகுலங்களடியோடகழ்ந்துசி
தறும்படிச்செய்திருவன், பந்தானரும்பி யடியேனுள
த்தை பருகும்பசுங்கிளியென்முன், வந்தாளவுண்ணா
முலைநாமதேவி வரவேண்டு மென்றனருகே. (௫)

சற்றாகினும்மு ளுடையாவுனுத்தர் சமுகத்திலேகி
கவிபா, டித்தாழ்வுறும வீணையும்புயங்க ளெனுநின்சர
ண்கணெளியேன், வித்தாரமான தமிழ்பாடிஞானவிற
ல்மேவவைத்திடுபோல், வற்றாதவுண்ணா முலைநாமதே
வி வரவேண்டு மென்றனருகே. (௬)

அயனாவினுக்க ணரிமார்பினுஞ்சே வரனார்மருங்கு
முடலி, னயனாரவிந்தமொருவாயிரங்க ணகுமிந்திரன்
றனுழியும், உயுமண்பிலங்கொ ளுயிர்தோறுநின்ற னு
ருதேஜசன்றியுளவோ, மபமாதுவுண்ணா முலைநாமதே
வி வரவேண்டு மென்றனருகே. (௭)

கருவீடுதேக மதிலாறுமான கடைவீடுமுச்சிநடுவி
ற், பெறுவீடுகாட்சி மணல்வீடுகெட்டு பிசியேநடுக்கவ
சமோ, எரிவீடெனச்சொல் இடுகாடுபோமு னெளி
யேன்மு னேகிவருவாய், மருவீடுமுண்ணா முலைநாம
தேவி வரவேண்டு மென்றனருகே. (௮)

அரவுண்டநஞ்ச மதுதீரவென்பு மருமங்கையாகிய
ரவும், பெருநீரிவோலை யெதிரேறமாறன் பிணியான
வெப்பகலவும், திருவார்ந்தஞான வமுதங்கரந்து சிர்

காழியற்குதவவே, வருசெல்வியுண்ணா முலைநாமதே
வி வரவேண்டுமென்றனருகே. (௯)

சுழியூடெழுந்த வழல்சோதிநீடு துறைகண்டுவுன்
னுமறிவை, யிழைவாடுகின்ற வெனையாரெனச்சொலி
டுவேனெனைவைக்குமுறவாம், ஒழிவாடுமோன தனிஞா
னியான வுமையேதிணிலமிடறேன், வழிபாடுமுண்ணா
முலைநாமதேவி வரவேண்டு மென்றனருகே. (௧0)

அதிகத்துயர்க்குள் பதைபெற்குழுமை அசனத்தை
யன்றியிலையிப், பதிகத்தைநிற்சரணபங்கயத்தில் பரி
வுற்றுரைக்குமெனையாள், ததியெத்ததிச்சொல் ததி
யைத்தரும்முத் தமியேபரைப்பெணுமையே, மதிசத்
தியுண்ணா முலைநாமதேவிவரவேண்டு மென்றனருகே.

கட்டளைக்கலித்துறை.

நாயகியேபொற்சுணங்குடற்பைத்தலைநச்செயிற்று
வாயதிமேற்றுயில்வோனருஞ் சோதரியேமலர்க்கண்
மாயகமாநுதலாம்பிறையாய் நின்றன்சேவடியிச்
சேயகத்தேவைத்திடுதி யுண்ணாமுலைசிற்பரியே.

உண்ணாமுலையம்மன்பதிகம் முற்றிற்று.

---

ஆக புத்தகம் 72.

உ

கடவுள் துணை.

---

# சிதம்பரம்
# நடராஜபதிமாலை.




இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சென்னை ருளா,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் | 4 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| சாதாரணபாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட்டு ஆக்ட்டு | 3 | 0 | 0 |
| கிராமமுன்சிப்கோட்போதினி | 3 | 0 | 0 |
| இந்துலா | 4 | 0 | 0 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| வேதாந்தஜட்ஜிமெண்டு | 1 | 0 | 0 |
| கண்கட்டுவித்தை (இரண்டுபாகமும்) | 0 | 10 | 0 |
| போலீசுஆக்ட்டு | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| நாரதர்கலகம் முதற்பாகம் | 0 | 6 | 0 |
| நாரதர்கலகம் இரண்டாம்பாகம் | 0 | 4 | 0 |
| வியாசர் விபரீதம் | 0 | 4 | 0 |

இப்படிக்கு

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.

உ

கடவுள் துணை.

# நடராஜபதிமாலை.

அருணிலைவிளங்கு சிற்றம்பலமெனுஞ்
சிவசுகாதீத வெளிநடுவிலே
யண்டபகிரண்ட கோடிகளுஞ் சராசரமனைத்துமமை
யாக்கண் முதலாம்
பொருணிலைச்சத்தரொடு சத்திகளனந்தமும்
பொற்பொடு விளங்கியோங்கப்
புறப்பறமகம்புறப் புறமகமிவற்றின்மேற்
பூரணாகாரமாகித்
தெருணிலைச்சத்தரொடு சத்திகளனந்தமுஞ்
சிறப்பன்முத லாகமின்றித்
திகழ்கின்றமெய்ஞ்ஞான சித்தியனுபவநிலை
தெளிந்திட வயங்குசுடரே
சுருணிலைக்குழலம்மை யானந்தவல்லிசிவ
சுந்தரிக் கினியதுணையே
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
ஜோதிநட ராஜபதியே. (க)

என்னியலுடம்பிலே யென்பிலேயன்பிலே
யிதயத்திலே தயவிலே

எண்ணுயிரிலே யென்றனுயிரினுக்குயிரிலே
என்னியற் குணமதனிலே
இன்னியலென் வாக்கிலே யென்னுடையநாக்கிலே
யென்செவிப் புலனிசையிலே
யென்னிருகண் மணியிலேஎன் கண் மணியொளியிலே
யென்னனுபவந் தன்னிலே
தன்னியலென் னறிவிலே யறிவினுக்கறிவிலே
தானேகலந்து முழுதுந்
தன்மயமதாக்கியே தத்தித்துமென்மேற்
றதும்பிநின் றுடுவமுதே
துன்னியபெருங்கருணை வெள்ளமே
யழியாதசுகமே சுகாதீதமே
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
ஜோதிநட ராஜபதியே. (௨)

உடலெலா முயிரெலா முணர்வெலா
முள்ளன வெலாங்கலந்தே
ஒளிமயமதாக்கி யிருணீக்கியெக்காலத்து
முதயாத்த மானமின்றி
இடமெலாம்வல்லசிவ சத்திகிரணங்களாய்
ஏகமாய் யோகபோக
இன்பநிலையென்னுமொரு சிற்சபையினடுவே
விலங்கிநிறை கின்றசுடரே
கடலெலாம்புவியெலாம் கனலெலாம்வளியெலாங்
ககனெலாங் கண்டபரமே

காணுகபொருளெனக் கலையெலாம்புகலவென்
கண்காண வந்தபொருளே
தொடலெலாம்பெற வனுக்குள்ளும் புறத்தும்
மெய்த்துத்துணையாய் விளங்குமறிவே
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
ஜோதிநட ராஜபதியே. (கூ)

மெய்தழையருள்ளங் குளிர்ந்துவகைமாறாது
மென்மேற் களந்துபொங்க
விச்சையறிவோங்கவென் னிச்சையறிவனுபவம்
விளங்கவரி வரிவதாகி
உய்தழைவளித்தெலாம் வல்லசித்ததுதந்
துவட்டாதுள்ளூறிப்பூறி
பூற்றெழுந்தனையான் தானுக்கியென்னுள்ளே
உள்ளபடி யுள்ளவமுதே
கைதழைபவந்தவான் கனியேயெலாங்கண்ட
கண்ணே கலந்தநடுவே
கற்பனையிலாதோங்கு சிற்சபாமணியே
கணப்பருங் கருணைநிறைவே
துய்தழையகற் பித்தழைந்தவறிவேயருட்
சுகபோக யோகவுருவே.
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
ஜோதிநட ராஜபதியே. (ச)

எண்ணிலாரண்டபகி வண்டத்தின்முதலிலே
யிடையிலேகடையிலேமேல்

ஏற்றத்திலே யவையுளேற்றத்திலே
யெய்துவடிவந் தன்னிலே
நன்றுறவருவிலே யுருவிலேகுருவிலே
கருவிலே தன்மைதனிலே
கலைபாதிநிலையிலே சத்திசத்தாகிக்
கலந்தோங்குகின்றபொருளே
தென்னிலாக்காந்தமணி மேடைவாய்க்
கோடைவாய்ச் சேர்ந்தனுபவித்தசுகமே
சித்தெலாஞ்செயவல்ல தெய்வமேயென்மனத்
திருமாளிகைத்தீபமே
நன்றுறச்சாந்தசிவ ஞானிகளுளத்தே
சுதந்தரித் தெளிசெயொளியே
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
ஜோதிநட ராஜபதியே. (௫)

அம்புவியிலேபுவியி னடியிலேமுடியிலே
யம்மண்டலந் தன்னிலே
யகலத்திலேபுவியி னகலத்திலேயவைக்
காணவடி வாதிதனிலே
விம்பமுறவே நிறைந்தாங்கவைகணிலைநிற்க
விளக்குமவை யவையாகியே
மேலுலகவகையாகிய வையவையலாததொரு
மெய்ந்நிலையு மானபொருளே
தம்பமிசையெனையேற்றி யமுதூற்றியறியாத்
தலத்திலுற வைத்தவரசே

சாகாதவித்தைக் கிலக்கணமிலக்கியந்
தானா யிருந்தபரமே
தொம்பதமுமுட னுற்ற தம்பதமுமப்பதச்
சுகமுமொன் றானசிவமே
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
ஜோதிநட ராஜபதியே. (௬)

நீரிலேநீரூற்ற நிறையிலேநிறையுற்ற
நிலையிலே தண்மைதனிலே
நிகழ்விலேநிகழ்வுற்ற திகழ்விலேநிழலிலே
நெகிழிலே தன்மைதனிலே
ஊரிலேயந்நீரி னுப்பிலேயுப்பிலுறு
மொண்சுவையிலே திரையிலே
யுற்றநீர்க்கீழிலே மேலிலேநடுவிலே
யுற்றியலுருத்து மொளியே
காரிலேயொருகோடி பொழியினுந் துணைபெறுக்
கருணைமழைப் பொழிமேகமே
கனகசபைநடுநின்ற கடவுளேசிற்சபைக்
கண்ணோங்கு மொருதெய்வமே
தூரிலேபலமளித் தூரிலேவளர்கின்ற
சுகசொரூப மானதருவே
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
ஜோதிநட ராஜபதியே. (௭)

எள்ளியநெருப்பிலே யுப்பிலேயொப்பிலா
 வொளியிலே சுடரிலேமே
லோட்டிலேருட்டிலே யுள்ளாடுமோட்டிலே
 யுறுமாதி யந்தத்திலே
தெள்ளியநிறத்திலே பருவத்திலேயெலாஞ்
 செயவல்ல செய்கைதனிலே
சித்தாய்விளங்கியுப சித்தாகியசத்திகள்
 சிறக்கவளர்கின்ற வொளியே
வள்ளியசிவானந்த மலையேசுகாதீத
 வானமே ஞானமயமே
மணியேயென்னிரு கண்ணுண்மணியே [யே
 என்னுயிரேஎன்வாழ்வே என்வாழ்க்கைவைப்
அள்ளியமனப்பேயை யுள்ளுறவடக்கி
 மெய்ச்சுகமெனக் கீந்ததுணையே
சுத்தசிவசன்மார்க்க நிதியேயருட்பெருஞ்
 ஜோதிநட ராஜபதியே. (அ)

நடராஜபதிமாலை

முற்றிற்று.



உ

சிவமயம்.

தென்மதுரைச்சொக்கநாதர்

இருநாகபந்தமும்

# பஞ்சரத்தினமும்.

மீனாக்ஷியம்மன்

## பஞ்சரத்தினமும்.

கொரைஞ்சூர்

க. தி. கந்தசுவாமிகவிராஜரால்

இயற்றியதை

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

சிவமயம்.

# இருநாகபந்தம்.

நேரிசை வெண்பா.

வேத முடிவே விமல வரைமாது
நாதனே தற்பரா நாயினே - னோது
மருணி லவுதா ளவிர்நளின் நேரு
நிரைவானேர் பண்பருளு நீ.

(இதன்பதப்பொருள்.)

வேதம்-இருக்கு, தைத்திரியம், சாமம், அதர்வணம் என்னுஞ் சதுர்வேதங்கட்கு, முடிவே-ஆதியாயுள்ளவனே, விமலம்-அழகிய, வரைமாது - உமாதேவியாரது, நாதனே - தலைவனே, தற்பரா-சிவனே, நாயினேன்-நின் திருவடிக்குத் தொழும்பனாகிய நாயேன், ஓதும்-எடுத்துச்சொல்லும், அருள் நிலவு தாள்-சனனப்பகையைச்சிதைக்குங் கிருபாதாரமாகியதேவரீரது பாதசரணங்கள், அவிர்-பிரகாசியாநின்ற,நளினம்-தாமரைப்புட்பங்களை, நேரும்-நிகர்க்கும் (அன்றியில்,)நீ-நீ நிரை-ஒழுங்காகிய, ஏர்-கவினமைந்த, வான்-விண்ணுலகவின்பத்தின், பண்பு-விதத்தை, அருளு-தமியேற்குக் கிருபைசெய் என்றவாறு.



உ

சொக்கநாதர்

# பஞ்சரத்திநம்.



காப்பு.

நேரிசைவெண்பா.

நன்மதுரைச் சொக்கலிங்க நாதன் கயற்கண்ணி
யென்னுமிவர் பஞ்சரத்ந மின்றியம்ப—மன்னுங்
கடத்தே ரகிலத்தான் தந்தமுதற் சேய்முக்
கடத்தேவின் சேவடியே காப்பு.

பூமேவுசெஞ்சடையும்வெண்ணீற்றினுதலுமருள் பொழியுநயநமும்வள்ளையைப்- பொருவுமிருகாதுமெழி லாரணங்களைப் புகல்கின்றபவளவாயுங்-தேமேவு கரியகண் டமுநெடியவரையொத்ததின்டோளுமபயகரமுங்- திருமாலயன்மகத் தேவன்றனெஞ்பெனுந் தெரியலுஞ்சர்ப்பமார்பும்-வாமேவுசிங்கத்தி னதனமருமிடையும் மலரடியுங்கண்டுதொழவாள் - மதுசூதனறியாத் நலரோத நிரைசீதமன்பாதவத்தநீத-தாமே வுமாமலர்ச்சோலைநெடுவாவியுந் துன்னுமுயர்மதுரை நாத-சொக்கிநங்கையினேசமிக்கபங்கினுலாசு சொக்க லிங்கமகேசனே. க

வேதத்தின்முடியிலும் பிரமர்தஞ் செவியிலும் விண்டுவின்கமலகிராம்- விழியிலுந்திருநந்தி தோளிலும்பூசிக்கும் மேன்மக்கடங்கையிலும், பேதத்தினல் வருங் காலன்றன்மார்பிலும் பெற்றியுறுவிடைமுதுகிலும்- பேசரியபார்வதியி னிடையிலும்வரைபொற்பினகத்தின்வன்றுளிலும்-போதத்திகழ்ந்திடும் பாதமெளியென்றெழும்புண்ணியமென்னுள்சொல்லுவாய்-புகழ்நேபருரைதாய கழைசேயமறைவாய பொற்பாயநற்சகாய-ஆதத்தினஞ்சுந் தரர்க்காய்நடந்திட்ட சோதியேமதுரைதேய-சொக்கிநங்கையினேச மிக்கபங்கினுலாச சொக்கலிங்கமகேசனே. (உ)

தராசுதனிலேறவமர் நீதியர்தமக்குநீ தாவில்சிவபதமருளினே-தனஞ்செயன்கைவில்லி னடியுண்டுபாசுபதந் தந்தனையராக்கங்கண-கராசுகமளித்திடும் பகவியருள்தற்பரா!கனவுருவமகளங்கமுக்-கண்ணனேசனகர்முத னல்வருக்கருள்செயுங் கர்த்தனேநித்தியாசிற்பராசுருதியாவுக்கு மெட்டாதசோதியேபார்த்தியான்றெழவெனுளோ-பலனுடநலர்நீட துதிபாட நடமாட பன்காட மர்ந்தவிட- சுராசுரர்தராதலமாரவினகரனுதினந் துதிசெய்திடுமதுரைநாட-சொக்கிநங்கையினேசமிக்கபங்கினுலாச சொக்கலிங்கமகேசனே. (௩)

அந்தரர்க்கரசனு மிந்திரன்வந்துதிருவடியிணைத் தொழுதுநாளு-மகலாதுசெய்துமுன் போலவே விண்

பதியை யாண்டிடச்செய்தருளிணை- மந்தரமெனுங்கிரி நிகர்த்தவெண்புயவீர மறையவன்புதல்விகவுரி- மாது முன்பாலராய்க் காளையாய்க்கிழவராய் மகதேவராய் வந்துமு-குந்தரயாறியாத பதவிதந்தாயெனது குறை தவிர்த்தாள்வதென்றோ-குணமேலகணமுபால கவிசால மறைமூல கொன்னீல கண்டசில- சுந்தரர்தினம்பரவு நந்திவாகன்மேற் றுலங்குதிருமதுரை தால-சொக்கிநங் கையினேச மிக்கபங்கினுலாச சொக்கலிங்கமகேசனே.

நிந்தியாநந்தவகளங்கசங்கரதேவ நிற்குணபரமே ஸ்பரா-நிருமலாவனகமக மேருதனுசேந்துகர நீலகண் டாதற்பரா, பத்தியாய்நின்றுதுதி செய்சனகா நால் வர்தம் பாக்யகுருவானசிலா-பஞ்சாக்கரத்தினுட்சொ ருபசுகவாரியே பன்னரும்புரணவடிவே - முத்தியா வைக்குமுயர் வித்தாய்முளைத்திட்டமூலமேயெனையா ளுவாய்-முனிவாக புரம்வேக மகிழ்வாக மதியாகமுந் தாகனந்தயோக-துத்தியாருரகமணிமார்பகத்தண்ணை லே தூயதிருமதுரைவாக-சொக்கிநங்கையினேச மிக் கபங்கினுலாச சொக்கலிங்கமகேசனே. (ரு)

முற்றிற்று.

உ

மீனாக்ஷியம்மன்

# பஞ்சரத்திநம்.

நீர்கொண்டகொண்டனேர் குழலுமதிநேர் நுதலு
நீலோற்பலக்கண்களு-நிகரிலாக்கத்தரிகை யொத்தகா
தம்பவள நேர்வாயுமுத்தநகையும்-வார்கொண்டசங்க
நேர்கண்டமுங்கழையொத்தமன் னுவழகியதோட்களு
மகரயாழினையொத்த முன்கைகள்முத்தார மலர்மா
லைபுரளுமார்புஞ்-சீர்கொண்டமின்னனே ரிடையுநளி
னத்தைநேர் சேவடியுங்கண்டுதொழுவாள் - செயவிரி
நலர்நேரினிணைசிரியவகோரி தென்னரியன்குமாரி- கார்
கொண்டபொழிலெலா மாமலரின்மணம்வீசு கனமரு
வுமதுரையூரி-கயிலாசநற்சிவனை யயலாகநச்சிபுனைகய
லார்கணிச்சியனையே.

(க)

அந்தரிதிகம்பரி யநாதிபரிபூரணி யனந்தகண்க
ணிவிசாலி-யாலகண்டதிரி கோணிதற்பரிசகலவாடம்
பரக்கடாட்சி-சுந்தரிமனோன்மணிபராசத்திகலியாணி
சுருதிநான்கிற்குமறியாச் - சோதிசுகவாரிகருணாரசவி
சாலாட்சி சொல்லரியவெப்பொருளையுந் - தந்தரியபத
வியும் முதவுகவுமாரிநீ தற்கார்த்திடற்கருமையோ -
தனைபாகி னுரையோகி னிவாகி யெழிறேகிதண்ணாகி
யத்தியாகி சுந்தரிசவுந்தரி தேசோன்மயாநந்திகாரணி

நன்மதுரைவாகி-கயிலாசநற்சிவனை யயலாகநச்சிபுனை கயலார்கணிச்சியனையே. (௨)

குட்சிபாதைக்காக வெண்ணாதுமெண்ணியிக்குவலயந்தனிலுமன்று - கொடியவஞ்சனைமோச வழிசெயும்புல்லரைக் கூடுதலகத்தியெனைநீ - தட்சிபார்வதிகவுரி நிட்களாநந்தசிவ சாம்பவியிமாசலத்தன் - றந்தபாக்கியபுத்ரி மாறங்கையேபரா சத்திசிற்பரிநின்மலி-வெட்சிபாவும்புயக் கந்தனைத்தந்திடும் விமலிவந்தாள்வதென்றோ-மிகுதாவி லரவாவி யடிபூவி னணைமேவிமென்னாவியங்குதேவி - கட்சிபாவியன் மீதுவையாமல் கார்ப்பதே கடனாகுமதுரைசேவி - கயிலாசநற்சிவனை யயலாகநச்சிபுனை கயலார்கணிச்சியனையே. (௩)

மனைகளின் றன்னாசை பொருளாசை யொழியாத மாதாசையிம்மூன்றிலும்-மக்கிய நனிற்சிக்கி யுழல்கின் றவெனைநல்ல வழியாக்கவில்லாமலே-வினைகளின் பயனென் றுன்ராத்தாலுமவ்வினையின் வேரறுத்திடநின்றனன்-மிக்கபயனடையாமல் திரைமேவுகடலாடை மேதினியிலென்செய்வன்யா - னனைகவுரியெனை யாதரிக்காதிருக்கநிற் கழகல்லயருள்புரிகுவாயவிர்மேதி னியரோதியடைமாதி னிவிநோதியந்தாதி விண்டசோதி.

கனைகடலினமுதமே சிந்தாமணித்தெய்வ காமாட்சி மதுரைநீதி-கயிலாசநற்சிவனை யயலாகநச்சிபுனை கயலார்கணிச்சியனையே. (௪)

அனகிசிற்பரிகவுரி நிட்களாநந்தியரு ளானந்தி பரமேஸ்பரி-யம்பிகைவிசாலாட்சி சுந்தரிமனோன்மணி யடியவர்தமக்கருளும்விற்-பனகிருபைவாரிதி சகலவாடம்பரி பராசத்திமகமாயிதற்-பரிபுராந்தகிவிமலி தேசோன்மயாநந்தி பாக்யமிகுசிற்சொரூபி-சனகிமின்கலைவாணி யிந்த்ராணிதுதிசெயுந்தண்ணடிதொழற்கருளுவாய்-தவவேலி மறைமூலி நெடுவாலிலையின்மேலிதன்மாலி ளைந்தைசிலி-கனகிரிவரோதய சுபுத்திரிசாம்பவியாயி கதிர்விசுமதுரைநீலி-கயிலாசநற்சிவனையயலாகநச்சிபுனை கயலார்கணிச்சியனையே. (௫)

மீனாக்ஷியம்மன் பஞ்சரத்நம்

முற்றிற்று.



ஆககபுத்தகம் 75.

உ

கடவுள் துணை.

# அரியரபுத்திரர் பதிகம்.




இது,
சிறுமணவூர்-முனிசாமி முதலியார்
அவர்களது
சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

சிவமயம்.

# வியாசன் விபரீதம்.

---

வியாசோ நாராயணோஹரி என்றபடி ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே வியாசபகவானா ய் வந்தபடியால் மந்திரம் யெந்திரம் சந்தி யாவந்தனம் முதலானதும் அவர் வாக்கினா ல் வந்தபிரகாரம் இட்டதேபிச்சைபென்று ஆயிரத்தெட்டண்டமும் ஆட்டிப்படைக் கிறது (இதுவுமன்றி) குருக்குநெடுக்காய்த் திருப்பிய வேதசாஸ்திர புராணமெல்லாம் அசைப்பாரில்லாமல் ஆச்சாவைரமாய்க் குந் திக்கொண்டது (வியாச விபரீதமென்றால்) அதிகமாய் விரித்துச் சொல்வதற்கு நாமெ ல்லாம் பெரியோரல்ல உலக மயக்கமெல் லாம் வியாசர் கட்டுப்பாடென்று சகலருக் குந் தெரிந்தவிஷயம்.

இதன் விலை அணா 4.

இப்படிக்கு

சிறுமணவூர்- முனிசாமி முதலியார்,

பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்,

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# அரியரபுத்திரர்பேரில் பதிகம்.

## காப்பு.

### விநாயகர்துதி.

அரியரனுர் கைம்மூலத் தாலுதித்த வாதரவாற்
கரியூருங் கடல்வண்ணன் கழலிணைமேற்-பரிவுடனே
பாமாலை சாற்றுதற்குப் பண்புபெறு யானைமுகன்
பூமாலை யணிபதமே போற்று.

### எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருததம்.

சீர்பெருகு சென்னிதனி லொருகோடி சூரியர்க
ள்திகழ்கின்ற தென்மகுடமும், திவ்யசெவிகளிலிலகு
வஜ்ஜிரக் குழைகளுந்திருநுதற் பொட்டினழகும், தா
ர்பெருகுவரமதி லிரத்தினக்கவசந் தழைக்கின்ற மதி
யாரமும், தாமரைக்கரங்களி லொளிர்கின்ற கடகமும்
தனுர்சூலமோடு கெதையும், பேர்பெருகுபாதச் சிலம்
பிஞெளியுமிரு பெண்மருவுகோலமுடன்வந், தாதரித்
தெனையாள தருணமிதுவையனே அண்ணலே யருள்
புரிகுவாய்,தேர்பெருகுபெண்ணையின் வடபாலமாநதி

டுந்திருமணம்பூண்டிநகர்வாழ்,தேவரிருடிகள்பரவுமே
வுகனகிரிமருவு தேவஹரியரபுத்திரனே. (க)

அண்டமுகடதிரவேவீரிட்டகரிகோடி யாதிசே
ஷன்நடுங்க, அதிரவையாளியொடுகுதிரைகள்பலகோ
டி யாளிகள்தேர்கள்கோடி, உண்டிவில்சக்கரம்கையம்
புவளைதடி ஒளிர்மிகும் வாங்குபட்டை, உக்கிர பிச்சு
வா பீரங்கி யிடிகொம்பு வுதட்டிய துபாக்கிகொண்டு,
கொண்டலிடியென்னவே கொக்கரிக்கும்வீரர்கோடா
னகோடிசூழ,கூருமயிலெழுதேவர் துந்துபிமுழங்கவா
கொத்தவெள்ளானை மீதில்,தெண்டிரை யெனப்பெரு
குபெண்ணைவடபாலமர் திருமணம் பூண்டிநகர்வாழ்,
தேவரிருடிகள்பரவு மேவு கனகிரிமருவு தேவஹரியர
புத்திரனே. (உ)

மண்டலம்புகழுமலை யாளசன்னாசியர்கள் மலரடி
யில் தெண்டனிடவே, மகிமைபெருமுனியெழுவர் வி
ருதுகள்படிக்கவுான்மன்னர்சரண்புகுதவே, கண்டவ
ர்நடுங்கிடக்கொக்கரித்தேதாவு ககனவான்பரிமீதிலே
கடிவீர சுகமார அதிகார துரைவீரன் கர்ஜ்ஜித்துமுன்
னிற்கவே, எண்டிசையு மன்னரும்வந்தடி பணிந்திடவு
மியலானசன்னதிமுனே, எத்திசையும் வெற்றிபெருக

த்தியுடனேகாவல்சித்தமலைவேடனுறவே, தொண்டர்கள் சூழ்பெண்ணை வடபாலமலர்ந்திடுந் திருமணம்பூண்டிநகர்வாழ், தேவரிருடிகள்பரவு மேவுகனகிரிமருவுதேவஹரியரபுத்திரனே. (௩)

அரவசயனன் ஜெகன்மோகினி யணங்குருவடைக்கவரனும்முனைந்தே, அணைக்கசெயமிக்க திகழ்குழவியெனமாள்கையிலவதரித்திடுமையனே, உரவவுணர்குலமுழுது மறவயிலையடுசமரி லுருவவிடுவிக்குமரசே, உயரமரர்நகரிரைக்கரசுரிமை தருமதலை வுலகையுமளித்ததேவே, பரவிநினைதொழுமடியர்க் குரும்வினையையொருநொடியில்பருதிதனியெனவேகவே, பலவினைகண் முழுதுமற படியின்மிசை யடியனிட முடியதனில் பதமருளுவாய், திருவமுதமுதவவருபெண்ணைவடபாலமர் திருமணம்பூண்டிநகர்வாழ், தேவரிருடிகள்பரவு மேவுகனகிரிமருவு தேவஹரியரபுத்திரனே. (௪)

சுந்தரர்க் குன்பிதா பரவைவாயிற் சென்று சோதிரந் தருளவில்லையோ, சொலறுகரிய நின்றுயு மாலாங்குசேரர்தன திருத்தொண்டு செய்யவில்லையோ, முந்தியொலிநாகமுக மன்னனுக் குன்றுணைவன் முனைவீரருதவவில்லையோ, முப்பியகவற்பா மொழிக்குச் சுமந்தத்திமுன் கயிலைசேர்க்கவில்லையோ, இந்திரன்மனைவியர்க்காயுமதுவீரனை விடுத்தேவல்புரியவில்லையோ, வெந்தனிடர்திரவெவந்தருளிஹம்மைதா னிகழ்வரோவகிலமதிலே தெந்திரர்கள் சூழ்பெண்ணை வடபாலமர்ந்திடுந் திரும

ணம்பூண்டிநகர்வாழ், தேவரிருடிகள்பரவு மேவுகனகி
ரிமருவு தேவஹரியரபுத்திரனே. (௫)

ஐயநின்சன்னதிமுன் நின்றடியர்தரிசிக்குமைந்த
லமியாது யெனிலோ, வரியயனுமறிவுருவருணைகிரிந
கரமதுவமருமே நின்றன்வடபால், பையரவமோடுபு
னலணிகின்றபரமனமர் பகரரங்கண்டநல்லூர், பாலா
யர்குலசிறுமியிடர்நீக்குகுன்றமும்பகிரதித்தென்பால
மர், நையவந்தசூரசம்மாரனமாகின்ற நகர்திருக்கோ
வலூரின், நாதன்மாபலிக்கன்று நிர்த்தமிடுவிக்ரமநாத
ன்திருப்பதியெனும்தெய்வவைந்தலநடுவிற்பெண்ணை
வடபாற்றிகழ்திருமணம்பூண்டிநகர்வாழ், தேவரிருடி
கள்பரவுமேவுகனகிரிமருவு தேவஹரியரபுத்திரனே.

அடியவர்களைதுவினைவினுமருளுகின்றதோ ரரு
ட்பெருக்காமென்னவே, அரைகின்ற மறையினாலுண
ர்கின்ற நாயினே னளவினிற்காணவரியேன், கொடிய
னேன்பஞ்ச பாதகங்களேபுரிகின்ற கொள்கையெனை
னினும்நின்றன், குணமுள்ள நாமமதையொருதரம்நா
வினாற் கூறினேன்பவங்களெல்லாம், பொடியதாயிற்றி
ன்றுநின்னருள் சுரந்துநற் பூரணை புட்கலை யெனும்,
பொன்தேவிமார்களிரு புரமருவயானைமேல் புகல்சிறி
யன்முன்புவருவாய், தொடிபூணணங்குசூழ்பெண்ணை
வடபாலிலகு திருமணம் பூண்டிநகர்வாழ், தேவரிருடி
கள்பரவுமேவு கனகிரிமருவு தேவஹரியரபுத்திரனே.

ஈசனே நின்னருட் சன்னதியின்முன்பாயிலங்கு
மீசானபாலில், இருக்கின்றபரததீர்த் தம்மெனப் புக
லுமொரு வினையிலாச் சுனையதனியே, வாசமுறுமிமய
வருமிருடிகளுமே மூழ்கிவல்வினையொழிந்ததென்றால்
வண்மைபெறுவன்னதியின் பெருமையினையடியனால்வ
ழுத்தவும்வசமாகுமோ, காசினியில்வீணுக்குதித்துவா
ழ்நாளைக் கழிக்கின்றகடையேனனுக், கருணைமிகுவன்
னைமாரிருபுறமு மருவவெண் கரியூர்ந்துகாட்சிதருவா
ய், தேசுபெருபெண்ணையின் வடபாலமர்ந்திடுந் திரும
ணம்பூண்டி நகர்வாழ், தேவரிருடிகள்பரவு மேவுகனகி
ரிமருவுந் தேவஹரியர புத்திரனே. (௮)

ஆலயஞ் சுற்றிடாப் பாவியேனீன்றிட்ட வன்னை
யை யிகழ்ந்தபாவி, அருள்மிகுங் குருவையும் நினையா
த பாவிநின் னடியரை தொழாதபாவி, கோலமுடனே
பஞ்சபாதகம் புரிபாவி குடிகெடுக்கின்ற பாவி, கோ
திலாச் சிவசொத்தை கவர்பாவி யிவ்விதக்கொடுமை
புரி பாவிநாயேன, சீலமுடனின்றுநின் நாமத்தைநாவி
னாற் செப்பினே னெனதுபாவஞ், சிதைந்துபோயிற்
றின்று வருள்தருவைதருணமிதுசேவலங் கொடிநாத
னே, தேவர்கள் சூழ்பெண்ணை வடபாலமர்ந்திடுந் தி
ருமணம்பூண்டிநகர்வாழ், தேவரிருடிகள்பரவு மேவு
கனகிரி மருவுந் தேவஹரியரபுத்திரனே. (௯)

அஞ்சலென வடியவர்க ளிடர்தனை நீக்கவேயை
விதப் புரவியேறும், ஐயனே மெய்யனே மையனே

யாவர்க்கு மரிதான ஜோதிகேண்மின், பஞ்சலக்ஷண
இலக்கண விலக்கியமொடு பகரும் நன்னூல்காவியம்,
பலமுறை யறிந்தேதெளிந்த நாவலர்கள் சொற்பாமா
லை யேற்றுகொளும்நீர், விஞ்சுலக்ஷணமதிற் கொஞ்ச
மறியாச்சிறு வேங்கடாசல சாமியால், விரைந்து துதி
செய்கின்ற பாமாலையேற்றருளி விமலனே கருணைபுரி
வாய், தேஞ்சோலை சூழ்கின்ற பெண்ணைவடபாலிலகு
திருமணம் பூண்டிநகர்வாழ், தேவரிருடிகள்பரவுமே
வுகனகிரிமருவு தேவஹரியரபுத்திரனே. (௧0)

அரியரபுத்திரர்பேரில்பதிகம்
முற்றிற்று.



ஆக புத்தகம் 76.

உ

## சனிபகவான் தோத்திரமும்,

# நவக்கிரகதோத்திரமும்.



சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்தற பதிப்பிக்கப்பட்டது

1908.

உ

கடவுள்துணை.

---

# சனிபகவான் தோத்திரம்.



காப்பு-வெண்பா.

தேவரெண்டிக்கதிபர் சித்தரொடுகிம்புருடர்
மூவர்முனிவர் முதலோரை—மேவியுறுந்
தாரணிந்தமார்பன் சனிபகவான்கணாதபுகலக்
காரணிந்தயானைமுகன் காப்பு.

ஆதிவேதாந்தமுத லறிவாஞான வைந்தெழுத்தினு
ட்பொருளை யயன்மாறேடும், சோதிசிற்றம்பலத்திலா
டிநின்ற சுடரொளியைநீபிடித்த தோஷத்தாலே, பாதி
மதிசடைக்கணிய வரவம்பூணப் பதியிழக்கச் சுடலை
தனிற்பாடியாடச், சாதியில்லாவேடனெச்சிற் றின்ன
வைத்தாய் சனியனேகாகமேறுந்தம்பிரானே. (க)

வேலவனைவேங்கமரமாக்கிவைத்தாய் விறகுசட்டுச்
சொக்கர்தமை விற்கவைத்தாய், மாலினையுரலோடு
கட்டுவித்தாய் வள்ளிதனைக்குறவரது வனத்தில்வைத்
தாய், காலனைமார்க்கண்டனுக்கா வரனுதைத்த கார

ணமுடீபிடித்த கருமத்தாலே, சாலவுனை யான்றெழு தே னெனைத்தொடாதே சனியனேகாகமேருந் தம்பிரானே. (உ)

மநுசுதவயோத்தியில்வாழ்தசரதன்றன் மக்களையும் வனவாசமாக்கிவைத்தாய், பஞ்சவர்கள் சூதினல்பதி யிழந்து பஞ்சுபடும் பாடதனைப் படச்செய்வித்தாய், எஞ்சலிலாவரிச்சந்திரன் பெண்டைவிற்றே யிழிகுலத் திலடிமையுற விசையவைத்தாய், தஞ்சமென்றேவுனை பணிந்தே னெனைத்தொடாதே சனியனே காகமேருந் தம்பிரானே. (ங)

அண்டமாயிரத்தெட்டு மரசுசெய்த வடல்சூரபது மனையு மடக்கிவைத்தாய், மண்டலத்தை யாண்டாளச் சக்கிரவர்த்தி மனைவியோடு வனமதனி லலையச்செய் தாய், விண்டலத்தைபானுகோபன்றனாலே வெந்தண லாகச்சுரரை வெருவச் செய்தாய், தண்டனிட்டே னென்னாளு மெனைத்தொடாதே சனியனே காகமேருந் தம்பிரானே. (ச)

அண்டர்கோன்மேனியிற் கண்ணாக் குவித்தாயயன் சிறத்தைவயிரவனா லறுப்பவித்தாய், திண்டிறல்கொள் கௌதமனா லகலிகைதான் சிலையாகச்சாபமுற வே செய்வித்தாய், தண்டாளநகையிரதி மாறன்றன்னைச் சங்கரனார்நுதல்விழியிற் றணல்செய்வித்தாய், சண்டமி லாதுனைத்ம தாழுதே னெனைத்தொடாதே சனியனே காகமேருந் தம்பிரானே. (ரு)

பாருலவுபருதியைப் பல்லுதிர்த்துவித்தாய் பஞ்ச
வர்க்குத்துருபதாம்பரனைவைத்தாய், தாருலவுவாலி
சுக்ரீபன்றம்மைத் தாரையினூற்றிராத சமர்செய்வித்தா
ய், சூரனெனுமிலங்கைராவணன்றன்றங்கை சூர்ப்பன
கிமூக்குமுலை துணிசெய்வித்தாய், தாரணியுமார்பாவெ
னைத்தொடாதே சனியனேகாகமேருந் தம்பிரானே. ()

சுக்கிரன்றன்கண்ணிழந்தா னிலங்கையாண்டு திலங்
குமிராவணன்சிரங் கண்டிக்கவிழ்ந்தான், மிக்கபுகழிர
ணியன்றான் வீறழிந்தான் விளங்குதிரிபுராதிகளும் வெ
ந்துமாண்டார், சக்கரத்தானுடலறுந்தான் சலந்தரன்
றான் றருகாசூரனுமே சமரின்மாண்டான், தக்கன்
மிகச்சிறமிழந்தா னின்றேஷத்தாற் சனியனே காகமே
ருந் தம்பிரானே. (எ)

அந்தமுளவைங்கரன்சொம் பறமேசெய்தா யருமு
னிவர்மனைவிகள் கற்பழியச்செய்தாய், சந்திரன்றன்
கலையழிந்து தழைக்கச்செய்தாய் சங்கரனைப்பிச்சைதா
னெடுக்கச்செய்தாய், தந்திமுகச்சூரனுயிர் களரச்செய்
தாய் சாரங்கதரன்கரத்தை தறிக்கச்செய்தாய் சந்ததமு
மெனைப்பணிவே னெனைத்தொடாதே சனியனே காக
மேருந் தம்பிரானே, (அ)

சீதைதனையிராவணனாற் சிறைசெய்வித்தாய் தேவர்
களைச்சூரனாற் சிறையிற்சேர்த்தாய், மாதுதுரோபதை
துயிலைவாங்குவித்தாய் மகேச்சுரனை யுமைபிரியும் வ
கைசெய்வித்தாய், போதிலயன்றுளிற்றலை பூட்டிவித்

தாய் பொதியைமுனி யகத்தியனைப் பொருந்தச்செய்
தாய், தாதுசேர்மலர்மார்பா வெனைத்தொடாதே சனி
யனே காகமேருந் தம்பிரானே. (௯)

அப்பர்தமைக்கருங்கல்லோ டலையிற்சேர்த்தா யான
டியின்முயலகனையடங்கச்செய்தாய், செப்புமாணிக்கர்
தமைச் சிறையிலிட்டாய் சிராமனைமச்சவுரு வெடுக்கச்
செய்தாய், ஒப்பிலனுமான்வாலி லொளித்தீயிட்டா
யொலிகடலினஞ்சையர னுண்ணவைத்தாய், தப்பிலா
துனைத்தொழுவே னெனைத்தொடாதே சனியனேகாக
மேருந் தம்பிரானே. (௧௦)

நீரினைபுண்டெழுமேக வண்ணாபோற்றி நெடுந்தபத்
திலறுகமலக் கண்ணாபோற்றி, சூரியன்றன்றவத்தில்
வந்தபாலாபோற்றி துலங்குநவ கிரகத்துள் மேலா
போற்றி, காரியெனப்பெயர்களுப காராபோற்றி காசி
னியிற்கீர்த்திபெற்ற தீராபோற்றி, மூரிகொளுநோய்
முகவாமுடவாபோற்றி முதுமகளின் முண்டகத்தாள்
போற்றிபோற்றி. (௧௧)

முற்றிற்று.



உ

விநாயகர் துணை.

# நவக்கிரக தோத்திரம்.



காப்பு.

மண்ணுளுயிர்கட்கனைத்து மாருதளித்துநல
நண்ணுநவக்கிரகநண்புசொலத்—தண்ணுலவு
திங்களணிதங்குமுயர் செஞ்சடையருண்மகிழ்செய்
கங்கையருளைங்கரனார் காப்பு.

சூரியன்.

காசினியிருளைநீக்குங் கதிரொளியாகியெங்கும்
பூசனையுலகோர்போற்றப் புசிப்பொடுசுகத்தைநல்கும்
வாசியேழுடையதேர்மேன் மகாகிரிவலமாய்வந்த
தேசிகாவெனைரட்சிப்பாய் செங்கதிரவனேபோற்றி.

சந்திரன்.

அலைகடலதனினின்று மன்றுவந்துதித்தபோது
கலைவளர்திங்களாகிக் கடவுளரெவருமேத்துஞ்
சிலைமுதலுமையாள்பங்கன்செஞ்சடைபிறையாம்மேரு
மலைவலமாகவந்த மதியமேபோற்றிபோற்றி. (௨)

செவ்வாய்.

வசனநற்றைரியத்தோடுமன்னவர்சபையில்வார்த்தை
புசபலபராக்ரமங்கள் போர்தனில்வெற்றியாண்மை

விசமுடனவரவர்க்கு நீணிலந்தனிலளிக்குங், குலனில
மகனுஞ்செவ்வாய் குரைகழல்போற்றிபோற்றி. (ரு)

புதன்.

மதனநூல்முதலாநான்கு மறைபுகல்கல்விமானம்
விதமுடனவரவர்க்கு விஞ்ஞைகளருள்வோன்றிங்கள்
சுதன்மாநிலத்தோரிச்சை சுகம்பலகொடுக்கவல்லன்
புதன்கவிபுலவன் சீர்சால்பொன்னடிபோற்றிபோற்றி.

குரு.

மறைமிகுகலைநூல்வல்லோன் வானவர்க்கரசன்மந்திரி
நறைசொரிகற்பகப்பொன் னாட்டினுக்கதிபனாகி
நிறைதனஞ்சிவிகைமண்ணி வீடுபோகத்தைநல்கு
மிறையவன்குருவியாழனிருமலர்பாதம்போற்றி. (எ)

சுக்கிரன்.

மூர்க்கவான் சூரன்வாணன் முதலினோர் குருவாய் வையந், காக்கவான்மழைபெய்விக்குங் கவிமகன்கன கமீவோன், தீர்க்கவானவர்கள்போற்றச் செத்தவர்த மைமெழுப்பும், பார்க்கவன் சுக்கிராச்சாரிபாதபங்கய மேபோற்றி. (அ)

சனி.

முனிவர்கடேவரேழும் மூர்த்திகள்முதலினோர்கள்
மனிதர்கள்சகலவாழ்வின் மகிமையதல்லாலுண்டோ
கனிவுளதெய்வநீயே கதிர்சேயேகாகமேறுஞ் [யே
சனியனேயுனைத்துதிப்பேன் றமியனேற் கருள்செய்வா.

## இராகு.

வாகுவோர் நெடுமான்முன்னம் வானவர்க்கமுதமீ
யும், போகுமக்காலையுன்றன் புணர்ப்பினுற் சிரமேயு
ற்றுப், பாகுசேர் மொழியாள்பங்கன் பரன்கையில்
மீண்டுப்பெற்ற, இராகுவே யுனைத்துதிப்பேனிட்சண
மிரட்சிப்பாயே. (அ)

## கேது.

பொன்னையினுரத்திற்கொண்டோன் புலவர்தம்பொ
ருட்டாலாழி, தன்னையேகடைந்துமுன்னந் தண்ணு
முதளிக்கலுற்ற, பின்னைநின்கரவாலுண்ட பெட்பினி
ற் சிறம்பெற்றுய்ந்தா, யென்னையாள்கேதுவேயிவ் விரு
நிலம்போற்றத்தானே. (கூ)

## பொது.

சூரியன் சோமன்செவ்வாய் சொற்புதன் வியாழம்
வெள்ளி, காரியமிராகுகேது கடவுள ரென்பானுமத்,
தாரியல்சக்கரத்தைத் தரித்திரர்பூசித்தாலும், பாரி
னிற்புத்திரருண்டாம் பாக்கியநல்குந்தானே. (கo)

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 78.

உ

கடவுள் துணை.

# சூரியநமஸ்காரப்பதிகம்.



சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

30

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் | 4 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| சாதாரணபாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட்டு ஆக்ட்டு | 3 | 0 | 0 |
| கிராமமுன்சிப்கோட்போதினி | 3 | 0 | 0 |
| இந்துலா | 4 | 0 | 0 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| வேதாந்தஜட்ஜிமெண்டு | 1 | 0 | 0 |
| கண்கட்டுவித்தை (இரண்டுபாகமும்) | 0 | 10 | 0 |
| போலீசுஆக்ட்டு | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| நாரதர்கலகம் முதற்பாகம் | 0 | 6 | 0 |
| நாரதர்கலகம் இரண்டாம்பாகம் | 0 | 4 | 0 |
| வியாசர் விபரீதம் | 0 | 4 | 0 |

இப்படிக்கு

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.



உ

முருகன் றுணை.

# சூரியநமஸ்காரப்பதிகம்.



காப்பு-நேரிசைவெண்பா.

மின்னுசூரியன்மீது மேவச்சிறுபதிகம்
பன்னும்படியெனக்குப் பாலிப்பாய்-துன்னுங்
சடாட்சரணனே காண்பரியகாரணனே
விடயாகுமுன்மறைத் தாள்.

ஆசிரியவிருத்தம்.

வீதிவெளி யாகாசமீதிற் பிரகாசமாய் மெய்ஞ்ஞா
னதீபசுடராய், வெளியாகியொளியாகிவிக்கிரப்பிரமனை
மீதில் விளையாடுமோங்காரமாய், ஓதுமுதலெட்டெழுத்
துபதேசமந்திர முளைக்கின்ற சற்குருவுமாய், உருவாகி
யுயிராகி யுயிருக்குளறிவாகி நடமாடுகின்ற வுணர்வாய்,
ஆதிமுதலாகவள ரண்டபகிரண்டங்க ளாயிரத்தெட்டு
மாகி, அறுநூற் றிருபத்துநாலு புவனங்களுமாண்ட
மயமானநிறமாய், சோதிமயமான பரிபூரணவிலாசமிரு
சூட்சரதமீதேறியே, துலங்குகதிர் மதியென விளங்கு
சிவசங்கர சூரியநாராயணசுவாமியே. (க)

இன்பசுகமாகவும் பூமியாகாசமு மேகாந்தவை
போகமு - மீரேழுபதினான்குலோகங்களத்தனையுமிரட்
சிக்குமீஸ்வரனுமாய் - அம்பரதிகம்பரபரம்பரவநாகத
வநாதியொளியானவெளியாய்-ஆனந்தநடனமிடு மூத்த
னட்டமாகவே யாடியசபாபதியுமாய் - வம்பரோடுகால
னெமதூதரணுகாமலே வந்தருள்புரிந்துநிதமும் -வளர்
கின்றகைலாச பரமபதகோடிமுடியின் வரையினைவ
ணங்கிமுடிவார் - துன்பமெனுநரகவழி வீழாமல்ரட்சி
யுஞ்சோதிரதமீதேறியே - துலங்குகதிர்மதியென விள
ங்குசிவசங்கர சூரியநாராயணசுவாமியே. (உ)

உக்கிரமிகுமக்கினி சொரூபவடிவாகியே யோங்
காரரூபமாகி - வொளியாகிவெளியாகி யுதயகிரிமீதினி
லுதிக்கின்றதெய்வமாகிச் - சகலபுவனங்களுந் தானுகி
நின்றவொருசச்சிதானந்தமயமாய்ச் - சாலோகசாமீப
சாரூபசாயுச்ய சகலருட்சுமதாரியாய் - விக்கிரசிவலிங்
கவடிவாகவுமிருந்த சதுர்வேதாந்த முத்திமுதலாய்-
வெகுகோடிகாலஞ்ச ஞன்னையேநம்பினேன் வேதனே
பரநாதனே - சக்ரகெம்பீரபரி பூரணவிலாச*வர்ச்சுன
ன்மீதேறியே - துலங்குகதிர்மதியென விளங்குசிவசங்
கர சூரியநாராயணசுவாமியே. (ங)

---

* அர்ச்சுனன் - மச்சை.

சாஸ்திரபுராணமுதல் வேதவேதாந்தமிகு சர்வந்தபோதனர்களுஞ் - சகலமாதேவருஞ் சகலமாமுனிவருஞ் சகலசிவன்களுடனே - நேத்திரமதாகவேகுறியாகிநெறியாகி நிருமலசொருபமாகி - நிகழும் சிருஷ்டிதிசம்மாரவதிகார நின்றதிரு மூர்த்தியாகி - காத்திரமதாயைந்து பஞ்சபூதங்களுங் கருணைகடாட்சமுடனே - கண்டுகளிகூர்ந்திடும் விண்டபரிபூரண கலைக்கியானவேதமுதலே - சூத்திரந்தாவி விளையாடுமானந்தச்சுயம்பிரதமிதேறியே - துலங்குகதிர்மதியென விளங்குசிவசங்கரசூரியநாராயணசுவாமியே. (ச)

நிறையானசுக்கிலஞ் சுரோணிதங்கருவூரினின்றுமொன்றுகவேதான் - நிலையான முக்கோணசக்கரந்தன்னிலே நிதாகாரகமலமீதில் - அறையானநிலைவிடு மறுகோணமாகியு மாங்காரவோங்காரமாய் - ஆடிவிளையாடிநடமாடிய பராபரா வச்சுதானந்தமெனவே - குறையானவன்னியின் கெற்பமதில்வாசமுந்துடியாகமுன்றுநாள் - கொண்டவோர்தாவதனை விண்டுபின்பூமியிற்குழந்தையாய் வந்துவளரும்- துறையானபாதகவழிவிழாமல்செய் சொர்ன்னரதமிதேறியே - துலகுகதிர்மதியெனவிளங்குசிவசங்கர சூரியநாராயணசுவாமியே.(ரு)

இரத்தமொடுமாமிசமும் மூத்திரமொடுரோமமுநரம்பு தோலெலும்புமுமிரும் - நாடியொடு சிலேட்டுமம் வாத பித்தங்களும் நாலுமன்றி தசவாய்வுடன் - சத்தபரிசுத் திரெனுடு ரூபரசகந்தமுஞ் சகளாதிதப்பொருளுமாய்ச் - சாணராவித்தமிரு கண்களிரு வகையுமாய்ச் சார்வை பிநாபியுடனே - உற்றகமலத்தனி லுற்றவுபிராகவே வளிடாடிநின்ற வுணர்வாய் - ஓங்கார ரீங்கார வாங்கார ரூபமா யோரெழுத் தாகவேதான் - சத்திசெம்பிர பரிபூரணவிலாச வெகுருட்ச ரதமீதேறியே - இலங்கு கதிர்மதியென விளங்குசிவ சங்கர சூரியநாராயணசுவாமியே. (சு)

நிலையிலாச் சமுசார வாழ்க்கைவசிஜமென்றெண்ணி நினைவு தடுமாறுமதிலும் - நிஜரூபமாகவே காட்சிதந்தெ னையாண்டு நியமிக்க விதசமயமே - அலையாமலீரேழு பதினுன்குலோக மனுவுக்குளனுவாகியே - அரியபர பிரமாதி பவதாரசிங்கார வகோரவக்கினிரூபமாய் - மலையான கைலாச கிரிகளொடுபரமபதம் மகமேருவை சூழ்தரும் - வாசமிகுவானதொரு வீதியாகாயமதில் வ வரும் பிரகாசவொளியே - தொலையாதசனனமதில் முன்செய்தவினைத் துயர்தீரதமேறியே - இலங்குகதிர் மதியென விளங்குசிவ சங்கர சூரியநாராயண சுவாமியே. (எ)

வழியென்றதுறைகளை நிலைகளறியாமலே மனது
மிகவேகலங்கி - மாதர்தன்சுகமானவாசைதனைநிஜமெ
ன்று மண்ணுலகிலேயலைந்து - பழியென்றதீவினையகற்
றிவிடு முன்பாதம் பணியவே யருளுமில்லான் - பாமு
மென்மனங்குவிய வொன்றுதரிதம்பனம் பண்ணுவது
னக்கருமையோ - விதியென்றகண்ணெரி யாகவேகின்
றுவினை யாடும்மணிரூபமாகி - மேலானசெல்வமது தந்த
ருள்புரிந்திடும் வேதவேதாந்தமுதலே - சுழியென்றமு
னைமீதி லோங்காரமானவதி சூட்சரதமீதேறியே - து
லங்குகதிர்மதியென விளங்குசிவசங்கர சூரியநாராயணே
சுவாமியே. (அ)

அட்டதிசை யெட்டுடன் பதினறுகோணமு மக
ண்டதொருகாலமீதில் - ஆகாசமீதில்வெகு சோதிப்பி
ரகாசமா யலங்கார தீபசுடரே - கட்டமது வானதொ
ருகவலையினி தீரவுன் கருணை கடாட்சமுடனே - கன
யோகஞானமது சேவடிகடந்தநீர் காத்துரட்சித்தரு
ளவே - இட்டகுலதெய்வம்நீ ரெந்தனுள்ளத் திருந்து
விளையாடுமவநீ - இன்பசுகபோகமுஞ் சம்போகபோ
கமு மேகாந்தவையோகமுநீ - துட்டகலிகாலமதுவெ
ன்னைவந்தணுகாது துணையாகரதமேறியே - துலங்குக

திர்மதியென விளங்குசிவசங்கர சூரியநாராயண சுவாமியே. (கூ)

தங்கரதியுங்கனக கோபுரவிமானமுஞ் சதுர்வேத மேற்கலசமுந் - தளதளெனமின்ன லொளியான நவரத்தினந் தரித்தமதிவரிகம்பமும் - அங்கமுறு தாகனுறுமனவேகமுங்குதிரையாங்காரவோங்காரமா - யைந்தெழுத்தாய் நின்ற மந்திரசொருபமதி லருணனே சாரதியுமாய்ச், சங்கமுகமென்னுள்ளே வண்டில் கட்டாணியைத் தியானமதினுலிருக்குந் - தினந்தினமுமெந்தனிடசிந்தையிலிருந்தருள் திகம்பரமுமானபொருளே - அங்கபரிபூரண விலாசவொளியாகவே சுயம்பிரதமீசோரியே-அலங்குசதிர்மதியென விளங்குசிவசங்கர சூரியநாராயண சுவாமியே. (க0)

சூரியநமஸ்காரப் பதிகம்

முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

---

# அங்காரகன் பதிகம்.

---

வேலூநகரத்தையடுத்த

பிரமபுரம்

சீதாராமபிள்ளையவர்கள்

இயற்றியதை

---

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# அங்காரகன் பதிகம்.

## காப்பு.

இன்னிசைவெண்பா.

திருவாழ்பிரமபுரிச் செந்தாமரைக்கண்
பெருமான் வரதனருள் பெற்றுத்—தமியேனிச்
சங்காழிசூழ்புவியிற் சாற்றுவன்சீர்ராங்க
அங்காரகன்பதிக மார்த்து.

## நூல்.

பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்தங்குந் திருமாலரன்யனுச்
செகமுழுதுந்தருதொல்
செப்பியமூவர்களிவருடனின்னுந்
தேவருமாதவரும்
ஏர்மலிநான்மறைவேதியரும்புக
ழெவ்வரசாள்தனையும்
எங்கனுமிசையுறப்பொங்கித்தொழுவதை
யேதென்றறியுங்கால்

நீர்வந்தவர்களுதித்தெழும்போதருள்
நேர்கொண்டுண்மையதாய்
நின்றாய்நீயுமொர்நன்றாமிடமதில்
நிலையுற்றருளியதால்
ஆர்தானுகிலுந்தேடிநீசெல்வதி
னடியேனுனைத்தொழுவேன்
அதிக்ரூரந்தனைவிடவேணுஞ்சுக
மருளங்காரகனே. (௧)

ஜெகமதில்நவகோள்தனில்பிரிவாகிய
தினகரன்மதிகுருதி
திங்கள்சுதன்குருசுங்கனுடன்சனி
செயபணிராகுவுமே
சகலசிவனுமுதித்தருளுமக்கொடிதனில்
தலைமையாயுறுபாலனே
தருதலினாலென்னக்கதிகசினந்தனைத்
தந்துநெருங்குவதால்
நிகருமக்கொருபொருளேதோபுவிதனில்
சேயமதாயுமது
நியமமதாகத்தலைபாலித்து
நிலைசெய்திடார்நீக்காய்
அகமதுமகிழ்வாய் மிகவுளமுருகி
யடியேனுனைத்தொழுவேன்
அதிக்ரூரந்தனைவிடவேணுஞ்சுக
மருளங்காரகனே. (௨)

மதியணிசிவனள னதிதிசுதன்விதி
மாவரிச்சந்திரனும்
மாதவனுகியராமனுயர்ந்திடு
மற்றுளவரசர்களும்
பதிதனைநீக்கிப் பெருவன்மேகிப்
பாசறையுற்றதெலாம்
பார்மிசைகாரிக்கோபமதென்று
பகர்வருன்சினமறியார்
நிதிபகைதுயரெனுங் கொடுமைகளுனதால்
நேர்ந்தெனையுறுவதெலாம்
நின்னதுசெயலென்றெண்ணித்துணிவொடு
நித்தியமாஞ்செல்வம்
அதிகமதாய்நீரிதவொடுதயைசெய
வடியேனுனைத்தொழுவேன்
அதிக்ரூரந்தனைவிடவேணுஞ்சுக
மருளங்காரகனே. (௬)

இசைபெறுபுவிதனிலிருவரெனுந்திரு
மாலையுமீசனையும்
எண்டிசையும்பாரண்டமுமிவைதனக்
கேற்குநாயகமெனநீர்
வசமுடனுற்றேயவர்களைச்சித்தாய்
வந்துறவவர்நமது
வல்லமையெள்ளளவேனும்வெல்ல
மாட்டாராகையினல்

தசரதன்மைந்தனும்வனமதிலேகச்
சனகியைப்பிரிவித்திர்
சம்புசயம்புதனேட்டிவிரக்கத்
தானுஞ்செய்வித்திர்
அசைவறும்புவிதனிலிடர்தனின்மூழ்கி
யடியேனுமைத்தொழுவேன்
அதிக்ரூரந்தனை விடவேணுஞ்சுக
மருளங்காரகனே. (ச)

சத்தியமென்பதில்சுற்றியதீரரிச்
சந்த்ரனைநகர்நீக்கிச்
சந்திரமதிதனையனைமறையோர்க்குத்
தானடிமைபதாக்கிக்
கிர்த்தியமாகப்புலையற்கவனைக்
கிணதனென்றாக்கியபின்
கிளர்முடிசூட்டச்சித்தமிரங்கிக்
கிருபையுடன்மேவிச்
சத்தியிலவன் மனைவியைவெட்டுங்
காகூஷியினனவருடன்
காசினிதருகவவ்வேளையிலுதவிய
கருணைகொடன்புடனே
அத்திப்புவிச்சம்பத்துகள்தருவா
யடியேனுனைத்தொழுவேன்
அதிக்ரூரந்தனைவிடவேணுஞ்சுக
மருளங்காரகனே. (ரு)

தமதாசியராச்சியமாமதனைத்
தந்தடவியிற்றானுந்
தன்மனைவியுமாய்மேவியநளனைச்
சனித்தொடரெனமொழிவார்
உமைமணவாளனிரந்ததைக்காரிய
னுற்றறிஞரென்பார்
உன்னுதயவவர்தன்னிலுமுண்டா
யொத்துநடந்தால்
கமலமெனும்பூவினிலுறைவாளரு
காகிநடம்புரிவாள்
காரியனவரிடமணுகத்துணியான்
கருணைகொடுதவுவனும்
அமரர்அதிக்குமுன்பதமதையருள்வா
யடியேனுனைத்தொழுவேன்
அதிக்ரூரந்தனைவிடவேணுஞ்சுக
மருளங்காரகனே. (௩)

நிலைவருசனகிசிறையிலிருக்க நின்னதுகொடுமை
யதால், சேர்ந்ததைநீங்கல்செய்தும்மைச்செயங்கொள
நினரிதாயவா, விலையிற்றுயில்வளராவணையாண்மிக
விட்டுற்றலமர்ந்தான், எனினிவ்வுலகத்தெவரோவெ
ல்பவரெளியேன்புலனென்னும், வலையினில்வீழ்ந்தெ
ன்வாணாள்விடுய் மாபாவகைபரிவாய், மன்மதனொ
ண்டென்னிடர்பயம்நீக்கி மாமகளுறவளியாய், அலைக

டல்சூழும்புவிதனிலன்பாயடியே னுனைத்தொழுவேன்,
அதிக்ரூரந்தனை விடவேணுஞ்சுக மருளங்காரகனே.

வெகுஜெனமனதினில்முறிபடவுறுவதும் வெவ்
வினைநோய்களினால், வேதனையுறுவதும் பொருள்வர
விலது மேலுமிவ்விடங்களினால், தகையுற்றலைவதுமன்
பபமுதலாய்ச் சார்ந்து மலக்கணுறல், தகைமைசே
ர்நின்றன் கொடுமையினன்றோ தயவாயருளென்றே,
மிகவுனைத்தொழுவேனெதினுமெலனிலெலனை வெகுஜெ
னப்பிரியனுமாம், வெவ்வினைப்பிணியறநல்வழிபொரு
ளுற மேன்மையொடிடர்நீக்கி, அகமதுமகிழ்வுறக்ரு
பைகொண்டளியா யடியேனுனைத்தொழுவேன், அ
திக்ரூரந்தனை விடவேணுஞ்சுக மருளங்காரகனே.

கல்விக்கண்ணுளம்வைத்திடவில்லேன், கடவுளர்
தமையென்றும், கருதிடவில்லேனெதினுமெல்னில்கால்
கைபிணிநோய்களில்நாள், செல்லுவதாலிலிச்சித்தமி
ரங்கிச் சிறியேன்மெலியாமல், சிறைமுதலாகியபிணி
பலநோய்களுந்தீர்ந்திடவருள்புரிவாய், வெல்லுவதெ
னுனின்சொல்லாமந்திர மென்னும்பொருள்கொண்டு,
மேன்மையதாகவே யான்தினம்புகல்வேன் விதமொடு
துதிசெய்தே, அல்லும்பகலுமனதினில்நிலையாயடியே
னுனைத்தொழுவேன், அதிக்ரூரந்தனை விடவேணுஞ்
சுக மருளங்காரகனே. (௯)

மனதினிளுறதுயாதனுடனிடர்பிணி வல்வினை
சூனியமும், வத்திடினிவைமுதலாகியதுன்ப மறைந்
தரைநொடியளவில், "தினகரன்முன்பனி விலகியபடி
யிடர் தீர்த்திடச்செய்வதலால், ஜெயகோள்நின்புகழ்
சொலுமிப்பதிகந் தினமெவர்துதிசெயினும், கனமுள
திருவவர்மனைதனில்மேவி கடாக்ஷமுமுற்றதனால், கா
வலனுயதிபோகதனங்கள் கலந்தென்னும்வாழ்ந்திடுவர்,
அனுதினமுன்புகழ்தனையேதுதிசெய் தடியேனுனைத்
தொழுவேன், அதிக்ரூரந்தனைவிட வேணுஞ்சுக மரு
ளங்காரகனே.

(௧௦)

அங்காரகன்பதிகம் முற்றிற்று.



ஆக புத்தகம் 80.

உ

சுபமஸ்து

# மதுரை மீனாட்சியம்மன் பதிகம்.

---

இஃது

மஹாராஜராஜஸ்ரீ

சிவகங்கை சமூஸ்தானாதிபதி மஹாராஜ்ஜா அவர்கள்

துரைச்சிங்க தேவருக்கு

உள்ளன்புள்ள மதியூகியும்,

சிவகங்கை கண்டிராக்கட்டருமாகிய

ம-ள-ளஸ்ரீ,

வெங்கடசாமி நாயக்கரவர்கள் பேயரால்

அங்கிதநாட்டி

தாரங்காபுரம்

சண்முகக்கவிராஜராலியற்றி

முன் அச்சிட்டிருந்த பிரதியைக்கொண்டு,

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சென்னை சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

கணபதிதுணை.

# மதுரை மீனாட்சியம்மன் பதிகம்.

காப்பு-வெண்பா.

மாமதுரைமீனாக்ஷி மாதேவிமீதுதமிழ்ப்
பாமதுரமாலைசொலப்பாங்கருளும்—ஆமதுகை
யத்தியுரித்தத்தியிரித் தத்திதரித்தானுதவுஞ்
சித்தியுவாவின்சேவடி.

சங்கப்புலவர் துதி.

சதுர்பரவுஞ்செல்வத் தகைமிகுமாடஞ்சூழ்
மதுரையங்கயற்கண்மாதேவி—துதிமாலை
துங்கத்தமிழாற்றுதிக்கச் சுவைதருமுச்
சங்கததவர்தங்கத்தாள்.

ஆசிரியவிருத்தம்.

சகம்பரிசௌந்தரி சுகம்புரிசுதந்தரி தரந்தரிகிர
ந்தரியெலாந், தாங்கிப்புராதனி பராபரைசராசர சமு
கதரகங்கணைங்கி, நகந்தருகுருந்தென வருந்தரும
வரம்பிகைபொன் னளினகுஜகும்பேஸ்வரி, நாரணிகு

ணாதீத பூரணிகிர்பாகரி நயங்கொள்வைதிக காருணி, திகம்பரிசிலம்பொலி முழங்கிடநடம்புரி சிவாநந்தபரமஞான, சிற்சொருபகிரண சசணம்புயத்துணைபுகலி செய்தென்னையாளன்னையே, மகம்புரிமல்லேசனிகுல திலகவேங்கடசாமி மனமகிழுமதிகுலாட்சி, மதிமௌலிவாமாட்சி மணிமகுடவரசாட்சி மதுரைமீனாட்சியுமையே. (க)

மழைமுகங்காணாத பயிராயினேனிரவி மதியிலாமலராயினேன், வளமற்றநிலமாயினேன்புனலற்றதடமாயினென்ஜடனாயினேன், குழையுளமிலாதகுணனாயினேனன்பர்பணி கொண்டிடாப்பேயாயினேன், கோபதாபத்தினாற் றீவினைக்குள்ளாய்க்குமுங்கினேன் பேராசையாற் றழையிலாத்தாருவாய்த் தாயிலாச்சேயாய்த் தளர்த்துமனமக்கள்சுற்றந், தந்தைதாய்சந்தைசத மன்றென்றுணர்ந்துனைச் சரணடைந்தேன் கருணைகூர், மழையென்னமாழைபொழிவள்ளல் வேங்கடசாமிமனமகிழுமதிகுலாக்ஷி, மதிமௌலிவாமாட்சி மணிமகுடவரசாட்சி மதுரைமீனாட்சியுமையே. (உ)

தந்தைமனமுஞ்சலித்தன்னையினமுஞ்சலித் தயனுங்கரஞ்சலித்தான், தாங்குபுவியுஞ்சலித் தோங்குமிடியாக்கைநோய் தாமுஞ்சலித்தவானாள், நந்தலிலான்மர்சலித் ததயனந்திங்கணடைய்திகோள்சலித்த, நாமஞ்சலித்தருசி பாகஞ்சலித்தகுரு நாதனம

ஙஞ்சலித்த, பந்தவினைமுற்றுஞ் சலித்தந்தகன்பாசபாழ் நரகமுஞ்சலித்த, பாவியேனியுஞ் சலித்தெனைவிடா திருபதாம்புயந்தந்தருள்செய்வாய், வந்தனைசெய்யம் பாசமுத்திர வேங்கடசாமி மனமகிழுமதிகுலாட்சி, மதிமௌலிவாமாட்சி மணிமகுடவரசாட்சி மதுரை மீனாட்சியுமையே. (௯)

வையத்திலுள்ளபலயோனிபேதத்திலியான் மாத வக்குறையின்மூத்தோன், மாதவர்க்கிடையூறு போத விளைவித்தபுன் மார்க்கத்துயர்த்தமூத்தோன், செய்ய த்தகாதநெறி பொய்ச்சூதசத்தியஞ் செய்யுமிடியர்க் குண்மூத்தோன், தியாகியென்பார்க்குதவி செய்யாத லோபத் திறத்திஞேர்க்குரியமூத்தோன், ஐயத்தினி யெனத்தெய்வ தூடணைபேசு வாராணவத்தின்மூத் தோன், அநியாயசோரசாரத்தின் மூத்திடுமென்னை யாதரித்திடவருதியோ, வையத்தின் மநுவாதிமெய் யன்வேங்கடசாமி மனமகிழுமதிகுலாக்ஷி, மதிமௌலி வாமாட்சி மணிமகுடவரசாட்சி மதுரைமீனாட்சியு மையே. (௪)

அம்மம்மவேதநான்காதிதாயென்றனை யழைக் கிட்டபெயர் பொய்மையோ, அன்னபூரணியென்ன நன்றுபெயர்பொய்மையோ - அறம்வளர்த்ததுபொய் மையோ, விம்மூதளபேனைவளைராஜபத்திரியென விள ங்கியவளம் பொய்மையோ, விறபாண்டியகுலதடாத

கையெனப்புகழ் விரித்தவிஜயம் பொய்மையோ, செம் மலாஞ்சோமசுந்தர பாண்டியற்குரிய தேவியானது பொய்மையோ, சேருக்கிரபாண்டியச் சேய்ப்பேறு பொய்மையோ தீனர்க்குனருள்பொய்மையோ, பைம்மு கினிகர்த்த கொடைவள்ளல்வேங்கடசாமி மனமகிழு மதிகுலாக்ஷி, மதிமௌலிவரமாட்சி மணிமகுடவராசா ட்சி மதுரைமீனுட்சியுமையே. (ரு)

நீமகாராஜன்மக ளீமகாதேவன்மனை நீமகாரா ஜேஸ்வரி, நீகஞ்சமர்ல்தங்கை நீவிஞ்சுவார்கங்கை நீ கொஞ்சுமஞ்சுகங்கை, பூமனுருன்மருக னேமெனும்பிர ணவப் போதநாதர்க்குரைத்த, பூங்கடம்போங்கடற் புயகடம்பன்கடம் பொழிசெவிக் கோட்டுவேதனன், மாமகார்பொன்வெள்ளி மலைபயின்றுலவுமிட மதிகதி ருனேவலர்களாம், வாய்ந்தநின்மகிமைசொலவல்லனோ நாபுரவடிக்குரியனுனல்லனோ, வாமசிவ்கங்கைகண்டி ராக்ட்டர் வேங்கடசாமி மனமகிழுமதிகுலாக்ஷி, மதி மௌலிவாமாட்சி மணிமகுடவரசாட்சி மதுரைமீனு ட்சியுமையே. (சு)

எழைக்கிரங்கினலறமறையுமோபிறந்தேதநிய குல ங்குறையுமோ, எம்மனோர்விம்மியம்மாவுனை வெறுப்ப ரோவிதயம்வைத்தால்வைவரோ, தாழைக்குனன்பனிபு சாபந்தவிர்த்துச்சி தனினச்சிமெச்சவில்லையோ, தமிழ்க் கிச்சையாற்புலவனுக்குன்னணிக்குழை தனிற்றிங்கள்

 மதுரைமீனுட்சியம்மன்பேரில் பதிகம்.

சுந் தாராங்கமாம்பவானி, தானதருமந்தேவ தானசிவ கங்கா சமஸ்தானசார்வபூமன், தங்கும் கிரீடபதிராஜா துரைச்சிங்கதேவற் குவந்ததாமன், வானவர்மதிக்கு நல்லம்பாசமுத்திரபுரவாகன் அழகிரிசாமிமால், வந் தனையினுற்றந்தமைந்தர் மூவர்க்குண்மல்லேனிவேங்க டசாமிவேள்,மானநவரத்னமணிமாலைய ணிவான்வனி திட்சிபெற ரக்ஷைக்ஷபுரிவாய், மாதரங்காபுரச் சண் முகன்றநியுனது வனசமலரடிபுணைந்தே. (கக)

முற்றுஞ்சுபம்.



ஆக புத்தகம் 81.

உ

கடவுள் துணை.

வேப்பூரில் எழுந்தருளியிருக்கும்

# காமாட்சியம்மன் பதிகம்.

இது,

பெருமத்தூர்மஜரா குடிக்காடு

சி. சிவலிங்கபடையாச்சியால்

இயற்றி


சிறுமணவூர்-முனிசாமி முதலியார்

அவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.





சிவமயம்.

வேப்பூரில் எழுந்தருளியிருக்கும்

# காமாட்சியம்மன் பதிகம்.

காப்பு - வெண்பா.

காசினியர்வந்தனஞ்செய் காமாட்சியம்மனிடத்
தேசுபுகழ்செந்தமிழாற் செப்பவே — வீசுதிரை
மோதுநதிவேணியணி முக்கண்ணனைக்கனருட்
காதற்சுதனைங்கரன்றாள் காப்பு.

## நூல்.

திருமாதுகலைவாணி நிலமாதுமகலாத செம்பொ
ன்மணிமண்டபத்திற் - றினகரர்களொருகோடி பகி
ரெனவமைந்தபெரு சிங்காதனக்கொலுவினில்-பொரு
மையுடனரசு புரிகின்றபரிபூரணி புரந்தரன்வாழ்மல
கொடு- புணரிசூழவனிசகலண்டபுவனங்களும்பொரு
மையுடனீன்றதாயே- மருக்குமல்லிகைவாசவனசமலர்
கமழ்கின்றமலரடி தனிறபணிந்தேன் - மாதங்கிபைரவி
கிரிசூலி யுந்தனிடமைந்தனுக்கருள் புரிகுவாய் - கரு
மேகம்விளையாடுபொழில்களும் வாவிநிறைகனகதிரு

வேப்பூரில்வாழ் - கருணைபொழியேகாம்பரேசர்தம் மருகில்வளர்காமாட்சியம்மையுமையே. (க)

மலையரசன்மகளானசுந்தரீயுந்தனிடமகிமைதனையிப்புவியுளோர் - வாக்கினாற்சொல்லவிருகண்களாற்காணவுமனத்தினாலெண்ணவெள்ளிதோ- நிலைமைபெருதிருவாடிபுகர்வாரமகலாது நின்னடிமை யனைவோர்களும் - நிரைநிரைகளாகவந்துன துபயபதமலர்நினைந்தருச்சனைபுரிவதும்- சிலைநுதலியானம்மடமங்கையர்களுந்தனிடசேவடிதனிற்பணிந்தே - சேயெனக்கருள்புரிவையென்றங்கைகூப்பியே சேவிப்பதென்னசொல்வேன் - கலைவளருமாதவரும்யோகியர்கள்குடிகொண்டகனகதிருவேப்பூரில்வாழ்- கருணைபொழியேகாம்பரேசர்தம்மருகில்வளர் காமாட்சியம்மையுமையே. (உ)

பொன்னகரில்வளர்கின்றகற்பகச்சோலையென்புகழ்பெற்றபூங்காவினிற்- புரந்தரசன்சபையெனவமைந்தமணிமாடநிரை பொன்னாலயத்தினடுவே - சொன்னமயசிங்காதனத்திலமர்சுந்தரீ சுருதிமுடிவானவுமையே- சூனியம்பேய்பில்லிகாட்டேரிமுதலான துட்டர்களெலாநடுங்க - மின்னலெனவொளிபெற்ற வாளுமழுசூலமொடுவேலாயுதந்தரித்தே-வெற்றிபெருசெங்கமலையாண்டவனெனுஞ்சூரன் முன்புநின்றேவல்கேட்பக் - கன்னியர்கள்சூழவரசாட்சிபுரிமாதங்கி கனகதிருவேப்பூரில்வாழ் - கருணைபொழியேகாம்பரேசர்தம் மருகில்வளர் காமாட்சியம்மையுமையே. (ங)

முண்டகனை தனது திருநாபியிலளித்தவன் மூலமா யண்டபுவன-முழுதும்படைத்தவனிதனில்வாழ் சராசரமுமுற்றிலுங்கார்க்கவெண்ணி - உண்டுமிழ்ந்தடியாலளந்தடியாலளந்து ரெட்சித்திட்டஉவணவாகனமாதவன் - உந்தனிடசன்னதிவலப்புரந்தன்னிலேயுல்லாசமாயிருக்க-எண்டிசைநடுங்கதிரிசூலமழுகத்திகையுமேந்தியேகீழ்த்திசையினி- லெப்பொழுதுந்துட்டரைவதைத்திடு கறுப்பனின்றேவல்பணிவிடைசெய்யவே - கண்டவர்கள்தெண்டனிடநின்றபரிபூரணி கனகதிருவேப்பூரில்வாழ் - கருணைபொழியேகாம்பரேசர் தம்மருகில்வளர் காமாட்சியம்மையுமையே. (ச)

சங்கரியுந்தனிட திருநாமமொருதரஞ் சாற்றினெவிவ்வுலகினில்-சஞ்சரித்திடுதுஷ்டபிரமராக்ஷது கொடியசமர்செயும்வேதாளமுந் - திங்களேவகிர்ந்தபெருவெயிருடைய பூதமொடுசெங்குருதிகாட்டேரியுஞ் - சேட்டையுள்மாடனும்பில்லிசூனியம் வைப்புந்தேகமதனிற்றிரிந்தே - பங்கப்படுத்திடுங்குட்டமொடு குன்மமும்பலநாமரோகங்களும் - பதைபதைத்தோடுமே நின்னருகிலுறைகின்ற பரமனிடசடையில்வளருங் - கங்கையுருவாளேகமுகேரிசூலேதள்ளிடுங் கனகதிருவேப்பூரில்வாழ் - கருணைபொழியேகாம்பரேசர்தம்மருகில்வளர் காமாட்சியம்மையுமையே. (ரு)

வருமைகுடிகொண்டென்னை வாட்டுதேயுந்தனிடமலரடிக்கடிமையான - மைந்தன்மேற்சிந்தைசற்றில்

லாதிருப்பதென வர்மமோஜெகதீஸ்வரீ!- அருமையுட னீன்ற தாயாரிடமுரைக்காமு லாரிடத்திற்சொல்லு வேன் -அலலாதுபுகலிலுமுந்தனைப்போலெனக்கருள் புரிவருலகிலுளரோ - பொருமையொடுதருமநெறிகரு ணையருணற்குணப்புத்தியுமளித்தந்தகன் - பொருதி யெனதுயிர்கவருமப்பொழுதுவந்துனது பொற்கமல பதமருளுவாய்-கருவிழியைகடைமகமூர்குவளைமலரெ ன்றிடுங்கனகதிருவேப்பூரில்வாழ்- கருணைபொழியேகா ம்பரேசர்தம்மருகில்வளர் காமாட்சியம்மையுமையே.

தஞ்சமெனவுந்தனிடம் வந்தெனது நொந்தகு றைசாற்றிமலரடிபோற்றினேன்- சாந்தகுணமுந்தயை புரிந்தெனதுவாக்கிறைற்றமிபனுடவினையகலவே - அஞ் சலென்றொருமொழிபுகன்றெனக் கருளினலாதரிக்கா திருந்தா - லன்னையெயனுவளவு மறிவென்பதில்லாத வடியனெவ்விதமுப்குவேன்- வஞ்சனைசெயுங்கொடிய ருந்தனுக்கெதிர்நின்று-வாதுசெய்புந்துட்டர்கள் வா ய்பிளந்துடலைக்கிழித்து மணிகுடல்வாங்கிமாட்டுமர கதவல்லியே - கஞ்சமலர்வாணியென விஞ்சைஞயர்கள் வாழ்கின்ற கனகதிருவேப்பூரில்வாழ் - கருணைபொழி யேகாம்பரேசர்தம்மருகில்வளர் காமாட்சியம்மையுமை யே. (எ)

ஆலமமர்கண்டனிடபாகமதி லகலாதுவகிலாண்ட பரமேஸ்வரி - அச்சுதன்றங்கையேபச்சைநிறமங்கை நி ன்னருளேனுக்கமுக்தியல்லால் - ஞாலமெல்லாநீதிவழு

வாமலரசுபுரி ராஜனுயிடினுமென்ன-நாகரத்தினமுத்
துகோமேதகம்பச்சை நாதனருளாலுதித்த- கோலமு
ளவச்சிர வைடூரியமிருந்தென்ன் குஞ்சரம்பரிசேனை
யுங்-குழந்தைகமித்திரர்பந்துமனைவிகளிருக்கினுங் குன்
றுமாயுண்முடி-வினிற் - காலனெதிர்நில்லாதுசிலகுண
மாதங்கி கனகதிருவேப்பூரில்வாழ்- கருணைபொழியே
காம்பரேசர்தம்மருகில்வளர்காமாட்சியம்மையுமையே.

பாராசைபணமாசைபந்துமித்திராசை பாரியா
ளாசையென்னும்-பந்தபாசத்திறற்கட்டுண்டுவுந்தனி
டபாதமலர்நினையாமலே - தீராதவிப்பிறவிபுணரியில
ழுந்தியித் தேகமேநிலைமையென்றுந்- திரிந்தலைந்தேனி
ந்தவாக்கையினைவிட்டுயிர் தென்றிசைக்கேகுநாளில் -
வாராதுஇவையெலாமாய்கையென வெண்ணியுன்மல
ரடிபணிந்தேத்தினேன் - மரலியெனதுயிர்கவருமந்த
மதில்வந்துனது மகிமையுளபாதமருளுவாய்- காராள
ரனுதினஞ் சேராடவயலுமுங் கனகதிருவேப்பூரில்
வாழ் - கருணைபொழியேகாம்பரேசர்தம்மருகில்வளர்
காமாட்சியம்மையுமையே. (௯)

வாசமிகுசந்தனங்கஸ்தூரியத்தர்சவ்வாதுபனி
னீர்கலவையும்- வானவர்கள்தான்மகிழதேனுமிருங்கற்
பகம் மந்தாரைபாரிசாதம் - மாசற்றபைங்குவளைமலர்
முல்லைமல்லிகை மயிர்க்கொழுந்துயர்கூவிளம்- மண்ட
லமெலாங்கமழுகின்ற செந்தாமரையுமற்றுமுளபத்திர
மெலாம்- ஆசையுடனேகொணர்ந்துனதுதிருவடிமீத

ருச்சித்துபோற்றிசெய்தேன் அம்பிகைமனோன்மணிது
ம்பிமுகனைத் தந்தவன்னையேயெனையாளுவாய்-காசினி
யராசையுடன்வாசமதுசெயவருங்கனகதிருவேப்பூரில்
வாழ் - கருணைபொழியேகாம்பரேசர்தம் மருகில்வளர்
காமாட்சியம்மையுமையே. (௧௦)

வேதமொருநாளுமறியாத முடிவானபரமேஸ்வர
ன்றேவியான- வித்தகிபரஞ்சோதி சத்திசாமுண்டியே
விண்ணவர்கள்போற்றுமுந்தன் - பாதமதிலரியாதபுல்
லரிவினுற்செய்த பாமாலையைச்சூடினேன்-பகராசுமது
ரமொழிசித்திரவித்தாரகவி பண்டிதரெலாம்பொருத்
துக் - கோதமடியேன்மீதுகொள்ளாமலறியாக் குழந்
தைநவில்மழலையெனவே - குணமிலாப்பேதையனுரை
த்தமொழி செவிகொண்டு குற்றம்பொருப்பரம்மா -
காதலர்களோடுதின மாதர்ஞெகிழாதிருங் கனகதிரு
வேப்பூரில்வாழ்- கருணைபொழியேகாம்பரேசர்தம்மரு
கில்வளர் காமாட்சியம்மையுமையே. (௧௧)

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 82.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

வடதிருமுல்லைவாயில்

# மாசிலாமணியீசர் சந்தப்பஞ்சரத்தினம்.

அரன்வாயல்

அ-தங்கவேலுப்பிள்ளையவர்கள்

இயற்றியது.

இஃது

சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.





சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வடதிருமுல்லைவாயில்

# மாசிலாமணியீசர்

# சந்தப்பஞ்சரத்தினம்.



காப்பு.

நேரிசைவெண்பா.

மாமுல்லை வாயில் வருமாசி லாமணிமேற்
பாமன னும் பஞ்சரத்நம் பாடவே—மாமுகத்து
முல்லை விநாயகன்றன் முன்னின் றருள்சுரக்க
வொல்லை வருவா னுவந்து.

நூல்.

குழிப்பு.

தனனதன தய்ய தானன தானன
தனனதன தய்ய தானன தானன
தனனதன தய்ய தானன தானன-தனதான.

௧ நறவுகமழ்வெள்ளைவாரிசமீதினி
லிலகுகலைவல்லபாமினெனுமினி
னலமுறமிளிர்தலான்மறையாகம முவையோடே

நவில்கலைகள்பல்புராணமெலாமொழி
தருமுனதுமல்குசீரினைநாடொறு
நனிவளர்மகிழ்வினையருளேதுணை யெனவேதான்

மறுவறுதமிழ்கொடோதினுதிரு
கழன்மலரையுள்ளமாகியகோயிலின்
வழிபடுமோர்நல்லுபாசனையேபுரி யவுமேலர்

மகிமைமிகுசைவமாதவநாவல
ருறுகழகமெய்திவாழ்நலமாதியு
மருவியிவணுய்யுமாறுமினேயருள் புரிவாயே

யறுகுபுனல்வில்வமாலிகைமாமதி
மணிமருவுபையராநகுமோர்தலை [னே
யணிசடையிலொல்லவேயொருதூவலும் வினவோ

யலைபெருகுவைவையைநீரினிலேயெதிர்
விரைவினொடுசெல்லுமாறுமுனுளினி
லமணர்களைவெல்லுவான்விடுவோனொரு விரலாலே

குறிகொடுனைவிள்ளுபாடலிலேதிரு
வுளம்விழைவுகொள்ளுமோர்பரிபூரண [னோ
கொடியிடைமின்வல்லிவாழ்தரும்வாமமொடவிர்வா

குளிர்மைதருமையுலாவியசோலையி
னடனமிடுபுள்ளுலாவிடுசீரது
குலவுதிருமுல்லைவாயிலின்மேவிய பெருமானே.(௧)

மருவுகுழல்செல்லைநேர்தரமாமுக
மதியமெனவில்லைநேர்நுதல்வாள்விழி
மதுரமுறுகிள்ளைவாசகநேர்மொழி வரையோடே

வளருமிருவல்லைநேர்முலையாதிய
வெழில்பெருகுதையலார்மிசையேதின
மனமுருகிமையன்மீறிடவாடுத லறுமாறே

பரவவருநல்விசாரணையாலொரு
பரசிவனையல்லதோர்பொருளுண்டாறை
பகர்வதிலுமில்லையேயெனுமேலவர் மொழிபோலே

பதியுமுயருய்கைசேர்தரவேயொரு
கொடியினிடைவல்லியோடினிதேர்பெறு
பவனிவருதுய்யமால்விடைமீதினில் வருவாயே

யரிவைமணியெளவையாரையநாளினி
லொருபெரியகைலைமால்வரைமீதுற
வரசனொடுசெல்லுநாவலன்மேவுமுன் விடுவோனே

மணியின்மிகுமல்லன்மாமுகனூரமு
தனையவணம்விள்ளுபாவலர்பால்விழை
வதிகமுறுபுள்ளிமாமயில்வேலவ னிவர்தாமே

கருதமணமெய்துமாவினதோர்கனி
முனமவிர்செய்கையனேதிருமாலருள்
கமலன்முடிகொய்தசேவகனேயெனின் மகிழ்வோ[னே

கரியமுகில்வெள்குமாறுதயாவொடு
நிதிபலவுநல்குவோருறைசீர்மிகை
கதுவுதிருமுல்லைவாயிலின்மேவிய பெருமானே.(௨)

விரியிதழ்கொள்செய்யவாரிசமேலய
னதுசெழியகையினலெழுதாறுறு [தே
வினையில்வருமெய்யின்மானிடவாழ்வினின் மலையா

விமலநிலைவிள்ளும்வேதமொடாகம
முறையதனிலெள்ளிலேழொறுகூறெனு
மிகையுளனவையமாமெனவேசொலி யிகழாதே

திருவருள்கொடுள்ளுணடியிணைதிணை
யடிகள்கதியையனைகருணகர
சிவபரமகௌரிநாதவெனுநவில் வழிபாடே

செயுமறிஞர்செவ்வியார்பதரேனுமென்
முடிமருவுசெல்வநீடியவாழ்வது
செறியவுமெனல்லதீர்தருமாறுந லருடாரா

யரிபிரமன்வெள்ளைவாரணனாதியர்
நனிவெருவியையகோமுறையோவெனு
மதுபொழுதுபௌவமீதெழுதீவிட நுகர்வானே

யலவனனலெல்விலோசனனேயுடன்
முழுதுமணியொள்விபூதியனேபல
வலையெறியும்வெள்ளமோதுசடாடவி யுடையானே

யுருமருவுகல்லுவாமதுசேர்கழை
யுணமுனருள்வல்லவாடல்செய்தாயெனு
முரைசொல்பவருள்ளமாலயமாயமர் குருவானு

யுவமைமொழியில்விணுடுமொவாதென
மிருவளவைகொள்ளுநாண்மலர்வாவிக [னே.
ளொளிசெய்திருமுல்லைவாயிலின்மேவிய பெருமா

அழகிலகுதெய்வயானையினோடட
லெயினர்தருவள்ளிநாயகியாளினி [ர்பா
தணைகொழுநனெஃகவேன்மயிலாதியை மொழிவா

லதிவிழைவுகொள்விசாகன்முனுணுவ
மிணையிலொருசொல்லுபாயமெனேவிவ
ணதனையருள்செய்குவாயெனவேவள ரளியாலே

ப்முதகலுமௌவையோடுபிதாகுரு
வெமதுகுலதெய்வமாகியவாவுபல்
பயனுதவுதில்லைமாநகராடக வடையூடே

பரிவினொடுதய்யதாதிமிதோமென
நடனமிடுசெய்யதாளிணையேவழி
படுமெனதுகொள்கையானதுசீர்பெற நினைவாயே

யுழமண நமெய்யிலார்தருகோலந
லருளிலகுதய்யதானவிபூதியி
லொளிர்வதெனவுள்கியேயொருகாழிய னடிமீதே

யுமதடிமைசெய்வதியாதெனவேதொழு
தவசமுறுநல்லமாதவசேரல
னுசிதமொடுவிள்ளுலாவினலார்வம துடையானே

யிழவருசைவதேசிகவாணர்க
ணவிலினியசெய்யுளோடிசைநாடிமுன் [ரேண்
மிருபொனருள்வள்ளலேயெனவோதியுண் மகிழ்வா

யிடியொடவரெவ்வமாதியுமாய்வுற
வருள்பரமபொய்கையூடுசரோருகம்
விரைசெய்திருமுல்லைவாயிலின்மேவியபெருமானே.

மலயமதிளொள்ளியோருடன்வாழ்குறு
முனிவர்தருதெள்ளுசீர்பலதோய்தமிழ்
மணமுணரவல்லபாவலராமவ ருறவோனே

வனசமலர்வைகுமாதருளால்வரு
நிதியுமெதிர்தெவ்விலாதருளால்வரு
மருவிவளரையராசிகொள்வ...வையுமிதுபோழ்தே

யலேகலைகொள்வையமீதிலெனு...
வினர்கணனிவெஃகனீடியநேசர்க
ளவலமுறுபுல்லராதியரியாவரு மகிழ்வாயே

வடையும்வணமுள்ளுமேதகைய்...
யிமயமலைவல்லிவாழ்தரவாமம
தருளிணையில்வள்ளலேயெனநாடின னருள்வாயே

சலதிநிகர்மெய்யனுனமுராரியுண்
மகிழ்விசயன்வைதுவார்சடைமீதொரு
தனதுகரவில்லினலடிமோதிட முனியாதே

தயைபெருகுமள்ளனுகியநாளருள்
வரதவெனவுள்கியேமிகவாசனே
தருமலர்கள்கொய்துமாலிகையாகநி னடிமீதே

யிலகநிதமொல்கிடாதணிவோர்மன
மதனிலுறைவைபவா திருநாவர
செனல்வரைதலல்லதேதுமுனுதவர் பெறுவாழ்வே

யெறிதாளவெள்ளவால்வனேநீர்வள
முறுநெடியசெய்யிலேவிளைசாலியி [னே.
னெழில்கொடிருமுல்லைவாயிலின்மேவிய பெருமா

திருச்சிற்றம்பலம்.

வாழி.

வாழ்கசிவம் வாழ்கவுமை வாழ்கணே சன்முருகன்
வாழ்கதிரு வெண்ணீறு மாமணியும்—வாழ்கவே
பஞ்சக்கரமுமறை யாகமமுஞ் சைவமிகு
செஞ்சொற் றிருநெறியுஞ் சேர்ந்து.

மெய்கண்டதேவன்மெல்லடிவாழ்க.

---

ஆக புத்தகம் 83.

உ

கடவுள் துணை.

# திருவொற்றியூர்மாணிக்கத்தியாகர் ஸ்தோத்திரப்பா.

## திரிபுரசுந்தரிஸ்தோத்திரப்பா.


ம-௱-௱-ஸ்ரீ,

ஆயுள்வேதியர்

ஆலந்தூர்

முத்துசாமிமுதலியாரவர்கள்

இயற்றியன.



இவை

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

1908.



உ

கணபதி துணை.

திருவொற்றியூர் மாணிக்கத்தியாகர்

# தோத்திரப்பா.



காப்பு-வெண்பா.

மாமகிழாரொற்றிநகர்மாணிக்கத்யாகரவர்
வாமமகலாதவடிவாம்பிகையென் — றைமமுறு
மிவ்விருவரைத்துதிக்கவேர்கொள்குணலையன்றன்
செவ்விமலர்த்தாடுதிநெஞ்சே.

---

கட்டளைக்கலிப்பா.

மதிதவழ்சோலைசூழ் திருவொற்றியூர் மாதுமை
மணவாளநின்வார்கழல், விதியோடேத்திவினைப்பகை
யற்றுயர்வீடடைந்தனர்மெய்யடியாரெலாந், ததியிது
தடுத்தாளித்தருமியனை தானு வேயருடங்குந்தயாளு
வே, விதியரிமுதலோருமறியொணா வித்தகாஜகதீசம
கேசனே. (க)

அத்தியீருரியைத்தரியத்தனே யண்டரண்டப
கிரண்டமுந்துதி, நித்தியாநின்மலாநிட்களாசதுர்நிக
மமேனுறை நிச்சலநின்னடி, பத்தியோடுபராவவுஞ்

சிர்த்தியைப்பாடவுந் தடுத்தாடிருவொற்றியூர், சத்தி
யோரிடப்பாகமமர்சிவசங்கராஜகதீசமகேசனே. (௨)

எழ்பவவாரியிற் புகாதேழையை யென்றையே
தடுத்தாளெண்குணவிரி, தாழ்சடைத்தகையேதவநே
சர்க டாம்பதாசர்வஜீவதயாபரா, வாழ்கடற்றயில்
வோனுபயனுகலன்னமேன முமாகியறியொணாய், வா
ழ்வருளொற்றியூர் வள்ளலேவடிவாளனே ஜகதீசமகே
சனே. (௩)

கண்ணினுண்மணியே யடியார்களுண்கன்னலே
முக்கனிரசமேயிசைப், பண்ணினேர்மொழி மங்கை
பங்காமிளிர்பால்கொள்வெண்பொடிமேனியனேமிகத்,
திண்ணியா திருவொற்றியூர் தன்னில்வாழ்த்யாகமாம
ணியேவினை தீர்த்திடும், புண்ணியாவென்றனைத் தடுத்
தாள்சுகபோகனே ஜகதீசமகேசனே. (௪)

ஒப்பிலாமணியேயொளிருந்திருவொற்றியூரரசே
யுமைபாகனே, யப்பிகழியணியுமவிர்சடை யப்பனே
தில்லையம்பலக்கூத்தனே, யிப்படியிவ்வேழையடிய
னே னேதநீக்கி யெனைத்தடுத்தாண்டருள், செப்பரி
யவருமறைசாற்றிடுஞ்செம்மலே ஜகதீசமகேசனே. ()

நிருத்தமேபுரிகின்ற நிராமயாநிகிலலோகாதரா
நிர்க்குணமிளிரொருத்தனேநினுபயபதாம்புயமுலகெ
லாந்துதிசெய்யு முருத்திரா, பருத்தவெள்விடையூர்
சித்பராபராதயாபரனே தடுத்தாண்டேனுள், வருத்தநீத்
தருள்வாய்த்திருவொற்றியூர்வள்ளலேஜகதீசமகேசனே.

மாசின்மாமணியே மணிகண்டனே மால்விடைத்
துவசங்கொளுத்துங்கவிக், காசினிதனிலேகடையேன்
கொடுங்கட்டம் யாவுங்களொந்திக்கசடனேத், தேசிகா
தடுத்தாடிரு வொற்றியூர்த்தேவனேயடியேன்வனை
சொன்மலர், வாசிகைபுனைராஜராஜேஸ்வரிவாமம்வாழ்
ஜகதீசமகேசனே. (எ)

எங்கணும்நிறைகின்ற விறைவனே யேதிலார்க்
கிங்கழலுருவாகுந,லங்கணுவருடங்குமையானுவணி
திருவொற்றியூர்வளரண்ணலே, பொங்கரவமணிமணி
கண்ட விப்பூதலத்திலெனைத்தடுத்தாண்டருள், சங்க
ராசிவசாம்பசதாசிவாசம்புவே ஜகதீசமகேசனே. (அ)

தஞ்சமென்று நின்றுளடைந்தேனரு டங்குந்தற்
பரனேயித்தமியனே, யஞ்சலென்றுதடுத் தருளாவிடி
லார்கொலாதரிப் பாரிவ்வவனியிற், செஞ்சடையிற்
சிறுபிறைசூடியசெம்மலே தெவிட்டாத செங்கன்ன
லே, நஞ்சணிகளநற்றிரு வொற்றியூர்நாதனே ஜகதீசம
கேசனே. (கூ)

முத்தனையவெண் மூரலினுர்கடம் மோகவாரிதி
மூழ்குந்தமியனே, னெத்தனைபவமின்னிரு தாட்டுணை
யேத்திபுமெனிதயத் துறந்துய, ரித்தனையென்றிலக்க
மிசைத்திடவேலுமோ வெனையுந்தடுத்தாள்பிழை, யத்
தனையும்பொறுத்தரு ளொற்றியூரப்பனே ஜகதீசம
கேசனே. (௧௦)

சோதிபோற்றிசுயம் பிரகாசமாந் தோன்றல்போற்றி சுரிகுழன்மாதுமை, பாதிபோற்றிபுயங்க வணியணிபகவபோற்றி பகாருநான்மறை, யோதிபோற்றி திருவொற்றியூர்விடை யூர்திபோற்றி யுவமித்துணைக்கொணு, வாதிபோற்றி யெனைத்தடுத் தாண்டருளத்தனே ஜகதீசமகேசனே. (கக)

திருவொற்றியூர்

மாணிக்கத்தியாகர் தோத்திரப்பா முற்றிற்று.



உ

கணபதிதுணை.

# திருவொற்றியூர்த் திரிபுரசுந்தரி தோத்திரப்பா.



எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூவமர்நான்முகன் வகுத்தவுலகினித்தம் பொருடேடியுண்டுடுத்துப் பூவைமாரை, யாவலுடன்றழுவியிக்காயத்திலாசை யதிகம்வைத்தேயிந் நனித்தியத்தையோரா, தோவறவேசுழன்றுயுழுளைவிணேயொழிப்பதி லென்பயனுளமே யொற்றியூர்க்கண், டேவர்தொழுந்திரிபுர சுந்தரிபதத்தைச் சிந்திப்போமேல்விினைகள்பிந்திப்போமே. (க)

அருமறையாகமமிருதி புராணநூல்களவையனை
வுமாராயாதாய்ந்துணர்ந்தோ, ரிருதயமொப்பப்பணி
களியற்று தின்னுமிருக்கின்றாயியம படரிம்மென்றெய்
தி, வருதியெனக்கூறினெஞ்சேசமனேவிமக்கண் மறுப்
பரோவளரொற்றியூர்க்கண்முத்தித், திருவருளருந்திரி
புரசுந்தரிபதத்தைச் சேவிப்போமேல் டமனகமோ
விப்போமே. (௨)

நித்தியமுந்திருக்கோயில் சூழ்ந்தாயில்லை நேய
முடன் மலர்பறித்தர்ச்சித்தாயில்லை, புத்தியுடன்சிவது
திகள்புகன்றாயில்லை பொழுதுபோக்கிக்களிக்கும் புலை
யனெஞ்சே, சித்தியுடன்முத்தியும் வேண்டினர்க்களிக்
கும் திருவொற்றியூர்க்கேகிச் சிந்தையொத்த, பத்தி
யுடன்றிரிபுரசுந்தரி பதத்தைப் பணிகுவோமேற்று
யரந்தணிகுவோமே. (௩)

அவனையவளைபதனைப்பற்றி நொந்தேயாயுளை
கழிப்பதனுக்கஞ்சாமெயன்றுஞ், சிவனையவனிடப்பாலி
ற்றேவிதன்னைத் தினையளவுபோதேனுஞ் சிந்தித்தேத்
தாய், பவனையும்வைகைபுணராய் நெஞ்சேநீடும்பலவள
ங்கணிறையொற்றிப் பதியின்மேவும், புவனையெனுந்
திரிபுரசுந்தரி பதத்தைப்போற்றுவோ மேற்கவலைமா
ற்றுவோமே. (௪)

தண்பனினீர் தெளித்து நறுமலர்கடுவுஞ்சப்பிர
மஞ்சத்தினி லேலதையலோடுங், கண்படைகொளிவ்வா
ழ்மேலாய்வாழ்வாய்க் களித்திறுமாந்தாயுளை கழிக்

குநெஞ்சே, சண்பகமல்லிகை முல்லைபாரிசாதஞ் சந்தமுமணம் வீசுமொற்றியூர்க்கண், மண்பரவுந்திரிபுரசுந்தரிபதத்தை வணங்குவோமேலின் பமிணங்குவோமே. (கு)

மன்னவனுயினு மெவர்க்கும்வளையாதியும் வள்ளலாயினு மிந்தமகிதலத்தின், மின்னலினையொத்தழிவதுணமைகண்டாய் வீண்மயல்கொண்டலைகின்ற விரவினெஞ்சே, யென்னதியானெனுஞ்செருக்கை யொழித்தமேலோ ரிதயமுவப்பப்பணிசெய் தொற்றியூர்வாழ், பன்னரியதிரிபுரசுந்தரி பதத்தைப்பற்றுவோ மேலெண்ணமுற்றுவோமே. (சு)

தணலினிடைப் புழுப்போன்று நிதமுந்துக்கசாகரத்தின் மூழ்கியுமோர்சற்றுநல்ல, குணமடையச்சிவமியற்றக்குறித் தாயில்லைகு ளாளுமலிக்கிணையானுங் குணமினெஞ்சே, மணமகனேபிண மகளுதலையுங்கண் டோமற்றிவ்வாழ்விச்சை யொழித்தொற்றியூர்க்க, ணுணர்வருளுந்திரிபுரசுந்தரி பதத்தையுன்னுவோமேனிலையின் மன்னுவோமே. (எ)

தொழிலாளியிவனெனச் சொல்வித்துப்பொல்லாத்துயரமிகச்செயுமாசை தொலையுநல்ல, வழியாயிரந்தரநானிசைத்துஞ் சற்றுமதியாமலவமதித்தாய் மதியினெஞ்சே, பொழிலாகாயத்தளவுமுயர்ந்தோன்றும் பொற்புமிகுந் திருவொற்றிப்புரியின்மிக்க, வெழிலாரு

ந்திரிபுரசுந்தரி பதத்தையெண்ணுவோமேலருளை நண்ணுவோமே. (அ)

கண்மையிடுங்காரிகையார் மோகமென்னுங்கடல் வீழ்ந்து பலநாளுங்கவலைகொண்டு, திண்மைமிகுஞ் சிலையொத்தநெஞ்சே யின்னுந்தெளியகிலாயென்செய் கேன்சிவன்முத்த, ருண்மைநிலையினைப் பலவாறுணைந் திருந்து புணர்வடையா யொற்றிநகருற்றுயர்ந்த, வண்மைமிகுந்திரிபுரசுந்தரி பதத்தைவாழ்த்துவோமே லூழைத்தாழ்த்துவோமே. (கூ)

பவசலதிகடந்திடற் காம்புணையதாகப் பகலிரவு மறவாமலைந்தெழுத்தை, யிவளவுநாளுஞ் செபித்தா யில்லைவினையிலவுகாத் திடுங்கிள்ளையானுய்நெஞ்சே, குவலயமால்கொண்டின்னுநாள்கள் போக்கிக்குலைவதி லென் பயனொற்றியூரிலென்றுந், தவர்கடொழுந் திரிபுரசுந் தரிபதத்தைத்தாழ்குவோமேலினிகாம்வாழ்குவோமே. (கo)

திருவோற்றியூர்த்

திரிபுரசுந்தரிதோத்திரப்பாமுற்றிற்று.

---

ஆக புத்தகம்

உ

தேவிஸகாயம்.

சென்னைப்புரசையைச்சார்ந்த

[கோணத்தெருவென்று வழங்குகின்ற]

புதுப்பேட்டை

# முத்துமாரியம்மை

## தோத்திரம்.

புரசை-அஷ்டாவதானம்

## சபாபதிமுதலியாரவர்கள்

இயற்றியது.

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

33

உ

சிவமயம்.

# வியாசன் விபரீதம்.

---

வியாசோ நாராயணோஹரி என்றபடி ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே வியாசபகவானா ய் வந்தபடியால் மந்திரம் யெந்திரம் சந்தி யாவந்தனம் முதலானதும் அவர் வாக்கினா ல் வந்தபிரகாரம் இட்டதேபிச்சையென்று ஆயிரத்தெட்டண்டமும் ஆட்டிப்படைக் கிறது (இதுவுமன்றி) குருக்குநெடுக்காய்த் திருப்பிய வேதசாஸ்திர புராணமெல்லாம் அசைப்பாரில்லாமல் ஆச்சாவைரமாய்க் குந் திக்கொண்டது (வியாச விபரீதமென்றால்) அதிகமாய் விரித்துச் சொல்வதற்கு நாமெ ல்லாம் பெரியோரல்ல உலக மயக்கமெல் லாம் வியாசர் கட்டுப்பாடென்று சகலருக் குந் தெரிந்தவிஷயம்.

இதன் விலை அணா 4.

இப்படிக்கு
சிறுமணவூர்- முனிசாமி முதலியார்,
பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.



உ

தேவிஸகாயம்.

# முத்துமாரியம்மை தோத்திரம்.



காப்பு.

வெண்பா.

பூதலத் தோரேத்தும் புரசைப் புதுப்பேட்டை
மாதலத்தில் வாழ்முத்து மாரியம்மை—மீதுதமிழ்
ஓதத் துணைசெய்யு மும்பர்தொழுந் தந்திமுகன்
பாதத் துணைமனமே பற்று.

## நூல்.

அன்னையேநின்னிருபதாம்புயம்பணிபவர்க்கருள்சுரந்தரு
தினமுநல், லறிவும்பெருஞ்செல்வமும்புத்ரசம்பத்து மகமகிழவு
நண்ணுசுகமும், ஒன்னலர்தமைக்கடக்கும்வலனும் நிலைபெற்ற
வுலகத்தினீடுபுகழும், ஒங்குசுபமங்களமுமேன்மேலும் வாழ்நா
ளுமுறுதிதருவிரதபலனும், இன்னுமுளசித்தியெல்லாமிம்மை
யிற் பலித்திடுமெனப்பெரியநூல்கள், இயம்புமுறைபற்றிநின்
னைச்சரண்புக்கவிவ் வெளியனைக்காத்தல்வேண்டும், மன்னும
ணிமாடமாளிகைமருவுமுயர்புரசை வளர்புதுப்பேட்டைவாழ்
வே, வாரிநிலவலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியென
வருசத்தியே. (க)

என்றபிள்ளைக்கெவரிருப்பினு மிகுஞ்செல்வமேயிருந்திடினும்வண்மை, யெத்துணையுமுற்றிடினும்வண்மை மிக்குளதேனுமினிதாயளித்தருந்தாய், போன்றொருவர்பாதுகாத்தாலுந் தனக்கினியபுத்திரர்க்கவளலாது, பூமிதனில்வேறுபற்றுக்கோளுமேதோ புகன்றவத்தகைமையென்னச், சான்றநீயேயலகுயிர்க்கெலாந்தாயான தத்துவந்தனையறிகிலாத், தன்மையோர்க்கென்னபலனுண்டென்னதைத் தெளிந்தவரேசதாநந்தராம், வான்றவழ்மலர்ப்பொழில்வண்டுமுரலும்புரசைவளர்புதுப்பேட்டைவாழ்வே, வாரிகிலவலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியெனவருசத்தியே. (உ)

கற்பனையலங்காரமாக்கவிதைபாடவும் காசினியிலெவருமெச்சக், கற்றவர்குழாம்புகுந்திச்சையுறமெய்ப் பொருள்களைத்தெளித்திடவுமூட,வற்பரைப்பாடியுழலாதநற்செல்வத்தமைந்து வாழ்வுறநன்மை, யானபலதருமதானஞ்செயவு மேலோரையணுடிநன்னெறியுணரவும், பொற்புறவனைப்போற்றும்விற்பனமியைந்திடும் புனிதரல்லோபெற்றுளார், புவனஸம்ரக்ஷணியநந்தகுணகல்யாணி புங்கவசமூகதோத்திரி, மற்பெறுபுயத்தரசர்வாம்பரியுலாம்புரசை வளர்புதுப்பேட்டைவாழ்வே, வாரிகிலவலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியெனவருசத்தியே.

சிங்காரமவரவர்தமைப் புனைந்தேன்பயன்செய்கின்றதருமமுந்தந், தேடுபுகழுக்கிச்சைவைத்துப் புரிந்தென்னசெய் நன்றிகைம்மாறுசெய், சங்காதமுள்ளவர்க்குதவிஞலென்பயன் தம்முடற்கன்றியூர்க்குத், தன்சுவைப்பாலுண்டவாருகு மின்னடித்தாமரைக்கெனவியற்றில், இங்காதரித்துப்பெருந்துணையதா யிருந்தெந்நாளுமீடேற்றமால், இருடிகள்தமக்குளுயர்ஜமதக்னிமனைநின் றிசைந்தகற்புயாமுதமே, மங்காவளங்கொண்டசா

ரிச்சைகூர்புரசை வளர்புதுப்பேட்டைவாழ்வே, வாரிகிலவலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியெனவருசத்தியே. (ச)

உலகத்தினிற்பற்றொழிந்தநத்துவகிபதியுள் ளுணர்ந்தேறியோக, வுயர்கிலைகிடைத்துவாழ்ஞானிபெற்று நோயுறுகவலைமிடியிறப்பு, விலகப்பதிந்தநவநாதசித்தர்களுநின் மெய்யருள்பெறப்பணிந்து, வேண்டுவாரெனில்யாவருன் புகழ்க்களவுசொலும் விற்பனத்தினில்வல்லவர், சலசத்தினிறைகருணைநயனசுந்தரி விபவசங்கிராமகுலபாணி, ஜன்மாந்தகாரமறவருகலாநிதிமுகசுதந்தரிகிரந்தரியெழின், மலரிற்செறிந்தனமணம்புரிதடம்புரசை வளர்புதுப்பேட்டைவாழ்வே, வாரிகிலவலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியெனவருசத்தியே. (ரு)

உனதருள்கிடைத்தவர்பயத்திலுறக்கோட்படார் ஒன்னலாரடலுமனுகார், உறபிணிவயம்பெறார் பூதபைசாசவேதாளவிடைபூறற்றிடார், கனதந்திவியாக்ரகேசரிமுதற் சொல்லுமிருகங்களெதிர்கொள்ளப்படார், கட்செவிகளாதியவிடக்ருமிதொடக்குறார் கலியுமஞ்ஞானமுடன், தனதுசுட்டுறவுகொள்ளார் நாள்கள்கோளாதிதட்டுதடைசற்றுமடையார், தரணிகுலகிருபரிடியேறெனவரும் பரசுதாங்குகாதலன்மாதரி, மனதுகிலைபெறுமாதர்கற்பண்கொளும்புரசை வளர்புதுப்பேட்டைவாழ்வே, வாரிகிலவலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியெனவருசத்தியே. (சு)

தேவர்கள்நடுங்கயமபடரொடுங் கத்தருத்திருகிழலிருந்தரசியல், செய்யுமிந்திரன்மடங்கத்துவத்துறைமுனிவர் திசைதொறுமொளித்தடங்கப், பூவரசர்கிலைதளர்ந்தெய்த்துப்பதைத்திடப் பொங்குதானவர்கள்வீழ்ந்து, புல்லைக்கறித்திடப்பொதுமேருமுதலட்ட பூதரந்தலைகுலுங்கக், காவலற்றுத் திசைப்பா

லகர்மறைந்திடக் கடினவஞ்சகஅகோர, காளகூடம்போன்றெ
ழுந்தமகிடா சுரற்காய்ந்தநின்விஜயம்வாழி, மாவலரருந்துகுயில்
மாதர்குரல்பயில்புரசை வளர்புதுப்பேட்டைவாழ்வே, வாரிசில
வலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியெனவருசத்தியே.

கொண்டல்நிகர்வார்மலர்க்கூந்தலுந் திலகங்குலாவுநுதலு
ங்கருணைகூர், கோகனதநயனமுமணிக்குழைக்காது மூக்குத்தி
வயிரப்பணியுநல், வண்டளாவமென்முறுவல்பூத்தசெம்பவள வி
தழ்வாய்மலருமதிவதனமும், மங்களநெடுங்கண்டமுந்தொடித்
தோளுமின் வளையணிகராம்புயமுநீள், தண்டரளமணியலங்கா
ரதனமார்பமுஞ் சகமெலாந்தருதொந்தியும், தமனியப்பட்டா
டைசூழ்மருங்குந் திருத்தாண்மலருமிலகமுன்னி, மண்டலந்த
னிலுவந்துன் சேவையருள்புரசை வளர்புதுப்பேட்டைவாழ்
வே, வாரிசிலவலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியெனவ
ருசத்தியே. (அ)

உனையனுதினந்தோத்திரம்புரியவாய் சென்னியுனதுதாளி
ணைவணங்க, வுளமுனைச்சிந்திக்க அங்கையஞ்சலிசெய்ய வுன்சே
வைகண்கள்காணத், தினையளவுமோவாமல் நாவுனதநந்தமாந்
திருநாமமோதவுனது, சீர்ச்சரிதமிருசெவிகள்கேட்கமுன்னின்
றருள் செயற்குரியவண்மையெளிதோ, கனைகடற்புனலுண்ட
மழைமுகிற்கென்னகைம் மாறுலகுபுரியுமதுபோற், கருணைநீ
யேதாப்பெறுவதல்லால் வேறுகருதவுண்டோ வுரைசெயாய்,
வனைமணிப்பேழையென வளனெலாநிறைபுரசை வளர்புதுப்
பேட்டைவாழ்வே, வாரிசிலவலயத்துளோர்பணிய வருள்முத்
துமாரியெனவருசத்தியே. (க)

தந்திரபுராணவேதாகமகலா ஞானசாஸ்திரவிற்பனவி
சார, ஸம்பன்முனீந்திரசேவித அமிர்தகிரண சுகசசிவதசனம்பூ

ரணி, இந்திரஸுரபூஜிதஸரோஜராஜீவ சரணேஸ்வரிபவானி வாணி, யாமளைஅகோரிதாருகவயிரிபயிரவி யிடாகினிகணபூத, வந்திதமனோன்மணிவராகிமாதங்கிமாதரி கௌரியுக்ரவஸிம்ஹ, வாகனமகாதேவிநித்தியகல்யாணி நிர்வாணிசெங்கமலபாணி, மந்திரசொரூபகாரணிசரணம்வண்புரசை வளர்புதுப்பேட்டைவாழ்வே, வாரிநிலவலயத்துளோர்பணிய வருள்முத்துமாரியெனவருசத்தியே. (௰)

---

## முத்துமாரியம்மைகீர்த்தனை.

இராகம்-தோடி-தாளம்-ஆதி.

பல்லவி.

முத்துமாரியம்மை-பத்மமலர்ச்சர-ணத்தைப்பணிமனமே.

அநுபல்லவி.

நித்தருறைபுர—சைப் புதுப்பேட்டையில்
நீடியபதினலுலகிலும் நாடிடவருரேணுகையெனும்(முத்)

சரணங்கள்.

வெய்யகொடுவினையால் வருந்தாபமும்
வெஞ்சினமும் பொல்லா வஞ்சக பாபமும்
எய்யவரு மொன்னலார் கடுங் கோபமும்
ஏழ் பிறவிச் சோபமும்
ஒய்யென வேதுயர் செய்யா தொழிந்திடும்
உண்மைக்கினியேன் சொல்ல நன்மைத்துணையாய் நல்ல (மு)

சித்தத்தை விட்டகலாநெடுஞ் தீரமும்
சென்ற இடமெல்லாம்வென்றி கொள்வீரமும்

எய்த்து வந்தோர்க் குதவிச்செய்யு தாரமும்
இன்ப வித்தியா ஸாரமும்
வைத்த தனதானிய கனசம் பத்தும்
வாழ்நாள்மிகவுயர் பேறும் சூழ்பாரினில்மிதம் வீறும் (முத்)

கற்பு நிலகுலையா மங்கையர்க் கணி
கார்த்த வீரியன் குலத்-தோர்களைத் தாரணி
யிற்செயித்தே வெஞ்சினத்தை முன்னே தணி
வேற்ற சிகா மணி
நற்றவப்புத்திரனைப்பெற்றமனோன்மணி
நாரணி மங்களசுந்தரி பூரணி யுந்தரி சுந்தரி (முத்)

நந்தாத சந்திர வதன ஒய் யாரி
நாளும் சபாபதி யோ துமு தாரி
சிந்தா குலமெல்லாந் தீர்த்த ஓங் காரி
திவ்விய ஸுகு மாரி
அந்தணர்சூழ்புரசைப்புதுப்பேட்டையில்
அன்பர்கள்தொழவேமுன்னும் செந்திருவடிவாய்மன் னும் (முத்)

## வாழி வெண்பா.

வாழி பரசிராமன் வாழி யெவ்வுலகும்
வாழி சதுர்வேதா கமம்வாழி-வாழியன்பர்
பூவியக்கும் வண்மைப் புரசைப் புதுப்பேட்டைத்
தேவி முத்து மாரியம்மை சீர்.

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 86.

உ

தேவிசகாயம்.

இராமநாதபுரம்-அரண்மனையில்
வீற்றிருக்கும்

# இராசராசேசுவரிமீது
# கலிவிண்ணப்பமாலை.

புரசை-அஷ்டாவதானம்
சபாபதிமுதலியாரவர்கள் மாணாக்கர்
திருமயிலை-வித்துவான்
சண்முகம்பிள்ளையவர்கள்
இயற்றியது.

சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரவர்களது
சென்னை - சூளை,
சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

திருச்சிற்றம்பலம்.

# இராசராசேசுவரிமாலை.

காப்பு-நேரிசைவெண்பா.

காவை பலவுடைத்தாக் காசினியெ லாந்துதிக்குந்
தேவை யிராசரா சேசுவரிமேற்—பாவை
தொடுக்க வருள்புரியுந் தூயமதமே
விடுக்குமோ ரத்தி விரைந்து.

## நாலடித்தரவுக் கொச்சகக்கலிப்பா.

சீர்பூத்தமுக்கட்சிவபெருமானுள்ளமகிழ்
கார்பூத்தகூந்தற்கடவுட்பிடியேநின்
தார்பூத்தசேவடியைத்தாழவருள்செய்யம்மே
ஏர்பூத்ததேவையிராசராசேசுவரியே. (1)

மண்பூத்தசெல்வமதியேனிறைவனுளக்
கண்பூத்தமுக்கட்கனியேகனிரசமே
ஒண்பூத்தநின்சேவடிக்கன்புஞற்றவனே
எண்பூத்ததேவையிராசராசேசுவரியே. (2)

வானோர்பரவுமணிவிளக்கேயானந்தத்
தேனேதெவிட்டாச்செழுங்கனியேசெம்பாகே
யானேதரவின்றியிங்குனடியேத்திநிற்ப
ஏனேவிரங்காயிராசராசேசுவரியே. (3)

பாடவறியேன்படிக்கறியேனின்புகழை
நாடவறியேனலிகின்றேனின்கோயில்
தேடவறியேன்றிருவஞ்செழுத்திங்ஙன்
ஏடவறிகென்னுயிராசராசேசுவரியே. (4)

மெய்வைத்தகாழிவிரகனழவுட்குழைந்து
சைவத்தனிஞானந்தனையருத்தும்பொக்கிஷமே
உய்வைத்தருகென்றுனையடைந்துநின்றக்கால்
எய்வகற்றெருணுதோவிராசராசேசுவரியே. (5)

பெற்றாகந்தான்பாகம் பிரியாப்பெருவாழ்வே
கற்றவர்களுடமெருட்கற்பகமேயென்றுநிதம்
பற்றுவார்பற்றும்பழம்பொருளேநின்றிருத்தாள்
எற்றடைவதம்மாவிராசராசேசுவரியே. (6)

கோதுபதியாதுகுவலயங்கைக்கொண்டாள்பூ
மாதுபதிபாற்கரசுவாமிமகிபாலபதி
சேதுபதிசிந்தித்தயாவையுமேசித்திக்க
ஈதொர்வரந்தாவிராசராசேசுவரியே. (7)

சேவையுகைக்குமுக்கட்செல்வனெடுவெங்கொடுஞ்சூர்
மாவைவகிர்ந்தவடிவேலனோடானிவர்ந்து
தேவைநகர்புரக்குந்தேவிவரக்காண்பேனோ
ஏவைவிழியாயிராசராசேசுவரியே. (8)

பொன்னாருமன்றின்வயிற்போதாந்தமாநடனம்
பன்னாளுமாற்றும்பரம்பரனுள்ளத்தமரும்
அன்னாநின்றாளையனவரதநின்றேத்த
எந்நாளருள்வாயிராசராசேசுவரியே. (9)

மாதர்விழிக்கயலான்மாழாந்துநெஞ்சழிந்து
போதுகழிக்கும்புலையேற்கினிதிரங்கிக்
கோதுபடாதகுணசாகரமேயென்
ஏதமகற்றாயிராசராசேசுவரியே. (10)

சேமநிதியேதிரைக்கடல்வாய்நஞ்சயின்றோன்
வாமமருவுமணிவிளக்கேயென்றன்றன்
நாமம்பரவுநலமருளிச்செய்வாயோ
ஏமவணையேயிராசராசேசுவரியே. (11)

குன்றோர்சிலையாக்கைக்கொண்டான்றிருத்தில்லை
மன்றாடுவானுண்மகிழும்பணையேநீ
அன்றேலெனக்கிங்கருளுநராரம்மாநான்
என்றேதானுய்கேனிராசராசேசுவரியே. (12)

திங்கள் புனைந்தான் றிருவுளத் துவைத்தெழுதும்
செங்கட்கரும்பொற்சித்தாந்தசைவநெறி
எங்குமேயோங்கவிவணைற்றும்விளக்கேயென்ன
இங்கஞ்சலென்னுயிராசராசேசுவரியே. (1?)

ஒவ்வாததென்னுமுலகமொழியோராமே
அவ்வாறுமீதும்மலைநீவாமமிற்பச்
செவ்வானமேனிச்சிவபெருமானில்லிரந்த
தெவ்வாறுகண்டாயிராசராசேசுவரியே. (?4)

பொங்கோதமேனிப்புயல்வண்ணன்காண்பரிய
சங்கோலிடுங்கைத்தமனியமேநின்னடியார்
தங்கோலமென்னுஞ்சநிரளிக்கவேண்டுமென்பேற்
கிங்கேயருள்காணிராசராசேசுவரியே. (15)

கள்ளநயனத்தார்தங்காதல்வழிப்பட்டொழுகும்
உள்ளமுடையேனுன தருளைமேவுவனோ
வெள்ளைவிடையான்விரிசடையான்றன்வாமத்
தெள்ளளவுநீங்காவிராசராசேசுவரியே. (16)

வன்னிகருங்கொங்கைமடவார்முபக்கதனிற்
சின்னஞ்சிறியேன்சிதறுண்டுநிற்கின்றேன்
இன்னலுழக்கண்டிங்கிரங்காதிருப்பதுவும்
இன்னமுதேசால்போவிராசராசேசுவரியே. (17)

பூப்பிட்டமாயோன்புணர்வரியாப்புண்ணியன்முன்
மாப்பிட்டுவெந்திமகிழ்ந்துதவக்கையேற்றுச்
சாப்பிட்டானென்பர்நின்றனைப்பிரியானன்னனுக்
கேற்பட்டதிதென்னிராசராசேசுவரியே. (18)

வானிரங்குஞ்சூர்தடிந்தவள்ளலுக்குவேல்கொடுத்த
மானிரங்குங்கண்ணயுன்வண்டமிழ்ச்சீர்யானறைத்
தேனிரங்கும்பூஞ்சோலைத்தேவைநகர்மேவியநீ
ஏனிரங்காயம்மாவிராசராசேசுவரியே. (19)

கல்லனையுநெஞ்சக்கயவனேனின்காட்சி [ன்
மல்லனையுந்தேவைநகர்வந்துகண்டுதெண்டனிட்டெ
அல்லல்தவிர்கென்றறைந்திடவும்வன்மொழியால்
இல்லையென்றுஞ்சொல்லாயிராசராசேசுவரியே. (20)

பொன்னேகருணைப்புயலேசிவஞான
மின்னேயொருநான்குவேதம்பயனேயிங்
குன்னாதரவன்றியுற்றதுணையில்லையினி
என்னேயுரைப்பதிராசராசேசுவரியே. (21)

தேன்படும்பூஞ்சோலைத்தேவைநகர்மேவியநீ
யான்படும்பாடெல்லாமிதயத்தறிந்திருந்தும்
மான்படுங்கணம்மேமகிழ்விளைருவாசகத்தான்
ஏன்படுவதென்னுயிராசராசேசுவரியே. (22)

தன்னேப்பாரில்லாத்தமனியமேசேதுபதி
பொன்னைப்பாநன்னெஞ்சப்பூங்கோயின்மேவியநீ
மின்னைப்பாம்வேணிவிமலனைடுமின்றெளிவந்
தென்னப்பாவென்னயிராசராசேசுவரியே. (23)

கல்லேனுஞ்சற்றேகனியுமென்னிலின்றனெஞ்சக்
கல்லோசிறிதுங்கனிந்துருகக்காணேனே
நல்லாயதுநீநகமுதவுங்காரணமோ
எல்லாமுடையாயிராசராசேசுவரியே. (24)

கங்கைமதியங்கரந்தசடைக்கட்டழகன்
செங்கைபிடித்தவருட்செல்வமேநின்னைமனப்
பங்கயத்தில்வைத்துப்பரிவினிதமர்ச்சிக்க
இங்கொர்வரந்தாவிராசராசேசுவரியே. (25)

அஞ்செழுத்தின்மும்மைப்பொருளுணர்த்தியாண்டரு
நெஞ்சிரங்காதேனேகமாகமம்பரவும் [ள
வஞ்சியபிராமிவயங்குமெழிற்றேவைநகர்
எஞ்சகிலாதோக்குமிராசராசேசுவரியே. (26)

அன்புபொறையேயவாவறுத்தன்முன்னய
துன்பகற்றுமாமலர்நின்றாணையடிக்குச்சாத்துவனே
நன்பவளமேனிநம்பன்மகிழ்தேவைநகர்
இன்பவுருவேயிராசராசேசுவரியே. (27)

தாயிற்பரிவாமெஞ்சங்கரனுமன்பனைமின்
சேயைக்கறிசமைத்துத்தாவென்னுந்தெய்வமொழி
நாயிற்கடையேனுண்ணுடுதொறுநெஞ்சயர்வேன்
ஏயற்புதமீதிராசராசேசுவரியே. (28)

நீலக்கண்மாதரார்நேயவலைப்பட்டமுந்தும்
சாலக்கொடியேன்றனையாண்டருளம்மே
கோலக்குறத்திகொழுநன்றனைநல்கும்
ஏலக்குழலாயிராசராசேசுவரியே. (29)

என்றனம்வற்பாற்கரசாமியேந்தனுக்கு
நன்றுதவியென்றனவிவகற்றியாள்வாயோ
தென்றமிழ்நாடேத்துமெழிற்றேவைநகர்மேவியநீ
என்றென்றும்வாழியிராசராசேசுவரியே. (30)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.
ஸ்ரீசிவஞானயோகிகள்சேவடிவாழ்க.

---

ஆக புத்தகம் 87.

உ

சிவமயம்.

---

# திருவொற்றியூர்

# வடிவுடையம்மை

## ஆசிரியவிருத்தம்.




இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.

# புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் | 4 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| சாதாரணபாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட்டு ஆக்ட்டு | 3 | 0 | 0 |
| கிராமமுன்சிப்கோட்போதினி | 3 | 0 | 0 |
| இந்துலா | 4 | 0 | 0 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| வேதாந்தஜட்ஜிமெண்டு | 1 | 0 | 0 |
| கண்கட்டுவித்தை (இரண்டுபாகமும்) | 0 | 10 | 0 |
| போலீசுஆக்ட்டு | 0 | 4 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| நாரதர்கலகம் முதற்பாகம் | 0 | 6 | 0 |
| நாரதர்கலகம் இரண்டாப்பாகம் | 0 | 4 | 0 |
| வியாசர் விபரீதம் | 0 | 4 | 0 |

இப்படிக்கு

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்,

பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.



உ

அம்பாள் துணை.

# வடிவுடையம்மை

## ஆசிரியவிருத்தம்.

சுந்தரிசவுந்தரி நிரந்தரி துரந்தரி சோதியாய்நின்
றவுமையே, சுக்கிரவாரப்பெருமையுங் கண்டுனதுசே
ர்வையுஞ்சொல்லவுமெளிதாகுமோ, சந்நிதியாகியே
செந்தமிழ்ப் புராணியென் சலிப்பெலா மாற்றியருள்
வாய், சற்குணிமெற்குணி நிற்குணிசதுர்வேதசமயமு
ம்மாரிநீயே, சிந்தைமிகநொந்துயான் வந்தகுறையுந்த
ன்முன்செப்பவுங்கேட்கவில்லையோ, சேய்பெற்றதில்லை
யோ நீதியுணர்வில்லையோ செகமெலாம்பெற்றதாயே,
தந்திரமுகுந்தனிட தங்கைசிவமங்கையே தரணிபுக
ழொற்றியூர்வாழ், தங்கமலர்நாதர்சடைகங்கையுருவா
னகொடி திங்களொளிவானவடிவே. (க)

மண்டலந்தன்னிலேகண் கண்டதெய்வம்நீமற்று
மொருதெய்வமுண்டோ, மந்திரப்பேய்களுந்தந்திரச்
சூனியமும் மற்றுஞ்சத்ராதிபகையும், கண்டுனது பாத
மலர்நின்றுதுதிசெய்திட கலங்கிப்பறந்தோடுமே, கன்
மமும்பிணிகளும் வன்மமில்லாமலே கண்டவுடன்

தெண்டனிடுமே, இன்றுமுதலாய்வந்த பண்டுபழிபா வமு மினிமேல்வரும் வினைகளும், எந்தன்மேல்கணக் காகசிந்தையினினைக்கா மலியமனனுகாமலருள்வாய், தண்டுளபமாலையணி மார்பனிட தங்கையே தரணிபுக ழொற்றியூர்வாழ், தங்கமலர்நாதர்சடை கங்கையுருவா னகொடி திங்களொளிவானவடிவே. (௨)

பாரெலாந்துதிபெற்ற பாதவிரல்மோதிரம் பாட கந்தண்டைகொலுசும், பதித்தவிடைமீதினிலணிந்தப ட்டாடையும் பசும்பொன்னொட்டியாணமும் வார ணியுமார்பினில் சரப்பளிபதக்கமும் வச்சிரமணிதாலி யழகும், வையகந்துதிபெற்றகையினிற் கடகமும் வர்ண நிறமானகிளியும், சீரொழுகுகாதினிற் கம்மலுந் தோடுகொப்புஞ் செகமெலாநிறைந்தவுருவுஞ், சித்ர வொளிபார்வையு மிரத்தினமூக்குத்தியுஞ் செண்பக முடித்தகுழையும், தாரணியிலுன்பெருமைசாற்றவெ ளிதாகுமோ தரணிபுகழொற்றியூர்வாழ், திங்கமலர்நா தர்சடை கங்கையுருவானகொடி திங்களொளி வான வடிவே. (௩)

தாயருவயிற்றிலே மாயமாய்தரித்துநான் றங்கி னேனங்குசிலநாள், தரணியில் விழுந்தபின் புழுதியி ல்புரண்டுந் தவிழ்ந்தடி நடந்துசிலநாள், காயமும் வ ளர்ந்திந்த பாரினிலுழன் றுமிக காளையாய்திரிந்துசில நாள், காமனூல்வதங்கியேயூமைபோல்மயங்கிக்கருத்த

துவழிந்துசிலநாள், மாய்கையாலேலோகவாழ்க்கைத
னை மெய்யென்று மயங்குதென்மனதிலம்மா, மாறாத
பிறவிதுய ராறுலெடுக்கதர மைந்தன் சுமக்கவசமோ,
தாயென்று உன்னைநான்நம்பினேனருள்புரிவைதரணி
புகழொற்றியூர்வாழ், தங்கமலர்நாதர்சடை கங்கையு
ருவானகொடி திங்களொளிவானவடியே. (சு)

நற்வசயலிலாதவுட லச்சைபாடானசுசம் நற்கு
ணமிலாதகுறைகள், நான்முகனெனும்பாதகன்செய்
கபடமோநன்னலப்பெரியர்செய்ததவமோ, சற்சனர்
களில்லாத சபையினைப்போலவே தயங்கிமிகவே யிளை
த்தேன், தாயேயுன்னாதரவுயேழைநான்செய்தபிழை
தாயலாதார்பொருப்பார், அர்ச்சனைகள்செய்துதொழு
மிச்சையடியாரினு மாதரத்தொடுபுரப்பாய், அன்னையு
னையல்லாது பின்னைவேறில்லையே ரணுநாட்சகியல்ல
வோ, தற்சொரூபமாயிலகுமச்சுதன்றங்கையேதரணி
புகழொற்றியூர்வாழ், தங்கமலர்நாதர்சடை கங்கையு
ருவானகொடி திங்களொளிவானவடிவே. (ரு)

நில்லாதசமுசார மாய்கையெனைவந்துதானித்த
மும்வாதிக்குதே, நெஞ்சமதுபஞ்சைபோ லஞ்சுதே
சஞ்சலம் நினைவிலேபெரிதாகுமோ, நல்லோரையென்
னுமல் பொல்லாச்சினத்தினல் நடுங்கிடப்பேசவரு
தே, நாவிலுன்புகழையேதியானிக்கவொட்டாமல் நன்
னினைவைமாற்றிவிடுதே, கல்லாதபுல்லரிடம் வல்லாண்

மைபேசியே காலனுக்குள்ளாகுதே, கள்ளமனதான விதை நல்லமனதாகிடக் கருணைகடாக்ஷம் வைத்து, தள்ளிபென்வறுமைபிணி நல்லசெல்வங்களருள் தரணிபுக ழொற்றியூர்வாழ், தங்கமலர்நாதர்சடை கங்கையுருவானகொடி திங்களொளிவானவடிவே. (௬)

பெற்றதாய்தந்தையும் பிறவியுமிருந்தென்ன பிள்ளைபெண்சாதியென்றும், பிரியமாய்மனிதர்க்கு ளுறவாயிருந்தென்ன பிராணனுக்குதவியுண்டோ, நித்தனுரிடமாக முத்திதரவேயொளிரு நீலியம்பிகைத்திரிசூலி, நீங்கவொட்டாமலே தேங்குமுளமலநீக்கிநிலையானபதவியருள்வாய், மெத்தவேநொந்துனது சிற்றடியைநம்பினேன் மிகமவுனமாயிராதே, மேதினியிலுன்னைவிட வேறுமொருதெய்வங்கள் மெய்யானதெய்வமுண்டோ, தத்திமித்தாளமொடுவருமலர் தியாகர்மகிழ் தரணிபுக ழொற்றியூர்வாழ், தங்கமலர் நாதர்சடை கங்கையுரு வானகொடி திங்களொளி வானவடிவே. (௭)

ஓயாதகவலையுந் தீராதவறுமையு மொழியாதவன்பிணிகளும், உலகெலாம்பகைகளு மளவிலாசன்மமும் ஒருவராற் சொல்லவசமோ, பேயாகநானிந்தபிடையிற்சிக்கியே பிதற்றவும்பூமிதனிலே, பெண்களொடுமாய்கையா லங்கமதுவாடியே பிரமையால்மெய்தளர்ந்தேன், தாயென்றுவலரியழ வேனென்றுகேட்கி

லாய் தருமமோவுந்தனுக்குத், தஞ்சமென் றுன்பாத
நெஞ்சினினினைந்தோர்கள் தளர்வரோதரணிதனிலே,
தாயேதுவர்மமோ மாயனதுதங்கையேதரணிபுகழொ
ற்றியூர்வாழ், தங்கமலர்நாதர்சடை கங்கையுருவான
கொடி திங்களொளிவானவடிவே. (அ)

எத்தனைத்துயரமென் றியம்புவேனம்ம்மவெ
ளியேன்செய் கொடுமையேதோ, இக்காயமிச்செல்வ
நிலையென்று நம்பியே யிப்படி யெலாந் தளர்ந்தேன்.
பெற்றதாய்நீயென்று முறையிட்டுவலரிடப் பேசாதி
ருப்பதேனோ, பேச்சியென்றேற்குதவில் தாட்சியோஅ
ம்மணி பிள்ளைமேற் கோபமேதோ, அத்திமுகனைப்
பெற்ற நித்தியகல்யாணியே யமரர்தொழு சர்வாணி
யே, அறியாதசிறுவன்மே லினியாகினுளமகிழ்ந் தன்
புவைத்தருள் புரிகுவாய், தத்துமயில்வாகனனை பெற்
றகௌமாரியே தரணிபுகழொற்றியூர்வாழ், தங்கமல
ர்நாதர்சடை கங்கையுருவானகொடி திங்களொளிவா
னவடிவே. (கூ)

படிக்கவறியேனுனைத் துதிக்கவறியேனென்ன
பாதகத்தின்கொடுமையோ, பாட்டுமறியேன்கவிதை
கேட்டுமறியேன்மிக்க பாவலர்கணேசமறியேன், நடுங்
கிடக்குருவடி வணங்கவறியேன்சடில நாதனடிபூசை
யறியேன், நான்மனிதனுருவாகி பூமியிற்சன்மித்து
நலமானசெலவுமறியேன், கடல்சூழுமிவ்வுலகி லென்

போதுமுடனேக் கண்டதுண்டோவருளுவாய், காமாக்ஷியுந்தனிட பாதமே நம்பினேன் கன்மவினை யணுகாமலே, தடுத்தடிமை கொண்டெனைக் கடைத்தேறவேயருளி ।தரணிபுக ழொற்றியூர்வாழ், தங்கமலர்நாதர்சடை கங்கையுருவானகொடி திங்களொளி வானவடிவே. (௧0)

மண்ணினிலிருக்களவு "மின்றுமுதலாக விம்மனுவொன்றுகேட்பதடியேன், மாறுதசெல்வமுந்தேறுதகல்வியு மனுநிதிஞானவழியுங், கண்ணிலிருணுடாமல் காயமிகவாடாமல் கைகால்கணோகாமலே, காலனுக்கஞ்சாமல் கலியேனுமிஞ்சாமல் காதுசினம்வாராமலே, பண்ணவேதருமமு மினியவுபகாரமும் பசித்தபேர்க்கமுதுதரவும், பாருலகி லுந்தனிட பாதத்தைநம்பினேன்பட்சமாரக்ஷியம்மா, தண்ணிதழிமாலையணிதற்பரற்கமுதமே தரணிபுகழொற்றியூர்வாழ், தங்கமலர்நாதர்சடை கங்கையுருவானகொடி திங்களொளிவானவடிவே. (௧௧)

வடிவுடையம்மை ஆசிரியவிருத்தம்
முற்றிற்று.

---

ஆக புத்தகம் 88.

உ

அம்பாள் துணை.

# காஞ்சிபுரம்
# காமாட்சியம்மை
## ஆசிரியவிருத்தம்.



இஃது
சிறமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

---

1908.



உ

அம்பாள் துணை.

# காஞ்சீபுரம்

# காமாட்சியம்மை

## ஆசிரியவிருத்தம்.



காப்பு-பின்முடுகு-வெண்பா.

மங்களஞ்சேர்கச்சிநகர் மன்னுகாமாட்சிமிசைத்
துங்கமுளநற்பதிகஞ் சொல்லவே—திங்கட்
பயமருவும்பணியணியும் பரமனுளந்தனின்மகிழுங்
கயமுகவைங்கரனிருதாள் காப்பு.

ஆசிரியவிருத்தம்.

சுந்தரிசவுந்தரி நிரந்தரிதுரந்தரி சோதியாய் நின்ற
வுமையே, சுக்கிரவாரத்திலுனை கண்டுதெரிசித்தவர்க
டுன்பத்தைநீக்கிவிடுவாய், சிந்தைதனிலுன்பதந் தன்
னையேதொழுதவர்க டியரத்தைமாற்றிவிடுவாய், செக
மெலாமுன்மாய்கை புகழவென்னலாமோ சிறியனால்
முடிந்திடாது, சொந்தவுன்மைந்தனெந்தனையிரட்சி
க்கச் சிறியகடனுன்னதம்மா, சிவசிவமயேஸ்வரி பரம

ணிடயிஸ்வரிசிரோன்மணி மனோன்மணியுநீ, அந்தரி துரந்தரி நிரந்தரிபரம்பரி யனுதாரட்சகியுநீயே, அழகானகாஞ்சியில் புகழாகவாழ்ந்திடு மம்மைகாமாட்சியுமையே. (க)

பத்துவிரல்மோதிரம் எத்தனைப்பிரகாசமது பாடகந்தண்டைகொலுசும், பச்சைவைடூரிய மிச்சையாயிழைத்திட்ட பாதச்சிலம்பினொளியும் முத்துமூக்குத்தியும் ரத்தினப்பதக்கமும்மோகனமாலையழகும், முழுதும்வைடூரியம் புட்பராகத்தினால் முடிந்திட்டதாலியழகும், சுத்தமாயிருக்கின்ற காதினிற்கம்மலுஞ்செங்கையிற்பொன்கங்கணம், செகமெலாம்விலைபெற்றமுகமெலாவொளியுற்ற சிறுகாதுகொப்பினழகும், அத்திவரதன்தங்கை சத்திசிவரூபத்தை யடியனாற்சொல்லதிறமோ, அழகானகாஞ்சியில் புகழாகவாழ்ந்திடு மம்மைகாமாட்சியுமையே. (உ)

கெதியாகவுந்தனைக் கொண்டாடிநின்றென் குறைகளைச்சொல்லிநின்றும், கொடுமைபாயென்மீதில் வறுமையைவைத்துநீ குழப்பமாயிருப்பதேனோ, சதிகாரியென்றுநா னறியாமலுந்தனைச் சதமாகநம்பினேனே, சற்றாகிலும்மனது வைத்தென்னைரட்சிக்க சாத

கமுனக்கில்லையோ, மதிபோலவொளியுற்ற புழைநெடுங்கரமுடைய மதகஜனையீன்றதாயே, மாயனிடதங்கையே பரமனதுமங்கையே மயானத்தில்நின்றவுமையே, அதிகாரியென்றுநா ஞசையாய்நம்பினே னன்புவைத்தென்னையாள்வாய், அழகானகாஞ்கியில் புகழாகவாழ்ந்திடு மம்மைகாமாட்சியுமையே. (௬)

பூமியிற் பிள்ளையாய்ப் பிறந்ததும் வளர்ந்துநான் போனஸ்தலமுமறியேன், பெரியோர்கடெரிசனமொருநாளுநான்கண்டு போற்றிகொண் டாடியறியேன், வாமியென்றுன்னைசிவ காமியென்றேசொல்லி வாயினாற்பாடியறியேன், மாதாபிதாவினிட பாதத்தைநானுமே வணங்கியொருநாளுமறியேன், சாமியென்றேயெண்ணி சதுருடன்கைகூப்பி சரணங்கள் பண்ணியறியேன், சற்குருவின்பாதார விந்தங்களைக்கண்டு சாஷ்டாங்கதெண்டனறியேன், ஆமிந்தபூமியிலடியனைப் போல்மூட ரையச்சிநீகண்டதுண்டோ, அழகானகாஞ்சியில்புகழாகவாழ்ந்திடு மம்மைகாமாட்சியுமையே.

பெற்றதாயென்றுன்னை மெத்தவுநம்பினேன் பிரியமாயிருந்தேனம்மா, பித்தலாட்டக்காரியென்றுநானறியாதுன்புருஷனைமறந்தேனம்மா, பத்தனையிருந்துமு

ன்சித்தமு மிரங்காமல் பராமுகம் பார்த்திருந்தால், பாலனெனெப்படிவிசனமில்லாமலே பாங்குடனிருப்ப தம்மா, இத்தனைமோசங்களாகாது ஆகாது இதுதர்ம மல்லவம்மா, எந்தனைரக்ஷிக்கசிந்தனைகளில்லையே யிது நீதியல்லவம்மா, அத்திமுகனுனைசையோ யிப்புத்திரனை மறந்ததை யெனக்கருள்புரிகுவாய்நீ, அழகானகாஞ் சியில் புகழாகவாழ்ந்திடு மம்மைகாமாட்சியுமையே.

மாயவன்றன்றங்கைநீமரகதவல்லிநீ மணிமந்திரகாரி நீயே, மாயாசொரூபிநீ மகேஸ்வரியுமானநீ மலையரை யன்மகளானநீ, தாயேமீனாட்சிநீ சற்குணவல்லிநீ தயா நிதி விசாலாட்சிநீ, தாரணியில்பெயர்பெற்றபெரியநா யகியும்நீ சரவணனையீன்றவளும்நீ, பேய்களுடனடிநீ அத்தனிடபாகமதை பேர்பெறவளர்த்தவளும்நீ, பிர ணவசொரூபிநீ பிரசன்னவல்லிநீ பிரியவுண்ணாமுலையு நீ, ஆயிமகமாயிநீ ஆனந்தவல்லிநீ அகிலாண்டவல்லி நீயே, அழகானகாஞ்சியில் புகழாகவாழ்ந்திடும் மம் மைகாமாட்சியுமையே.　(௯)

பொல்லாதபிள்ளையாயிருந்தாலும் பெற்றதாய்புத் திகளைச்சொல்லவில்லையோ, பேய்பிள்ளையானாலும்நீ பெ ற்றபிள்ளையாய்ப் பிரியமாய்வளர்க்கவில்லையோ, கல்லாகி லும்மூச்சு நில்லாமல்வாய்விடுங் கதறினனமூ,தகூராலில்,

கடுகதனிலெட்டிலொரு கூறவதிலாகிலுங் காதினினு
மைந்ததில்லையோ, இல்லாதவன்மங்க ளென்மீதிலேன
ம்மா யினிவிடுவதில்லைசும்மா, இருவருமடிபிடியாய்த்
தெருவினில்வீழ்வதுமிது தருமமல்லவம்மா, அல்லாரு
முன்னையே சொல்லியேயேசுவா ரதுநீதியல்லவம்மா,
அழகானகாஞ்சியில் புகழாகவாழ்ந்திடு மம்மைகா
மாட்சியுமையே. (எ)

முன்னையோர்சென்மாந்திரமென்னபாவங்கள் மூட
னுன்செய்தெனம்மா, மெய்யென்றுபொய்சொல்லிக்
கைதனிற்பொருள்தட்டி மோசங்கள்பண்ணினேனோ,
என்னமோதெரியாது விட்சணந்தன்னிலே யிக்கட்டு
வந்ததம்மா, ஏழைநான் செய்தபிழை தாய்பொறுத்
தருடந்துமென்கவலை தீருமம்மா, சின்னங்களாகாது
செயமில்லையோதாயே சிறுநாணமாகுதம்மா, சிந்தனை
களென்மீதில்வைத்து நற்பாக்கியமருள் சிவசத்திகா
மாட்சிநீ, அன்னவாகனமேறி யானந்தமாகவுன் னடி
யன்முன்வந்துநிற்பாய், அழகானகாஞ்சியில் புகழாக
வாழ்ந்திடு மம்மைகாமாட்சியுமையே. (அ)

என்னைப்போலவே சென்மமெடுத்தோர்களிப்புவியி
லின்பமாய்வாழ்ந்திருக்க, யான்செய்தபாவமோ வித்த

னைவறுமையிலுன்னடியேன்தவிப்பதம்மா, உன்னையே
துணையென்றுறுதியாய்நம்பினே னுன்பாதஞ்சாட்சியா
க, உனையன்றிவேறுதுணையினியாரையுங்காணே னுலக
தனிலெந்தனுக்குப், 'பின்னையொன்றெண்ணிநீசொல்
ஈல்டலென்றயரம் போக்கடித்தென்னைரட்சி, பூலோக
மெச்சவேபாலன்மார்க்கண்டன்போல்பிரியமாய்க்கார்
த்திடம்மா, அன்னையேயின்னமுன்னடியேனைரட்சிக்க
வட்டிசெய்யாதேயம்மா, அழகானகாஞ்சியில்புகழாக
வாழ்ந்திடு மம்மைகாமாட்சியுமையே. (௯)

பாரதனிலுள்ளளவும் பாக்கியத்தோடென்னை பாங்
குடனிரட்சியம்மா, பத்தியாயுன்பாதம் நித்தந்தெரிசி
த்தவர் பாலருக்கருள்புரியவும், சீர்பெற்றதேகத்தில்
சிறுபிணிகள்வாராமல் செங்கலியையணுகாமலும், சே
யனிடபாக்கியஞ் செல்வங்களைத்தந்து செயம்பெற்று
வாழ்ந்துவரவும், பேர்பெற்றகாலனைப் பின்றொடர
வொட்டாமற் பிரியமாய்க்கார்த்திடம்மா,பிரியமாயுன்
மீதில் சிறியனுன்சொன்னகவி பிழைகளைப்பொருத்து
ரட்சி, ஆரதனின்மணல்குவித் தரும்பூசைசெய்தவென்
னம்மையேகாம்பரியே, அழகானகாஞ்சியில் புகழாக
வாழ்ந்திடு மம்மைகாமாட்சியுமையே. (௧௦)

எத்தனைசனனம தெடுத்தனோதெரியாது விப்பூமி தனிலெனம்மா, இனியாகிலுங்கிருபைவைத்தெனோரட் சியுமினிசெனனமெடுத்திடாமல், முத்திதரவேணுமெ ன்றுன்னையேதொழுதுநான்முக்காலும் நம்பினேனே, முன்பின்னுந்தோணும மனிதரைப்போலநீ முழித்தி ருக்காதேயம்மா, வெற்றிபெறநின்மீதில் பத்தியாய் நான்சொன்னவிருத்தங்கள் பதினொன்றையும், விருப் பமாய்கேட்டநீ யளித்திடுஞ்செல்வத்தை விமலனாரே சப்போரூர், அத்தனிடபாகமதை விட்டுவந்தேயென் னருங்குறையைத்தீருமம்மா, அழகானகாஞ்சியில் புக ழாகவாழ்ந்திடும் மம்மைகாமாட்சியுமையே. (௧௧)

காமாட்சியம்மை - ஆசிரியவிருத்தம்

முற்றிற்று.



ஆக புத்தகம் 89

உ

வேதவிநாயகர் துணை.

# மதுரை

# மீனாட்சியம்மை பதிகம்.




சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரவர்களது

சென்னை - சூளை,

சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1908.

35



உ

சிவமயம்.

மதுரை

# மீனாட்சியம்மை பதிகம்.



நேரிசை-வெண்பா.

பொற்பாரமண்டபஞ்சூழ் பொற்றாமரைக்கரைவாழ்
கற்பகநேர்சித்திக்கணபதியே—விற்பனஞ்சேர்
அற்புதநம்மீனாட்சி யம்மை தனக்கின்பமுற
நற்பதிகம்பாடவர நல்கு.

எழுசீர்க்கழிநெடிலடி இரட்டை
யாசிரிய-விருத்தம்.

பூமின்வளரீரேழு பதினாலுபுவனமும்
போற்றியே தொழுதுபணியும்
பொன்னளினபாதமுங் கனிவாயும்வதனமும்
பொற்பு நயனப்பார்வையும்
சாமிகணபதிதனைப் பெற்றசுவையமுதமரு
டன்னிய விசாலவடிவுந்
தவராஜர்புவிராஜர் கவிராஜர்பேரினிற்
றயவுசே ரபையாஸ்தமும்

நேமிமாநிறமுற்ற மரகதசொரூபமும்
 நிறைவுடன் பிரசன்னமாய்
நேசம்வைத்தெந்தன்முன் றேன்றுசௌபாக்கியமீ
 நித்தியகல்யாணி யுமையே
வாமிமதன்மாமிசிவ காமியபிராமியுன்
 மைந்தனு மெனையாளுவாய்
மதுவமிர்தகாமாட்சி பதிவிர்தைவிசாலாட்சி
 மதுரைநகர் மீனாட்சியே. (க)

மாலைசந்த்ராரஞ் சரப்பளிபதக்கம்வை
 டூரியநாதற் சுட்டியும்
மௌலிமணிமகுடம் புலாக்குமூக்குத்திதிரு
 மங்கிலியமுஞ் சிமிக்கி
ஓலைநவமணிவிசிறி முருகுபட்டங்காறை
 யுயர்கங்கணமு மோதிரம்
ஒட்டியாணமெட்டு பாடகந்தண்டைகொலு
 சொலிகிண்கிணிச் சரிகையாற்
சேலைரவிக்கை மணிந்துசெங்குங்குமத்
 திலதமிட்டு விசித்ரமாய்ச்
செகஜோதியாகச் சொலிக்கச்சிறப்புற்ற
 திவ்யகுண சிந்தாமணி
வாலையனுகூலிதிரி சூலிகிருபாலியுன்
 மைந்தனு மெனையாளுவாய்
மதுவமிர்தகாமாட்சி பதிவிர்தைவிசாலாட்சி
 மதுரைநகர் மீனாட்சியே. (உ)

பாடலபிநயகீத தேவதாசிகள்வந்து
பாதநடனம் புரிவதும்
பதினெட்டுவாத்திய முழக்கமும்வருடமோர்
பனிரண்டு திருவிழாவுஞ்
சோடசோபசார நைவேத்தியமகத்துவமுஞ்
சுக்ரவாரச் சேவையுந்
தோத்திரஞ்செய்தன்பர் கொண்டாடிநிற்பதுந்
துவாதசாந்த ஸ்தலமெனும்
ஆடலறுபத்துநான்கு புரிதிரிகூடலாம்
ஆலாஸ்யமா க்ஷேத்திரமும்
ஐந்துமாபாதக விமோசனஞ்செய்பிரண்
டாறுதீர்த்தத்தின் வளமும்
மாடமாளிகைகூட கோபுரவிசேடமும்
மைந்தனுன் சொல்லவெளிதோ
மதுவமிர்தகாமாட்சி பதிவிர்தைவிசாலாட்சி
மதுரைநகர் மீனாட்சியே. (௯.)

கோமளமதாகவுக்கிரப் பாண்டியன்றனைக்
கொஞ்சிமடி மீதில்வைத்து
கொங்கையின்றருணமபெரு பதமானபாலமுதங்
கொடுத்தபார் வதிவராகி
சாமளநிறப்பதும நாபனீசகோதரீ
சாம்பூன தச்சபைதனிற்
சப்தசுரதாளமொடு ருத்ரனுட னிர்த்தமிடு
சத்திமாதங்கி கௌரி

யாமளைசமஸ்தமுந் தானனலோகநா
　　யகிமகிட சங்காரிநீ
யளவிடக்கூடாத வறுபத்துநாற்கலைக்
　　யானவித்தைபி லுணர்ந்த
மாமணிசிகாமணி சிரோன்மணி மனோன்மணியுன்
　　மைந்தனு மெனையாளுவாய்
மதுவமிர்தகாமாட்சி பதிவிர்தைவிசாலாட்சி
　　மதுரைநகர் மீனாட்சியே. (ச)

ஆரிசோழன்சேர னுக்குமேலானமல
　　யத்வசன் வளர்புத்ரியா
யாங்காரமும்முலைத் தடாதகைமகடூழ்
　　வாயலங்கிர்த சோடினைத்
தேரின்மீதேறிரத கஜதுரகபதா
　　திகளொனுஞ் சேனையுடனே
திக்குவிஜயஞ்செய்து பட்டாபிஷேகமாய்ச்
　　செங்கோல் செலுத்திநாளும்
பாரினிற்கொண்டாட ராச்யபரிபாலனம்
　　பண்கின்ற ராஜேஸ்வரி
பரமசிவசொக்கநாதக் கடவுள்பாரியாய்ப்
　　பக்கமதிருக்கு மணியே
பாரிசிவநாரியுப காரியதிகாரியுன்
　　மைந்தனு மெனையாளுவாய்
மதுவமிர்தகாமாட்சி பதிவிர்தைவிசாலாட்சி
　　மதுரைநகர் மீனாட்சியே. (ரு)

தந்தைதாய்க்குப்புத்ர னாகச்சனித்துவித்
தரணிதனிலேபிறந்து
தவழ்ந்தடிநடந்துவிளை யாடத்தெரிந்தபின்
சனிசெய்த கொடுமைதானோ
விந்தையாய்வருமைபிணி பீடைநோயனுகியும்
விட்டமானவிலை மாதரை
மேவியதிலும் பிரபஞ்ச வாழ்க்கையிலும்
மெலிந்துருகு பராதேவதா
சிந்தனையிலாமலும் பெரியோரிடத்திற்
சினேகிதஞ் செய்துகன்னி
செல்வப்பொருள்களைத் தேடாமல்வீணைச்
செலுத்தினே னிதுவரையினில்
வந்தமிடிதொந்தரவை யெந்தவிதமுந்தொலையுன்
மைந்தனை யுகந்தாளுவாய்
மதுவமிர்தகாமாட்சி பதிவிர்தைவிசாலாட்சி
மதுரைநகர் மீனாட்சியே. (௪)

ஜென்மித்தநாண்முதற் கொண்டுமையம்மணி
செல்வத்தை யானறிகிலேன்
சேர்ந்தவிற்பன்னர்சம் பாஷணைகள்செய்து
செந்தமிழ்முதற் கரிகிலேன்
உன்மத்தமாய்கெட்ட துஷ்டரிஷ்டம்பண்ணி
யும்பஞ்ச பாதகத்தில்
ஒருகுற்றமாகிலுஞ் செய்திரேன்மனதார
வூழ்வினைப் பயனென்னமோ

கன்மத்தினால்வந்த துன்பத்தைமுன்செய்த
 கதைகாரணம் போலவே
விடமில்லாமனின் னிடமுரைத்தேனெனது
 கலிதனை யகற்றுமம்மா
மன்முத்தமிழ்க்கள்சுகிர் தத்தையும்வளர்த்தாய்
 மைந்தனு மெனையாளுவாய்
மதுவமிர்தகாமாட்சி பதிவிர்தைவிசாலாட்சி
 மதுரைநகர் மீனாட்சியே. (எ)

அஞ்சிடநடுக்கடற் கப்பால்விட்டெழுகாத
 மாதாரமின்றி யோடி
அலையின்றுரும்புபோ லலைவாயின்மெழுகென
 வலைந்துருகு பாவனையதாய்த்
தஞ்சம்வேறில்லாம லுன்னடைக்கலமெனத்
 தற்காரிவ்வேளை யென்று
சன்னிதானந்தனிற் றுபந்தமாகிய
 சரித்திரம் விரித்துரைத்துங்
கொஞ்சமாவதிரக்க மில்லாததென்னபிழை
 குற்றமென் றேகையமலே
குதித்தபரை சீலியயிராணியாம்பாசாங்
 குசத்தியாகிலு முனைவிடேன்
வஞ்சமதுனெஞ்சினிற் பொஞ்சாதேபஞ்சையுன்
 மைந்தனு மெனையாளுவாய்
மதுவமிர்தகாமாட்சி பதிவிர்தைவிசாலாட்சி
 மதுரைநகர் மீனாட்சியே. (அ)

பில்லிவஞ்சனையேவல் சூனியபூதப் பிசாசுமுனி யெதிர்வராமற் பிரமத்திசரணமென் றோடவுமேமனோர் பிராணபய மில்லாமலும், சல்லியஞ்சச்சரவு சத்ராதிகள்கோடி சனிக்கலி யணுகாமலுஞ் சஞ்சலாவஸ்தை பிணி விசனமதுறாமலுஞ் சற்சனர்க ளிகழாமலும், மெல்லிமையுடன்மன நினைத்ததுகைகூடவுமிக்கிர்பை செய் விக்ஞாபனம் வினவினேனின் றமுதலென்றைக் குமரட்சிக்க வேண்டுமுக்கண்ணிதேவி, வல்லிபிரபல் லியச் செல்லியென்றல்லியுன் மைந்தனை மெனையாளுவாய் மதுவமிர்த காமாட்சி பதிவிர்தை விசாலாட்சி மதுரைநகர்மீனாட்சியே. (௯)

மகமேருநிகரானநவநிதிகுபேரனிட வாழ்வுபோ லென்றனக்கு, மட்டடங்காதநிதி யஷ்டைஸ்வரியமும் வள்ளலெனவேயீகையுஞ், சகமதிலிகப்ரசாதனஜென் மசாபல்லிய தமிழ்சமஸ்கிர்த நூற்களுஞ், சதிரானசா லோகசாமீபசாரூபசாயுச்யபதவியதுவுஞ், சுகமாகுமி துசகல சாம்பிராச்ய போகஞ்சுகித்துநீ டூழிவாழ்கச், சுபசோபனப்பதிக மாயிப்ரபந்தத் துதித்தேன்வரங் கொடுத்து, மகிமைதிகழகமகிழ மிகவிருதுசமயமுன் மைந்தனைமெனையாளுவாய், மதுவமிர்தகாமாட்சி பதி விர்தைவிசாலாட்சி மதுரைநகர் மீனாட்சியே. (௧௦)

மீனாட்சியம்மை பதிகம் - முற்றிற்று.

---

ஆக புத்தகம் 90.

உ

தேவிஸகாயம்.

ஸ்ரீ காசி

# விசாலாட்சியம்மை பதிகம்.



இஃது,

பொருள்வைச்சேரி-நதிகுலசிரேஷ்டம்

சொக்கலிங்கம்பிள்ளையவர்கள்

இயற்றியது.



சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

# சுகந்த
# பரிமளசாஸ்திரம்.

இந்த பரிமள சாஸ்திரத்தில் மைசூர், டில்லி, புதுக்கோட்டை தஞ்சாவூர், பெங்களூர், கார்வேட்டிநகரம் முதலான சமஸ்தானங்களில் கையாண்டுவந்த அத்தர்பில்லைகள், பூசுபில்லைகள், முகவசீகரபில்லைகள், கூந்தல் தூபங்கள், ஊதுவத்திகள், சுகந்தபொடிகள், கதம்பப்பொடிகள், வாசனைமூக்குத்தூள் தினுசுகள், மல்லிகை, ரோஜா, சம்பங்கி முதலியபுஷ்பங்களை முகர்ந்தால் பேதியாகக்கூடிய இராஜாங்க விரோசனங்கள், கூந்தல் எண்ணெய்கள், மயிர்வளரும், பரிமளவெண்ணெய்கள், கேசரஞ்சனிஆயில், ஹேராயில், நன்னாரி, சந்தனம், திராட்சி, எலுமிச்சை, நாரத்தை, மாதுளை, இஞ்சி, ரோஜா, தாழம்பூ இவைகளால் செய்யப்பட்ட (சர்பத்துகளும்,) இன்னும் அநந்தவிதமான பரிமளவகையறாக்கள் யாவும் இந்த புஸ்தகத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

சுதேசிகள் கைத்தொழில் விருத்திக்காக இந்த பரிமளசாஸ்திரம் அச்சிடப்பட்டிருக்கிறது. ஆகையால், இந்த கைமுறைப்பிரகாரம் சகலமானபேரும் தாங்களே செய்துக்கொண்டு சொந்தத்திற்கும் வியாபாரத்திற்கும் வைத்துக்கொள்ளலாம்.

புத்தகம் 1-க்கு விலை அணா 8.

சிறுமணவூர்- முனிசாமி முதலியார் கம்பெனி
பெரம்பூர்பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.



உ

அப்பாள் முன்னிற்க.

# காசிவிசாலாக்ஷியம்மை பதிகம்.



## விதாயகர் துதி.

ஆயிரத்தெட்டண்ட மிருநூற்றியெண்மூன் றக ண்டபுவனம்படைத்த, வயனுமச்சுதனுமடிமுடிதேடு தற்கரிய வாலாலமுண்ட கண்டன், றாயசந்திரஜடாம குடத்துள்நிறைகங்கை சூழ்ந்துலவுகாசிநகர்வாழ், சுல க்ஷணிவிலக்ஷணிதனன்பர்பிரதக்ஷிணி சுருதியாகமபு ராணி, மாயவன்சகோதரிபசுங்கிளிவிசாலாக்ஷி மாது மையின்மீதுபதிக, மலர்புனையவருடமுய மனதனிருள கலகலை மகளுமென்னாவில்நிற்க, நாயினேன்சொற்கவிக் கக்ஷரக்குற்றங்க ளடாதுனுதவிதருவாய், நாவிதழி நடுவினிற்சாருபொருளாய்நிற்கும் விநாயகஸ்ரூபவ டிவே.

சிருலவுமெழுசாகரம்புவனமீரேழ் சிருஷ்டிகர்த் தாவினுவிற்றித்திமித்தோமெனவுமத்தளஞ்சப்திக்ககிர் த்தித்தசிர்பாதமும், பாருலகைவிலைபெற்ற நவரத்ன மௌலியும் பவளவாயும்வதனமும், பரமகுருகாபாத்ர

மூனிவரடியார்கண்மேற் பக்ஷநயனப்பார்வையும், மே
ருவைநிகர்த்தபுள கிதகலசகொங்கையும் வெண்டுகில
ணிந்தவிடையும் மேனிமரகதஸ்ரூபம்நமியரியாசனத்
தெய்திப்ரசன்னமாகிக், காரிருளுமகலவென்கண்ணெ
திரில்வந்தடுமை கலிதீர்த்தசோதிமயமே கங்கைநதிவ
ளர்காசியம்பதிவிசாலாக்ஷி கர்ப்பூரதீபவடிவே. (க)

நாரணிபராசத்திவீரமாகாளிகங் காளிதிரிசூலிபு
வன ரக்ஷிகிசுலக்ஷணவிலக்ஷணவிதக்ஷணி நவகோணி
யருள்பாலினி, வாரணமுகத்தனையுமயிலவனையுந்தந்த
வடிவழகிவிமலிநீலி வாலையபிராமிசிவ காமிமனனத்தி
யானியென் வல்வினையகற்றியாள்வாய், ஆரணிவிலாட
நிறையன்பத்தோரக்ஷரத் தாக்கினைசக்கரத்தி அந்தரி
நிரந்தரிதுரந்தரிபுரந்தரி யனந்தநாமக்கிர்பாலி, கார
ணஸ்ரூபிமகமாயியம்பிகைகௌரி கருணைப்ரகாசமௌ
னி கங்கைநதிவளர்காசியம்பதிவிசாலாக்ஷி கர்ப்பூரதீப
வடிவே. (உ)

அருண்மறையின்முடிவாகியாதியந்தம்நடு வமர்
திடுஞ்சோதியாகியே யணுவாகியணுவுக்குளணுவாகியுயி
ரா யகண்டிதாகாரமாகிப், புருவமத்தியமாகிரவிமதியு
மாகிமுப் பூச்சக்ரவாளமாகிப் புவிநீரழற்றென்றலாகி
விண்ணாகியே பூரித்தெழுந்துவந்துன், றெருள்விலங்
கும்வதனதரிசனந்தந்தடுமை சேவைசெயவருடருகு
வாய் சிற்சபையிலிருபத்தோராயிரத்தறுநூறு செம்

மலர்கள்சாற்றிநிதமுங், கருணைபெறநின்னடியர்தொ
ன்னூற்றிஅறுவருங் கைகுவித்திடுதெய்வமே கங்கை
நதிவளர்காசியம்பதிவிசாலாக்ஷி கர்ப்பூரதீபவடிவே.

சித்தத்தைவில்லாய்வளைத்துயேகாக்ஷரச் சிறுக
யிறுநாணிபூட்டிச் சிவயநமவெனுமைந் தெழுத்தைய
ம்பாக்கிச் செபிக்கொணுமந்திரத்தாற், பத்திவைராக்
யமலர்தூவியுருவேற்றியுட் பதிபிற்கருத்தையூன்றிப்
பாசசூலங்கொண்டதட்டிவருமெமனைப் பயந்தரண்
டோடவெய்துன், பொற்றாமரைக்கமலசிற்றடியையனு
தினம் பூசிக்கவரமருளுவாய் பொங்கரவுதிங்களொடு
கங்கையணிசங்கரன் பங்கிற்றழைத்தமயிலே, கற்றவர்
களிருதயதடாகத்துள்நிலைகொண்ட கனகாபிஷேகமு
தலே கங்கைநதிவளர்காசியம்பதிவிசாலாக்ஷி கர்ப்பூர
தீபவடிவே. (அ)

அணியாயிரஞ்சூட்டுமரவிற்றுயின்றவென் னைய
ன்கிருஷ்ணஸ்வாமிக் கரியதங்கையும்நீயிவ்வுலகமாதா
வும்நீ யாலமற்கடவுளடியிற், பணிவிடைபுரிந்திடும
னேன்மணிவராகிநீ பரிபூரணானந்தநீ பாலையானந்தசி
வவாலைநீபரமனிட பாகத்தமர்ந்தவளும்நீ, மணிமுடி
தரித்தாசுபுரியுமரசர்க்குவிலை மதியாதமாணிக்கம்நீ வ
ஞ்சியர்க்கரசிநீசஞ்சீவிமந்த்ரம்நீ வானவர்தொழுந்தெ
ய்வம்நீ, கணிதவிதசாஸ்திரதத்வகலைமகளும்நீ கல்விச்
சமுத்ரம்நீயே கங்கைநதிவளர்காசியம்பதிவிசாலாக்ஷி
கர்ப்பூரதீபவடிவே. (கூ)

அந்தரத்திற்சொர்ணமயமாய்ஜொலிக்குமவ் வழகுபெறுதாராகணம் அத்தனையுமெண்ணலா மமலநிட்களவெளியு லாற்றலாய்த்தென்றலுலவிச், செந்தூரிபடவெழுஞ்சிறுமணலுமுலகிலுள ஜீவஜெந்துவுமெண்ணலாஞ் ஜெகமெலாங்குளிரவகல்வாரிநீர்வாரிபெருமாரியாய்ப்பொழியுமேக, பந்தமழையின்றுளியுமெண்ணலாமென்பிறவி பாருலகிலெண்ணவலரார் பாவிகொடியோனெனதுஜெனனத்தைமாற்றிநின் பாதபங்கயமளிப்பாய், கந்தமலராரமணிசரணாரவிந்தமே கருணையங்கடலமுதமே கங்கைநதிவளர்காசி யம்பதிவிசாலாக்ஷி கர்ப்பூரதீபவடிவே. (௬)

வஞ்சியர்களிளமதிமுகத்திலேயவர்கண் மருட்டிலேமைப்பொட்டிலே மானைத்தபார்வைநோட்டத்திலேமலர்சூடும் வண்டனையகார்குழலிலே, கொஞ்சுகிளிபோற்பயிலுமொழியிங்கிதத்திலே குஞ்சிரிப்பின்பல்லிலே கொப்புச்சிமிக்கிபொன்னோலையிடுசெவியிலே கோத்தமுத்தணிமார்பிலே, சஞ்சீவிமலையைநிகர் முலையிலேயிடையிலே சர்ப்பபடதடமடுவிலே தங்கவளைசெங்கைக்குலுக்கிலெளியேன்மனஞ் சாராமலருள்புரிகுவாய், கஞ்சனுயிரைக்கொன்றசங்குசக்ராயுதன் றங்கையேயெனையாளவா கங்கைநதிவளர்காசியம்பதிவிசாலாக்ஷி கர்ப்பூரதீபவடிவே. (௭)

சேல்விழிமடந்தையர்க்கேவல்செய்யாதுநின் திருவடிக்கேவல்செயவுஞ் சிறுவரொடுகூடியலையாதுநல்ல

நிஞர்பாற் சேர்ந்துநின்புகழோதவும், ஆலிலையின்மே
ற்பள்ளிகொண்டவன்சோதரி நின்னம்புயத்தாடுதித்
தே யனுதினம்பாடிப்படித்துத்துதிக்கநல் லறிவுதந்
தெனையாளுவாய், சால்புயர்மறைக்குரைசொல் சம்பந்
தருக்கமுதுதந்திரட்சித்ததல்லி தஞ்சமென்றுருகுவா
ர்க்கஞ்சலென் றிருபாத தரிசனந்தரவுமெளிதோ, கா
லனையுதைத்தசங்கரசம்புபங்கில்வளர் கருணைப்ரகாச
விமலி கங்கைநதிவளர்காசியம்பதிவிசாலாக்ஷி கர்ப்பூர
தீபவடிவே. (அ)

மாதாபிதாவுமனைமைந்தருஞ்சுற்றமிகு வாழ்வுற்
றிருந்துமென்ன வளமுலவுமுலகினிற் க்ரிபரியிலூர்ந்
தென்ன மதியூகியாகிலென்ன, ஆதாரமாகவெகுகாவ
லால்கண்விழித் தருகினிலிருந்துமென்ன அரசர்பல
முஞ்சுற்றவீரர்பலமும்பெற்ற வதிகாரியாகிலென்ன,
வேதாவிதித்தநாட்கிட்டும்வேளையிலேமன் விடுவனோ
வெனவிரட்டும் வேளைதனிலிவையெலாமுதவுமோநினை
யலால் வேறுதுணையெவருமுளரோ, காதமலதாரமிலை
நாசிமுனைநேரில்யான் கண்டுதரிசிக்கவருவாய் கங்கை
நதிவளர்காசியம்பதிவிசாலாக்ஷி கர்ப்பூரதீபவடிவே. ()

அண்டபகிரண்டநவகண்டமெண்டிசையுமூதண்
டமுகடும்மதிரவே அழலுமாலோனிருவர் திசைமாற
நட்சத்ர மகிலமெல்லாமுதிரவே, தென்றிசைக்கோனு
நவகோளுமீரறுவருஞ் சித்தம்பிரமித்தயரவே சேட

அமொடுங்கவெட்டானையுந்நடுங்கவின் டேவர்மலர்ம ழைபொழியவே, சண்டப்ரசண்டகியரக்கரையழித்த மரர் சஞ்சலமொழித்ததிலையோ சன்மார்க்கநெறியி லாற்றுன்மார்க்கநின்றிருத் தாளிணையர்ச்சிக்க வருள் வாய், கண்டகிகபாலிகோதண்டபாணிக்கிளைய கர்த்த வியமுத்திமுதலே கங்கைநதிவளர்காசி யம்பதிவிசா லாக்ஷி கர்ப்பூரதீபவடிவே. (க0)

அடியர்கட்கெளியன்வடகைலைவளருமைபாகனை முகக்கடவுள்வாழி ஆழ்கடற்றுயில்செங்கண்மால்வா ழியயன்வாழி யமலைகலைமகளும்வாழி, படிமிசையில சையாது நடுநிலையில்நின்றகர பாத்ரகுருதீபம்வாழி பாருலகிலொளிவீசு மிரவிமதிவாழிபா சாங்குசப்பிர மம்வாழி, பொடிபடக்கிரவுஞ்சகிரிதுளைத் தோன்வா ழிபொன்னகர்க்கிறைவன்வாழி புகலரியநின்றிருத்தா ள்வாழிபுன்மையேன் போற்றுமிப்பதிகம்வாழி, கடலு லகெலாங்கார்க்குமேழிப்பதாகயக் கங்கைகுலமரபில் வந்த கவிவலன்சொக்கலிங்கந்தொழும்விசாலாக்ஷி கழ லிணைகள்வாழிமாதோ. (கக)

சம்பூர்ணம்.



ஆக புத்தகம் 91.

உ

சிவமயம்

வைத்தியநாதர்கோயில் என்று வழங்கும்

# புள்ளிருக்கு வேளூர்த்

# தையல்நாயகியம்மைபதிகம்.



இஃது

சிறுமணவூர் - முனிசாமிமுதலியா ரவர்களது

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.



உ

தேவி சகாயம்.

புள்ளிருக்கு வேளூர்த்

# தையனாயகியம்மை பதிகம்.



காப்பு-நேரிசை வெண்பா.

நீர்வளங்க ளெப்பொழுது நீங்காத வேளூர்வாழ்
நார்வளங்கொளெங்கள்தைய னாயகிமேற் - சீர்விளங்
குஞ், செந்தமிழ்ப்பா மாலைசொலச்செல்வக்கணேச
னை, விந்தமலர்த் தாள்துணையாமே.

ஆசிரியவிருத்தம்.

திருவளர்ந் தோங்குமதி வதனமுஞ் சுக வருட்
டிறம்வளர்ந் தோங்குவிழியுஞ், சீர்வளர்ந் தோங்கு ம
றைமொழிசொலும் பவளவுச்சிதம்வளர்ந்தோங்குவா
யும், உருவளர்ந்தோங்குமணி மருவுகுழையா தியணி
யொளிவளர்ந் தோங்கு செவியும், உன்னதம் வளர்ந்
தோங்குகனசுவற்கங்களு முரம்வளர்ந்தோங்குதோ
ளும், மருவளர்ந் தோங்கு பூங்கரமும் விண்டரு மல
ரின் மணம்வளர்ந் தோங்குதாளும், மைந்தனேன் கா
ணவெள்விடையினின் பதியொடும் வந்தருட்சேவை
தருவாய், தருவளர்ந் தோங்கு பொழி லின்கண்மாம
யிலகவிரிந் தனமோங்கு வேளூரில்வாழ் தையமால்

வரைகுமரி வையம்பாவையுமுதவு தையனாயகிகௌ
ரியே. (௧)

அருள்பெருகு நயனஸ்ரீங்காரிமதி பணிவேணிய
ணிமணிப் பூணிவிமலி, ஆனந்தபயிரவி திரிபுராந்தகி
சுகிணி யகிலகாரணி நாரணி, மருளறுந் திவ்யத்ரிகோ
ணியம் புஜபாணி மாதங்கி மரகதாங்கி, மந்த்ரபஞ்சா
ட்சரிமகேஸ்வரி மனோன்மணி மருவுமெய்ஞ் ஞானசி
லி, தெருளிலகும் வேதமுடி மீதிலுறும் வித்தகிதிரா
தவினைக ளெல்லாந், தீர்த்தருள்வைத்யநாதன் பங்கில
ன்னைபெ சிறியனேன் வினைதவிர்த்தாள், நாளமணி
முறுவன்மட மாதர்பாலன்னநடை தான்பயிலும்வே
ளூரில்வாழ், சையமால் வரைகுமரி வையயா வையு
முதவு தையனாயகிகௌரியே. (௨)

ஆறெனுந் தையலையணிந்தவேணிப்பிராற்கன்று
குருமூர்த்தியாகி,ஐந்தையலை யாதடக்கித் தவம்புரிய
வர்க் கவிர்நான்கு தையலைப்பொன், கூறவாவொழிய
வொளி வீசுமுத் தையலை கொழிக்குநற் செந்தின்மு
தலாங், கோலநகர் மேவியிரு தையலைப் புறமதிற்கொ
ண்டுமொரு தையலைத்தாந் தேறும் படிச்செய்து வெ
ட்டுண்டகையையுந் சிருறத்தந்தவமல, சிவசுப்ரமண்
யமுந் தைநபனைப் பெற்றமாதேவியே பெரியாளுவா
ய், தாறுடைக் கமுகுபூந் தாழையெனமேதிந் தழைந்

துவளர் வேளூரில் வாழ், சைய மால் வரைகுமரி வை
யம்யாவையுமுதவு தையனுயகி கௌரியே.                    (ரு)

ஆகம புராணகலை யோதியறியேன் சுருதியாய்ந்
தவரை யண்டியறியேன், ஆனநின் மெய்யன்பர் நேச
மறியேனினக் காம்பூசை செய்துமறியேன், தேகம
தெடுத்திது வரைக்குனற்கருமங்கள் சிந்தையினினைத்
து மறியேன், சிவ புண்ணியஞ் செய்குவோர்கள் பா
லொரு காசுசெங்கையா லீய்ந்துமறியேன், பாகமுத
மொழிநலார்மோகமேகதியெனும் பாமரரி லென்போ
லுமிப், பாரிலெவருண்டுநன் மார்க்கநிலையே பெறப்ப
ண்ணுவ துனக்கருமைபோ, தாகமூன்றுந் தணந்தோ
ங்குமுனிவரர்கள்வாசஞ்செயும் வேளூரில்வாழ் சைய
மால் வரைகுமரி வையம்யாவையுமுதவு தையனுயகி
கௌரியே.                    (சு)

நாயேன் படுந்துயர மிவ்வளவெனப்பகரநாவெ
ன்றுபோதாதுமேல், நாடிவந்தென்குறையகற்றுவார்
நீயலால் நானிலத் தொருவரில்லை, பேயேனு மொரு
போதகங்கரையு நின்னகம் பெரும் பாறையோவிரும்
போ, பெற்றிட்டபிள்ளைமேற் றுய்க்கலோநாடொறும்
பிரியமதிருக்கவேண்டும், நீயேது மறியாது போலிரு
ப்பதுவுமொரு நியாயமோதயவில்லையோ, நெஞ்சத்து
நினைவையே லணுவுமக மேருவாய் நிமிடத்திலாயிடா
தோ, தாயேநின் னுதரவு நம்பினே னருள்புரிவைதா

ணிபுகழ்வேளூரில்வாழ், சையமால்வரைகுமரி வையம்
யாவையுமுதவு தையனாயகி கௌரியே. (ரு)

அடுத்தவர்கடம்மையொரு நிமிடமுங்கைவிடா
தாண்டருளல் நீதியெனவே, தாகமபுராணகலைதன்னி
னீ சொன்னதென்றறிஞராற் கேட்டுமிகவுந், திடத்து
டனுனதுபதம் நம்பிவந்தண்டினேன் சிற்றம தரும
லினிய, திருவுளமிரங்கியெனை யாதரித்திடுவதுசிறந்த
வுன்கடமையலவோ, குடத்துநீரையுமொரு குளத்து
நீரென்பரோ குவலயத்துன்னடிமையைக், கூறும்வே
ஜொருவர்தம்மடிமை யென்பார்களோகுணாகரிமகாவி
த்தகி, தடத்திலுறுமாம்பலெழின் மாதர்வெண்ணகை
கண்டுதான்மலரும் வேளூரில்வாழ், சையமால் வரை
குமரி வையம்யாவையுமுதவுதையனாயகி கௌரியே.

கருணைக்குவித்தாயிருப்ப தந்துயரைக்களைந்தி
னிக்குறைவராமற், கர்த்தன்பர் தமை யிரட்சிப்பதும்
பொய்யல்லகருதின் னியற்கைக்குணம், வருணக்கலா
பமயில்வடிவுற்ற வல்லியென் வறுமைபிணிதுயரம்யா
வும், மாற்றிநித்தியசெல்வ மருள்வையெனநிதநான்
வருந்திநின்பாலுரைக்க, இருணீக்கு மொளிவயிர கு
ண்டலமிலங்குசெவி யிற்கேட்டிடாதிருத்தல், என்
பொலாக்கன்மமோ ஈதுகலிகாலத்தியற்கையோ வடி
மையலவோ, தருணத்திலுதவி செய்யாததுந் தகுதி

யோ தன்னருள்செய் வேளூரில்வாழ், சையமால் வரைகுமரிவையம்பாவையு முதவுதையனாயகி கௌரியே. (எ)

அன்னையே நீமௌனஞ்செய்திட்ட நாலெட்டறந் தனின்மருந்தென்பதோ, ரறமான தஃதன் றினின்கணவனும் அடுத்தவர்கள் நோய்தீர்ப்பரென், றின்னில மெலாஞ்சொல்ல விவ்வடிமை யென்றனது இன்னல் நோய்தீர்த்திடாத, தென்னவிதமோ தருமருந்தினிற் சாரமதுமில்லையோ மன்மருந்தோ, மன்னுநீ தருமச் சொரூபியென்றும் பதிவைத்யநாதீசரென்றும், வாய்ந்தபேர்கொண்டதுவும் ஏதுகாரணத்தினை வாய்மலர்ந்தருளவேண்டும், தன்னிகரிலட்டாங்கயோகியர்கள் வந்துதுதிசாற்று நல்வேளூரில்வாழ், சையமால் வரைகுமரி வையம்பாவையுமுதவுதையனாயகி கௌரியே.

தந்தொடுந் தம்பெரிய தனமதைக்காட்டித்தட ச்சுரியபணிகள்செய்யத், தருதொழிற்காட்டிமிஞ்சா தடக்கிக் கொடியசங்கடங்காட்டிமிகவும், வெத்தபுண் ணிற்கோலிட்டதைப்போலவே வீண்வம்பு வார்த்தைகாட்டி, வீரமுன்னோர்மனதும் நையும்வகை செய்யு மைவிழியார்கள் மீதுவாஞ்சை, எந்தவிதமுங் கொளாதுனதுபய சரணமலரிடை விடாதேத்துவோமே, எனையேற்றிந்துகரத் தருள்செய்ய வேண்டும் இ

லங்குநித்தியகல்யாணி, சந்தமுறவந்தணருவந்துநன்
மறைகள் சந்ததமோதும் வேளூரில்வாழ், சையமால்
வரைகுமரி வையம்யாவையுமுதவு தையனாயகி கௌ
ரியே. (௧)

சுரர்களொரு பாற்போக பூமியர்க ளொருபாற்
றுறந்தமுனி வரர்களொருபாற், றுறங்கவிஞ்சையர்க
ளொருபா லசுரரொருபா றுலங்குமந்தரர்க ளொரு
பால், உரகரொருபாற் றயித்தியர்களொருபாலிசையி
லோங்குகாந்தருவ ரொருபால், உத்தமவியக்கரொரு
பாற்சித்தரொருபா லுவந்தகின்னரர்களொருபாற், க
ருடரொருபாற் கிம்புருடர்களொருபாற் பெருங்கன
வாசியர்களொருபாற், கறைகொள் பைசாசரொருபா
ற் புதரொருபாற் கடூரமன நிருதரொருபாற், றரமொ
டுதுதிக்கற் சேவைதரு நின்பெருமை சாற்றரிதுவே
ளூரில்வாழ், சையமால் வரைகுமரி வையம் யாவையு
முதவு தையனாயகி கௌரியே. (௧௰)

நலமிகுவிளங்குசீ காழியி லுதித்ததிரு ஞானச
ம்பந்தமூர்த்தி, நவிலரியமெய்ச்சிவா நந்தமேவத்துங்
க நகமுலைப்பாலளித்த, சலசலோ சனபாலசுந்தரி ம
காமந்த்ர தந்த்ரவெந்த்ராடம்பரி, சயிலபுயமார்வைத்
தியநாதர் பாரிபூந்தாரி யொய்யாரிவிரி, பலவுதவுநின்
னுடைய சரணாம்புயத்தினிற் பரிவுடன் சாத்துமிந்த

ப், பாமாலையைப்புனைந் தருள்செய்யவேண்டும் பவானியுயர் செகதீஸ்வரி, தலைமைபெறு மோங்காரி கருணசமுத்ரியே தருபுகழ்கொள் வேளூரில்வாழ் சையமால்வரைகுமரி வையம்யாவையுமுதவு தையனுயகி கௌரியே. (கக)

கட்டளைக்கலித்துறை.

கான்கொண்ட கற்பகக்காமலர்நின்பூங் கழற்கணிதம், வான்கொண்ட தேவர்களர்ச்சித்து வாழ்த்த வரமளிக்குந், தேன்கொண்டமென்மொழிப் பாவாய் விதித்தவிச்சென்மத்தினில், நான்கொண்ட சஞ்சலந் தீர்த்தருள்வாய் தையனுயகியே.

புற்றரவப்பணி வேணிப்பிரான் முப்புராதியரை யுற்றநகைப்பி லெரித்தபிரான் றேலுரித்துடுக்குங் கொற்றமிகுமெம்பிரான் பாதியென் றுங்குலவுதற்கு நற்றவமெத்தனை செய்தனையோ தையனுயகியே.

பொன்னேயப்பொன்னினொளியே சகலபுவனத் திற்கும், அன்னேயறஞ்செயு மம்பிகையே யிருளற் றொளிரும், மின்னேயமாணிக்கமேமதி மாமுகவித்தகி, நன்னேயங்கொண்டெனை யாண்டருள்வாய் தையனுயகியே.

தையனுயகியம்மை பதிகம்
முற்றிற்று.

---

ஆகபுத்தகம் 92.

உ

ஸ்ரீதேவி துணை.

சென்னைச் சிந்தாத்திரிபேட்டை
குட்டிநாய்க்கன் தெருவி லெழுந்தருளிய

# வேம்புலியம்மைபதிகம்.

வஞ்சிவாக்கம் மோகாம்பராச்சாரி குமாரர்
சிதம்பராச்சாரியரால்
இயற்றியது.

இஃது
சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது
சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1908.



உ

ஸ்ரீதேவிதுணை.

# வேம்புலியம்மை பதிகம்.



## ஆசிரியவிருத்தம்.

சுந்தரிநிரந்தரி திகம்பரிபரம்பரி
　　ஸுமங்கலிக் கன்னிகௌரி
சுத்தபரிபூரணி அத்துவிதகாரணி
　　ஸ்தூலசூட் சுமிகாரணி
அந்தரிநிரந்தரி புரந்தரிபுராந்தகி
　　ஆலமற்கடவுள் கௌரி
அகிலபுவனேஸ்வரி சகஜகுணகாத்திரி
　　அடியவரைக் கார்க்குமாரி
இந்திரன்முதன்முனிவ ரெந்தநாளுந்துதித்
　　தேத்தித்தொழுந் தெய்வமே
எத்தேசகாலமுன் வித்தாரமேசொலும்
　　யெளியேனைக் கார்ப்பதரிதோ
கந்தமலிசிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருக்
　　சன்னிடங் கொண்டவுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவி
　　வேம்புலி மகம்மாரியே. (க)

அருணனைப்போலொளிர்ச் செந்தாழைமந்தாரை
　　அரியமல்லிகை முல்லையுங்

# வேம்புலியம்மை பதிகம்.

அருகொடுக்குருவதன மன்மதபாணமும்
அலரிவாடா மல்லியும்
சிறுசெண்பகம்பச்சை செண்டுமெல்லிகை கோங்கு
செண்பகங் கொன்றைமுதலாய்
ஜெகமீதிலுற்பவித் தோங்குமலர்யாவுமுன்
செங்கமல மலர்மீதிலே
இருநேரமர்ச்சித்து பூசித்துநேசித்து
வென்னுடலினைக் கடுமையாய்
எண்ணமிட்டுன்மகிமை வண்ணமிட்டிரவாடும்
யெளியனைக் காருமம்மே
கருணைவளர்சிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருந்
கண்ணிடங் கொண்டவுமையே
சாம்பரிசாம்பவி யாம்புவிமெலாம்பரவு
வேம்புலி மகம்மாரியே. (உ)

துதிமேவுமுன்னடித் துதிசெய்வதல்லாது
தொல்லுல கிரண்டேழுமாய்
தூதுபுரியண்ணமார் பாதகமலங்களும்
தொண்டது புரிந்துநாளும்
பதிமேவுநின்னினைவு கிஞ்சித்துமரவாது
பழகிவரு மேழையிங்கு
படுந்துயரெதுங்கஷ்ட நிஷ்டூரமியாவையும்
பார்வதி யரியாததோ
நிதிமேவு செல்வர்பாற் சென்றுகெஞ்சாமலும்
நின்றநிலை பிரியாமலும்

நேரிட்டவகதிக்கு சோறிட்டுவுண் ணுமார்
நீயிட்டு காற்பையம்மே
கதிமேவுசிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருக்
கண்ணிடங் கொண்டவுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவு
வேம்புலி மகம்மாரியே. (ரு)

ம்திரவியினன்னைநீ மறையவன் தாயுநீ
மலையரையன் மகளானநீ
மண்ணேடுவிண்ணுகி லண்டம்புரந்தநீ
மாசற்றமலர் மேனிநீ
துதிபெற்றகஜமுகன் கந்தன துதாயுநீ
துய்யமறை யடிமுடியுநீ
தொல்லுலகிலெண்பத்து நான்குலட்சஞ்சீவ
தோற்றமு மளித்தவளுநீ
சதியாயிரஞ்செய்த கொடியனுனைவுமுனே
சரணென் றடைந்தபின்னர்
சகியாததாய்மார்கள் நிலமிசையுள்ளரோ
தற்கார்த்து அருள்வையம்மே
கதிபெற்றசிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருக்
கண்ணிடங் கொண்டவுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவு
வேம்புலி மகம்மாரியே. (சா)

புத்திடங்கொண்டகில புவனயீரேழையும்
புன்னகையுடன் கடைக்கண்

பூட்டியேயாட்டிவைப்பா யுனக்கொருகாலில்
　　பொய்சொலும் மடையர்தம்மை
வெத்திசேர்வேப்பிலை யெனுங்கத்திவீசியே
　　வேகவைப்பா யுடலெலலாம்
விண்டலமுமண்டல முன்போலுமொருதெய்வம்
　　வேறில்லை யுலகிலம்மா
பத்திநெரியில்லார்க்கு யெத்தாகவினைகாட்டி
　　பார்க்காமல் விலகின்றே
பால்பூசைபொங்கலொடு ஆடுகோழிகள்பலி
　　பரும்பூசைவாங்கு மருள்மா
ஹத்தியேசிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருக்
　　கண்ணிடங்கொண்ட வுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவு
　　வேம்புலி மகம்மாரியே. (ரு)

பரமனையெதிர்த்துநீ கைலாயகிரிமீது
　　பால்பூசை வாங்கிவிட்டாய்
படைகொண்ட யேமனது குடைகொண்டு தென்பதி
　　பருங்கிடாக் காவுகொண்டாய்
திரமுள்ளதேவர்சூழ் யிந்திரன் றன்னையும்
　　திடீலென வணங்கவைத்தாய்
திரைபோன் றநதிநடுவில் சிரைநின் றுபூசித்து
　　சிவனிடப் பாகமுற்ருய்
பரசுராமன் றனைப் பெற்றபின்னின்னமும்
　　பக்குவக்கன்னியானுய்

பாரைச்சுமந்தபணி யணியாயணிந்தபின்
பற்றுதா மற்றவரவும்
காமேவுசிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருக்
கண்ணிடங் கொண்டவுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவு
வேம்புலி மகம்மாரியே. (௬)

அன்பாகநின்கோயில் வலமாகவந்துமே
அடிதொழு திடாதபேர்க்கு
ஆகாதஜன்னிச் சயித்தியஞ்சூலையோ
டட்டகுன்மம் பாண்டுநோய்
பன்னுமோராறுபத்து நான்குசுரதோஷமும்
பலவிஷக் கடிகுட்டமும்
பாதைமிருகவழுல துன்பமுஞ்சிலந்தியும்
பார்வைசூனிய மேவலும்
இன்னமுளநாலா யிரத்துநான்குநாறு
டீரிரண்டான பிணியை
யேற்றிவைத்தேயுனைப் போற்றவைப்பாய்தொழு
மேழையென்போ லடியர்மேல்
கண்ணுறாச்சிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருக்
கண்ணிடங் கொண்டவுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவு
வேம்புலிமகம்மாரியே. (௭)

சிதமிகுநோதிலாப் பகைவராறுமே
சிந்தனைச் செய்துவந்தால்

சந்றேனுமனமிளகி யுற்றதைச்சொல்லுவார்
செங்கண்மால் தங்கையுமையுன்
பாதகமலங்களைப் பன்னுறுமிரவுபகல்
பத்தியொடு சித்திநெறியாய்ப்
பார்மீதுயான்பாடும் கஷ்டநிஷ்டூரமதை
பலமுறை ரயுரைத்து நின்றும்
ஓதவறியாப்பிறவி யூமைபோல் செய்மோடி
யுண்மையோ யிதுநன்மையோ
உனையன்றிமற்றெனக் காரிங்குபேருதவி
யொன்றேனு முறைசெய்யம்மே
காதல்மிகுசிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருக்
கண்ணிடங் கொண்டவுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவு
வேம்புலி மகம்மாரியே. (அ)

சீர்மேவுமுப்பத் திரண்டறமதுண்டெனச்
செப்புவா ருலகமீது
ஜென்மித்தநாள்கொண்டு யிம்மட்டிலோரறஞ்
செய்தறிகிலேன் திறமையாய்
பார்மேவுகல்வியுங் கற்றறிகிலேன்கொடிய
பாவியோர் விரதமறியேன்
பங்கஜநிகர்த்தவுன் பொற்பாதகமலந்துதி
பண்ணவறியேன் சிறியனான்
நீர்மேவுசெஞ்சடைக் கடவுளொருபங்கிலும்
நினைவிலு மமர்ந்தாயே

நீயன்றியென்பிழை பொருத்தாளபூமிமிசை
நேரானவன்னை யறியேன்
காமேவுசிந்தாத்திரி குட்டிநாய்க்கன்தெருக்
கண்ணிடங் கொண்டவுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவு
வேம்புலி மகம்மாரியே. (௯)

தஞ்சமென்றோர்களைக் காக்கின்றதெய்வமே
தங்கவொளி வானவடிவே
தமிழ்மாலைபூண்டருள யிச்சித்துவிங்கெனைத்
தடுத்தாண்டுகொண்டு மனதில்
கொஞ்சமேனும்புத்தி தந்துபதிகங்களாற்
கொண்டாட தொண்டளித்தாய்
கோமளிமாதங்கி சாமளியம்மொழியின்
குற்றமெல்லாஞ் சகித்தே
வஞ்சிவாக்கத்தில்வளர் மோகனுச்சியின்
வரத்தாலுதித்த சிறியேன்
வறிவிலேனுயினும் சிதம்பராச்சாரியான்
வரைந்தசொல் லோங்கவருள்வாய்
கஞ்சமலர்குடைநீழற் குட்டிநாய்க்கன்தெருக்
கண்ணிடங்கொண்டவுமையே
காம்பரிசாம்பவி யாம்புவியெலாம்பரவு
வேம்புலி மகம்மாரியே. (௧௦)

வேம்புலியம்மைபதிகம் - முற்றிற்று.

---

ஆக புத்தகம் 93.

உ

வேதவிநாயகர் துணை.

மதுரை

# மீனாட்சியம்மை

அறுசீரடியாசிரியவிருத்தம்.




சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரவர்களது
சென்னை - சூளை,
சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1903.

37

# சுகந்த
# பரிமளசாஸ்திரம்.

இந்த பரிமள சாஸ்திரத்தில் மைசூர், டில்லி, புதுக்கோட்டை தஞ்சாவூர், பெங்களூர், கார்வேட்டிநகரம் முதலான சமஸ்தானங்களில் கையாண்டுவந்த அத்தர்பில்லைகள், பூசுபில்லைகள், முகவசீகரபில்லைகள், கூந்தல் தூபங்கள், ஊதுவத்திகள், சுகந்தபொடிகள், கதம்பப்பொடிகள், வாசனைமூக்குத்தூள் தினுசுகள், மல்லிகை, ரோஜா, சம்பங்கி முதலியபுஷ்பங்களை முகர்ந்தால் பேதியாகக்கூடிய இராஜாங்க விரோசனங்கள், கூந்தல் எண்ணெய்கள், மயிர்வளரும், பரிமளயெண்ணெய்கள், கேசரஞ்சனிஆயில், ஹேராயில், நன்னாரி, சந்தணம், திராட்சி, எலுமிச்சை, நாரத்தை, மாதுளை, இஞ்சி, ரோஜா, தாழம்பூ இவைகளால் செய்யப்பட்ட (சர்பத்துகளும்,) இன்னும் அநந்தவிதமான பரிமளவகையராக்கள் யாவும் இந்த புஸ்தகத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

சுதேசிகள் கைத்தொழில் விருத்திக்காக இந்த பரிமளசாஸ்திரம் அச்சிடப்பட்டிருக்கிறது. ஆகையால், இந்த கைமுறைப்பிரகாரம் சகலமானபேரும் தாங்களே செய்துக்கொண்டு சொந்தத்திற்கும் வியாபாரத்திற்கும் வைத்துக்கொள்ளலாம்.

புத்தகம் 1-க்கு விலை அணா 8.

சிறுமணவூர்- முனிசாமி முதலியார் கம்பெனி
பெரம்பூர்பாரெக்ஸ் போஸ்ட், மதிராஸ்.



உ

அம்பிகை துணை.

---

மதுரை

# மீனாட்சியம்மை

அறுசீரடி யாசிரியவிருத்தம்.



எனக்கயன்விதிப்படியோபூருவத்தின்செயல்தானோ
வேதோவம்மா
உனக்கடிமையானபின்பு யேதுகுறைவந்தாலு
முனக்கேபாரம்
வனக்கிளியேமலர்த்திருவே சொக்கரிடபங்கில்வளர்
வனசமாதே [மா
மனக்கவலையார்க்குரைப்பே னெனக்கிரங்கவேண்டுமம்
மதுரைவாழ்வே. (க)

இனம்பிரிந்தமானதுபோ லுடல்பதைத்துவலிமையோ
டிளைத்தென்னாளும்
மனம்பதறிஉழன்றுழன் றடியேனுக்கருள்சொற்ற
வல்நெஞ்சோதான் [மோ
நிசம்படைத்தபெருக்கமதோ திருவனந்தன்பராமுக
தாயேயென்மேல்
வனம்பரவிக்கடம்பவன சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (உ)

தாயிழந்தகன்றதுபோல் பாதவித்துநிலைகுலைந்து
தவித்தென்னாளும்
தீயில்விழுமெழுகதுபோ லுருகிமனம்வெருங்கூடாய்
திகைத்தேனம்மா
தூயமலர்புரந்திருவே கடம்புரியும்பதத்தாளே
தோகைமாதே
மாயவற்குசகோதரியே சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (ங)

பொல்லாதநெடுநீலி பழிக்கஞ்சிபழிசுமக்கப்
போராய்போராய்
சொல்லாதநாளுமுண்டோசொன்னாலுங்கேட்கிலையோ
யென்சொற்கூந்தல்

யெல்லாரும்வாழ்ந்திருக்க நானொருவன்தாழ்ந்திருக்க
இயலோ அம்மா
வல்லாறுகளபமுலை மாமயிலேமீனாட்சி
மதுரைத்தாயே. (ச)

இருபொழுதவருமையினா லனுதினமும்பிணியதனா
லிளைத்துவாடி
உருகுவதுஅயன்விதியோஅல்லவென்றுனுன்செயலோ
உரைக்கமாட்டேன் [யே
திருவுருவேஅருளொளியே தெள்ளமுர்தேசேயிழை
தேவர்போற்றும்
மருவணியுங்குழலணங்கே சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (ரு)

நஞ்சுதின்றபோதுபோ லுடல்மயங்கிவருமையினா
னலிந்தென்னாளும்
சஞ்சலமோசமுத்திரமா யலையதனில்துரும்பதுபோல்
தவித்தேனம்மா
கொஞ்சுகிளிமொழியாளே கஞ்சமலர்கரத்தாளே
தோகைமானே
வஞ்சியிடைதிருவனங்கை சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (சு)

அதிமதுரவிதரணம் பாடுவதுஉன்செயலோ
அதுவல்லால்
நதிதரித்தோரிடப்பாக விளங்குகின்றமாமயிலே
நளினமான
கெதிபெறவேயடியேனுக் குனதுபதந்தந்தருள்வாய்
கிருபைவைத்து
மதிநுதல்போல்திருவனங்கைசொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (எ)

உலையிலிடுமெழுகதுபோ லுருகிமனம்வெருங்கூடா
யுலர்ந்துவாடி
நிலைகுலைந்துமதிமயங்கி நின்றுமிகபாதவிக்க
நீதியோசொல்
கலைமகளேவடிவனங்கை கமலமுகத்திருமாதே
கருணையாளே
மலைமகளே அரந்தனழக்கும் சொக்கர்பங்கில்மீனாட்சி
மதுரைத்தாயே. (அ)

இளமைதனில்வருமையினுல் மனதுமிகநொந்துருகி
இளைத்துவாடி
விளைநிலத்தில்களர்விழுந்த வாரதுபோலடியேனும்
விளங்கநின்றேன்

குளை யிடைச்சியன்னநடை குயில்மொழிச்சிநீகருணை
　　கூர்ந்துரட்சி
மழலைமொழிகுயிலனங்கை சொக்கர்பங்கில்மீனாட்சி
　　மதுரைத்தாயே.　　　　　　　　　　(௯)

திடமுடனேயுனைப்பாட செல்வமுண்டாம்கல்வியுண்
　　சிறப்பதாக　　　　　　　　　　　　[டாம்
அடவுடனேயிப்புவியி லெந்தனுடமொழிக்கிரங்கி
　　அருளேசெய்து
சடைமுடியாரிடப்பாகம் பச்சைநிறமாய்நின்ற
　　தையல்மானே
மடமயிலேஉன்னுடைய மலர்ப்பாதந்தந்தருள்வாய்
　　மதுரைத்தாயே.　　　　　　　　　　(௰)

மதுரைமீனாட்சியம்மை

அறுசீரடியாசிரியவிருத்தம்

முற்றிற்று.

---

ஆகபுத்தகம் 94.

உ

தேவிஸகாயம்.

# திருமங்கலம்
# மீனாட்சியம்மை பதிகம்.



பூவாளூர்

ம-ா-ா-ஸ்ரீ சோதிடசித்தாந்தி

இராமலிங்கம்பிள்ளை அவர்கள்

இயற்றியது.




சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது

சென்னை-ஞூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற் பதிப்பிக்கப்பட்டது.

1908.

உ

கணபதிதுணை.

# திருமங்கலம் மீனாட்சியம்மை பதிகம்.

காப்பு.

நேரிசை-வெண்பா.

திருமங்கலப்பதிவாழ் தேவிமீனாட்சிக்
கொருமங்கலப் பதிகமோத—வருமெங்கள்
ஆரணத்தி னுட்பொருளா மைந்துகரத் தோர்கோட்டு
வாரணத்தின்றாண்மனமே வாழ்த்து.

சுப்பிரமணியர் துதி.

மதிபூத்த செஞ்சடையா னுதல்விழியிற் புலிங்கமென
வயங்கியாண்டும்
துதிபூத்த வானமுழுதும் படர்ந்துவளி யடர்ந்துகன
றெடார்ந்துநீரிற்
பதிபூத்த சிறுமழலை யாய்த்தவழ்ந்து நிலந்தனிற்பல்
விளையாட்டெய்தி
விதிபூத்த வேற்கரங்கொண் டென்னுள்ள மேயானை
மேவிவாழ்வாம்.

## நூல்.

### பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூமேவுதிருமாது கலைமாது மகிழ்வினின் புடைநின்றுசேடியரெனப் போற்றிக் கடைக்கண்வழி குற்றேவல்புரிதரப் புனிதவரமகளிர்யாருந், தேவேவு மாலவட்டஞ் சாமரைப்பணி தெரிந்திரட்டத்துளவினொன் செய்யமலரவன் முதலவமரர் சந்நிதியிற் செறிந்திடமிலாதுவிரவித், தூமேவுமறைமொழியினம்மையம்பிகைகௌரி சுந்தரித்ரிசூலிபாலை துன்றுகண பணநாக பூஷணியெனத்துதிகள் சொலவரசுவீற்றிருந்து, மாமேவு திருமங்கலப்பதி நல்வாழ்வுபெற வாழுமருமறைமுதல்வியே வானாட்சி யுறமன்னு மீனாட்சியம்மையே வளருமரகதவல்லியே. (க)

மின்னுமுகிலன்னசில் லோதியின் மணிப்பிறைவிளங்குமழகும்விலையிலா வெண்முத்தினஞ்சூழி யத்தினிடையேநால விட்டபொற்சுட்டியழகும், கொன்னுபுரு வச்சிலைக் கணையினிற் பேரருள் கொழிக்குமிருவிழியினழகும் கோதிலாப் பவளவள்ளத்து வெண்முத்தொளி குலாவுபுன்னகையினழகும், துன்னுமணிய

ணியாடை சூழழகு நூபுரந் தொடுபாதமலரினழகுந்
தோன்றவந்தடியர்தமை யாண்டருளு முதல்வியே
சோதிவடிவானபரையே, மன்னுதிருமங்கலப் பதிவா
ழுமிறைவியே வரதனிடமமருமமுதே வானாட்சியுற
மன்னு மீனாட்சியம்மையே வளருமரகதவல்லியே. ()

தாழ்ந்துமுடியமரர்பல மெய்தவொருகொம்பிற்
றழைத்தோங்குமத்தியுமயில் தங்குங்கடம்பின் முத
லுஞ்சூழவளர்செஞ் சடாடவிப்பவளவரையிற், சூழ்ந்
துபடர்வுற்று மணமுறுதெய்வவல்லியே சுருதிமுடி
யலருமலரோ தூய்பமனமுள்ளுளே தித்திக்கவொழுகு
சுவை தோன்றுதேறற்பெருக்கே, வீழ்ந்துபணிவுற்
றுத் துதித்துமனமுருகாது விணிலுழல்தீயனேனை
மெலியாதெடுத்தாண்ட தண்ணருட்கடலே விளங்கு
கோமளைசாமளை, வாழ்ந்தடியர்கூடிமகிழ் திருமங்கல
ப்பதியில மன்னியருள்கின்றதாயே வானாட்சியுறமன்
னு மீனாட்சியம்மையே வளருமரகதவல்லியே. (௩)

எங்குமொளிமயமா யிலங்குபேரருளாகி யின்ப
நிறைபூரணமதாம் எம்பிரானுடைமன்னி யைந்தொழி
லியற்றியுலகியாவையு மளித்தகன்னி, பொங்குமிகுகரு

ணையா லன்பருறு துன்பெலாம்போக்கியேபுத்திமுத்தி பொருந்தநன்னேக்குதவு திருவிழிக்கடையுடைய புனிதையேபுவனவாழ்வே, தங்குமுடல்நோயுமல நோயுமெனைவாட்டிடத் தமியேனுமேங்கிநொந்து சார்பிலார்போலநின் றாசலாடித்திரிதல் சற்றுநீயெண்ணுய்கொலோ, மங்குல்வளர்மாடமிறைதிருமங்கலப்பதியில் வாழ்வுபெறுமிமயமயிலே வானாட்சியுறமன்னு மீனாட்சியம்மையே வளருமரகதவல்லியே. (ச)

திருவளருமலையகத்தே பிறந்தருமறைச் சென்னிதனிலேதவழ்ந்து சிதரன்பிரமன்முதலான புலவோரகத் தேமலரிலேயிருந்திட், டுருவளருமண்டபகி ரண்டமாஞ்சிற்றிலி னுவந்துசென்றேபோகமா உண்ணுசிறுசோறட் டுயிர்ப்பாவைகட்கூட்டி யோதுமிருவினைவடத்திற், கருவளர்பிறப்பிறப்பா மூசலாட்டிக் களித்தருளியாடல்புரியுங் காமருமடம்பேதையே கருணைவாரியே கற்பகமலர்ந்தகொம்பே, மருவளர்மலர்த்தடத்திரு மங்கலப்பதியின் வாழுமானந்தவடிவே வானாட்சியுறமன்னு மீனாட்சியம்மையே வளருமரகதவல்லியே. (ரு)

மண்ணுலகிலனைமார் கருப்பமுற்றுப்பிறவி மன்
னுதுயருங்குழவியாய் மாழ்கிமலநீரிலுழலனை யிடைப்
படுதுயரு மறுகிவிளையாடுதுயரும், எண்ணுமிளமைக்
கல்வியுறுதுயருமெவ்வனத் திளமாதர்தனவரையிலே
எறியவர்கடிதடப்படுகுழியிலாழவள ரீறிலாத்துயரு
முதுமை, நண்ணுபிணியுறுதுயரு நிறையுமிப்பாழுட
லை நான்சுமந்தெய்த்தலைவனே நாதாந்தவேதாந்த
போதாந்தமுதல்வியேநாயினேற்கருள்செய்கண்டாய்,
வண்ணமறையோலிடுந் திருமங்கலப் பதியில் வாழு
மொருமணிவிளக்கே வானாட்சியுறமன்னு மீனாட்சியம்
மையே வளருமரகதவல்லியே. (௯)

விமலையம்பிகைகொரி சுந்தரிமனோன்மணி விஜ
யையபிராமவல்லி விந்தைபகவதிசத்தி யுமைகௌரி
ருத்திரி வீரிமெய்க்காத்தியாயனி, அமலைகாமக்கோட்
டி முக்கண்ணியோங்குபரை யம்மைசாம்பவியாரியை
ஐயையந்தரிமலை மடந்தைசங்கரிநாரி யயிராணியரனி
டத்தாள், நிமலமாமிந்நாம முதலாயநாமங்க ளீடுமன்
பிற்றுதித்தே நெஞ்சமதுநெக்குநெக் குருகயானின்ன
டியை நின்றுபணிபேறருளுவாய், மமதையறுமடியர்
செறி திருமங்கலப்பதி மகிழ்ந்துவளருலகம்மையே

வானாட்சியுறமன்னு மீனாட்சியம்மையே வளருமரகத வல்லியே. (எ)

தொண்டுபுரிகின்றநின் னடியர்தம்மடியிற் றெழும்புசெயமாட்டாதுசிர் றுன்றுபுண்ணிய மொன்றும் வினையென்பதென்றுந் தொடங்கமாட்டாதன்புளங், கொண்டுநின்சேவைசெய் தேத்தித்துதித்துமுன் கூத்தாடிமுக்கரணமுங் குழைவுறவுமாட்டா திவ்வுலகின் மருள்பூண்டுதுயர் கூர்மாயவாழ்வுதனிலே, மிண்டுபல விடயத் துலேந்துதிண்டாடியுள் மெலியுமெனையாண் டுமுத்தி வீட்டினுற்றானந்த வெள்ளத்தழுந்தநின் விழிக்கடையினருள் செய்வையோ, வண்டுமலர்மண்டு காத்திருமங்கலப்பதியின் மலையரையனருள்செல்வமே வானாட்சியுறமன்னு மீனாட்சியம்மையே வளருமரகத வல்லியே. (அ)

அளவிலகிலாண்டப் பரப்பெலாந்தன்னுளே யமையநின்பாலமைவுறும் அமலப்பிரான் றிருத்தாள் போற்றிமுன்னுடு மைங்கரக்களிறுபோற்றி, இளமயிலினுலகெலா மொருநொடியில்வலமாக வேறிவருமேந்தல்போற்றி இவர்களைக்கண்டுகளி யுற்றுத்தளும்புநின் னெழில்விழிக்கருணைபோற்றி, தளவினெளிர்ந

கைபோற்றியபயவரதக்கரத் தண்காந்தள்போற்றியடி யேன் சார்பாகநின்றெனைத் தாங்கியருள்செய்யுநின் றுண்மலர்கள்போற்றிபோற்றி, வளமலியவோங்குதிரு மங்கலப்பதியிலெம் மான்மகிழமகிழுமரசே வானாட்சி யுறமன்னு மீனாட்சியம்மையே வளருமரகதவல்லியே.

மானமுறநின்னைத் துதிக்குமந்தணர்வாழ மாமறைகள்வாழவிண்ணோர் வாழ்தருமுறுப்பினு னினம் வாழ மும்மாரி மல்குமுகில்வாழவன்ப, ரானபெரியோர்வாழ வறம்வாழவுலகினி லமைந்தவருணாச்சிரமநல லன்புமிகுபத்திநெறி சைவநெறிவாழ வுயரமுதாசனத்தவர்கடங், தானமலிகற்பகமெனும் பழநியப்பவேள் தன்னகமுவந்துபணிசெய் தமனியத்தேய்தரு திருக்கோயிலமருநீ சந்ததமும்வாழவாழ, வானமளவுங்கொடித் திருமங்கலப்பதியின் மன்னியுறைதெய்வமணியே வானாட்சியுறமன்னு மீனாட்சியம்மையே வளருமரகதவல்லியே. (கo)

மீனாட்சியம்மைபதிகம்

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 95.

உ

ஸ்ரீதேவிதுணை.

# திரிபுரைமாலை.

இஃது
ஸ்ரீ. ந. கருப்பாயிரம்பிள்ளையவர்கள்
குமாரன்
முத்துசாமிபிள்ளையவர்களுக்குக்
கிடைத்து
அவரது வேண்டுகோளின்படி

சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது
சிவகாமி விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1908.





# திரிபுரைமாலை.



காப்பு.

ஆறுமுகவனை நாறுமலர்தொடு
கூறுமடியவர் பேரும்பெற
அறுமுகவேல் சுப்பிரமணியக்கடவுள் துணை.

இராசவசீகரம்.

நாதரிவீரி வயிரவிகாளி வாலைகுணப்
பூதரியோகப் புரானந்தகிகாரணிப் பொற்கிரியாள்
நீதரிமந்திர சடாச்சரிஎன்று என்னெஞ்சகத்துள்
ஆதரவாய் நின்றுதவும் திரிபுரைஆனந்தியே. (க)

உலோகவசீகரம்

மாணிக்கம்பச்சை வைடூரியத்தி மரகதத்தி
ஆணிக்கனகிரத்தி பஞ்சாட்சர வட்சரத்தி
பேணிக்கமலபதம் தொழுவார்க்கு பிரதட்சணமாய்
தோணிக்கடாட்ச மருள்வாய் திரிபுரைசுந்தரியே. (உ)

சருவவசீகரம்.

அங்-உங்-கௌவும்-கிரியும்-சிரியும்-கையும்-கிலியும்
ஓங்-இங்-கொஞ்சில் வென்றுருநூறும் ஓதவென்முன்
சிங்கத்திலேரி திரிசூலமேந்தி சினம்தனிலே
என்கலிதீர்க்கவருவாள் திரிபுரை ஈஸ்வரியே. (ங)

இதுவுமது.

மூவுலகெங்கும் தானாகிநின்றருள் முக்கண்ணியே [யும்
சிவ்வும்-கிலியு-மஞ்சிங்-கொவ்வு-மிவ்வும்-சிலியும்-கிலி
மவ்வும்-சிவாய-நமாவென்று எந்தன்மனதில்வைக்கும்
அவ்வேளைவந்து முன்னிற்பாள் திரிபுரைஆனந்தியே.

சத்துருகலகம்.

பஞ்சாட்சரத்தி வராகிபராபரிபங்கயத்தி
அஞ்சுமுகத்தி ஆதிபராசத்தி அம்பரத்தி
தஞ்சமெனநம்பு மன்பர்க்கிடர்வினை தானினைக்கும்
வஞ்சகரை நெஞ்சைப்பிளப்பாள் திரிபுரைவாலையுமே.

சத்துருஅஞ்சல்.

சத்துருசங்காரி சடாதரிசாம்பவி சற்குணத்தி
வத்திரிகங்காளி உமைதிருசூலினீ உத்தமத்தி
நித்தம்துதிக்கும் அடியார்க்கிடர்செய்த நீசர்தனை
குத்திஉதிரங்குடிப்பாள் திரிபுரைகோமணியே. (௬)

சத்துருமரணம்.

என்னுடைதனைப் பழித்தேசியெ திஞ்சிடும்பருடல் [கி
புண்ணுய்மெலிந்து அழிந்துதிரிசூலத்தைப்புகுதவிட்
விண்ணோரக்கொன்று சிங்கத்திலேரி விரைந்துஎந்தன்
கண்ணாரக்காண முன்னிற்பாள் திரிபுரைகாருணியே.

சத்துருகேட.

ஆங்காரிகாரி அகோரிவசிரி அகம்படைச்சி [தி
நீங்காமலென்மனச் சிந்தையில்நின்றருள் நிர்வாணிசத்
றீங்காரிஎந்தன் பகைஞரைவெட்டி நிலையளித்து
ஓங்காரிஎன் முன்வருவாள் திரிபுரைஉமையவளே. ()

## சத்துருநாசம்.

கையும்குவித்து இருபாதத்தைப்போற்றிக் கருத்தில் வைத்து, ஐயும்கிலியும்-சவ்வு-மங்குங்-கெங்-றிங்-ஆம்-ஓம்-கிலியும், சிவ்-சிவாயா-வென்றவரெனக்குஇடர்செய்தவரை, தீயிட்டெறிப்பாள் திரிபுரைவாலை சிவசத்தியே. (௰)

## சத்துருக்கள் படைதேரிக்க.

அஷ்டகெஜங்கள் வெருவக்கிரிகள் அதிர்ந்திடவே
வட்டஉலகம் திடுக்கிட பூதவாகனத்தில்
திட்டமுடன்சென் றயலார்தன்னைத் திரிசூலத்தினல்
பட்டுவிழக் குத்திக்கொல்வாய் திரிபுரைபார்வதியே.

## தைரியமாயிருத்தல்.

சங்கரிலோக தயாபரிவேணி சர்வவுயிர்க்கும்
எங்கும்ஒரு நிமையாகஇருந்தவள் ஏகசத்தி
அங்கையில்சூல கபாலமுமேந்தி அகோரமுடன்
எங்கும் நடுங்கவருவாள் திரிபுரையீஸ்பரியே. (௧௧)

## சத்துருநாவடக்கம்.

சதிரஉலகம் ஈரேழுநடுங்கத் தடவரையே
அதிரப்பொடி அண்டங்குலுங்க அன்பருடன்
எதிரிட்டவஞ்சகர் நாவையருத்து எமக்குமுன்னே
மதுரைதமிழ்க்கு முன்னிற்பாள் திரிபுரைவாலையுமே.

## பூதபிசாசுவிலக.

வேதவேதாந்தி விமலி,திரிசூலி வீரரணப்
பூதப்பிரேதப் பிசாசுகள்நெஞ்சைப் பொடிபடவே

வேதமெனுமந்திர வாளாலேவெட்டி விறட்டியே
எனக்காதரவாக வருவாள் திரிபுரைஆனந்தியே. ()

தம்பனம்.

தற்பரியானந்தி லோகாம்பரி சர்வேஸ்வரியே
சிற்பரிஞான சிவஞானபோதகி சின்மயத்தி
அற்புதமாகவந் தடியேனைரட்சித்து ஆண்டருளும்
உற்பனமே கதிரொளியே திரிபுரைஉத்தமியே. (கச)

மோகனம்.

மருவேகருங்குழல் மாதேவருக்கு மாமயிலே
திருவேசெழுங்கனி அமுர்தசிரோன்மணி தேவிசத்தி
சர்வேஸ்பரியே சதாநித்தியோக தயாபரியே
தருவே கடாட்சந்தருவாய் திரிபுரைசங்கரியே. (கரு)

உச்சாடனம்.

சிவஞானபோதகி செங்கைக்கபாலி திகம்பரியே
நவநீதகாரணி நால்வேதமும் திருநடனமிடும்
தவமானகாரணி வினோதபரிபூரணி சங்கரியே
நலமாகவந்தென்னைக் காப்பாய் திரிபுரைநாயகியே. ()

ருத்திரவசிகரம்.

கங்காளரூபி காளிபிடாரி கருணைமிகும்
அங்காளிசாமுண்டி யோகினியாமளை அம்பரத்தி
மங்காதெனுஞ் சுடரொளிப்பிரகாச வச்ரவல்லி
சிவகாளிவீதில் வருவாள் திரிபுரைதேவியுமே. (கஎ)

பார்வைக்கு மூலமந்திரம்.

மாதங்கி பத்திரமாகாளி சாமுண்டிமணிமந்திர
வேதங்கியாமள சாயுச்சியரூபி விமலிசத்தி
நாதங்கிஎந்தன் மனதில்குடிகொண்ட நிற்குணத்தி
பூதங்கள் சூழவருவாள் திரிபுரைபொற்கொடியே. ()

திசைக்கட்டுக்குமூலமந்திரம்.

வாரிச்சுவரிட வானநடுங்க வளைந்துக்கொண்டு
சூரிஎனவெகு சுரூபங்கொண்டே திருசூலமுடன்
சீறிஎனச்சென்று பூதப்பிசாசை சிதரவோட்டும்
வீரிஓங்காளி திரிபுரைவாலைஎன் மெய்த்தெய்வமே. ()

சகலபிணிதீர.

சூலிகபாலி பிடாரிவதுர்க்கை துரைச்சிகன்னி
மாலிவராகி புயனமயேஸ்பரி மாப்பறத்தி
நீலிகுடோரி காந்தாரிநிர்மலர் நிர்க்குணத்தி
வாலைதிரிபுரை என்பவர்க்குவல்பிணிதீர்ந்திடுமே. ()

எல்லையில்விலக்கம்.

ஆகாசமெங்கும் அனலாஎரிய அகோரமுற்றும்
வாகாஎழுந்து இடிபோல்முழங்கிஎன் மாற்றலரை
வேகாமல்வெந்து பொடிபட தீயிட்டுவேரறுத்து
ஏகாந்தமாகவருவாள் திரிபுரையீஸ்பரியே. (உக)

தன்னைகட்டுதல்.

நிமலிசிங்காரி நிட்களரூபி விமலிசத்தி
விமலிநிஷ்டூரி விகுர்தாணிகன்னி வித்தகத்தி
அமலிபுரந்தரி அஞ்சமுன்எட்டுக்கும் ஆதிமுதல்
கமலிஎனை எண்ணும்கார்க்குந் திரிபுரைகாருணியே.

வழக்குவெல்லுதல்.

சூலாயுதத்திசுடர்போல்நிறத்தி சோம்பகத்தி
காலாயுதத்தி கண்ணுயிரத்தி கருணைகரத்தி
வேலாயுதத்தி விமலாபரத்தி என்மேவலரை
வேலாயுததனைவிட்டெரிப்பாள் திரிபுரைத்தெய்வமே.

சாஸ்பரிசானித்தியம்.

தங்கச்சிலம்பணி பாதாரவிந்தம் தனைநினைந்து [மாய்
சங்கத்தில் செந்தமிழ்தான மாக்குதற்குசானித்திய
என் அங்கத்தில்நின்றுகுடியாய்வளர்ந்து அருள்தருவா
ய், செங்கைகபாலி திரிபுரைவாலை சிவசத்தியே. (உச)

மோகினிஅணுகாமல்.

பகிரதிவேணி யோகினியண்டம் படைத்தகன்னி
விகுருதிமாமந்திரரூபி கனுசத்தி மெய்ப்பொருளாய்
திகரியெனவளர்காமாக்ஷி என்றுதினம் நினைந்தால்
லகரியென வருள்தருவாய் திரிபுரைநாயகியே. (உரு)

பிரமராட்சதைவிலக.

பாதாளலோகம் பகிரண்டகூடம் படர்ந்தகண்டம்
தாதாளவந்த தயாபரியே இத்தரணிதன்னில்
வேதாளபூதம் ராட்சசிகாளி விருகைகளை [யே.
பாதாளம் தள்ளிப்புதைப்பாள் திரிபுரைவாலைபார்வதி

சத்துருவிரோதம்.

நீயே துணைஎன்று நெஞ்சம்தன்னில் நினைப்பவர்க்கு
மெய்யாகநின்று விளையாடும்சோதிஎன மேவுவரை
ஐயோவென்றோடி தட்டழிந்தோட அகோரமுடன்
தீயேவிமூட்டுவாள் திரிபுரைவாலைசிவசத்தியே. (உஎ)

எல்லைகருப்புவிலக.

திரிபுரைவாலை புவனையுமூன்றே தினம்தினமும்
இருதயந்தன்னில் மறவாதேபோற்றி எற்றவர்க்கு
மருவலரேவல்லிவிடு பில்லிசூனியம் வஞ்சனையும்
பருதியைக்கண்ட பனிபோலநீங்கும் பஞ்சாட்சரமே.

சகலபிணியுந்தீர.

உன்னைத்துதிக்கும் அடியார்தனக்கு உலகுதனில்
பின்னையிடர்வினை பேயுமுண்டோ பிரதட்சணமாய்
அன்னைபோல்வந்து அடியேனைகார்த்துஆண்டருளும்
புன்னைவனக்குயிலே திரிபுரைவாலைபுரந்தரியே. (௨௯)

சகலத்துக்கும் சக்கரம்.

தாயேசரணம் உன்பாதார தஞ்சந்தமியேன்தனக்கு
நீயேதுணையன்றி வேறேதுணைபில்லை விமலிசத்தி
ஆயேசமய மிதுவேளைவந்துவருள் தருவாய்
மாயேஸ்பரியே திரிபுரைஎன்றுன்னை வாழ்த்துவனே.

நித்தமுனைத்துதித் தேத்துவதெல்லாம்நின்பாதமலர்
மெத்தநெருப் பிட்டெரித்து என்மேதினியில், குத்த
ங்கள்கோடிசெய்தாலும்கடாட்சங்கொடுத்தருள்வாய்
சித்தமெய்ஞ்ஞானப்பொருளே திரிபுரைவாலைசிவசத்தி
யே. (௩௧)

திரிபுரைமாலை - முற்றிற்று.

---

ஆகபுத்தகம் 96.

உ

வேதவிநாயகர் துணை.

மதுரை மீனாட்சியம்மைபேரில்

# அம்பிகைமாலை.



சிறுமணவூர் - முனிசாமிமுதலியாரவர்களது
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1908.

மதுரை

மீனாட்சியம்மைபேரில்,

# அம்பிகைமாலை.

காப்பு-கட்டளைக்கலித்துறை.

நடக்குந்திருவிளையாட்டோடறுபத்துநாலுஞ்சொக்க, நடக்குந்தென்கூடலி லம்பிகைமாலையையாறினுக்குத், தடக்கும்பகம்பச் சிறுகட்புகர்முகத் தாலவட்ட, முடக்குந்தடக்கை யொருகோட்டுவாரண முன்னிற்கவே.

திருவேவிளைந்தசெந்தேனே வடிவிட்டதெள்ளமுதி, னுருவேமடப்பிள்ளை யோதிமமே யொற்றையாடகப்பூந், தருவேசின்றாமரைத் தாளேசரணஞ் சரணங்கண்டா, யருவேயணங்கரசே மதுராபுரியம்பிகையே.

நாட்கொண்ட கொங்கைத்துணையும் பொன்னேயுநஞ்சிழைத்த, வாட்கொண்ட நாட்டமுந்தொண்டைச்செவ்வாயுமருங்குடுத்த, தோட்கொண்ட செம்பட்டுமுத்தாரமுங்கொண்டு தோன்றியென்னை, யாட்கொண்ட நாயகியே மதுராபுரியம்பிகையே. (௨)

சுரும்புங்கணையைந்தும் பாசாங்குசமுங்கைக்கொண்டடியேன், றிரும்புந்திசைதோறுந்தோற்றுகண்டா

யிசைதேங்குமணிச், சுரும்புண்டகாவியுஞ்சோதிநிலா வின்றுளிருஞ்சற்றே, யரும்புங்கனங்குழலாய் மதுரா புரியம்பிகையே. (௩)

வடக்குன்றமேருவு மூதண்டமட்டும் வளைந்துபுர ங், கிடக்குங்கடலும் புவனங்களேழும் கிளர்மருப்பு த், தடக்குஞ்சரமெட்டு மெல்லாந்திருவுந்தி தாமரை யி, லடக்கும்பராசத்தியேமதுராபுரியம்பிகையே. (௪)

நோக்குங்கருணை விழியாற் பொதுவர நோக்கியெ ன்னைக், காக்கும்படிக்குக் கருது கண்டாயொளி சுக் குமிலா, வீக்குஞ்சடாடவி யானுண்டகாள விடத்தை யமு, தாக்குஞ்சிவானந்தியேமதுராபுரியம்பிகையே.

ஒளிகொண்ட வெம்பிறைத் தோடும்பொன் மேனி யுமூறியதோன், றுளிகொண்டசெங்கனிவாயுமுத்தா ரமுந்தோளுமென்றன், களிகொண்டநெஞ்சங் குடி கொண்டவாவிசை கக்கும்வரி, யளிகொண்ட பூங்குழ லாய் மதுராபுரியம்பிகையே. (௬)

பொடிப்பட்ட பிட்டுக்குத் தோள்கொண்ட கூடை மண்போட்டுப்பொங்கி, வெடிப்பட்டவைகை யடை த்தவந்நாள்சொக்கர்மேனிசற்றுங், கொடிப்பட்டபோ துமுழு நீலக்கோமளமேனியினு, படிப்பட்டதோவண ங்கே மதுராபுரியம்பிகையே. (௭)

விளையுங்கருக்குழி வீழாமலென்றன்வினைப்பிறவி, களையும்படிப்பதங் காட்டுவையோகமழு நீரைவென்று

வளையுந்தரளமணிந்தோடமூத்திய வெள்ளையைச்செ ன், றனையுங்கயல்விழியாய் மதுராபுரியம்பிகையே. ()

போர்க்குங்கலாமதியுங் கொன்றைமாலையும் பொ ன்முடிமேற், சேர்க்குந்தலைவன்முன் செல்லுகப்போ துதிரண்டமுத்தின், வார்க்குங்குமக்கொங்கை யானை க்கதிர்மணியாமுரசு, மார்க்கும்பரிபுரத்தாய் மதுரா புரியம்பிகையே. (௬.)

ஒழியாப்பனித்தடங் கண்ணீர்ததும்பவுந் துன்ன டிக்கே, பொழியாப்புதுமல ரிட்டுநிற்பார்க்குப்பொழி கருணை, விழியாற்சுரப்பவலர்ந்தசெந்தாமரை வீடுசெ ன்று, மழியாப்பதந்தருவாய் மதுராபுரியம்பிகையே.

நாரணங்கொஞ்சும் புகழ்நான்முகற்கும்பொன் னை ட்டவர்க்கும், காரணங்கொஞ்சுமுன் சிற்றடியேன்றி சைகட்டுமெட்டு, வாரணங்கொஞ்சுங் கடம்பாடவிய ன்மகிழ்னனுட, ஞரணங்கொஞ்சுமம்மே மதுராபுரி யம்பிகையே. (கக)

ஊடும்பொழுதுங் கருணைவிடாம லுரைப்பவர்தோ ட், கூடு நெறியிலை மறைப்பதென்றேநறைக் கொன் றையந்தார், சூடுந்தலைவன் றிருமார்பில்வாரிசொரிதரள, மாடுந்துணைமுலையாமதுராபுரியம்பிகையே. (க௨)

கொடிகொண்டசிற்றிடையார் பணிநூபுரங்கொஞ் சமடிப், பொடிகொண்ட சென்னியிற் கால்வைக்கு

மோபுற்றரவெடுத்து, முடிகொண்டசொக்க னழியா விரதமுடிக்கவென்றே, யடிகொண்ட பூண்முலையாய் மதுராபுரி யம்பிகையே. (௧௩)

பொருந்துங்கழல்விழி மாதர்களாசைப் புணரியில் யான், வருந்துந்துயரென் றொழிப்பை கொல்லோம ணப்பந்தரிலே, திருந்துங்கரம்பற்றி நற்பான்றிருமு கச்செல்வியெல்லா, மருந்துந்துணைவிழியாய் மதுரா புரியம்பிகையே. (௧௪)

பொன்னே நவமணியே யமுதேபுவி பூத்தடங்கா, மின்னே யளிவைத்த மெய்ப்பொருளேதப்பு வேலை யென்மெ, லெந்நேரங்காலன் விடுத்தாலுநீயிரு கைய மர்த்தி, யந்நேரம்வந்தளிப்பாய்மதுராபுரியம்பிகையே.

நுங்கேள்வர்பாதத்து மங்காதநான்மறைநூலிடத் துங், கொங்கேய்பொகுட்டுக்கமலாலயத்துங்குடிகொ ண்டமற், றெங்கேயிருக்கினு நாயடியேனுக்கிடர்வரு ம்போ, தங்கேவெளிப்படுவாய்மதுராபுரியம்பிகையே.

இணங்கே னொருவரை நின்னிருதாளன்றி யெப் பொழுதும், வணங்கேனொருவரை வாழ்த்துகிலேனெ ஞ்சில் வஞ்சகர்பாற், பிணங்கேனமிர்தம் பெருகுஞ்சி றியபிறைமுடித்த, வணங்கேசரணங்கண்டாய் மது ராபுரியம்பிகையே. (௧௭)

குன்றேயெனுமுலையார் தருங்காதற் கொடுமையெ லாம், வென்றேன்வெகுளியை விட்டுவிட்டேன்விரை

த்தாமரைத்தா, ளின்றேயென் சென்னிவைத்தாயினி யான்செயுமேவலெல்லா, மன்றேயுன்னேவல்கண்டா ய்மதுராபுரி யம்பிகையே. (௧அ)

வடிவைத்தவேல்விழி யாரனுராகமயக்கிற்சென்று, குடிவைத்தநெஞ்சென்று மீளுங்கொலோவன்பு கொ ண்டதொண்டர், முடிவைத்தவாரென் முடித்தலைமே ற்றுய்ய முகத்தின்றண்டை, யடிவைத்த கோமளமே மதுராபுரியம்பிகையே. (௧௯)

நெளிக்கும்புழுமொய்த்து மேயுங்குரம்பையினின் றுழுயி, ரொளிக்கும்பொழுது வெளிப்படுவா யண்ட முண்டவண்ண, றுளிக்குங்கருணையிற் சூல்கொண்டு லாவித்தொடர்ந்துபடர்ந், துளிக்கும் பசுங்கொண்ட லேமதுராபுரி யம்பிகையே. (உ0)

உலைகுதிக்குந்தழலூறியகானலை யுண்ணச்சென்று கலைகுதிக்கும்படி போலுழன்றேன்கழிச் சேல்வெரு ண்டு, வலைகுதிக்குஞ்செங் கழுநீருடைந்து வழிந்த செந்தே, னலைகுதிக்குந்தடஞ் சூழ்மதுராபுரி யம்பி கையே, (உ௧)

ஏலமடங்குங் குழலாற்குற்றேவலி லெய்த்தடியே ன், காலமடங்குமுன் வந்துநிற்பாய்விண் கடந்துநின் ற, கோலமடங்கு மறியாதபச்சைக் குழவிடைப்போ, லாலமதங்குமம்மே மதுராபுரியம்பிகையே. (உஉ)

கொஞ்சுங்கிளிமொழி யார்க்கன்புபூண்டு குலையுமெ ன்ற, னெஞ்சும்பொறப்பாத நினைப்பதுண்டோ வெண்

கணிலாமதியின், பிஞ்சுங்கழைவில்லு மங்குசபாச மும்பிச்சிமல, ரஞ்சுந்தரித்தவளே மதுராபுரி யம்பி கையே. (உங)

செழுந்துங்கக் கொங்கையு முத்தாரமும் பொற்சி லம்புந்துங்கட், கொழுந்துமகரக்குழையுமெல்லாம்வ ண்டுகோடிசுற்றி, யுழுந்தும்பைசூடுந் திருமேனியுமு ன் னுடலுமொன்று, யழுந்தும் பொழுதுமுண்டோம துராபுரியம்பிகையே. (உச)

பூண்டகைவாரிப் புதுமலர்தூவிநின் பொன்னடிக் கே, கூண்டகைசென்னி குவிக்கப்பெற்றேன்பிறக்சோ டணிந்த, நீண்டகைவேழுப்பிடரேறி வட்டநிலம்பிறக் கு, மாண்டகையேயணங்கே மதுராபுரியம்பிகையே.

கணையுங்குமிழுமிணைநெடுஞ்சாபமு நுகருப்வெள் ளைத், துணையும்பவளமுஞ் செவ்விளநீருந் துவண்ட பச்சைப், பணையும்பனித்தடங் காந்தளும்பாந்தளும் பத்துமொன்று, யணையுந்திருவுருவே மதுராபுரியம்பி கையே. (உரு)

இணைக்கும்ப மென்முலையார் விழிவேலுக்கு மெய் யுமதன், கணைக்குந்தனியிலக்காய் விடவோமணிக்கச் சகலாத், துணைக்கும்ப மென்முலையார் சொக்கன்மே னிதுவளக்கட்டி, யணைக்குஞ்சதானந்தியே மதுராபுரி யம்பிகையே. (உஎ)

மழைக்குந் தளமடவார் தருங்காதல் வலைத்தலைப்ப ட், டுழைக்குஞ்சழக்கனைக் காப்பதுண்டோ விரண்டு ன்மணிக், குழைக்குங்கரந்தசுரும்பையெல்லாங்குழை யூடெடடந், தழைக்குங்கயல்விழியாய் மதுராபுரியம்பி கையே. (உஅ)

முலைக்கேயவசத்தொழில் விளைப்பாரின்பமோகமெ னும், வலைக்கேயகப்பட்டருந்திவிடாமல் வலியவந்தே ன், றலைக்கேபதம்வைத்த தண்ணளியேமுத்தந் தத்து திரை, யலைக்கேவிழிதுயில்வாய்மதுராபுரியம்பிகையே.

மணியுந்தவளமும் வெண்ணகையோவழிமூவர்செய் யத், துணியுந்தொழிருமுன் செய்தொழிலோ பத்தித் துத்திமுடிப், பணியுஞ்சுருளுங்கடலேழுநின்கரப்பங் கயத்தி, லணியுஞ்சிறுவளையோமதுராபுரியம்பிகையே.

அம்பிகைமாலை - முற்றிற்று.

---

## சிறப்புப்பாயிரம்.

பிடித்தாரக்கட்டியணைத்தமு தூட்டியபேயினுயிர், குடித்தாடுமாயன் குலசேகரன்வட குன்றைச்செண் டா, லடித்தானியற்றிய வம்பிகைமாலையானகவி, படி த்தார்கள்கற்பகக் காவும்பொன்னுடும் படைப்பவரே.

சிறப்புப்பாயிரம் - முற்றிற்று.

---

**ஆக புத்தகம் 97.**



உ

கணபதிதுணை.

# வாராகிமாலை.



## கட்டளைக்கலித்துறை.

### வசியம்.

இருகுழை கோமளந் தாள்புட்பராகமிரண்டுகண்ணுங்
குருமணிநீலங்கைகோமதகநகங் கூர்வயிரந்
திருநகைமுத்துக் கனிவாய்பவளஞ் சிறந்தவல்லி
மரகதநாமந் திருமேனியும்பச்சை மாணிக்கமே. (௧)

### தரிசனம்.

தோராதவட்டமுக் கோணசட்கோணந் துலங்குவட்
டத், தீராறிதழிட்டு ரீங்காரமுள்ளிட் டிதநடுவே
ஆராதனைசெய் தருச்சித்துப்பூசித் தடிபணிந்தால்
வாராதிராளல்ல வோவாலைஞான வாராகியுமே. (௨)

### தம்பனம்.

மெய்ச்சிரத்திற்பணி யார்மனங்காய மிகவெகுண்டு
கைச்சிரத்தேந்திப் புலானிணநாறக் கடித்துதறி
வச்சிரத்தந்தமுகப் பணியாற்குத்தி வாய்கடித்துப்
பச்சிரத்தங்குடிப் பாளைவராகி பகைஞரையே. (௩)

### மோகனம்.

படிக்கும்பெரும்புகழ்ப் பஞ்சமியன்பர் பகைஞர்தமை, அடிக்குமிருப்புத் தடிகொண்டுபேய்க ளவர்குருதி, குடிக்குங்குடர்கொண்டு தோள்மாலையிட்டுக் குலாவிமன்றில், கடிக்கும்வராகி பதினுலுலகு நடுங்கிடவே. (௪)

### ஆக்ருடணம்.

நடுங்காவகையன்பர் நெஞ்சினிற்புக்கவர் நன்ணலரைக், கொடுங்காளியுண்ணக் கொடுக்குங் குருதிகள் கொப்பளித்திட், டிடும்பாரக்கொங்கையின் மீதேயிரத்தத் திலகமிடும், தொடுங்கார் மனோன்மணி வராகி நீலிதொழிலிதுவே. (௫)

### உச்சாடனம்.

வேய்க்குலமன்ன திண் டோளாள்வராகிதன்மெய்யன்பரை, நோய்க்குலமென்ன விடும்புசெய்வார் தலைநொய்தழித்துப், பேய்க்குலமுண்ணப் பலிகொண்டு போட்டுப் பிணக்குடரை, நாய்க்குலங்களவக்கொடுப்பாள்வராகி யென்னாரணியே. (௬)

### பேதமரணம்.

நாசப்படுவர் நடுங்கப்படுவர் நமன்கயிற்றால்
விசப்படுவர் வினையும்படுவரிம் மேதினியோர்
ஏசப்படுவ ரிழுக்கப்படுவரென் னேழைநெஞ்சே
வாசப்புதுமலத் தோளாள்வராகியை வாழ்த்திலரே. ()

## வசியம்.

வாலைபுவனை திரிபுரைமூன்றுமிவ் வையகத்திற்
காலையுமாலையு முச்சியுமாகவெக் காலத்துமே
ஆலயமெய்தி வராகிதன்பாதத்தை யன்பினுன்னி
மாலயன்தேவர் முதலானபேர்களும் வாழ்த்துவரே.

## வித்துவேடணம்.

வருத்திப் பகைத்திரென் றோடறியா'மன் முன்
வானவர்க்காச், சிரித்துப்புரமெரித்தோன் வாமபாகத்
துத தேவியெங்கள், கருத்திற்பயிலும் வராகியெம்பஞ்
சமி கண்சிவந்தாற், பருத்திப்பொதிக்கிட்ட தீப்பொ
றிகாணும் பகைத்தவர்க்கே. (௯)

## மாரணம்.

பாப்பட்டசெந்தமிழ்ப் பாவாணர்நின்மலர்ப்பாத
ந்தன்னிற், பூப்பட்டதுவும் பொறிபட்டதோ நின்னை
யேபுகழ்ந்து, கூப்பிட்டதன்செவி கேட்கிலையோ வன்
டகோளமட்டும்,தீப்பட்டதோபட்டதோ நின்னையாளர்
தெருவெங்குமே. (௧௦)

## சிலைமாரணம்.

எங்குமெரியக் கிரிகள்பொடிபட வெம்பகைஞர்
அங்கம்பிளந்திட விண்மண்கிழிந்திட வார்த்தெழுந்து
பொங்குங்கடல்கள் சுவறிடச்சூலத்தைப் போகவிட்டு
ச, சிங்கத்தின்மீது வருவாள்வராகி சிவசத்தியே. (௧௧)

### மோகனம்.

படிக்கும்பெரும்புகழ்ப் பஞ்சமியன்பர் பகைஞர் தமை, அடிக்குமிருப்புத் தடிகொண்டுபேய்க ளவர் குருதி, குடிக்குங்குடர்கொண்டு தோண்மாலையிட்டுக் குலாவிமன்றில், கடிக்கும்வராகி பதினாலுலகு நடுங்கிடவே. (௪)

### ஆக்ருடணம்.

நடுங்காவகையன்பர் நெஞ்சினிற்புக்கவர் கன்ன லரைக், கொடுங்காளியுண்ணக் கொடுக்குங் குருதிகள் கொப்பளித்திட், டிடும்பாரக்கொங்கையின் மீதேயிரத்தத் திலகமிடும், தொடுங்கார் மனோன்மணி வராகி நீலிதொழிலிதுவே. (௫)

### உச்சாடனம்.

வேய்க்குலமன்னதிண் டோளாள்வராகிதன்மெய் யன்பரை, நோய்க்குலமென்ன விடும்புசெய்வார் தலை நொய்தழித்துப், பேய்க்குலமுண்ணப் பலிகொண்டு போட்டுப் பிணக்குடரை, நாய்க்குலங்கௌவக்கொடுப்பாள்வராகி யென்னாரணியே. (௬)

### பேதமரணம்.

நாசப்படுவர் நடுங்கப்படுவர் நமன்கயிற்றால்
வீசப்படுவர் வினையும்படுவரிம் மேதினியோர்
ஏசப்படுவ ரிழுக்கப்படுவரென் னேழைநெஞ்சே
வாசப்புதுமலர்த் தோளாள்வராகியை வாழ்த்திலரே. ()

## வசியம்.

வாலைபுவனை திரிபுரைமூன்றுமிவ் வையகத்திற்
காலையுமாலையு முச்சியுமாகவெக் காலத்துமே
ஆலயமெய்தி வராகிதன்பாதத்தை யன்பிலுன்னி
மாலயன்மேவர் முதலானபேர்களும் வாழ்த்துவரே.

## வித்துவேடணம்.

வருத்திப் பகைத்திரென் றோடறியா'மன் முன் வானவர்க்காச், சிரித்துப்புரமெரித்தோன் வாமபாகத் துத தேவியெங்கள், கருத்திற்பயிலும் வராகியெம்பஞ் சமி கண்சிவந்தாற், பருத்திப்பொதிக்கிட்ட தீப்பொ றிகாணும் பகைத்தவர்க்கே. (௯)

## மாரணம்.

பாப்பட்டசெந்தமிழ்ப் பாவாணர்நின்மலர்ப்பாத ந்தன்னிற், பூப்பட்டதுவும் பொறிபட்டதோ நின்னை யேபுகழ்ந்து, கூப்பிட்ட தன்செவி கேட்கிலையோ வண் டகோளமட்டும்,தீப்பட்டதோபட்டதோ நிந்தையாளர் தெருவெங்குமே. (௧௦)

## சிலைமாரணம்.

எங்குமெரியக் கிரிகள்பொடிபட வெம்பகைஞர்
அங்கம்பிளந்திட விண்மண்கிழிந்திட வார்த்தெழுந்து
பொங்குங்கடல்கள் சுவறிடச்சூலத்தைப் போகவிடு
ச், சிங்கத்தின்மீது வருவாள்வராகி சிவசத்தியே. (௧௧)

## சத்துருமாரணம்.

சத்திசுவுரி மகமாயியாயியென் சத்துருவைக்
குத்தியிரணக்குடரைப் பிடுங்கிக் குலாவிநின்றே
இத்திசையெங்கு நடுங்கக்கிரிக ளிடிபடவே
நித்தநடித்துவருவாள் வராகியென் னெஞ்சகத்தே. ()

## பூதமாரணம்.

நெஞ்சகந்தன்னி னிறைந்திருக்கின்றவ ணிர்க்குணத்தி
நஞ்சணிகண்டத்தி நாராயணிதனை நம்புமெற்கு
வஞ்சனைபண்ணி மதியாதபேரைவா ளலையண்ணக்
கொஞ்சிநடந்துவருவாள் வராகி குலதெய்வமே. (௧௩)

## எதிரிமாரணம்.

மதுமாமிசந்தனைத் தின்பாளிவளென்று மாமறை
யோர், அதுவேயுதாசினஞ் செய்திடுவாரந்த வற்பர்க
டகள், கதிர்வாயடைத்திட வுள்ளங்கலங்கக் கடிகடித்
து, விதிர்வாளில்வெட்டி யெறிவாள்வராகி யென்மெய்
த்தெய்வமே. (௧௪)

## தேவிஆக்ருஷணம்.

ஐயுங்கிலியுமெனத் தொண்டர்போற்ற வரியபச்சை
மெய்யுங்கருணை வழிந்தோடுகின்ற விழியுமலர்க்
கையும்பிரம்புங் கபாலமுஞ்சூலமுங் கண்ணெதிரே
வையந்துதிக்க வருவாள்வராகி மலர்க்கொடியே. (௧௫)

## சத்துருமாரணம்.

மாளுமனமுந் தலையுங்குலையத் தரியலர்கள்
மாளும்படிக்கு வரந்தருவாயுன்னை வாழ்த்துமன்பர்

கோளும்பகையுங் குறியார்வெற்றி குறித்தசங்கும்
வாளுங்கடசமுஞ் சூலமுமேந்தி வருந்துணையே. (கசு)

லோகமாரணம்.

வருந்துணையென்று வராகியென்றன்னையை வாழ்த்திநிதம், பொருந்துந்தகைமையைப் பூணுதவர்தம் புலானுடலைப், பருந்துங்கழுகும் வெம்பூதமும் வெய்ய பசாசுகளும்.விருந்துண்ணப்பட்டுக் கிடப்பவர்கண்டா யுடல் வேறுபட்டே. (கஎ)

ஏவல்சத்துருமாரணம்.

வேறுக்குநெஞ்சும் வினையும்வெவ்வேறு வெகுண்டுடலம், கூறுக்குநெஞ்சத்திற் செந்நிறமான குருதிபோர்க்கச், சேறுக்குங்குங்குமக் கொங்கையிற்பூசுந்திலகமிடு, மாறுக்குநேமிப் படையாடனைவணங் காதவர்க்கே. (கஅ)

மிருகமாரணம்.

பாடகச்சீரடிப் பஞ்சமியன்பர் பகைஞர் தமை, ஓடவிட்டேகை யுலக்கைகொண்டேற்றி யுதிரமெல்லாம், கோடகத்திட்டு வடித்தெடுத்தூற்றிக் குடிக்குமெங்கள், ஆடகக்கும்ப வினைக்கொங்கை யாளெங்களம்பிகையே. (கசு)

பாவமாரணம்.

தாமக்குழலுங் குழையும் பொன்னோலையுந் தாமரைப்பூஞ், சேமக்கழலுந் திதிக்கவந்தேற்குச் செகமதனில், வாமக்கரள களத்தம்மைபாதி வராகிவந்து,

திப்பவத்தைக் கெடுத்தாண்டு கொள்வள் சிவசத்தியே. (உ௰)

## சத்துருமாரணம்.

ஆராகிலுநமக் கேவினைசெய்பி னவருடலம்
கூராகும்வாளுக்கிரையிடுவாள்கொன்றை வேணியரன்
சீரார்மகுடத் தடியிணைசேர்க்குந் திரிபுரையாள்
வாராகிவந்து குடியிருந்தாளென்னை வாழ்விக்கவே.

## பிசாசு மாரணம்.

தரிப்பாள் கலப்பையென் னம்மைவாராகி யென்சத்துருவைப், பொரிப்பாள்பொரியெழச் செந்தீயிலிட்டுப்பொரிந்ததலை, நெரிப்பாடலைமண்டை மூளையைத்தின்றுபின்னெட்டுடலை, உரிப்பாள்படுக்கை விரிப்பாள்சுக்காக வுலர்த்துவளே. (உஉ)

## எதிரிமாரணம்.

ஊராகிலுமுட னாடாகிலு மவர்க்குற்றவரோ
டாராகிலுநமக் காற்றுவரோ வடலாழியுண்டு
காரார்கனத்த வுலக்கையுமுண்டு கலப்பையுண்டு
வாராகியென்னுஞ் சண்டப்ரசண்ட வடிவியுண்டே.

## சேனை மாரணம்.

உலக்கைகலப்பை வொளிவிடுவாள்சட காழிசங்கம், வலக்கையிடக்கையில் வைத்தவராகியென் மாற்றலர்கள், இலக்கமில்லாத வெழில்பெருஞ் சேனையெ

திர்வரினும், விலக்கவல்லாளொரு மெல்லிதன்பாதம் விரும்புகவே. (உ௪)

சத்துருமாரணம்.

தஞ்சமுன்பாதஞ் சரணுகதியென்று சார்ந்தவர்மேல், வஞ்சனைபில்லி கொடியேவல் சூனியம் வைத்தவரை, நெஞ்சம்பிளந்து நிணக்குடல்வாங்கி நெருப்பினிலிட், டஞ்சக்கரங்கொண் டறுப்பாள்திரிபுரையானந்தியே. (உரு)

அலைபட்டுநெஞ்ச மலைந்துயிர்சோர வலகைக்கையால், கொலைபட்டுடலங் கழுகுகள்சூழக் குருதிபொங்கித், தலைகெட்டவயம் வேருய்ப்பதைப்புற்றுச்சாவர் கண்டீர், நிலைபெற்றநேமிப் படையாடனை நினையாதவரே. (உ௬)

பகைவர்மாரணம்.

சிந்தைதெளிந்துனை வாழ்த்திப்பணிந்து தினந்துதித்தே, அந்திபகலுன்னை யர்ச்சித்தபேரையசங்கிதமா, நிந்தனைபண்ணி மதியாதலுத்தர் நிணமருந்திப், புந்திமகிழ்ந்துவருவாய் வராகிநற் பொற்கொடியே. ()

படைமாரணம்.

பொருப்புக்குமாறுசெய் யாழியுந்தோடும் பொருப்பைவென்ற, மருப்புக்குநேர்சொலுங் கொங்கையுமேனியும் வாழ்த்துமென, திருப்புக்கடிய மனத்திற்குடிகொண் டெதிர்த்தவர்க்கு, நெருப்புக்குவாலெனக்கொல்வாய்வராகியென் னிர்க்குணியே. (உ௮)

## மோகனமாரணம்.

தேறிட்டநின்மலர்ப் பாதாரவிந்தத்தைச்சிந்தை செய்து, நீறிட்டவர்க்கு வினைவருமோநின் னடியவர் பால், மாறிட்டவர்தமை வாளாயுதங்கொண்டு வாட்டி யிரு, கூறிட்டெறியவருவாய்வராகி குலதெய்வமே. ()

## உச்சாடனம்.

நரிபரியாக்கிய சம்புவின்பாகத்தை நண்ணியமா ன், அரியயன்போற்று மபிராமிதன்னடி யார்க்குமுன் னே, சரியாகநின்று தருக்கஞ்செய்மூடர் தலையைவெ ட்டி, யெரியாயெரித்து விடுவாள்வராகி யெனுந்தெய் வமே. (௩௰)

விற்றிருப்பாணவ கோணத்திலேநம்மை வேண் டுமென்று, காத்திருப்பாள்கலி வந்தணுகாமலென்கண் கலக்கம், பார்த்திருப்பாளல்லவெங்கேயென்றங்குசபா சங்கையில், கோத்திருப்பாளிவ ளேரென்னையாளுங் குலதெய்வமே. (௩௧)

சிவஞானபோதகி செங்கைக்கபாலி திகம்பரிநற், றவமாருமெய்யன்பர்க் கேயிடர்சூழ்ந்தரியலரை, அவ மானஞ்செய்யக் கண்களையேவுமகோரியிங்கு, நவமாக வந்தெனைக் காக்குந்திரிபுர நாயகியே. (௩௨)

வராகிமாலை-முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# ஆஸ்தானமாலை.

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1910.

உ

சிவமயம்.

நன்றியற்ற

# சண்டாளர் சகவாசம்.



சண்டாளர் சகவாசமென்னும் புத்தகத்தில் பதிவுசெய்திருக்கும் சரித்திரங்களென்னவென்றால்,— சிநேகிதத் துரோகிகள், உத்தியோகத் துரோகிகள், குடும்பத்துரோகிகள், நயவஞ்சக துரோகிகள், தர்மத் துரோகிகள், சத்திய விரோதிகள், செய்நன்றிமறந்தவர்கள் நன்றியற்ற ஊழியர்கள், துர்மந்திரிகள் இராஜாங்கத் துரோகிகள், ஒப்பாரி அண்ணர்கள் அதர்மராஜன் புருஷத்துரோகிகள், புத்திரத்துரோகிகள், அற்ப சாகவாசம், அற்பசாகவாசத்தின் அடையாளம் இப்படி அனேகவித சண்டாளர் சரித்திரமெல்லாம் அடங்கியிருக்கிறது ஒவ்வொரு துரோகிகட்கும் புத்திவரும்படி நேரிலேயே படித்துக்காட்டலாம். 248 - பக்கமுடைய புத்தகம். இதன் விலே அணா-8,

உ

கடவுள் துணை.

# ஆஸ்தானமாலை.

## காப்பு.

ஆஸ்தானமாலை - அன்புடனோத
மூத்தோன்பாதம் - முன்பணிவோமே.

## இருசொல் அலங்காரம்.

அரசனில்லாதநாடு புருஷனில்லாதவீடு
ஆண்மையில்லாதபடை அன்பில்லாதகொடை
இசையில்லாதபாட்டு நிசமில்லாதகூட்டு
ஈகையில்லாததனம் இரக்கமில்லாதமனம்
உண்மையில்லாதவுறவு உதவியில்லாதபிரபு
ஊனில்லாதகாயம் ஒழுங்கில்லாதஞாயம்
எழுத்தறியாதவன்கணக்கு இயல்பறியாதவன்பிணக்கு
ஏர்வளமில்லாதகுடி சீர்வளமில்லாதசெடி
ஐயம்நீங்காதகல்வி அடக்கமில்லாதசெல்வி
ஒப்புறவில்லாதநேசம் விற்பனரில்லாததேசம்
ஓசையில்லாதமணி ஒழிவில்லாதபிணி

உ

சிவமயம்.

நன்றியற்ற

# சண்டாளர் சகவாசம்.



சண்டாளர் சகவாச மென்னும் புத்தகத்தில் பதிவுசெய்திருக்கும் சரித்திரங்க ளென்னவென்றால்,—சினேகிதத் துரோகிகள், உத்தியோகத் துரோகிகள், குடும்பத்துரோகிகள், நயவஞ்சக துரோகிகள், தர்மத் துரோகிகள், சத்திய விரோதிகள், செய்நன்றிமறந்தவர்கள் நன்றியற்ற ஊழியர்கள், துர்மந்திரிகள் இராஜாங்கத் துரோகிகள், ஒப்பாரி அண்ணர்கள் அதர்மராஜன் புருஷத்துரோகிகள், புத்திரத்துரோகிகள், அற்ப சாகவாசம், அற்பசாகவாசத்தின் அடையாளம் இப்படி அனேகவித சண்டாளர் சரித்திரமெல்லாம் அடங்கியிருக்கிறது ஒவ்வொரு துரோகிகட்கும் புத்திவரும்படி நேரிலேயே படித்துக்காட்டலாம். **248** - பக்கமுடைய புத்தகம். இதன் விலை அணா-8,

உ

கடவுள் துணை.

# ஆஸ்தானமாலை.

## காப்பு.

ஆஸ்தானமாலை - அன்புடனேத
மூத்தோன்பாதம் - முன்பணிவோமே.

## இருசொல் அலங்காரம்.

அரசனில்லாதநாடு புருஷனில்லாதவீடு
ஆண்மையில்லாதபடை அன்பில்லாதகொடை
இசையில்லாதபாட்டு நிசமில்லாதகூட்டு
ஈகையில்லாததனம் இரக்கமில்லாதமனம்
உண்மையில்லாதவுறவு உதவியில்லாதபிரபு
ஊனில்லாதகாயம் ஒழுங்கில்லாதஞாயம்
எழுத்தறியாதவன்கணக்குஇயல்பறியாதவன்பிணக்கு
ஏர்வளமில்லாதகுடி சீர்வளமில்லாதசெடி
ஐயம்நீங்காதகல்வி அடக்கமில்லாதசெல்வி
ஒப்புரவில்லாதநேசம் விற்பனரில்லாததேசம்
ஓசையில்லாதமணி ஒழிவில்லாதபிணி

ஔவியம்நீக்காதசித்தம் அலங்காரமில்லாதமுத்தம்
கற்பனையில்லாதகவி நற்கேள்வியில்லாதசெவி
காரியமில்லாததோழி காந்தமில்லாதவாழி
கிருபையில்லாதசெவி திறமையில்லாதகவி
கீர்த்தியில்லாததேகம் பூர்த்தியில்லாதயோகம்
குணமில்லாதபுத்திரன் குறிப்பறியாதமித்திரன்
கூர்மையில்லாதவேலை நேர்மையில்லாதவாலை
கெடுவில்லாதகடன் நடுவில்லாததிடன்
கேள்வியில்லாதசரித்திரம் கிலேசம்விடாத தரித்ரம்
கைவினையில்லாதகருத்து கற்றறிவில்லாதவுரித்து
கொண்டானையெண்ணுதகுடியாள் குடிவழியடங்காத
[வடியாள்
கோபமில்லாதசேவகம் தாபமில்லாதபாவகம்
சந்ததியில்லாதவன்பாக்கியம் சற்குணமில்லாதவன்
[யோக்கியம்
சான்றோரில்லாதசபை யீன்றோரில்லாதசுவை
சிங்காரமில்லாததேர் தெருவொழுங்கில்லாதவூர்
சீர்மையில்லாதவனதிகாரம் செல்வமில்லாதவன்பிரதா
[பம்
சுருதியறியாதவேதியன் கருதியறியாதபாதகன்
சூட்சிக்கிசையாதமந்திரம் காட்சிக்கிசையாததந்திரம்

செப்பமில்லாதநெறி ஒப்பமில்லாதமுறி
சேர்வைக்கிசையாதபெருமாள் பார்வைக்கிசையாதம
[னையாள்
சைகையில்லாதசமத்து சமயமறியாதவுரித்து
சொல்லாண்மையெண்ணுதபுலவன் வெல்லாண்மையி
[ல்லாததலைவன்
சோரரைநம்பியிருந்தவன் சோதனையில்லாவருந்தவன்
தன்னையறியாதஞானம் பின்னைநினையாதமானம்
தானமுதவாதசெங்கை ஏனநினையாதமங்கை
திருவில்லாததிறமை குருவில்லாதமுறைமை
தீர்வில்லாதகோபம் சார்வில்லாதசோபம்
துணையில்லாதபோக்கு இணையில்லாதவாக்கு
தூதில்லாதகாமம் தோப்பில்லாதகிராமம் [து
தெய்வத்தைநினையாதமனது திரவியம்வழங்காததன
தேர்ந்துதெளியாதநண்பு செய்கைதெரியாதபண்பு
தையலாற்சொற்கிடங்கொடுத்தவன் தருவோரைக்குறி
[கிக்கெடுத்தவன்
தொண்டைக்கடங்காதராகம் சண்டைக்கடங்காத
[வேகம்
தோற்பையெண்ணமலெதிர்த்தவன்சாற்பை யெண்ணு
[மல்கெடுத்தவன்

நன்றிமறந்தவனுறவு நியாயமில்லாதவன்றுறவு
நட்டாண்மையில்லாதவளப்பம் வீட்டாண்மையில்லா[தவிளப்பம்

நிருபரில்லாததளம் நீரில்லாதகுளம்
நீதிசெலுத்தாதவரசு சாதிக்கடுக்காதவரிசை
நுட்பமறியாதநெஞ்சு கற்பகினையாதவஞ்சி
நூலாண்மையில்லாதபாவலன் கோலாண்மையில்லாத[காவலன்

நெடுங்காலமறியாதயோகி கெடுங்காலமறியாததுரோகி
நேத்திரமில்லாதவுறுப்பு கோத்திரமில்லாதகுறிப்பு
நைவேலைவாங்காதசத்திரன் கைவேலைவாங்காதபுத்தி[திரன்
நொய்யருக்கதிகாரங்கொடுத்தவன் மெய்யனைதெளி[யாமற்கெடுத்தவன்

நோயறிந்துதவாதமருந்து வாயறிந்துதவாதவருந்து
பசிக்குதவாதவன்னம் படைக்குதவாதசொர்ணம்
பாலில்லாதநிரை நூலில்லாதவுரை
பிணக்கில்லாதபுணர்ச்சி பெரியோரில்லாதவுணர்ச்சி
பீரத்துக்குதவாதகோட்டை பாரத்துக்கிசையாதமூட்[டை

புல்லோர்க்குவந்தவாழ்வு நல்லோர்க்குவந்ததாழ்வு
பூசையில்லாதானண்டை ரோஷமில்லாதான்சண்டை
பெரியோரைபழித்தபாவி உரியோரைப்பழித்ததேவி
பேடிகைநீங்காதகூர்வாள் பேதமைநீங்காதவாழ்நாள்
பையகத்தில்லாதபொருள் வையகத்தில்லாதமருள்
பொருளில்லாதான்வார்த்தை யருளில்லாதான்கீர்த்தி
போனத்தைநீக்கும்பேதை ஈனத்தைநினைக்குங்கோ
மந்திரமில்லாதவேள்வி வழக்கமில்லாதகேள்வி [தை
மாரியில்லாததலம் பாரியில்லாதநலம்
மிதந்தெரியாதநடை வியந்துதவாதகொடை
மீகாமனில்லாதநாவாய் விளைநிலஞ்சொல்லாதகாவாய்
முன்னிலையில்லாதவினை முதிர்ந்தோரில்லாதமனை
மூலமில்லாதகாரியம் காலமில்லாதவீரியம்
மெய்யுரைபொய்யாக்கியுரைத்தவன் செய்யுழவர்க்கத்
[துவிரைத்தவன்
மேலோர்கள்கீர்த்தியைமறைத்தவன் விற்கும்பண்டங்
[களைக்குறைத்தவன்
மையல்நீங்காதவர்பேச்சு பொய்யாழியில்லாள்கைவிச்
சு, மொழிக்கடங்காததுக்கம் பழிக்கடங்காதவெட்கம்
மோகங்காட்டாதவேசை முறைமையென்னுதை பூசை

வருத்தில்லாதவன்கிலவுமருந்தறியாதவன்மெலிவு
வாசமில்லாததடம் மாதவரில்லாதமடம்
வினயமில்லாதபுத்தி கனதையில்லாதவித்தை
வீரமில்லாததீரம் ரோசமில்லாதகோபம்
வெற்றியில்லாதமுரசு வித்தையில்லாதவரசு
வேதாளமடங்காதமந்திரம் வாதாடிமுடியாததந்திரம்
வையகத்தில்லாதசெய்கை மணற்பாங்கில்லாதபொய்
கை, வொவ்வழியுறுரவை செவ்வழிபெறுர்சுவை.

ஆஸ்தானமாலை

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 99.

உ

கடவுள் துணை.

# அணியண்ணுமலைப் பதிகம்.

———*———



இஃது

சிறுமணவூர்-முனிசாமி முதலியாரால்,

சென்னை-சூளை;

தனலக்ஷ்மி வர்த்தன அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1911

40

உ

சிவமயம்.

# சாற்றுக்கவி

——[*]——

ம-ா-ா-ஸ்ரீ-குழந்தைவேற்கவிராயரவர்க
ளியற்றியது.

ஈராசிட்டு பலவிகற்பத்தான்வந்த
இருகுறள் நேரிசை வெண்பா.

உண்ணாமலையாளுமையபங்கன்சேரு மணி
யண்ணாமலையாரருட்கவியை-உன்னிதமா
யோதினன்வேலாயுதக்கவிஞனுள்ளமிர்தங்
காதினார்கேட்பார் களித்து.



உ

சிவமயம்.

# அணியண்ணாமலைப்பதிகம்.

ஈராசிட்டு பலவிகற்பத்தான்வந்த

இருகுறள்நேரிசைவெண்பா.

——(*)——

திருமாலும்நான்முகனுந் தேடியறியாத
பெருமான்கவியதனைபேச-கருணைமிகுந்
தொந்திவயத்தைந்துகரத் தும்பிமுகச்சுந்தரபொற்
கந்தமலர்ச்செஞ்சரணங் காப்பு.

—(*)—

இஃது,

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.



அத்தியையுரித்துமான்மழுதரித்தும்
அரவிளைப்பணியெனவணிந்து

வெத்தியைக்கொடுத்துவினையினைநீக்கி
வித்தகாநின்பதம்மறவேன்
பத்தியேபுரியுந்தொண்டர்களுளத்தில்
பரிவுடன்பொங்கியேஎழுந்து
தித்திக்குந்தேனேயணியண்ணுமலைவாழ்
தேவனேகையிலைநாயகனே. 1

உத்தமரானபத்தர்களெல்லாம்
முனதிருபதமலர்தொழுது
சித்தமுமொருவிநித்தியானந்த
திவ்வியசுகந்தனையடைந்தார்
மித்தையிறசிக்கையலைந்திடும்பாவி
வினையினைநீக்கிநின்னருள்தா
தித்திக்குந்தேனேயணியண்ணுமலைவாழ்
தேவனேகையிலைநாயகனே. 2

பத்திகள்மிகுந்தவன்பர்கடனது
பதமலரடிகளைத்தொழுது
சித்தமுமுருகாபாவியென்றெனையே
தேசிகாதள்ளிவிடாமல்

குத்திரஞ்செய்யுமனவிருள்நீக்கி
குணமுடன்நல்வரமருள்வாய்
தித்திக்குந்தேனேயணியண்ணாமலைவாழ்
தேவனேகைலைநாயகனே. 3

கொத்தவர்குழலிகலவியைநினைந்து
குலைந்தலைந்திடுவதைவிடுத்து
நித்தமுமுனதுபாததாமரையை
நினைந்துநைந்துருநாளுளதோ
முத்தர்கழ்சித்தர்முனிவர்கள்வணங்கு
மூர்த்தியேசிறியனுக்கருள்தா
தித்திக்குந்தேனேயணியண்ணாமலைவாழ்
தேவனேகைலைநாயகனே. 4

தத்துவமுடிவில்நித்தியமாகிய
தாண்டவம்புரிந்திடுமகிமை
இத்தலத்துள்ளோர்காண்பதுமரிது
யென்றுநான்மறைகளுமியம்பு
வித்தகாவிமலாமெய்யனேஐயா
வேந்தனேயடியனுக்கருள்தா
தித்திக்குந்தேனேயணியண்ணாமலைவாழ்
தேவனேகைலைநாயகனே.

சத்துவகுணத்தோர்மும்மலமகற்றி
சாயுச்சியமெழுதினிலடைவார்
பித்தையாம்சமட்டிவியட்டியைநம்பும்
பேயனுனடைகுநாளெதுவோ
நித்தனேநிமலாநிர்மலரூபா
நிரந்தராயேழைமேற்றயைசெய்
தித்திக்குந்தேனேயணியண்ணாமலைவாழ்
தேவனேகையிலைநாயகனே. 6

சத்தமாம்பரிசரூபகந்தத்தை
சார்ந்திடும்புலப்புகைத்தளர்வால்
மெத்தவுமயங்கிவுளர்கின்றநாயேன்
வினையகன்றிடவரமருள்வாய்
சித்தனேசிவனே இருடிகளுளத்தில்
சிறந்தவாருதியனவெழுந்து
தித்திக்குந்தேனேயணியண்ணாமலைவாழ்
தேவனேகையிலைநாயகனே. 7

அத்தியாரோபவகையினைவென்றோ
ரல்லலைநீக்கியேசித்த

சுத்தியும்பெறுவாரென்றுநான்மறைகள்
சொல்லியவசனமுமறிந்து
நித்தியமுனதுதிருப்பணிசெய்து
நின்னருள்பெற்றிடவருந்தா
தித்திக்குந்தேனேயணியண்ணாமலைவாழ்
தேவனேகையிலைநாயகனே. 8

வித்தெனமுளைத்தசஞ்சிதவினையால்
விளைந்திடும்காமியம்பிராத்தம்
ஒத்தனுபவத்தாலுலையினில்மெழுகா
யுருகியேயலைந்திடும்பொல்லா
குத்தத்தைநீக்கிப்பஞ்சையீடேற
குருபருவரங்கள்பாலிப்பாய்
தித்திக்குந்தேனேயண்ணியண்ணாமலைவாழ்
தேவனேகையிலைநாயகனே. 9

சித்தெனுஞ்சாக்கிரஞ்சொர்ப்பனம்
சுழுத்திதீதுறுசிருதியுந்தாண்டிட
முத்தியின்வழியேதந்திடுந்தீத
மோனத்தில்நின்றடவாதா

சத்தியின்பாகாநித்தியமுதலே
தாண்டவம்கண்டவருளதில்
தித்திக்குந்தேனே யணியண்ணாமலைவாழ்
தேவனேகைலைநாயகனே. 10

திங்களுங்கங்கைமுடியின்மேல்வைத்த
தேசிகன்மேற்றமிழ்ப்பதிகம்
இங்கிதமாகவியம்பிடகேட்டோ
ரெழுதினர்நித்தியந்துதிப்போர்
சங்கையில்லாதமனத்தினராகி
சகலசம்பத்துகள்பெருகி
மங்கைபங்காளன்கிருபையும்பெற்று
மகிழ்ந்துவீட்டைந்துவாழ்குவரே. 11

அணியண்ணாமலைப் பதிகம்.

முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# சிதம்பரம்
# சிவகாமியம்மை பதிகம்

———*———



இஃது;

சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரால்
சென்னை-சூளை
தனலக்ஷ்மி வர்த்தன அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1911.



உ

கடவுள் துணை

# சிவகாமியம்மை பதிகம்.

வெண்பா.

தவகாமியர்சூழ் தடம்பொழில்சேர் தில்லைச்
சிவகாமியைத்துதி யான்செய்ய-நவமேவும்
நண்ணார்புரத்தை நகைத்தோனருளியமுக்
கண்ணார்கரிமுகவன் காப்பு.

ஆசிரியவிருத்தம்,

நித்தியகல்யாணிசுப மங்களசவுந்தரிநிரந்தரியநந்தரூபி: நிக்கிரகியனுக்கிரகி நிரஞ்சனிதயாவதனிநிருமலிஜெகரட்சகி: சுத்தபரிபூரணிகிருபாகரிசமாநந்தி தூலசூட்சுமகாரணி: சூலிகுணசாலிபரி பாலியென்றனுதினந்துதிசெய்து கதிபொறுவனோ: புத்தமிர்தமொத்தவசனத்திரிமபத்தாசி பொற்புடனளித்தபுதல்வி; பொங்குபாற்கடலில்வளர் செங்கண்மால்சோதரி புராந்தகற்கினியமனைவி: சத்தமறையாகமபுராணசாத்திரவொலிதழைத்திடும்புலியூரில்வாழ்: சலசமகலாதவல்லி கலைபினிருவாகவல்லி தலைவிசிவகாமவல்லியே. (1)

உத்தமகுணத்தின ரிணக்கமறியாமூடனுட்பகையருதமூடன்; ஒப்புரவிலாமூட னற்பரைவிடாமூட

னொத்தகளதற்றமுடன், சித்தமிளகாமுடானித்தநிய மாதிகள்செயத்திறமிலாதமுடன், தீதற்றமெய்ஞ்ஞான நெறியினிற்கனவிலுஞ் சிந்தைசெய்லாதமுடன், பித்த ரினுமெத்தவுள றித்திரியுமுடன்வெகு பேராசைகொ ண்டமுடன், பிரியாதசஞ்சலச் சமுசாரமென்னுமொரு பேயபித்தாடுமுடன், தத்தரப்பட்டுளந் தடுமாறுமுட னின் ருளினிழல்பெற்றுய்வனோ, சலசமகலாதவல்லி கலையினிருவாகவல்லி தலைவிசிவகாமவல்லியே. (2)

பைந்தமிழிலக்கிய விலக்கணவிதிப்படிப்பாடித்து திப்பவர்க்கோ, பத்தியாய்ப்பகலிரவு மோயாது தொழு திடும்பண்பினர்க்கோபசியினல், வந்திறப்போர்க்கில்லை நாளையென்றும்பின்னை வாவென்றுவழிபோக்கியே,வா யினல்பந்தலிட் டலைவுறச்செய்யாமல் வாய்த்தமட்டுங் கொடுத்து, சிந்தைமகிழ்செய்யு மவர்க்கோசுகந்தங்கு செல்வவந்தர்க்கோகொடுந், தீவினையினல்வாயில் வந்து துபிதற்றித் தியங்கும்வறியேற்கில்லையோ, சந்ததமுநி ன்னுபய சேவடிநிழற்றருந் தகைமையாதுரை செய்கு வாய், சலசமகலாதவல்லி கலையினிருவாகவல்லி தலைவி சிவகாமவல்லியே. (3)

ஆனலுமம்மம்மா வென்போலுமொருபாவியம்பு வியிலெங்குமில்லையே, அறிவற்றபாவிகன்னெறியற்றபா

வியில் லறமுறையிலரியபாவி, மானுர்கள்விழியிற்பெரு
ம்பாவிநல்லோரை மதியாதகொடியபாவி, வசனத்தினி
ஜமற்றமாபாவி மூவாசைவாரியில்விழுந்தபாவி, மேனு
ளிவிட்டுண்டு வாழாதபாவிதீ வினையெலாஞ் செய்தபா
வி வெஞ்சினமடங்காத பஞ்சமாபாவிநோயிவெறுமை
குடிகொண்டபாவி, சாநாள்கள் வந்துமுனை நினையாத
பாவிநின் றுளினிழல்பெற்றுய்வனோ, சலசமசலாதவல்
லி கலையினிருவாகவல்லி தலைவிசிவகாமிவல்லியே. (4)

பெற்றதாய்பிள்ளைகட் கிருளாகச்செய்கையிப்பிர
பஞ்சமதினடாத்தும், பேதம்யாதொருவன்று சுவையு
ண்டியுண்டிகை பிரபலமாவாழ்ந்திடவுமே, மற்றொருவ
ன்வெந்நீ ரணங்கிடைத்தற்கேதும் வழியற்றுமெலிவுற்
றுளம்வாடியன்னோர்க்கரே கம்பங்குதாழ்ந்திடவும் வந்
தவினையாதறிகிலேன், உற்றதுசொலாயன்னை யேயற
ம்வளர்த்திட்ட துண்மையெனிலிதுதருமமோ, வுலகி
லென்போலொருவர் கேட்கிலுத்தரவுரைத் தற்கிடமு
னக்குள்ளதோ, சற்றுமறியாத்தன்மை யாலேதுசொ
லினுநின் றஞ்சயானருள்செய்குவாய், சலசலமகலாத
வல்லிகலையினிருவாகவல்லி தலைவிசிவகாமவல்லியே. ()

வாங்குசிலைபோலுடல் வளைந்தொருகைகோலூழி
ழிவாயில்வெண்பல்லுநழுவி, வதனமுங்குளறியிருவின்

கருமிருண்டுநோய் வந்துகுடிகொண்டுவெருவாய், திங்குதலைசெய்திடச் சிறுமையெனுமொருபாவி சேர்ந்துபெருவாதுசெய்யச், சிறுவருந்தாரமு மிகழ்ந்து நகைசெய்திடத் தீமீப்புவந்துமேலிட், டோங்குதலைகொண்டுசமனர்வரும்போதினி துளம்பதைபதைக்குமுன்மேயுனதுபொற்பதநிழலிலேவருகவென்றருள்புரிந் துய்யும்வகைசெய்யவேண்டுங், தாங்குதலையுலையன்றி வேறிலைப்போதுமிச் சஞ்சலச்சுகமம்மனே, சலசம்கலாதவல்லிகலையினிருவாகவல்லி தலைவிசிவகாமவல்லியே. (6)

அரிதானமானிடப் பிறவிவந்தென்னபல னறியாமைதீரவில்லை, யன்பென்றுசொல்லவுங் கேட்டதிலையானெனும்கந்தைசற்றகல்வதில்லை, பெரிதானவெஞ்சினமடங்கவிலையைப்புலப் பிழைவழியொதுங்கவில்லை, பேராசைதீரவிலை நல்லோரிணக்கமென்பிறவியிலந்தித்தில்லைபரிதாவல்யோலென் கணுந்தாவுபாழ்மனம் பதைபதைப்போய்வதில்லை, பசுபாசபதிவினவியெவ்வாறுநின்பதப் பங்கயத்தடைவதம்மா, சரிதாதிநான்கையு மணந்துநின்றவருளத்தாமரையில்வாழுமன்மே, சலசமகலாதவல்லி கலையினிருவாகவல்லிதலைவிசிவகாமவல்லியே.

ஆலவிடமோருருவெடுத்துக்கடாவேறியந்தகனெனும்பெயர்தரித், தழல்விடுஞ்சூலமும் பாசமுங்கைபிடி

த்தாருயிர்குடித்திடவருஉங், காலமறவாமலைநாழி
தரியாமலென் கண்காணவெள்ளை விடைமேற்கண்ணு
தலுநீயும்வந் தஞ்சலஞ்சேலென்று காத்தருளவேண்டு
மம்மா,மூலமெனவோலமிடு மானையைக்காத்தருண்மு
ராரிதிருமால்சோதரி, மூதண்டபகிரண்ட பிரமாண்ட
முப்பெற்ற முதலவிமலையுதவு புதல்வி, சாலமெய்யன்
பரக்கமலமகலாது சஞ்சரித்திடுமன்மைமேசலசமகலாத
வல்விகலையினிருவாகவல்லி தலைவிசிவகாமவல்லியே. ()

மாநிலந்தனிலுன்னை யடுத்திகபரத்தின் வன்மைபெ
றுதவரிலையெனின், மற்றரிவடத்தெனது குறைசொலி
பிரக்கவிதி வசமெனக்கென்னபுகல்வா,யேனெனிற்சுத
னருமை யீன்றதாயன்றிமற்றெவரறிந்துதவிசெய்வா,
ரெள்ளளவுமதனைநீ யறியா திருக்கின்றதென்ன செய
லென்றுரைசெய்வேன் நீநினைத்தலிற்முடியாததொ
ன்றுளதோநின் னெஞ்சிலேகதனும்வஞ்சமோ, நீன்ன
டித்தாமரை தனைத்தொழாதுனையேதுநிந்தையுரைசெ
ய்ததுண்டோ, தானெனவிளங்குதற் புரிகௌரிசிற்பரி
தயாரஸசிதாநந்தியே, சலசமகலாதவல்லி கலையினிரு
வாகவல்லி தலைவிசிவகாமவல்லியே. (9)

நஞ்சுண்டகண்டன்முப் புரமெரித்தோன் கொன்
றைநதிமதியணிந்தசடிலன், நக்கன்முக்கட்பகவன்மழு

மான்கரத்தன் மணிநாயபூஷணனைன்முகக், கஞ்சனறி
யாச்சென்னி யன்முராகரிக்கரிய கஞ்சமிருகமலசரணன்,
காலகாலன் சூல பாணியன்பூதியணிகாத்திரன்கருணை
நேத்திரன், கஞ்சானன்வெள்ளைவிடை யேறிவருதற்ப
ரன்கைலைநாதன்வாம், பாகத்திலய்குபரி மளவேணிகல
யாணி பார்வதிதிரிபுராந்தகி, கஞ்சமெனவந்தடுத்தோ
ர்க்கஞ்சலென்றரு டருஞ்சுகாநந்தவமுதே,சலசமகலா
தவல்லி கலையினிருவாகவல்லிதலைவிசிவகாமவல்லியே.

காளைவயதோய்ந்துமெய்க் கட்டழகழிந்துநற்கல்
விமுதலானவெல்லாங், கைவிட்டுமையிட்டகண்மாதா
புன்முறுவல் காட்டக்கடும் பிணியெலாம், வேளையிது
வெனவந்தடுத்திடர்படுத்திட மெலிந்துதடு மாறுமுன
மே, வினையேனுமுன்பதப் போதினிழல் பெற்றுமெய்
வேதனையொழிப்பதென்றோ மூளைதசையென்புதோற்
போர்த்தவுடலாசையை முனிந்துசிவயோகத்திலே,மு
யலுமெய்யன்பரிரு விண்வலையறுத்துமேன் முத்திக்கு
வித்தாமலர்த், தாளையேதருமொருதாயபரிபராபரிசகா
யிமகமாயியாயி சலசமகலாதவல்லிகளையினிருவாகவல்
லிதலைவிசிவகாமவல்லியே. (11)

சிவகாமியம்மைபதிகம் முற்றிற்று.

உ

கடவுள் துணை.

அலைப்புக்கோட்டையென விளங்கும்
திருநல்லூர்

# அமுதவல்லியம்மன்

## பதிகம்.

இஃது,
சிறுமணவூர்,
முனிசாமி முதலியார்
அவர்களது

சென்னை-சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1910.

# சாத்துகவிகள்.



இந்நூலாசிரியர்மாணாக்கரும்
அறப்புக்கோட்டை தமிழ்ஸ்கூல்மாஸ்டருமாகிய
வெங்கடாசலம்பிள்ளை அவர்கள்
இயற்றிய
நேரிசைவெண்பா.

நல்லை யமுதவல்லி நாண்மலர்த்தாட் கொண்பதிகச்
சொல்லமுத மாலை தொடுத்தணிந்தான்-பல்வளனும்
மொங்குதமிழ் வேங்கடசுப் புப்புலவர் சிங்கமெனு
மெங்குரவன் சிந்தைமகிழ்ந்தே.

---

இந்நூலாசிரியர்சகோதரர்
அரன்வாயல்
தங்கவேலுப்பிள்ளையவர்களியற்றிய
கட்டளைக்கலித்துறை.

வரவப்பதிகத்தமிழ்வேங்கடசுப்புவாணனெங் கோன்
றிரவப்பதிகம்பரவென்மர்வாழுந்திருநல்லையூ
ரரவப்பதிகங்கணக்காரந்தாயமுதாம்பிகைதாட்
பரவப்பதிகத்தமிழளித்தானெங்கள்பாக்கியமே. (உ)

அறப்புக்கோட்டை சோதிடவித்வானும்

சைவப்பிரசங்கியாருமாகிய

ஸ்ரீநிவாசநாடாரவர்களியற்றிய

நேரிசைவெண்பா.

நல்லையமுதாம்பிகையி னன்மலர்த்தாட்கோர்பதிகஞ்
சொல்லெனச்சான்றோர்குலமுத்துச்சாமி—செல்வக்
கிருட்டிணமால்வேண்டக் கிளர்வேங்கடசுப்
பருட்டிறத்தா னன்கோதினுன். (க)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தண்பாயு மரன்வாயல் வேங்கடசுப்
பெனுமொருமுத் தமிழ்ப்பாவாணன்
விண்பாயும் பொழில்வளஞ்சேர் திருநல்லூ
ரமுதவல்லி விரைப்பூர் தாண்மே
னண்பாயுந் தமராருண வினிமினிக்குந்
தமிழ்ப்பதிக நாட்டினனப்
பண்பாயுந் தரந்தவளப் பாரதியி
னருளுடையார் பாலா மன்னே. (உ)

உ

சிவமயம்.

தேவிசகாயம்.

திருநல்லூர்

# அமுதவல்லியம்மன்பதிகம்.



## பாயிரம்-வெண்பா.

மாவமுத லிங்காருள் வாழ்வெனநல் லூர்க்கோயின்
மேவமுத வல்லியுமை மேற்பதிகப்-பாவனைய
மந்திர முதற்பிரண வத்துளுறை யொண்பால
சந்திரக ணேசவருடா.

———(*)———

## நூல்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தங்கள்.

சீர்வளர் வாக்கின் செல்வியு மாலோன்
திருநிறம் பொலிந்தபூ மகளு
நார்வளர் மனத்தி னேத்துநின் பெருமை
நவிற்றுபே ரன்பெனக் கருள்வாய்
கார்வளர் மிடற்ற ரமுதலிங் கேசர்
காமுறு கலன்புனைந் தொளிரும்
வார்வளர் தனத்தாய் நல்லைவா ழமுத
வல்லியே செல்வநா யகியே. (க)

நல்லவர் பரவு நின்னிரு பாத
நளினமெய்த் தியானமே புரிந்து
கல்லெனு மிதயங் கனிந்தநெக் குருகுங்
கருணையித் தருணமெற் கருள்வாய்
செல்லுற ழளக முழுமதி வதனச்
சிற்குண கரியெனுந் திருவே
மல்லனீர்ப் பழன நல்லைவா ழமுத
வல்லியே செல்வநாயகியே. (உ)

அம்மைநீ யெனவு மையனின் வலப்பா
லமுதலிங் கேசனே யெனவு
மெய்ம்மைசே ருணர்விற் போற்றுமிச்சிறியேன்
மிடிமைதீர்த் தருள்செய நினைவாய்
செம்மையுள் விளைந்த செம்பொருட் பயனே
திருவருட் சத்திபார் வதியே
மைம்மலி பொழில்சூழ் நல்லைவா ழமுத
வல்லியே செல்வநா யகியே. (ங)

அற்புத மனைத்தும் புரிந்திட வல்ல
வருட்பிர சாதமே வேட்டு
நிற்பதம் போற்றி நித்தலுந் தொழுமென்
னீர்மைகண் டருளுத லென்றோ
பொற்புறு மமுத லிங்கர்தம் மிடத்திற்
பூத்தருள் பழுதறுபைங் கொடியே
வற்புறுமன்பர் நல்லைவா ழமுத
வல்லியே செல்வநாயகியே. (௪)

ஆடகச் சிலையொன் றணிமலர்க் கரத்தெ
மண்ணலா ரமுதலிங் கேசர்
நாடகத் தினையம் பலத்துணி காண
நயத்தலெம் பொருட்டன்றோ வருள்வாய்
சூடகத் தளிர்க்கை தன்னிலெண் ணான்கு
தொல்லறம் வளர்த்தசுந்தரியே
மாடமிக் கொளிரு நல்லைவா ழமுத
வல்லியே செல்வ நாயகியே. (௫)

இலையெனப் பிறர்பா லேற்பது நீங்கி
யேற்பவர்க் கிலையென துதவு
நிலையினி விருத்தி நின்புகழ் பாட
நீயெனக் கருணிதி தருவாய்
கலையெனப் பரந்த கடலினின் னமுதே
கண்கண்மூன் றுடையவொண் மணியே
மலையருண் மகளே நல்லைவா ழமுத
வல்லியே செல்வ நாயகியே. (௬)

சூழ்வகை சூழ்ந்து தொழும்புசெய் தினையே
தோத்திரம் புரிவது மறவேன்
ஏழ்வகைப் பிறவிப் பெருங்கடன் மூழ்கி
யிளைத்திடா தென்னையாண் டருள்வாய்
காழ்வட மணிபூங் கொங்கைமா துமையே
கற்றநா வலர்க்கருள் சான்றோர்
வாழ்வது தழைக்கு நல்லைவா ழமுத
வல்லியே செல்வநா யகியே. (௭)

சிந்தனை நினக்கே செலுத்துமா தவர்தந்
திருக்குழாத் தென்னையு நிறுவி
நிந்தனை தவிர்ந்த நின்பெருஞ் சீர்த்தி
நிகழ்த்துநன் னேயமெற் கருள்வாய்
கந்தனை யேக தந்தனைப் பயந்த
கந்தர மலர்க்குழற் திருவே
வந்தனை தழைக்கு நல்லைவா ழமுத
வல்லியே செல்வநா யகியே. (அ)

பூரண வமுத லிங்கரைப் புணர்ந்து
போகமா ருயிர்களுக் குதவுங்
காரண முதல்வி நின்சர ணடுத்தேன்
கலைகணீ துயர்களைத் தருள்வாய்
நாரணற் கிளைய நங்கையே யன்ன
நடையின்னே மறருசெய் தோறும்
வாரண முழங்கு நல்லைவா ழமுத
வல்லியே செல்வநா யகியே. (கூ)

இயங்கியற் பொருட்கு மியங்கிடாப் பொருட்கு
மிறைவிநீ நின்னருள் பெறுவார்
தியங்குத லிலரென் றுரரணம் பகர்த
றேர்ந்துனைச் சார்ந்தவெற் கருள்வாய்
கயங்களி னீருநந்தன வனமுங்
கமழ்ந்துபூ மலரவெந் நாளும்
வயங்குபொன் னேங்கு நல்லைவா ழமுத
வல்லியே செல்வநா யகியே. (கo)

அமுதவல்லியம்மன்பதிகம் முற்றிற்று.

உ

சிவமயம்.

களக்காடு

# கோமதி அம்மாள் ஆசிரியவிருத்தம்.

---

இவை,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1910.

உ

கடவுள் துணை.

---

## காப்பு.

சுந்தரஞ்சேர்தென்களந்தை சோதிமயமாய்நிறைந்த
கொந்தளகபாரமுலை கோமதிமேற்-சந்ததமும்
ஆசிரியப்பாவியம்ப வாரணமுகன்பொற்பாதம்
நேசமுடனே போற்றுவாம்.

களக்காடுபத்தை

ம-ா-ா-ஸ்ரீ, பழனியப்பகவிராயரவர்களாலியற்றிய

## சிறப்புப்பாயிரம்.

மாமாலைக்கசிந்தொழுகு மருமானை பயின்றிடுங்
கோமதிமாதுக்கு, பூமாலையதுவணிகி லிருள்வலிகண்
டலருவென புகழ்ந்துதங்க, காமாலை யணிகிறிமேல்
வடிவாகுமெனநினைந்தே தமிழார்ச்சந்தப், பாமாலைய
ணிந்திடுமீனாட்சிநாகேந்திர வள்ளற்பண்புலானே.

திருக்களந்தைநகர்

# கோமதியம்மன்

## ஆசிரியவிருத்தம்.

கார்மேவுகுழலுநற் பொட்டிட்டநெத்திபுங்கமல
வதனத்தினழகும், காவியைநிகர்த்தவிழியும் கருணை

யகலாத கனிமதுரவாயினழகும், ஏர்மேவுகுழையினழ
குந்தாளமூக்குத்தி யிணையுமணிமூரவழகும், இலகுந
வரத்னமணி வடமொளிருகண்டத்தி லிறைவன்னிதா
லியழகும், வார்மேவுகும்பத்தனத்தினழகுந்தருமமரு
வுசெங்கையினழகும், மாமகளுநாமகளுமறுதினமும்
பரவுமிரு வனசமலரடியினழகுஞ், சீர்மேவு புவிமீதி
லடியனிருகண்குளிர தெரிசிப்பதெந்நாளோ, திங்க
ளணிசங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோமதியம்
மையே. (க)

அன்னைதன்னுதரத்தி லீரைந்துமாதயா யடங்
கிக்கிடன்றுழன்று, அவனியிற்பிறந்தபின் னறிவது
மயங்கியே யாடித்திரிந்தநொந்து, பன்னிருவயதள
வுங் கல்வியைமுயன்றபின் பதினறுவயதானபின்,
பாவையரிசிதமுண்டு பந்தத்திலடியுண்டுபற்பலபவங்
கள்செய்து, தன்னிகரிலையென்றுவல்லாண்மைபேசி
யேதாயேயுன்பதமறந்த, தமியனேற்குனவுதிருவருள
ளித்தாண்டருள் சாம்பவிசிவசங்கரி, சின்னந்தடாரித
ம்பட்டமத்தளமுரசு தினமொலிக்குங்களந்தை, திங்க
ளணிசங்கரன் பங்கிலுறைதங்கமே தேவிகோமதியம்
மையே. (உ)

கற்றமிழ்வல்லதிரு சம்பந்தருக்குனது ஞானப் பாலுதவவிலையோ, நன்னுவலன்றிரு வெண்காடர்பசி தீர நல்லமுதளிக்கவிலையோ, பெற்றவட்காகவே பிரா ணேசரிடஞ்சொலிப் பெருங்கட லழைக்கவிலையோ, பிரமனைப்படைக்கவு முகுந்தனைக்காக்கவும் பெருங்கரு ணைபுரியவிலையோ, கற்றமாதவமுடைய வபிராமபட் டரின் கவிதனைக்கேட்டிரங்கி, கலைமதியையமவாசை தன்னிலேயாவருங் காணவு மழைக்கவிலையோ, சிற்ற றிவுடையவென் னெஞ்சகக்கல்லழகத்திருவருள் செய் வதரிதோ, திங்களணிசங்கரன் பங்கிலுறைதங்கமே தேவிகோமதியம்மையே. (ரு)

சொன்னயத்தாளுனது பாதாரவிந்தந் துதிக்க வறியேனுன்மனந், தூய்மையோசற்றிலை நியமமோ செய்திடத்தூலமோதிடமில்லையே, நன்னயமதாகவே ஞானமோகனவிலும் நாடிடேன்பேரின்பமோ, நாட வென்றூர்கள்ள மனதுவேறுகிபே ருவியுதேபாவிநெஞ் சம், வன்னச்குயின்மொழி மாதங்கிதிரிசூலிமகமாயி மந்திரரூபி, மகிடனைச்செற்றமலைமங்கையேகங்கையே மதுசூதனன்றங்கையே, தென்னற்குமகவானசெல்வி யேயென்னைத் திருவடியாட்கொண்டருளுவாய், திங்க

ளணிசங்கரன் பங்கிலுறைதங்கமே தேவிகோமதியம்
மையே, (௪)

செந்தாமரைக்கோவு நந்தகோபாலனுஞ் செய்ய
மதியும்பானுவுந், தேவர்கோனுமழகைப் பதிவளர்கு
பேரனுந் தெய்வத் தமிழ்க்குரவனு, நந்தாதவொரு
கோட்டுவைங்கரக்கடவுளு நலமிகுமறுமுகவனு, நங்
கைரதிகேள்வனுஞ் சந்ததந்தொழுமுனது நளினபத
ந்தந்திகேள்வனுஞ் சந்ததந்தொழுமுனது நளினபதந்
தந்தருளுவாய், கொந்தார்மலர்ச்சோலை மீதிலனுதின
மந்திக் குருளையைவயற்றிலேந்தி, குதிகொண்டுதிரிய
வேகனியுதிர்ந்துடைபட்டு கொங்குமதுமருகிலோடி,
சிந்துபோலறவிந்த வாவியிற்றதும்பிநன் செய்விளைக
ளந்தைமேவுந், திங்களணிசங்கரன் பங்கிலுறைதங்க
மே தேவிகோமதியம்மையே. (௫)

மாகாணிகலையிலே நடையிலேதிவ்ய மதுரமென்
கனிவாயிலே, வாளொற்றவிழியிலே பாலொற்றமொ
ழியிலே மட்டழகபாரத்திலே, காதிலணிகுழையிலே
வளையிலேநுதலிடு கஸ்தூரிதிலகமதிலே, களபமுலை
வெற்கிலே குழையநுலிடையிலே கமலமதிவதனத்தி
லே, கோதிவிடுதுடையிலே தொங்கலணிமார்பிலே

தோகைமென்சாயல்தனிலே, துவளுமென்சிந்தையை துளையவிட்டனுதினஞ் சோர்வுறுதெனையாளுவாய், சி தளக்கங்கைமுடி திகழ்சதயவாகிசர் செல்வமேதென்க ளந்தை, திங்களணிசங்கரன்பங்கிலுறைதங்கமே தேவி கோமதியம்மையே. (௬)

அன்பர்போலக்கமணி பூண்டுதிருவெண்ணீறை யங்கநிறையப்பூசியே, யாகமபுராணகலையல்லாமறிந்த தாயாணவம்பலபேசியே, துன்பேபுரிந்துலக வாழ்வ தனைநம்பியே சூதுகொலைபொய்பேசியே தொல்லைவல் வினையினு லல்லற்படுமெனது துன்பந்தவிர்த்தாளு வாய், என்புநெக்குருகத் தியானிக்கும்மடியவ ரிதைய த்திருக்கும்வாழ்வே, இன்னமுது கற்கண்டு சீனிகனி பாகென வெங்குநிறைபெருவெள்ளமே, தென்னருக் காசியாய் வந்தமாதவமே திகழ்ந்தென் களந்தைவாழுந், திங்களணிசங்கரன் பங்கிலுறைதங்கமே தேவி கோமதியம்மையே. (எ)

சீர்பெற்றதக்கன் தவத்தினுல்மலர்மீது சிறுகுள வியாயிருந்தாய், நின்னவெற்பரையனுள மகிழவே ஒடையிற் செல்வமகளாகியுற்றாய், பேர்பெற்றமலையத் துவசனுதவுவேள்வியிற் பெண்மகவாகிவந்தாய், பெரு மைபெருவில்லையச னருள்பெறபுன்னையின் பெருநிழ

வில்வீற்றிருந்தாரு, நீர்பெற்றவேணியின்மெய்யினிற்பாதியாய் நீங்காதிருந்து வாழ்ந்தாய், நின்னருட்பிரபல்மின்னபடி யென்றுநானினைந்துரைத்திடமுடியுமோ தேருற்றவாளிபோற் சுழலுமென்சிந்தையைத் தியக்கறுத்தருள்புரிகுவாய், திங்களணிசங்கரன் பங்கிலுறை தங்கமே தேவிகோமதியம்மையே. (அ)

ஐயோ வெளேப்போலு மறிவிலாப் பேதையிவ்வகிலத்திலெங்குமுளதோ அகிலாண்டமெல்லாம்படைத்தவுன்றிருவடிக்கன்புடன்பூசைபுரியேன், மெய்யானவடியரைக் கண்டிட னெதிர்கொண்டு மெய்சிலித்திருகைகாப்பேன், மேதினியிற்பொருள்தேடி யுண்பதல்லாமலே மெய்த்தவ மியற்றியறியேன், கைதவஞ்செய்வதல் லாதுனதுமகிமையைக் காதினிற் கேட்டுமறியேன், கடையனென் மேற்கருணை செய்துபாகெதியடைய கமலபத முடிசூடுவாய், செல்யினில் வெண்படைய ணிலமீன்றமணியாற்குவளை திகழ்ந்துவிரிதென்களந்தை, திங்களணி சங்கரன் பங்கிலுறைதங்கமே தேவிகோமதியம்மையே. (கூ)

மண்பட்ட கலமெனவருந்தும்படியாவுடல்மனதுடைந்தறிவுகுன்றி, மாபாதகஞ்செய்யு மடையரையடுத்துமா மதுரமிகு கவிபாடியே புண்பட்டஒருசாணின் கும்பியைநிறப்பியவன் பொய்மைவழி மீதுநாளும்,

போக்குநல்லடியனையிகழ்ந்தவிப்பாதகன் பொறைதவ மியற்றிநல்ல, பண்பட்ட திவ்யமது திகழுமணிமின்பாத பங்கையப்பாடியே, பண்புபேரானந்தமாகிமிதமழி யாத பரமவீடடைவதென்றோ, திண்பட்ட சிலையரச நற்றவத தெய்வமெனுஞ் செல்வமே தென்களந்தை, திங்களணி சங்கரன் பங்கிலுறைதங்கமே தேவிகோம தியம்மையே. (௧0)

எல்லாம்படைத்த னல்லருளிலல்லற ஏழைநான் வந்திருக்கில், எண்டிசை யோர்களுநீ கண்டபடிவை வரோ இமையவரடாதென்பரோ, பொல்லாதமாபாவி சித்திரமொழியுமோ பொன்னடியிலிடமில்லையோ, பூத கணமேசுமோ வேதம்வசைபேசுமோபூரணங் குறைக் துவிடுமோ, நல்லாரிணக்கமில் லாதவனிவனென்று நல் லடியர் நகைசெய்வரோ, நல்வினை தீவினையெதிர்த்து வாய் பேசுமோ நாயினேற் குண்மையுரையாய், செல் லார் மலர்ச்சோலை கிள்ளைமறை பயில்திகழ்தென்களந் தாபுரிவளர, திங்களணிசங்கரன் பங்கிலுறைதங்கமே தேவிகோமதியம்மையே. (௧௧)

கோமதிஅம்மாள் ஆசிரியவிருத்தம்,

முற்றிற்று.

ஆக புத்தகம் 103.

உ

கடவுள் துணை.

பெரியபாளயம்

# எல்லையம்மை பதிகம்.

இஃது,

சிறுமணவூர்,

## முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1910.



உ

கடவுள் துணை.

---

## பெரியபாளையம்

# எல்லையம்மை பதிகம்.

### விநாயகர் துதி.

### வெண்பா.

அல்லவர்க்கும் நல்லவள்கா ணப்பெரியபாளையத்தா
ளெல்லம்மை மிசைப்பதிக மேற்றிடவே-நல்ல
பரமனுளமகிழும் பாலனெனு மைங்கரனைக்
கரமெடுத்துயான் துதிப்பேன்காண்.

### ஆசிரியவிருத்தம்.

ஆரணிப் பெரியபாளைய மென்னு மாநகரமதி லமர்க்
கிட்டயெல்லை, அம்மையிருதாள்துதித் தனுதினமும்
மேற்றிடும் அன்பரைக் காக்கவல்ல, வாரணி கொங்
கையுள மாதுமா லுக்கிளையவளுமான சுந்தரியும்நீ, வங்
காதரிக்கவருள் தந்துயெனை ரட்சிக்க வாதுனக்கேதம்
மன் னாரணிக்கலையூர்தி நீலியந்தரி கௌரிநமிர்கருணை
மிருதுபாஷிணி, நாடியுனை தேடியொரு கோடிசரணஞ்

செய்து நத்துமெனையா ளந்தரி, சாரணிதன்னிலே வ
ணப்புரிசதாவாசன் தனையன்திரு வேங்கடனை நீ, தாக்
காத்துரக்ஷிக்க வரவேண்டு மிப்போது தருணமெனை
யாள்சுந்தரி. (௧)

தாயதுவயற்றிர்ப் பிரந்துபான் மண்மீது தருமம
துசெய்தறிகிலேன், தஞ்சமென்றவர்தம்மை அஞ்சவே
ண்டாமென்று தைரிய முரைக்க வறியேன், நேயமுட
னனுதினமு நின்னடிமை யாமன்பர் நேயமது செயவறி
கிலேன், நெஞ்சமது யிளகவுன் கஞ்சமல ரடிதொழும்
நேசர்க்குகந்தவுந்தன், சேயனுன் திருவடிக்கன்பனென்
றேற்று மிச்சேதியைக் கேட்டலர்ந்து, சிற்றமதிலுற்ற
குறை பற்றரத்திட்டு யிச்சிறுவன் திருவேங்கடனை
யாள், ஆயநிட தங்கையே பரமனிடமங்கையே ஐங்க
ரனை யின்றவுமையே, அவனிதனிற்பெரியபாளயமென்
னுமாநகர மதிர்மேவுமெல் லம்மையே. (௨)

பெற்றதாய்தந்தையும் பெண்டுபிள்ளையு மக்கள்
பிரியமுள சுற்றக்களோர், பேதமில்லாமலே யாதரித்
திட்டுயென் பின்தடர்ந் தினிவருவரோ, விற்ற மதை
பற்றியெனைநற்றுமிச்சுற்றமிதை வர்திருந்தென்னபல
னைபெற்றிடு வதைச்சொல்லு மந்திமுகனைப் பெற்ற



உ

கடவுள் துணை.

---

# பெரியபாளயம்

# எல்லையம்மை பதிகம்.



## விநாயகர் துதி.

### வெண்பா.

அல்லவர்க்கும் நல்லவள்கா ணப்பெரியபாளையத்தா
ளெல்லம்மை மிசைப்பதிக மேற்றிடவே-நல்ல
பரமனுளமகிழும் பாலனெனு மைங்கரனைக்
கரமெடுத்துயான் றுதிப்பேன்காண்.

### ஆசிரியவிருத்தம்.

ஆரணிப் பெரியபாளைய மென்னு மாநகரமதி லயர்ந்
திட்டயெல்லை, அம்மையிருதாள்துதித் தனுதினமும்
மேற்றிடும் அன்பரைக் காக்கவல்ல, வாரணி கொங்
கையுள மாதுமா லுக்கிளையவளுமான சுந்தரியும்நீ, வந்
தாதரிக்கவருள் தந்துயெனை ரட்சிக்க வாதுனக்கேதம்
மண் நாரணிக்கலையூர்தி நீலியந்தரி கௌரிநமிர்கருணை
மிருதுபாஷணீ, நாடியுனைத் தேடியொரு கோடிசரணஞ்

செய்து நத்துமெனையா ளந்தரீ, சீரணிதன்னிலே வ
னப்புரிசதாவாசன் தனையன்திரு வேங்கடனைநீ, தர்க்
காத்துரக்ஷிக்க வரவேண்டு மிப்போது தருணமெனை
யாள்சுந்தரீ. (க)

தாயதுவயற்றிர்ப் பிரந்துயான் மண்மீது தருமம
துசெய்தரிகிலேன், தஞ்சமென்றவர்தம்மை அஞ்சவே
ண்டாமென்று தைரிய முரைக்க வறியேன், நேயமுட
னனுதினமு நின்னடிமை யாமன்பர் நேயமது செயவறி
கிலேன், நெஞ்சமது யிளகவுன் கஞ்சமல ரடிதொழும்
நேசர்க்குகந்தவுந்தன், சேயனுன் திருவடிக்கன்பனென்
றேற்று மிச்சேதியைக் கேட்டலர்ந்து, சிற்றமதிலுற்ற
குறை பற்றரத்திட்டு யிச்சிறுவன் திருவேங்கடனை
யாள், ஆயநிட தங்கையே பரமனிடமங்கையே ஐங்க
ரனை யீன்றவுமையே, அவனிதனிற்பெரியபாளையமென்
னுமாநகர மதிர்மேவுமெல்லம்மையே. (உ)

பெற்றதாய்தந்தையும் பெண்டுபிள்ளையு மக்கள்
பிரியமுள சுற்றக்களோர், பேதமில்லாமலே யாதரித்
திட்டுயென் பின்தடர்ந் தினிவருவரோ, விற்ற மதை
பற்றியெனைநற்றுமிச்சுற்றமிதை வற்றிருந்தென்னபல
னைபெற்றிடு வதைச்சொல்லு மத்திமுகனைப் பெற்ற

வுற்றமியுமானகுமரி, நிற்றமுனை சித்தமிது நற்றவருள் புரிகுவாய் நிர்மலானந்தரூபி, நீலிதிரிசூலிபரிபாலியெ ன்று னையேற்றும் நேயன்திரு வேங்கடனையாள், அற் றனிடமங்கையே சற்றிமயனு நங்கையே அன்பர்க்கு கந்தவுமையே, அவனிதனிற் பெரியபாளைய மென்னு மாநகரா டதிமேவு மெல்லம்மையே. (ரு)

திங்களொளி போன்றதிரு மங்கைமணவாளன்சி றுதங்கையே யானுந்தனைத், தேடிமனம் நாடியொரு கோடிசரணஞ்செய்து திரியுமெனை ரக்ஷித்திடும், சங்க ரன் னங்கமதிற் பங்குபெருமங்கையெனுந் தங்கநிரமா னவடிவே, சாமுண்டமாதரீ கௌரிமுக் கண்ணியிது சமயமென்றுனை நம்பியான், பொங்கமுட னுனதுதிரு நங்கமல ரடிதொழும் புனிதன்திரு வேங்கடன்ஸதா, புண்டரிகாக்ஷநிட தொண்டனென்றே புகலும் புவன மதிற் சக்கிராயுதி, அங்கமதி லாபரண மெங்குநிறை கொண்ட சிறுவைங் கரனை யீன்றவுமையே, அவனி தனிற் பெரியபாளையமென்ன மாநகரமதிர்மேவு மெல் லம்மையே. (சு)

ஆடி மாதத்திலேங் தாதிவாரமுமுந்த நடிபணிந் தேற்று மன்பர், அமிதமா யேகுவோருன் கோவிலைச்

சுற்றி அன்னையுனைக் காணாமலே, தேடியிருபதமதைநா டிமலர்சூடுவோர் தேவிநின் பிரார்த்தனை தமைத்,திர்த் துமெய்வோர்த்தி ததிபார்த்து கைகோர்த்து வுன்திரு வடித்தொழு மன்பரோ, கோடியோ இன்னமிருகோ டியோ யிவளவென குறிப்பிடவ சந்தனிந்த, கோதாட் டொழித்த திருவேங் கடனை யாட்கொண்ட கோவிந் தனிட தங்கையே, ஆடிய பதந்தரும் அத்தனிட மங் கையே அமரர்தொழு தேத்துமுமையே, அவனிதனிற் பெரியபாளைய மென்னு மாநகரமதிர்மேவு மெல்லம் மையே. (௫)

மலையரயன்மகளான மாதுனக்கடிமையான் மண் மிசை இருக்குமளவும், மனமொற்று நினைவுற்று யெ னையெற்றதாயென்று மனமது யிருக்து மிந்த, கலைமு ற்றுமறியாத சிறுவனுரைசெய்திடுங் கவியுமுன் செவி புகாதோ, காய்ச்சினமிலாமலென் தாய்போலவேயென் னை கார்க்காம லின்றுவேடன், வலைதன்னிடுல சிக்கி உழல்கின்ற மான்போல வரக்கினுய் அன்று பிரமன், தலைதன்னுலேபோட்ட புள்ளியது தப்பாது தனையன் திருவேங்கடனையாள், அலைகொண்ட நதியும் வெண்ம தியுமறுவும் புனையுமாகி சங்கரன்மங்கையே, அவனி தனிற்பெரிய பாளையமென்னு மாநகரமதிர்மேவு மெல் லம்மையே. (௬)

இடைசிறிது நடைமிருது படைபெரிதுஉந்தனிட ஹிருதயமதையறிவதரிது, ஈசனுடபாகமது கொண்ட டகௌமாரி நீயென்றேத்து மிஜ்ஜெகமெலா, முடைய உமையவளும்நீ விடைதரும் பிரதாபிநீ வும்பரேற்றிடு பத்மிநீ, உருவமது கொண்டநின் றிருவடிக்கன்பனெ ன்றாகவுமுன் கருணையென்னுங், கடைதிரந் திடிலெந் தன்கொடியபிணி நிற்குமோ கண்ணலர்ந்திட்ட வுன் னை, கண்டுதுயர் விண்டுகளி கொண்டுவுன் னடிதொ ழக்கருதுந் திருவேங்கடனையாள், அடைக்கலமெனைய தகுந்தலைகின்ற யென்னைநீ ஆட்கொள்வ தரிதேதினி, அவனிதனிற் பெரிய பாளைய மென்னுமா நகர மதிர் மேவுமெல்லம்மையே.

(எ)

வண்டுமொய்த்திடுமலர்க் கொண்டுநின் றிருவடிக் கண்டுள மகிழ்ந்துநிற்கும், வாஞ்சையை யறிந்துந்தன் வர்மமதுரைத்திடும் வரிதரிது யானுக்கு, தொண்டு செய்பவனென்று அண்டர் முனிவோரறிவர் தொல் லுலகனைத்துமரியும், தோகையே யுனையன்றி முன்னெ மெனை யாட்கொண்ட தோன்றலொருவனு முண்டுகே ள், தண்டுழாய்மார்பனையும் அண்டுவே னெருவேனி நர்ப்பரிபவனுனக்கு, தமயமெனு முறைமையா விரு வரையுமேற்றுமிற்றனையன் திருவேங்கடனையாள், அன்

டுமவர் தம்மையாட் கொண்ட சிவமங்கையே அன்பர்க் கிரங்குமுமையே, அவனிதனிற் பெரியபாளைய மென் னுமாநகர மதிர்மேவு மெல்லம்மையே. (அ)

மண்டைக்குடைச்சல் வயர்நோவுகாமாலை முதல் மாருதவல்வினைகளைக், கொண்டுநின் றிருவடிற்றுள்ளது தித்தேகத்துவமர் கொடும்பிணியகற்றவிப்பூ, மண்டலந் தன்னிலே கண்கண்டதெய்வம்நீ மற்றுமொரு தெய்வ முண்டோ, மறைகற்ற குறையற்றநிறைபெற்றதிருமே வுமார்பனிட தங்கையேயுன், தொண்டனைப் பூர்வவினை யண்டிவாடிடுமிந்த துயரகத்திடயின்று நீதுரிதமாய் வரவேண்டும் சிறுவன் திருவேங்கடன் துயர்கண்டயில் வரியும்நீ, அண்டபகிரெண்டமெண் டிசையுமேற்றிடு மந்த ஆதிசிவனிடமங்கையே, அவனிதனிற்பெரியபா ளயமென்னு மாநகரமதிர்மேவு யெல்லம்மையே. (கூ)

கர்ப்பினுக்கரசிநீ சொர்ப்பெருங் கோதைநீ கரு ணைகூர்ந்தாள்பவளும்நீ,காய்சினமிலாளும்நீ கண்கண் டதெய்வம்நீ கணபதியை யீன்றவளும்நீ, பொர்ப்புள் ளமாதுநீ போதனைக்காரிநீ புன்னகைக் கொள்பவளு ம்நீ, போர்புரியும் சத்திநீ ஆற்பரித்திடுவைநீ பொங்க முடன்வாழ்பவளும்நீவொப்பரசன்புதல்விநீ,கர்ப்பளைக்

சாரிநீ வேதனையின்றமால் தங்கைநீ, வெற்றிபெருங் கௌரிநீ சத்தியேயிவ்வேளை வெளியன் திருவேங்கடனையாள், அற்பெருங் கோதைமலர் மங்கைமணவாளனுடன்றுதித்திட்ட வுமையே அவநிதனிற் பெரியபாளையமென்னு மாநகரமதிர்மேவு மெல்லம்மையே. (௧0)

பூமாலைகொண்டுந்தன் தோண்மீதிலேசாற்றபொருள்கையிலில்லாமலோர், பாமாலையாம்பதிகம் பதினொன்று ஆசிரியபண்ணதனையானியற்றி, சிமோட்டியேயுந்தன் செய்வடிபசேய்சாற்றும் சேயனை யாட்கொண்டுநின், சிற்றமதிமெற்றதயை வைத்துயெனை ரக்ஷிக்க சிக்கிரங்கருணைபேருகி, வாமா க்ஷிகாமாக்ஷி மீனாக்ஷிநீயோடிவரவேண்டு மிச்சமயமென், வந்தனங் கைகொண்டு இந்த திருவேங்கடனை வாழ்த்தார்ச் சமய மருள்தர, யாமினிதனக்கு நிகர்கந்தரத் திறைவநிட யன்புபெற்றேருங்குமுமையே, யவனிதனிற் பெரிய பாளையமென்னுமாநகரமதிர் மேவு மெல்லம்மையே. (௧௧)

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

கன்னபுரம்

# முத்துமாரி யம்மன் பதிகம்.

---

இவை,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1910.



உ

அம்பாள் துணை.

கன்னபுரம்

# முத்து மாரியம்மன் பேரில்

# பதிகம்.



புயல்போலுமளகத்தின் மீதுற்றநவரத்தின பொன்னணியணிந்த வழகும், புனையு நற்சுட்டியும் பட்டமொடு சிந்தூரப் பொட்டிட்ட நுதலி னழகுங், கயல்போலு மளிபோலு மலர்போலு மிளிர்கின்ற கருணைபொழி விழிகளழகுங், கருதரிய மூக்கின் மூக்குத்தினழகும் மொளிகொள்காதணையணிந்தவழகும், மயல்போலும் வஞ்சகரை மாட்டுவெஞ்சூலமணி மணிகளும்புயவழகுமென், மாத்தலையிலணிகின்ற பாதத்தினழகுமென் மனதிலுறவந்தருளுவாய், முயல்மோனமதிபோலுஞ் சுதைமேவுமணிமாடமுகிலளவு கன்னபுரம்வாழ். முத்தமிழி னுத்தமர்கள் சித்தமதினித்தமுறை முத்துமாரிச்செல்லமே. (க)

மாதவத்தோர் கடம்மனதிற் குடிகொண்டுமறைமுடியினின்றவொளியே, மாசிலாமணியே நின்மகிமை



டிம்மி திக்குகாயிதத்தில் அச்சிடப்பட்ட

# ஸ்ரீமத்

# கம்ப ராமாயண வசனம்.

## உயர்ந்த பதிப்பு 2-வா॰லியம்.

### லெத்தகிராப் படங்களுடன்

இதுவரையில் ஸ்ரீமத் கம்பராமாயணவசனத்தை எந்த அச்சுக்கூடத்தாரும் இவ்வளவு திறமான திக்கு கடிதத்தில் அச்சிட்டதேயில்லை பூர்விகஇராமாயணத்தையும், வால்மீக இராமாயணத்தையும் ஒத்திட்டு எம்மால் கூடியவரையில் பிழையில்லாமல் பரிசோதித்து அச்சிட்டிருக்கின்றோம் இதில் அச்சுப் பிழையாவது காகிதம் இளப்பமாயாவது பைண்டு மட்டமாயாவ திருக்கும்பட்சத்தில் உடனே திருப்பிவிடலாம். காலி கோபயிண்டு

## திக்கு 2-வாலியம் விலை ரூபா-5.

சி. முனிசாமிமுதலியார் அண்டு கோ.

பெரம்பூர் பாரெக்ஸ், மதராஸ்.



உ

அம்பாள் துணை.

## கன்னபுரம்

# முத்து மாரியம்மன் பேரில்

# பதிகம்.



புயல்போலுமளகத்தின் மீதுற்றநவரத்தின பொன்னணியணிந்த வழகும், புனையு நற்சுட்டியும் பட்டமொடு சிந்தூரப் பொட்டிட்ட நுதலி னழகுங், கயல் போலு மளிபோலு மலர்போலு மிளிர்கின்ற கருணை பொழி விழிகளழகுங், கருதரிய மூக்கின் மூக்குத்தி னழகும் மொளிகொள்காதணியணிந்தவழகும், மயல் போலும் வஞ்சகரை மாட்டுவெஞ்சூலமணி மணிகரும் புயவழகுமென், மாத்தலையிலணிகின்ற பாதத்தினழகு மென் மனதிலுறவந்தருளுவாய், முயல்மோனமதிபோ லுஞ் சுதைமேவுமணிமாடமுகிலளவு கன்னபுரம்வாழ். முத்தமிழி னுத்தமர்கள் சித்தமதினித்தமுறை முத்து மாரிச்செல்லமே. (க)

மாதவத்தோர் கடம்மனதிற் குடிகொண்டுமறை முடியினின்றவொளியே, மாசிலாமணியே நின்மகிமை

யறியா மூடர்மறுகக் கறுக்குமிருளே, சீதரன்முதலா னதேவ ரனைவருநாடி தேடரிய முத்திமுதலே, தீங்கு லாநின்னடியர் நன்னெறியனின் னுநற் சின்மையான ந்தவடிவே, ஆதரவுநீயன்றி வேறில்லை யெனநம்புமடி யேன் மனத்தமுதமே யல்லினும்பகலு நின்னடியினை கண் மறவாதவற்புதமெனக் கருளுவாய், மூதார்ந்தபு கழ் பரவு வேதாந்த வேதியர்கள் வாதார்ந்த கன்ன புரம்வாழ், முத்தமிழி னுத்தமர்கள் சித்தமதி னித்த முறை முத்துமாரிச்செல்வமே. (உ)

சிரமதானின்மலர்ச் சேவடிவணங்கியே சீரளவு நின்காதையைச், செவிகளாரக் கேட்டுசெய்ய கண்களி னுலுன்றிரு முகந்தனைநோக்கியே கரமதானின்றிருப் பணிகளைச் செய்தோக்கி கனமளவுநினதாலயம், காலி னுல்வலம்வந்துகாயமுழுதினுமுனது கருணைவெண்ணீ றணிந்து, வாமுதவுநின்புகழை வாயினுற்பாடிநின்மல ரடி களணிகறபக, வாசத்த யென்றனது நாசியாலே யுண்டுவாழ்ந்துகளி கூரவருள்வாய், முரசமதிர்கடைக டொரு படைமகிபர் கொடைமிகுதி யொழியொணுக் கன்னபுரம்வாழ், முத்தமிழி னுத்தமர்கள் சித்தமதினி த்தமுறை முத்துமாரிச்செல்வமே. (ங)

தையலர்கள் கண்ணின்வலைக் குள்ளகப் பட்டுழ ன்றே தயங்கலென்னுர், தாழ்வான விழலுக்கிறைப்ப

தையொழித் தனது சரணபங்கய பூசையாம், துய்ய செந்நெற்பயிரை யோம்பியைப் பொரியினுறு தற்கு ணக்களேகளேந்து, துன்னுசற்பத்தியா மொருபோட ருக்மாஞ்சோர்விலா நீர்பாச்சவே, செய்யவுன்றிருவரு வெனுங் கதிர்விளேந் தென்றன்றீ விளைப் பசிதனிர்து, செப்பு மெய்ஞ்ஞானச் செழுஞ்செல்வ மெய்திற்சிறந் துகளிகூரளருவாய், மொய்யலக்கற்பகக் கையினடர் கடம்மொடும் முகில்பொருவு கன்னபுரம்வாழ், முத்த மிழினுத்தமர்கள் சித்தமதி னித்தமுறை முத்துமாரிச் செல்வமே. (சு)

தேகப்பெருங் கப்பலேறிப்பிறப்பெனுந் திரைகட லிலோடுநாளில், தீவினையெனும் சுழல்காற்றினலறிவெ னுங் திசைதப்பி யதிதூரிதமாய், வேகக்கடுந் துயரெ னுங்கருங் கடல்பாய்ந்துமெய்பிணிக ளென் னுமலேகள், மேலிட்டுவிடைக்கயினி லுயிரென்னுமால்மியினை வெய் யவங்கூற்றனுகும், யேகப்பெருஞ்சுற வெடுத்துண்ண கோரத்தை யேதென்றெடுத்துரைப்பேன், யிவ்வண்ண மாயானு முலகத்தி லலையாமலேந்தியே காத்தருளு வாய், மோகத்தைதருமா தராகமிதுமின்னி தெனமுன் னரிய கன்னபுரம்வாழ், முத்தமிழினுத்தமர்கள் ரிசித்த மதினித்தமறை முத்துமாரிச்செல்வமே. (கு)

அல்லியங்கமலத்தி லுறைகின்றபிரமனு மரியசுத் திராதியென்னை, அடம்வைத்து நிணமதுடன்மலசலமு நாறு முடலாகுங் கிடங்கில்வைத்து, வெல்லொணாப் பந்துசனவாசை யென்றேசொலும் விலங்கிட்டுப்போ தாமலே, வெம்பிணிக ளென்னுமரி கண்டமதுபூட்டி யே வேதனைக் காளாக்கியும், ;அல்லற் கடுந்துயரெனும் பெருநெருப்பை யென்னண்டையினுன் மூட்டிவைத் தான், அரியரியின்னுமவன் செய்கின்ற யாதனைகளை விட்டுமுடியாதம்மா, முல்லைநகைமங்கையர்கள் கற்பி னுறிங்கடொரு மும்மழைய கன்னபுரம்வாழ், முத்த மிழினுத்தமர்கள் சித்தமதி லித்தமுறை முத்துமாரிச் செல்வமே. (௯)

உலகங்களெல்லாம் படைத்தந்த வுலகுலவவுயிர்க ளெல்லாம்படைத்தல், வுயிர்களுண்ணத்தக்க வூண்க ளெல்லாப்படைத்துயர் வானவீடும்படைத்,தலகிலநின் னடியர் வாழ்ந்தோங்கவனுதினமு மளவிலாச் செல்வ நல்கும், அருளுருவவம்மைநீ யடியேனைமீன்,றதொரான் னையருகேயிருந்தும், பலகிலேசக்கடலின் மூழ்குமெனை யேத்திலை பளாபளா நன்றுநன்று பாரிலிவ்வண்ணமொ ரு வன்னைசெய்தாலதைப்பார்த்தபேர் நகையார்களோ

முளையூட்டுமென்னையினு மினியகனிவாளரே முற்றுநி
றை கன்னபுரம்வாழ், முத்தமிழுனுத்தமர்கள் சித்த
மதினித்தமுறை முத்துமாரிச்செல்வமே. (எ)

நித்தமும்புதிதாக மேன்மேலும் மனமெலிய நேர்
துயரென்றே சொல்வனே, நீங்காதகலியும்வெம்பிணி
யுமைம்பொறியுஞ்செய் நீடிடரென்றேசொல்வனே,சித்
தமயலையைச்செயுஞ் சமுசார சாகரத் திலயசென்றே
சொல்வேனே, செய்யவின்பாத பூசனைசெய்யவொட்
டாத தீவினையென்றே சொல்வேனே, எத்தனைகுறை
யென்றெடுத்து தானேதுவனேதற்கு முன்மனமிரங்
கா. யென்னன்னைநீயே பராமுகம் பண்ணினல் யாரெ
ன்னையாதரிப்பார் முத்தர்வெண்குடையுடைய கொற்
றவர்கடம்பெருமை முடிவிலாக் கன்னபுரம்வாழ், முத்
தமிருனுத்தமர்கள் சித்தமினித்தமுறைமுத்துமாரிச்
செல்வமே. (அ)

தென்றிசைக்கதிபனு வுலகவுயிருண்டுவளர் தீய
வெங்காலவேடன், சிற்றறிவையுடையவென் போலொ
த்த சிறியராம்செந்துக்களைப்பற்றவே, கன்றிலாச்சரச
நய பருவங்கையரெனுங் கண்ணிகள் முடிந்து வைத்
தான், கனமான பொன்னசை மண்ணாசையாகுங்கடுங்

தூண்டில் யிட்டுவைத்தான், வென்றிலா கந்துசனவா சையதெனுங் கடிபவலேபியான்று விசிவைத்தான், விப ரீதமானயம் கண்டங்களித்தணேயும் வென்றுநின்றுளா வனே. முன்றிவொருமங்கலக் கடிமுரசவாத்தியமுழங் கிவருகன்னபுரம்வாழ், முத்தமிழினுத்தமர்கள் சித்த மதினித்தமுறை முத்துமாரிச்செல்வமே. (௯)

மண்டலர்தனிலுன்றன்மலரடிக்கேமனமகிழ்ந்தே வணங்கினின்றூர், மதுரகவிமொழிகின்ற கவிராசராக வேமகிமையைபெற்றூர்கள்சிலபேர், அண்டமுடனெண்டி சை யணைத்தாளுமிந்திராதி யமாருனூர்கள்சிலபேர், அ டையலர்நடுங்கவே செங்கோனடாத்திவரு மரசாரனூர் கள்சிலபேர், விண்டிலாவைம்பொறியை வென்றுமெய் ன்ஞான வீராஞர்கள்சிலபேர், மேலானசகலசம்பத் தடைந்தார்கள்சிலர் மெய்யானநின்கருணையால், முண் டகத்தடநிலவுதண்டலேகண்முகடளவமொய்த்து வள ர்கன்னபுரம்வாழ், முத்தமிழினுத்தமர்கள் சித்தமதினி த்தமுறை முத்துமாரிச்செல்வமே. (௧௦)

முத்துமாரியம்மன் பதிகம்

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 105.

உ

கடவுள் துணை.

# துரோபதையம்மன் பேரில் விருத்தம்.

இஃது,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1910.

43

## சரீர சாஸ்திரம்.



உலகத்தின்கண் மனிதர்களாய்ப்பிறக்கிற ஒவ்வொருவருக்கும் ஆயுட்பிரமாணம் 100-வயதென்று பிரமகீதை உற்பத்திகாண்டம் முதல் சகலமான வேதசாஸ்திரங்களிலும் சொல்லியிருக்க (அதற்குவிரோதமாய்) கருவில்மரணமும் சிசுவில் மரணமும் பால்ய மரணமும் எவ்வனமரணமும் பற்பல அகாலமரணமு முண்டாகிற காரணமும். "அச்செல்லாம் ஒன்ருய் அதிலே இருவகையாய் வச்சதென்ன சோணகிரி வல்லலே" என்றபடி மனிதர் என்னும் பிறப்பெல்லாம் ஒரே அளவில் பிறக்காமல் கூன்-குருடு-செவிடு-நொண்டி-முடம்-செல்வம்-தரித்திரம்-யோகி-ஞானி-மூர்க்கன்-மூடன் இப்படி பற்பலபேதங்களேயும் பின்னங்களாயும் பிறக்கிற காரணமும் தாய்தகப்பன் புணருங்காலத்தில் மனம்புத்தி இன்னவிதமான கருதரிக்குமென்றும் சிலரகசியங்களும் அடங்கியிருக்கிறது. இதன் விலை அணு-8.



உ

கடவுள் துணை.

---

# துரோபதையம்மன்பேரில் விருத்தம்.

—(*)—

சீர்பெற்றயுலகினில் துவாபரயுகத்தினில் ஜென்மித்து ஐவராக, செங்கோலுக்கதிபதி தர்மபுத்திரர்வீமர் தனஞ்செயனகுலசாதர், பேர்பெற்றதிருதராட்டிரன் மைந்தன் துரியனுடன் சூதாடிபுவிதோர்த்துதான், தேவிபாஞ்சாலியும் ஐவரும்வனவாசம் சென்றுதான் பனிரிரண்டு, நேர்பெற்ற அக்யாதம் ஓராண்டுசெல்லவே நின்றுதான் விராடபுரத்தில், நெடியமால்தயவினால் பாரதமுடிக்கவே நிகரிலாப் போர்ப்பொருந்தி, மாருத்ததுரியன்மேல் நின்றுதான் விரிகூந்தல் வாரியேமுடித்தவுமையே, வனர்சகிளிகதம்பமணி குங்குமவசந்த நெரி மதிருபபாஞ்சாலியே. (க)

நீடாலும்பாஞ்சாலன் எக்கியந்தன்னிலே நீயொருப்பெண்பிறந்தாய், நெடியதொருவில்தனை வளைத்தவர்

தமக்குநீ நிஜயந்தருவனென்றாய், சொடாகசுயமரஞ்
சாட்டியதுருபதன் துரோபதைதனக்குமணமே, செ
ல்லரியதுரியோதிர ராஜனுந்தம்பிமார் தொல்புவிமன்
னவர்களும், ஆடாதவில்தனை நாணேரிடாமமே அவம
திப்பட்டுநிற்க, அப்போதுவனவாசம் காட்டினில்திரி
ந்தவர்களைவருந்தானிருக்க, வாடாதவில்தனை வளைத்
துதானர்ச்சுனன் மாலைதானிட்டுகொண்டார், வனர்க்
கிளி கதம்பமணி குங்குமவசந்தநெரி மதிரூப பாஞ்சா
லியே. (உ)

தர்மமேநித்தியம் தர்மமேமுத்தியும் தர்மருங்
கொலுவிருக்க, தாஷ்டீகவீமனும் அர்ச்சுனனும் நகுல
சகாதேவனருகிருக்க, வரமுள்ளதேவியுனை ஐவர்க்கும்
பாரியாய் மாதுநீ அருகிருக்க, மாதுநீயொருவர்க்கும்
பாரியுமல்லகாண் மற்பொருது பார்க்கவந்தாய், சாரு
தபோரினில் ஐவரையுங்கொடுவந்து சபதமேமுடித்
தவுமையே, சங்கரிபார்வதி வுந்தனிடமகிமையான்சாற்
றவே முடியுமோதான், வர்மகுணவஞ்சியே மாயோன்
சகோதரி வந்தென்னை ரக்ஷித்திடும், வனர்க்கிளிகதம்ப
மணி குங்கும வசந்தநெரி மதிரூபபாஞ்சாலியே. (ங)

பஞ்சவரை துரியனும் விருந்தாக்குவாவென்று பரிவாகவேயழைத்து, பாதகன்ஜகுனியும் வசனுபியைக்கலந்துபரிந்துடனமுதளித்தான், வஞ்சனையறிந்துதான் மாயவர்கிருஷ்ணரும் வண்டாய்ப்பறந்துவந்து, மணிரத்னதிபத்தை யணைக்கவேபஞ்சவர்கள் மனம்வாடிதிகைத்துநின்றார், நெஞ்சினில்கபடமது யில்லாதவீமனும் நிறைந்த அமுதேயுருட்டி, நெடியமால்தயவினுல் பசியாரிவீமனும் படுக்கையால்மூர்ச்சையானர், வஞ்சியே துளபமணி மாலையர்வயித்யராய் வந்துமகவீமருக்குயிரளித்தார், வளர்க்கிளிகதம்பமணி குங்குமவசந்தநெரிமதிருபபாஞ்சாலியே. (சு)

ஐவரையுங்கொண்டுபோய் அரக்குமாளிகையினிலடைத்துதான் துரியோதிரன், அருசண்டவிலங்கிட்டு அக்கினியைமூட்டினன் அப்போது தர்மர்தானும், செய்யும்வகையேதென்று தேவரீர்மாயவரை சிந்தையில் நினைந்தபோது, செந்துளவமாலையர் வந்துதானைவரையும் தற்காத்துரக்ஷித்தனர், தையலாள் துரோபதையை சபையிலேகொண்டுவர தம்பிதுர்சாதனந்தான், சற்றுந்தயவில்லாமல் பத்தினிதுகில்தனை கத்தரித்தேயுரித்தார், வையகமளந்தவரை மனதினில்னினைந்திட

மாளாதுதுகிலளித்தார், வனர்க்கிளிகதம்பமணிகுங்குமவசந்தநெரி மதிரூபபாஞ்சாலியே. (ரு)

பன்னிரண்டாடுதான் சென்றுமேவனவாசம் பருகியே அக்யாதந்தான், பாராளும்விராடனூர் பக்கலில் ஐவரும் பத்தினிமருவேலமாய், தனியாகமயல்கொள்ளகீசகன்தனைக்கொல்ல தாஷ்டீகவீமன்றானும், தாக்கியஅர்ச்சுனன் சண்டைக்குமாடுபிடி சாரதிமாயன்றானும்பனிசூழும்பாராளும் துரியனூர்பக்கலில் பாலகனைதூதனுப்ப, பாதிநாடாளவேஐந்நூருகேளுமென்பகரவேமாயனூர்க்கு, வாணிசூழர்ச்சுனயுரந்தனிலேகியேமாயவர்அூதுசென்றூர், வனர்க்கிளிகதம்பமணி குங்குமவசந்தநெரி மதிரூபபாஞ்சாலியே. (சா)

பாரதம்பதினெட்டு நாளுமேசென்றபின் பரிவானதர்மருக்கு, பட்டாபிஷேகமே கட்டியேமகுடமுடிபண்பாகவேசூட்டியே, சாரதியானதொரு மாயவர்வந்துதான் சதுர்மறைகள்தானோதியே, சாத்தியே அரசாளும்செங்கோல்செலுத்தியே தர்மராஜனென்றுபோற்ற, வீரவாளுருவியே தம்பிமார்நால்வரும் வீரியேபக்கம்நிற்க, வீரதமமட்டமும் முரசுவல்லாரிகை விருதுடன்ஆர்ப்பரிக்க, வன்னித்துரோபதாள் பட்டபூதேவியும்வந்துதானருகிருக்க, வனர்க்கிளி கதம்பமணி குங்குமவசந்தநெரி மதிரூபபாஞ்சாலியே. (எ)

உலகமதுஆண்டபின் கலிபிறந்ததுவென்று ஒன்ருகதம்பிமாரும், உமையவள் துரோபதையுமகாவேதஞ் சொல்லவே உடல்விட்டுவைகுந்தம்போய், நிலைமையுடன்தர்மரும் வொண்டியாய் வைகுந்தம் நெடியமால் பாதம்பெற, நிகரிலாமாயவன் கெருடனையழைத்துமே நீயெதிராகுமெனருர், கல்மதிர்க்குலந்தனை விமானத்தில்வைத்துடன்கான்டினுர்வைகுந்தமே, கலியுகந்தன்னிலே அறியவே அனைவர்க்கும் கண்கண்டதெய்வமாநீர் வரம்பெறுமடியார்கள் பங்கிலுறைவஞ்சியே மாதுநீதுரோபதம்மாள், வனர்க்கிளிகதம்பமணி குங்குமவசந்தநெரி மதிரூபபாஞ்சாலியே. (அ)

கொந்தமுங்கொடிகளும் குமரவர்க்கங்களுங் கொக்கரித்தண்டமதிர, கூட்டமிட்டேயொரு பேய்களும் பூதமும் குருமுனிவன்புபில்லி, விந்தையாஞ்சாகினி மோகினியிடாகினி யிரிசூலிகாட்டேரியும், வீரவீராக்களும் ராக்ஷதகணங்களும் விடுபட்டராவிரிஷியும், உந்தன்வீரபண்டாரமும் சாட்டியும்பணிகளும் காணவே திடுக்கிட்டுதான், ஓயம்மேஓயம்மே நேய்போயினேயென்று ஓடுமேகொக்கரித்து, வந்துநீஅடியேனை காத்துரக்ஷித்திடும் மகாவீரபாஞ்சாலியே, வனர்க்கிளிகதம்பமணி குங்குமவசந்தநெரி மதிரூப பாஞ்சாலியே. (௯)

பத்துமேபக்தியுடன் பாடினேனுன்மீதில் பராசத்தி துரோபதம்மா, பாஞ்சாலகன்னியே வீரமல்லாரியே

பத்தினிபரமேஸ்பரி, நித்தமுன்பாதமலர் நினைவிலே நினைக்கிட நிற்குமோபவங்களம்மா, நீலிபாஞ்சாலிநீ கால்கபாலியே நெடியமால்தங்கையம்மா, உத்தமிது ரோபதாள் நித்யகல்யாணியே யோங்காரவீரசத்தி, யுல்லாசகாமினீ சல்லாபூவாணிநீ யுமையபாஞ்சாலிகல்ணி, வைத்திடும்சித்தமென் வல்வினையைநீக்கிடும் மகாவீரபாஞ்சாலியே, வனர்க்கிளிகதப்பமணி குங்குமவசுந்தரெரி மதிரூபபாஞ்சாலியே.

துரோபதையம்மன்பேரில் விருத்தம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

வீராம்பட்டணம்

# மாரியம்மன்பேரில் விருத்தம்.

---

இவை,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1910.

# மலையாள

# மாந்திரீகபோதினி

## புதிய புஸ்தகம்

இதில் கணபதி மூலமந்திரம் அஷ்டகணபதியின் அஷ்டமாசித்து அஷ்டகணபதியும் ஒன்றாய்நின்றாடும் மூலமந்திரம் - பிரம்மமந்திரம் - விஷ்ணுமந்திரம் உருத்திரமந்திரம் - சதாசிவமந்திரம் - அஷ்டகரும மந்திரம் வேறுவித தம்பனம் - மோனம் - வசியம் - மாரணம் - உச்சாடனம்-ஆக்கிருஷ்ணம் -வித்துவேஷணம் பேதனம் -அஷ்டதிக்குமந்திரம் - ஜெபம் - நீலகண்டர் அட்டமாசித்து மந்திரம்-நந்தீசர் தியானம்- சுப்பிரமணியர் சருவசங்காரவிஞ்சைமந்திரம் - பஞ்சாக்ஷரவிலக்ஷணம்-பஞ்சாரமாரல் சிவபஞ்சாட்சரம்- ஆயிபஞ்சாட்சரம்-தீச்சை மந்திரங்கள் இவ்வாறு அனேக மந்திரம் அடங்கியது. மலையாளம் பகவதியாப்பிள்ளை செய்தது.

இப்புத்தகம் விலை அணா 4.

சிறுமணவூர் முனிசாமி முதலியார் கம்பெனி,
பெரம்பூர் பாரெக்ஸ் போஸ்டு, சென்னபட்டணம்



உ

சிவமயம்.

## வீராம்பட்டணம்.

# மாரியம்மன்பேரில் விருத்தம்.

சுந்தரிநிரந்தரி திகம்பரிபராம்பரி சுமங்கலிதிரிசூலி நீலி, சோதிமகாமாயி கருணாகரிபிராதனி துரந்தரிசுர கபாலி, மந்திரசடாதரி மயேஸ்வரிசறுவேஸ்வரி வாரா கிநவதோணிராணி, மரதங்கிஓங்காரி ஆங்காரிசிங்காரி வல்லிதிரிபாபயிரவி, சந்திரசேகரிகுமரி தாண்டவாடம் பரி சங்கரிசித்தி கல்யாணி, சாம்பவிமுக்கண்ணி லோ கரட்சாகரி தயாநிதி ஆனந்தரூபி, சிந்தைபணமகிழவே வீராப்பட்டணத்தில் திரைகடலிம்லாரம்வாழும், செங் கண்மால்தங்கைமே எங்கள்குலதெய்வமே செங்கழுணி மாரிவுமைமேய. (க)

தாயானசெல்விநீ சர்வலட்சுமியுநீ சரஸ்வதிமனோ ன்மணியும்நீ, சாதிபேதகமாக வந்தவளுநீதையல்நாயகி உண்ணாமுலேயும்நீ, காயாமல்வளர்கின்ற காஞ்சிகாமாட் சிநீ மகலாட்சிவிசாலாட்சிநீ, கண்கண்டதெய்வம்நீ சிவ காமி அன்னைநீ கனமதுரைமீனாட்சிநீ, மாயாவினோதிநீ

ரேணுகாதேவிநீ மாதஙரோணம்பிகையுந்நீ, வடிவுடைய மங்கைநீ அகிலாண்டதேவிநீ வளர்கின்றபுட்களாயிநீ, தேயாமல்வளர்கின்ற வீராம்பட்டணத்தில்திரைகடலி லோரம்வாழும், செங்கண்மால்தங்கையே எங்கள்குல தெய்வமே செங்கழுநீர்மாரிவுமையே. (௨)

எச்காலதேவிநீ எல்லம்மைகாளிநீபிடத்திர்த்தபெ ரியம்மைநீ, எதிரியாவந்தவர்கள் குலகாலநீ சின்னம் மைகொத்தம்மைநீ, பிக்கணமறுத்தநீ படவீடமர்ந்தநீ வீரவீரேஸ்வரியும்நீ, வினைதீர்க்கவந்தநீகன்னனூர்குடி கொண்டு வேம்பினில் வந்தவளுநீ, அக்கினிசுரூபிநீ சமையபுரநதாளும்நீ அழகுபாளையத்தாளும்நீ, ஆதிசி வசத்திநீ ஸ்ரீருக்கிராட்சிநீ ஆடம்பரிமோகாம்பரியு நீ, திக்கெலாம்புகழ்பெற்ற வீராமபட்டணத்தில் திரை கடலிலோரம்வாழும், செங்கண்மால் தங்கையே எங் கள்குலதெய்வமே செங்கழுநீர்மாரிவுமையே.

நித்தமும்உந்தனிட பாதாரவிந்தத்தை நிசமதாய் நம்பினோர்க்கு, நெடுநாளுமகலாத பிணிதீர்த்துநிலைத ந்து நித்தியமங்களமுதவுவாய், பத்தியாயுனைநம்பி மடி யாரைகுடியாக்கி பாததெரிசனையருளுவாய், பரியாச மாகவேநிந்திசெய்மூடரை பதுமைபோலாட்டிவைத்து செத்திடும்பிரேதமாய் நித்தியமூழ்மூடராய் திரிகிப்பி

டிங்கிவைப்பாய், செம்பவழவல்லியே உத்தனிடமகிமை யை செப்புதற்கெளிதாகுமோ, சிறியாமனமகிழ வீ ராம்பட்டணத்தில் திரைகடலிலோரம்வாழும், செங் கண்மால்தங்கையே எங்கள்குலதெய்வமே செங்கழுணி மாரிவுமையே. (ச)

தில்லுமுல்லுகள்செய்து வல்லமைகள்பேசியே தி கைக்கவேசெய்தபேர்க்கு, திருஉலம்விட்டு அவருடலு ம்பிளந்திட திருக்கோணமாக்கிவைத்து, செல்லுகளெ ரித்திட கண்குருடுசெவிடுமே செலவாதைக்குணமேக மும், சேழ்ப்பமொடுபித்தமும் நாக்கினில்விராச்சியும் சித்தமும்மயங்கவைப்பாய், அல்லுமேபகலும் உன்பா தம்நம்பினபேர்க்கு அதிகபாக்கியமருளுவாய், அனுதி அபிராமி அறவாபரணி திருகோணி அழகுள்ளநீலவே ணி, சொல்லுமொழிபிசகாத வீராம்பட்டணத்தில் திரைகடலிலோரம்வாழும், செங்கண்மால் தங்கையே எங்கள்குலதெய்வமே செங்கழுணிமாரிவுமையே. (ரு)

வஞ்சனைகள்பில்லி சூனியமொடுபேர்களும் வடுக னுகொட்டேரியும், வடிவமோகினிகளும் பிடியொத்த வீரனும் வதைக்கின்றபூதகணமும், அஞ்சாமல்வந்தி

டும்கூளியுந்தூளியும் ஆடிவருலாடமுனியும், அருபி யாய்வந்திடும் பிரம்மசாமுண்டியும் அசைவத்தசாகினி களும், மிஞ்சிவரவொட்டாமல் காத்துரட்சித்திடும் வித்தகிமுத்தாலம்மையே, மெய்யானதெய்வமே பரசு ராமனைப்பெற்ற வேதநாரணிகாரணி, செஞ்சொல்கள் மரவாத வீராம்பட்டணத்தில் திரைகடலிலோரம்வா ழும், செங்கண்மால்தங்கையே எங்கள்குலதெய்வமே செங்கழுணிமாரிவுமையே. (கூ

சென்மங்கள்உலகத்தில் யெடுத்தநாள் முதற்கொ ண்டு சித்தத்தில்கவலைகொண்டு, செய்யாதபூசையும் தானதர்மங்களும் செய்யருருகடாட்சம்வைத்து, கர் மங்கள்தோஷங்மள் நீக்கியபுத்திரரைக் கருணையாய் த்தந்துமென்ன, கௌமாரிஆயிகுருஉந்தன்முத்திரை தந்து கரையேறிஞல்நம்பலாம், உன்மகிமையறியாமல் உலகத்திலுள்ளபேர் உழன்றுதிரிவார்களம்யா, ஊத்து க்காட்டமர்ந்த தலுக்காணநாயகி உன்னையேநம்பினே னம்மா, சென்மவினைதீர்த்தருளும் வீராப்பட்டணத் தில். திரைகடலிலோரம்வாழும், செங்கண்மால்தங்கை யே எங்கள்குலதெய்வமே செங்கழுணிமாரிவுமையே.

வேடிக்கையாகவே உன்மகிமைசொல்லியேவேப்பி லைக்கரகமேந்தி, விளையாடினோர்களை அலையாமல்கார்த்திடும் மெய்யான அங்கமுத்தே, தேடியேயான்வுன்னைத் தோத்திரஞ்செய்யவும் தெரிசனந்தருளுவாய், செமதக்கினிரிஷியுடன் விளையாடிவளர்கின்ற சிவானந்திராஜேஸ்வரி, வாடியேதிரியாமல் மங்களசுகந்தந்து மனதில்நினைந்தபடியே, மகாதேவிநாற்பத்து முக்கோணநாயகி மரவாமல் வரமருளுவாய், தேடியே துதிசெய்யும் வீராம்பட்டணத்தில் திரைகடலிலோரம்வாழும், செங்கண்மால்தங்கையே எங்கள்குலதெய்வமே செங்கழுணிமாரிவுமையே. (அ)

சிரசில்மணிநாகமும் சிங்காரரூபமும்திலர்தநெத்திப்பட்டமும், திபமும்தூபமும் அபிஷேகதீர்த்தமும் செங்கழுணிபுஷ்க் கருணையும், பாவுசொன்னட்டமும் தொட்டிலும் பிள்ளையும் பம்பைநாககசுர மேளமும், பண்பானபொங்கலும் சேவல்காவுகளுடன்பக்தர்கள் கொண்டாடவும், கரகமுந்தேரும் கனத்தவைபோகமும் காவலர்கள்போற்றிசெயவும், கண்காணவருகின்ற பேசுமகமாரியே கார்த்தவனையீன்றதாயே, திரைகடலிலோரம்வாழ் வீராம்பட்டணத்தில் செழிக்கவே வீற்

றிருக்கும், செங்கண்மால்தங்கையே எங்கள்குலதெய்வமே செங்கழனிமாரிவுமையே. (௯)

எங்கெங்குமுப்போகம் விளையவும் அகவிலைகள்யேரவும்பயிர்தழையவும், யிக்கட்டுயிடைகூறுவாராமல் காக்கவும் யெங்குமங்களமாகவும், திங்களுமும்மாரி பொழியவும்மழியாமல் சிவராசிகள்வரவும், சிவசமயம் குருசமயம் மநுசமயம்வாழ்கவும் தெய்வசபையும்வாழ்கவும், பங்கமதுவாராமல் யெங்கள்வனைவாழ்கவும் பதியிலுள்ளோர்வாழ்கவும், பாடினோர்படித்தோர் கேட்டிருந்தோர்களும் பதியினிலிருந்துவாழ்க, சிங்காரமாயும் பரசுராமனும்காத்த சின்னனும்போதனும்வாழி, திரைகடலிலோரம்வாழ் வீராம்பட்டணத்தில் செங்கழணிமாரிவுமையே. (௧௦)

## மாரியம்மன்பேரில் விருத்தம்.

### முற்றிற்று.

---

ஆக புத்தகம் 107.

உ

கடவுள் துணை.

மலையனூர்

# அங்காளம்மன்பேரில் பதிகம்.



இஃது,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1910.

## சிறுமணவூர். முனிசாமிமுதலியார்
### அச்சுக்கூடத்தில்பதிப்பிக்கும்

# சொந்தப்புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| சோதிடசிகாமணி | 3 | 0 | 0 |
| வயித்தியசிகாமணி இங்கிலீஷ் தமிழ் | 3 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி தமிழ் | 2 | 0 | 0 |
| ஷை இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு | 2 | 0 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள்சரித்திரம் | 0 | 12 | 0 |
| சுதேச கைத்தொழில் சாஸ்திரம் | 1 | 0 | 0 |
| சுகந்தபரிமளசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சிவசொரூபசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| விவாகசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| ருதுஜென்ன ஜாதகம் | 0 | 4 | 0 |
| நஷ்டஜாதககணிதம் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் | 0 | 8 | 0 |
| சண்டாளர் சகவாசம் | 0 | 8 | 0 |
| அகடவிகடசம்சாரி | 0 | 4 | 0 |
| ருஷ்யாஜப்பான்யுத்தம் | 0 | 4 | 0 |
| வியாசவிபரீதம் | 0 | 4 | 0 |
| நாரதர்கலகம் | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 4 | 0 |
| தெய்வகுணவைச்சரம் | 0 | 8 | 0 |
| ராஜவம்சபரம்பரை | 0 | 10 | 0 |



உ

சிவமயம்.

மலையனூர்

# அங்காளம்மன்பேரில் பதிகம்.



சீர்வளரும் மலையனூர் வந்துவன்பத்தாறு தேச
மெங்கும்நிறைந்தாய்,திரளானசெல்வமும் மைந்தரும்
விஜயமும் சேர்ந்த வடியார்க் களிப்பாய், தருமகு
ணாயாதிவீரி ரணவீரபத்ரனும் சதிரான யிருளப்ப
னும், சகலவிஜயமுபெற்ற பாவாடைராயனும் தன
துபரிவாரமுடனே, அநமைவளர் பூதகண நாதர்பு
டைசூழவே அன்பாய்க்கொலுவிருப்பாய், ஆதிசக்
திவிமலி அம்பிகையலங்காரி அங்கையனிபுங்கபாலி,
பொருந்துமடியார்கள்தன் பிணிபறந்தோடிட விபூதி
யருடாய்காளியே, ஹூங்காரிணீமிஜுவரை ஓங்காரசக்தி
யே பூங்காவனத்தாயியே. (௧)

பாதச்சிலம்பு சதங்கையொடு வெண்டயப்பாட
கத்தொனியினழகும், பட்டாடையணியிடையில் ஒட்

டியான மரையினிற் பளபளப் பின்னலழகும், சித்தாங்குகளப கஸ்தூரி ஜவ்வாது சந்தனம்சேர்முலைக்கச்சினழகும், செங்கையிற் கட்கமும் நவரத்னமலரி வயிரமும் சூட்டுமதினெத்தி னழகும், மேதினியைவிலைகொண்ட கண்டசர மங்கிலியம் மேவுமுத் தணியினழகும், மிருது வசனமும் கொந்த ளக்காதி னொடு கொப்பு மிகபங்கயத்தி னழகும், பொது கொண்டு பணியுமடியார்கள் முன்வந்தருள் புரிந்தருளும் அங்காளியே, பூங்காவினீழி லுறை ஓங்காரசத்தியே பூங்காவனத்தாயியே. (உ)

வாமினீ காமினீ மால்சிவனுமயனுநீ மகிமைபெறு காமாக்ஷிநீ, மங்கைசிவகாமிநீ மாயவன் றங்கைநீ மன்னுமருவங்கிவெளிநீ, கோமளஸ்வரூபிநீ இரவுநீபகலுநீ குருநபசி வாபமும்நீ, கூத்தாடு மீசனொடு கூத்தாடு காளிநீ குலவுபர சிவமும்நீயே, ஓமந்த்ரரூபி சங்காரிங்காரியே ஒருகையிற் கபாலமும், ஒருகையிற் சூலமும்ஒருகையி லம்பையுங் கொண்டு வந்தென்னுருமே, பூமிதனிலடியார்கள் வினைதீர்த்து வாழ்வு தரும் புண்ணியம் பெருஞ்செல்வியே, பூங்காவி னீழிலுறை ஓங்காரசத்தியே பூங்காவனத்தாயியே. (ங)

மாலயனு மீசனும் முப்பத்துமுக்கோடி வானவ
ரும்மாமுனிவரும், வருதிக்கு பாலரும் வசுக்களும்வ
யிரவரும் வாழ்பஞ்ச பாண்டவர்களும், மேலானசாத
னும்கௌடு முக்கண்ணியும் வேழமுக வர்க்கினையனு
ம், மெல்லியர்கள் சத்த மாதர்களும் வெண்டுபுகழ்மா
ரிமுத்தும், கோலாகலத்துடன் வுந்தனிட கொலுவுத
னில் கொண்டாடி வந்துநிற்பாய், குலவிய அவர்க்கெ
லாம் பெருமையாய்உன்மகிமை கூறுதற்கெளிதாகு
மோ, பூலோகம்கலியுகம் தன்னிலேயில்லாத புதுமை
யினிவேறுமுண்டோ, பூங்காவினீழிலுறை ஓங்காரசத்
தியே பூங்காவனத்தாயியே, (௪)

அத்தரும்புகழ்கின்ற தேவியுன் சன்னிதியில் ஆ
ராருவந்துபணிவார், அயிராணி ரம்பையர்கள் ஆதித்
தனம்புவியோ டங்கிபெபனிருதிவருணன், முத்துக்
கருப்பவன் ணக்குபேரனிவர்கள் முப்பத்து|முக்கோ
டிதேவரும், முன்றந்தவான்மனம் நினைத்தவரமருள்
கின்ற முதல்வியுன்செயல்வராதாம், யுற்றதுணைநீயெ
னக்கல்லாமல்வேறில்லாதொருபிள்ளைதானல்லவோ
உன்சித்தமென்பாக்யம் நம்பினேநம்பினே னுன்மன
மிதயங்கியேதான், புத்தியில்லாதகா யடியேனையாளு

வது புன்னிய முனக்கேவரும், பூங்காவினீழிலுறை
ஓங்காரசத்தியே பூங்காவனத்தாயியெ, (௫)

முசமாயிரங்கை யிரண்டாயிரத் தொடு முனை
கொண்டபடைதாங்கியே, மூவுலகுகொண்டாடும் ரண
வீரபத்திரனு மொருபடை யிருளப்பனும், செகமெ
லாக்கொண்டாடும் பாவாடைராயனும் செல்விகாட்
டேரியுமையும், சீரான உந்தனிட சேனைபரிவாரமும்
சிறப்பாகவேசூழநீ, யகமகிழும்எந்தன்மனை தன்னில்
வந்தேயமைந்தே யிருக்கவினைக, ளகலாதிருக்குமோ
முன்சென்மந் தன்னிலேயான் செய்தகுறையேதம்மா
புகழ்பரவுமுகசந்த்ர பூரணவலங்காரி பூங்காவியணி
பூஷணி, பூங்காவினீழிலுறை ஓங்காரசத்தியே பூங்கா
வனத்தாயியே. (௬)

வாதிநெடுமெடுபில்லி சூனியம்பேவலொடு வைப்
புதலையெரிவுகுட்டம், வெருகுன்மம்பீனிசகுடைச்சல்
வெப்பிரும்பலொடு வஞ்சனைசெய் பித்தகாசம், தீது
புரிகிரகாதி தோஷங்கள்முன்செய்த தீவினைகளிதாக
ளெல்லாம், தேவியுன்பேர்சொல்ல சூரியன்கண்டபனி
செய்கைபோலாகுமம்மா, வாதவன்சகோதரி வல்லா
ளனைக்கொன்ற வல்லவிசூலாதரி, மாதேவிசுடலைசனி

ல்நடமாடுமுத்தண்டி வாராகிமந்த்ரரூபி, பூதநாயகி
சகல வேதநாயகிபரவு போற்றுமங்காளரூபி, பூங்கா
வினீழிலுறை ஓங்காரசத்தியே பூங்காவனத்தாயியே.

எல்லைப்பிசாசுகள் கொல்லைப்பிசாசுகள் யிளகமு
வடியில்விரன், எதிருஞ்சடாமுனிகள் பிரம்மராக்ஷதி
களும் யிடும்புசெய்குட்டிசாத்தி, புல்லறிவுமோகினி
ரத்தசாமுண்டியொடு பூதவேதாளமெல்லாம், விபூதி
கொண்டெரியவே அலறியேவோடிடும உன்புகழை
யெவரும்புகழ்வார், கல்லாதநாயினேன் செய்தபிழை
பொறுத்து கடாக்ஷண்ய மருள்காரணி, சகலபரிபூர
ணிகாரணிபாரணிகாமியபிராயிவாமி, பொல்லாதலோ
பர்தம் பக்கஞ்சென்றவர்களை போற்றுமவ்வாழ்வுதரு
வாய், பூங்காவினீழிலுறை ஓங்காரசத்தியே பூங்காவ
னத்தாயியே. (அ)

தந்திரமறியேனுரைசெய் மந்திரமறியேன் மிகு
தவங்களொடு தேசுமறியேன், தன்மலரெடுத்தடியில்
வர்ச்சிக்கவறிகிலேன் சம்ப்ரதாயங்களறியேன், சிந்தை
யுருபத்தியாய் போற்றவறியே னுனது செந்தமிழை
யோதவறியேன், சித்தப்பவைத்தாலுவது உந்தனுக்கே

சடன் செப்பியான் யென்செய்குவேன், சந்திரசேகர கௌரி ஜடாதரிமுக்கண்ணி சாம்பவிவராகிநீலி, தாயி மகப்மாயி சதுர்வேதகிருபாகரி சாமுண்டிகரகபாலி புத்திமகிடன்வாழ முத்திதாண்டவஞ்செய்த பூம்பாத கமலநிமலி, பூங்காவினீழிலுரை ஓங்காரசத்தியே பூங்காவனத்தாயியே. (௯)

உலகில்புகழாகமம் முனிமோர்களறிகின்ற வறுபத்துநாலுகலையு, மானதொண் ணூற்றாறு தத்துவம்பதினெண் புராணமுமாரணங்களும், நலமுள்ளநான் மதறப்பொருள் ஞானமாய்நின்ற நாயகியுன்செவிக்கு, நான்சொல்லும்புன்சொலின் பிழைபொறுத் துனதாமனம் நயமாயுகந்தருளுவாய், கடலசுறதலிகிருபாலி கரம்பணிபசுர்தொளிர் களிமதுரமிருதுபாணி, காமினிபோர்கொண்டாடு மம்மைசிவகாமியே கருணையுள வங்காளியே, புலவர்பணிபாதார விந்தத்தி நாதத்து போதத்தயங்காளியே, பூங்காவினீழிலுரை ஓங்கார சத்தியே பூங்காவனத்தாயியே. (௰)

மலையனூர்-அங்காளம்மன்பேரில் பதிகம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திரிசிரபுரம்சமயபுரத்தில்எழுந்தருளிய

# மாரியம்மன் பதிகம்.

---

இவை,

சிறுமணவூர்,

## முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1910.



உ

தேவிசகாயம்.

---

## சாற்றுக்கவி.

திரிசிரபுரம் உரையூர் மின்னப்பன்தெரு
ம-ள-ள-ஸ்ரீ,
அ. ஆதித்தனெனும் அன்பராலியற்றியது.

அணிகள்பலபூஸ்திதிக ளினிவாய்த்திரட்டிவைத்
தையமென்றோர் தமக்கு
அணுவாகிலுமிரங் கியாதமனமுளோர்க்
கன்றுசந் ததிகளோங்கி
மணிகள்தினம்வாயிப் புவிமீதிப்பவர்க்
கிந்துபவமறு மன்னர்போல்
அமரர்துதிசமயபுர மாகாளிதேவியின்
னருள்பெறும் இனியதொண்டன்
கனிகள்மிகுசுவைபோல யிலகுநருமலருற்ற
கமழுமுக் கண்ணிபதிகம்
கடினமனமிருள்கெடக் கிரவிசுந்திரரெனக்
கருதினுரிவ் வரையின்மேல்
பணிகள்நவமணிபூண் டிலங்குதாமரையினடி
பண்பாய்மிகத் துதித்து
பலன்பெற்றிடுந்தேசிகன் கந்தசாமியுரை
பகரயிது தருணமிதுவே.

கொ ஊர் பாண்டமங்கலம் ம-ா-ா-ஸ்ரீ,
பாண்டியபிள்ளை அவர்கள்
இயற்றியது.

சீர்மிகுந்தசமயபுரத் தலத்துறையுமகமாயி
சிறப்பைநன்றாய்
கார்பொழிந்துபயிர்செழித்த குணமதுபோல்
உயிர்கள்மனக் களிக்கப்பூக்க
பார்புகழ்ந்தபதிகமெனுங் கவிமாலை
யாய்த்தொடுத்தார் பதிகபூண்டு
வார்புனைந்தகௌரிபதம் வணங்குகந்த
சாமியெனும் வல்லோன்மாதோ,

வெண்பா.

திருவுருவுசமயபுரத் தேவிமகமாயிதன்மேல்
நறுமலர்சேர்பாமாலை நாட்டுதற்கு—இருவினையை
போக்குமறுமுகர்க்கும் பொன்வெள்ளைமேனியற்கும்
கார்க்கும கரிமுகற்குங் காப்பு.

பதிகம்.

பொங்குங்கடலேசூழ்ந்தசிங்காரமானதொருபூத
விலாசமெங்கும், புகழ்கொண்டகீர்த்திபிர காபமது
வாகவும்போதரவதாயமர்ந்த, நங்கையபிராமிகிருபாக
ரிமனோன்மணி நாலிலமெலாந்துதிக்கும், ஞானத்த
வமாயி மோனநிஷ்களவாயி நாடினோர் வல்விசினைக்கனை,
பங்கமதுவாக்கியவர் தீவினைவிலக்கியுன் பாததாமரை

நல்குவாய், பாரெலாங்கொண்டாடும் பூரணசயாநிதி பவளவதனத்தியார்க்குள், சங்கநிதிபத்மநிதியாகவருள்தருகவே சமயபுரமதனில்மேவுள், சற்குணமிகுந்த மாகாளிகங்காளியே சத்திமகமாயிஉமையே. (௧)

அன்னளில்வடதேச மதிலிருந்தன்பர்க ளனைத்தையும்காப்பதற்காய், அக்கினிக்கும்பமொன்றேந்தியகரத்துடன் அருள்கிருபை விழிபார்வையாய், கண்ணாயிரங்கொண்ட கருணைசமுத்திரமே கனகசிம்மாசனத்தில், காரணிசிரணிதாரணியிலுன்மகிமை கருதொணுதொருவராலும், விண்ணேர்களும்புவியிலுள்ளோர்களும்பரவும் வேதவேதாந்தசிமலி, வேதியர்குலத்துதித்தாதிமகமாயியென் வினைத்துயர மகற்றியருள்வாய், சன்னைகமுடன்மிக்க கன்னபுரமுஞ்சூழ்ந்த சமயபுரமதனில்மேவும், சற்குணமிகுந்தமா காளிகங்காளியே சத்திமகமாயிஉமையே. (௨)

காரொழுகுகூந்தலில் சுட்டிசடைநாகமுங் கதிரொளிகள்போல்மின்னவும், கநகநவரத்தினஜிமிக்கைமுத்தாரமுங் கருணைவிழிபார்வையழகும், வாரொழுகுஸ்தனபாரம் [illegible] தக்கமும் வர்ணகிரமாணகிளியும் வண்மைபெருக [illegible]யணிவிரலின்மகையும் வர்ணிக்கவொருவர்வச [illegible], ஏரொழுகுபட்டாடைமீதிலொட்டியாணமு [illegible] புரத் தண்டையும், எங்குமுள்ளோர்பணிய [illegible]பதத்தினி லியல்மெட்டிபீலியழ

கும், சாரமதுரந்தரத் தேர்தனில் பவுனியாய் சமயபுரமதனில்மேவும், சற்குணமுகுந்தமாகாளி கங்காளியே சத்திமகமாயிஉமையே. (௫)

அண்டரண்டங்களும் புகழ்பெற்றமாரியே அம்மைகளனேகவிதமாய், அவனிதனில் வார்த்தபோது னதுபெருமகிமைதனை அவரவர்களேநினைந்து, தெண்டனஞ்செய்துபல பூசைகளனேகமாய் தூபமது யேந்திநின்றுந், தேவியிததுபர்திரு மென்றுனது பதுமலர்கள் தெரிசித்துநின்றபேர்க்கு, பண்டிதஞ்செய்தவர்கள் தீவினையகற்றிநற் பதவிதந்தருளுமீவாய், பரிமளமிகுந்தநறு மலர்மாலைபணிகின்ற பதுமாசனத்திவேணி, சண்டனதுமாளைதனி லாழ்ந்திடா தருள்புரிய சமயபுரமதனில்மேவும், சற்குணமிகுந்தமா காளிகங்காளியே சத்திமகமாயிஉமையே. (௬)

மந்திரசொரூபி ஓங்காரிஸ்ரீங்காரியென மன்பர்துதிசெய்துன்னடியை, மாவாமலெப்பொழுதும் விரைவாகவாடியே மாந்தர்முனிதேவர்முதலாய், அந்தாமதாய்வரும் வூழியை விலக்குமென் றஞ்சலிச்செய்து நின்று, அம்பிகாதேவியுன் னிருதயமகிழ்ந்திட அவனிதனிலேமனுக்கள், சந்திகள் பிரித்துமிக பந்தலொடுவாத்தியஞ் சகலமணிமேடைசெய்து, சர்வஜனமுங்கூடி கரகமதெடுத்துனது தாழ்பணிய ஆதரிப்பாய்,

சந்திரசிகர்வதனியே கெந்தருவர்கொண்டாட சமய புரமதனின்மேவுந், சற்குணமிகுந்தமா காளிகங்காளி யே சத்திமகமாயிஉமையே. (ரு)

சுந்திரமிகுந்துவளர்கின்றபரிபூரணி சுகுணகல்யா ணியுன்றன், சூட்சாதிசூட்சத்தை ஆச்சியிலியாரறி வர்நெ்தாவைபெருமகிமையதனை, எந்தனுனுரைசெய்வ தெப்படிஅம்பணி யெப்பிறப்பில்லாமலே, எச்சமய முங்கிருடை வைத்துனதுபாதமதி லீடேற்ற வருள்பு ரிகுவாய், கந்தமிகுவாசனை நிறைந்துமலர்சூடிடுங் கரு ணைவடிகின்றதாயே, கண்மணிக்கினிதாக வுன்மனமி ரங்கியென் கவலையறவேசெய்குவாய், சந்ததம் அன் பர்பணிகின்றமாதங்கியே சமயபுர மதனின்மேவும் சற்குணமிகுந்தமா காளிகங்காளியே சத்திமகமாயி உமையே. (சா)

அன்னைநீதந்தைநீ யென்னுடையசுற்றநீ அகர, செய்யுறுமனைநீ, அண்டநீபிண்டநீ யாவும்நீயென்றெவு மாஆச்சியென் றுனையடைந்தேன், வண்ணமால் மாய் கைதனில் வாழ்ந்தழிமங்காமல் வஞ்சகன் அடாமை லும், வாடித்தனித்துபல வாதனையிலாழ்ந்தாயல்வாய் தந்தம்நழுவாமலும், நன்னயமதாகவும் அன்னலார் பாதமதில் நாடிவைத்தருளோங்கிய, ஞானதத்துவ மெனக் கழித்துமறுபிறவினில் நானுமேவந்திடாமல்

சந்நிதிநிறைந்துவரு மன்னரிடர்தீர்க்கவே சமயபுரம தனில்மேவுஞ், சற்குணமிருந்தமா காளிகங்காளியே சத்தியகமாயிஉமையே. (எ)

ஆச்சிஸ்ரீசூட்சிவிசாலாட்சிகௌமாரியென்றன்புடன்றொழுதுவெகுபேர், அங்கப்பிரதக்ஷணஞ் சோடுகள் கிழித்துமே ஆடிவலம்வந்துவெகுபேர், காட்சிகள்விளங்குமக மாயிநீகாரென்று காகமெடுத்து வெகுபேர், கண்ணடக்கம்நர புருவாரமதுசெய்து காணிக்கைகொண்டுவெகுபேர், கூச்சமில்லாமலே கருப்புள்ளி செம்புள்ளி குத்திமணிகட்டிவெகுபேர், கோவில்வலம்வந்துமா விளக்கதுஎடுத்தெங்கள் குறைதீருமென்பர் வெகுபேர், சாசுவதமாகநிறை சௌவுபாக்கியந்தரு சமயபுரமதனின்மேவும், சற்குணமிருந்தமா காளிகங்காளியே சத்திமகமாயிஉமையே. (அ)

புனலைந்து பாரிஐந்து பூதாதிஐந்துடன்பொருந்துமிந்திரியமைந்தாய், புகலரியதசவாய் வெறும்தத்துவமாகயிப்புவியதனிலே யுதித்து, மனமானதுவுமிச்சமாயைதன்னிலேமயங்கியே சிதமும்நொந்து, வாடித்தவித்துவுனை நாடித்துதிப்பர்மேல் மனமுவந்து இருபைகூர்ந்து, அணிவானயெமதூதர் அணுகாமல் அனுதினம் துடர்ந்துசாயுச்சியமீவாய், அலங்குநின் கழல்சேர்வை தனிலுமனமணுகவுஞ் சூட்சியருளேயுவந்து, சனகாதிமுனிவோர்க ளனைவருங்கொண்டாடசமயபுர

மதனின்மேவும், சற்குணமிகுந்தமா காளிகங்காளியே சத்திமகமாயிஉமையே. (௯)

மண்ணினிலிருப்பளவும்மண் மீதிலாசையும்மனவி மைந்தரிலாசையும், மாடாடுவீடுபொன் ஞசைதனிலே மனம்வாடித்தவித்திடாமல், அண்ணலார்பதமலரி லா சைவைத்தகமகிழ்ந் தனுதினம்பணிசெய்யவும், ஆச்சி நீகிருபைவைத் தன்னினிவெனக்குமேயருள்புரியநாட் செல்லுமோ, முன்னவினையாலுமிச் சன்மமதெடுத்து நான் மூதறிவிலாமலுந்தான், முற்றுமிச்சகமாயை த னிலுமனமில்லாமல் முக்கண்ணர்பகவனுன, சண்முக னையீன்றபரன் பதமணுகவேசெய்யும்சமயபுரமதனின் மேவும், சற்குணமிகுந்தமா காளிகங்காளியே சத்திம கமாயிஉமையே. (௧௦)

தனிகொண்டிலங்குமித் தாரணியில்மனிதரைத்த யங்கமன வேறுபாடாய், தத்தளித்திடுபித்த வாதமெ ரிகுன்மமுந் தலைவலியோ டெழுபிளவையும், அணிகொ ண்டிடாகண்ட மாலைபருவிக்கமும் ஆணைசொரியொடு குஷ்டமும், அணுகொணுதிமிர்வாய்வு குடல்வாதம ரைபண்ணிஅரையாப்பொடெதுகுலையும், இனிகொளா ப்பினிசங்காமாலைசோகைநளி ரீளைக்ஷயமதுமேகமும், இடாருங்கிரந்திசூ சூரிபெருவாந்தியும் இனியதிருவ டிகண்டுடன், சனிபிணிகள்வாடியே கதிகெட்டுஓடவுஞ் சமயபுரமதனில்மேவுஞ், சற்குணமிகுந்தமா காளிகங் காளியே சத்திமகமாயிஉமையே. (௧௧)

மாரியம்மன்பதிகம்-முற்றிற்று.

ஆக புத்தகம் 109.

உ

கணபதிதுணை.

# பெரியபாளையம்

# மாரியம்மன் பதிகம்.

---

இவை,

சிறுமணவூர்,

முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1910.

45

உ

கணபதி துணை.

---

# பெரியபாளம்

# மாரியம்மன் பதிகம்.

---(*)---

### காப்பு - வெண்பா.

பன்னுபுகழ் பெரியபாளையத்து மாரியின்மேல்
சொன்னபாவிற்குத் துணையாவான் - துன்னுமலர்
வாய்க்குஞ்சரத்தான்செய் வல்பிணியைதீர்த்தருளும்
வாய்க்குஞ்சரத்தான் மகிழ்ந்து.

### ஆசிரிய விருத்தம்.

தார்தங்குமர்க்குழலி லங்கபிறை நுதலித்தரித்த
சிந்தூரமிலங்கச் சயமேவு விற்புருவமுங் கருணைபொ
ழிகின்ற தவளசரோருக நேத்திரமும், வார்தங்கு கய
லொடுசிறந்தசண்பக நாசிவசனமிர்தக்கொவ்வையாய
மாசற்ற சிறுநகையிலங்கவரதாபயவளங்கொள்கரதல
மிலங்கப், பார்தங்குகொடியிடை யிதங்ககிண்கிணி
யொடுபதித்தநூபுரமிலங்கு, பங்கயமதாகுசுப மங்கள
மதாய்வருபதத்துணையை யென்றுகாண்பேன், ஏர்தங்
கு செந்நெல்வயல்சூழ் பெரியபாளையத் தெல்லையில்

லமர்ந்துவாழும், எல்லன்ன வொளிர்சூரி நல்லன்ன நடைவீரி எல்லம்மை மகமாரியே. (க)

சகலபுவனேஸ்வரி யனுதாட்சகியதுலர் சந்ததந் துதிசெய்விமலி, தத்வபரிபூரணி மகத்தவமிகுகாரணி ஜனார்த்தனி யனந்தசயனி, சுகவிரதபூஷணி துலங்கு கல்யாணி சுலக்ஷணிவிதக்ஷணகுணி, ஜோதிர்மயானந்த சேஷகங்கனி வரதருக்ஷி, கருணாகடாக்ஷி, விகசிதமிருந் தமுக சந்திரவிப்பப்பிரபல விஜயசிங்காரிவிமலி, வீறு தற்பரி சர்வலோகபூஜித தனய விசாலினியனந்தரூபி, இகபரநலம்பலதரும் பெரிய பாளையத்தெல்லையிலமர் ந்துவாழும், எல்லன்னவொளிர்சூரிநல்லன்ன நடைவீரி எல்லம்மை மகமாரியே. (உ)

உலகினிலடங்காத பேய்பில்லி சூனியமுமத்தகை ட்டேரிமற்று, முன்னரிய பூதப்ரேத மோகினிமுனிக ளொழியாது கொடுமைசெய்யும், விலகரியசூலைபெரு வயிறுகுஷ்டங் கொடியமேகரோகங்கள்மண்டை, வே தையொடு கைகால்பிடிப்புநீரிழிவு பலவிதமானவெம் பிணிகளும், கலகமிடுபகைஞர்வஞ்சகமு நின்னுடைய பதகமலமதனைச் சிந்தையிற், கருதிநிமிஷப்பொழுது தியானிக்கி லிவையெலாங்கானனீரென்றோடுமே, இல குபுபனுலவிபொழில் சூழ்பெரியபாளயத் தெல்லையி

லமர்ந்துவாழும், எல்லன்ன வொளிர்சூரி நல்லன்ன
நடைவீரி எல்லம்மை மகமாரியே. (௩)

ஆதித்தவாரங் கடோறுநின் சன்னதி யடுத்தன்
புகூர்ந்துவந்தே, அவரவர்கள் கோரிய பிரார்த்தனைக
டவறுதகன்டதீபங்கள்வைத்துங், கோதற்றவெள்ளி
பொன்னாற்கண்ணடக்கமொடு கூறரியபலவுறுப்புங்,
குழவியொடுதொட்டிலுஞ் சிலவிம்பவண்ணமையுங்குணை
மொடுசெலுத்திநெஞ்சம், பேதித்திடாமல்வேப் பஞ்
சீலைபூண்டொளி பிறங்குமம்மாடவீதிப், பிரதட்சணஞ்
செய்வதன்றியுஞ்செடிலாடல் பேணிப்புரிந்து மகிழும்,
எதிற்பெரும் புகழ்மிகும் பெரியபாளையத் தெல்லையி
லமர்ந்துவாழும், எல்லன்ன வொளிர்சூரி நல்லன்ன
நடைவீரி எல்லம்மை மகமாரியே. (௪)

செப்பரிய சிறுவர்முதன் மற்றுமுப்பருமுனைச்
சிந்தியாதவர்களில்லைத், தெளிவிலாதவர்கட் கடுத்த
பெரியம்மைசின்னம்மை பலபெய்துநாளும், ஒப்பற்ற
வேப்பிலைதனைக்கையி லளித்தன்பு முனையுமுருக்கிநெ
ஞ்ச, முருகும்படிச்செய்து தெரிவிக்குநின்பெருமை
யொருவராற்சொல்லவசமோ, தபமிநின்முத்திரைதரி
த்திடாத்தேவருந் தருவுமாந்தருமுளர்கொலோ, சர்வ
ஜீவாத்தும தயாபரிமகாதேவி சாம்பவியமலைவடுகி,

இப்புவியனைத்துமகி ழும்பெரியபாளையத் தெல்லையில மர்ந்துவாழும், எல்லன்ன வொளிர்சூரி நல்லன்ன நடைவீரி எல்லம்மைமகம்மாரியே. (௫)

சிங்கவாகனமேரி யெங்கும்பிரசித்தமாய்த் தேவ மாதர்கள்துதிக்கத், திரள்பூத கணமார்ப் பரிக்கத்தடிக் காரர் சேவர்கள்சூழ்ந்துவரவே, சங்கொளியுடுக்கை பொடுபம்பையொடு சிங்கநாதம்பலமுழங்கவாரி, சச் சரணகிண்கிணி சிலம்புசிறுதண்டைச் சதங்கையொலி செய்யநீடுஞ், செங்கைவளையொலிநலகலென்றிடவடு த்துனது சிந்தைகளி கூர்ந்துநாளுஞ், செகமீதுலாவி வருமகாமந்திர சிரோன்மணி சகஸ்த்ரநாமி, இங்கித மிகுந்தநதி சூழ்பெரியபாளையத் தெல்லையி லமர்ந்து வாழும், எல்லன்ன வொளிர்சூரி நல்லன்ன நடைவீரி எல்லம்மை மகமாரியே. (௬)

அகலாதவஞ்சப்ர பஞ்சமாயையிலுள மடுத்தினி யமனைவிமக்க, ளாம்பந்தபாசக் கடற்குண் மூழ்கிப்படு மலைச்சலிவ்வள வென்றியான், புகலமுடி யாதெழுத வேட்டடங் கொள்ளாதுபுந்திவைத்திந்தவேளைப், புன் மைபேறுயினும் எனைத்தடுத்தாண்டருள் புரிந்திடா யெனிலுய்கிலேன், தகைமேவு நின்னுபய பொற்பதா ம்புயமதே தஞ்சமென்றுளிரங்காத், தன்மையென்றோ

பெற்ற தாய்தனையனமுகணீர்த்தனைத்துடைத் தாட் கொளாமல், இசுழமனம்வருமோ சொலும்பெரிய பாளயத்தெல்லையிலமர்ந்துவாழும், எல்லன்ன வொளிர் சூரி நல்லன்னநடைவிரி எல்லம்மைமகமாரியே. (எ)

ஒருநாளு மென்கவலை யொழியவில்லையே சிந்தை யொருவழியி நிற்கவில்லையே, யுன்னரியவன்மிடியரைக் கணமுடெனைவிட் டொதுங்கவில்லையேநாளெலாங், கரி நாளலாற் சுகிர்தநாள் வருவதில்லையே யென்கன்மத்தை யென்ன சொல்லுகேன், காசினியி லென்போலு மொருகொடிய பாவிநான் கண்டதில்லையே யனுதினந், திருநாள்சிறந்த தத்வாதி பரிபூரணி ஜெகம்பெற்ற சிந்தாமணி, தேவியன வரதகல்யாணி நாரணிவேணி திருவருள்புரிந்தாளுவாய், இருநாவலஞ்சோலை சூழ்பெரிய பாளையத்தெல்லையி லமர்ந்துவாழும், எல்லன்ன வொளிர்சூரி நல்லன்னநடைவிரி எல்லம்மை மகமாரியே. ()

ஆதாரநீயெனக் கருதியிந்நாள்வரையி லன்புகூர்ந்துன்னைநம்பி, ஆதிமுதலாயடுத்துத் தொண்டுசெய்துமனுவளவு நெஞ்சுருகாமலே, சூதாயிருக்கின்றதென்சொல்சுத னென்னுஞ் சுதந்தர மெனக்கில்லையோ, சொல்லரியதாயுநீ யல்லையோயானுநின் றொண்டர்களிலொருவனன்றோ, வேதாகமப்புராணம் கலைக்யானம்

விளம்பரிய நின்கீர்த்தியை; வினையேனெடுத்தியம்பத்
தகரதென்றதோ வெறென்னபிழைசெய்தனே, எதா
கிலுஞ்சொல்லுவாய் பெரியபாளையத் தெல்லையி லமர்
ந்துவாழும், எல்லன்ன வொளிர்சூரி நல்லன்ன நடை
வீரி எல்லம்மை மகமாரியே. (௮)

தபமிகுத் திடுகின்ற சமதக்கினி பத்தினியாய்க்
தனையர்க டமைப்பயந்தும். சத்கர்ம சீலியாய் நித்திய
விநோதியாய்ச் சாஸ்வத சுயாதீதியாய், உபாரசவில்ல
றடாத்தி யர்புகமானவியர்ந்த மழுவைத்தரித்த, ஒ
ப்பரிய வரசகுல வைரியாய் மலைநாட்டை யுண்டாக்
கும் புனிதனும், செயமேவு பரசுராமனைப்பின்று சமயபு
ரஜெய முற்ற கொல்லா புரம், செப்பரிய படைவேடு
தென்னூற்றுராடெனுஞ் சீர்மேவு கோயில்கொண்டு,
இமராஜனுலகுலோர் புகழ்லோக மிதுவெனு மெழிற்
பெரியபாளையத் தெல்லையி லமர்ந்தாவாழும், எல்லன்
னவொளிர்சூரி நல்லன்ன நடைவீரி எல்லம்மை மக
மாரியே. (௯)

சந்தகமுமாறாத வெம்பிணிகள் பலவுந் தடுத்தா
ள்வையென்று மகலாத், தன்மைமிகு நல்குர வகற்ற
வாயென்றுஞ் சதாயுடந்தருள்வையென்றும், விந்தை
பெறுநர்ம்மார்த்த கர்மமோட்சச்சதூர் விதச்சத்தியு

ஞ்சிறந்து, வீறபல சாா்பிராஜ்ய சித்தியு மளித்திம்மை வேண்டுவது தருவையென்றும், செந்தமிழினற்பதிக மொன்றருட்டச்சிந்தை யிற்கருதியே கூறினேன், திருவுளமிரங்கிநீ யங்கிகரித்துநின் சீரருள்புரிந்தாளுவாய், இந்திரலோகத்தை யிகழும்பெரிய பாளையத்தெல்லையிலமர்ந்துவாழும், எல்லன்ன வொளிர்சூரி நல்லன்ன நடைவீரி எல்லம்மை மகாமாரியே. (௧௧)

கட்டளைக் கலித்துறை.

மாதேகமலமலர்வாழுஞ் செல்வியுமரைமலரோன்
ஆதாரநாவுறைவாணி யிந்திராணியுமராவமுடன்
போதானதுகொடுபோற்றிப் பணிந்திடும்பூரணியே
வாதாவருள்செய்யொணுகா நற்பாளையம்வாழனையே
சேவித்தபேர்க்கருள் செய்யும்தயாபரிதேவியுனை
பாவித்தவென்னுடை பாவங்கள்யாவும்பரிகரித்தாள்
கோவித்திடிலடியே யெங்கனுய்குலன்சோகனக
லாவித்திடம்பலசூழ் பாளயத்தினில்வாழனையே.

பெரியபாளையம் மாரியம்மன் பதிகம்

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திரிசிரபுரம் - உத்திரதிசை
காவேரிநதியின்மத்தியில்
திருவானைக்காவென்னும் அப்புஸ்தலத்தில்
திருக்கோயிற்கொண் டெழுந்தருளி
யிராநின்ற ஜம்புலிங்கமென்னும்
சிவபெருமானிடப்பாகம்பெற்ற

# அகிலாண்டேஸ்வரிபதிகம்.



இஃது,
சிறுமணவூர்,

## முனிசாமி முதலியார்

அவர்களது
சென்னை-ருளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

1910.



உ

முருகன் துணை.

# அகிடாண்டீஸ்வரி பதிகம்.

தொல்லையோவுந்தனுக்குத் தோன்றிலையோவென்சவ
இல்லையோதெய்வ மிருந்தாலிருங்காதோ [லை
முல்லையுடன்வில்வவன முத்திதருஞ்சம்புலிங்கச்
செல்வரைப்பூசித்தத் தேவிவகிலாண்டபளே. (க)

ஆருடனேசொல்லி யழுவேன்முறையிடுவேன்
சீருடனேவாழ்வார் சிரிப்பார்முகப்பாரார்
விருடனேசென்றவரை வெட்டித்தரித்திடுவை
காருடனேநின்ற காவுவகிலாண்டவளே. (உ)

வையஞ்சலிக்க மனஞ்சலிக்கயான்சலிக்க
மெய்யுஞ்சலிக்க விதிசலிக்கமதிசலிக்க [லகை
பொய்யுஞ்சலிக்கவுன்னைப் போற்றினின்றேன் ருண்ம
கையுஞ்சலித்தநம்மா காவுவகிலாண்டவளே. (ங)

வார்த்தைக்கோகீர்த்திக்கோ மண்மேற்பிறந்ததுவும்
ஆத்துக்குட்கோரை யலைவதுபோலாவேனோ

சோத்துக்கோநின்றடிமை சென்னமினிநீக்கி
காத்துக்கோசெல்வயல்சூழ் காவுவகிலாண்டவளே. ( )

ஆனாலுமென்றுயர மலைகடனிற்றுரும்பதுபோல்
சானாகயெண்ணுமெண்ணந் தாயேநீயறியாயோ
மீனானமாயன் சகோதரியேசுந்தரியே
தேனாறல்சம்புலிங்கர் தேவியகிலாண்டவளே. (௫)

தாமரையின்றண்ணீர்போற் றயங்கிமனமேகலங்கி
யேமாந்துநானிருக்க விதிஞாயமோதாயே
காமன்றனைக்காய்ந்து கரியுரித்தோனிடமமர்ந்த
கோமளமேகாவுவளர் கோதையகிலாண்டவளே. (௬)

போதுக்குப்போகுமனம் புண்ணாகியெண்ணியெண்ணி
யேதுக்குவினைனுக்கு விங்கவிதிவந்ததம்மா
மாதுக்குள்மாதடியாள் வாய்விட்டழுதகுரல்
காதுக்குக்கேட்கிலையோ காவுவகிலாண்டவளே. (௭)

நாட்டிலேசென்மித்து நானொருபெண்பட்டசலம்
யேட்டிலடக்கி யெழுதப்படாதம்மா
வெட்டிகொடுங்காலன் வலைவீசும்போதிலென்னை
காட்டிக்கொடாதேயம்மா காவுவகிலாண்டவளே. (௮)

அருமையோயென்கவலை யாற்றுவதுனக்கரிதோ
தெரியாமற்சற்சிலையைத் தெய்வமென்றாம்பினனே
பரியாயநோக்கிப் பலனுதவுவாயெளிய
கரியோனைப்பெற்றெடுத்த காவுவகிலாண்டவளே. (கூ)

உன்னைவிட வேறெனக்கிங் குற்றதுணைவேறுமுண்டோ
இன்னிலத்தில்வாடி யிருப்பதுனக்கழகோ
பன்னரியவேதப் பழம்பொருளேபங்கயத்தி
னன்னமேதென்காவு வாழுமகிலாண்டவளே. (ய)

விரிஞ்சன்முதல்தேவர்களு மேலானபொன்னுலகு
மரியபலவுயிரனைத்து மாக்கியளித்தருளு
மிரவியேஞான விளக்கேயெழிலமுத
வரிவையேகாவுள ரம்மைபகிலாண்டவளே. (யக)

மக்கள்கல்விப்பொருளில் வல்லவராகிப்புவியில்
மிக்கபுகழடைந்து மேவுவதுநின்மகிமை
சொக்கப்பசுங்கிளியே சோதியேகொன்றையுட
னக்கரவம்பூண்டவர்பா லமர்ந்தவகிலாண்டவளே. ()

அகிலாண்டேஸ்வரிபதிகம்.

முற்றிற்று.

—

உ

சிவமயம்.

# திருவானைக்காவின்

## திவ்விய சரித்திரம்.

—*—

சோழநாட்டின்கண் ணிராநின்ற திரிசிரபுரம் காவேரிநதியின் மத்தியிலிருக்குஞ் சந்திர புஷ்கரணிக்கு அடுத்திருந்த ஒருவனத்தில் வெண்ணாவல் மரத்தின் கீழ் சுயம்புமூர்த்தியாய் விளங்காநின்ற சிவலிங்கப்பெருமானுக்கு அந்தவனத்தில்சஞ்சரித்த ஒருயானையானது பூர்வபுண்ணிய வசத்தினால் நாடோறும் பூசைசெய்துகொண்டிருந்த காரணத்தினால் அந்த வனத்துக்குத் திருவானைக்காவென்று பெயருண்டாகியது அப்படியிருக்க முன்செய்த தவக்குறையினால் ஒருசிலந்திப்பூச்சியானது சிவனேசங்கொண்டு அந்தச்சிவலிங்கப் பெருமான் திருமேனியில் சருகுதிரா வண்ணம் மேல்விமானங் கட்டியதுபோலத் தன்வாய்நூலினால் கூடுகட்டியிருந்தது மறுநாள் பூசைசெய்யவந்தயானை அதனைக்கண்டு இது அனுசிதமென்று சிதைத்துவிட்டது சிலந்தியானது மறுபடியும் அவ்வாறே செய்திருக்க யானைமறுநாளும் அதனைச்சிதைத்துவிட்டது சிலந்தியா

னது சிவலிங்கப் பெருமானுடைய திருமேனியின்மே
ல் சருகுவிழாவண்ணம் நான்செய்திருப்பதை யிந்தயா
னை அடிக்கடி சிதைத்துவிடலாயோவென்று அதனது
துதிக்கையுள் நுழைந்துகடித்தவளவில் யானையானது
தன்துதிக்கையை நிலத்தில்மோதி இறக்கச் சிலம்பியு
மிறந்தது அப்போது பரமசிவம்யானைக்குப் பதவிகொ
டுத்துச் சிலந்தியைப்பார்த்து சோழர்குலத்திற்பிறந்து
அரசாட்சிசெய்யும்படி திருவருள்செய்திட அந்தச் சி
லந்தியானது சுபதேவனென்னும் சோழராஜனுடைய
மனைவியாகிய கமலவதி திருவயிற்றில் சிசுவாய்த்தங்கிப்
பத்துமாதமும் நிறைந்து புத்திரனுயவதரிங்குஞ்சமய
த்தில் இன்னமும் ஒருநாழிகைக்கழித்து இந்தக்குழந்
தை பிறக்குமாகில் திரிலோகங்களையும் ஆளுமென்று
சோதிடர்கள்சொல்ல அப்படியானால் அந்த ஒருநாழி
கைவரைக்கும் தன்னிரண்டு காலையும் மேலே தூக்கிக்
கட்டிவையுங்களென்று கமலவதிசொல்ல அவ்வாறே
செய்து மேற்சொல்லிய காலம்வந்தபோது அக்கட்டி
னை அவிழ்த்துவிடக் கமலவதி குழந்தையைப்பெற்றெ
டுத்து என்கோச்செங்கண்ணனேவென்றுசொல்லி உ
டனே உயிர்நீங்கினள் பின்பு சுபதேவனென்னும் அந்
தச் சோழராசன் தன் புத்திரனுகிய அந்தக் குழந்தை

யைவளர்த்து சகல சாஸ்திரங்களையும் கற்பித்து மகு
டாபிஷேகஞ்செய்து தானதவமியற்றிச் சிவலோகஞ்
சேர்ந்தனன் கோச்செங்கட் சோழன் பரமசிவத்தின
ருளால் முற்பிறப்பை யறிந்து அரசாட்சி செய்யும்
போது பரமசிவத்துக்கு பெரிய ஆலயம் சமைக்கவே
ண்டுமென்கிற தொண்டுபூண்டு தாம் ஆதியில் திருவா
னைக்காவில் செய்ததொண்டின் செயலையுணர்ந்து அங்
கிருக்கும்வெண்ணாவல் மரத்தையுள்ளமைத்துச் சிவா
லயம்கட்டித் திருத்தொண்டுசெய்து சிவலிங்கப்பெரு
மான் உமையவள் சமேதராகும்பொருட்டு இரவும்பக
லும் நித்திரை அன்னாகாரம் இல்லாமல்வருந்திய சோ
ழருடைய பத்திவைராக்கியத்துக்கு அகண்ட பரிபூர
ண சச்சிதானந்த அகிலபுவனமும்நிரைந்த சத்திவடி
வாகிய பார்வதிதேவியார் மனதிரங்கித் திருவானைக்கா
வாகிய திவ்விய ஸ்தலத்தின்கண் சோழருக்குமுன்புபி
ரசன்னமாகி உனக்கு வேண்டும்வரம் என்னவென்று
கேழ்க்கத் தாயே இத்தலமும் காவேரியும் சிறப்புப்
பெரும்படி இவ்விடம் சிவபெருமான் அருகில் வசிக்க
வேணுமென்று வேண்டும் வரத்துக்கு மகிழ்ந்து அவ்
விடம் சிவபெருமான் உத்தரவுக்கு அம்மன் தவத்தி
லிருக்க அத்தவத்துக்கிரங்கி வெண்ணாவலில் அமர்ந்த
ஜம்புகேஸ்வரர் தரிசனமாகி அகிலாண்ட நாயகியென்
றுசிவபெருமான் அழைத்து இத்தலப்பெருமைபெற

ம்படி நாம்வசித்தவிடத்திலே நீயும் இருப்பாயாக வெ
ன்றும் கலிழ்கதர்மம் உன்னால் நிறைவேற்றுவாயென்
றும் அருளியதின்பேரில் நிலையானவடிவாய் அவ்விட
மே திருக்கோயிற்பெற்றிருந்த அகிலாண்டவல்லிகிரு
பையால் கோச்செங்கட் சோழரும் பதவியடைந்தனர்
அதின்மகத்துவம் திருவானைக்கா ஸ்தலபுராணத்தி
ன் மூலமாய் அறிக அதுமுதல் இக்கலியுக காலத்திலு
ம்பத்தியுள்ள மானிடர்களுக்கு நனவிலும் கனவிலும்
பிரசன்னமாகி அனேக வரங்களைக்கொடுத்து இடர்க
ளைத்தீர்த்தருளிய அகிலாண்டவல்லியை யென்பொல்
லாவியாதியாலும் வறுமையாலும் என்வாயில்வந்ததை
வரகவியாக உளரி சவுக்கியத்தைப் பெற்றுக்கொண்ட
படியால் யாதாமொருவர்பக்தியுடன்பணிந்து கோயில்
வலம்வந்து சிரம் முகம் கைகால் அங்கம் பூமியினிடம்
படியும்படி தொண்டுசெய்து அர்ச்சித்த பேர்களுக்கு
யெண்ணிய யெண்ணம் கைவல்லியப்படு மெனவறிக.

திருவானைக்கா திவ்வியசரித்திரம்

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 112.

உ

கணபதிதுணை.

திருவருட்பிரகாச வள்ளலாரென்னும்

சிதம்பரம்

இராமலிங்கப் பிள்ளையவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# காட்சிக்கண்ணி

---

இவை,

சிறுமணவூர்,

## முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1910.

சிறுமணவூர். முனிசாமிமுதலியார்

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கும்

# சொந்தப்புத்தக விளம்பரம்,

| | | | |
|---|---|---|---|
| சோதிடசிகாமணி | 3 | 0 | 0 |
| வயித்தியசிகாமணி இக்கிலீஷ் தமிழ் | 3 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி தமிழ் | 2 | 0 | 0 |
| ஷை இகிலீஷ் மொழி பெயர்ப்பு | 2 | 0 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள்சரித்திரம் | 0 | 12 | 0 |
| சுதேச கைத்தொழில் சாஸ்திரம் | 1 | 0 | 0 |
| சுகந்தபரிமளசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சிவசொரூபசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| விவாகசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| நஷ்டஜாதக்கணிதம் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் | 0 | 8 | 0 |
| சண்டாளர் சகவாசம் | 0 | 8 | 0 |
| அகடவிகடசம்சாரி | 0 | 4 | 0 |
| ருஷ்யாஜப்பான்யுத்தம் | 0 | 4 | 0 |
| வியாசவிபரீதம் | 0 | 4 | 0 |
| நாரதர்கலகம் | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 4 | 0 |
| தெய்வகுணவெளிச்சம் | 0 | 8 | 0 |
| ராஜவம்சபரம்பரை | 0 | 10 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட் | 0 | 8 | 0 |
| போலீஸ் ஆக்ட் | 0 | 8 | 0 |



உ

கடவுள் துணை.

---

# காட்சிக் கண்ணி.

—— ( * ) ——

வெண்பா.

சுத்தமுறுமெய்ஞ்ஞானச் சோதியுருவாய்வந்த
வித்தகஞ்சேராமலிங்க வேளுரைதத-வுத்தமஞ்சேர்
கர்த்தனருளாங்காட்சி கண்ணிகளைச்சிந்தித்தால்
அத்தமுடன் முத்தியுலகாம்.

சாபா-சாப்புதாளம்,

ஆணிப்பொன்னம்பலத்தே கண்டகாட்சிகள்
அற்புதக்காட்சியடி அம்மா
அற்புதக்காட்சியடி (க)

ஜோதிமலையொன்று தோன்றிற்றதிலொரு
வீதியுண்டாச்சுதடி அம்மா
வீதியுண்டாச்சுதடி (உ)

வீதியினிற்சென்றேனவ் வீதிநடுவொரு
மேடையிருந்ததடி அம்மா
மேடையிருந்ததடி (ங)

மேடைமேலேறினேன் மேடைமேலங்கொரு
கூடமிருந்ததடி அம்மா
கூடமிருந்ததடி (ச)

கூடத்தில்காடவக் கூடமேலேழ்நிலே
மாடமிருந்ததடி அம்மா
மாடமிருந்ததடி (ரு)

ஏழ்நிலேக்குள்ளு மிருந்தவதிசயம்
என்னென்னுசொல்வேனடி அம்மா
என்னென்னுசொல்வேனடி (சு)

ஓர்நிலேதன்னிலொளிர் முத்துவெண்மணி
சேர்நிலமாச்சுதடி அம்மா
சேர்நிலமாச்சுதடி (எ)

பாரோர்நிலேயிற் கருநீலஞ்செய்ய
பவளமதாச்சுதடி அம்மா
பவளமதாச்சுதடி (அ)

மற்றோர்நிலேயில் மரகதப்பச்சைசெம்
மாணிக்கமாச்சுதடி அம்மா
மாணிக்கமாச்சுதடி (கூ)

பின்னோர்நிலேயிற் பெருமுத்துவச்சிர
பேர்மணியாச்சுதடி அம்மா
பேர்மணியாச்சுதடி (ய)

வேறோர்நிலேயில் மிகும்பவளத்திரள்
வெண்மணியாச்சுதடி அம்மா
வெண்மணியாச்சுதடி (யக)

பகலோர்நிலையிற் பொருந்தியபன்மணி
பொன்மணியாச்சுதோடி அம்மா
பொன்மணியாச்சுதோடி (௰௨)

பதியோர்நிலையிற் பசர்மணியெல்லாம்
படிகமாச்சுதடி அம்மா
படிகமாச்சுதடி (௰௩)

எழ்நிலைமேலேயிருந்த தோர்கம்பம்
இசைந்தபொற்றம்பமடி அம்மா
இசைந்தபொற்றம்பமடி (௰௪)

பொற்றம்பங்கண்டேறும் போதுநான்கண்ட
புதுமையென்சொல்வேனடி அம்மா
புதுமையென்சொல்வேனடி. (௰௫)

ஏறும்போதங்கே யெதிரந்தவகைசொல்ல
என்னளவல்லவடி அம்மா
என்னளவல்லவடி (௰௬)

அங்கங்கேசத்திக ளாயிரமாயிரம்
ஆகவந்தார்களடி அம்மா
ஆகவந்தார்களடி. (௰௭)

வந்துமயங்க மயங்காமனருள்
வல்லபம்பெற்றேனடி அம்மா
வல்லபம்பெற்றேனடி (௰௮)

வல்லபத்தால்வந்த மாதம்பத்தேறி
மணிமுடிகண்டேனடி அம்மா
மணிமுடிகண்டேனடி (௰௯)

மணிமுடிமேலோர் கொடிமுடிநின்றது
மற்றதுகண்டேனடி அம்மா
மற்றதுகண்டேனடி (௨௰)

கொடிமுடிமேலாயிரத் தெட்டுமாற்றுபொற்
கோயிலிருந்ததடி அம்மா
கோயிலிருந்ததடி (௨௧)

கோயிலைக்கண்டங்கே கோபுரவாயிலிற்
கூசாதுசென்றேனடி அம்மா
கூசாதுசென்றேனடி (௨௨)

கோபுரவாயிலுட் சத்திகள்சித்தர்கள்
கோடிபல்கோடியடி அம்மா
கோடிபல்கோடியடி (௨௩)

ஆங்கவர்வன்னம்வேல்வண்ணஞ் செவ்வண்ணமுன்
ஐவண்ணமாகுமடி அம்மா
ஐவண்ணமாகுமடி (௨௪)

அங்கவரெல்லாமிங் காரிவரென்ன
அப்பாலேசென்றேனடி அம்மா
அப்பாலேசென்றேனடி (௨௫)

அப்பாலேசென்றேனங் கோர்திருவாயில்
ஐவரிருந்தாரடி அம்மா
ஐவரிருந்தாரடி (௨௬)

மற்றவர்நின்று வழிகாட்டமேலோர்
மணிவாயிலுற்றேனடி அம்மா
மணிவாயிலுற்றேனடி (௨௭)

நண்ணிமவ்வாயிலிற் பெண்ணோடாணுக
இருவரிருந்தாரடி அம்மா
இருவரிருந்தாரடி (௨௮)

அங்கவர்காட்ட யணுகத்திருவாயிலில்
அன்போடுகண்டேனடி அம்மா
அன்போடுகண்டேனடி (௨௯)

அத்திருவாயிலி லானந்தவல்லியென்
அம்மையிருந்தாளடி அம்மா
அம்மையிருந்தாளடி (௩௰)

அம்மையைகண்டே னவருள்கொண்டேன்
அமுதமுமுண்டேனடி அம்மா
அமுதமுமுண்டேனடி (௩௧)

தாங்குமவளருளாலே நடராஜர்
சந்நிதிகண்டேனடி அம்மா
சந்நிதிகண்டேனடி (௩௨

சந்நிதியிற்சென்று நான்பெற்றபோது
சாமியறிவாரடி அம்மா
சாமியறிவாரடி (௧௩)

ஆண்டிப்பொன்னம்பலத்தே கண்டகாட்சிகள்
அற்புதக்காட்சியடி அம்மா
அற்புதக்காட்சியடி (௧௪)

வானத்தின்மீதுமயி லாடக்கண்டேன்
மயில்குயிலாச்சுதடி அக்கச்சி
மயில்குயிலாச்சுதடி (௧)

துள்ளலைவிட்டுத் தொடங்கியேமன்றுடும்
வள்ளலைக்கண்டேனடி அக்கச்சி
வள்ளலைக்கண்டேனடி (௨)

சாதிச்சமயச் சழங்கைவிட் கடனருட்
சோதியைக்கண்டேனடி அக்கச்சி
சோதியைக்கண்டேனடி (௩)

பொய்மையொழித்துப் புறப்பட்டேன்மன்றுடும்
ஐயரைக்கண்டேனடி அக்கச்சி
ஐயரைக்கண்டேனடி (௪)

திருச்சிற்றம்பலம்.

முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

---

# பெருமாள் தசாவதார பதிகம்.

## விக்ஷவச் சேனர் வணக்கம்.

### வெண்பா.

திருவுருவுகொண்டக் தேபபெருமானுக்குப்
பெருமைசேர் நற்பதிகம் பகக் கு நவிக்ஷவச்
சேனரேநின்னடியன் சென்னிக்கணைகொண்டேன்
ஆனநல்வாக்கீகேபனி.

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்.

திருமருவுமார்பநின் சுகமெல்கணற்குநீ
தெளிவாயளித்த வேதந்
திங்கிளைநாலையுங் களவுசெய்தேசென்று
திரையுஞ்சமுத்திரத்தில்
அருவமுடன்றவனையாயச் சோமுகனெனிக்கவே
யயனுமினஞ்சில தேவர்கள்
அனைவரும்வந்துநின் னடிதொழுதுமுறையிட
வப்போது காரணத்தாற்
பெருமையாய் மச்சாவ தாரத்தைசெய்துவப்
பெரிய கடலைச்சுருக்கிப்
பிறைசோமுகனைசெகுத் தயலோகாத்தைபோல
போதையைக்காத்தருளுவாய்க்
குருவேதமோநமோ நாராயணையனே
கோடிகோடிப்பல்லாண்டு

குன்றேறிபதிகொண்ட வன்றுயர்த்ததியுண்ட
குன்றேந்தும்வைகுண்டனே. (௧)
திருப்பாற்கடலின்மந்த்ர கிரிதன்னைமத்தாகச்
செய்துவாசுகி தன்னையே
திண்ணியக்கயிறுக மூட்டியேவாற்புறந்
தேவருஞ்சிரபுறத்தில்
வருமரக்கரும்பற்றிக் கடையவேழுவிடிய
மந்த்ரகிரி சாயதேவர்
மாவாகுலப்பட வப்போதுநீவந்து
வன்கூர்மவவதாரமாய்
அருவரையையுண்முதுகி லேந்தியேயக்கடலை
யன்று கடையச்செய்துபின்
அமிர்தமதுவண்டருக் கீந்துகாத்ததைபோல
வடியனைக் காத்தருளுவாய்க்
குருமைபெறுவோநமோ நாராயணுயனே
கோடிகோடிப்பல்லாண்டு
குன்றேறிபதிகொண்ட வன்றுயர்த்ததியுண்ட
குன்றேந்தும் வைகுண்டனே. (௨)
பாரினுனக்குஞ்சுரர்க ளாராதனைக்குரிய
பசுகங்கை செந்நெல்முதலாய்ப்
பாங்குடன்விளைகின்ற புவியையிரண்ணியாக்கதன்
பாயாய்ச்சுருட்டியன்று
ஆரணன்சிருஷ்டிக்கும் பாதாளலோகத்தி
லாண்மையுடனே கொண்டுபோய்

அன்றொளித்திட்டவவ் வசுரனைக்கொன்றுநீ
யகிலத்தையருள்வையென்றே
கோரியதேவருன் னிடம்வந்துமுறையிடக்
கோலமாயவதரித்துக்
கொன்றுமேயரக்கனைப் புவியைகாத்ததைபோல
கொடியனைகாத்தருளுவாய்க்
கூரமிலோநமோ நாராயணயனே
கோடிகோடிப்பல்லாண்டு
குன்றேறிபதிகொண்ட வன்றுபார்த்தியுண்ட
குன்றேந்தும் வைகுண்டனே. (ந)

இரணியன்பிரகலா தன்னைசண்டாமார்க்க
ரிடத்திற்பள்ளிக்கிவைக்க
இடைவிடாதவன்பிரக லாதனுநீசொல்க
விரணியநமா வென்னவே
துரிதமாய்ச்சிறுவனு மரிநமோவென்றுமிக
சொல்லவிரணியன் சிறுவனைத்
துன்பங்கணக்கிலா மற்செயவதற்கெல்லாம்
தோருமலுனை துதிக்க
அரியுருவமாகிநீ யந்தியம்போதினி
லரக்கனிரணியனைக்காய்ந்து
அன்புடையபிரகலா தன்னைகாத்ததைபோல
வடியனைக்காத்தருளுவாய்க்
குரவாநமோநமோ நாராயணயனே
கோடிகோடிப்பல்லாண்டு

குன்றேறிபதிகொண்ட வன்றுயர்த்சதியுண்ட
குன்றேந்தும் வைகுண்டனே. (௫)

கொடையிகும்மாவடி சுராராகவேவயெண்ணி
தறைவிலாவேழ்விசெய்யக்
கோதிலாதே வந்தனிடம்லவந்துமுறையிடக்
சேறள்வேதியேனுகநீ
மடபவினையாளன்றடியண் கேட்டுலகைமூன்றையு
மகிழ்ந்தின்டாயளந்து
மன்னனேயின்னமொரு வடிக்கியிடமெங்கையென
மாபலிசிரசை காட்டவே
அடிதனையவன்றலையில் வைத்ததலஞ்சேர்த்து
விட்டண்டரிடர்தனை தீர்த்தவா
அண்டர்முகலானவரைக் காத்ததைப்போலவே
யடியனைக்காரன்பர்பாற்
குடிகொண்டவோகமோ நாராயணயனே
கோடிகோடிப்பல்லாண்டு
குன்றேறிபதிகொண்ட வன்றுயர்த்தியுண்ட
குன்றேந்தும்வைகுண்டனே. (௬)

தவசமத்தக்கினிக் குப்பரசாமனுய்த்
தாங்கியேயவதரித்து
தரணிதனிலுன்றந்தைக் கிடர்செயப்பூவலருள்
ளுபிரேணுகையரக்த
அவனிதனிலவர்கள்குல மறவேசெருப்பினன்
றரியசபதஞ்சொல்லி

அரசுசெயுங்கார்த்த வீரியனுதியிரவிகுல
வரசர்தலை முறைமூவேழும்
புவனமதிற்சங்காரஞ் செய்துமானிடத்தேவ
பூசுரர்கள் பயமொழித்தாய்
புனிதனேயன்றவப் பூசுரரைக்காத்ததைப்
போலெனைக் காத்தருளுவாய்க்
குவித்தலாமோகமோ நாராயணுயனே
கோடிகோடிப்பல்லாண்டு
குன்றேபதிகொண்ட வன்றுயர்த்ததியுண்ட
குன்றேந்தும் வைகுண்டனே. (கூ)

தசரதன்மகனுகி தாடகிதனைக்காய்ந்து
தபசிகோசிகன் செய்திடுந்
தப்பிலாவேள்விதனை நிறவேத்திகௌதமற்
சாபமிட்டிருந்த கல்லிற்
பசுமைவண்ணவுன்ற னடிபடவுமகலிகைப்
பாவையாய்ச்சனகன்வில்லை
பாதியாய்ச்செய்து சீதையைமணம்புரிந்துதி
பறக்கவிட்டிலங்கை தன்னை
கசடராக்கதர்களை செகுத்துவிடணனுக்கு
கட்டிபட்டத்தைதபின்பு
கணக்கிலாத்தேவரைக் காத்ததைப்போலவே
காத்தருளுமடியேனையுங்
குசலரறைமோகமோ நாராயணுயனே
கோடிகோடிப்பல்லாண்டு

குன்றேறிபதிகொண்ட வன்றுயர்த்ததியுண்ட
குன்றேந்தும்வைகுண்டனே. (எ)

இன்பமில்லாதபிர லம்பன்முதனிருதர்க
ளிப்புவியிற்றுன்பஞ்செய
இனியதேவர்கள்கூடி யுன்சன்னதியில்வந்து
விறைஞ்சிமுறையிட்டபோது
அன்புடையபுவிதன்னி லரசனும்வசுதேவ
ருவையாந் தேவகிப்பால்
அலமேந்தும்பலராம வவதாரமாகநீ
யவனிதனிலேயுதித்து
துன்பமுறுந்தேவர்கண் முறையைக்கேட்டுன்
சோராமலன்புகொண்டு
தூர்த்தரைக்கண்டித்து சுரரைகாத்ததைபோல
துதிசெய்யடியேனைகாப்பாய்
தின்றவிலோநமோ நாராயணயனே
கோடிகோடிப்பல்லாண்டு
குன்றேறிபதிகொண்ட வன்றுயர்த்ததியுண்ட
குன்றேந்தும் வைகுண்டனே. (அ)

மங்கைபூதேவிபூ பாரத்தைதாங்காமல்
வைகுண்டம் வந்துன்னுடன்
மட்டிலாததுன்பத்தை முறையிட்டபோது நீ
வையமதிற் கண்ணனாக
திங்கண்முகதேவகிக் கற்பத்திற்சனனமாய்ச்
சீர்நந்தன் மனைவளர்ந்து

தீங்குசெய்யுந்தந்த வக்கிரன்சிசுபாலன்
 தீரகஞ்சனே செகுத்து
பங்கைக்கொடா துரியன் முதன்மனுச்சதகோடி
 பாரதமுடித்துவிட்டு
பாவைபூதேவியைக் காத்ததைப்போலவே
 பாலனேக்காத்தருளுவாய்க்
கொங்கணிவரோநமோ நாராயனுடனே
 கோடிகோடிப்பல்லாண்டு
குன்றேறிபதிகொண்ட வனுருயர்த்தநியுண்ட
 குன்றேந்தும் வைகுண்டனே. (கூ)

சகமதிற்சற்சனரை ரட்சித்துதுட்டரைச்
 சங்காரஞ்செய்யவெள்ளிச்
சங்கைமிகுகலியினிற் றாணியிற்சற்கியவ
 தாரஞ்செய்துவலாமற்
பகவன்கபாலத்துக் காகாரஞ்செயமன்னற்
 படையினுற் சாமளேயினுற்
பாரினின்மாரியாய்த் தூர்மரணமுதலாக
 பலவுதவிசெய்யவுற்ருய்
இகட்சியில்லாதசற் சனரைகாத்ததைபோல
 வெளியனேக்காத்தருளுவாய்
இந்திரையைப் போற்றிமன்னன் பூகாரைப்போற்
 றென்புன்சொலே நலமாய்க்கொள்வீர் [புலவ
குகைமுனிவரோநமோ நாராயனுடனே
 கோடிகோடிப்பல்லாண்டு

குன்றேறிபதிகொண்ட வன்றுயர்த்ததியுண்ட
குன்றேர்தும் வைகுண்டனே. (க0)

மச்சாவதாரனே வாழிகூர்மாவாழி
வராகனே சிங்கவாழி
வாமனுவாழியே பரசுராமாவாழி
மாராம வாழிவாழி
அச்சமில்லாதபல ராமனேவாழியே
யணிகிருஷ்ணகற்கிவாழி
அதிசெலவிரணியோ டையர் நாவலரிதை
யச்சிட்டோர் வாழிவாழி
கொச்சைகவியையாயி ரத்தாறிவிளநீரு
குண்ணத்தப்பாய்நாயுடு
கூறுந்தசாவதா ரப்பதிகமிதைபுகழ்வற்
குறைவிலாபதவிபெறுவார்
குச்சரியும்மோநமோ நாராயணுயனே
கோடிகோடிப்பல்லாண்டு
குன்றேறிபதிகொண்ட வன்றுயர்த்ததியுண்ட
குன்றேநதும வைகுண்டனே. (கக)

தசாவதார பதிகம்.

முற்றிற்று.

---

ஆக புத்தகம் 113.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

---

# வரதராஜப்பெருமாள்

## ஊசல்.

—(*)—

இஃதுவேலைமாநகரம் பிரமபுரம்
வெங்குபிள்ளை யியற்றியது

இவை

சிறுமணவூர்,

## முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை - சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்தி
பதிப்பிக்கப்பட்டது.

---

1910.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# வரதராஜப்பெருமாள் ஊசல்.



## காப்பு.

நேரிசைவெண்பா.

மஞ்சனமெய்யன் வரதராஜப்பெருமாள்
உஞ்சற்கவிபத்துரைக்கவே — தஞ்சமெனக்
கஞ்சக்கரத்தான் கவலைதடுத் தாண்டருளெங்
கஞ்சக் கரத்தான் கழல்.

## நூல்.

தென்னகரிலுள்ளபிரான் முதலாயுள்ள
செந்தமிழ்தேர்பன்னிருவர் மொழிகளேற்ற
பொன்னகராருயர்விரிஞ்சைப் புனிதர்வாழ்த்த
புவியுறையுஞ்சராசரங்கள் பொருந்திவாழ்க
பன்னகரும்பாகவதர் பணிந்தேபோற்ற
பட்டர்குலந்தழைத்தோங்கிப் பரிபாலிக்க
பின்னவள்வாழ்பிரமபுரிவரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (௧)

காருருந்தண்டலைசூழ் பாலிநாடு
கனகநவரத்னமணிக் காஞ்சிநாடு

ஊரூருஞ்செங்கமலத்தடங்கள்வாவி
உயர்தாளம்வெண்சங்கமொளிருநாடு
தேரூருந்தெருவீதிமாடகூடம்
செறிமதிளுங்கோபுரமுஞ்சிறந்தநாடு
பேரூரும்பிரமபுரிவரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (௨)

மேருகிரிபவளக்கிரிகால்கணாட்டி
வேணிபெனும்விண்டலமாம் விட்டமோட்டி
எருலவுமிந்திரவிக்கொடுங்கைநீட்டி
எறிமணிவாயெட்டரவப்பாசம்பூட்டி
சீருடனேவையகமாம் பலகைமாட்டி
சிறந்ததொருபேருஞ்சன் மீதிலேறி
பேருறுநற்பிரமபுரி வரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (௩)

கறைமிடற்றுவிடையோனும்வடந்தொட்டாட்ட
கமலதடத்திறையோனும் வடந்தொட்டாட்ட
மறையவரு முனிவரஞம் வேதமோத
வானவர்கள்பல்லாண்டு வரிசைகூற
இறைவி திருமங்கைநில மங்கையென்னும்
இருவர்நடுநாயகப்போ லெழுந்தசோதி
பிறவியகல் பிரமபுரி வரதராஜர்
பெருந்தேவிமணவாளர்ஆடிரூசல். (௪)

வாசவனு மீசனும் வெண்கவரிவீச
வலிகெருடனிருபுயமும் வணங்கியேற்ப
பாசமொடுவாயுமைந்த னேவல்கேட்ப
பண்ணிசையைக் காந்தருவர் பாடியாட
கேசவனேநின்பெருமை யாவர்சொல்வார்
கிளரும்விபுதாதியரும் புகழுங்கீர்த்தி
பேசியிடும்பிரமபுரி வரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (ரு)

சேணுறையுந்திருமடவார் விரிஞ்சனூட்டு
தெரிவையர்கள் குழாங்கூடிஜெயஜெயென்று
பாணிதனிலேந்தியதோர் ஆலங்கோடி
பல்லாண்டுசேவைஷயிடும் பாவைகோடி
காணவரிதென் றெவரும்வாயிலெய்தி
காக்ஷிதனைக் கண்டுகண்கள்களிகூர்ந்தென்றும்
பேணியிடும் பிரமபுரிவரதராஜர்
பெருந்தேவி மணவாளர் ஆடிரூசல். (கூ)

பழையவினை யொழித்திடவே விரிஞ்சன்மேனாள்
பாரிலடுத் தனல்வேள்வி பண்ணும்போது
குழியிலெழுந்தவனியெலாம் பிழைக்கவேதான்
கோடிரவிங்கர்வடிவங் கொண்டஜோதி
மழையெனவேயிமையவர்கள் தூவ
வருமாதிகேசவனே வலித்தோர்க்கெல்லாம்

பிழையகற்றும் பிரமபுரிவரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (எ)

ஆறுவகையுட்கருவி தோழனாகி
அதுவழியாயிருந்தடியே னட்கடோறும்
சேறுநிகர்பவக்கடலின் மூழ்கியேதான்
தேகமெடுத்தெடுத்துமெலிந் திளைத்தநாயேன்
தேறும்வகையருள்புரிவாய் கருணைகூர்ந்து
சிறியேன்றனுள்ளத்தே செழித்தஜோதி
பேறுதவும்பிரமபுரி வரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (அ)

பொருந்துசரவசரவிரு வுயிர்களாகி
போதமுறுமனக்கரண புலன்களாகி
இருந்துபொறிதானைசைத்து வினைகளூட்டி [ரார்
இருக்குநின்றன்பெருமையிசைத்திடவல்லா
அருந்தவனுமகிழ்ந்திடவேவேள்வியைக்காத்
தகலிகைகுறைமுடித்தபத மளிக்கவேணும்
பெருந்தகையாம்பிரமபுரி வரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (௯)

கரியவொளிமேனியொடுகிரீடமின்ன
கனகவொளியிருகுழையுங் காதில்மின்ன
அரியமணிகவுஸ்துவமு மார்பில்மின்ன
அஸ்தமிடுமணிகடக வழகுமின்ன

உரியபுவிதத்தமெனக்கரங்களேந்தி
ஓங்குபதப்பொற்சிலம்பினொளிகள்மின்ன
பெருமைசெழுபிரமபுரி வரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (க0)

திருக்காஞ்சிவளர்பெருமாள் ஆடிரூசல்
திருவரங்கத்துறைபெருமாள் ஆடிரூசல்
தருக்கிளர்சூழ்திருப்பதியார் ஆடிரூசல்
தவரிதயந்தனில்வாழ்வார் ஆடிரூசல்
உருக்குலையப்பெருவாழ்வு தருவதாகி
உகந்தெனையாட்கொண்டருள்வார் ஆடிரூசல்
பெருக்குவளப்பிரமபுரிவரதராஜர்
பெருந்தேவிமணவாளர் ஆடிரூசல். (கக)

வரதராஜப்பெருமாள் ஊசல்
முற்றிற்று.

---

# உலகவிசித்திரக்கதை.

இப்போது உலகத்தில் நடக்கும் ஆசசரியங்களுக்குத் தகுந்தபடி திருட்டு, புரட்டு, நயவஞ்சகம், சகோதரத்துரோகம், சோரசாமர்த்தியம், பரஸ்திரீகவனம், இப்பேர்கொற்ற ஆசாமிகளுக்குத் திருஷ்டாந்தமாக அன்றுடம் சொல்லிக்காட்டுவதற்குத் தகுந்த அனேக கதைகளும் சத்தியத்தை நிலைநாட்டி விருத்தியடைந்த உத்தமர்களின் கதைகளும் இப்படி பத்தொன்பது கதைகள் அடங்கி யிருக்கின்றது.

இதன் விலை ரூபா 1.

# சிவவாக்கியம் ஆயிரம்பாடல்.

சப்தரிஷிகளில் ஒருவராகிய பிருகுமகாரிஷியின் புதல்வரான சிவவாக்கியர் என்னும் யோகமூர்த்தியானவர் திருவாய்மலர்ந்தருளிய பாடல்களில் அச்சுக்கு வராதிருந்த சில நூற்றுக்கணக்கான அனேக பாடல்களும் சிவவாச்கியர் அவதாரஞ்செய்த திவ்வியசரித்திரத்துடன் 1000-ஆயிரம் பாடல்கள் ஒரேபுத்தகமாய் உயர்ந்த கடிதத்தில் அச்சிட்டிருக்கின்றமையால் வேண்டிய புண்ணியவான்கள் எம்முடைய விலாசத்திற்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை அணு 8.

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்.

பேரம்பூர், பாரேக்ஸ் போஸ்ட், மதராஸ்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

# வரதராஜப்பெருமாள்

## எச்சரிக்கை

---

இஃது வேலைமாநகரம் பிரமபுரம்
வெங்குபிள்ளை யியற்றியது

இவை,
சிறுமணவூர்,

## முனிசாமி முதலியார்

அவர்களது
சென்னை-சூளை,
சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.

---

1910.

மலையாள

# மாந்திரீகபோதினி.

---

இதில் கணபதி மூலமந்திரம் ; அஷ்டகணபதியின் அஷ்டமாசித்து அஷ்டகணபதியும் ஒன்றாய் நின்றாடும் மூலமந்திரம் - பிரம்மமந்திரம் - விண்ணுமந்திரம் உருத்திரமந்திரம் - சதாசிவமந்திரம் - அஷ்டகரும மந்திரம் வேறுவித தம்பனம் - மோனம் - வசியம் - மாரணம் - உச்சாடனம்-ஆக்கிருஷ்ணம் - வித்துவேஷணம் பேதனம்-அஷ்டதிக்குமந்திரம் - ஜெபம் - நீலகண்டர் அட்டமாசித்து மந்திரம்-நந்திசர் தியானம் - சுப்பிரமணியர் சருவசங்காரவிஞ்சைமந்திரம் - பஞ்சாக்ஷரவிலக்ஷணம்-பஞ்க்ஷரமாரல்சிவபஞ்சாட்சரம்-ஆயிபஞ்சாட்சரம்-திச்சை மந்திரங்கள் இவ்வாறு அனேக மந்திரம் அடங்கியது. மலையாளம் பகவதியாப்பிள்ளை செய்தது.

இப்புத்தகம் விலை அணா 4.

சிறுமணவூர்-முனிசாமி முதலியார்.

பேரம்பூர், பாரேக்ஸ் போஸ்ட், மதராஸ்.

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

# ஸ்ரீராமர் அடைக்கலப்பத்து.

## அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கயமாமடுவின்முறையமிடக் கருணைக்கடலேயிடர்தீர்த்தாய்
பயனாய்வினையாய்ப்பலகாலாய்ப் படியுங்கரியமாமுகிலே
துயர்வாருதியிலுழன்றபெருந் துன்பந்தவிரவரவேண்டும்
அயனார்தாயேஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே. (க)

மருளேதெருளேகார்மேகவண்ணாகண்ணாவானமுதே
திருவாய்மொழியேபன்னிருவர் தேற்றும்புகழேயுணர்ந்தோதி
உருகாமனந்தங்குடையேனா னுன்னுங்கழல்வந்தடைவேனோ
அருள்வாருதியேஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே. (உ)

எரிநீர்புவிகால்விண்ணாகி யீசன்பிரமனிருசுடராய்
விரிமூன்றுலகுந்தானாகி வீறுந்திருமால்நின்கழலை
பிரியாவடிமைக்குடியாகிப் பிழையேன்பெறவேதரவேண்டும்
அரியேவரதாஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே. (ங)

துருவன்கலுழன்மணிச்சேடன் சுகரும்மிதிலைமன்னுங்காற்
சிறுவன்முதலாம்பாகவதர் தேற்றத்தெளியாத்திருவடியைப்
பெறுவனெளிதாயென்பதுவே பேயாயெனையேயீர்க்கின்ற
அறிவின்சுடரேஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே. (ச)

ஒப்பாய்க்கடவுள்வேறுளதோ வொளிர்பூநகரும்வண்ட
னைபோல், மொய்ப்பாயடியருளப்பூவைமுனியேயினிவந்தெனை
யாளாய், செப்பாயுரையொன்றாற்சுடரே சிறியேனிடர்தீர்மரு
ந்தானாய், அப்பாவழகாஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே,

குணிநீயுலகமென்றயனைக் கொடுத்தாய்நாபிக்கொழுமல
ரில். மணியேஜனனம்விளங்கிடவேமனதிற்றந்தாய்மன்மதனை

பிணியேன்வினைதீர்மும்மருந்தேபிறங்குஞ்சோதிப்பெம்மானே
அணியேயெனையாள்ஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே.

வேயினைவாயால்வைத்தூதி மிளிருங்கோவினிரைமேய்த்துப்
பேயினைவாயாலுயிருண்ட பெம்மானெம்மானம்மானே
நாயினையின்னம்பலகாலாய் நலியும்பிறவிநல்காதே
ஆயிரநாமாஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே. (எ)

ஒளியேவெளியேமறைநாலுமோதும்பொருளேயொண்சுடரே, தெளிவேபயனேபிரமாதிதேற்றத்தெவிட்டாவின்சுவையே, எளியேனினிவந்திடர்மூழ்கா விறவாப்பிறவாவரமேதந், தளியாய்குருவாய்ஸ்ரீராமாஅடியேனுன்றனடைக்கலமே. (அ)

செபமுந்தபமும்பூசையறஞ் செய்யுங்கிரிகையானவனே, உபயசெந்தாமரைக்கழலை யூத்தைக்கடையேன்பெறவருள்வாய், நிபமாங்காலையெமதூதர் நீளுங்கயிற்றால்வலித்திடுமுன், அபயமபயம்ஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே. (கூ)

கையான்மனதால்நாவாலுங் காகுத்தாவுன்கழற்கடிமை, செய்யச்செய்யுந் தொழிலார்க்குச் செகமும்விண்ணுந்தருவோனே, வெய்யக்கொடியேன்கரையேற விடவந்தெனைநீயாண்டுகொண்ட, அய்யாகுருவேஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே. (கo)

நாராயணநின்னுமைமதை நாவிற்றுதியேனவின்றோர்பால்
சீராயடைந்துநின்கோயிற் சேர்ந்துவணங்கேன்சென்றாழி
தீராவினையேன்செங்கமலத்திருத்தாள்சேரும்வகையறியேன்
ஆராவமுதேஸ்ரீராமா அடியேனுன்றனடைக்கலமே. (கக)

ஸ்ரீராமர் அடைக்கலப்பத்து

முற்றிற்று.



ஸ்ரீராமஜயம்.

# வரதராஜப்பெருமான்

## எச்சரிக்கை.

—— ( * ) ——

நலமாய்த்தமிழ்மறைநூல்தினம் நவிலுந்திருவடியார்
மலமாயைநீக்கும்ஜெய வரதாயெச்சரிக்கை. (க)

விதியோன்பசுபதிவாசவன் வியுதாதியரேத்தும்
மதியேதிருப்பதியேஜெய வரதாயெச்சரிக்கை. (உ)

இறையன்தணர்சுர்ர்தானவ ரினிதரயறுவகைநூல
மறைதேடியுங்காணுஜெய வரதாயெச்சரிக்கை. (ங)

கடைவாயேயீறுலகியாவையுங் கனிவாயமுதருந்தி
வடவால்துயில்மகவேஜெய வரதாயெச்சரிக்கை. (ச)

துணிவாய்தவமுடையார்மனச் சுடராய்மதுகடலில்
மணிவாயரவணையாஜெய வரதாயெச்சரிக்கை. (ரு)

நந்தாதுளபைந்தாரணி நந்தாகௌசலையாள்
மைந்தாரகுநந்தாஜெய வரதாயெச்சரிக்கை. (சா)

நாதாநவநீதாஜெக நாதாகைகேசி
மாதாவுரைத்தவருஜெய வரதாஎச்சரிக்கை. (௭)
குண்ணல்மழைதடைசெய்தருள் கோவேயெழுபொழி
கார்
வண்ணமரைக்கண்ணஜெய வரதாயெச்சரிக்கை. (௮)
வேயாற்குழலிசைமுதும் விநோதா திருநாதா
மாயாமுகில்சாயாஜெய வரதாயெச்சரிக்கை. (௯)
வரைமாமகள்கலைவாணியன் மடவாள்புகழ்செந்தா
மரைமாமகள்கேள்வாஜெய வரதாயெச்சரிக்கை. (௧0)
அயனேறுமள்குகனூர்மயி லரசன்மதிமுடியான்
வயினேறியதேவாஜெய வரதாயெச்சரிக்கை. (௧௧)
பணிவார்வலம்சுழல்வார்புகழ் பயில்வரருளாந்திகழு
மணியேதிருவணியேஜெய வரதாயெச்சரிக்கை. (௧௨)
ஊனுயுடலுயிராயுணர் வுடையாயுலகெங்கும்
வானுகியதேனேஜெய வரதாஎச்சரிக்கை. (௧௩)
காலாய் புனல்வானய்புவி கனலாயெழுவகையாய்
மாலாய்தனிச்சுடரேஜெய வரதாயெச்சரிக்கை. (௧௪)
புகழாயுளம்புளகாபெரும் புருடாபெருந்தேவி
மகிழ்நாமதிவதனஜெய வரதாஎச்சரிக்கை. (௧௫)
இரமேதொடர்வினையேனிடர் சிறுகத்திருவடிசேர்
வரமேயருள்பிரமாபுரி வரதாயெச்சரிக்கை. (௧௬)

வரதராஜப்பெருமாள் எச்சரிக்கைமுற்றிற்று.

---

ஸ்ரீராமஜயம்.

# மங்களம்.

ஜெயமங்களம் நித்ய சுபமங்களம்.

மங்களம்வைபோக வரதபரந்தாம னுக்கும்
மங்களம்பெருந்தேவி மகலட்சு மிக்கும்—(ஜெய)

கடல்சிதறிக்கரைபுரளக் ககனம்புவிதானதிர
வடவரையும்பொடியுதிர மணிச்சேடன்நன்
படமதிரக்கருடன்மிசை பவனிவரும்வரதருக்கும்
கடல்பிறந்தபெருந்தேவிக் காரிழைக்கும்—(ஜெய)

உருளைகொடுசகடுமடிமுதையில்விசும்புடையனுகி
மருளையுறுமிருளகல வாழ்வுதவினேன்
பரவைவரைகொடுவணைத்த பட்டாபிராமனுக்கும்
அருள்ஜனகன்பயந்தெடுத்த அம்மைதனக்கும்(ஜெய)

அண்டபகிரண்டமுத லம்புவியுமொருவாயில்
உண்டுவடவாலில்துயின் றுமிழ்பாலகன்
கொண்டல்நிறவண்ணகோ தண்டரகுராமனுக்கும்
தண்டலைசூழ்மிதிலைவரு ஜனகிதனக்கும—(ஜெய)

அரவமளியறிதுயில்விட்டசுரர்குலமழிப்பதற்கு
பரவைவரைகொடுதடுத்துப் படையெடுத்தோன்
தரணிதனையொருசரணத் தாலளந்ததாசரதி
பிரமபுரிவரதருக்கும் பெருந்தேவிக்கும்—(ஜெய)

மங்களம் முற்றிற்று.

---

ஆக புத்தகம் 116.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்

தில்லைக் கோவிந்தராஜப் பெருமாள்

# இணைமொழியமகமாலை.

இஃது

இராமசாமி நாயகரால்

இயற்றப்பட்டு

இவை,

சிறுமணலூர்,

## முனிசாமி முதலியார்

அவர்களது

சென்னை-சூளை,

சிவகாமிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1910.

ஸ்ரீ

ஸ்ரீமத் வரவரமுநயேநம:

# சாத்துகவி.

ம-ா-ா-ஸ்ரீ

மஹாவித்வஜ்ஜனசேகரர்-திரிசிரபுரம்.

வி. கோவிந்தபிள்ளையவர்களியற்றிய

வெண்பா.

மாறிரட்டைச்சொல்யமகமாலேவனமாலேயென்றே
தேறுதிருச்சித்திரகூடஞ்சேர்ந்தாய் - ஈறில்புகழ்த்
கச்சியேவாழ்வாங்கவிராமசாமியிலைச
நச்சியேகொண்டநலம்.

கட்டளைக்கலித்துறை.

நலநலமேசித்திரகூடநாமநலஞ்சிறந்த
தலநலமேநங்கவிராமசாமிதனித்தன்புசால்

புலநலமேயிரட்டைச்சொல்யமகப்பொன்மாலையெல்லாம்
வலநலமேவுமகிழ்யா றன்பாமகிழ்மா றனக்கே.
முப்பதிரட்வடயமகச்சொன்மாலைமுழுதுணர்ந்தோர்க்
கோப்பதிரக்கமுளவுள்ளுகவுணர்த்துகின்ற
வப்பதின்மர்க்குமருள்சித்ரகூடத்தமர்ந்தவன்சீர்
வைப்பதினித்தகவிராமசாமிதன்வாக்குற்றதே.

ம-ா-ா-ஸ்ரீ புதுவை,

## இராமாநுஜ நாவலரவர்கள்

இயற்றிய

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

தன்னிகர்காஞ்சித்தலத்துறையிராமசாமிமுத்தமிழறிமுதியோன்
மின்னிகர்சடைமுக்கணனடம்புரியவிழிதுயிறனிமுதலவன்செம்
பொன்னிகர்யுகளபதமிசையிணைகொள்புதுமொழியமகநன்மாலை
யென்னிகர்விதனுக்கென்னநாவலர்களேத்துறச்சாத்தினனம்மா.

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

சென்னைக்கவர்ன்மெண்டு-நார்மல்கல்விச்சாலைத்
தமிழ்த் தலைமைப் புலவர்
ம-ா-ா-ஸ்ரீ கோமளபுரம்
இராஜகோபாலபிள்ளை யவர்களால்
செய்யப்பட்ட

எழுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்

இணைமொழியோதைதகேழுஉந்திருக்காஞ்சிக்
கிளக்கருமாசறுகாட்சிக்
கிணைமொழிகில்லாவிராமசாமிப்பே
ரியற்றமிழ்நாவலரேறு
துணைமொழியாறைந்தெனஙனியுணர்ந்து
தோமில்சீர்த்திலைமாயவன்மேல்
இணைமொழியமகக்கலித்துறையாறைத்
திசைத்திவணைப்பிகர்தனனே

கா-பச்சையப்பமுதலியார்
சென்னை ஹைஸ்கூல்
தமிழ்ப்புலவர்
திருமணம்-கேசவசுப்பராயமுதலியாரவர்கள்
இ ய ற் றி ய
எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஆய்மொழிப்பநுவலந்தணர்வாழ மணிதிருச்சித்திரகூடத்
தேய்மொழித்தில்லைக்கோவிந்தராஜற் கியற்றுசீரிராமசாமிப்பேர்
வாய்மொழிப்புலவனிணைமொழியமகமாலையைவண்டிருக்குருகூர்ச்
சேய்மொழிப்பநுவற்றீஞ்சுவையெனவே தேர்வராற்றெள்ளிதினு
ணர்ந்தோர்.

———(*)———

## நூன்முகம்.

தமிழாரணந்தந் துயிர்த்தொகைசன்மத் தடங்கடலில்
அமிழாதுயச்செய் தருளியமாற னலர்செழுந்தேன்
உமிழாமணக்கும் வகுளாபரண னுறுபுகழை
இமிழார்கலியுல கத்திசைப்பார்தமக் கென்குறையே.

குரைமேவுநீரைப்பருகுமடங்கல்கொல்லோவெனவித்
தரைமேவுசாக்கியர்ச்செற்றுமண்மேற்றனிமால்சமயம்
வரைமேவுதீபமெனப்பிறங்காநிற்பவைத்தமெய்ம்மை
யுரைமேவுபூதூர்யதிவரன்றாள்பணிந்துய்குதுமே.

தீதுற்றபொய்ந்நெறியாளர்முன்னிட்டசெந்தீமணமேத்
காதுற்றகாலையொராயிரதீமுகக்கட்செவியாம்
நாதுற்றசிர்த்தொல்லுருக்காட்டியாட்கொண்டுெங்கள்மனம்
போதுற்றராமாநுஜன் பொன்னடிகளைப்போற்றுதுமே.

வாராராகவர்கள்பணிதில்லையுறைகோவிந்தன்மலைநேராமா
காராராகவமதனிற்கதிரொதிர்மேலமதாக்கிக்கருதுவார்க்கா
தாராராகவன்கழற்கோரிணைமொழியாலணியமகமாலைசாத்த [னே
வீராராகவன்மலர்த்தாட்டுணை துணையாயெனதகத்தில்விளைதிட்டே

நூல்

திருமா திருமார் புடையாயியம்பலசெவ்வொலிய
திருமா திருமா திருகண்ணினகழல்செவ்வனுறுத்
திருமா திருமா வதளானடனஞ்செயத்துயில்சு
திருமா திருமாம் பொழிற்றில்லைச்சிருமென்சிந்தையவே. (க)

பதம் பதம் சேகரத்தேற்றவனோடரிபண்ணவர்நற்
பதம் பதம் கொண்டபதுமங்கொண்டானினர்பன்னருஞ்சீர்ப்
பதம் பதம் அங்கித்துயில்வேன்புனைந்துபழிச்சுவலென்
பதம் பதம் பூம்பொழிற்சித்திரகூடப்பரஞ்சுடரே. (உ)

கமலங் கமல மிடப்விழியாநங்கள்காரண௷
கமலங் கமல மணியணிவோன்றற்கருதினா

கமலங் கமல நறையத்தில்லையான்றில்லைக்காவலனென்
கமலங் கமல மாக்குமைத்தான்றுணைகாணெஞ்சமே. (ங)

மாதவ மாதவ மாந்திக்களிபொழில்வண்டில்லையெம்
மாதவ மாதவருள்ளச்சினகரவாழ்வுகந்தோய்
மாதவ மாதவ மாரனம்பாலலமந்துதிரு
மாதவ மாதவன் னெஞ்சுழலாநிற்றன்மாற்றுகவே. (ச)

கானகங் கானகந்தேய்ந்திடச்சேர்ந்தடைகாய்புசித்தங்
கானகங் கானக நீர்படிந்தாலுமென்காய்பணியக்
கானகங் கானகந்தாமரையானினர்காணுகைக்கா
கானகங் கானக வூர்பாருண்டான்றில்லைகாண்கலரே. (ரு)

பறனம் பவனம் பயமம்பரங்கனல்பண்டுதரு
பவனம் பவனம் பவாழ்தில்லைமேவிப்பரிபவந்தீர்ப்
பவனம் பவனம் பறழெடுத்தென்னநம்பாவவினைப்
பவனம் பவனம் படாதருள்வோனைப்பணிநெஞ்சமே. (சா)

சாரங்கஞ் சாரங்கஞ்சேர்பெறப்பாடுந்தனித்தில்லையைச்
சாரங்கஞ் சாரங்க நேராகுநாதனைத்தாழ்ந்திறைஞ்சஞ்
சாரங்கஞ் சாரங்க வாளியையூட்டுந்தகையயன்கைச்
சாரங்கஞ் சாரங்கன்காண்பருமெய்ப்பதஞ்சார்ந்திடற்கே. (எ)

பாதவும் பாதவ வெள்ளியனேற்கப்பணித்தருளும்
பாதவம் பாதவ நேர்மனத்தேன்செய்பரிசிற்றிருப்
பாதவம் பாதவ வாளுடையாய்வெம்பகைவரிற்றப்
பாதவம் பாதவ வென்றில்லைவாணபகர்ந்தருளே. (அ)

காமரங் காமர வின்னுணிசைப்பக்களித்துலவிக்
காமரங் காமர வார்மயிலாலுங்கவின்புலியூர்க்
காமரங் காமர ணுதிகடீர்த்துன்கழறந்தெனைக்
காமரங் காமர மர்ந்தாருமென்மனங்காண்குறினே. (௯)

மாதிர மாதிர மாதுலனேவமருப்பொசித்த
மாதிர மாதிரஞ்சேர்பொழில்சூழ்தில்லைமாயபர

மாதிர மாதிரங்காவிழும்பாழுடவந்தருள்பூல்
மாதிர மாதிரள்கொங்கைத்தழும்புகள்வாழபுயனே (கO)

கண்டங் கண்டங் கெழிற்சங்கங்கயலெனக்காரிகையார்க்
கண்டங் கண்டங் கறிவேயழியாதெனைக்காக்கவ
கண்டங் கண்டங் கெழுபாற்றிரளாவுண்டகாரணவங்
கண்டங் கண்டங் கடுப்பப்பொழில்சூழ்தில்லைக்கார்வண்ணனே (கக)

காவல காவலர்மீதளிகைசிகக்காமர்பண்ணைல்
காவல காவலர்காமுறப்பாடிக்களிக்குந்தில்லைக்
காவல காவலன்றேர்முன்றெரித்தவன்காணருஞ்சீர்க்
காவல காவலதாருளததே னுரைகாரணனே. (கஉ)

கஞ்சங் கஞ்சந் தனமானனந்தையலர்காதல்செயங்
கஞ்சங் கஞ்சந் தமென்றேமாந்தளிர்பிறைகாணுமென்பார்க்
கஞ்சங் கஞ்சந் ததமுன்னடிக்கீழ்வணக்காநிற்லைனமர்பமே
கஞ்சங் கஞ்சந் தனக்காவேய்திருத்தில்லைக்கார்வண்ணனே. (கங)

பலம் பலம் பெற்றிடலேயெயைப்புல்லரைப்பாடியங்கம்
பலம் பலம் பூணப்பரிபுலவீரிதென்பாவமன்றோர்
பலம் பலம் போதிகணீறெழவெய்தபரமனைநம்
பலம் பலம் பொழுற்காந்தில்லைமேவிப்பணிமின்களே. (௧௪)

காரணங் காரணங் காகாவென்றேசிலர்காதலொடுங்
காரணங் காரணங் கானதென்னார்மெய்க்கருத்தழிந்தங்
காரணங் காரணங் காணென்றுபார்த்தற்குக்காட்டியபா
காரணங் காரணங் கார்மேனியாய்தில்லைக்காகுத்தனே. (௧௫)

சலஞ் சல மாயிரஞ்சூழ்சங்கணிதில்லைத்தாமகரா
சலஞ் சல மாழ்மடுவிற்கரவாலினைந்தாருயிர்துஞ்
சலஞ் சலஞ்சேலெனவோடித்தகைந்தநின்றாளடைந்தஞ்
சலஞ் சதமாயிருநாளுயிர்நேடுந்தருமனுக்கே (௧௬)

மலைய மலைய வடிவினராய்வந்தவஞ்சரெஞ்சா
மலைய மலைய மண்ணுக்கிரைசெய்தத்தைமைந்தனையா

மலைய மலைய மறைப்பொருளோ திமகிழ்வித்தவம்
மலைய மலைய கடைக்கணித்தாடில்லைமாயவனே. (கஎ)

மாமன மாமன மாதங்கமேவமருப்பொசித்த
மாமன மாமன கங்காத்தேற்றமைமாவிறலா
மாமன மாமன விரத்தையேற்றிலையேற்பராந்தா
மாமன மாமன கத்தடஞ்சூழ்தில்லைமாயவனே. (கஅ)

கற்பகங் கற்பக சனியற்சாய்த்திக்கவின்புவியிற்
கர்பகங் கற்பக லாக்காதலிக்கருள்கண்ணவிலங்
கற்பகங் கற்பகல்போஓநின்ஞமக்கருத்தின்றியான்
கற்பகங் கற்பகம்விசக்கெடற்றில்லைக்காவலனே. (கக)

கயங் கயங் கொண்டமடுவிற்கராப்பற்றக்காப்புனியக்
கயங் கயங் கோவென்றுயர்த்தியகாலைநிற்கற்றுணராக்
கயங் கயங் கொண்டின்றிவணுறுந்தேவகணங்களெல்லாம்
கயங் கயங் கொண்டிறந்தேகினவோதில்லைக்கார்வண்ணனே. (உ0)

வாமன வாமன வாசிதகைக்கும்வகையருள்பெண்
வாமன வாமன கப்பெருந்தாளவராநந்தன்செல்
வாமன வாமனக்குன்றேந்தியகண்ணவண்டில்லைவாழ்
வாமன வாமனத்தப்பூணினுன்பணிமாயவனே. (உக)

சங்கம் சங்கம் சினைகொண்டவரால்பிறைதையலர்கே
சங்கம் சங்கம் செய்தகாரெனப்பாடித்தயங்குபிர
சங்கம் சங்கம் தாஞ்செய்துகளிக்குந்தகையிலர்க்க
சங்கம் சங்கம் கரமேய்தில்லைக்கோவிந்தன்ருளடைந்தே. (உஉ)

வாரண வாரண லாழியனேதில்லைவாணவக
வாரண வாரணவாய்மையர்காதமயர்ந்தழைத்த
வாரண வாரணமேத்துநின்மாமலர்த்தாளருள
வாரண வாரண வாள்வலவாபுன்மனத்தினெற்கே. (உஙு)

கலங் கலங் காரவுணர்ச்செற்றநேமியங்கையவலங்
கலங் கலங் காகத்துமாமணிபூண்டில்லைக்கண்ணமாக்

கலங் கலங் கும்புலையெம்பவவாரிகடக்கமற்றோர்
கலங் கலங் கொண்டு.வெஞ்சிரத்தேற்றநின்கான்மலரே. (உ௪)

வாசக வாசகன்றேயெளியே னுய்யுமாறெளிர்பொன்
வாசக வாசக மங்குற்கொருபெருமாருதமாம்
வாசக வாசக னந்தவழ்சோலைவண்டில்லையுற்ற
வாசக வாசக னமனந்தற்கருள்மாதவனே. (உ௫)

மானவ மானவ டிவுகொண்டங்கண்வஞ்சன்வரப்பு
மானவ மானவ தெம்மோயறிந் திலண்மாலுறச்செல்
மானவ மானவ ரம்பிலனேயின்பவாழ்வருளெம்
மானவ மானவ கந்தொலைத்தே தில்லைவாழ்கண்ணனே. (உ௬)

மந்தர மந்தர மத்தாகவாரிமதித்தவவம்
மந்தர மந்தரப்பூங்குழற்பேய்ச்சிவாமடித்தோய்
மந்தர மந்தர நேராகநின்னைவழுத்திலர்த
மந்தர மந்தாறியாரென்னே தில்லைமாதயனே. (உஎ)

போதகம் போதகங்கண்டாலெனப்புலன்போயொடுங்கும்
போதகம் போதகங்கின்றிணையாவகைபோந்தருள்பூம்
போதகம் போதகம்பேய்களத்தாள்புணராகபவப்
போதகம் போதக மன்றடைத்தாய்தில்லைப்புண்ணியனே. (உஅ)

மாலைய மாலைய வாவித்துயிறில்லைவாணவன
மாலைய மாலையன்சங்கரனேடும்வகையறியார்
மாலைய மாலைய மாமென்மனத்தினின்மாமலர்த்தாள்
மாலைய மாலையஞர்செயுமேனியவைத்தனையே. (உகூ)

தருணந் தருணமலர்ப்பாவையுரகவென்றூழ்சொலுவந்
தருணந் தருணனெனவொளிராழியதாத்திரியந்
தருணந் தருணவம்வீழ்ந்தாரையொப்பத்தயங்கினெனத்
தருணந் தருணஞ்சார்கலத்தாய்தில்லைத்தற்பரனே. (௩௦)

இணைமொழியமகமாலை
முற்றிற்று.

ஆக புத்தகம் 117.

உ

கடவுள் துணை.

---

# ஆஞ்சநேயர் தோத்திரப் பதிகம்.



இஃது

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

---

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஆஞ்சநேயர் தோத்ரப் பதிகம்.



காப்பு—நம்மாழ்வார் துதி.

நேரிசைவெண்பா.

கங்கைநீர் நாட்டினில்வாழ் காகுத்தன் றாதுவனைக்
கங்கைசேர்த்தேத்துங் கவிக்குதவுங்—கங்கையுறு
மாறன்றெளிரு மணித்தடஞ்சூழ் வண்குருகை
மாறன் றிருத்தாண் மலர்.

திருமால்துதி.

கட்டளைக்கலித்துறை.

நேயம்புரிய வருமாஞ்சனேய நிலமலனுறு
மாயம்புரியு விறுதத்தறுகண் மதகயங்கொல்
பெயம்புரியத் தமிழ்பதிகத்துதி செப்புதற்குப்
பாயம்புகைக் கோதண்டராமன் பதந்துணையே

நூல்,

ஆசிரியவிருத்தம்.

நீர்கொண்ட கார்கொண்ட கொண்டலரவிந்தமலர் கிகர்கொண்ட மேனிகொண்ட, நித்யவுயர் தத்வகுண சத்வபரவஸ்துவெனு நெடியமாலருணெறியினல், சீர் கொண்ட சண்டவிக லரியினதுசேயெனத்திகழரியின் வருமண்ணலே, செம்பொனுலகப்புவிய ராதியர்க்கா தாரதிடநிலயமானபொருளே, ஏர்கொண்ட வைம்பெ ரும் பூதமொன்ருமுருவி யைந்திறல்கொண்டமுதலே இகலுமஞ்ஞானவிரு ளொழியவெங்கெங்குமொளி யி லகவெழுகின்றசுடரே, ஆர்கொண்டநின்மகிமைபுகல் வதற் கியாவர்தா மரியவரிடத்திலன்பாய், ஆஞ்சமய முன்னின்று சாஞ்சலியநீத்தருளு மாஞ்சனேயக் கட வுளே. க

படியினெடு முடிகொள்வரைகிடுகிடென நெடியக டல் பாயநீடிருவடிகளுந், பாசமெனநீசருயிர் நாசமு றவீசியெப் பாலுமேகோலும்வாலும், கொடியிரதமு ரிபடக் கரிபடப் பரிபடங் குவிபடக் கொன்றகரமும், கொற்றிபொடுவெற்றிபுறை வுற்றழகுபெற்றவுயர் குன் றமெனநின்றபுயமும், விடியல்வருமண்டலமிரண்டனை

யகுண்டல விளங்கெழினலங்கொள்செவியும், மிருக ருணைதருநயன முகிழ்நகைகொள்முகவனசமேன்மை யுங்கண்டளிபனேன், அடிமைசெயவரமுதவவந்தருள் வதென்றரோ வடியவரிடத்திலன்பாய், ஆஞ்சமயமுன் னின்று சாஞ்சலிய நீத்தருளு மாஞ்சனேயக்கடவுளே.

மேருமந்திரமாதி வரையெலாநின்பாத விரலினிறெ றுக்கிவிடுவாய், விரிதிரைக்கடனீரை யேற்றுவாய்பக்க லின் மிதித்துநற்றிடர்செய்குவாய், பேருமொளியிடிக ளொடு மேகக்குழாத்தைப் பிடித்துப்பிழிந்தெடுப்பா ய், பிரமன்செயண்டங்கண்மெத்தென்றபந்தாய்ப்பிறங் கிடவெறிந்தாடுவாய், ஒருமயுகமுடிவில்வருவட வனலே வாயினு லூதித்தணித்தழிப்பாய், உரோமராசியில் வர் ணசோதிக ளெலாந்தோற்ற வோங்குவாய் நினதுவன் மை, ஆருமுணர்வரிதயனே யடியனெஞ்சொல்லுகேனு டியவரிடத்திலன்பாய், ஆஞ்சமயமுன்னின்று சாஞ்ச லியநீத்தருளு மாஞ்சனேயக்கடவுளே. ௩.

சிறுமதலையானபொழு துண்ணுநற் கனியென்றுசெ ங்கதிரின் மேற்பாய்ந்தனே, செப்புமலனிரதத்தின்மூன் புபின் னடைகொண்டுசென் றைந்திரங்கற்றனே, மறவி லாவதிவீர கோதண்டரகுநாதவள்ளலருள் வழிநின்ற

னே. வாரிதியைபயங்கார தாரைசூடர்கொடுதாவி வளர் பவளவரையுற்றனே, தறுகணரிலங்கையிற் காவல்செய் வானைத் தறைப்படவறைந்தேகினே, சானகிக்காழியை யளித்தஞ்சலஞ்சலெக் தாயென்றுதுயர் தீர்த்தனே, அ றுதியில்லாமையைப் பெருதியெனவுற்றுளாயடியவரி டத்திலன்பாய், ஆஞ்சமயமுன்னின்று சாஞ்சலிய நீத் தருளு மாஞ்சனேயக்கடவுளே. ச

ஈரைந்துசிரமஃ திரட்டிவன்கரனு மிராவணனசோக வனமோர், இமைபினிற் றுகள்படுத் தெண்டிசை கு லுங்கவே யிகல்வீரகர்ச்சனைசெய்தே, சாரைந்து முன் றூயுத கிங்கரலாவெங்கணெறி தருசம்புமாலிதன்னைத் தளகர்த்தரைவரோடு களமுற்றநிருதரைத் தாளான்மி தித்துழக்கிக், கூரைந்துகிர்த்தகாங் கொடுபீறி யெற்றி யுடல் கூறுகூறுய்க்கிழித்துக், குழப்பிக்கலக்கியவ் வாக் கனைத்தேய்த்தாவி வெள்ளைபடவிளையாடியே, ஆரைந் துசுதனனடி யுற்றுமபல்செற்றனே யடியவரிடத்திலன் பாய், ஆஞ்சமயமுன்னின்று சாஞ்சலிய நீத்தருளு மா ஞ்சனேயக்கடவுளே. ரு

மாபாவி யாமிந்த்ர சித்துமுன்வஞ்சமாய் மலர்மகன் பகழியேவ, வளர்விசப மீகாதண்ட வள்ளல்தப்பியும்

வாலி தம்பியும்மக னுமூரணிற், சாயாதவானரர்கள் யா வருஞ்சிவனிலே தவரிச்சமர்க் களத்தில், சண்டமாருத மோதவிழுமாமரங்கள்போற் சாய்வுற் றிருந்தபோதும், வியாமல்விடணன் விலக்குறவிலக்குவன் வேலேற்றுவீ ழ்ந்தபோதும், வேரோடுசஞ்சீவி மலேயினைக் கொடுவந் த வீரநின்விசயதிரம், ஆபாதமதியினே னுரைசெயுந் கையிதோ வடியவரிடத்திலன்பாய், ஆஞ்சமயமுன்னி ன்று சாஞ்சலியகீத்தருளு மாஞ்சனேயக்கடவுளே. சு

இமையவர்கணுகர்முறை கேட்குநின்செவிகளுக்கெ னதுமுறைகேட்கவிலேயோ, இன்னதீர்த்தளவிலா நன் மைதந்தாள்கருணை யெளியனேன்மீதில்லையோ, நிமை யளவதன்றிமிகுநேரமோவென்னிலே நினக்குவெகுது ரமாமோ, நீமனதுவைத்திடிற் சாமியென் றுயரெலா நீ க்குவது மொருபாரமோ, சமயமிதில்வாராத தாமதமு மென்கொலோ தக்கதுணை வேறுமுளதோ, தமியன் மேல்வர்மமோ விதுநினதுதர்மமோதடையான தென் கர்மமோ, அமைவறிகிலேன்விரைவில் வந்துதவிசெய் குவா யடியவரிடத்திலனபாய், ஆஞ்சமயமுன்னின்று சாஞ்சலிய நீத்தருளு மாஞ்சனேயக்கடவுடளே. எ

பெற்றதாய்தந்தைநீ சுற்றமொடுநம்பிநீ போருட்கு ருவுநீயே பேதமில்லாதுதவு கல்விநீநெறியினிற் பிரி

பாதபோதநீயே, நற்றவமுநீமிக்கவாமுநீ யுமுநீ நான் பெருஞ்செல்வநீயே, நாதனியாதலா லேதிலார்போல் விடுத னல்லருளினுக்குரியதோ, குற்றங்கள்பலசெய்த திட்டனுகினுமடிமை கொண்டபின் விடலாகுமோ, கு றைகொண்டிரந்திடிற் பொறைகொள்வதன்றியே கோ பங்கொள்வாருமுண்டோ, அற்றமிதில்வந்துதவிசெய் குவாயையனே யடியவரிடத்திலன்பாய், ஆஞ்சமயமு ன்னின்றுசாஞ்சலியநீத்தருளு மாஞ்சனேயக்கடவுளே.

வாதமுதன்முப்பிணியில் விளையுமெய்ப் பிணியுநினை மனதினி னினைக்குமுன்னே, வந்தவழிதெரியாமலோ டுமேபொல்லாத வஞ்சனைவகுத்தபில்லி ஏதமுறுசூனி யம் முதலானகர்மங்கள் யாவையுந்நீராகுமே, இருள னெடுமுனிகறுப் படல்வீரன்மாடனு மிடாகினியுமா காளியும், பூதவேதாளவிற லேமனுடனவலேவல் புரி கின்றகாலபடரும், பொய்யாதநின்பெய ருரைத்திடின டுங்கிவாய் பொத்தியேயோடிவிடுவார், ஆதலாநின்பெ ருமை யளிவதற்கெளியதோ வடியவரிடத்தி லன்பாய் ஆஞ்சமயமுன்னின்று சாஞ்சலியநீத்தருளு மாஞ்சனே யக்கடவுளே. கூ

மின்னருள்படைத்தவர்க் கென்னகுறையளகேச னிகரானவாழ்வுபெறுவார், நீள்பொதியமாமலையின் மாதவவகத்தியனை நேர்சொலுங்கல்விபெறுவார், மன்னவர்க்கரசரா யுயர்புகழுநிறைவான வாழ்நாளு முடையராவார், மாதருடன்மக்கள்கிளை யாலறுகு போலவே வளர்வுறப்பெற்றிருப்பார், இன்னலெனுமொழி செவி புருமலேசுக மகிழ்வில் யாவரொடும் வீற்றிருப்பார், இம்மையினு மம்மையினு மேதகையராவரெ லெளியனினைவிட்டகல்வனோ, அன்னைநிலைபானுமே பெறவருள்கவண்ணலே யடியவர்டத்தி லன்பாய், ஆஞ்சமய முன்னின்று சாஞ்சலியரீத்தருளு மாஞ்சனேயக்கடவுளே.

ஆஞ்சனேயர் தோத்திரப்பதிகம்.

முற்றிற்று.

---



ஸ்ரீ

ராமஜெயம்.

# ஸ்ரீ அநுமதோத்திரம்




இஃது—மதுரைமாநகரம் பெண்ஷன் பெட்கா

ம-ள-ள-ஸ்ரீ,

நீ. இராமலிங்கம்பிள்ளையவர்களால்

இயற்றப்பட்டு.

இவை

சிறுமணலூர்

முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910.



ஸ்ரீ

ஸ்ரீராஜெயம்.

# ஸ்ரீ அநுமதோத்திரம்.



## காப்பு.

போதகாதிபன் புன்மையைத்தீர்த்தருள்
வேதநாயகன் மெய்ப்பதம்போற்றுவாம்.



திருமலியு மார்பானைத் திகிரிசங்கந்
திரிதண்டங் கோதண்டம் வாள்கையுற்ற
மெருமாளை யாதிமூலப் பிரானென் றேத்தும்
பெருமானை யிடர்களைந்த பெம்மான் றன்னை
யிருமாயை யிடையன்ப ரிசையா தேற்கு
மீரிரண்டு புயத்தானை யென்னை யேத்து
மருமையுள்ள வனிலமைந்த வையா வாவா
வடியேனைக் காத்தருள வநும தேவே. க

மஞ்சுகுழன் மயிலையுயர் சாலையோடு
மாநிலத்தைக் கீண்டெடுத்து வானிற் சென்ற

நஞ்சனை யான் றனைநாடி வரக்கண்டஞ்சு
நாயகன்றே ரிரவிமைந்தற் காகப் போந்தே
பஞ்சனவண் ணன்கமலப் பாதம் போற்றி
யாதியந்தம் புகன்றவருக் கடிமைபூண்ட
வஞ்சனையா ளீன்றெடுத்த வையா வாவா
வடியேனைக் காத்தருள வநும தேவே. ௨

சம்பரனைத் தடிந்தகிலந் தன்னைத் தாங்குந்
தசரதன்றன் றனையனைத்தன் காவ கத்திற்
கும்பமுனி வரம்படைத்த கோமான் றன்னைக்
கோசிகனார் மகங்காத்த குமரன் றன்னைச்
சம்பிரவைத் தவிர்த்ததவப் பெருமான்றன்னைச்
சந்ததமுந் தாழ்ந்துமலர்த் தாளைப்பற்ற
வன்பகலாக் கண்மணியே யையா வாவா
வடியேனைக் காத்தருள வநும தேவே

மராமரத்தை மடித்தானை வரதன் றன்னை
மறவாமன் மறிகடலி னாடி யேத்தும்
பராவரு மெய்ப் புகழ்வாலி பலத்த மார்பைப்
பகழியொன்றிற் பிளந்தானைப் பரமன் றன்னைச்
சராசரங்க ளுயிர்க்குயிராய்ச் சான்றாய் நின்ற
தற்பரனைச் சிற்பரனைச் சங்கத் தானை

யராவயா னைப்பணியு மையா வாவா
வடியேனைக் காத்தருள வநும தேவே.

முன்னைவினை மூராலே மனது முற்றி
முனிவுற்றேன் மெலிவுற்றே னறிவில்லாமற்
பின்னை வினைப் பயன்றொடர்ந்து பேய்போ லென்னைப்
பிணித்தனவப் பிணியகற்றிற் பேரானந்தந்
தன்னையடைந் திடஞானந் தந்திப் போதே
தடுத்தாட்கொள் ளித்தருணந் தயவு தங்கு
மன்னையைப்போ லாதரிக்க வையா வாவா
வடியேனைக் காத்தருள வநும தேவே. ரு

பத்திநெறி யறியாத பாவரோடும்
பழவினையா லுளவரியாப் பழக்கமுற்றேன்
முத்திநெறி முன்னவரை முனிந்து நின்றேன்
மூர்க்கரைமே லவரென்று மொழிந்தேன் சற்றும்
புத்தியிலா னெனினுமெனைப் புறம்விடாமற்
புரந்தஞ்ஞா னமகற்றிப் போதமீந்தே
பத்தனைப்போ லாதரிக்க வையா வாவா
வடியேனைக் காத்தருள் வநுமதேவே. சு

படியளந்து பாருண்ட பகவன் றன்னைப்
பண்ணவனைப் பாம்பின்மேற் பள்ளியானை

நெடியவனை நினையார்முன் னேர்ந்தி டானை
 நீலமுகி னித்தானை நிமலன்றன்னை
முடிவிநின்ற மெய்ஞ்ஞான முதல்வன் றன்னை
 முன்னியுளத் தேதுதிக்கு மூர்த்தி சீர்த்தி
யடியனெனை யாண்டருள வையா வாவா
 வாநுருவ மானவெங்க ளநும தேவே. ௭

சீதாபி ராமனரு ளாழி சேர்த்துச்
 சென்றுதிரை கடந்திலங்கை முற்றுந் தேடி
மாதாவைக் கண்டாழி வழங்கி மன்னன்
 மாற்றமுரைத் துச்சூளா மணியை வாங்கி
மேதாவி வெவ்வரக்கர் வனத்தைச் சாய்த்து
 விறலிலங்கா பதிகண்டு மீண்டுவந்த
வாதார மானவெங்க ளையா வாவா
 வடியேனைக் காத்தருள வநுமதேவே. ௮

எத்தனையோ செனனமெடுத் திகத்தின் கண்ணே
 பிறந்துபிறந் திடழிந்தே னிரக்க மின்றிப்
பித்தனையா ரினுங்கொடிய பித்தனானேன்
 பெற்றவருஞ் சலிக்கவுடல் பெற்றே னந்தோ
புத்தெனுவன் னரகினிடைப் புகுதா வண்ணம் [ள்ள
 போற்றிசெய்தேன் [புனிதவெனைத்தடுத்தாட்கொ

வகத்திடர் தடிபணிந்த வையா வாவா
வடியேனைக் காத்தருள வநும தேவே. கூ

பங்கயன்றன் பகழியினாற் கட்டுண் டேங்கும்
பரிபவத்தைப் பறிப்பதற்குச் சம்பு வந்தர்
சங்கையின்றிச் சாற்றுமொழி மனத்துட் டேக்கிச்
சஞ்சீவிச் சயிலமொடுந் தருணம் வந்தே
துங்கமுறக் காத்தளித்த துரையே வாவா
சுகாநந்த வாரிதியென் றேன்றால் வாவா
வங்கை நெல்லிக் கனிபோல வையா வாவா
வடியேனைக் காத்தருள வநும தேவே. க0

ஆதியந்த மில்லாத தமலன் வாழி
யருமறையுந் திருமகளு மடியார் வாழி
கோதில்லா முனிசாமிக் கிளையர் வாழி
கொங்கிசைந்த கவிராம லிங்கன் வாழி
நீதிநெறி மன்னவரும் நிலமும் வாழி
நித்தமுமித் துதிகவியை நினைப்போர் வாழி
ஆதவனுஞ் சந்திரனும் யாவும் வாழி
யநுமனருட் பதாம்புயங்கள் வாழியாமே. கக

முற்றிற்று.

---

ஆக புத்தகம் - 119.

# புத்தக விளம்பரம்.



| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் | 4 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| சாதாரணபாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட்டு ஆக்ட்டு | 3 | 0 | 0 |
| கிராமமுன்சிப்கோட்போதினி | 3 | 0 | 0 |
| இந்துலா | 4 | 0 | 0 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| வேதாந்த ஜட்ஜிமெண்டு | 1 | 0 | 0 |
| கண்கட்டுவித்தை (இரண்டுபாகமும்) | 0 | 10 | 0 |
| போலீசுஆக்ட்டு | 0 | 4 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| நாரதர்கலகம் இரண்டாம்பாகம் | 0 | 4 | 0 |
| வியாசர்விபரீதம் | 0 | 4 | 0 |
| குடும்பசாஸ்திரம் எனும் சௌக்கியசாஸ்திரம் | 1 | 8 | 0 |
| நந்திவாக்கியம் இரண்டாம்பாகம் | 1 | 8 | 0 |
| மோகனசுந்தரி | 0 | 6 | 0 |
| சுந்தராங்கி | 0 | 6 | 0 |
| பங்கஜவல்லிக்கதை | 0 | 8 | 0 |
| மைனுவதிக்கதை | 0 | 12 | 0 |
| வயித்தியாமிர்தபோதினி | 0 | 10 | 0 |
| மங்களேஸ்வரீயம் | 1 | 4 | 0 |
| நௌபல் நாநக் நாநக் சுந்தர் சரித்திரம் | 1 | 8 | 0 |
| மனோரஞ்சனி | 0 | 12 | 0 |

ஸ்ரீ

ராமஜெயம்.

# ஸ்ரீ ராமர் பதிகம்.




இவை

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910

50



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.





வரவரமுநயேநமா:

# ஸ்ரீ ராமஜெயபதிகம்.

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சீர்மேவு மாழ்வார்கள் பன்னிருவருன்புகழ்செப்ப
வும் ராமஜெயமே, திருவடிக் கனபராய்ச் செல்வமு
முத்தியுஞ் சி[illegible]தி[illegible] ராமஜெயமே, கார்மேகவண்ண
னே யென்றுதிரௌபதையுமுன் காத்திட்ட ராமஜெய

மே,கரியாதிமூலமென் றோலமிடமுதலையைக்கண்டித்த ராமஜெயமே, பார்மீதிலுன்பாத தூள்பட்டெழுந்தகலி பரிவானராமஜெயமே. பாங்கானவேடன் மராமராவெனப்பதவி பரிந்திட்ட ராமஜெயமே, ஆர்த்தானுரைக்க வறி வாருர்தனுமத்தை யனுதினமும் ராமஜெயமே, ஐயனேயெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநுஜாய நமவே. க

கிஞ்சுகாரணியவன ரிஷிகளுக்காதரவு மேவிடும் ராமஜெயமே, மேலானதசரதன் மைந்தனுய்ப்புவிதனில் விரைந்திடும்ராமஜெயமே, செஞ்சொன்மொழிஜனக ராசன்வில்லொடித்துச் செயம்பெற்றராமஜெயமே, சீதைக்கிரண்டுவாங் கொடுத்துமே யயோத்தியில் சீர்பெற்ற ராமஜெயமே, தஞ்சமென்றனுமன் தனக்குச்சிரஞ்சீவி தந்திட்ட ராமஜெபமே, தந்தைக் குரைத்த சொல் வழுவாதுதரணியில் தரித்தருளும் ராமஜெயமே, அஞ்சலென்றடியேனை யாதரித்துன்பாத மருள் செய்யும் ராமஜெயமே, ஐயனேயெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநுஜாயநமவே. உ

விண்ணொளியதாகவேநந்தகோபன்மனையில்விளையாடும் ராமஜெயமே, வில்விஜயனுக்குபக வற்கீதை

யோதியே வெற்றிதரும் ராமஜெயமே, கண்ணொளிய தாகவே யன்புடன் சேவைகளை சாத்ததும் ராமஜெயமே, கஞ்சனைவதைத்துடல் கிழித்தெரிந் தனைவர்க்கு ங் காட்சிதரும் ராமஜெயமே, கன்றெனஞானைப்பாய்ந்து குடலைக்கிழித்துமறை கொண்டுவரும் ராமஜெயமே, கொன்றவன்றசரதன் பெற்றசீர்மைந்தனே கோவிந்தராமஜெயமே, அண்ணலேயுனதுதிரு வடியார்கள்பங்கினி லமர்ந்தருளும் ராமஜெயமே, ஐயனேயெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநுஜாயநமவே. ௩.

உற்றமிதிலைப்பதியில் வில்லிரண்டாகவே யொடித்தும்ராமஜெயமே, உம்பர்தொழுமங்கையை யுணர்ந்துதிருமந்திர முவந்தருளும்ராமஜெயமே, கொற்றவர்கள் கண்டுதொழ பரசுராமன்கையில் கொண்டதும் ராமஜெயமே, கோதண்ட வாள்கதா சங்கு சக்ராயுத கோபால ராமஜெயமே, மெத்தவருமூலபல மத்தனையுமேகொன்று வெற்றிபெறும்ராமஜெயமே, மெலிவுற்றசுக்கிரீ வனுக்காகவாலியை வீழ்வித்த ராமஜெயமே அத்தனே யெனையாளும் கர்த்தனேமெய்ஞ்ஞான மருள்புரியும் ராமஜெயமே, ஐயனே யெனையாளு மெய்யனே ஸ்ரீமதேராமாநுஜாயநமவே. ௪

சோதியேயென்றுமறை வேதியர்களோதவுஞ்சொல்லரிய ராமஜெயமே, சோம்புடனேவந்த விபீஷணன் குறைதீர்க்கத் தோன்றிடும் ராமஜெயமே, ஊதியேகுழலிஞ லேகளத்தளவிலே யுகந்ததும் ராமஜெயமே, உயர்கருடன்மீதினி லிலட்சுமிசமேதனு யுலாவிவரும் ராமஜெயமே, நித்தனுயத்தனுய்ச் சுத்தனுய் வைகுந்த நிலைகொண்ட ராமஜெயமே, ஆதியேயின்னும மோதுவோர்க் கென்னாளு மருள்புரியும் ராமஜெயமே, ஐயனே யெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநுஜாய நமவே. ரு

மண்டலம்புகழவே வசுதேவன்மைந்தனுய்வந்தருளும் ராமஜெயமே, மாயாவதாரமாய் கோபஸ்திரிமாரெலா மபல்பூண்ட ராமஜெயமே, விண்டலர் புகழ்திருப் பதிகனூற்றெட்டிலும் விளங்கினதும் ராமஜெயமே, வேதவேதாந்தபரி பூரணதயாபர மெஞ்ஞான ராமஜெயமே, கொண்டல்மணிவண்ணனுய் பாற்கடலிலேபள்ளி கொண்டதும்ராமஜெயமே, கோடானுகோடிபேர் பல்லாண்டுகூறியே கொண்டாடும் ராமஜெயமே, அண்டர்தினமேதொழும் புண்டரீக பாதனே யரும்பொருளும் ராமஜெயமே, ஐயனே யெனையாளு மெய்யனேஸ்ரீமதே ராமாநுஜாயநமவே. சு

முப்பத்துமுக்கோடி தேவருமுனிவரும் மொழிகி ன்றராமஜெயமே, மூவரும்ராமஜெயமே யென்றுரை க்கநன் முத்திதரும்ராமஜெயமே, செப்பமந்திரமெலா ம் ராமஜெயமேமார்பில் திருவளரும் ராமஜெயமே, சீர்கொண்டராமஜெய மார்கண்டுபணிகுவார் சித்திர வொளிராமஜெயமே, ஒப்பரியராமஜெய மெய்ப்பொ ருளும்ராமஜெயம் ஓதரியராமஜெயமே, உட்சதரும் ராமஜெயம் ப்ட்சந்தருராமஜெயம் ஓங்கார ராமஜெய மே, ஒளிவுபெற்றேங்கி நளினபொற்பாதமரு ளப்ப னே ராமஜெயமே, ஐயனேயெனையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநுஜாயநமவே. எ

சத்தியும்ராமஜெயமுத்தியும்ராமஜெயஞ்சர்வமும் ராமஜெயமே, சாத்திரமும்ராமஜெயம் தோத்திரமுமி ராமஜெயஞ் சதுர்வேத மிராமஜெயமே, பத்தியும்ராம ஜெயம் சித்தியும்ராமஜெயம் பதவியும் ராமஜெயமே, பத்தர்தொழும் ராமஜெயம் பலவிதமும் ராமஜெயம் பட்சமருள் ராமஜெயமே, வெற்றியும்ராமஜெயம் புத் தியும் ராமஜெயம் மெய்ப்பொருளும் ராமஜெயமே, வேள்வியும் ராமஜெயம் ஆவியும்ராமஜெயம் மேல்விடு ராமஜெயமே, அத்திமேல்யவனிவரு நித்தியகல்யாண

னே ஆனந்தராமஜெயமே, ஐயனேயென்னையாளு மெய்ய
னே ஸ்ரீமதே ராமாநுஜாயநமவே. ௮

பாடவறியேன்ராம ஜெயமென் றுனின்புகழ் புகாறி
யேன் ராமஜெயமே, பத்திபாய்ராமஜெய மென்றுன
துப்ரதமலர் பணியறியேன் ராமஜெயமே, தேடவறி
யேனின்னை ராமஜெயமேயென்று செப்பறியேன்ராம
ஜெயமே, தேவர்க்கும்யாவர்க்கு மரிதானதேவனேதே
னமிர்தராமஜெயமே, நாடவறியேனின்னை ராமஜெய
மே யென்று நவிலவறியேன் ராமஜெயமே, நாயேனுன
க்கடிமையானேனெனக்குகதி நல்குவாய்ராமஜெயமே,
மூடவாமுண்டபல கோடிபேருண்டபொரு ளானந்த
ராமஜெயமே, ஐயனேயென்னையாளு மெய்யனேஸ்ரீமதே
ராமாநுஜாயநமவே. ௯

விரிவாயகண்டபரிபூரணமுமாயெங்கும்விளையாடு
கின்றஜோதி, விண்ணவர்க்கமுதளித் தண்ணலே யுன்
புகழ் விளம்புதற்கரிதுகண்டாய், தெரியாமல் நாயே
னிடர்க்கடலிலே மூழ்கி சிந்தைமிக நொந்துருகினேன்,
தேவாதிதேவனே வைகுந்த வாசனே செந்தாமரைக்
கண்ணனே பரிவானவுனது திருவடியாமெனக்குகாபர
மபுருஷா வுனக்கு, பாரமோ தயர்களைய நேரமோ

விவ்வேளை பட்சம்வைத் தடியன்மீதில், அரியேநமோ வேதநாராயணாகிருபை அருள்புரியும் ராமஜெயமே, ஐயனே யென்னையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநுஜா யநமவே. ௰

சீர்கொண்ட ராமஜபமென்றுதிருமந்திரஞ்செபிக்கவறியாமனுயேன், செப்பினேன் ராமஜெய மப்பனே நூற்றெட்டு திருநாமமிராமஜெயமே, நீர்கொண்டபார்மிசை மலர்கொண்டு சாத்தியே நித்தமுமிராமஜெபமே, நெஞ்சினிலிராமஜெய மந்திரமுவந்தருளும் நீங்காமல் ராமஜெயமே, கார்கொண்ட திருமேனிராமஜெயமே யென்னை காத்தருளும் ராமஜெபமே, காதலால் ராமஜெயமேயென்றுநம்பினேன்கர்த்தனே ராமஜெயமே. ஆர்கண்டுமறியாத மூலமந்திரமான வாதியோராமஜெபமே, ஐயனேயென்னையாளு மெய்யனே ஸ்ரீமதே ராமாநுஜாயநமவே

ஸ்ரீராமர்பதிகம்-முற்றிற்று,



உ

ஸ்ரீராமஜெயம்

# கேசவப்பெருமாள் பதிகம்.

---



இஃது

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

---

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# கேசவப்பெருமாள் பதிகம்.

## சடகோபர் துதி—வெண்பா.

ஓரார்தவமுனிவர் சேர்கான்பரியூர்வாழ்
ஏராருங்கேசவன்ற னிணையடியிற்—பேரார்
திடமாகவோர்பதிகஞ் சிந்தையுடன்செப்பச்
சடகோபனேயருணீ தா.

## ஆசிரியவிருத்தம்

திருமணிவிமைக்கு மகுடசேகரமுந் திருவருட் பொழியு நேத்திரமுந், தெருளணிமதியை யனையமா முகமுஞ் செப்புதற்கரியசெங்கரமும், மருவியவேதச் சிலம்பொலிபதமும் வறியனேன்காணவந் தருள்வாய், கெருடவாகனனே கான்பரியூர்வாழ் கேசவாமாசிலா மணியே. க

தஞ்சமென்றடைந்த கஜேந்திரனிடுக்கண் தவிர்த்திடவில்லையாமுன்ன, மஞ்சிடாதுயரும் கிரிதனைத்தூக்கி யாயரைக் காத்திடவிலையா, வஞ்சனையில்லாதென்றனைக்காக்க மனமிரங்காவித மென்னோ, கிஞ்சுகமுலவும் கான்பரியூர்வாழ் கேசவமாசிலாமணியே. உ

கொடுமைசெய் பதுமா சூரனைப்பெரித்தகொண்டல்வண்ணா வுனக்குகந்த, அடிமையென் றெண்ணாதிருந்திடிலுன்னை யனைவரும் வைகுவாரன்றோ, நெடுகிலுங்கவலை கொள்ளுமென்பவத்தை நீக்கி யாண்டிடுவதுன்கடனாம் கெடுமையில்லாத கான்பரியூர்வாழ் கேசவமாசிலாமணியே. ௩

மருமலர்குழலிற் சொருகுமின் மடவார் மயில்வலைப்பட்டகமகிழ்ந்து, பொருடனையுலவி லீட்டிநின்றிவ்வ பொற்பதத்துணையினை மறந்து, கருங்கடற்றுரும்புபோலலைந்திடுமிக் கடையனைக் காத்தருள் புரிவாய், இருதசை வளரும் கான்பரியூர்வாழ் கேசவ மாசிலாமணியே. ௪

அரிகரிவீரராகவாவேத வாதிநாராயணா முகுந்தா, கரிவரதாகோபாலகோவிந்தா கர்த்தனேமாயவா

வுன்றன், விரிமலரடியைத் துதித்திடவறியா வினைய னேன்றன்னை யாள்குவையே, கிரிவளர்ந்தோங்குங் கான்பரியூர்வாழ கேசவமாசிலாமணியே ௫

சுரந்தலைவலிகா மாலைவெண்குட்டஞ் சோகைநீ ரிழிவு விப்புருதி, யுரம்பெறுபேய்சூ னியமுதலியாவு முன்றிருச் சன்னிதிகாணப், பரிதியைக்கண்ட பனி யெனவகலும் பகரவுன்மகிமையென் றரமோ, சிரணமா மதில்சூழ் கான்பரி யூர்வாழ் கேசவ மாசிலா மணியே.

தந்தைசொன்மிக்க மந்திரமிலெனச்சாற்றியமொ ழிதனையகற்றி, யந்தநற்பிரக லாதனைக்காத்த வருணார சிங்கமேயரசே, எந்தையேயடியே னினிப்பிறவாமலிரு ந்திடநீயருள்புரிவாய், கொந்துவானரஞ்சூழ் கான்பரி யூர்வாழ் கேசவமாசிலாமணியே. ௭

ஒன்றிரண்டலவே யென்குறையெழுத வோலையி லடங்கிடாதந்தோ. வின்றுசன்னிதிமுன் னிருந்துசேய் கதற வெங்குவந்தாயுனக்கென்ன, வென்றுகேளாமலி ருந்திடின்முனமிவ் வேழையேன் செய்தவப்பயனோ,இ ன்னரர்துதிக்குங் கான்பரியூர்வாழ் கேசவ மாசிலாம ணியே. ௮

ஒளிருநெய்யுந்தண் டிருத்துழாயுங்கொண் டலகு ளோர் வினைகளையோட்டத், தெளிவுடன் வழங்கி வரு வதைக்கேட்டுத் தேடியான் வந்துநின்றேனுன், னளிரு றுகமலக் கடைக்கணுனேக்கி நல்லரு ளீந்திடிற் பெரி தோ, கிளரனமுலவுங் கான்பரியூர்வாழ் சேசவமாசிலா மணியே, கூ

என்ன தீவினையைப் புரிந்தனனந்தோ வேழை யேனின்னதென்றறியேன், பன்னுருமுனது மலர்ப்பத நாளும் பணியுமென் மனக்குறையகற்ற, வின்னிலத்தே வந் தருள்புரியாம லிருப்பதுன் சீர்க்கழகாமோ, கின் னரிமுழங்குங் கான்பரியூர்வாழ் கேசவமாசிலாமணியே.

அற்புதவிபூஷணற்கு முன்பயமளித்த வைகுந்த வாசாநின், பொற்புறுமலர்த்தா டுதிக்கவுநாவிற்பொரு ந்திடக் கல்வியும்புகழுஞ், சற்பனரிணக்கமும்பெருநிதி யுந் தமியனுக்கீந்து காத்தளிப்பாய், கெற்பகந்துகள்சூ ழ் கான்பரி யூர்வாழ் கேசவ மாசிலாமணியே. டுக

பதிகம்—முற்றிற்று.



## கீர்த்தனம்.

இ-ம்-நாதநாமக்கிரியை-தாளம்-ரூபகம்

பல்லவி.

இதுநல்லசமையம்—அருள்ரிஷிகேசவா
இதுநல்லசமையம்.

அநுபல்லவி.

பதியினிற்சிறந்தகான் பரியூரிலெங்நாளும்
பாசமுடனமருங் கேசவனேநீவா இது

சரணங்கள்.

தொண்டர்கட்குச்சிறு தொண்டனென்றெண்ணிஎன்
பண்டைவினையகற்றிப் பாலனேகாக்கவே இது

தாயிலாப்பிள்ளைபோற் றளர்ந்தழுதேங்குமிச்
சேயின்குறையகற்றி திருவருள்செய்யவே இது

அருடருந்தெய்வமென் றருமறைதுதிப்போனே
யிருளையகற்றியிவ் வேழையைக்காக்கவே இது

மாதர்வலையிற்சிக்கி மயங்கிவீழாமலுன்
பாதத்தைநாடோறும் பணிந்திடவாஞ்சா இது

சுற்றிவந்துன்றனை நித்தந்துதிசெய்யும்
பத்தனும்ராஜகோ பாலனுக்கருள்செய்ய இது

கீர்த்தனம்—முற்றிற்று

---

# புத்தக விளம்பரம்.



| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுற்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் | 4 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| சாதாரணபாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி | 3 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட்டு ஆக்ட்டு | 3 | 0 | 0 |
| கிராமமுன்சிப்கோட்போதினி | 3 | 0 | 0 |
| இந்துலா | 4 | 0 | 0 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| வேதாந்த ஜட்ஜிமெண்டு | 1 | 0 | 0 |
| கண்கட்டுவித்தை (இரண்டுபாகமும்) | 0 | 10 | 0 |
| போலீசுஆக்ட்டு | 0 | 4 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| நாரதர்கலகம் இரண்டாம்பாகம் | 0 | 4 | 0 |
| வியாசர்விபரீதம் | 0 | 4 | 0 |
| குடும்பசாஸ்திரம் எனும் சௌக்கியசாஸ்திரம் | 1 | 8 | 0 |
| நந்திவாக்கியம் இரண்டாம்பாகம் | 1 | 8 | 0 |
| மோகனசுந்தரி | 0 | 6 | 0 |
| சுந்தராங்கி | 0 | 6 | 0 |
| பங்கஜவல்லிக்கதை | 0 | 8 | 0 |
| மைமுருவதிகதை | 0 | 12 | 0 |
| வித்தியாமிர்தபோதினி | 0 | 10 | 0 |
| மங்களேஸ்வரீயம் | 1 | 4 | 0 |
| நௌபல் நாநக் நாநக் சுந்தர் சரித்திரம் | 1 | 8 | 0 |
| [illegible]ரேஞ்சனி | 0 | 12 | 0 |

உ

ஸ்ரீராமஜெயம்

பரமபாகவதரிலொருவர்

சாதித்தருளிய

# திருநாமப்பதிகம்.

---



இஃது

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

---

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1911.

51



ஸ்ரீமதேராமாநுஜாயநம:

ஸ்ரீ வரவரமுநயேநம:

# நித்யாநுசந்தானம்.

---

ஸ்ரீசைலேசதயாபாத்ரம்-தீபக்த்யாதிகுணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்
லக்ஷ்மீநாதஸமாரம்பாம்-நாதயாமுநமத்யமாம்
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்
யோநித்யமச்யுத பதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாயமேநே
அஸ்மத்குரோர்ப்பகவதோஸ்யதயைகஸிந்தோ:
ராமாநுஜஸ்யசரணௌ சரணம்ப்ரபத்யே.

மாதாபிதாயுவதயஸ்தநயா விபூதி
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம்
ஆத்யஸ்யந:குலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமிமூர்த்நா

பூதம்ஸரச்சமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹான்
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம்ப்ரணதோஸ்மிநித்யம்.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.



ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# தனியன்.

---

குருமுகமநதீத்யப்ராஹவேதாநசேஷான்
நரபதிபரிக்லிப்தம்கல்கமாதாதுகாம்
ஸ்வசுரமமரவந்தயம்ரங்கநாதஸ்யஸாக்ஷா
த்விஜகுலதிலகந்தமவிஷ்ணுசித்தம்நமாமி,

நேரிசை வெண்பா.

மின்னார்தடமதில்சூழ் வில்லிபுத்தூரென்றொருகால்
சொன்னார்கழற்கமலஞ் சூடினோம்-முன்னாள்
கிழியறுத்தானென் றுரைத்தோங்கீழ்மையினிச்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

பாண்டியன்கொண்டாடப் பட்டர்பிரான்வந்தானென்
றீண்டியசங்க மெடுத்தூத-வேண்டிய
வேதங்களோதி விரைந்துகிழியறுத்தான்
பாதங்கள் யாமுடைய பற்று.

பெரியாழ்வார்-திருவடிகளேசரணம்

---



ஸ்ரீராமஜெயம்.

# திருநாமப்பதிகம்.

---

பன்னிருசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஆதிபரஞ்சோதியா யண்டபகிரண்டமாயநாதியா
ய்நின்றநாமம், அடிமுடியினடுவாகி யெளியவன் களி
கூர வன்புவைத்திருந்தநாமம், நீதிநெறியாகவே மணி
பூரகந்தனி னிலையாக நின்றநாமம், நேசமுடனேகருட
வாகனமீதேறிய நின்றவிளையாடுநாமம், வீதிவெளியா
கவே யுச்சிமலைமிதினில் விளக்கொளியினின்றநாமம்,
மேலாம்பதத்தையு நாலாம்பதத்தையும் விளங்கக்கொடு
க்குநாமம், நாதாந்தபேரொளியதாகவேவிளங்கிடுநமோ
நமோவென்றநாமம், நாராயணஹரி கோவிந்தவென்று
தினநாடிவரு திருநாமமே. ௧

அரிநமோவென்றுரைப்போர்க்குமே பாண்டவர்
க்குருவாகிநின்றநாமம், அருச்சுனற்காகவே கதிரிலம
ரைத்துநல் லரசுநிலைவைத்தநாமம், பரிவான கிருஷ்
ணவ தாரத்திற்பூதகி பருசதடலையுண்டநாமம், பாரி
னில்கல்லினை மிதித்தாப்பெண்ணாகவே பண்பருள்புரி
ந்தநாமம், திருமேவுபிரகலா தன்றனக்கந்ர சிங்கமுக
மானநாமம், தேவாதிதேவரை யிடுக்கண்வைத்தோர்க
ளைத் திறைகொண்டிருந்தநாமம், கருவாகியுருவாகிதிரு
வாகிமுருவாகிக் காட்சிதந்திட்டநாமம், கரியீசபிரகாச
திருநேசபரவாச கருணைதருதிருநாமமே. ௨

முன்னாளிலேசிவன் றிருக்கைவிற்பாணமாய் முப்புரமெரித்தநாமம், முதலைவாய்சிக்கிய மதகரிக்கன்னாளின் மூலமாய்நின்றநாமம, பொன்னானருக்மணிதேவிக்வியாணத்திற் போராய்த் தலைந்தநாமம், பூஷ்பசாகபில்லி சூனியமுதல்யாவுமே பொய்யாக்கிவிட்டநாமம், சின்னபின்னங்களாய் இராவணன்சிரசினை திடமுடனரிந்தநாமம், சிறஞ்சீவியாகவே விபீஷணன்றனக்குமேஜெயப்பட்டமீந்தநாமம், கன்னியவ தாகவேகருணாசமுத்திரத்திற் காட்சிதந்தருளுநாமம், கரியிசபிரகாசதிருநேசபரவாச கருணைதருதிருநாமமே. ங

எண்ணிரண்டாயிர மிடையர்தம்மாதருக்கிறையாயிருந்தநாமம், இகலோகபரலோக சொர்க்கலோகமுமுத லோகமாய்நின்றநாமம், மண்ணுக்கும் விண்ணுக்குமொன்றான மாவலியை வன்சிறையில்வைத்தநாமம், மராமாவமொருகணையிலுருவவேதொட்டன்றுவாலியைவதைத்தநாமம், ஒன்றிற்குமைந்திற்கு முண்மையதுவேயாக வுந்தியிலுதித்தநாமம், ஓம்நமோ நாராயணபரந்தாமாவென வேதவேதின்றநாமம், கண்ணுக்குநாசிக்கு நடுவாகவேநின்று காட்சியேதந்தநாமம், கரியீசபிறகாச திருநேசபரவாச கருணைதருதிருநாமமே,

சிலைதனைவளைத்தபின் ஜனகனன்மகளான சீதை யைமணந்தநாமம், திருவரங்கேசனுய்க் காவேரிவாச ராய்த் திருச்சனனமானநாமம், கலையினிவிரிந்திட்ட பாண்டவர்கள் மனைவிக்குக் கருணைதந்திட்ட நாமம், காவிகடிரண்டிக்கானகந்தனிலே காவலாய்நின்றநாம ம்,மலைதனைசுமந்தன்று கோக்களின்மாளாமல் வருண னைத்தடுத்தநாமம், மாரீசன்பின்னே திரிந்துபிருகூராக மானையேயெய்தநாமம், நிலையாதசூரனை வராகவவதார மாய்நின்றன்றுகொன்றநாமம்,நீலமேகத்தைநிகர் காயா ம்பூவண்ணனெனு நெடியவன்திருநாமமே.

சாலோகசாமீப சாரூபமாகவே சாயுச்சியமானநா மம்,சகலகலைவேதப் புராணங்களுக்கெலாம் தயாபரம மானநாமம், பூலோகபுவலோக பாதாளமீதிலேபுண்ணி தானநாமம், புவனமதுதன்னிலே நாலாறதெனன யமளித்தநாமம், புவனமதுதன்னிலே நாலாறதென்ன வேபுரானகலையானநாமம்,ஆலோலமாகவேயண்டங்களா பிரத்தெட்டா யளந்தநாமம், அங்குளோ ரிங்குளோ ராகவேயாவர்க்குமறிவிக்க வந்தநாமம், பரலோகமாக வேபன்னகா சயனத்திற் பள்ளிகொண்டிட்ட நாமம், பரவாச குருவீச திருநேச பிரகாச பகவனது திரு நாமமே.

சுழியானமுனையிலே சூட்சாதிசூட்சமாய் சொல்லியேநின்றநாமம், சொல்காவியங்களுக் குபசாரமாகவே சொல்விக்கவந்தநாமம், வெளியானவெளியிலே மேலானவீட்டிலே மீதங்கிருந்தநாமம், வித்தாரமாகவே யுத்தாரமோகவே வித்தாரமானநாமம், ஒழியாத தேகமெடுத்தாலுமுன்செயலுதவியாய்நின்றநாமம், உள்ளூற்றசோதியாய் வெள்ளூற்றகாதலா யுள்ளத்தினின்றநாமம், அழியாதபதவியை யீந்தெனையெந்நாளுநன்மைகொண்டிட்டநாமம், ஹரிநமோ நாராயணாவென்றுரைப்பவர்க் கரியபெரு திருநாமமே. எ

நயனுந்தன் பாதமுஞ் சேத்துமம்வருகாலைத் தற்காத்தருள்செய்நாமம், சுந்திரன்செல்வாழ்வு தொலையாதபாக்கியஞ் சார்ந்துரட்சிக்குநாமம், தேனந்தமாகவே திருநாமபோதந் தெரிசிக்கவந்தநாமம், திருவவதாரமாய்த் தாசானுதாசனாய் செகதலம்பரவு நாமம், ஆனந்தமாகவே ஓங்காரவடிவமாய் யுள்ளுருகிநின்றநாமம், உல்லாசமாகவே மூவகைத்தோத்திரமு முயிராகிநின்றநாமம், ஆனந்தமாகவேயணுவுக்குமணுவாகியசைவற்றிருந்தநாமம், ஹரிநமோ நாராயணாவென்றுரைப்பவர்க் கரியபெரு திருநாமமே. அ

செய்யாதபாவங்கள் செய்தாலுநீக்கிடுஞ் ஸ்ரீராம வென்றநாமம், தீராதவல்பிணிகள் மாறுததின்பங்கடை ர்த்திரட்சிக்குந்நாமம், பொய்யானகாமப் பெருங்கடல் வீழ்த்தாது புன்பிறவிதீர்க்குநாமம், புண்டரீகாட்ச னைக்கண்டுசேவிக்கவே புன்முறுவல்செய்யுநாமம், மெ ய்யானகிருபைதரு வைகுந்தவாழ்வினை வீறுயளிக்கு நாமம், மெய்ஞ்ஞானவழிதந்தே யஞ்ஞானம்நீக்கியே மேன்மைதனையீயுநாமம், ஐயாமலேதினமு நம்பினே னென்றவரைநாடிரட்சிக்குநாமம், நாராயணுஹரிகோ விந்தாவென்று நாடிவருதிருநாமமே. சு

ஸ்ரீங்காரமாகவே நூற்றெண்டிருப்பதிசிறந்தோங் கிநின்றநாமம், தினந்தினம்பிரமாவென் றுரைப்பவர்கள் சிந்தையுட் சிறப்புற்றிருக்குநாமம், நீங்காமலென்னு ளுமதிக்கதிர்விளக்கமாய் நிரம்பியேநின்றநாமம், நிச நித்தியமானதொரு பாசத்தியவாசமாய் நிறைவுற்றி ருந்தநாமம், பாங்கானபேருடன் வாங்காமலே தினம் பண்பினைக்கொண்டநாமம், பச்சைமாலச்சுதா னந்த கோவிந்தனெனப் பகருதற்கரியநாமம், அங்காரமாக வே திருநாமமாலையி லன்புவைத்திருந்தநாமம், ஹரி நமோ நாராயணுவென் றுரைப்பவர்க் கரியபெருதிரு நாமமே. ௰

திருநாமப்பதிகம்—முற்றிற்று.

---

ஸ்ரீராமஜெயம்.





திருவல்லிக்கேணி

# பார்த்தசாரதிபெருமாள்பேரில்

ஆசிரிய விருத்தம்.

---

ஆதியாய்நின்றதோ ரண்ணலேகண்ணனே யண்டர்கட் கமுதளித்தாய், அனந்தகோவிந்த மாதவா துளவமல ரணிகேசவா முகுந்தா, நீதியாய்நின்றதாசர்க்குவரமீந்திடும் நிட்கள பதுமநாபா, நீலவண்ணா ஹரி வைகுந்தவாசனே நிறைந்தகல்யாணலீலா, சோதியே யமரர்துதி செய்திடும் பாதனே துய்யனே பரந்தாமனே, சுத்தனே கர்த்தனே பத்தர்கண்மனதிற் றுலங்கிடுமாதிமூர்த்தி, பாரதிமகி தனையணியும் பரனமர்கூரனேபகர் திருவல்லிக் கேணிவாழ், பங்கயக் கண்ணா ருக்மணிதேவி நேயனே பார்த்தசாரதி மாயனே ௧

மச்சியா கூருமா வராகநரசிங்க வாமனா பரசுரா
மா மங்கையாஞ் சீதைபிட துங்கரகுராமா பாலகிருஷ்
ணா கற்கியே வச்ரகோதண்டமணிகையனே துய்யனே
மாவலியை சிறையில்வைத்த, மாதவாபலகோடி சூரிய
பிரகாசனே மகாவசுரர் குலமறுத்தாய், தற்சொருபமா
கி வந்தெனைக்காத்தவா சங்குசக்கரமேந்திடும், தறபார
கோவர்த்தனகிரியேந்தியாயரொடு சகலபசுநிரைகள்காத்
தாய், பச்சையாலிலையின்மேற்றுயில்கொண்டவா மறை
கள் பகர்திருவல்லிக்கேணிவாழ், பங்கயக் கண் ணுருக்
குமணிதேவி நேயனே பார்த்தசாரதிமாயனே. ௨

எட்டென் றிரண்டென் றுமறியாத சிறியனேனெ
ன்ன பிழை செய்தாலுநீ, எல்லாம் பொறுத்துநின்கரு
ணை கூர்ந்தடியேனை யாளுவாயேழை பங்கா, வட்டவா
ரிதியுலகி லுனையன் றிவேறுதவி மதுசூதனா வறிகிலேன்
வாசுதேவானந்த கோபாலமைந்தனே மன்மதனையீன்ற
சோதி, துஷ்டநிக்கரகனே சிஷ்டபரிபாலனே துணையா
க நின்றபொருளே, தொண்டர்கள் பணிந்திடுமூலாச
னே தசரதன் தய்யமகனாயயோத்திப், பட்டந்தரித்து
லகையாண்டிடும்பரமனே பகர்திருவல்லிக்கேணிவாழ்.
பங்கயக்கண் ணுருக்மணிதேவி நேயனே பார்த்தசாரதி
மாயனே. ௩

தீரனாந் தசரதன் வயிற்றிற் பிறந்துபின் சீதையை
மணப்புணர்ந்து, ஸ்ரீராமரயோத்தியில் வந்துதாய்சொ
ற்படித் தண்டகாரணியமேவி, சார்வானமுனிவருக்கப

பவஸ்தமதிந்து சதுவாலிதனைவதைத்தாத், தக்ஷணஞ்
சுக்ரீ வனுக்கரசுதந்துபின் சாகரத் தனைகட்டியே, பே
ராத கொடுமையு மிராவணனையும்படை தனைமாளவே
றுத்துப், பெருவிபூஷணனுக்கு லங்கைதனதேமலர் பெ
ண்ணுடனயோத்தி வந்து, பார்தனைமுடிசூடி யாண்ட
ஸ்ரீராமனே பகர்திருவல்லிக்கேணிவாழ், பங்கயக் கண்
ணுருக் மணிதேவிநேயனே பார்த்தசாரதிமாயனே. ௪

முத்துநவரத்னமணி வைத்திழைத்த கிரீட முடி
மீதுசோதிமின்ன, முழுமதி முகத்திளிற் றிருநாமமின்
னவே முன்கைபிற்சங்கமின்ன, சுத்ததிருமேனியில்வ
ச்ரக்கபாயினொடு துலங்குமாரங்கண்மின்னத், துளவ
மாலைகளொடு பதக்கங் கணமின்னவிரு தோளில்புஜகீர்
த்திமின்ன, சத்தசாகரவுலகும் வைத்தவயிறதன்மீது
சகஸ்திரதளமாலைமின்னந், தஞ்சமென்றோர்களுக்கஞ்
சலெனவந்தருள் சக்ரகரமெய்ப்ரதாபா, கர்த்தர்கள் ப
ணிகின்ற பதமலரொணக்குநீர் பகர்திருவலிக்கேணிவாழ்
பங்கயக்கண்ருக் மணிதேவிநேயனே பார்த்தசாரதிமா
யனே. ௫

அன்னங்கள்போல்மாத ராடலும்பாடலு மனேக
விதவாத்தியங்களும், அண்டர்கள்செவிடுபட தேவகோ
ஷ்டங்களும் அடியார்கடொழுதேத்தலும், சின்னங்கள்
பூத்தபோ லேணிப்பந்தங்களுந் திவுசு தினிசாம் பந்தமு
ம், சித்ரபாணங்களும்புருசுமுதல்வெடிகளுஞ்சிறக்க எ

த்தாப்பிலங்க, உந்நதக்கவரிளால் வட்டங்குடைகளொ
ளிர்மதியெனப்பிடிக்க, ஒங்குகருடாதியர்மேற்பவனிவ
ந்திடுமுல்லாசமென்ன சொல்லுவேன், பன்னுதமி ழா
ழ்வார்கள் பன்னிருவர் பாடலும் பகர்திருவலிக்கேணி
வாழ், பங்கயக்கண்ணுருக் மணிதேவிநேயனே பார்த்
தசாரதிமாயனே. ௬

சல்லாகிலுங்கரையுமெனதுமன முன்றன்மேகரை
யா திருந்ததென்னே, கபடமோவஞ்சனைக காரணம
தோவெனைக் காக்கவுங் கடமையிலையோ, பொல்லாத
வரியனேனெனைச் சூழ்ந்து மேற் போராடுதென்னசெ
ய்வேன், போற்றினேனென துகளி தீர்த்தாண்டுகொள
ல்வேண்டும் புருஷோத்தமாநிசங்காண், சல்லாப மாக
வே சகலசெளபாக்கியமுந் தந்திடுந்தருமமூர்த்தி, சா
லோகசாமீப சாரூபசாயுச்ய தற்பரா வுன்னையானும்,
பல்லாண்டு பல்லாண்டு பாடினேன் பகர்திருவலிக்கே
ணிவாழ், பங்கயக்கண் ணுருக் மணிதேவி நேயனேபா
ர்த்தசாரதிமாயனே. ௭

கஞ்சமென்றுன்பாதம் நெஞ்சில்வைத் திடுமெ
னைச்சற்றுமருள்செய்யாததென், கருமமோவதுவுமென்
கருமமோ விப்படித் தவிக்கவிடு வதுநீதியோ, வஞ்ச
னைகளோவுனது நெஞ்சிரங்காததோ மதியிலேன்சதியு
மிதுவோ, மைந்தனைப் பெற்றோர் வளர்த்திடுவதில்லை
யோ வாதி ரன்செய்யலாமோ, கஞ்சனையுதைத்துகா
ளியன் மேனடித்தவெங் காரணபாரணக்கண்ணமலர்
னே வண்ணனே பன்னகச் சயனனே க,த ராயாவின்வ

ண்ணனே, பஞ்சமார்தமக்குதவு பாரதமுடித்த பின் பக
ர்திருவலிக்கேணிவாழ். பங்கயக் கண்ணுருக் மணிதே
விநேயனே பார்த்தசாரதிமாயனே. அ

தேவதேவாநமோ நாராயணு சால ஜெகநிவாசா
பொன்னிசூழ், ஸ்ரீரங்கதாமனே சாரங்கவாமனேசெல்
வாசனுர்த்தனவெனக், கூவினேனுனது திருநாமகீர்த்த
னமெலாங் கொண்டுநின் பாதகமலக், குற்றேவல்செய
வெனது கொடுவினைகளொந்துநிலை குளிர்நோக்கியென்
னையாள்வாய், தாவில்சீர்த்தூணதிற் றோன்றுமரிமூர்த்
தியே தருணமிது தருணமிதுவே, சச்சிதானந்தனே
மெச்சுகோவிந்தனே சாயுச்ய வைகுந்தனே, பாவலர்க
ள்பாடவுட னடியார்முன் றோன்றுவாய் பகர்திருவலிக்
கேணிவாழ், பங்கயக் கண்ணுருக் மணிதேவி நேயனே
பார்த்தசாரதிமாயனே. கூ

தந்தைநீதாயுநீ சகலமுந்தந்திடுஞ் சற்குருவுநீமன
மூநீ, சகவுறவுமுறையுநீ சாதனப்பெருருளுநீ சத்துவ
மூநீ பத்திநீ, எநதன்மீதிரங்கி ரட்சிக்குமெய்க்கடவுநீ
எமதுகுல தெய்வமுமநீ, எப்பொருளும் நீமோக்ஷகார
ணனு நீயவனையெனையின் றிடுப்பாமுநீ, சாதாச்சிவநீ
மண்ணுநீ விண்ணுநீ சுகதுக்க கருமமுமநீ, சுபமுநீபசு
பநீ சோதிநீ புன்லுநீ சொற்பகப்பொருருளுநீயே, பை
ந்தமிழ்பத்தும நானபாடியது நினதருள்பகர்திரு வலி
க்கேணிவாழ், பங்கயக் கண்ணுருக்மணிதேருநேயனே
பார்த்தசாரதி மாயனே, ய

பார்த்தசாரதிவிருத்தம்-முற்றிற்று.



ஸ்ரீராமஜெயம்.

பார்த்தசாரதி பெருமாள் பேரில்

# பஞ்சரத்தினம்.

கண்டபோ தரைக்கணந் தரியாதெழுந்து முன்கை குவித்தெதிர்சென்றுடல், கம்பித்துரோமஞ்சிலிர்த்துவி ழிமலாருவி கரைபுரள முகம்மலர்ந்தே, தெண்டனிட்டு பசார மாவரவழைத்தவர்கள் சிந்தையில் நினைந்தபடி யே, செப்புமுன்னடியவர்க் கொப்புள னடித்தவர்கள் செல்வமொரு குறைவுமுண்டோ, தண்டமொடுசங்குச க்கரம் வாளிலங்கு கோதண்ட மேந்திடும் ப்ரசண்ட, தகைகொண்ட பகவண்டமுழுதுண்டதனமளவ கண் டவண்டா, பண்டருமனந்தமறைகொண்டு முனிவோர் கடுதி பகர்திரு வலிக்கேணியிற், பார்த்தபேரிட மாய மூர்த்தியாகிய தூய பார்த்த சாரதிமாயனே. க

உனதுபஞ்சாயுதத் தொருபடைநினைத்தவர்களெ ன்னலர் படைக்கவருவார், ஒளி கவுத்துவமணி யினைக் கருது மவர்கள்கடு வுலகநிந்தையு ளழுந்தார், பனகத்தி ன்வயிரியைக் காணுமவல தனகனமகிழ்பதியுமர் நிதியு மதியார், பங்கயப்பதனமனந் தங்க வைத்தவர்பெருமை

பகாவெளிதாகுமோதான், கனகனென வருமவுணனுட றடிந்திடுமத கெம்பீரநாரசிங்க, கனபிங்க ளசுபங்கசுவி தங்க மதுரங்க கருதுமக ளங்கதுங்கா, பனசமாகதலி முக்கனி நறவுபாய்பணைகள் பயிதிருவலிக்கேணியிற், பார்த்தபேரிடமாய மூர்த்திமாகியதூய பார்த்தசாரதி மாயனே. உ

மனுநீதிகொண்ட தசரதனுறும்புதல்வ னெனவந் தறிஞர் மகமுடித்து, வடிவகலிகைக்கருளி யொடியவி ல்வளைத்துமலர் மகளையுமணந்தடவியில், தனுவோடெ திர்த்தகரதூஷணர் மடிந்தபின்றகைமாயமான்கடிந்து, கனியரசிபற்கை சுக்ரீவனுக்குதவிபின்றடங்கடலடை த்திலங்கை, துனுமிராவணனுதிமடியவீடணனுமுடி சூ ட்டிமகிழ் கொண்டராமா, சுகபூமா திகழ்வாமா குண தாமா டலராமா சோமவானந்த நாமா, பன்னுநான்ம றைத்தெளிவ தாகுமாழ்வார்கடி தி பகர்திருவலிக்கேணி யிற், பார்த்தபே ரிடமாய மூர்த்திமாகியதூய பார்த்த சாரதிமாயனே, ங

நளலவசுதேவன் மாமனையுதித் தாயர்கோ நந்தனி டமாய்வளர்ந்து, நஞ்சுமுலைவழினொருபெண்பேயினுயி ருண்டு நமனைநிகர்சகடுதைத்துக், கல்லுரலிநெடுசென் று மருதிறித்தனை சென்று கனகுருவாய பிளந்து, கா

ளியன் மேனடித்தானிரைபுரந்தண்டர் காணவெகுவி
லைசெய்து, மல்லரையும் வஞ்சமுறு கஞ்சனையும்வென்
றுலகம் வாழவருடந்தபோதோ, மமநாதாநவநீதாசது
ர்வேதா திருநாமமகிதலமளந்தபாதா, பல்லவமுயிர்த்
த வைருவல்லகை நிகர்வளம் பகர்திருவலிக்கேணியிற்,
பார்த்தபேரிடமாய மூர்த்தமாகிய தூயபார்த்தசாரதி
மாயனே. ௪

தீங்கொன்றிலாத பஞ்சவராசிலேறவுஞ் சுயோத
ஞதியர்நீறவும், செருமுகத்தனில்விசையனவர் பெருந்
தேரிலொரு செங்கையிற்கோலொன்றுகொண், டேந்
இமலர்வ யாலும்மாக்கடும் பரிகளை யுரப்புகோளத்தைய
டியேன், உளமகிழ்ந்தன்போடு காணவிக்கருளுவாய் உ
யர்தொண்டை மானினதுபோற்பூங்கழல்வணங்கியபி
னல் வேதமும்பரவு புனிதரகுமாராமசந்த்ர, புஜாந்த்ர
கஜ்விந்த்ர பஜுமந்த்ரா போற்றுமடியார் சுதந்தரா, பா
ங்குமுத்திடுசங்கவெனவலன் வழித்திடப்பணிதிரு வ
பலிக்கேணியிற், பார்த்தபேரிடமாய மூர்த்தமாகியதூய
பார்த்தசாரதிமானே. ௫

பார்த்தசாரதி பஞ்சரத்தினம்

---

ஆகபுத்தகம்-123

ஸ்ரீ

ராமஜெயம்.

காஞ்சீபுரம்

# வரதராஜப் பெருமாள்

பஞ்சரத்தினமும்

பெருந்தேவித்தாயார்

பஞ்சரத்தினமும்

இவைகள்யாவும் அடங்கியிருக்கின்றன




இவை

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910.

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# காஞ்சிபுரம்

# வரதராஜப்பெருமாள்

## பஞ்சரத்தினம்.

காப்பு - வெண்பா.

செந்நெல்வயற்காஞ்சிநகர் சேர்வரதராஜரெழின்
மன்னுபெருந்தேவி வல்லிமிசை-நன்னயமாப்
பஞ்சரத்தினம்புகலப் பண்ணுதமிழ்மாறன்றாட்
கஞ்சமலரிணைகள் காப்பு.

ஆசிரியவிருத்தம்.

ஒர்மேவுநவரத்ந மணிமுடியினழகுமொண் டிலத நுதலினழகும், செங்கமலமனையவிரு விழியழகுமிரு காது செறிகுண்டலத்தினழகும், பார்மேவுசெம்பவள வாயழகுமங்கைதிகழ் பஞ்சாயுதத்தினழகும்? பணிகவுத்துவமணி வயங்குமார்பழகுமிப் பார்பூத்தவுந்தியழகும், கார்மேவுசெய்பழகு முபயச்சரணழகும்யான்கண் டுதெரிசிக்கவருள்வாய், கலைவேதமுடனோதவருநீதவுய

ர்பாத கருதுபாண்டவர்கள் தூதா. வார்மேவுமிளமுலை
த் திருமாதுபுவிமாது மகிணனேகச்சிநகர்வாழ், வந்தெ
னைசெப்திடவுசித நந்தனருள்புனிசுத வந்தருள்செய்க்
ரிவரதனே. க

பாரினிலுதித்துயான் மண்ணுசைபொன்னுசைபா
வையர்களாசையென்னும், படுகுழியில்வீழ்ந்துனைப்ப
த்திசெயவறியாது பன்னாட்கழிக்குநாயேற், காருதவி
செப்பவர்கள் நீயலாதிவ்வேளையடியனென்றெனையஞ்ச
லென். றன்புடனுரைத்துநின் சிரமதையசைத்துயரு ம
பயாஸ்தமீந்துநளின, நேரினியநினதுகழல் துதிசெய்ய
நாடோறும் நிலையென் றெனக்கருள்செய்நன், நிதிசோ
மகிழ்கூர வினைதீரவுபகார நேசருக்குதவிதிரா, வாரிதி
யின்மேற்பள்ளி கொள்ளுநாராயணாவளமையுயர்கச்சிந
கர்வாழ், வந்தெனைசெய்திடவுசித நந்தநருள்புனிதசுத
வந்தருள்கரிவரதனே உ

வைகுந்தகேவித சீதரமுகந்தபர வாசுதேவா
மாதவா, மாபலிபிடச்தின்மூ வடிமண்ணிறந்துநெடுமா
லாகியீரடியினால், வையகுபுவனங்களை யளந்துமற்றது
ரோடியம் மன்னவனசென்னிவைத்த, வாமனாதேவக
ணவந்திதாளை நதுள மாலிகாபாணநாதா, உய்குதலி
லாதலையு மெளியவடி மையையாள்வ தினதுகடனெனை

யாண்டருள், உயர்வாயபிரமேய மறுதுயகனிவாய ஒ துபாண்டவர்சகாயா, வைகுலவுவேலங்காத்துடையமு ருகவேள் மாமனேகச்சிநகர்வாழ், வந்தனைசெய்திடவு சித நந்தகருள்புனிதசுத வநதருள்செய்கரிவாதனே. ௩

எப்போதுமொருவருக் கியாதவன்மனத் தினர்பா ற்சென்றிங்கியதாய், இசைபதஞ்சிந்துநற் சதகமுமுரைத் தவரை யிர்திராதனகுபேரா், ஒப்பாரிலாதவம்மூவேழு வள்ளலுக் குயர்வானதருமவானெனன், ஞேதியவர்முன் னின்றென் னுள்ளத்தின்மெலிவுசொலியுழல்கின்றவெ ன்முன்வந்து, முப்போது மகலாதபடி துதிசெய்திடநா ளு முளரியடியருள்வதரிதோ, முதிர்கோகநகையாக மு யிர்போகவணநாக முடியினடனஞ்செய்யோகா, மைப் பாய் விழிச்சியர்கள் மார்தர்களுமென்னளும் வாழ்த்து முயர்கச்சிநகர்வாழ், வந்தனைசெய்திடவுசித நந்தனரு ள்புனிதசுத வந்தருள்செய்கரிவாதனே, ௪

அச்சுதமுகுந்தகோவிந்தநாராயணா வாழ்கடற் றுயின்மாயவா, வரன்மகிழுமைத்துன சதுமுகவனைத் தந்த வத்தனைநளினமாது. நச்சுமணவாளனே வன மாலியேபதும நாபனேமேகவண்ணா! நரசிங்கனேகரு

டன்மிசையேறிவருகின்ற நாயகாநச்சரவி, னுச்சியின
டித்தோங்கும் நினதுபாதத்தையா னேதக்கடைக்கண
ருள்வாய், உயர்நேசனும்வருராசகயிலாசமலர்வாசனே
ங்கிருமருங்குவாசா, மச்சவிழிமடமாதர் தடமேவிவி
ளையாடன் மன்னுமுபர்கச்சிநகர்வாழ், வந்தனைசெய்தி
டவுசித நந்தனருள்புனிதசுத வந்தருள் செய்கரிவர
தனே. ரு

கட்டளைக்கலித்துறை.

உலகெலாம்புகழ்ச்சியி லோங்கியவுத்தமனற்
சலசமிலாம்பெருந்தேவி மணாளன் தயாநிதிசீர்
இலகெதிராசனுக்குக் காவிமுத்தண்டமீந்தருளும்
நலமுருதேசிகன்றாள்போற்றினோர்செல்வனண்ணுவரே.

---

காஞ்சிபுரம்

வரதராஜப்பெருமாள் பஞ்சரத்தினம்

முற்றிற்று.

---

ஸ்ரீ

ராமஜெயம்.

காஞ்சீபுரம்

# பெருந்தேவித்தாயார் பஞ்சரத்தினம்.



திருமருவுபூங்குழலு மதிமுகமு நுதலிலொளிர்
சிந்தூரமுங்கருணைகூர், திகழ்குவளைவிழியுமூக்குத்தியி
லொசியுஞ்செவியிலணிவிருகுழைகளு, மருண்மொழிசு
ரந்திடும் பவளவாயுங்கமுகமனைய மிடறுங்கழையை,
நேரவிர்தோள்களும் கும்பதனமும்மலர்க் காந்தளங்
கையு மின்னிடையுடன், உருவழகுகண்டுதெரிசித்துன
து தாண்மலரை யோதியடியேன் றுதிக்க, உயர்வேதிய
னுபூதி தருசோதிபுகழோதி யுன்னவேற்கருள்வினைதி,
கருவாயலைந்திடா தென்னைரட்சிப்பதுன்கடமையே கா
ஞ்சிநகர்வாழ், கருதுளமெனும்பூவி லுறையுமுயர்சஞ்சீ
வி கருணைசெய்பெருந்தேவியே. ௧

பெற்றதாய்தந்தைநீ யுற்றநற்குருவுநீ பேசரியதெ
ய்வமுநீயெனப், பேதையேநம்பினே னீயெனைக்காக்கும்
பெருங்கடன்றனல்லவோ, நற்றவம்பெற்றிடாக் கொடி
பனுனின்னுடைய நளினபாதத்தைநாளும், நாடித்துதி
த்திடுங் கடனல்லவோவுரைசெய் நாயகிதண்மலராசனி,

குற்றமற்றிடனினது பாதமென்சென்னியிற் கொண்ட டைவதெக்காலமோ, குளிர்வாரிதருகாரிகனசிரியுபகாரி கோதிலர்க்கருளுதாரி, கற்றவர்கணிதமுந் துதித்திடன் மிகுத்திடுங் காஞ்சிமாநகரில்வாழும், கருதுளமெனும் பூவி லுறையுமுயர்சஞ்சீவி கருணைசெய் பெருந்தேவி யே. உ

ஓதமலிபாற்கடலு ளவதரித்திடுபுத்ரி சிற்பரன்றங் கையாகிச், செங்கண்மான்மகிழ்கொண்டு மார்பில்வைத் திடுமினிய தேவியாய்மதிவேட்குகல், வேதன்றனக்கு நற் ருயாகியேமுருகவேண்மாமிசனகராதி, வேந்தர்நார தருக்குமேன்மைசேர்பாட்டியாய் வேண்டுமடியர்க்க முதமாய், ஒதுநாயேனுயிர்க் காதாரமாய்நின்ற வுத்தமி யெனக்கருள்வாய், உயராலினிலைமேலி லுறைமாலின னுகூவி யோங்குபுகழ்பாக்கியசாலி, காதலொடுமுத்தலமு மென்னுளுமேத்துமுயர் காஞ்சிநகர தனில்வாழும், கரு துளமெனும்பூவி லுறையுமுயர்சஞ்சீவி கருணைசெய்பெ ருந்தேவியே. ங

ஞாயிறுநிகர்த்தசிந் தூரமிடுநுதலியே நற்றிங்கள் பொருவதனியே, நன்மொழிசுரந்திடுஞ் செவ்வாய்ச்சி யேயிந்த நானிலமியம்புதன்மை, தோயவருளுஞ்செல் வியாழந்திரைக்கடற்றேன்றித் துதிக்கவெள்ளிற், றன் னுநெய்போலெங் கினுங்கலந் தொளிருமுயர்சுக்ஷிபூங் கமலாசனி, ஆயநின்னுபயபா தத்தைமறவாதுதின மடி

யேன் றெழக்கருணைசெய், யவிர்பூமியுரைதோமி லுயர்
நாமி குருசாமி யறுமுகற்கினியமாமி, காய்கனியுடன்
மென்மலர் சூழ்சோலைவிண்ணளவு காஞ்சிமாநகரில்வா
ழூங், கருதளமெனும்பூவி லுறையுமுயர் சஞ்சீவி கரு
ணைசெய்பெருந்தேவியே. ௪

தேனூர்ந்தசததளாம் போருகாலயவல்லி சித்தச
னையீன்றமெல்லி, திகழிந்துவதனிகரு ணூரசவிசாலா
ட்சிதீனசம்ரக்ஷணி, வானாட்டுரம்பையர்கள் துதிசெய்
துபணியிறைவி மங்களநிறைந்தசெல்வி, மதுரமிர்து
பாஷணி நவரத்னபூஷணி வாழ்த்து கல்யாணிசுகுணி,
ஞானதிகாரிகலை வாணியிந்த்ராணிமகிழ் நண்ணியடி
பணிநாயகி, நலநீடுமெனமாடு புகழ்நீடுதுதிபாடு நாகரியி
ன்மார்பினோடு, காணருமென்னிதைய மலர்மீதுவளர்
கின்ற கனகமேகாஞ்சிநகர்வாழ், கருதளமெனும்பூவி
லுறையுமுயர்சஞ்சீவி கருணைசெய் பெருந்தேவியே.

---

கட்டளைக்கலித்துறை.

திருப்பாற்கடலிற்றி நவவதாரஞ்செய்சேயிழையே
மருப்பாய்குழலிற்காஞ்சிபுரசன்மகிழூரமே [ளே
இருப்பாகக்கொண்ட பெருந்தேவியேயெமையீன்றவ
கரிப்பாயகிலாதினிக் காத்தேபரமகதியருளே.

பெருந்தேவியார் பஞ்சரத்தினம்

முற்றிற்று.

---

ஸ்ரீ

ராமஜெயம்.

திருவல்லிக்கேணி

# ஸ்ரீபார்த்தசாரதிபெருமாள் பஞ்சரத்தினப்பதிகம்.

---



இஃது

சிறுமணலூர்

முனிசாமி முதலியாரவர்களால்

---

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1911.





ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம.

---

திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தசாரதி பெருமாள்பேரில்

# பஞ்சரத்தினம்.

---

நம்மாழ்வார்விஷயம்

நேரிசைவெண்பா.

சீர்மேவுஞ்சென்னைத் திருவல்லிக்கேணியனுந்
தார்மேவுஸ்ரீபார்த்த சாரதிமேல்-பேர்மேவும்
பஞ்சரத்தினப்பதிகம் பாடக்குருகூமன்
செஞ்சரத்திணங்காப்பாக செப்பு.

ஸ்ரீபார்த்தசாரதி பெருமாள்பேரில்,

நூல்.

பன்னிருசீர்க்கழிநெடில்ஆசிரியவிருத்தம்.

சீர்கொண்டவைகுந்த பரம்பதவியீந்திடுஞ் செகரட்சகாவென்னவே, திரிபுவனமதிலுள்ள யாவருந்தொழநின்ற சீருடையசரணங்களில், வார்கொண்டதண்டையழ கும்மிடையிலாடையும் வரன்வந்தநாபியழகும், மாதுலட்சுமியுறையு மார்பிற்கவுத்துவமும் மலையொத்ததோளினழகும், கூர்கொண்டபஞ்சாயுதக்கரமுமும்முகங் குவலையர்களடையவடியேன், குறையோடிவிடநாடி வுனைபாடிதுயர்ஜாடி கூத்தாடியானந்தமாய், தேர்கொண்டவேலைசூழ் படியளந்திடுநாத சீர்திருவல்லிக்கேணிவாழ், தேஜோமயானந்தா சிந்தாகுலந்தீரும் ஸ்ரீபார்த்தசாரதியே.

ஆழிசூழுலகினிற் றோன்றியபிறிமடியநின் னடிமைபெனவேசொல்லியும், ஆவலொடு சென்னிமேற்கைகுவித்தனுதினமு மாயிரந்தரமுன்பதம், வாழிவாழியெ ன்னவாழ்த்தியுப்நின்மன மஃதிரங்காததென்னோ, மன்குநிறைவிண்ணுமண் ணறியவேவைகுந்த மன்பர்க்களித்ததேவே, கோழியர்க்கோன்றனுக் கிகபரமிரண்டிலுட் கோலத்தைகாட்டியாண்டோய், கோக்களை மேய்த்து

விளையாடிகளை மூடவளைகுடங்களை யிரங்கியுண்டோய், சிழுதிரவுடலாற் சுமந்ததீவினையறச்சீர் திருவல்லிக்கேணிவாழ், தேஜோமயாநந்தா சிந்தாகுலந்தீரும் ஸ்ரீபார்த்தசாரதியே. ௨

சிதாரவிந்தவய னமரரொடுமுனிவருந் தினமுமேத் திடுமடிதனை, சிந்தையொடுவந்தவனைச் செய்யுமடியார்க்குவருந் தீதறுத்துனது திவ்விய, பாதாரவிந்தமலர் அகம்புத்திசித்தஞாபகத்திலுமமைத்தபொருளே, பாண்டவர்களுக்காக நால்வகைச்சேனையொடுபாரதப்போர்நடாத்த; கேதாரமுன்னிரா வரவுயர்த் தவன்முன்னே கிருபையொடுதூதுசென்றோய், கிரீடிதுதிபுரியுநிதி கதியெனக்கருதி கிலேசமறசெபவிதுததி, தீதாரகறுமென சேதனுதியர்கள்கூர் சீர்திருவல்லிக்கேணிவாழ், தேஜோமயாநந்தா சிந்தாகுலந்தீரும் ஸ்ரீபார்த்தசாரதியே. ௩

முன்னாளிற்கௌதம நதியினின்மூழ்குமோர்முனிவன்சிலைவிலகிட, முந்தாணியைக்கிழித் தேயவர்க்கீய்ந்தவண் முழுமனதறிந்ததின்பின், அன்னாளில் துரியன் சுபத்தினித் துரோபதையை யமைச்சர்சூழ் சபைமுன்னதாய், அழைத்துவந்தவளின் பொன்னுடை

யைக்களையவே அபயமென வங்குகின்ற, மன்னர்மற்ற வர்களை நோக்கியெனைகாவுமென மறுமொழிசொலாதி ருக்க, மாதுரின்னபையமென் றேதிகன்மாரியைமுன் மலேனுக்கி தடுத்தோவாவென், செனமவினையோவறி யேன் றுகிலீயெனத்தந்த சீர்திருவல்லிக்கேணிவாழ், தேஜோமயாநந்தா சிந்தாகுலந்தீரும் ஸ்ரீபார்த்தசாரதி யே. ௪

ஆலிலேயின்மீதிலொரு பாலகனுமாய்வளரு மாலிமா முகில்வண்ணனே, அண்டமு மகண்டவுலகங்களையு மு ண்டசிறு வாதொண்டை கனிவாயனே, மாலினியினு யிர்போக வவளினதுமுலேயுண்டோய் மாபாவிகஞ்சன் விட்ட, வற்சரச சூரனொரு கன்றதாய்வரவிருளின்மா ய வுருவதனைவென்றோய், பாலரிருவர்ச்சதம்மருதமா மாய்நிகழ பாலனஞ் செயவுதைத்தப், பாதனே நீதனே போதனே விநோதனே பரமப்ரக்யாதீதனே, சிலபவண ஸ்ரீராகவத்தாச னேத்திடுஞ் சீர்திருவல்லிக்கேணிவா ழ், தேஜோ மயாநந்தா சிந்தா குலந்தீரும் ஸ்ரீபார் த்தசாரதியே ௫

முற்றிற்று.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம.

# ஸ்ரீபார்த்தசாரதி பெருமாள்பேரில்

# பதிகம்.

அந்தரவிபுதோற்போற்ற ஐவர்க்குதூதுசென்ற
சுந்தரதிருவடிக்குத்தொண்டனுமுரிமையோடு
வந்தனன் சரணநம்பி வாசுதேவாமுகுந்தா
சிந்தனைதீர்த்தாட்கொள்ளுந்திருவல்லிக்கேணியானே,

ஆதியுமந்தமாகியடிநடுமுடிவுமாகி
சோதியாயருவமாகித் துலங்கியவெம்பிரானே
நீதிசேரர்ச்சுனர்க்கு நீடுசாரத்யஞ்செய்தோய்
நீதரவெனையாட்கொள்ளுந்திருவல்லிக்கேணியானே.

இகபரவாழ்வுமேலாமெழிற்பதந்தனை துதித்தேன், ககனவாகனனேதுததக்கடன்டிசைத்துயின்றமாயா, அகமகிழ்ந்தடியர்தம்மை யாட்கொளுங் கருணைஎன்னுஞ், சிகாமே யெனையாட்கொள்ளுந் திருவல்லிக்கேணியானே.

ஈவுளோணிறைவனீயென் றியாவரும்புகழபாலன்
தாவியேநின்னடிக்கீழ்ச் சரணமென்றடைந்தேனையா
கோவிந்தாமுகுந்தாநந்தா க்ஷமகட்சத்யபாமாந்
தேவியின்பதியேயாட்கொள் திருவல்லிகேணியானே

உற்றவருறவோர்மற்று முறியபந்துக்கள்சுற்ற
பெற்றவரெந்தனோடும் பிறந்தவரின்னமுள்ள
சுற்றத்தாராசையெல்லாஞ் சுடுகாடுமட்டுந்தானே
சிற்றறிவோனையாட்கொள் திருவல்லிக்கேணியானே.

ஊழ்வினைபயனதார்பல் லுருமாரிப்பிறந்தவேழைக்
கோழைமும்மலமகற்றிக் கொள்ளுதற்காகநித்தம்
ஆழ்கடன்மேற்றுயின்ற வச்சுதாநினைத் துதித்தேன்
சூழ்தசையுடற்போமுன்னு திருவல்லிகேணியானே.

எள்ளினுள்ளெண்ணைபோலெங்கணுநிறைந்தோனீயே
விள்ளுதற்கரியமோன வேதவேதியர்கள்போற்றும்
வள்ளலேசதுர்வேதங்கள் வடியிட்டதேனேபாகே
தெள்ளுமாணிக்கமேயாள் திருவல்லிக்கேணியானே.

ஏனிந்ததுயரம்வைத்தா யிரவிகோடிப்பிரகாசா
நானுனக்கென்னசெய்தே நாயகாமேகவண்ண

மேனியாயாவரும்ப்ர மிக்கசாரதி யாய்நின்ற
தீனரட்சகனேயாட்கொள் திருவல்லிக்கேணியானே.

ஐயனே அகண்டாகண்ட ஆதியே அரியேஞானத்,
துய்யனே அனந்தரூபா துளவணிவாமாநாமா. வைய
கம்பளிக்குநாதா வைகுந்தா அடியர்சேவை, செய்திட
வெனையாட்கொள்ளுந் திருவல்லிக்கேணியானே. (௯)

ஒருமுதற்றினியாய்நின்ற ஓம்பிரணவனேமூன்நாள்,
துரௌபதைக் காடையீய்ந்த சுகுணவாவுஜிதாயிந்த,
தரணியோர்விபுதரோடுந் தனயனும்போற்றுகின்ற, தி
ருமகட்பதியேயாட்கொள் திருவல்லிக்கேணியானே.

நேசனேவானோர்போற்றும் நின்மலபக்தர்நெஞ்ச
வாசனேநறுந்துழாய்மாமௌலியேநின்னைபோற்றும்
தாசர்க்குதாசனுன தனயன்ராகவனின்னெஞ்சத்
தீசனேமகத்வமிதத திருவல்லிக்கேணியானே. (௰௧)

முற்றிற்று.

---

ஆகபுத்தகம்-125

ஸ்ரீ

ராமஜெயம்.

# ஸ்ரீவேணுகோபாலர்பேரில்

## ஆசிரியவிருத்தம்.

---




இஃது

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்


---


சென்னை - சூளை,

லன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1911.



உ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீவேணுகோபாலர்பேரில்

## ஆசிரியவிருத்தம்.

---

கார்கொண்டமேகமென வளர்கின்றதேகமுங் கா
ருண்யமகிழ்வதனமும், கருணாவிசாலநய னத்திேனாடெ
ழிலுறுங் கடகமணநான்குகரமும், பேர்கொண்டநவம
ணி பதித்தமுடியுங்குழையும் பின்னையுறைகின்றமார்பு
ம்-பெருமை பெறுதுளபமா லிகையுமுன்னூலுமற் பீ
தாம்பாத்திேனாடும், பார்கொண்டகுக்ஷியும் பங்கயத்தா
ளினிற் பாடகந்தண்டைகொலுசும், பகாரிதலெனுமி
க ஜெகம்புகழ்கவுஸ்துவா பரணமுமிலங்கவென்றும்,
சீர்கொண்ட செங்கருடன்மீதில் வருதெய்வமேசின்மய
மதாகியெந்தன்,சிந்தைமிசை சந்தத முகந்துவளர்சீல
னே ஸ்ரீவேணுகோபாலனே. க

சகலலோகேசனுப் சற்குணாதீதனுப் சாயுஜ்யம
ருள்தேவனுப்-சர்வபரிஞான சுயம்பிரகாசத்தனுப் சச்

சிதானந்தமயமாய், அகிலத்தேவனுய ருளாழிவேந்த
ஞ யனந்தலோஜனனுகி யருமறைத்துதிமூலனுய், பக
வனுமேகனுய் பக்தரக்ஷகனுமாய்பரமபுருடோத்தமனு
மாய் - பகாப்பொருள் பரஞ்சோதியாயென்றுமெழில்
பெறும் பராபரப்பிர்மமாகித், திகழ்கின்றமித்தனே அத்
தனேசுத்தனே சின்மயம்தாகியெந்தன்-சிந்தைமிசைச
ந்தத முகந்துவளர் சிலனே ஸ்ரீவேணுகோபாலனே.

மச்சமாய்சோமுகன் றனுவதைத்தேமறைமலறவ
ற்கேயளித்தாய்-வானவர்க்காகபேராருயிற்கூர்மமாய வ
ரைசுமந்தமுதமீய்ந்தாய, அச்சுவனேபுவிசுற்றியோடி
டுமாக்கனேஅதஞ்செயவராமொனுய் - அன்றிரணியன்ற
னைக்கொன்றிடத்துணிடை யவதரித்தாய்சிம்மாய்,இச்
செகம்புகழ்பரசு ராமனுய்தசாதனேந்தலாய்பலராமனு
ய்-இவையன்றிகண்ணனுய்கலியதனில் கற்கியாய் ஈரைந்
துலீலைசெய்தே, சிச்சபாபதியாகி விளையாடுதெய்வமே
சின்மயதாகி யெந்தன்-சிந்தைமிசைசந்தத முகந்துவள
சிலனேஸ்ரீவேணுகோபாலனே. ௩

அறுசமயதேவனு யடியவர்க்கெளியனுயகிலசிவா
தாரனுய்-ஆதிநடுமுடிவாகி யண்டபகிரண்டமு மளித்தி
ழித்திடுதேவனுய், மறு ஜெனன மேதிலாதிறைவனுமே

னுய் மாயாவிபூதியாகி-மாட்சிபெருகுட்சியாய் காட்சி தருநாதனுய் மாமறைகள் ஆதிமூலனுய்,உருசராசரமஃ திரண்டினுக்குயிராகிஓங்காரவடிவமாகி-உம்பர்மிகநம்பி தொழு சம்ப்ரமிகுநிலனுய்உட்புறம்பானதேவா, சிரிதா னளந்தனிரு வினை தீர்ப்பதருமையோ சின்மயதாகியெ ந்தன்-சிந்தைமிசைசந்தத முகந்துவளர்சிலனே ஸ்ரீவே ணுகோபாலனே. ௪

மாயமாய்மாதா வயற்றி லுருவாகிமிகு பலமூத்தி ரத்துமூன்று-மாகிலந்தன்னிலோர்சேயெனத் தோன்றி சிறு மதலையாய்த்தானிருந்து, காயம்வலுத்தபின் கா னென்றகங்கொண்ட காளையாகத் திரிந்து-காமாதிநோ யால்மெலிந்துடல்வருந்தியொரு கன்னியைபணந்துபி ன்னும், தேயமதிலெங்கெங்கு மோடிபெர்நாளும் நிதி தேடிப்புதைத்துவைத்துத்-தேகியென்போதமக் கியாம ல்வீணிலேதினமுங்களிக்குமிந்தத், தீயனெவ்வாருனக் காளாவேனருளுவாய் சின்மயமதாகியெந்தன்-சிந்தை மிசை சந்ததமுகந்துவளர்சிலனே ஸ்ரீவேணுகோபால னே. ரு

தொலையாதமதமாரி பெய்திடவேமோகமிகு துளி வழியில்சென்றுபுக்கத்-துன்பமிகுபவசாக ரத்திற்கிடங்

தேற அறைதோன்றிடாமலென்றும், நிலையிலாதென்
னுமித் தேகத்தையனுதினம் நிச்சயமெனக்கருதியே-நீ
ணிலந்தன்னிலிந்நா ளலைந்தேனன்றி நின்பெருமை யா
துமறியாப், புலையனென் போலொருவ ரெங்கேனுமு
ளரோவிப் பூவகந்தன்னிலையா-பூரணனேகாரணனேவா
ரணத்திடர்தீர்த்த புங்கவதனு, சிலைபிடித்தொளிரைவ
ர் பாகனேயோகனே சின்மயமதாகியெந்தன்-சிந்தைமி
சைசந்தத முகந்துவளர்சிலனே ஸ்ரீ வேணுகோபால
னே. ௬

தஞ்சமென்றன்னருளை கோராதபாவிவேவா தான
மீயாதபாவி-தாசருக்கூழிய மியற்றிடாப்பாவிமிகு தன
மதங்கொண்டபாவி, வஞ்சனைகொலைகளவு செய்திடும்
பாவிநிதம் வாதாடுகின்றபாவி-வந்தவர்பசித்திருந் திட
வுண்டபாவிபொய் வழக்குரைத்திட்டபாவி, நெஞ்சமதி
லெள்ளளவு கருணையில்லாப்பாவி நீதியறியாதபாவி-
நேசருக்காசைமொழிபகர்பாவிமிகுபாவி நிகலாப்பாவி
யானுன், செஞ்சரணம் வைத்தென்னை யாட்கொள்வ
தென்றுகாண் சின்மயமதாகியெந்தன்-சிந்தைமிசைச
ந்தத முகந்துவளர்சிலனே ஸ்ரீவேணுகோபாலனே. ௭

ஆகமபுராணநூ லோதவரியேனுனது ஆராதனங்
களறியேன்-அல்லாமல்நின்பெருமைசொல்லவறியேன
ன்றியருள்வழிநடக்கவறியேன், யாகமொடுயோகமுஞ்
சமாதியறியேனுணவு யாதேனுமீய்ந்துமறியேன்-யாவர்
க்கும்நன்மொழி யுரைததுமறியேனின்னை யாதினில்
வைத்துமறியேன், பாகவதரோடுறவ தாகியறியேன்நி
ன்மேற் பாவினடியற்றவறியேன் பரிவாகநின்றிருக்கோ
வில்வலம்வந்தறியேன் பாவமேகுடிகொண்டயித், தே
கமெடுத்தயா னாளாவதென் றுகாண் சின்மயமதாகியெ
ந்தன்-சிந்தைமிசைசந்தத மூகந்துவளர்சிலனே ஸ்ரீவே
ணுகோபாலனே. அ

நாயெனச்செனனடைதெடுத்ததென்றாலுமோர் நல்
வேட்டையாற்சிறக்கும்-கானிலந்தன்னிலோர் மரமாகில்
நிழல்தந்து நன்றிசெய்திடுமின்றயான், காயேனுமுதிர்
சருகு கனியேனுமுணவேனுங்கந்தமூலங்களேனும்-கா
தலாயேழையர்க்கிந்துபசரிக்காது காமாதிசட்குடித்த
பேயனேனாருசலேந்தலைந்தென் றுமோர்பேதையர்க்கேவ
லைத்த-பித்தனுகியதன்றி யென்றென்றும்நின்னெழிற்
பேரருட்காளாகிடாத், தீயனெவ்வாறுனக்காளாவேனை

ளுவாய்சின்மயமதாகியெந்தன்-சிந்தைமிசைசந்ததமுக
ந்துவளர்சீலனே ஸ்ரீவேணுகோபாலனே.		கூ

பூவகந்தன்னிலூர் வனராசியாகும் புழுக்கள்பதி
னேருலட்சம்- புனலதனிலீரைந்துலட்சம்விலங்கினம்
பூந்தசோர்பத்துலட்சம, தாவரமதாகுமிவ் வசரப்பகு
ப்பினிற் றங்குமிருபதுலட்சமாம்-தகமைமுதலாயுள்ள
பறவையினத்திற் றுனுமொருபத்துலட்சம், தேவஜெ
னனம்பெற்று வானுலகமவைதனிற்றிரிதல்பதி னன்கு
லெட்சம்--தீயவினையாலிந்தமானிடர்வயிற்றினில் ஜெ
னித்ததொன்பதுலட்சமாம், சிவராசியினிற் பிறந்திடா
தருள் செய்வாய்! சின்மயமதாகியெந்தன்-சிந்தைமிசை
சந்தத முகந்துவளர்சீலனே ஸ்ரீவேணுகோபாலனே.

அருமைபெருபிரகலா தற்குமாமுடிசூட்டி யாசா
ளவைத்ததுரையே-அவையில்பாஞ்சாலிசின் றபயமெ
ன்றலறவே அன்றுதுகில்தந்ததுரையே, துருவனென்
றவனுனைக்கண்டுதெரிசிக்கவுயர்துன்னுபதமீய்ந்ததுரை
யே-தம்பியுன்றனையாதி மூலமெனவேபதின் துயரதை
த்தீர்த்ததுரையே, ஒருநாளுமூனிவினைக் காவஜாமேள
னை உன்பதஞ்சேர்த்ததுரையே- உன்நாமமியலாத செ

வியுடைக்கொடியனே உண்மைகொண்டாண்டதுரையே
திருவருளு மார்பவென் னிடர்தீர்ப்ப தருமையோ சி
ன்மயமதாகியெந்தன்-சிந்தைமிசைசந்தத முகந்துவளர்
சிலனே ஸ்ரீவேணுகோபாலான. ௰க

## ஸ்ரீவேணுகோபாலர்பேரில்

## ஆசிரியவிருத்தம்

## முற்றிற்று.

---

ஸ்ரீ

ராமஜெயம்.

# திருவரங்கப்பதிகம்.

---

இது

செந்தமிழ்ப்புலமை

திருநீர்மலை,

இராஜகோபாலபிள்ளையவர்களால்

இயற்றப்பட்டு





இவை

சிறுமணவூர்

முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,

ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1910.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

---







# திருவரங்கப்பதிகம்.

---

காப்பு-வெண்பா.

திருக்குருகூர் மாறன்றிருவடியை வாழ்த்தும்
திருக்குருகூர் மாறன்றாட் சிந்தித்-திருக்குருகி
எந்துமரங்க னிணையடிக்குப் பாமாலை
சாத்துவே னன்பாகத் தான்

ஆசிரிய விருத்தம்.

சீர்மேவுமலமங்கை மாலையுறுமார்பினிற் றிகழுமணிபோல்விளங்கும் - திருக்கா விரிக்கிடை யிலங்கரங்கத்தினிற் சேர்பிரணவகோயிலுள், ஏர்மேவுகரியமுகின் மின்னுடன்வெள்ளிமலை யிற்கிடந்தாங்கும

டவார் - இருவரடிவருடநற் சேனைமுதலிகள்கருடனி ணைவிழிபி னருநோக்கவின், கார்மேனி தன்னிறமும் வளையாழிசுடரும் கணர்தோருமாறி யொளிரக் - கதி ர்செய்மணிமாமுடி யகந்தன் மேற்றிருநெடுங் கண்வ ளருமெம்பிரானே, பார்மேவு மிழிஞரினுமிழிஞனுமெ னையுநின் பணிசெய்யுமாளாக்குவாய் - பங்கமறுதுங்க வொளியங்கநரசிங்கபய பங்கசெயரங்கமணியே. க

எண்ணிலாச்சூரியரை நிகர்மகுடமணிமுடியு மிந் துவையிழித்துமுகமும் - எழிலுறுஞ் செம்பவளவாயு நீண்டருள் பொழியு மிருதாமரைகண்களும், வண் ணமுறுமணிமகர குண்டலச் செவிகளுடன் மரகத மலைத் தோள்களும்-மாமனியு மூந்நூலுர் வனமாலையுங் கமழு மார்புமெவ்வுலகங்களும், நண்ணுமுதரத்துடன் பீதாம்பரஞ்செறியுநலியுடையும் வினையொழித்தும்-கனி னமல ரடிகளும்விளங்கவென்முன்வந்து நல்வரந்தருளு வாய், பண்ணவர்தினம்பர வாங்கமாநகர்மேவு பரமவ ருளாளவரியே-பங்கமறுதுங்கவொளி யங்கநரசிங்கபய பங்கசெயரங்கமணியே. உ

அண்டங்கள்யாவையுந் தந்தவைகளைக்காத் தழி க்கின்றதேவதேவ-ஆண்பெண்ணு மலியலாவுருவருவமி ல்லாத வாதியாய் முதலீறிலாய், புண்டரிக னாணுதிய மரருங்காணரிய புனிதவொப்பில்லாதவ-புகழ்கின்றநா

ன்குமறை யாதியந்தத்திலும்போற்றிடுந்தனி முதல்வநி ன், தொண்டராம்யோகியர்த முள்ளத்தினகலாத சோதி யாய் பிரணவார்த்த-தோன்றிடுமுவப்புடன் வெறுப்பி லா யொங்குநிறைதூய நல்லாறுகுணனே, பண்டியன் செய்பிழைகள் யாவும்பொறுத்தப் பரிந்தருளரங்கநக ரோய்-பங்கமறுதுங்கவொளி பங்கசெயரங்கமணியே.

சிதரமுகுந்தநாராயண பரந்தாம திரிவிக்கிரமாவ ராக-சிராமகோவிந்தகேசவாநரசிங்க செயவாமனா மு ராரி, மாதவசநார்த்தனதாமோதராகிருஷ்ணமதுசூதனா வச்சுதா-வடபத்தரசயன வனமாலிபலதேவசுரவந்திதா ஜகந்மோகனா, சிதாளம்புசநயனநின்னடிகளுக்கன்புசெ ய்குவாய், பாதகமொழித்திடும் பொன்னிமாநதியிடை ப் பரவிடுமரங்கநகரோய்-பங்கமறுதுங்கவொளியங்கநர சிங்கபய பங்கசெயரங்கமணியே ௪

மூலமேயென்னுமத யானை கூக்குரலோயுமுன்னு றிதனையேவியம்-முளரித்தடத்தமருமுதலையுயிர் விட்டி யருண்முதல்வமும் மூர்த்திகட்கும், சிலமுறுபாஞ்சா லி யன்யாசரவதனிற் சிந்தையுற்று யாமேவிச்செ ன்னி மிசையங்கை வைத்தாகண்ண வெனவுமத்தி

ங்கொழித்தருள்பாமலின், ஞாலமிசையடியேன்மனக்க வலையானேந்து நாள்கள்பலவாய்வருந்தி-நவிலுமுறைய மரர்துதி யோசைபானின்செவியி னண்ணவிலையோக மலமேற், பாலனம்பெடையுடனுறங்குகாவிரியிடைப்ப ரவிடுமரங்கநகரோய்-பங்கமறுதுங்கவொளி யங்கநரசி ங்கபய பங்கசெயரங்கமணியே. ரு

புகலொணுப்பாவிகாகாசுரன்ஜாமேளன் புகழில்கத் திரபந்துவும்-போற்றிநின்பேரையுங் கேட்கவொண்ணு தெனும் புந்தியுறுகண்டாகனன், இகல்கொளுமிராவண ன் சிசுபாலனுதியோ ரீசனயனமார்முனிவர்-எய்திடர்க ரியவைகுந்த நன்னுட்டினி லிருக்கவருள்செய்தவப்ப, அகலவனி மீதறிவிலார்செயும்பாதக மனைத்தையுஞ்செ ய்துநின்றேன்-ஆயினுங்கூறுமங்கவரினுங் கொடியனே வடியனுக்கே னருள்செயாய், பகலிரவுதோன்றுமலொ ளிருமணிமாடங்கள் பரவிடுமரங்கநகரோல்-பங்கமறுது ங்கவொளி யங்கநரசிங்கபய பங்கசெயரங்கமணியே.

சத்தியமெனும்முலகினிற்பிரமனு ராதனங்கண்டுவக் குபின்பித் - தாரணியினிற்றிருவயோத்தியினிலிக்ஷ்வா குசகரன்பரேதனூநற், பத்திபுரிமன்னனுர்தயாதனிரா கவன்பரிவுடன்செய்பூசையைப்-பார்த்துன்மகிழ்ந்தவ் விராகவன்றாவன்றி பண்பாரும்விடணற்காய், இத்தி

சையினிற்பொன்னிமாநதியின்மத்தியிலெழுந்தருள்பெருந்தேவநின்--இணையடிகளென்னெஞ்சிலெப்போழ்துமகலா திருக்கவோர்வாநல்குவாய், பத்தியாய்நின்றமரர்முனிவரர்கள்போற்றும் பாரத்பரவரங்கநகரோய்-பங்கமறுதுங்கவொளியங்கநரசிங்கபயபங்கசெயரங்கமணியே

உலகுபுகழும்பகற்பத்தெனுந்திருநாளிலோங்குமாத்தானத்தினி - உவந்துதிருவாராதனங்கண்டுபன்னிருவரோதுதமிழ்மறைகேட்டுகர், திலகருச்சுனன் மண்டபத்தினிற்படியேற்ற மென்கின்ற சேவைகாண்பான்-இருக்குமானவரெலாய் வானவர்தமைப்போல விமையாதிருப்பாந்த, அலகிலாச்சேவையித்தன்மைத் தெனச்சொல வந்தனுலாகாதெனில்-அறிவிலா வடியனுலாகுமோநின்னடிக்கன்புறவரந்தருள், பலகுவளையரவிந்த மலர்துவாவியின்பாங்கரொளிர்கோயில்வாச--பங்கமறுதுங்கவொளி யங்கநரசிங்கபய பங்கசெயரங்கமணியே.

ஏகாதசித்திதியிலருணோதயந்தன்னிலீராறு சூரியர்களும் - ஏககாலத்துதித்தாற்போலமகுடமுடனிலகுமணிசுடர்கள்வீச, வாகார்நறுந்துளபமலர்மாலைகத்தூரிமண்டலமெலாங்கமழநன் - மணிமயப்பரமபதவாயில்வருமின்னழகை மானிடர்கள்கண்டுநெஞ்சச், சேகாந்த

ற்றுருகி யிருகணீர்சிந்திடச்சித்திரப்பாவைபோலத்-தே கபரவசமாவரென்னினின் மெய்யடியர் சிந்தையிலேயெ ன்னுருமோ, பாராருமொழிமாதர்மயலிற்புகாதெனைப் பார்த்தருளரங்கநகரோய்-பங்கமறு துங்கவொளி யங் கநரசிங்கபய பங்கசெயரங்கமணியே. க

மாதவர்கள் புகழ்ந்துவாதசிதிதிக்காலை மயன்கண்டு வெள்குதிருமா-மணிமண்டபத்தின்மாதருமேந்து மழ காரு மலர்மங்கை வடிவமேவிக், காதல்கொளவனைவரு க்குந் தாயுநானெனக் காட்டுமாபோலுயர்வுறும்-கனக சிங்காதனத்தில் வீற்றிருந்தருள்செய்கண்ணமணிவண் ணமாலே, ஆதவனுதித் தத்தமிக்கும் வரையினுமுடற் காகின்றபொருள்களுக்காய்-அல்லலுற்றுப்பாயி னிற்ப டுத்தும்முனை யரைக்கணமுநினைகிலாத, பாதகனுமுய் வெனோ நின்னருளலான்முனிவர் பரவிடுமரங்கநகரோய் பங்கமறுதுங்கவொளி யங்கநரசிங்கபய பங்கசெயரங்க மணியே. ய

கட்டளைக்கலித்துறை.

தேனுறுதண்டுளவங்கொடு பூசனைசெய்தறியேன், ஞா
னநல்லெட்டெழுத்தைக் கணப்போதுநவின்றறியேன்
ஈனவெந்தீவினையொன்றேவிழைவி னியற்றினன்காண்
நானினிவந்தடைந்திட்டே னருள்ரங்கநாயகனே. க

னமர்கார்க்குழற்செங்கனிவாய்ச்சிற்றிடைமங்கையர்,பா
னமயம்போன்மொழிப்பான்மையினுள்ளம்பரிந்துபொ
ய்யே, யானலமுற்றுமிழந்துநின்பாதநணுகினனல், நா
னிலமேத்தும்புகழ்சாலுஞ்சிரங்கநாயகனே. உ

செந்தமிழாரணந்தேர்ந்தநின்பல்குணத்தேறனுகர்ந், த
ந்தருலாப்புகழ்ப்பூனுரெதிபதியானைநின்று, பத்தமறுத்
தநின்றொண்டர்குற்றேவர்பணியருவள்வாய், நந்தலிலா
வளஞ்சேர்ந்துறுசிரங்கநாயகனே. ௩

வாழி.

—

எண்சீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

கலமளிக்குந்திருவரங்கன்மலரடிகள்வாழியே, நளினம
லருறையரங்கநாயகிதாள்வாழியே,வலனுறையும்வளையா
ழிதண்டுவில்வாள்வாழியே, நிலனிறைசிராழ்வார்களா
சாரியர்வாழியே, நிகரில்வேதியர்களொடுபாகவதர்வாழி
யே, பலன்றருதண்டலைசூழுமரங்கநகர்வாழியே, பவம
சற்றும்பொன்னிநதிபல்லாண்டும்வாழியே.

திருவரங்கப்பதிகம்

முற்றிற்று.

ஆக-புத்தகம்-127.

ஸ்ரீ

ராமஜெயம்.

# நரசிம்ம சுவாமிகள்பதிகம்.

கவரன்மெண்டாரா லேற்படுத்திய
மதுரஸா ஆஜம் என்னுங் கல்விச்சாலையிற்
இஃது
தமிழ்த்தலைமைப்புலமைநடாத்திய
பு. பொன்னுசாமிமுதலியாரவர்கள்கனிட்டகுமாரர்
கவரன்மெண்டாபீசு
மிலிட்டெரி டிபார்ட்டுமெண்டு ரைட்டர்
பு. பார்த்தசாரதி முதலியாரால்இயற்றியது.

இஃது
சிறுமணவூர்
முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,
ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்
பதிப்பிக்கப்பெற்றன.
1911.

## அவையடக்கம்.

### எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

புல்லறிவுற்றிடு நாயேனசையுடன் புகலுமிப்பதிகந்தன்னிற்
சொல்லற்கெளியபிழையுளதாகிச் சுத்தமுங்கிஞ்சித்திலதாய்க்
கல்லற்கரியார் செவிதனிற்புகுமேற் கனநகைதந்திடுமென்று
னல்லறிவாளர்க்கென்கோலாமென்று நாணுவனியம்புதற்கே.

## காப்பு

### நேரிசை-வெண்பா.

என்னுளரின்னுமை மெண்ணுவிரணியனுக்
கந்நாளருள்செய் நரசிங்கா - வின்னாளின்
றுள்போற்றச்சீர்பதிகந் தானியற்றத்தற்பரனற்
றாள்பொறுக்கு மூர்த்திதுணை,

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அம்புவிதனில்வளர்மன்பதையன்புட னடிபணிந்தேத்துவரொருபா
அம்பர்நாட்டுறுவிண்ணயர்யாவருமுளமகிழ்ந்தேத்துவரொருபா
லெம்பிரான்திருவடியேத்துவர்கறைமிடற் றீசனுநான்முகனொருபா
னம்பியவெளியனே யாதரித்திடுவை நரசிங்கனேபவபங்கனே. க

ஆகமவேதமுதலியவெல்லா மன்புடனுணருமுனிவோர்
யோகமுமியற்றியறிந்திடுமெப்பனே யொப்பிலாமணியினொளியே
யேகமாயெங்கு நிறைதருசுடரே யெளியவன் றயரறுத்திடுவாய்
நாகசைலனேபாலகன்பரவிய நரசிங்கனேபவபங்கனே. உ

இரணியனுடலம் பிளந்தபிரானே யிளையவனடிபணிந்தேத்தும்
பரமனேதிருவடி யிரண்டும்புணையெனப்பற்றினேன்பவக்கடல்கடக்க
வரனுடனயனுங்ககபதிமற்று மந்தரத்துள்ளவரெவருஞ்
சிரத்தினிற்கரங்கள் குவித்திடும்பொருளே சிங்கனேயென்பவபங்கனே

ஈரேழுவுலகமளித்துமிழ்பரனே யிணையிலாக்கருணையாங்கடலே
பேருமோராயிரத்தானவன்மாய்கைப்பெற்றிடுகபடந்தேர
வாருளாரந்தச்சிறியவன்விளிக்க வணிபெறவியற்றியதூணிற்
பாருளார்நடுங்கத்தோன்றியபரனே பவபங்கனேநரசிங்கனே. ச

உலகமனைத்துமுள்ளதோரடியா லொடுக்கியேயும்பர்நாட்டை
யிலகியமற்றொருவடியினலளந்திட்டிருத்தியநினதுகாற்கு
நிலத்தினிலிலதாய்ப்பலியின்சிரமதாய்நிறுத்தியநின்மலக்கொழுந்தே
நலந்தருஞ்சொல்லான்முனிவனைவென்ற நரசிங்கனேபவபங்கனே. ரு

ஊரைந்தாவது நாடைந்தாவது முள்ளதோருறையுளேந்துஞ்
சீர்கொளேவருக்குதவுகவென்னச் சிறந்திடுகலைகள்கற்ற
பார்புகழ்பெரியோர் பற்பலவேந்தர் பாங்குடன்கூடியவவையிற்
சீரிற்சொல்லுறு பாலனுக்கருளிய சிங்கனேயென்பவபங்கனே. சு

எங்குநிறைந்திடுவத்துவினடியரிதச்சுடரொளிவிளக்காய்க்
கங்குலும்பகலுந் துளறுநாமங் காதினிற்கேளொணுமணிவைத்
தெங்குமுலவியகண்டாகனனுக் கிரங்கிடுமொப்பிலாமணியே
செங்கணுபகவருந்தியவெற்கருள் சிங்கனேயென்பவபங்கனே. எ

ஏனமாயிருநிலங் கிண்டபிரானே யிளையவனிணையடிபரவத்
தானவனுடலந்தரணியிற்றுக்கத் தகைபெருவில்லாலெய்த
வானவர்துணைவன்றனவர்பகைவன்மனமுடனிறைஞ்சியவெளியற்
கூனமிற்செல்வமுளமகிழ்ந்தருள்வை யுலகெலாந்தொழுநரசிங்கனே.

ஒப்பிலாவரமுடனிலங்கையாளு முயர்பெறுதச்சமுடியென்போன்
செப்பொணுவஞ்சமனத்தினன் மொழிகள்செவிதனிற்கிட்டவேகி
யெப்பவுமெம்பிரான்மார்பினிலுறையு மேந்திழையாளெடுத்தேக
விப்புவிபுகழவவன்றலைபத்து மீர்த்திடுமென்குலசிங்கனே. கூ

ஓரறுபத்து நாலுகலையுடனுயர் வறவுயர்பெறுவேத, மீரிரண்டாகுஞ்
சாத்திரநாலுட னிரண்டினிலிலகியமுதல்வன், பேருமொராயிரங்
கொளுமிறையல்லாற் பிறிதொழுதெய்வமுமுளதோ, தேருமறிவில
ன்றனவன்றனக்குத் தெருத்தியவென்குலசிங்கனே.

---

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வாழிவாழியும்பருமிம்பரும் வழுத்திடுசுராநரசிங்கன்வாழி
வாழிவாழிமலரவன்றந்தை மன்னுபுவியொடுமங்கைவாழி
வாழிவாழியிரணியநாகம் வகிரும்வல்லுகிரென்றும்வாழி
வாழிவாழிபதிகம்வாழி வழுத்துவரெவரும்வாழிவாழியே.

முற்றிற்று.

---

# சாத்துகவி

---

## வெண்பா.

முன்னீர்ப்புணரிதனின் மூவினைகள்போக்கிமிக
முன்னுபொருள்யாவு முளைப்பதற்கு-நன்னீராய்
வண்ணநரசிங்கன் மாவடிமேற்சாத்தினான்
கண்ணன்பெயர்கொள்கவி.

---

இஃது
சிவில் இஞ்சினீரிங்காலீஜ்
தமிழ்த்தலைமைப்புலவர்
பு. செ. இராஜகோபாலமுதலியாரவர்களால்
இயற்றியது.



ஸ்ரீராமஜெயம்.



# திருவல்லிக்கேணி.

# பார்த்தசாரதிமாலை.



## கடவுள்வணக்கம்.

### வெண்பா.

திருவல்லிக்கேணிவளர் ஜெயபார்த்தசாரதிமேல்
பருநல்லநீதிதமிழ் பாடுதற்கு—குருவல்லி
தருணமிதுகாக்கச் சௌரிதமிழ்விளங்கக்
கருணைபுரிவேங்கடத்தான்காப்பு.

## நூன் முகம்.

### எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஒருவனே தெய்வமல்லால் வேறேயில்லை, உயிரே
ல்லாமொன்றுமே யுற்றுப்பார்த்தால், கருவிடமேவிற்
றுமுதலுலகமாச்சு, கதிரவனாலுலகமெலாம் விளங்கி
நிற்கு, முருவானநவக்கிரக மிருபத்தேழி, னுள்ளபடி
நடக்குமல்லால் வேறேயில்லைப், பரிமளமே திருவல்லி
க்கேணிவாழும், பார்த்தனிட சாரதியைப் பணிகுவா
யே.

ஈயாமல்வாழ்ந்தாலும் சுகமுமில்லை, இவ்விடத்தைவிடவேறே யிடமுமில்லை, வோயாமற்பொய்யுரைத்தாற்சுகமுமில்லை, யூருடனேபகைத்தாலு முயிராக்குச்சேதம், தியாகமுளுமினி வனித்தியத்திற், றெளிந்தோரைச்சார்ந்திடிலோ வணுகிடாது, பாயாருந்திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே உ

பெருமைபடைத் தோர்க்குவரு பகையுமில்லைப், பொய்யுரையாமாந்தர்கட்குப் பாவமில்லை, யறிவுடனே நடப்பவர்கட்கிகட்சியில்லை, யடங்கிநின் றமானவற்கு நிந்தையில்லை, மறுமுகத்தைப்பாராற்கு வினையுமில்லை,பருவமுள்ள திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே. ங

கொண்டவனைமதியாமற் பேசும்பெண்டு, குடிக்கியமனவளைவிட வேறேயில்லை, பெண்டிரண்டு கொண்டாலுஞ்சுகமுமில்லை, பெருநெருப்புச் சாகளவுந்துக்கந்துக்கப, அண்டிநின் றவிடமதனில்மோசஞ்செய்தால், ஆயிளுள்ளவரையுமவ ரலைவாரப்பா, பண்டுமறை திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிட சாரதியைப்பணிகுவாயே.

அரியதனைப்பணியாத ஜென்மமெல்லா மவலமதே எடுத்ததினம்பூமிபாரம், மருவுமன்பர் தனக்கிடாாந்து

ரோகஞ்செய்தால், மறபடியுங்கடைததேறுமார்க்கமில்லை வுறுகிமிகவுறவாடுமோசக்கார, ருற்றதுணையென்றவரைநம்பொணாது, பரவிவளர்திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே.

உதயத்தின் வெய்யதனிற் காயும்பேரு,உத்தமரைக்கண்டுதுதி யாதபேரும், மதியகன்றமூத்தவளைசேர்ந்தபேரு, மன்னுசுடலைப்புகையி னின்றபேரு, மதிகாலிற்பாலன்ன முண்டபேரு, மாயுள்விர்த்தி யின்றிமிகக்குறைந்துபோவார், பதியானதிருவல்லிக் கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே.

சந்திகாலத்தில் வெய்யிற்காயும்பேருஞ், சற்குணரைக்கண்டுதுதி செய்தபேரும், அந்தமிகுமில்லாளைச்சேர்ந்தபேரு, மன்னிரவிற்டாலன்ன முண்டபேருஞ், சிந்தைமகிழ்ஹோமபுகை பட்டபேருஞ், சிரஞ்சீவியாயுலகில் விர்த்தியாவார், பந்தமுறுந் திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே.

வலிமையுளனேழைபொருள் பறிக்கொணாது, வழக்கிருக்க வழக்கொன்று பேசொணாது, வெளியாரைவெதிரிட்டுக் கொள்ளொணாது, யேற்பவரை யுதாசனமாய்ப் பேசொணாது, சலியாத தூர்த்தர்களைச்சேரொ

ணாது, சற்குருவின் வாய்மொழியைந் தள்ளொணாது பலிதலருந்திருவல்லிக் கேணிவாழும்,பார்த்தனிடசா ரதியைப் பணிகுவாயே. ௮

அங்காடி கூடைகளைப் பறித்துத்தின்று, லதனைவி டதரித்திரங்கள் வேறேயில்லை, சங்கையில்லா திருந்தா லுஞ் சபையினின்று, சத்தியங்க ளொருபோதுஞ்செய் யொணாது, தன்கனக்கைப் பெயர்த்தெழிதிமோசஞ்செ ய்தால், சாகளவுஞ்சுகமில்லை யலைவாரப்பா, பங்கில்வள ர்திருவல்லிக் கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே. ௯

புருஷனிலாப்பூவைகுடி வாட்கைசெய்தாற், புவி யிலபகீர்த்தியொடு நிந்தையுண்டாம், புருஷருக்கும்பு ருடருடன் கலந்துவாழ்ந்தாற் கலக்கமதுவந்தாலுங்கம றிப்போகு, முரோஷமதையடக்காமலோங்கும்பெண்க ளுலகதனிற்பட்டியெனும் வேசையாவார், பரிட்சையுட ன்திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிட;சாரதியைப் பணிகுவாயே. 9

முந்நாளிலிரணியன் ராவணனுமற்ற, மூர்க்கரெ லாங்கெர்வமதால் முழுகிப்போனு, ரந்நாளிறசிசுபால ன்சகடன்கஞ்ச, னழிந்தார்களவரவர்க ளகந்தையா

லே, தன்னாலேதானழிந்தான் பத்மாசூரன், றரணியி லேயின்னமுண்டு வனந்தம்பேர்கள், பன்னுமறைதிரு வல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகு வாயே. ௰க

அறியதமிழ்போதித்து முதவிசெய்து, அன்புட னேமர்மமெலா மறிந்துசொன்ன, குருவையினி வஞ் சித்து துரோகஞ்செய்தாற், குறையாத பிணிவறுமை க்குடியாய்விற்குர், தருநலையபெரியோர்க ளுளத்தை க்கானச், சதாசிவத்தால நுமையெனச் சாற்றலாகும், ப ருவமதி திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதி யைப் பணிகுவாயே. ௰உ

சாந்தகுண பெரியோரைச் சேர்ந்தபேர்க்குச், சஞ் சலமும்வினை பிணியு மணுகிடாது, தாழ்ந்துவிதிகெட் டனென்று காலில்வீழ்ந்தாற், றள்ளிவிடப்போகாதுத ருமமல்ல, சேர்ந்திருந்தகுடிவாழ்வைக் கலைத்தபேர்க ள், ஜெசமதனி லலைவார்கள் பாசமாக, பாங்குடைய தி ருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப்பணி குவாயே. ௰ரு

கண்டபடி திரிந்தாலுஞ் சுகமிராது, காமத்தையி ச்சித்தால் வினைவிடாது, முண்டைகளைச் சேர்ந்தாலும் பௌஷிராது,முன்கோபநாய்களுக்குத்துணையிராது, ச ண்டைமுனைநிற்பார்க்குவுயிநிலலாது,சண்டிகளுக்கொ ருபோதுஞ்சுகமிராது, பண்டிதமாய்த் திருவல்லிக்கே ணிவாழும்,பார்த்தனிடசாரதியைப்பணிகுவாயே,

அன்னதானந்தவிரத்தானமில்லை, ஹரிநாமம்விடவேறேமந்திரமில்லை, சொன்னவஷ்டாக்ஷமொழியேமோக்ஷமாகுந், துணையாகவாழ்வார்கள்முகுந்தராவார், தன்னிடத்திற் பொறுமையுற்றால் தருமனவார், தைரியபுருடனே தனஞ்செயனேயாவார், பன்னுமறை திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே. ௰

பொருடேடி யுண்ணாமற் புதைத்து வைத்தாற், பொருள்காக்கும் பசாசுமெனச் சொல்லலாகும், இருளடர்ந்தமூடருக்கு வாழ்விராது, யிதக்கமிலாக்கண்டகற்குச்சுகமிராது, மருள்பிடித்தகாமுகற்குவினைவிடாது, மாற்கமறநடப்பவர்க்கு வின்பமிராது, பருவமுறுத்திருவல்லிக் கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே. ௰௧

மதியாதார் வாசல்வழி மிதிக்கலாமோ, மனமில்லாவிடத்திலன்னம்புசிக்கலாமோ, கதிசெய்யுந்துரோகிகளைச்சேரலாமோ, தமயனையுமனநோகப்பேசலாமோ வதிதிகளை யுதாசனமாய்ச் சொல்லலாமோ, வரசாதுபொருள்கவர்ந்துவலையலாமோ, பதியான திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப்பணிகுவாயே.

கொள்ளையிடுங் கள்ளருடன் கூடலாமோ, குடியருடனுறவாடி யிருக்கலாமோ, அள்ளிஇடம்பிச்சைதனைவிலக்கலாமோ, அசனுடமைக்காசைபட்டு அலையலாமோ, பெண்டுபிள்ளை பொருண்மனைபு நம்பலாமோ, புவியில் வெகு வுபாயமதாய்ப் பிழைக்க வேணும்,

பள்ளுதமிழ் திருவல்லிக் கேணிவாழும், பார்த்தனிட
சாரதியைப்பணிகுவாயே கஅ

மனமறிந்துபொய்சொன்னு லடடாபாவி, வாழ்வ
தென்னவதனுலே மகிட்சியென்ன, வனுசரிப்பானேச
ர்கட்கு துரோகஞ்செய்தா, லாடுபெண்ணிக் கோழியைப்
போலழிந்துபோவார், தனதான குடித்தனத்தைக் கலை
த்தபேர்கள், சாகளவுமலைவார்கள்பாசமாக, பணிவான
திருவல்லிக் கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப்ப
ணிகுவாயே. கக

வஞ்சகமேயனுதினமுஞ் செய்துசெய்து: வாழ்வ
தனுற்பலனென்ன மகிழ்ச்சியென்ன, கொஞ்சமென்று
வெண்ணுத பாவிநெஞ்சே, கோடிதானநரகத்திலழிய
ப்போருய், தஞ்சமென்றுநல்லோரைச் சேர்வாயாகில்,
சகலகலைஞானமது தரிக்கச்செய்வார், பஞ்சாநதிதிருவ
ல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப்பணிகுவா
யே. உ0

நல்லவர்க்குக்கோபமில்லை பெருமையில்லை, நற்க
திக்குச்சமயமிது மோட்சமுண்டு, வல்லவர்க்குத்துற்
குணமே பூஷணங்களாகும், வையகத்திலவர்பெருமை
சிறிக்கலாகுஞ், சொல்லினுமோ வவர்கள்குணம்வேற
தாகுஞ், சோதித்தானல்லோராற் காணலாகும், பல்லு
யிர்களேத்துமல்லிக் கேணிவாழும், பார்த்தனிடசாரதி
யைப்பணிகுவாயே. உக

உத்தமர்போல்வேதாந்தம் பேசிப்பேசி, யுறுதியு
ளர்போல்பூசைசெய்யலாகும், கற்றறிமோழைகளிவருத்

ராட்சஸனை, கலியுகத்திலிவர்கள்சில வேஷக்காரர், சித்தியுளபுனிதருக்கு வெறிதானுண்டு, திக்கெங்குந்திரிவார்கள் பேயனைப்போற், பத்திவளர் திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே. ௨௨

வாக்கியமே பெரியோர்சொல் வேதமாகும், வரிசைமுறைதள்ளாதவரே யோக்யமாகும், யோக்யமுடனடப்பவரே மறையோராவர், உதவிசெய்யும் புண்ணியரேதெய்வமாவார், யோக்யமுடன் புசித்தென்னபியாப்பாவி, பிணமதனுக்கிடுபிண்ட சாதமாகும், பாக்கியமே திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே. ௨௩

குளித்தென்ன குழைத்தென்ன பூசித்தென்ன. கும்பிட்டுக்கண்மூடி ஜெபித்தாலென்ன, களிப்புறவே கேட்பவருக் கியவேணும், கருத்தைநிலைநிறுத்தி மெய்யைக்காணவேணும், வொளித்திருந்து பேசுகின்றபாவிகட்கு, வொருபோதுஞ்சுகமிலலை யொழிந்தநெஞ்சே, பளிங்கனைய திருவல்லிக்கேணிவாழும், பார்த்தனிடசாரதியைப் பணிகுவாயே. ௨௪

பார்த்தசாரதிமாலை—முற்றிற்று.



சென்னை-லன் ஆப் இண்டியா பிரஸிற் பதிப்பிக்கப்பட்டது.

ஆகபுத்தகம்-129

ஸ்ரீ

ராமஜெயம்.

---

# கெருடப்பத்து.

## கஜேந்திரமோக்ஷக்கீர்த்தனை.




இவை
சிறுமணவூர்
முனிசாமி முதலியாரவர்களால்

சென்னை - சூளை,
ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்
பதிப்பிக்கப்பெற்றன.
1910.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# கெருடப்பத்து.

ஓம்பூரணனே பதினாறு திங்கட்சேரும்
பொருந்தியே யருக்கண் பதினெட்டுஞ்சேரும்
காரணனே கருமுகில்போன் மேனிசேரும்
கருணைபெரு மஷ்டாட்சரங் கலந்துவாழும்
காரணனே லட்சுமியோ டெட்டுஞ்சேரும்
மதிமுகம்போல் நின்றிலங்கும் மாயாநேயா
ஆரணனே ரகுராமா கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே. க

மந்திரமோ டஷ்டசித்து மெட்டுஞ்சேரும்
வாழ்கிரகமொன்பதுமே வந்துசேரும்
கந்திருவர் கணநந்தராசிவர்க்கம்
கலக்கியான நால்வேதங் கலந்துவாழும்
நந்திமுதற் றேவர்களுங் கவனயோகம்
நமஸ்கரித் துன்பாதம் நாளும்போற்ற
அந்தரமாய் நிறைந்திருக்குங் கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே உ

மூலமுத லோரெழுத்து நீர்தானாகும்
மூன்றெழுத்து மைந்தெழுத்து மொழியலாமோ
சீலமுதல்-ஓம்-அங் உங்-மங்-றிங்கென்றே
கருணைபெரு மிவ்வெழுத்து நீர்தானாகும்

ஆலவிஷங் கையேந்துங் கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே. ௩

ஙவ்வென்றும் கிலியென்றும் ஓம்சிவாயமென்றும்
நமநமசிவசிவ ராராவென்றும்
சவ்வென்றும் ஓங்கார ரீங்காரமாகித்
தவமுடைய விவ்வெழுத்து நீர்தானாகும்
ஒவ்வென்றும் ஓம்நமோ நாராயணாவென்று
உன்பாத முச்சரித் துகந்துபோற்ற
அவ்வென்று ரகுராமர் கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே. ௪

உதிக்கின்ற சிவசொரூப முனக்கேயாகும்
ஓம்-அவ்வும்-உவ்வுங்-கிலியுமென்றே
பதிக்கிசைந்த ஐந்தெழுத்தை வெளியில்விட்டே
பச்சைமுகில் மேனியனே பணிந்தேனுன்னை
விதிக்கிசைந்த மெய்ப்பொருளே அரிகோவிந்தா
விளக்கொளிபோல் மெய்த்தவமேவிரும்பித்தாதா
அதற்கிசைந்த நடம்புரியுங் கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே. ௫

வேதமுத லாயிருந்த சிங்கரூபம்
விளங்குகின்ற விரணியனைவதையேசெய்தாய்
பூதமுத லாம்பிறவும் புண்யநேயா
புகழ்ந்தவற்குத் துணைவருவாய் சோதைப்புத்ரா
நாதமுதல் விந்துவா யுலகுக்கெல்லாம்
நயம்பெறவே நிறைந்திருக்கும் வாதபிர்மம்
நயந்தவள்போல் நிறைந்திருக்கும் கெருடன்மீதில்

அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே.
முக்கோண நாற்கோண மொழிந்தைங்கோண
முச்சுடரே யறுகோண மெண்கோண மாகும்
சட்கோணநாற்பத்து மூன்றுகோணம்
தந்திரமுஞ் சிதம்பரமுஞ் சகலசித்தும்
இக்கோணமிது முதலாய் வகாரமட்டும்
இறையவனுய்த் தானிருந்து ரட்சித்தாலும்
அக்கோண மீதிருந்து கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந்தருள்செய்வாயே.
பச்சைமுகில் மேனியனே யுனக்கேயிந்தப்
பார்தனிலே பத்தவ தாரமுண்டு
மச்சமென்றுங் கூர்மமென்றும்வராகமென்றும்
வாமனென்றும் ராமனென்றும் பவுத்தனென்றுந்
துட்டரை யடக்கிமோகினி வேடங்கொண்டாய்
தோன்றிஞயுன் சொரூபமெல்லா மறிவாருண்டோ
அச்சந்தீர்த் தெனையாளக் கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே.
வேதியனுய்த் தோன்றிவந்தால் மாபலிக்கு
விண்ணவர்க்காய் நரசிங்கரூபமானுய்
சாதியிலே ராகவனுய்க் கிருஷ்ணனுகத்
தானுதித்து வந்திருந்தாய் தாணிவாழ்க
சோதனைகள்பார்த்திடுவோர் துதிப்போர்தம்மைத்
துஷ்டரையும் வதைசெய்து லோகமாள்வாய்
ஆதிமுதலோரெழுத்தே கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருளசெய்வாயே.

மாயவனே ரகுராமா அருகேவாவா
வஞ்சனைகள் பறந்தோட நெஞ்சில்வாவா
காயாம்புநிறமுடனே கனவில்வாவா
கருமுகில் மேனியனே யென்கருத்தில்வாவா
நாயகனே யென்னுளி லிருக்கவாவா
நாடோறு முன்பாதந் துதிக்கவாவா
ஆயர்குலத் துதித்தவனே கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே.
முப்புரத்தை பெரித்தவனே இப்போவாவா
முகில்நிறனே ஜெகந்நாதா முன்னேவாவா
எப்பொழுதுந் துதிப்பவர் பங்கில்வாவா
ஏழைபங்கி லிருப்பவனே இறங்கிவாவா
ஒப்பிலா மணிவிளக்கே யொளிபோல்வாவா
ஓம்நமோ நாராயணா வுகந்துவாவா
அப்பனே ரகுராமா கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே கக
துளபமணி மார்பழகா சுகத்தைத்தாதா
சுருதியே மெய்ப்பொருளே வரத்தைத்தாதா
களபகஸ் தூரியனே கடாக்ஷந்தாதா
சஞ்சனைமுன் வென்றவனே கருணைதாதா
பழம்பொருளே சிவயோகி பாக்கியந்தாதா
பத்திமுத்திசித்திசெய்ய வுன்பாதந்தாதா
அளவிலா மெய்ப்பொருளே கெருடன்மீதில்
அன்புடனே யேறிவந் தருள்செய்வாயே. கஉ

கருடப்பத்து-முற்றிற்று.



ஸ்ரீராமஜெபம்.

# கஜேந்திரமோக்ஷக்கீர்த்தனை.

இ-ம்-சுருட்டி-ஆதிதாளம்.

## பல்லவி.

மூலமென்றழைத்த யானையைக்காத்தருள்
முகுந்தனைப்பணிநெஞ்சே.

## அநுபல்லவி.

சீலமேவுபத்மாசனன் வணங்கும்
திருவரங்கத்தரவணைமிசை யுறங்கும்
நீலமேனியனைநிறைபரஞ் சோதி
நித்தியநிர்மலநிராமய ஆதி-மூல

## சரணங்கள்.

மழையெனமும்மதம் பொழியும் விகடதட
மத்தகஜங்கள் தோடி-இரு
மருங்குமணியணியாய் நெருங்கிதொடர்ந்து
வரவனத்தினில் நடந்தோட
எழுகடலாமென அலைகள்பொன்மணிகொழிக்
தெறியுமடுவைத் தேடி-வண்
டிரைக்கமலம்விண்டுகாக்குஞ் செந்தே
னிறைந்தினிகதண்புனல் நாடி
அழகோடிறங்கிய தில்முழுகியே பையை
அலைப்பத்தணியப்பலசலக்கிரீடை செய்ய
முதலைப்பிடித்தளவிற்கதரியே யுய்ய-மூல
தாலனைப்போலுக்ர மானகராவினைக்

கண்டதனை    டேிவெகு
காலபணுவளவும்வெறுப்புச்    சலிப்பில்லாமற்
கடுகையோ    டோடி
ஸ்தூலசிகாமகமேரு    கிருடலுஞ்
சப்பல்போல்    வாடுக்கால்
துவண்போக்கிமம்    குழைந்துநடுங்கிவிழி
சொருகிக்களை    மூடி
ஞாலவேலெதிர்த்திவினைப்    பழுது
நமக்கென்றுதலைமிசைதுதிக்கைவத்    தழுது
ஓலமிட்டண்டசராசர    முழுதும்
உடையவனெவனவன்கதியென்று    தொழுது
அடுத்துச்செவியில்வந்து    நுழைய-அபய
மென்னும் அந்தக்குரலைக்    கேட்டுபோல
அலைதவழும்ழியிற்பெரிய    பிராட்டியோ
டாடியவிளை    யாட்டு
விடுத்துயர்கருடன்மே    றேறியாபிரம்படம்
விரித்தெழுபணிச்    சூட்டுச்சேஷ
மெத்தைதுறந்துதிருமார்பிற்    டளபளென
விளங்கிடஎழில்    காட்டி
வடத்தணிகவஸ்துவமசையப்    பொன்னுடை
வயங்சப்பசுந்துளபப்பரிமள    வாடை
எடுத்திடவுருசெந்தாமரை    ஓடை
எனச்சிறந்திடக்ஷணத்தொழிப்    பீடை
மிக்ககதிர்ச்சூரியனுந்தன்    னொளிமழுங்கிடபிர
மித்துக்கண்கள்    கூசமூடி

மீதுக்ஷித்தநவரத்ன நெடுமகுடம்
விண்ணிடைவெளியில் வீச
எரிமணிப்பிரபைத்தாழ்வாகுவலம் யேசத்
திந்திரனுமிசை ஏசக்கையில்
ஏந்தியபாஞ்சசன்னியம் சக்கராயுத
மிலங்கிடக் கைகலாச
வரையுமைசிவன்முத லோரிதுவென்ன
மாயமோவென்றிசைஞ்சித்தோத்திரம் பன்னத்
திரிமுகம்வோர்த்துளச்குறுநகை தின்ன
சித்திரமிரங்கிக்கிருபைபெருகியே மின்ன-மூல
காதினிற்குண்டலசாதியினே லிருள்
பாதலத்தன் ரோட-மிகக்
ககனவர்மலர்மாரிசொரியத் தேவ
கானங்கின்னரர் பாடக்
கோதறவயிற்றில்வைத்திடு சகலாண்டமுங்
குலுங்கநான்மறை தேடச்செழுங்
கொத்துமலர்மாமு சரித்திட-அந்தர
துந்துமியொலி நீட
மாதவர்களித்தாடவேகமோடு சென்று
மரகதமலைபோலெதிர் நின்று
நீதிநைத்தஞ்சாகேயஞ்சாதே யென்று
நெறியமுதலையைக்கொன்றிடுந்தோலைத் தன்று
மூலமென்றழைத்த யானையைக்காத்தருள்
முகுந்தனைப்பணிநெஞ்சே,
கஜேந்திரமோக்ஷக்கீர்த்தனை-முற்றிற்று.

ஸ்ரீ

ராமஜெயம்.

# ஸ்ரீ கருடதோத்திரம்.

---

இஃது
மதுரைமாநகரம் பெண்ஷன் யெட்கா
ம-ா-ா-ஸ்ரீ,
நீ. இராமலிங்கம்பிள்ளையவர்களால்
இயற்றப்பட்டு

---

இஃது
சிறுமணலூர்
முனிசாமி முதலியாரவர்களால்

---

சென்னை - சூளை,
ஸன் ஆப் இந்தியா பிரஸ்ஸிற்
பதிப்பிக்கப்பெற்றன.
1911.



ஸ்ரீ

ராமஜெயம்.





# ஸ்ரீ கருடதோத்திரம்,

காப்பு.

வேதநாயகன் மேதினிநாயகன்
சீதைநாயகன் சேவடிபேத்துவாம்.

ஆணரங்க ளாயிரமுமறியாப் பாதன்
அப்புவியை யாவலுட னளங்க நாதன்
வாரணத்தை மடுவிடையில வந்துகாத்தோன்
வானவர்த மனத்துயரை மாற்றிவைத்தோன்
பூரணனைப் போதகத்தின் மருப்பொசித்த
புண்ணியனைப் புராதனனைப் புகழ்ந்து போற்றுங்
காரணனே கற்பகமே கருணைவாழ்வே
காலன்வரா தாண்டருள்செய் கருடதேவே. க

மறைமுனிவன் மைந்தனுக்குந் தக்க னீன்ற
மங்கைவின தைக்குமக னாகத் தோன்றி

இறையெமது கடவுளருக் யானமாகி
 யெவ்வுலகு மிமையவரு மேத்தாநின்ற
பொறைபுனிதம் பொற்குணநற் கருணைசாந்தம்
 புகழ்போதம் புண்ணியமும் பொருந்தி வாய்ந்த
கறையில்கதிர்க் கனகமய மானகாவே
 காலன்வாரா தாண்டருள்செய் கருடதேவே. உ

நெஞ்சமைவர் நெறியிநின்று நிலையில் லாமல்
 நினைப்புமறப் பதிகமுற்று நிசமில் பாவ
வஞ்சகர்பான் மருவிமின்னார் மயலிற் றாழ்ந்தே
 வாணாளை வீணாளாய் மடித்தேனந்தோ
அஞ்சலென்றே யன்னையைப்போ லகத்திற் றோன்றி
 யஞ்ஞான மகற்றி மறைப் பொருளை யீந்தே
கஞ்சமலர்க் காதலனே கருணைவாழ்வே
 காலன் வாரா தாண்டருள்செய் கருடதேவே. ௩

அன்னநடை யம்புவிழி யம்பொன்மேனி
 யடிக்கமல மளகமழை யங்கை காந்தள்
கன்னன்மொழி காதுவள்ளைக் கவானேறு தண்டு
 கலைமதிமா முகங்கணைக்கா லாவ நாழித்
தன்னிகறிற் சயிலமுலைத் தாளத் தந்தத்
 தையலார் மையலிடைத் தாழா வண்ணங்

கன்னிகர்க்கும் கடியமனங் கடிதிற் றந்தே
காலன்வரா தாண்டருள்செய் கருடதேவே. ச

மதியிலரை மனமிலரை பொருகாசேனும்
வழங்காத மடையர்களை மகவா னென்றும்
பதியாச ராமெனப்பல் பாக்கள்பாடிப்
பணந்தேடிப் பாவையர்க்கேபணிந்துவாழ்ந்தேன்
நிதியாசை நிலத்தாசை மாதராசை
நீத்தரிய மெய்ஞ்ஞான நிலைக்கச்செய்தே
கதிமிகுத்த கனகமய மானகோவே
காலன்வரா தாண்டருள்செய் கருடதேவே. ரு

மனத்தாலும் வாக்காலுஞ் சடத்தினுலும்
வணங்சாமற் றுதிக்காமற் றியானிக்காமல்
தனத்தாலும் தருக்காலுந் தையலார்தந்
தனந்தழுவிக் காவமுற்றுச் சழக்கனானேன்
சினத்தாலே செறிந்தபவத் தீங்கை நீக்கிச்
சித்தசுத்தி செய்துனையான் றெரிசித் தேத்தக்
கனத்தாய்நல்லருள்புரிந்து கருணை கூர்ந்து
காலன்வரா தாண்டருள்செய் கருடதேவே. சு

அன்னைவயிற் றையிரண்டு திங்கட் டங்கி
யப்புவியி லவதரித்தே னரிய வேதஞ்

சொன்னநெறித் தூயகலை பலவுங்கற்றேன்
சுகுணமிலாத் தோகையர்தஞ் சுகத்திற் றாழ்ந்தே
என்னபயன் யானடைந்தே னிடைந்து நின்றே
னிகுதகற்றி யுனதருளை யேழைக் கீந்தே
கன்னிகர்க டாவேறு கடிய கோபக்
காலன்வரா தாண்டருள்செய் கருடதேவே ௭

தாய்சகத்திற் றந்தைதமனை சார்ந்த வுற்றார்
தனயருடர் பிறப்பாருஞ் சந்தைக் கூட்ட
மாயுணர்ந்தே னறிவுகெட்டே னன்பு மற்றே
னறியாமை யாலலைந்தே னரசே நோயாம்
பேயகற்றிற் பிறழாத பெரிய ஞானப்
பெருங்கடலைப் பெறப்புகட்டிப் பிறவா வண்ணங்
காயமொரு கருமலைபோற் கலங்க நேருங்
காலன் வரா தாண்டருள்செய் கருடதேவே. ௮

மருமலிதண் டுளவமலர் மார்பன் றன்னை
மலர்மாது மருவுபுய வாதன் றன்னைத்
தருவடர்க தண்டலைசூ ழயோத்தி யாண்ட
தசரதற்குத் தனையனெனச் சனித்தான் றன்னை
[illegible]ருமையுடன் பணிந்தவருக் கடிமையான
வற்புதமே கற்பகமே யரசே வாவா

கருவுறையாக் கதியளித்துக் காத்தென் பாலிற்
காலன்வரா தாண்டருள்செய் கருடதேவே. ௮

திருவரங்கந் திருவுறையூர் திருப்புல் லாணி
திருக்குடந்தைத் திருத்தஞ்சைத திருவைகுந்தம்
திருவனந்த புரமெய்யுந் திருவட் டானம்
திருகூடல் திருப்பேறை ஸ்ரீவை குந்தம்
திருவல்லிக் கேணிதிருப் பவளவண் ணஞ்
சேத்திரங்க டொருநின்று தீமைதீர்க்குங்
கருவண்ணன் கழறுதித்துக் கதியைச் சேரக
காலன்வரா தாண்டருள்செய் கருடதேவே.

பார்வாழி பதிவாழி பரிதி வாழி
பங்கயக்கட் பரந்தாமன் பதமும் வாழி
கார்வாழி கலைவாழி கமலை வாழி
கதிவாழி மதிவாழி கவிஞர் வாழி
நீர்வாழி நிதிவாழி ராமலிங்கன்
நேசரொடு ராகவக்கோன் நீடுவாழி
சீர்கருட னடிவாழிப் பதிகந் தன்னைச்
சிந்தித்தோர் திருவடியார் வாழியாமே

முற்றிற்று.

---

# புத்தக விளம்பரம்.



| | | | |
|---|---|---|---|
| பிரபஞ்சவுர்பத்தி ஒஸ்திபதிப்பு | 2 | 0 | 0 |
| இராமாயணம் கிளேஸ் 2-வாலியம் | 4 | 0 | 0 |
| சாதாரண இராமாயணம் | 1 | 8 | 0 |
| சாதாரணபாரதம் 4-வாலியம் | 4 | 0 | 0 |
| இங்கிலீஷ், தமிழ் வைத்தியசிகாமணி | 8 | 0 | 0 |
| இந்தியன் பினல்கோட்டு ஆக்ட்டு | 3 | 0 | 0 |
| கிராமமுன்சிப்கோட்போதினி | 8 | 0 | 0 |
| இந்துலா | 4 | 0 | 0 |
| தஸ்தாவேஜுகளின் சட்டம் | 1 | 4 | 0 |
| ஸ்டாம்பு ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| 8-வது ஆக்ட்டு | 0 | 8 | 0 |
| வேதாந்த ஜட்ஜிமெண்டு | 1 | 0 | 0 |
| கண்கட்டுவித்தை (இரண்டுபாகமும்) | 0 | 10 | 0 |
| போலீசு ஆக்ட்டு | 0 | 4 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| நாரதர்கலகம் இரண்டாம்பாகம் | 0 | 4 | 0 |
| வியாசர்விபரீதம் | 0 | 4 | 0 |
| குடும்பசாஸ்திரம் எனும் சௌக்கியசாஸ்திரம் | 1 | 8 | 0 |
| நீதிவாக்கியம் இரண்டாம்பாகம் | 1 | 8 | 0 |
| மோகனசுந்தரி | 0 | 6 | 0 |
| சுந்தராங்கி | 0 | 6 | 0 |
| பங்கஜவல்லிக்கதை | 0 | 8 | 0 |
| மைனாவதிக்கதை | 0 | 12 | 0 |
| வயித்தியாமிர்தபோதினி | 0 | 10 | 0 |
| மங்களேஸ்வரீயம் | 1 | 4 | 0 |
| கௌபல் நாகக் நாகக் சுந்தர் சரித்திரம் | 1 | 8 | 0 |
| மனோரஞ்சனி | 0 | 12 | 0 |

உ

சிவமயம்.

சிதம்பரம்

# நடேசர் அந்தாதிமாலை.

## போற்றிமாலை.

---

இஃது

சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1911



உ

சிவமயம்

சிதம்பரம்.

# நடேசர் அந்தாதிமாலை.

---

காப்பு-வெண்பா

செங்கமலவாவிசூழ் சிற்றம்பலவர்மேற்
றுங்கமிகும்பாமாலை சொல்லவே-பங்கயத்தோ
னாதிசுரர்பரவு மைங்கரனார் பொற்பாத
நீதமாய்நெஞ்சே நினை.

அரசேயருவுருவாகிப்பொன்னம்பலத்தாடிநின்ற
அரசேவுலகமீரேழையுங்காத்தருளாதிசத்திக்
கரசேயுயிர்க்குயிராயன்னையப்பனுமாயருளு [னே
மரசேயெமக் கென்றருள் வாய்திருத்தில்லை யாண்டவ

ஆண்டவனே யண்டபிண்டமெல்லா நிறைந்தாட்டுவிக்
ஆண்டவனே தில்லைமூவாயிரவமரர்தொழும் [கும்
ஆண்டவனே சனகாதிக்கற முறையன்றளித்த
ஆண்டவனே நின்னடியன்றியானொன்றறிகிலனே (உ)

அறிவற்றமூடனின்னாமத்தைப்போற்றியனுதினமும்
அறிவுற்றிருக்கவருடருவாயருநான்மறையும்
அறியப்படாதசிற்றம்பலத்தாடியவாண்டவனே
அறிவைத்தருவதென்னாளப்பனேயொப்பிலாதவனே. ()

அவரேபரமெனத்தேர்ந்தறியீரம்புவியுறைவீர் [கும்
அவரேயல்லாற்றெய்வம்வேறுளதோவகிலாண்டத்துக்
அவரேசிவனயன்மாலுருவாகியமர்ந்தளிக்கும்
அவரேதென்றில்லையிலாடியபாதரறிகிலிரே. (ச)

இல்லேனினதுபொற்பாதாரவிந்தமிரந்துபெற
இல்லேனல்லன்பரிடத்தேயணுகவென்றுனின்விருப்
பில்லேன்சகத்தில்மண்பொன்மடவாரெனுமிச்சையற
இல்லேன்சிற்றம் பலநாதாவடியற்கினியருளே (ரு)

அருளேவடிவுகொண்டம் பலத்தாடியவப்பநின்
தருளேயுலகு பதினான் கினையுமளித்ததுவு
மருளேசுகர்சனகாதியர்நாலவரையாண்டதுவு
மருளேயடியனிம்மாநிலத்தேவந்தலைகின்றதே. (சா)

அலைகின்றவஞ்சகநெஞ்சேபொன் பூமியரிவையர்க்கும்
அலைகின்றனையிதற்கென்செய்குவேனம்புலியிதழி
அலையும்பணிபுனைந்தம் பலத்தாடியவத்தன்பொற்றாட்
கலைகின்றிலையினியுன்னாலெமக்கென்னருள்வந்ததே (எ)

வந்தேமுன்னாளப்பர்சம்பந்தர்சுந்தரவள்ள லுக்காய்
வந்தேதடுத்துன்னடிமை கொண்டாய்வறியேனுமுய்ய
வந்தேநின்பொன்னடிசென்னிவைத்தேயழியாவரத்தை
வந்தேயருள்வதெந்நாள்தில்லைவாழுமருட்கொண்டலே

கொண்டாய்குருலிங்கஜங்கமமாய் முன்குருந்தடிக்கீழ்
கொண்டாய்நின்னன்பர்திருவாதவூரரைக்கொத்தடிமை
கொண்டாய்நரியைப் பரியாக்கினய் சற்றுங்கூடைமண்
தோள், கொண்டாய்சிற்றம்பலநாதா வடியர்குணக்கு
ன்றமே. (௯)

அடியவர்க்கின்பந்தருந்தில்லைவாணரதுலமல
ரடியைப்பணிந்து துதித்தறியீரற்பமெயிரிடையீ
ரடிமுடியற்றுமுன்னண்ணுமலைவடிவாகிக்கல்லா
லடியிலமர்ந்தனரேயண்டர்நாதரருப்பொருளே (௰)

பொருட்கும்புடவிக்கும்பூங்குழற்பாவையர்பொங்குக
னப்,பொருட்கு மலைந்திங்குழலுகின்றேனைநின்பொன்
னடிப்பூப்,பொருட்கேவல்செய்து பணிந்தேயனுதினம்
போற்றியுய்யும்,பொருட்டேவந்தாண்டருள்வாய்தில்லை
யாடியபூரணனே. (௧௧)

பூரணமானசிற்றம்பலமோனப்பொருளெனதுட்
பூரணமாயிருந்தங்கிங்கெனுதுபுவனமெல்லாம்
பூரணமாயமர்ந்தம்பிகைபாகப்பொருந்தியின்பப்
பூரணமாகிநல்லன்பரைக்காக்கும் பொருளென்றுமே.( )

என்றுமுன்பாதமலரேதுதிக்கவிவ்வேழையைநீ
யென்று வந்தாண்டுன்னருள்புரிவாயினிதாய்தில்லையூ
ரென்றுமமர்ந்துபுலிநாகப் விண்ணவரிந்திரரு
மென்றுந்தொழுநடிக்குந்தலைவாவெம்முயிர்த்துணையே

துணையாகுந்தில்லைச்சிற்றம்பலவாணரின்றாய்மலர்த்தாள்
துணையாகவெண்ணித்துதிக்கின்றிலாய்சுத்தமூடநெஞ்
சே, துணையாகுமாமனையாளும்பொன்பூமியுஞ்சுற்றமு
ற்றுந், துணையாகுமோநவிலவாயலையென்னசொந்தமி

தேவாதியாசிவசங்கராசெம்பொன்மேனிமுக்கட்[தே
டேவாநல்லன்பருளமகலாதுதினமொளிருந்
தேவாயுலகெங்குமாயண்டபிண்டமெல்லாநிறைந்த
தேவாசிற்றம்பலநாதாவிடையுடைத்தேசிகனே. (டுரு)

தேசிகனேசிற்சபைவாசனேதெளிநான்மறைக்குந்
தேசிகமனசச்சிதானந்தபராவெங்குமாகிநின்ற
தேதிகனேயறுபானுற்றிருவிளையாடல்புரி
தேசிகனேநின்னையெந்நாள்பணிந்துதெரிசிப்பனே ()

தெரிசிக்கவென்னிருகண்களுமாவியுந்தேடியுமெத்
தெரிசிக்கவேண்டியலைகின்றவேபண்டுதேவரெல்லாந்
தெரிசிக்கவேதில்லையம்பலத்தாடுஞ்சிதானந்தனே
தெரிசிக்கவேயருள்வாய்மறைபோற்றுஞ்சிவக்கொழுந்

சிவமாகியம்முகத்லேவாகிஞானத்திருவடிவச் [தே
சிவமாகிநல்லன்பர்தேசிகனுமெங்குமாகிநிறை
சிவமாகியாளந்தச்சித்தாகிநான்மறைதேடுந்தில்லைச்
சிவமாகியெம்முயிர்க்குத்துணையாகியதெய்வமிதே. ()

மாருமலெட்டெட்டுந் தட்டி நீர்பாய - சதுரானருத்திரன் கவுலிட டழைக்கத் - தனஞ்செயன்கப்பலது தாவி பறக்க-ஏலேலோ. (எ)

மதிபிறையாலேடுகையில் மகேசுரனூர் மாங்கண்டேளதிராகச்சங்கிலியைத் - தத்தெய்யா - எறிந்துமவர் மறிக்கலுற்றூர் குதியாதமரக்கலமோடமென்றெண்ணிக்-கூசாமல்தீருவைதான் கேட்கவேவந்தார்-பதியாதவாசியைப் பிரணவத்தைக்கட்டப் - பாச்சினசங்கிலியைப்பிரணவத்தைக்கட்டப்-பாச்சினசங்கிலியைப் பயந்துமிழுத்தாரே-திதியாதுபோச்சுதேயிவள்மார்க்கமென்று - தீவாதரக்காரி போய்வருவ தறியோம் - ஏலேலோ. (அ)

பஞ்சவர்னக் கொடிவிரித்தப் பட்டணத்திற்சேர்க்கையிலே - விஞ்சுபுகழ்மனோன்மணியாள் விளக்கொளி போற்றீபமிட்டாள் - பஞ்சாக்ஷரத்தைப் பகுந்துண்டுவந்த-பரசுந்திருருநாதனுமஞ்சாதேயென்றூர் தஞ்சமென்றெண்ணிச் சலாம்வாங்கிக்கொண்டு-சாத்தினேன்பிரங்கியாயிரத்தெட்டும்-ஏலேலோ. (கூ)

எல்லையிற்கற்பித்த மாலிமாபேற்றி - இசையானசுக்கூருபாருங்கணக்கன் - சொல்வழிதவறாத சுக்காணிமாதா வக்காணிவேலைசெய்யத் தொண்ணூர்கிளாசுவல்லமுடன்பீரங்கிமேஸ்திரி வாதாமலோர்மேலோர் தாமுமேகூடிநல்லநாழிகைகேட்டு நங்கூரந்தூங்கி நன்றாகஐந்நூறுவேட்டுகளுந்தீர்ந்து ஒருமிக்கப் பதினாறுபாய்களைவிரித்துஓட்டினார் மேகமுடனோடுதேகப்பல் ஏலேலோ ஏலெலிலோதத்தெய்யா ஏலேலோ. (௰)

அஞ்சாச்சரக்கையைத் துறையினிலிறக்கியாடினேன் றிருவருளாற் பாடினேனாடினேன்-ஏலேலோ

உடற்கூறு ஏலப்பாட்டு

முற்றிற்று.

---



உ

கடவுள் துணை,

# நாலாயிரப்ரபந்த ஏலப்பாட்டு.

---

ஏலேலோ கோஷ்டிபுரம் கோவிந்தா-ஏலேலோ-பிர
பந்தஜோடம் விருப்பமுடன் கோஷ்டிபுரம் உரகமெல்ல
ணைபான சப்பல்மீதல்-பெருக்கமுடன் பொய்கைபூத
ம் பேயார் புகழ்மழிசை பிரானுடனே திருக்குருகூர்
சடகோபன் மாரன் செய்யகுலசேகரனும் உருக்கமு
டன் பெரியாழ்வார் தொண்டரடிப் பொடியாருடனே
கூடி திருப்பாணி ஆழ்வாரும் கலியன் மதுரகவி ஆண்
டாளுடன் சிறப்பாக பன்னிருவர் அதி சிங்காரமாய்
வந்தேறி மூடுக்கு தாங்கள் தாங்கள் அருளிச்செய்த
பிரபந்தங்களைப் பாட சௌமிய நாராயணனைவந்தவர்
கள்நாட பாங்காகவே பன்னிருவருங்கூட பக்தஜனரட்
சகனை பணிந்துக்கொண்டாட மேலானமுதலாழ்வார்
பிரபந்தமுன்னூறும் மூவடி அளந்ததோர் பாதத்தில்
சேரும் நான்முகன் திருவவந்தாதி தொண்ணூற்றுஉம்
நாராயணனுடைய நாமத்தைக் கூறும் திருமழிசைப்
பிரான் ஆராய்ந்துகாட்டும் திருச்சந்தவிருத்தம் நூற்
றிருபது பாட்டும் கருமுதலான தற்குக்கியானத்தை
யூட்டும் கர்மவினைகள் தம்மைக் கண்டித்து ஓட்டும்
திருவிருத்தப் திருவாசரியம அப்தாதிதிருவாய்மொழி
ஆயிரத்திரண்டு ஜோதிபெருமாள் திருமொழிநூற்றை

ந்தம் ஓதிபின்புள்ள ஜனங்களுக்கின்பமுள்ள கியாதி பெரியாழ்வார் திருமொழிநானூற் றறுபத்தொன்றும் பிரபந்தமான திருப்பல்லாண்டுமுன்னும் ஹரியுடைய பரத்துவத்தை அமோகமாகச்சொல்லும் அன்னியபத ங்களுடைய ஆண்மைகளைவெல்லும் திருமாலைநாற்பத் து ஐந்துடைய பொருளும் திருப்பள்ளியெழுச்சி ஒ ருபத்துடைய அருளும் பெரியோர்களுடைய கோஷ் டியிற்றிருளும் பூர்வஜென்மஞ்செய்த கர்மங்களும் மிரளும் அமலனாதபிரான் ஈரைந்தங்கூட்டி அனந்தசயன னுக்கு ஆரமாய்ப்பூட்டி கமலநபனனுடைய கருணையைக் காட்டி கர்மவினைகள் தம்மை கண்டித்தோட்டி திரு மொழி ஆயிரத்து யெண்பத்துநாலும் சேர்த்து திருக் குறுந்தாண்டகம் திருநெடுந் தாண்டகத்தைக்கோர்த்து பெரிய திருமடல் சிறுத்திருமடலமைத்து பிரபந்தமா ய்த் திருவெழுகூற்றிருக்கையும் சமைத்துகண்ணினுண் சிறுதாம்பு பதினொன்றின் பெருக்கம்காரிமாறனுடைய பாலன் முன்னொருக்க உண்ணவே அதிமதுரமாகவே யிருக்கும் ஊழ்வினை வலவினை யிரண்டையுமுருக்கும் பிஞ்சாய்ப் பழுத்தாண்டாள் பெருமானைத்தேடி கொ ஞ்சியே திருப்பாவை கூட்டத்தைநாடி அஞ்சனவண் ணனை அணைந்துமணஞ்சூடி ஆசையுடன் நூற்றுநாற்ப த்து மூன்றும்பாடி நாலாயிரப்பிரபந்தம் சரக்குகள் கொண்டு நாதமுனிமுதலான பேர்களுஞ்சென்று பே சாயிரநாமன் பெருமையைக் கண்டு பூர்வாச்சாரியர்

முதலோர்களும் விண்டு பூரணன் உகுத்தும் காரணன் அறிந்தும் நாரணன் இருந்தும் வாரணன் தெரிந்தும் ம ண்டமாடம்சூழும் திருகோஷ்டிபுரம தன்னிலே வந்த ரவரிருந்தார் வானோர் அறிந்தார் மலர் சொரிந்தா ஏலேலோ. (க

சந்தோஷமாய்க் கோஷ்டிபுரம்-தன்னில் - தடவண மேலேகிடந்து அந்தமுடன் எதிராஜர் - அங்கல்-அவ் டதசாவர்த்தி நடந்தவந்த ஆழ்வான் ஆண்டானும் அப்பால்வாசல்தனிலே - இடைந்து-சிந்தைமகிழ்ந்தி வருமாய் அந்ததெற்காழ்வான் சன்னதி அடைந்தரு ந்திப்பிரமாணமூலமா மூலமந்திரம் சொல்லத்தொட ந்து சொந்தமுடன் கோஷ்டிநம்பி சரமார்த்தகஞ் செ ல்லவும் எங்கும்படர்ந்து (முடுக்கு) ஓரான்வழியா உரைத்ததோர் மந்திரம் உலகாசாரியன்வாக்கால் கேட டந்ததந்திரம் போரோலக்கமான கோஷ்டியைச்சார் து பூரணவதாரனும் திருவாய்மலர்ந்து சேரவே அங் கில்உள்ள செவிதாழ்த்தியிருக்க திருவனந்தாழ்வானு கடல்போல்பெருக்க ஒருநாளுங்கேளாத வாக்கியந்த ன்னை உத்தமகோஷ்டிகள் கேட்டவர் முன்னே பெரு மையாகவே தேகம்பூரிக்கக்கண்டு பொறுமையால் சில வைஷ்ணவர்சென்று திருவாராதனம செய்யுங்காலங் கள்தன்னில் திருகோஷ்டியூர் நம்பி சந்நிதிமுன்னில இரகசியமாகவே நீருரைதத பொருளை நிறைத்திட்டா ர் சபைதன்னில் எதிராஜனருளை அகந்தையினாலவ

உரைத்திட்டானென்று அதிககோபத்துடனே நம்பியும் சென்று பகவத்கோஷ்டிக்கு முன் வந்துநின்று பிரகாசிக்கும் இராமாநுஜன் தன்னைக்கண்டு தன்னுச்சாரியருடைய சொற்றவிர்ந்த பேருக்குத் தாணியிலேயென்ன பலஞ்சொல்லும் எந்தநேர்க்குப் பன்னகருபனும் கேட்டுள்ளங்குளிந்து பரமாச்சாரியருடைய பாதத்தைப்பணிந்து முன்னாகவே யிருக்கும் நரகங்கள்தவிர வேறேநரகங்கள் சிருஷ்டிக்கவேண்டும் இவர் ஒருவன் நான் நரகத்தை அடையவும் நேரும் உலகத்தில் உள்ளோர் உஜ்ஜீவித்தால போரும்வருமந்த வார்த்தையை நம்பியுங்கேட்டு மனந்தன்னிலே அதிஆச்சரியப்பட்டு தருமிந்தப்பா சமர்த்தியெந்தனுக்கு முன்பு தங்காமல் போயிற்றே இதினுடையஅன்பு இருமிந்த கோஷடிக்கு நாயகராத்மாக இதரமதங்கள் எல்லாம் அகமாகப் போக ஆழவாரெனொருவனுக்கு இதனுடையபொருளை ஆனந்தமாகவே உறைத்திடும் அருளை சாம்வில்லை எம்பெருமானாரையின்று தழுவியே கரங்களால் ஆனந்தங்கொண்டு வாழ்வீர் நீரின்றுவாக்காலேவாழ்த்தி வைஷ்ணவசித்தாந்த மணியேயென்றழைத்தார் உபயவிபூதி நிர்வாகருங்கேட்டு உலகாச்சாரியார்முதல் வாழுமந்த நாட்டில் அபயம்கொடுத்தருளி அடியாரைநோக்கி அந்திமோபாய நிஷ்டை தன்னைதேக்கி சபைதனிலே உள்ள தாசரீடோசரமாஸ்த லோகார்த்தத்தைகேட்டுமவர் நாட தன்னில் அறிந்தும் உன்னிதந்தெரிந்தும் பிரசை

கள் கலந்தும்பாடி கோஷ்டிகூடி படகில்நாடி கடலில் ஓடி பாஷ்யகாரர் பணிந்து துவயமணிந்து மணந்தெளிந்து நீரிலே துளைந்து ஏலேலோ.      (உ)

வையமெலாம் உண்டுமிழ்ந்த கோஷ்டி மாதவன் சந்நதிசென்று செய்ய இன்றுஉற்சவங்கள் அனேகம் சேதனர்கள் கூடிநின்று உய்யவே உலகம்தன்னில் உள்ளோர் உத்தமனை மனதில்கொண்டு ஐயனுடைய அருளானகடல் அலைகளுடன் ஓடிக்கண்டு மெய்யாக விஸ்வகர்ம்மா இந்தவிஷ்ணுக்கு ஏற்குமென்று துய்ய அலங்காரம்செய்து தெப்பம் சௌமியருடன் முன்னே கொண்டு முடுக்க) வசசிறவைடூரியங் காசைகளும் நாட்டி மாணிக்கமபச்சை பலகைகள்கூட்டி உலகளந்த நாதனுக்கு உடைமைகளும் பூட்டி தலை அலங்காரமுதல் சிகரங்கள்வைத்து தங்கத்தினால் பிரதமை கண்ணாடிஒத்து கலையுடைய நாதனைக் கண்டு சேவித்து காமக்குரோத்தம மாற்ஸரவியமற்று ஆலவட்டம் முதல் அந்தணர்கள்வீச அனேகவிதபட்சி ஜாலங்களும் கீசமேலான ரம்பை ஊர்வசி ஆடிக்கூச விஜயஜயா என்று கட்டியங்கள்பேச ஆனையோடு குதிரைசிம்மம் ஆளிசனைவருத்தி அனுமாருடன் கருடன் ஆள்களைப் பொருத்திசேனைத்தலவனை அதில் மேல்செலுத்தி திருவுடையநாதன் திருவடிகள் போற்றி சேவதப்படைவகை காவல்கள் பூட்டி சுற்றிவில்லம்புகள் சோதியுடன் நாட்டிகோவர்த்தன உத்தாரணம் சேவைகள்காட்டி கோபிகள்

எல்லோருங்கூடிக் கைதட்டி நானுப்பெரும்பறைவாத்தியங்கள் அடிக்க நாகசரம் உஞ்சலாவிகளும் படிக்க பகவானுடைய இருபாதமலர் பிடிக்க பக்தகோஷ்டிகளுடைய பாபங்கள் திடிக்க கப்பலுடைய மங்களம் கனி.ர்கள்பாட காளமேகவண்ணன் கண்டுமங்கே நாட உற்பாதமாய் தேவருகந்து மலர்போட உபயநாச்சியாரை அணைந்துவிளையாட சங்குசக்கரம் பஞ்சாயுதங்கள் தரித்து தாசகோஷ்டிகளுடைய தோஷத்தைஹரித்து அங்கத்தில் பீதாம்பரங்களுந் தரித்து அனந்தகோடிஸ்நாமன் அங்கேஜொலித்து க்ஷேமமுடனே கையில் செங்கோலுங்கொண்டு சேதனகோடிகளை ரட்சிக்கக் கண்டு நேமமாகவே அந்த நித்தியனும் அண்டிநிலமகள் இருவருடன்நின்று சாமாளவண்ணனைச்சரக்காக அள்ள தாசானுதாசர்கள் கப்பலைத்தள்ள கோமளமாகவேகூடியேமெள்ள கோவிந்தநாமத்தை எல்லோரும் கொள்ளசுற்றியே கப்பலைத் சுக்கான் திருப்ப சவுமியநாராயணன் கூடியேவிருப்ப பற்றியேபாய் மறம்பக்தர்கள் குறிப்பாய் பக்தபரிபாலன் நித்திய கல்யாணன் பாண்டவர்க் கநுகூலன் பாமரர்க்குக்காலன் கூடிவிளையாடி கப்பலோடி ஸ்துதிபாடி கோஷ்டி நாதன்தழைக்க பக்தாழைக்க தாசர்பிழைக்க அருளிஇழைக்க-ஏலே.

நின்றிருந்தும் கிடந்தும் அந்நீலமேகனைப்போற்றி உண்டு உலகமுமிழந்த அந்தஉத்தம நாமத்தை வாழ்த்தி பண்டுபிரக்லாதனுக்காய் வந்தபகவானுடைய கீர்

த்திசென்று அந்தசேதனர்கள் ஸ்ரீதரனை ஏத்திஉண்ட
வர்களெல்லாருங்கூடி கண்ணன் அடியில்தாழ்ந்த வினை
டவர்கள் வினைகள்தம்மை இந்தவிஷ்ணுவுடைய ஜோ
தி (முடுக்கு) முட்டியேசுப்பலே வேகமாய்தள்ள மூவுல
கிலுள்ளவர்கள வந்தெதிர்கொள்ள குட்டிஜோசியரும்
கூடியே மெள்ள கோவிந்தனோடே நிர்ஹேதுகிருபை
கொள்ளகழட்டியே காதிலுட்ட கடுக்கனைச் சாற்றிக
ணையாழிமோதிரம கைதன்னில் ஏற்றி மிரட்டியேமவ
ண்ணையுண்ட வித்தகனைப்போற்றி மூவடி அளந்தவனை
முன்னேநிருத்தி ஒரிடம்பீருடமபாக பூரித்து உபய
நாச்சிமாரை யுள்ளத்தில்வைத்து சேரஜடை சிங்கார
ம்பண்ணிசமர்பித்து தமபதி சமேதராய்வந்து சேவித்
து கோஷ்டிநாதற்பாதம் சிரசாகவைத்து கோதைதிரு
மாமகளை மனஸால்ஸ்மரித்து மேட்டியாக இருக்கும
விண்ணுலகப்பெற்று வேதேசாதனம் முதலானதும்
அற்றுதேடியே வந்தவர்கள் திருவடியைப்போற்றிதிரு
வாபரணங்கள் விதவிதமாய்ச்சாற்றி ஓடியேசுப்பலில்
ஒளிகளைபேற்றி உலகமுண்ட பெருவாயனை வாழ்த்தி
ஆடியேரமபை ஊர்வசியும் சிறக்க அந்தரதுந்துமி வா
த்தியங்கள் உறக்கபாடியே கின்னரர் கிம்புருடர்பறக்க
பாரியுடனே லோகநாதனும் சுருக்காய் சோடித்து ம
ண்டபத்தில் சவுமியரும் வந்து சோடசஉபசாரங்கள்
கண்டுமனமகிழ்ந்து கூடியேசிங்கா சனந்தன்னிலிருந்
து குலமாமகள் நிலமாமகளை அணைந்து ஆராதனக்கிர

மம் அர்ச்சகர்செய்ய அந்தணர்கள் மந்திர புஷ்பங்கள் செய்ய பேரோலக்கமாகப் பிரஜைகளும் உய்ய பூரண தயாபரன் தேவியுடன் வெய்யலட்சம் கோஷ்டி அமு துபடி தளிகையுமிட்டு நிலமாமகள் நாதன் அம்சை செயும்பொருட்டு பட்சியபோசுகியத்துடன் பழவகை யும்தொட்டு பால்குழம்பும் போனகமும் பள்ளியத்தி ல்இட்டுநூறுகடாரத்தில் அக்கராவடிசில் நூதனமா கவே இருக்கின்ற அடிசில் வேறுவேருகவே ஒகோரை மடிசில் வேண்டியேபோதனர்கள் விட்டார்கள்வடிசி ல்சேரவே பாரியுடன் சிறப்புகளும் உண்டுசேதனகோ ஷ்டிகட்கு வினியோகம்கண்டு நேராக திருப்பாற் கடல் தன்னுல்நின்று நிலமாமகள்நாதன் ஆனந்தங் கொண்டு ரக்ஷகன் தொடர்ந்தும் பட்சமாய்நடந்தும் தக்ஷணம்மேல் கிடந்தும் பாரியையடைந்தும் மாலன் வெகுசீலன் அநுகூலன் ஜெகலோலன் லட்சுமிநாதனி ணைந்தவரமீந்துமனமகிழ்ந்து அங்கிருந்துய்ஏலேலோ.

நாலாயிரப்பிரபந்த ஏலப்பாட்டு.

முற்றிற்று.

---

ஆகமொத்தம் 159.

உ

கடவுள் துணை.

# ஞானவுடற்கூறு,

## பொதிகைமலை சிவகீர்த்தனை,

## பார்த்தசாரதிப்பெருமாள் நடபாய்ச்சிந்து,

இம்மூன்றும் அடங்கியது.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்
சென்னை - சூளை
தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை. ௩

1910

# விளம்பரம்.



இதனுல் சகலமானபேர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில், சென்னைசூளை சட்டணநாய்க்கர் தெருவில் ஸ்தாபித்திருக்கும்"சிவகாமி விலாச" அச்சியந்திரசாலையில் நானுவிதமான தமிழ், தெலுங்கு, துலுக்கு, இங்கிலீஷ், வைத்திய ஜோஸ்ய புத்தகங்கள் உண்டு. தேவையானவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கெழுதிபெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கி,

ஸ்ரீ சி. முனுசாமி முதலியார்

அண்டு கம்பெனி.

சூளை போஸ்ட்

மதராஸ்.

சிவமயம்.

# ஞானவுடற்கூறு.

வெண்பா.

சுழியறியார்க்கென்னநலஞ் சுகமறியார்க்கென்னகுரு
வழியறியார்க்கென்னவெய்தும்-வாறுகாண்
சுழியறியாமூலமறிந்தவ்வழியில் முத்தியடையார்க்கு
நமன்கால மவர்க்கேமரணங் காண்.

கும்மி.

சாந்துமிட்டு ஜவ்வாதுமிட்டுநாளை
சந்தணப்பூசிநீ சாகப்போருய்-உன்னை
சேர்ந்தடந்துக்கள் ஸீமத்திற்கொண்டுபோய்
செந்தணலாக்குவார் மானிடமே. க

அஞ்சடிவெட்டி அடிபடைபோட்டு
அதற்குமேல் வீடுகட்டுருய்-நீ
கட்டினவீட்டுக்கு காரணமாரணகங்
கண்டதுண்டோசொல்லு மானிடமே.

எட்டுகெட்டுவீடு கட்டுருய்நி
எங்கெங்கேதனத்தைப் புதைக்கிருய்நி
புதைத்ததனத்தை யின்னுருதென்று
பிரித்துச்சொல்லடாமானிடமே. ௯

மட்டக்குதிரைமே லேறிக்கொண்டுநி
பட்டணமெங்கும் சுற்றுகிருய்
பொட்டெனவேஎம ஞேலேவந்தால்
புரப்பட்டுபோவாயே மானிடமே. ௧0

கிணத்தைசுற்றிப்பில் முளேத்ததுபோல்
சிளேக்குதேநிர் செய்தபாவம்-நி
செய்தபாவம் துலேக்கவேதான்
விஷ்ணுவைதேடடா மானிடமே, ௧௧

பருப்போடும்பர மானந்தத்தோடும்
பசும்நெய்போட்டுநி உண்ணுகிருய்
நெருப்பிலேபோட்டு கொளுத்திவிட்டால்நி
நிராய்போவாயோ மானிடமே ௧௨

ஆத்திரத்தாலே பணங்காசைதேடிநீ
　　மூத்திரக்குழியில் மாளுகிறாய்-நாளை
சூஸ்திரத்தாரையை கண்டுவிட்டால்
　　சொலலாமல்போவாயே மானிடமே ௭

அறியாதவஸ்துவை அறியலாமென்றார்
　　அரிநாமபலனை அறியுமென்றார்
மதுருநெல்லூர் சாமிகளெல்லோரும்
　　வெறுத்துசொல்வாயே மானிடமே. ௮

ஞானவுடற்கூறு-முற்றிற்று.

---

## பொதிகைமலை சிவகீர்த்தனை.

இராகம்-இந்துஸ்தானி.

பல்லவி.

பிச்சையிடாகின்ற பேதைமடையர்கள்
கச்சேரிக்கே கொடுப்பார்-சிவனே.

அநுபல்லவி.

உச்சிதமாநர ஜென்மங்கடைத்தோ
இச்சைவையார்குல அச்சுதாகேழ்க்கினும் (பிச்)

சரணங்கள்.

இந்திருதிஜாலப் பிரசங்ஙங்கள்செய்தாலவர்
சிந்தைகறையார்கள்-சிவனே
தந்தைதாயார்பசி யாலேவிரந்தாலும்
தாயாரிடம்பத்தினை லழியும்பாவி (பிச்)

வெள்ளைசள்ளையாக வஸ்திரமுடுத்தினால்
நல்லமுதலியென்பார்-சிவனே
அல்லையறுத்த அடியார்களைக்கண்டால்
தள்ளுதள்ளுதெருவில் நில்லுமென்றபாவி (பிச்)

ஆல்திகுலமென்று பேசும்நகர்பர்தன்
நேசம்யினிவேண்டேன்-சிவனே
நாஸ்திதாசர்களை பூசித்தவன்வார
ளசிவிராமுனி யீசானந்தங்கேழ்க்க (பிக்)

பொதிகைமலை சிவகீர்த்தனை

முற்றிற்று.

---



திருவல்லிக்கேணி

# பார்த்தசாரதிப்பெருமாள்

## பங்களா உற்சவச்சிந்து

---

### வெண்பா.

அற்புதமாம்காவுக்குள் அன்பனுள்வார்செட்டி
செப்பரியபங்களாவும்செய்துவைத்த-மெய்பொருளாம்
பார்த்தனிடசாரதியி பவனிவருமானந்தம்
நேத்திரத்தால்காணும் நின்று.

### இராகம்-இந்துஸ்தானி

### பல்லவி.

காவித்திருபங்களா அத்தாவில்வசந்தமாக
காரணபார்த்தசாரதி வருபவனி-காவில்

காவித்தென்னஞ்சோலை வாழைக்கமுகசாலே
கனிபல அகில்புன்னை விருக்ஷத்தில்கூவிக்
குயில்கள்கொஞ்சி ஆடிமயில்களமினுசுநாடி
கெம்பீரகதுடன் வாராரே காவித்

சித்திரவிசித்திர தேவாமகிழ்கின்ற
சிப்பிகள்சமைத்தர் மாளிகை
லஸ்தர்குளோபுடன் சரக்குளாபுகள்தொங்க
லட்சணமனதோ படங்களுந்தூக்கி காவித்

அண்டமளாவிய அரும்பச்சைபந்தலிலே
வாழைமரமதாக்கியே

கண்கொண்டகாக்ஷியாய் கதிர்சுடர்தீபங்கள்
காட்சியிதுவோ காட்சிகாணவே காவித்

இருபுரமும்தடாகம் யிரங்குற்நடபாவி
அல்லிசெந்தாமரைபூர்க்கவும்
கரும்வண்டுதும்பிரண்டு விரும்பியதேனையுண்டு
களித்தச்சுழன்று கீதம்பாடவும் காவித்

மேளவாத்தியமுழங்க மேலோர்கண்டு
புகழவெற்றிவிமானத்தில் ஏகிட
ஆலவட்டம்குடை கௌரிவெண்சாமரைகள்
அன்பாய்பந்திற்கொண்டுவீசவும் காவித்

வேதவேதியர் வேதப்புரியவும்
விஷ்ணுநாமம் பக்தர்பாடவும்
பேதகமில்லாத தெய்வரம்பையர்போலுமே
பெண்கள்நடித்துநின்றாடவும் காவித்

அஸ்திரவெடிகளும் புருசுபாணங்களும்
அனேகவிதகம்பபாணமும்மதியென
பிரமிக்கமத்தாப்பு சோதியால்
மண்டலமெங்கும்பிரகாசிக்க காவித்

தாமிஷமில்லாமல் சர்வோத்திரட்களும்
சரணைகெகியென்று துதிக்கவே
சுவாமிபிள்ளை செஷன்யானுந்துதித்திட
சனார்த்தனனை யாளவேணுமே காவித்

பங்களா உற்சவச்சிந்து-முற்றிற்று.

உ

கடவுள் துணை.

# அடுக்குநிலை போதம்.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1910.

சிறுமணவூர் முனிசாமிமுதலியார்
அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கும்

# சொந்தப்புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| சோதிடசிகாமணி | 3 | 0 | 0 |
| வய்த்தியசிகாமணி இங்கிலீஷ் தமிழ் | 3 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி தமிழ் | 2 | 0 | 0 |
| ஷை இங்லீஷ் மொழி பெயர்ப்பு | 2 | 0 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள்சரித்திரம் | 0 | 12 | 0 |
| சுதேச கைத்தொழில்கள்சாஸ்திரம் | 1 | 0 | 0 |
| சுகந்த பரிமளசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம | 0 | 8 | 0 |
| சிவசொரூப சாஸ்திரம் | 0 | 8 | 0 |
| விவாகசாஸ்திரம | 0 | 4 | 0 |
| சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| நஷ்டஜாதககணிதம் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் | 0 | 8 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| அகடவிகட சமசாரி | 0 | 4 | 0 |
| ருஷ்யாஜப்பான்யுத்தம் | 0 | 4 | 0 |
| விபாசவிடரீதம | 0 | 4 | 0 |
| நாரதர்கலகம் | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 4 | 0 |
| தெய்வகுண வெளிச்சம் | 0 | 8 | 0 |
| ராஜவம்சபரம்பரை | 0 | 12 | 0 |
| ஸ்டாம்பு ஆக்டு | 0 | 8 | 0 |
| பாலீஸ் ஆக்டு | 0 | 4 | 0 |

உ

கடவுள் துணை.

---

# அடுக்குநிலை போதம்.

---

## நூல்.

சொல்லிறந்தவிடமெங்கே முப்பாழெங்கே
    துவாரபாலகரெங்கே முதற்பாழெங்கே
நல்லசற்குருநதியெங்கே வைகுந்தமெங்கே
    நாரணனும் ஆலிலைமேற் படுத்ததெங்கே
அல்லல்படும்ஐம்பூத மொடுக்கமெங்கே
    ஆறஞ்சுயிசழ்ரெண்டு முளைத்ததெங்கே
சொல்லவல்லாருண்டானா லவரைநாமும்
    தொழுதுகுருவெனப்பணிந்து வணங்கலாமே.

உந்தியெனுநிலையெங்கே அறுகோணமெங்கே
ஓங்காரநிலையெங்கே வுற்றவிடமுமெங்கே
மந்திரமுஞ்சாத்திரமும் பிறந்ததெங்கே
மறைநாலுர்விரித்தவயன் தானுமெங்கே
முந்திவருங்கணபதியும் பிறந்ததெங்கே
முக்கோணமூலையெங்கே யடிதானெங்கே
இந்தவகைபொருளறிந்து சொல்வார்தம்மை
யிறையவனென்றேகருதி யியம்பலாமே. ௨

பற்பதத்திபொங்கிவரும் வழிதானெங்கே
பரிந்துமுறைசொண்டுநின்ற அறிவுமெங்கே
உற்பனமாங்கருநின்று விளைந்ததெங்கே
யொருபாதந்தாக்கிநின்ற வடையாளமெங்கே
தற்பரமாயாகிநின்ற நிலைதானெங்கே
சாவவுயிராயெடுத்த சிவனுமெங்கே
இப்பொருளையறிந்துரைக்கும் பெரியோர்தம்மை
யிறையவனென்றேகருதி யியப்பலாமே. ௩

அடிமுடியுநடுவான நிலையுமெங்கே
அறுசுவையுங்கொண்டொளித்த விடமுமெங்கே
வடிவானவைந்தலை மாணிக்கமெங்கே
வரையானவூமையெனு மெழுத்துமெங்கே
இடமாகஆடிநிஅற பாதமெங்கே
இச்சையுடன்பேசிநின்ற எழுத்துமெங்கே
யடைவாயிப்பொருளறிந்து சொல்வார்தம்மை
யடிதொழுதகுருவென்று நம்பலாமே. ௪

சற்குருவுஞ்சந்நிதியு மானதெங்கே
சாகாதகாலெங்கே வேகாத்தலையுமெங்கே
முப்பொருளுமொருபொருளாய் நின்றதெங்கே
முனையெங்கேதலையெங்கே முகமுமெங்கே
நற்கமலமாயிரத்தெட்டிதழுமெங்கே
நாலுகையொருபாத மானதெங்கே
இப்பொருளையறிந்துரைக்கும் பெரியோர்தம்மை
யிறையவனென்றேகருதி யியம்பலாமே. ௫

நஞ்சணிந்தாமுகந்தரனைந்துமெங்கே
ஞானக்கண்மற்றக்கண் மூன்றுமெங்கே
அஞ்சுவுயிர்தனைக்கொடுக்கும் யேமனெங்கே
வாயிரக்கண்ணிந்திரனுர் தாமுமெங்கே
டஞ்சரிவாய்நின்ற பராசத்தியெங்கே
பதினாலுலோகமனு மதுதானெங்கே
வஞ்சமறப்பொருளறிந்து சொல்வாராகில்
வணங்கிகுருபரனென்று வாழ்த்தலாமே. சா

நகைபிறதவிடமெங்கே கோபமெங்கே
நரகமேழாநரக மானதெங்கே
திகைத்துமறந்திடமெங்கே நினைப்புமெங்கே
திராதகுரைவந்து சூழ்ந்ததெங்கே
பகைத்தவிடந்தானெங்கே ஒழுக்கமெங்கே
பகலிறவுயிருந்தவிடந் தானுமெங்கே
வகைபொருளையறிந்துரைக்கும் பெரியோதம்மை
வணங்கிகுருபரனென்று வாழ்த்தலாமே எ

ஆறுகால்முகமாறு மானதெங்கே
　　ஆறுபத்துநாலுகலை நின்றதெங்கே
சீறுகால்பனிரெண்டிற் கழிந்ததெங்கே
　　செத்திடமுஞ்சாகா திருந்திடமுமெங்கே
பூருவநியிருந்துவந்து பிறந்திடந்தானெங்கே
　　புந்திதனிலன்பத்தோ ரட்சரமுமெங்கே
வேறுபொருளுரையா துள்ளபடியேசொல்வார்
　　மெல்லடியிலேபணிந்து மெலியலாமே அ

ஆதிகதிற்சந்திரனும் பிறந்ததெங்கே
　　அவரொடுங்கிநிற்குமது விடமுமெங்கே
சாதிபலவொன்றாகக் கண்டதெங்கே
　　சத்திசிவமென்றுபிரி யாததெங்கே
ஓதியுணர்ந்தபூசை மறந்ததெங்கே
　　வுச்சிட்டநிட்டைதந்த விடமுமெங்கே
சோதிபோல்ஞானமொழி பெற்றபேர்கள்
　　சொல்லியதெல்லாமுடலிற் சொல்லுவாயே கூ

இருள்பிறந்தயிடமெங்கே ஒடுங்கிடமுமெங்கே
யிரண்டுதிருசங்குநின்ற விடமுவெங்கே
அருள்பிறந்துபாடிநின்ற விடமுமெங்கே
அறுத்தடைந்தவாசலொன்று கண்டதெங்கே
திருபிறந்தவிடமெங்கே எழுகிணறுமெங்கே
திருக்கிணத்தையெறைக்கின்ற ஏத்தமெங்கே
விருப்பமுடனடுக்குநிலை போகத்தை
விளம்பினேம்மெஞ்ஞான அறிவுளோர்க்கே. ௰

அடுக்குநிலைபோதம்.
முற்றிற்று.

---

ஆகமொத்தம் 161.



உ

கடவுள் துணை.

# ஸ்ரீ ரங்கநாதர் சிந்து.



சிறுமணவூர்-முனிசாமி முதலியாரால்,

சென்னை-சூளை;
தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.
1911

70

உ

கடவுள் துணை.

# ஸ்ரீரங்கநாதர் சிந்து.

இராகம்-முகாரி-தாளம் ஆதி.

கண்ணிகள்.

அண்டர்முனிவோர்கள் துதி ஸ்ரீரங்கநாதா-ஓ
அண்டினேனென்னையாள்வாய் ஸ்ரீரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலே நீ பாராதென்ன ஸ்ரீரங்கநாதா
அண்டினேனென்னையாள்வாய் ஸ்ரீரங்கநாதா-1

சண்டனுக்கஞ்சாமலுய்ய ஸ்ரீரங்கநாதா-ஓ
சாயூஜ்யந்தந்துகாப்பாய் ஸ்ரீரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலே நீ பாராதென்ன ஸ்ரீரங்கநாதா
சாயூஜ்யந்தந்துகாப்பாய் ஸ்ரீரங்கநாதா-2

செந்திருவளரும்ஞா ரங்கநாதா-ஓ
சிந்தைநோய்தீர்த்தருள்வாய் ஸ்ரீரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலே நீ பாராதென்ன ஸ்ரீரங்கநாதா
சிந்தைநோய்தீர்த்தருள்வாய் ஸ்ரீரங்கநாதா-3

வஞ்சகப்பிரபஞ்சமீது ரங்கநாதா-ஓ
மயங்காமலென்னையாள்வாய் ஸ்ரீரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்ன ஸ்ரீரங்கநாதா
மயங்காமலென்னையாள்வாய் ஸ்ரீரங்கநாதா-4

ஆனையிடற்தீர்த்தவனே ஸ்ரீரங்கநாதா-ஓ
அரவிற்பணித்தவனே ஸ்ரீரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்ன ஸ்ரீரங்கநாதா
அரவிற்பணித்தவனே ஸ்ரீரங்கநாதா-5

அன்பர்துதிக்கிரங்கும் ஸ்ரீரங்கநாதா-ஓ
அஞ்சலுடன்வந்தாள்வாய் ஸ்ரீரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்ன ரங்கநாதா
அஞ்சேலுடன்வந்தாள்வாய் ரங்கநாதா-6

ஜோதிசொரூபமான ரங்கநாதா-ஓ
சுகமதுதந்துகாப்பாய் ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
சுகமதுதந்துகாப்பாய் ரங்கநாதா-7

ஆதியந்தங்கடந்த ரங்கநாதா-ஓ
அன்புகூர்ந்தென்னையாள்வாய் ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
அன்புகூர்ந்தென்னையாள்வாய் ரங்கநாதா-8

வேண்டியவரமளிக்கும் ரங்கநாதா-ஓ
மேன்மைதந்தென்னையாள்வாய் ரங்கநாதா

ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்ன ரங்கநாதா
மேன்மைதந்தென்னையாள்வாய் ரங்கநாதா-9

ரங்கநாதா-ஓ
தஞ்சமென்றோரைக்காக்கும் ரங்கநாதா
சௌபாக்யந்தந்தருள்வாய் பாராதென்ன ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ ரங்கநாதா-10
சௌபாக்யந்தந்தருள்வாய்

ரங்கநாதா-ஓ
தீனதயாநிதியே ரங்கநாதா
சித்திதந்தென்னையாள்வாய் பாராதென்ன ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ ரங்கநாதா-11
சித்திதந்தென்னையாள்வாய்

ரங்கநாதா-ஓ
என்முகம்பார்த்தருள்வாய் ரங்கநாதா
என்றுமடிமைநானே பாராதென்ன ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ ரங்கநாதா-12
என்றுமடிமைநானே

ரங்கநாதா-ஓ
மாதுதுயில்வளர்த்தி ரங்கநாதா
மானத்தைக்கார்த்தவனே பாராதென்ன ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ ரங்கநாதா-13
மானத்தைக்கார்த்தவனே

ரங்கநாதா-ஓ
பாண்டவர்கள்தூதவனே ரங்கநாதா
பாலகனைக்காருமையா பாராதென்ன ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ ரங்கநாதா-14
பாலகனைக்காருமையா

ஆண்டாளடிபணிந்து ரங்கநாதா-ஓ
ஆனந்தசிந்துசொன்னேன் ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
ஆனந்தசிந்துசொன்னேன் ரங்கநாதா-15

நம்மாழ்வாரடிபணிந்தேன் ரங்கநாதா
நாடிவந்தேனுன்னைநம்பி ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
நாடிவந்தேனுன்னைநம்பி ரங்கநாதா-16

கம்சன்தனையழித்த ரங்கநாதா-ஓ
கார்க்கக்கடனுனக்கே ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
கார்க்கக்கடனுனக்கே ரங்கநாதா-17

அன்றுவிபீஷணருக்கு ரங்கநாதா-ஓ
அபையாஸ்தம்தந்தவனே ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
அபையாஸ்தம்தந்தவனே ரங்கநாதா-18

காளிங்கனிர்த்தனனே ரங்கநாதா-ஓ
கருணைவைத்தென்னையாள்வாய் ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
கருணைவைத்தென்னையாள்வாய் ரங்கநாதா-19

ஆலிலைமேல்பள்ளிகொண்ட ரங்கநாதா-ஓ
ஆதிநாராயணனே ரங்கநாதா

ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
ஆதிநாராயணனே ரங்கநாதா-20

சங்குசக்ராதரனே ரங்கநாதா-ஓ
ஜானகிமனோகரனே ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
ஜானகிமனோகரனே ரங்கநாதா-21

இரணியனைசம்மரித்த ரங்கநாதா-ஓ
ஏழைகளைககார்ப்பவர்யார் ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
ஏழைகளைக்கார்ப்பவர்யார் ரங்கநாதா-22

இரவும்பகல் துதித்தேனே ரங்கநாதா-ஓ
இரங்கிஅருள் தருவாய் ரங்கநாதா
ஏழைதனைக்கண்ணாலேநீ பாராதென்னரங்கநாதா
இரங்கிஅருள் தருவாய் ரங்கநாதா-23

---

## அற்புதக்கும்மி.

கொம்மியடிப்பெண்கள்-கும்மியடி நீங்கள்
குனிந்துனிமிர்ந்து கும்மியடி

செம்மையாகரங்க நாதனைக்கண்டுமே
சேவித்துக்கும்மி யடியுங்கடி—ரங்கனை
பாவித்துக்கும்மி யடியுங்கடி.

சர்ப்பசயனத்தையுடையவரே—அன்று
தர்மர்க்குஅபயாஸ்தம் கொடுத்தவரே
கற்புள்ள துரோபதையைக் காக்கும்பொருட்டாக
கணக்கில்லாசேலையைத் தந்தவரே. கும்மி

ராவணசம்மாரஞ்செய்தவரே—அன்று
லட்சுமிசிறையை மீட்டவரே
பாதகனாகிய யிரணியனையன்று
பட்சமாய்ரெண்டாய் கிழித்தவரே கும்மி

தேவர்குறைகளை தீர்த்தவரே—மலையால்
கோபிகாஸ்திரிகளை காத்தவரே
பூதகிபாலைக்குடித்தவரே—அவளை
போகவுயிரை மடித்தவரே கும்மி

அபயமபயமென் றோதுமயானைக்கன்று
அற்புதக்காட்சியைத் தந்தவரே
விதமாய்கொக்குவாய் ரெண்டாய்பிளந்திட்டு
விஷமுள்ளகம்சனை கொன்றவனே கும்மி

ஆலிலைமேல்பள்ளி கொண்டவரே—அன்று
அன்பர்க்கருள்தந் தளித்தவரே

சோதியாய்தவழ்ந்து நடந்தவரே—பாம்பை
சூட்சமாய்ரெண்டாய்கிழித்தவரே கும்மி

துளசிமாலையை அணிந்தவரே—அன்று
தூரியனுக்குதூத சென்றவரே
நிதமாய்ஓடி மண்கேட்டரக்கனை
நிலத்திலமுத்தியே கொன்றவரே கும்மி

கூர்மஅவதாரம் கொண்டவரே—வெண்ணே
கூசாமல்வாரியே யுண்டவரே
சாதகமான விபூஷணர்க்கன்னுனீர்
சாயுச்சியபதவி தந்தவரே கும்மி

காரைக்கிரைகொய்ய வந்தவரே—நல்ல
காட்டில்மனம்வந்து நின்றவரே
பாலர்களாகிய பக்தர்களைக்—சடை
கண்ணால்கண்டினி களிக்காயோ. கும்மி

ஸ்ரீரங்கநாதர்சிந்து முற்றிற்று.



உ

கடவுள் துணை.

# சிதம்பரம்
# நடேசர்சிந்து

---*---



இஃது;

சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரால்

சென்னை-சூளை

தனலக்ஷ்மி கர்த்தன அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1911.





சிவமயம்.

# நடேசர்சிந்து

சீரார்நடேசர் சிந்தென்றபாடல்
சீராகயானுரைக்க விநாயகா
சித்தம்வைத்தருளுமையா

ஆனந்தநாதா ஆடியபாதா
மோனந்தயாகவந்தே
முத்திதந்தாளுமையா — நடேசா 1

ஐயாபரமே ஆதிசிவமே
மெய்யாயுனைப் பணியும்
மைந்தனைக்காருமையா — நடேசா 2

கங்கைதரித்தாவா காலனையுதைத்தவா
மங்கைசிவகாமியுடன
மலர்ப்பதந்தந்தாளையா — நடேசா 3

சிவகாமிபாகா சின்மயதேகா
பவமதைநீக்கியெந்தன்
பிழைபொருத்தாளுமையா — நடேசா 4

பஞ்சகிர்த்தியாதார பரமதயாபர
மெஞ்சுரபஞ்சைமீது நடேசா
இருடைகூர்ந்தாளுமையா 5

சந்திரசடாதரா சாம்பசிவஹர
சுந்தரகிருபாகர நடேசா 6
சுகப்பொருள்தந்தாளையா

சரியைகிரியையோகம் சார்ந்தனமாக
கரியைப்போர்த்ததேக நடேசா
சடையனேக் காரையா 7

பதஞ்சலிவியாக்கிரர்க்கும் பாததெரிசனம்
நிதந்தந்துகார்த்ததுபோல நடேசா
நேசமாய்த்தானேயா 8

புரமூன்றெரித்தவனே புண்ணியமானவனே
சிரவலேதரித்தவனே நடேசா
சிறியேனேயாளுமையா 9

மோனஞாயமான் மூலகாரணனை
ஆனந்தத்தாண்டவனே நடேசா
அடியேனேக்காருமையா 10

தில்லேசிதம்பரனே தொண்டர்துதிஅரனே
அல்லல்படுவோனே நடேசா
ஆதரித்தாளுமையா 11

அன்னைதந்தையில்லை யன்பானபேருமில்லை
சொன்னேனுனையேயல்லால் நடேசா
சுகக்தர ஆருமில்லை 12

ஊரிருந்தென்ன உற்றாரிருந்தென்ன
ஆரிருந்துமென்ன நடேசா
அலையாதெனையளையா 13

நம்பினேனுன்னை நழுகவிடாதென்னை
அம்பிகைபாகமுன்னை நடேசா
அன்பாயெனையாளையா 14

என்போலேபாவி யுலகிலுலாவி
உன்னையேநிதங்கூவி நடேசா
உருகாதெனையாளையா 15

பத்திசெய்யாச்சிறியேனைப் பாரில்வேரனை
உத்தமயினமையனை நடேசா
யுறுதியாயாளுமையா 16

எப்போதுமித்தேகம் இருந்தென்னபோகம்
ஒப்பிலாவுன்பததனை நடேசா
உகமையாம்தந்தாளையா 17

ஆரணனாரணற்கும் அனந்ததேவர்க்குங்
காரணமானவனே நடேசா
கருத்தாயெனையாளையா 18

நித்தியானந்தமூர்த்தி நிமலா அருள்புத்தி
பத்தியாயுனைப்பணியும் — நடேசா
பாலகனைக்காருமையா — 19

இத்தனைநாளும் எளியேன்படுந்துயரம்
சுத்தனேநீதீர்த்து — நடேசா
சுகம்பெறப்பாருமையா — 20

பலவினைதீர்க்கும் பத்தரைக்காக்கும்
தவபலமானோர்துதி — நடேசா
பத்தனைக்காருமையா — 21

பஞ்சாட்சரப்பொருளே பரமசுகப்பொருளே
அஞ்சாமல்தந்தருளே — நடேசா
அனபனைக்காத்தருளே — 22

திருத்தில்லைராயா தேவர்சகாயா
வருத்தங்களைத்தீர்த்து — நடேசா
வடியனைக்காருமையா — 24

தேவாதிதேவா திருமால்விடைமேல்வா
மூவர்க்குமேலானவா — நடேசா
முன்னனையெனைக்காருமையா — 24

முத்திக்குகந்தவனே முகுந்தர்க்காழிதந்தவனே
நித்தந்துதிக்குமெனை — நடேசா
நிலைமையுடனாளுமையா — 25

அஷ்டதிசைப்பதி ஆனந்தமானநிதி
இஷ்டமாய்நலலகதி நடேசா
ஈந்தெனையாளுமையா 26

ஐம்புலத்தாலே அடியைக்காணுதாலே
இன்பம்வைத்துன்னடியை நடேசா
ஏழைகருத்தந்தாளையா 27

வையமபுகழ்மெய்யா மான்மழுவேந்துங்கையா
ஒய்யாரமாகவந்தே நடேசா
உகந்தெனையாளுமையா 28

அஞ்செழுத்தோதி யருந்தவத்தோர்ஜோதி
குஞ்சிதப்பாதந்தான் நடேசா
குழந்தையைக்காருமையா 29

ஆலவிடங்கண்டு அமரர்க்காகவுண்டு
நிலகண்டமானவரே நடேசா
நீயெனையாளுமையா 30

மாதர்வலையிற்பட்டு மயங்கினேனுன்கெட்டு
பாதகனுகாமலே நடேசா
பட்சம்வைத்தாளுமையா 31

தும்புருநாரதரை தூய்சுகமுனிவோரை
சம்பிரமமாகக்காத்ததுபோல் நடேசா
சதுருடனருமையா 32

மால்மத்தளங்கொட்ட மலரோன்தாளந்தட்ட
கால்தூக்கிஆடிநின்ற நடேசா
கழலிணைதந்தாளையா 33

பொன்னுலகவாணைப் புகழ்மயிலாபூர்
தன்னிலேவளரற்புதனே கபாலீசா
ததியிதுவந்தாளையா 34

காஞ்சிபுரியானே காமனையெரித்தோனே
அஞ்சியடியேனுக்குன் ஏகாம்பரா
அருள்தந்துகாருணையா 35

திருவானைக்காவில் திருமால்தொழுங்கோவிலில்
உருவாகியேவிளங்கும் சம்புலிங்கா
உலகிலெனையாளையா 36

அண்ணாமலையான அன்பர்நிலையானே
உண்ணாமுலைப்பாகனே அருணாசலீசா
உகந்தெனையாளுமையா 38

திங்களணிநாதா தூயர்புகழ்மாதா
தங்கமயத்தென்காளத்தி நாயகா
தமியேனைக்காருணமயா 38

சிலமுனிவர்தொழும் செல்வசிவகாமிமகிழ்
கோலப்பதங்களையே நடேசா
குறைவிலர்தந்தாளையா 39

மந்திரமூலா மறையவர்நூலா
சுந்தரம்தொழும்சீலா நடேசா
சுந்தரர்க்கநுகூலா 40

ஆடும்நடேசர் ஆனந்தசிந்தை
படிப்படிப்போர்க்கு நடேசா
பரகதிதந்தாளையா. 41

நடேசர்சிந்து முற்றிற்று.

ஆக மொத்தம் 165.

உ

கடவுள் துணை.

# திருப்போரூர்
# முருகர்சிந்து

——————*——————



இஃது;

சிறுமணவூர்-முனிசாமிமுதலியாரால்

சென்னை-சூளை

தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

————————

1911.



உ

கடவுள் துணை.



# முருகர்சிந்து



இராகம் - தங்கப்பண்.

காப்பு.

சுந்தரமுருகர் சிந்தெனும்பாட்டை
    விந்தையதாயுரைக்க விநாயகா
    உன்னடியுந்துணையே 1

திருத்தணிமுருகான்மருகா
    வருத்தஞ் செய்யாமலிப்போ முருகையா
    வந்தென்னையாளுமையா 2

தணிகாசலவசா தெய்வானைநேசா
    பணியுமடியேனிடர் முருகையா
    போக்கியென்னையாளுமையா 3

எட்டிகுலோ உமைவல்லிபாலா
    சிட்டர்தொழுஞ்சிலா முருகையா
    சிறியேனை வந்தாள்ஞனசயா 4

செந்திற்பதியானே சேவற்கொடியானே
    இந்திரர்போற்றும்வேள் முருகையா
எளியேனைக்காருமையா 5

சிங்காரவேலா சூரர்கள்காலா
கங்காதரன்பாலா முருகையா
கருணைபுரிந்தாளுமையா 6

பழனிமலையாண்டி பாதமதைவேண்டி
மொண்டனடியேனிடர் முருகையா
தொல்வினையைத்தீருமையா 7.

திருப்போரூரானே திருச்செந்திலூரானே
வருத்தப்படுவேனை முருகையா
வந்தண்டுகொள்ளுமையா 8

சண்முகதேவா சாஹித்பாவா
உன்மனமும்மிறங்கி முருகையா
உகந்தெனையாளுமையா 9

சந்தாகுகனே கதிர்வேல்முகா
எந்தாயிதுவேதருணம் முருகையா
இணையடிதந்தாளுமையா 10

ஆறுமுகநாதா இடியேன்மேலவாதா
வேறுமுகம்பாரமல முருகையா
வந்தெனையாளுமையா 11

உன்பதந்தானே புழுதியாய்நானே
எண்ணுத்துதிப்பதற்கு முருகையா
எண்ணிமனந்தாளுமையா 12

பந்தன்மீதேனித்தனைவாது
சாந்ததஞ்செய்யாது முருகையா
சற்றுமுகம்பாருமையா 12

உனையன்றிவேறே தேவுண்டோகூது
எனைவந்தளுநற்கே முருகையா
இதுசமையம் பாருமையா 14

உந்தனைத்தேடி- உருகிறேன்வாடி
வந்தெனையேநாடி- முருகையா
வரமருள்கோடியையா 15

கல்விப்பொருளால்- கருத்தில்துதிக்கில்
செல்வப்பொருள்னித்து முருகையா
செல்வனையாளுமையா 16

பாவியிலும்பாவி பாரிலுனைத்தாவி
கூவிக்கதறுமுந்தன் முருகையா
குழவியெனையாளுமையா 17

பவளச்செவ்வாயா பார்புகழ்தூயா
மூவர்கள்சகாயா முருகையா
முத்திதந்தாளுமையா 18

மாமலர்ப்பாதா மறையவர்போதா
காமதஞ்செய்யாமல் முருகையா
[illegible] 19

புள்மயிலேறும் வள்ளிமணவாளா
வள்ளமுகவழகா முருகையா
வடியேனைக்காருமைய 20

சுரர்துதிநாதா நிரைதருபோதா
மருமலர்பதாவுந்தன் முருகையா
மனமகிழ்ந்தெனையாளையா 21

அல்லுபலும் அறுபதுநாழிகை
அல்லல்படுமெனையும் முருகையா
அதரித்தாளுமைய 22

விளங்கியவேதம் விண்ணோர்கணிதம்
களங்கமறபோற்றிப்பதம் முருகையா
காணநாவாருமையா 23

மனனவிநோதாமாலைநாதா
நிதமலர்கொண்டுபணி முருகையா
நேயனையாளுமையா 24

நித்தமுனைக்கேடி நேக்திபாடி
நத்துசின்றவடியேனை முருகையா
நீதியுடனாளுமையா 25

ஓதுமவர்தங்கள்-உள்ளத்திருக்கும்
வேதப்பொருயெந்தன் முருகையா
வினைதீரப்பாருமையா 26

அள்ளியிரீர அறுகத்ரீர
துள்ளிமயிலேறிவந்தே முருகையா
தொண்டனைக்காருமையா 27

அஞ்ஞானத்தனை அகலும்படிக்குன்னை
மெஞ்ஞானத்தாயற்றுக்கும் முருகையா
மைந்தனெனையாளுமையா 28

தேவவினோதா வேந்தர்கணீதா
நாதாவுன்னாதமயை முருகையா
நாம்பினேனுளுமையா 29

கன்னியரைக்கண்டு காமன்கணைகொண்டு
உன்னிடபதமறந்து முருகையா
உன்றனருள் தாருமையா 30

மங்கையரைப்பாராமல் மயங்கித்திரியாமல்
தங்கத்திருவடிகள் முருகையா
தந்தாண்டுகொள்ளுமையா 31

ஐம்புலனிலே அன்பாயுன்மேலே
தென்பாகயான்பாட முருகையா
துன்பமனைததீருமையா 32

ஆனந்தமாக அடியேனுக்காக
தானந்தமாகவந்து முருகையா
தமிரேனைக்காருமையா 33

பாலன்படுந்துயரம் பாரெல்லாம்புகலும்
கோலப்பதந்து முருகையா
குறைவியாளுமையா — 34

நலிந்துமெலியாமல் நாடோறும்வாடாமல்
கலியனும்வாராமல் முருகையா
காப்பதுன்பாரமையா — 35

சிறியன்யனும் செய்தபிழைதானும்
கருணையுடன்பொருத்து முருகையா
ணீநேவாடுரட்சிபுமையா — 36

வஞ்சகந்திர வடிரேன்கடைத்தேற
கொஞ்சங்கடைக்கண்வைத்து முருகையா
கிருபைபுரிந்தருளுமையா — 37

சம்சாரந்தன்னில் சார்ந்துலகில்
இம்சைப்படுமென்னையும் முருகையா
ஈடேறப்பாருமயா — 38

அன்னைதந்தைநீ ஆதரிப்பாயே
இன்னையன்றிவேறுதுணை முருகையா
ஒருவருமில்லையையா — 39

பாத்தியாயுன்னை போற்றவுமென்னை
சத்தியமாகவுந்தன் முருகையா
சித்தம்வைத்தாளுயா — 40

யொன்னுலகத்தில் புரந்தனைக்காத்ததுபோல்
என்னையுமேகாத்தூன் முருகையா
இன்பம்வைத்தாளுமையா 41

நில்மையாயுன்னை நினைத்தோர்கடம்மை
உலகிலலேயாமல் முருகையா
உருதியுடனுளுமையா 42

கோழிக்கொடிபிடிக்க குன்றுபோல்வந்துநீ
ஆபத்தைத்தீர்த்திடுவாய் முருகையா
அடியேனையாளுமையா 43

சத்திவடிவேலெடுத்த-சங்கரனுர தன்மகனே
பபத்தியுடனுன்றெழுதேன் முருகையா
பட்சம்வைத்துகருமை 44

வள்ளிமணவாளா-தானமயில்வீரா
புள்ளிமயிமயிலேறிவரும் முருகையா
பெட்புடன்காருமையா 45

பாசமுடனும்ம் பக்த்தர்பறமோடும்
தலம்துதிகந்தப்பன்பாடும் முருகையா
தமிழ்க்கருள் தாருமையா 46

முருகர்தங்கப்பன்சிந்து

முற்றிற்று.



உ

கடவுள் துணை.

எட்டிகுடி வடிவேலவர் பேரில்

# தங்கச்சிந்து.

---



சிறுமணவூர்-முனிசாமி முதலியாரால்,

சென்னை-சூளை;

தனலக்ஷ்மி நர்த்தன அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1911



எட்டிக்குடி வடிவேலவர்பேரில்

# தங்கச்சிந்து.

காப்பு.

விண்ணவர்பணிந்துபோற்றும்
    விஜயநன்பதியின்மேவும்
வண்ணமாயூரவீர
    வரததண்டாயுதன்மேல்
திண்ணமாய்த்தங்கச்சிந்தைச்
    செப்பியெந்நாளும்போற்ற
விண்ணெலாம்பரவுமோன
    வேழமாமுகன்காப்பாமே.

தங்கச்சிந்து.

இராகம்-காப்பி-தாளம் ஆதி.

கண்ணிகள்.

ஓம்நமசிவாயனடி யுற்பனவுபாயனடி
    தாமரசபாதனடி - ஞானத்தங்கம்
    தத்துவபோதனடி. 1

எட்டிகுடிவேலனடி யெங்கள்முருகேசனடி
    அஷ்டதிக்கெங்கும்பரவி-ஞானத்தங்கம்
    அடியாரைக்கார்ப்பவண்டி. 2

தணிகைமுருகேசனடி தற்பரவுல்லாசனடி
    பணிபவர்தன்னேசனடி - ஞானத்தங்கம்
    பன்னிருகைவேலனடி. 3

வேலின்முதல்வனடி வித்தகன்புதல்வனடி
மாலின்மருகனடி - ஞானத்தங்கம்
மந்த்ரமுருகனடி. 4

சங்கரிதன்பாலனடி சாமிகுருசிலனடி
துங்கமறைமூலனடி - ஞானத்தங்கம்
சூரர்குலகாலனடி. 5

வீராதிவீரனடி விஜயகெம்பீரனடி
தீராதிதீரன - ஞானத்தங்கம்
தென்குமரவேலனடி. 9

வரைமீதுவாசனடி மங்களவுல்லாசனடி
துரைராஜராஜனடி - ஞானத்தங்கம்
தூயகுமரேசனடி. 7

கார்த்திகைகுமாரனடி காரணவிஸ்தாரனடி
பார்த்திபசிங்காரனடி - ஞானத்தங்கம்
பார்புகழ்செந்தூரனடி. 8

கௌரிதன்மைந்தனடி கவிவலர்சொந்தனடி
மௌலிகொள்கந்தனடி - ஞானத்தங்கம்
மந்த்ரவானந்தனடி. 9

சடாக்ஷரத்தையனடி சாமிமுருகையனடி
கடாக்ஷிக்குமெய்யனடி - ஞானத்தங்கம்
கலையுணர்துய்யனடி. 10

சண்டப்ரசண்டனடி சௌர்யவுத்தண்டனடி
தொண்டர்க்குநேசனடி - ஞானத்தங்கம்
திவ்யஜெகதீசனடி. 11

பாண்டரங்கன்பாலனடி பார்புகழ்விசாலனடி [கம்
வேண்டுகின்றோர் துன்பமெல்லாம் - ஞானத்தங்
விலக்கும்ப்ரதாபனடி. 12

கன்னியுமைபாலனடி காரணவிசாலனடி
சென்னிமலைவேலனடி - ஞானத்தங்கம்
திவ்யமனுகூலனடி. 13

கோசலைதன்பேரனடி கோலமயில்வீரனடி
வாசவன்மருகனடி - ஞானத்தங்கம்
வடிவேல்முருகனடி. 14

மாமோனதீபனடிவாசமலர்நீபனடி
தாமோதரன்றனக்கு - ஞானத்தங்கம்
தான்மருகனானடி. 15

சத்துருசங்காரனடி சாமிகுமாரனடி
சித்ரமயில்வீரனடி - ஞானத்தங்கம்
செந்தமிழ்க்குதாரனடி. 16

ரம்பைமுதலோர்நடிக்க நாரதரிசைபடிக்க
உம்பர்தொழவீற்றிருக்கும் - ஞானத்தங்கம்
ஒயில்முருகேசனடி 17

அத்வைதபோதனடி யசுரர்விநோதனடி
தத்துவபரிசுத்தனடி - ஞானத்தங்கம்
சற்குணப்ரசித்தனடி. 18

மாமௌனயோகிகட்கு மந்த்ரவடிவாய்விளங்குஞ்
சோமமுகஹேமனடி - ஞானத்தங்கம்
சுரலோகபூபனடி. 19

ஞானமுழுதும்படைத்த நாதாந்தபோதனடி
கோலமயில்வாகனடி-ஞானத்தங்கம்
குறவள்ளிமோகனடி. 20

அண்ணுமலைநாதரிடத் தன்பிளுேடுவீற்றிருக்கும்
உண்ணுமலைமைந்தனடி ஞானத்தங்கம்
உச்சிதசுகந்தனடி 21

வீரவாகுமுன்னுதித்த வேதாந்தமூர்த்தியடி
காரணவிஞேதனடி-ஞானத்தங்கம்
கலைக்ஞானபோதனடி. 22

கந்தரமிகுந்தலவுங் காரணசிவசயில
சுந்தரதயாளனடி-ஞானத்தங்கம்
தொண்டர்பணிதாளனடி. 23

மண்டலமளந்ததிரு மாலின்மருகனடி
தொண்டர்பணிவேலனடி-ஞானத்தங்கம்
சுப்ரமண்யலோலனடி. 24

சண்மதஸ்தரெல்லோருந் தாள்பணியும்நாதனடி
வண்மைமிகுநீதனடி-ஞானத்தங்கம்
வாலைகுருபோதனடி. 25

மாகதவஜராபரண மார்பப்ரதாபனடி
தாகத்மயூரனடி-ஞானத்தங்கம்
துஷ்டர்கட்குத்தூரனடி. 26

முப்புரமெரித்ததிரு முக்கண்ணஞர்தமக்குச்
செப்புகுருநாயனடி-ஞானத்தங்கம்
இவ்வியகனிவாயனடி. 27

கொண்டலுலவுமெட்டிக் குன்றில்வளர்கந்தனடி
அண்டருபகாரனடி-ஞானத்தங்கம்
அற்புதமயூரனடி. 28

அன்பருக்கன்பனடி ஆதிசுப்ரமண்யனடி
வன்பருக்கதிபனடி-ஞானத்தங்கம்
வல்வேல்பராபனடி. 29

திருப்பரங்குன்றமதிற் சின்மயசொரூபமதாய்
விருப்புறுநாதனடி-ஞானத்தங்கம்
வேதமனுநீதனடி. 30

குன்றுதோறும்வாழ்பவனடி குறமகள்பாகனடி
என்றுமனுகூலனடி-ஞானத்தங்கம்
ஏகாந்தமேலாலனடி. 31

வாலையுமைகண்மணியாய் வந்தமுருகேசனடி
சோலைமலைவாசனடி-ஞானத்தங்கம்
சோதிப்ரகாசனடி. 32

தேவரிடரைகவிர்க்கும் தெய்வானைவேலனடி
காவலனெனத்தழைத்த-ஞானத்தங்கம்
கருணைப்ரவாகனடி. 33

தேவேந்த்ரன்பூசைசெய்யுந் தேவாதிதேவனடி
பாவேந்தர்தான்புகழும்-ஞானத்தங்கம்
பன்னிருகைவேலனடி. 44

ஆவினன்குடியில்வளர் அற்புதவைபோகனடி
பூவினன்பணிங்குபுகழ்-ஞானத்தங்கம
ப்போதகுருநாதனடி. 35

காகமுனி துதிக்குங் காரணசொரூபனடி
சூரானுகூலனடி-ஞானத்தங்கம்
சுப்ரமண்யவேலனடி. 36

மேலோர்மனத்திலுறை மேன்மைப்ரதாபனடி
சாலோகனம்பினோர்க்கு-ஞானததங்கம்
தந்திடுதயாளனடி. 37

அஷ்டதிசைகளினு மன்பர்தமதுமன
திஷ்டமெலாமுடிக்கும்-ஞானத்தங்கம்
திவ்விடப்ரதாபனடி. 38

திருக்கழுக்குன்றிலுறை திவ்விய ஜெகதீசருக்குக்
குருக்களெனவேவந்த-ஞானத்தங்கம்
குமாரகுருபோதனடி. 39

வேள்விமலைதனிலே மவ்வங்கைமரமானவண்டி
கேள்விமறையோர் துதிக்கும்-ஞானத்தங்கம்
கீர்த்திப்ரதாபன. 40

நற்கிரதேவனு கு ஞானமதிற்காசிநதி
முற்காலமளித்தருள்-ஞானத்தங்கம்
மோகனகெம்பீரனடி 14

அண்டபுவனந்தொருநின் றுதரிக்குமூர்த்தியடி
வண்டணிகடம்பனடி-ஞானத்தங்கம்
வாலசுப்ரமண்யனடி 43

மூலாதாரப்பொருளாய் மோனகுவாய்விளங்கும்
வேலாயுதக்கடவுள்-ஞானத்தங்கம்
வேதாந்தமூர்த்தியடி. 43

மோனகுருபரனைப் முத்திதரும்நாதனடி
ஞானவடிவாகவளர் ஞானத்தங்கம்
காதாந்தனேனடி. 44

தில்லைநடராஜருக்குச் சேயாகவந்துதொண்டர்
அல்லலெல்லாந்தீர்த்தவண்டி-ஞானத்தங்கம்
ஐயன்காங்கேயனடி. 45

சாகரநகரிற்சேலாய்த் தானுதித்தமூர்த்தியடி
மோகனவள்ளிதன்னை-ஞானத்தங்கம்
மித்தமிடுங்கர்த்தனடி. 46

அஷ்டதிக்குப்பாலகரும அன்பொடுதினம்பணியச்
சட்டஞ்செலுத்துகின்ற-ஞானத்தங்கம்
சண்முகவேலனடி. 47

சத்தகோடிமந்திரமுந்தானும்புனிதனடி
எத்திசையுங்கீர்த்திபெற்ற-ஞானத்தங்கம்
எங்கள்முருகேசனடி. 48

கின்னரர்வித்யாப்ரசங்கீதங்கள் பாடுஞ்சபை
மன்னவனானவண்டி-ஞானத்தங்கம்
மயின்முருகேசனடி. 49

வேலவர்க்குத் தெண்டவனாய்விளங்கும்சோலைமுத்தை
ஆவலாய்க்கார்க்கவேணும்-ஞானத்தங்கம்
அருள்வேலர்கந்தன 50

மௌனகுருருத்ரமூர்த்தி மதுரகவிக்குருவும
புனிதமுருகனடி-ஞானத்தங்கம்
போதகுருநாதனடி 51

தங்கச்சிந்து-முற்றிற்று. ஆகமொத்தம் 167.

உ

கடவுள் துணை.

# கலியுகச்சிந்து.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-/௩.

1910.

# கலியுகச்சிந்து.

நாதநாமக்கிரியை-பல்லவி.

காலத்தைபாராய் கலிகாலக்கொடுமையின்
கோலத்தைக் கேளாய்.

அநுபல்லவி.

காலத்தின் கோலத்தை ஞாலத்தின்மேலோத
பாலொத்தமொழியாளே வேலொத்தவிழியாளே ()

சரணங்கள்.

அரிசிப்படிரெண்டு பணமாய்முழிக்குது
ஐயய்யோயேழைகள் புழுகாய்துடிக்குது
வரியெல்லாம்தலைக்குமேல் வாரண்டாய்திரியுது
வாங்கினகடமேறுதான் கோட்டுக்கிழுக்குது
புலம்புதேகுடிகள்—ஆடி ஆவணிகூட
பொளக்குதேவெய்யல்
நாட்டுப்புரங்களெல்லாம் ஒட்டம்பிடிக்குது
நஞ்சைபுஞ்சைகளெல்லாம் பஞ்சாய்பரக்குது
காடுமேடுகளெல்லாம் கட்டுதிட்டமாச்சு
காக்காய்குருவிகூட பிழைப்பதரிதாய்போச்சி (கால)
மழையோமழையோவென்று மானம்பார்க்கலாச்சி
மாடுஆடுகள்பேச்சி பில்லுக்கலைபலாச்சி
தரையும்உலைந்துபோச்சி தண்ணிப்பந்நீராச்சி
தங்கத்தைவைத்தாலும் வட்டிகேழ்க்கலாச்சி
முறைகெட்டுபோச்சி—தாயார்தமக்கைபோலே
பெண்தேடலாச்சி

கொண்டமனைவிபேச்சி கூழுக்கலையலாச்சி
கூத்தியார்பாதத்தைக் கார்த்திருக்கலாச்சி
சொந்தப்படிப்பெல்லாம் சூத்துக்குமணையாச்சி
சொல்லுமிங்கிலீஷுக்கு நல்லபிழைப்பாச்சி(கால)
காட்டில்மழையாச்சி கழனிவொணந்துபோச்சி
கலப்பைதாத்துக்கோலே யிரப்பில்சொருகலாச்சி
போட்டவிரைகளெல்லாம் பொரியாய்பொரிஞ்சிபோச்
பிள்ளைகுட்டிகளெல்லாங் கஞ்சிக்கலையலாச்சி [சி
மண்மாரியாச்சி—நாட்டுப்புரங்களெல்லாங்
மண்மாரியாச்சி

யிருந்தவிரைகளெல்லாம் யேனோவிதைத்தமென்று
யிரவும்பகலுமாக முறையிட்டிருக்கும்போது
எடுயெடுவாயிதா பிடிபிடி ஆளென்று
எழெட்டுபேராக வீட்டைவளைத்துகொண்டு
ஜப்திகளாச்சி—ஆடுமாடுகளெல்லாம்
யேலமாய்போச்சி

வீட்டுவரிவந்து வாசக்கால்தூக்குது
வேபாரவரிவந்து சாமானைவளைக்குது
குப்பைவரிவந்து குடிசையைபிடுங்குது
கொளுத்தும்விளக்குவரி கழுத்தைப்பிடிக்குது
வேடிக்கையாச்சி—தட்டுமுட்டுகளெல்லாம
வியாபாரமாச்சி

களிதின்றுபிழைக்கவும் கேவுறுமொளைக்குது
கம்புசோளங்க... வம்புகள்செய்யுதே

கூலிக்கிபோனலும் லஞ்சங்கள்கேழ்க்குது
குடுத்தாலும்காலானுள் அடித்துத்துரத்துது(கால)
சீமைசிட்டிகளெல்லாம் சிரிப்பாய்சிரிச்சிபோச்சி
சமுசாரிதாசியும் வேஷமஒன்றுய்ப்போச்சி
பொருமையாய்பிழைத்தவர் பொழப்புக்குயிழுப்பாச்
பொய்சாட்சிசொல்வோர்க்கு கைமேல்காசியாச்சி [சி
கடைகெட்டுப்போச்சி—சருவகுலங்களும்
நடைதப்பிப்போச்சி

அந்தணர்குலத்துடன் ஆகாரம்போச்சுது
அவரவர்சாஸ்திரம் பாணமேல தூக்குது
பணமென்றல்பிணங்கூட வாய்கொஞ்சத்திரக்குது
பாசுபண்ணவர்பேச்சி வேலைக்கிதொங்குது(கால)
தாவொப்பிவந்தாலும் சேயன்டணரலாச்சி
தம்பித்தமயன்பெண்டை தெம்பாயிருக்கலாச்சி
நாய்போலேவிலைமாதர் யெங்கும்பெருத்துப்போச்சி
நாயகன்ஒப்பியே கூட்டிப்பிழைக்கலாச்சி
சுணைகெட்டுபோச்சி—பணமேபெருமையாச்சி
ஜாதிகள்போச்சி

பலத்தஉத்தியோகத்தை பார்க்கமணேவியாச்சி
படுத்துயிருக்கும்போது அடுத்தப்புணரலாச்சி
கலங்கிவேசியரெல்லாங் கண்ணீர்சொரியலாச்சி
கட்டினமணேவியை விட்டுப்பிழைக்கலாச்சி
வழிகெட்டுபோச்சி—தகப்பன்பிள்ளையுங்கூட
வழக்காடலாச்சி

பூமியில்பிழப்பற்று காவியுடுத்தலாச்சி
பூர்னமாய்கெஞ்சாதம் அடித்துமயங்கலாச்சி
சாமியென்றவருக்குப் பேர்கள்நிகளமாச்சி
சாம்பலைப்பூசவும் தெரியாதவர்க்குச்சீச்சீ(கால)
கடுகடுத்துப்பெற்றத் தாயையுதைக்கலாச்சி
கட்டினமனைவிசொல் தட்டாதிருக்கலாச்சி
கொடுத்தக்கடனைக்கேட்டால் சோட்டைக்காட்டலாச்
கொஞ்சம்யேமாந்தாக்கால் பஞ்சாயடிக்கலாச்சி[சி
அஞ்சாமலபோச்சி—பெரியோர்சிறியோரென்ற
அளவெல்லாமபோச்சி

அருத்தமுண்டைகள்பிள்ளை பெத்துவளர்க்கலாச்சி
அப்பன்யேமாந்தாக்கால் தாயைப்புணரலாச்சி
திருட்டுபிள்ளைகள்பெத்து முறித்துயெறியலாச்சி
தெய்வத்தைநினைப்பவர் லட்சத்திலொன்றாச்சி
கட்டிகொடுக்குமுன்னே கள்ளக்குட்டிகளாச்சி
கட்டினமூன்றுனாள் பெத்துமுரிக்கலாச்சி
மட்டிமுண்டைகளாலே மானங்கெட்டுபோச்சி
மாதாபிதாபேச்சி தலையைகுனியலாச்சி
அதிகமாய்போச்சி—குடி செட்டி முண்டைகள்
அணியணியாச்சி யிப்போ

பெண்கள்வியாபாரம் செய்துபிழைக்கலாச்சி
புருஷன்வெளுக்கக்கட்டி பினக்கிதிரியலாக்சி
சண்டைசாடிக்கெல்லாம் பணத்தையிரைக்கலாச்சி
சாமிக்குகொடுப்பவர் பூமியில்மருந்தாச்சி(கால)

பஞ்சாங்கம்படிப்பெல்லாம் பஞ்சாய்ப்பரந்துபோச்சி
பரச்சிக்கும்பணந்தந்து சிரப்பாய்நடக்கலாச்சி
அஞ்சாமல்பரசோத்தில் அந்தணர்விழலாச்சி
அவர்கள்மனைவியெல்லாம் அழுதுபுலம்பலாச்சி
குலங்கெட்டுபோச்சி—அந்தணருலேயே
குடிகெட்டுபோச்சு
துரைக்குபுரந்தவன்போல் டொப்பிசட்டைகளாச்சி
சோடும்செரும்புப்போச்சி பூட்சுதூக்கலாச்சி
அடுப்புங்கரையில்கூட யிங்கிலீஷ்பேசலாச்சி
ஐயமார்குடிக்கவே . அடிக்கொருகடையாச்சி (கா)
சீமைதுரைகளெல்லாம் காவியுடுத்தலாச்சி
சாதிதமிழரெல்லாம் சட்டைமாட்டலாச்சி
காலம்தலைகிழாச்சி கருப்புக்குடியாய்போச்சி
கண்டவிடங்களெல்லாம் பையில்யிரச்சலாச்சி
வேதங்கள்போச்சி—கிருஸ்தவர்கூச்சலே
வேடிக்கையாச்சி
கோவில்குளங்களெல்லாம் குட்டிச்சுவராய்போச்சி
குடிபரதிகமாச்சி கடைகள்பெறுத்துபோச்சி
கிருமதேவிகளெல்லாம் கடைபாய்பரந்துபோச்சி
கண்டவிடத்தில்வாந்தி பேதியதிகமாச்சி
கலியுகநடத்தைக்கு கடவுளும்சிரிக்குது
காலத்துக்கேத்தாப்போல் மாரிகள்வருகுது
குளிருகாச்சலில்பாதி கூண்டோடேசாய்க்குது
குனிந்துயெழுந்தபேரை வாந்தியில்மடக்குது

பேதியில்பாதி—யிப்படிமடிஞ்சியும்
துள்ளுதேகூவி ஐயோ
யின்றைக்கிருந்தவர் நாளேக்கில்லேயென்று
யார்க்குந்தெரியுமிந்த ஊர்க்கும்தெரியுமிது
யேனோகெருவங்கொண்டு வீணுகமடியுது
யெண்ணிப்பார்த்தால்தினம் ஆயிரம்சாயுது (கா)
பணங்கையில்வருதென்று பொய்சாட்சிசொலலாதே
பரிதேசியேழைமேல் புலிபோலத்துள்ளாதே
முழுவேஷம்போட்டுநீ மோசங்கள்செய்யாதே
மூச்சிவெளியேபோனுல் சீச்சீபிணமாச்சே
கெருவங்கொள்ளாதே—நிலேயில்லாகழுதேநீ
கெட்டுப்போகாதே
ஊத்தஉடலேநம்பி ஓதிபோலேநிகளாதே
ஊரைபகைத்துகொண்டு வேருடன்மாளாதே
காத்தைமலேத்துகொண்டு கருமங்கள்சேடாதே
கலியுகசிந்தைநீ பழுதாகசொல்லாதே (கா)

---

## கும்மிப்பாட்டுகள்.

அண்ணனுக்குத்தம்பி துரோகஞ்செய்யுங்காலம்
அப்பனேப்பிள்ளே யுதைக்குங்காலம்
பண்ணினநன்றி மறக்குங்காலம்—பழி
பாவத்துககஞ்சாகலிகாலம் (௧)

புருஷனேப்பெண்டீ வுதைக்குங்காலம்- பெற்ற
பெண்ணே தகப்பன் புணருங்காலம்

தருமநெறியை மறக்குங்காலம்—கெட்ட
தருதலைக்கேத்த கலிகாலம் (௨)
தங்கையைஅண்ணன் புணருங்காலம் ஐயா
தாயைப்பொலிந்து மடிந்தகாலம்
மங்கைக்கு மஞ்சளரைக்குங்காலம் ஐயா
மானமில்லாத கலிகாலம் (௩)
கொண்டபுருடனை திட்டுங்காலம் இவள்
கூலிகொடுத்து புணருங்காலம்
முண்டைகள்பிள்ளை பெருகுங்காலம் ஐயா
மோசத்துக்கஞ்சா கலிகாலம் (௪)
கட்டினமாது அலையுங்காலம் யிவன்
காவியுடுத்தித்திரியுங்காலம்
புட்டிபுட்டியாய் குடிக்குங்காலம்ஐயா
புளுகருக்கேத்த கலிகாலம் (௫)
பொய்யான்பத்ரமெழுதுங்காலம்சாட்சி
பூட்டியேகோட்டில் கெலிக்குங்காலம்
தெய்வப்பொருளைத்திருடுங்காலம் இது
தீவினைக்கஞ்சா கலிகாலம் (௬)
அருமையரியாமுரட்டுக்காலம் யிது
கர்ம்மியைபோற்றுந் திருட்டுக்காலம்
சிறுமணவூர்முனி சாமிசொல்வாக்கியம்
சோதித்துபார்கலி காலகுணம்

கலியுகச்சிந்து முற்றுப்பெற்றது.

உ

கடவுள் துணை.

பீபில்ஸ்பார்க்கு

# வழிநடைச்சிந்து.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்


சென்னை - சூளை

தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1910

பீபில்ஸ்பார்க்கு

# வழிநடைச்சிந்து.

காப்பு - பின்முடுகு வெண்பா.

அங்கத்தைப்பூம்பாவை யாக்கியருள் மயிலைச்
சங்கரன்மீதிற்சிந்துசாற்றவே - அங்கமன்றுள்
நீடுசடையாடநட மாடபாரூருளோர்
கோடுறுநற் குஞ்சரத்தாள் கூறு.

சீர்மருவுஞ்சென்னைநகர் செங்கான்கடைக்கடுத்த
முல்லாவீதிதனில் மொய்குழலேவீற்றிருக்கும்
காரிகையேநாமிருவர் கைகோர்த்துவிப்போது
மயிலைநகருக்கு மாதரசேபோகலாம்.
அறுபத்துமூவரையும் அங்கம் பூம்பாவையையும்
கபாலீசர்வருகிற காட்சியையுங்காணலாம்
அல்லலறுத்த அடியார்கள்பாதத்தாள்
பட்டாலும்பாவங்கள் பறந்தோடும்பாராய்
குத்தினிசேலையுங் குணமானபஞ்சவர்ன
பட்டுரவிக்கையும் பத்தரைமாற்றுத்தங்கம்
பசும்பொன்னால்பூஷணமும் போட்டுஅலங்கரித்து.
புறப்பட்டுவருவாயே - தங்கமே
பொழுதுமிகவாகுதிப்போ.
(க)

கடுகநடந்துவாராய் கட்டழகிமுல்லா
சாயபுவீதியிது சட்டமுடன்பாராய்
பக்தர்கள்தான்தொழும் பரமபதநாதர்
வைகுந்தசேவை தரும்ஸ்ரீரங்க

நாதர்சன்னிதி நாயகியேகேளாய்
அருணாசலேசுரர் ஆலயத்தைப்பாராய்
தர்மராஜாகோவிலிது தண்ணிதொட்டிப்பாராய்
ஆனைகெவுனியிது அடுத்தாப்போல்தோட்டம்
விக்டோரியாள்தோட்டமிதின் விசித்திரங்கேளாய்
அந்தமானஓராதி அழகானகேட்டு
பாராயிருக்குறார் பாரடிபெண்மயிலே
மண்ணாலேமேடிட்டு மரத்தாலேபாளங்கட்டி
போலபெருத்த புழலேறிதண்ணீரை
வாட்டர்பைப்ஸ்வைத்து வழங்குறார்பாராய்
வாலிபப்பெண்கள் வரிசைவரிசையாக
தண்ணீரைமொண்டு தலையிலேதானெடுத்து
இசையவழிநடந்து யேகிறார்பாராய்
ஆண்கரடி பெண்காடி அதற்கொருகொட்டாயாம்
பெரும்புலி சிறுத்தை பேர்போனசிங்கம்
கல்லானையொன்று கனமுடன்வாழுதற்கு
சுற்றிலுந்தகட்டினால சொகுசாகமறைத்துவிட்டு
ஆளொருவர்க்குமே அரையணாவாங்குகின்ற
இன்ஸ்பெக்டரிவர்தான் எதிரிலேபாராய
பலகைவாராவதி பாங்கானமேடு
சுற்றிலுந்தண்ணீரில் சொகுசாகபோட்டுவிட்டு
காலணாவாங்குவோர் கட்டழகிகேளாய்
மலையிலேவாழும் மலைநாகம்பாராய்
பார்த்தால்பயங்கொடுக்கும் பட்சியிதுகேளாய்
பிடிங்கிதின்னும்பட்சியென்றுபேசுகிறார்கேளாய்

பிள்ளைகள் விளையாட பெருமையானவுஞ்சலித்
நெருப்புதின்னும்பட்சியிதினை நேர்மையைப்பாராய்
மக்காமதீவினில் மாறுபேறுண்டிதற்கு
தீக்குருவியென்று தீர்ப்புசெய்திருக்கிறார்
இதற்கொருகொட்டாயும் இருக்குதுபாராய்
பட்சிகளிருக்கிறதைபாராய்நீபெண்மயிலே
கடல்காக்கைகள்ளிகாக்கை கண்சிவந்தநாரைகளும்
வக்காவுங்கொக்காவும் வழிமறிக்கும்வலியனுக்கும்
பாலக்குருவியுடன் பாப்பாரமைனாவும்
நீர்கோழிகாட்டுக்கோழி சிரானகானுங்கோழி
காடைகள்கவுதாரி கல்பொருக்கிகினுவைகளும்
மாடப்புருக்களுடன் மணிப்புருதவிட்டுப்புரு
தூரத்தில்கூடுகட்டும் தூங்கணாங்குருவிகளும்
மூக்குகள்நீண்டிருக்கும் மீன்குத்திபட்சிகளும்
கொண்டலாலதிடைகாருணமான அடைக்கலான்
லால்சிட்டுலங்காசிட்டு நலமானதேன்சிட்டு
புல்புல்குருவிகளும் புகழான ஆள்காட்டி
நாமக்குருவியுடன் நாராயணபட்சிகளும்
மயில்களுங்குயில்களும் மருவிவிளையாடுறதும்
சப்ஜா கயரா கலிங்காப் படங்கா
சீனிக்கருணை சாதாவிடைகளுடன்
ஆட்டப்புருக்கள் அணியணியாய்நிற்குது
பச்சைக்கிளிகளுடன் பஞ்சவர்ணக்கிளிகளும
நொச்சிக்கிளிகளுடன் சொளம்புக்கிளிகளும்
வெள்ளைக்கிளிகளுடன் ரங்கோன்கிளிகளும்

என்னென்னபட்சியென்று எடுத்துரைப்பேன்கேளாய்
சூட்சமாய்சொன்னேனென்பார் தங்கமே
சொல்லமுடியாதே. (௨)
இன்னம்விநோதங்களை எடுத்துரைப்பேன்கேளாய்
கழுதைக்குரத்தியுடன் காட்டுப்பெருச்சாளி
ஆந்தையுங்கோட்டானும் அழகானவல்லூரும்
குள்ளநரிகளுடன் குழநரிதேவாங்கு
ஆமையும்பச்சைசஓணன் அழகானமுள்ளம்பன்றி
சிவிங்கிமுசலுடன் சீமையணிப்பிள்ளை
பயிரியடப்பானும் பாங்கானகாட்டுப்பூனே
புனுகுப்பூனேயுடன் புகழானகீரிப்பிள்ளை
காட்டுப்பசுக்களுடன் கடம்பைகள்மேயுதுபார்
புள்ளிமான்களுடன் புகழானகிளைமான்கள்
வெள்ளைமான்களிது விளையாடிமேயுதுபார்
குரங்குகளெல்லாம் கூட்டமாயிருந்துதானல்
சண்டைக செய்யுதென்று சங்கிலியால்தான்பூட்டி
ஒவ்வொருகூண்டுகளில் விட்டியிருக்குதுபார்
மந்தியென்றுசொல்லும் மலையாளக்குரங்குகளும்
கல்லாலடிக்கிற ரங்கோன்குரங்குகளும்
கொண்டமுசல்களுடன் லண்டன்குரங்குகளும்
காட்டுமனிதருடன் கருத்தகுரங்குகளும்
கடலைகொடுத்தால் கையால்சலாஞ்செய்யும்
நாட்டுகுறங்குகளை நலமுடன்பாராய்
பாரியதுரைகளுக்கு பான்மேடைபாராய்
செவ்வாய்சனியிலும் சாயங்காலவேளைதனில்

இங்லீஷ்வாத்தியம் இன்பமுடன்கேழ்க்கலாம்
மகாராஜராஜஸ்திரி ஆல்பிரட்துரையவர்
வந்தவொருநாளையிலே வைத்தவொருபூஞ்செடியாம்
செளித்தயானையிதோ கிளிமொழியேயேயுதுபார்
அதுதான்பெண்மயிலே அழகானஓவர்சீர்
வல்லீஸ்துரையவர்கள் இருக்கிறபங்களா
பச்சங்கள்மண்டேகம் முதலைசள்வாழுதற்கு
சுற்றிலுங்கம்பியால செய்குசாய்வலையின்னி
நடுவிலேபிலவர்ஸ்டப் நாயகியேநீபாரும்
பில்லறுக்கும்வண்டியிதின் பெருமையைப்பாராய்
அறுத்தவொருபில்லுகளை அணியணியாய்பேர்போட்டு
கம்சேரிஆர்ட்டு கோவேறுகழுதைகட்கு
நிறுத்து அனுப்புகிற திராசுயிதுபாராய்
காடியிதில்வாழ கட்டினார்கிணறுபோல
நாலுமூலை கட்டு நடுவேசுகோடு. [தோட்டமிது
பாாத்தாயே பெண்மயிலே—சங்கமே பட்டணத்
சள்ளைக்குடித்துவிட்டு கன்னங்களவுளும்
கண்டபடிசண்டைசெய்து பண்டையுடைப்பவர்கள்
துண்டகாதனஞ்செய்யும துன்மார்க்கரிருக்கிற
மண்ஜெயிலிது சா மாங்குயிலேபாராய்
கைதிகள்செய்கிற பயிர்களைநீபாரும், கொலைசெய்யும்
மாந்தருக்குநாட்டினார் தூக்குமரம், நடமுடனேயிதுதா
ன்நாயகமேநீபாரு, சிந்தாதிரிபேட்டை சிறப்பானபாளயமடி, க
டையுங்கடைத்தெருவு கட்டழகிபாராய், போல்பெருத்தபெ
ருமையுடன்வாழ்ந்த

முருகப்பமுதலியார் முன்னாளிற் கட்டின
சித்திரபங்களா சிரப்பதனைப்பாருய்
சாமிநாயகன்ரோட்டை சட்டமுடன்கடந்தோம்
கிளாஸ்காரன் தண்ணீர்பந்தல்கிளிமொழியேயிதுதான்
டைலர்தச்சவாடியுடன் சதுரான ஆஷ்டன் துரை
ஷாப்புகளிருக்கிற சட்டத்தைப்பாராய்
பாட்டர்ஸ்தோட்டம் பக்கத்திலேகிளப்பவுசு
எந்தவெளிடாணு மாதாகோவில்பாராய்
எதிரிலேஸ்கூல் இதுதான்ராயப்பேட்டை
சீர்பெற்றுவாழும் செல்லப்பன்மிட்டாய்கடை
பூரியலுவாவும் புகழான நொக்கல்களும்
லட்டுஜிலேப்பியுடன் நலமான அதிரசம்
பாலகோவாஇமிர்தியும் பாங்கானபகோடாவும்
வாங்கித்தருகிறேன் வாழ்மயிலேகேளாய்
தாண்டவராயன் தண்ணீர்பந்தலிது
உண்டுஇளப்பாறி ஒருமித்துப்போகலாம்
பிரசன்னவிநாயகர் சந்நிதியிதுதான்
அப்பட்டன்வாராவதியதனையும்நாம்கடந்தோம்
அப்பர்மடமிது அன்புடனேசேவிப்பாய்
குடஞ்சட்டிசெய்யுங் குசப்பேட்டைபாராய்
மயிலைநகர் வந்தோம் வாழ்மயிலேகேளாய்
தீராவினை தீர்க்கும் திருக்குளத்தைப்பாராய்
கபாலீசர்வருகிறார்பார்-தங்கமே கண்டுதெரிசிப்பாய்
ஆரணங்கேயிவர்தான் அறுபத்துமூன்று
அடியார்கள்பாராய் அமர்நீதிஎனுதி

அரிவாட்டர்அப்பூதி இசைஞானிநாயனர்
இளையான் குடிமாரர் இடங்கழியதிபத்தி
இயற்பகைசாக்கியரும்உக்கர பசுபதிஉத்தமர்சிறுத்தொ
ஐயடிகள்காடவர் அழகானகழற்சிங்கம் [ண்டர்
கர்கலியர்கலிக்காமா சணப்புலனாயனரும்
கண்ணப்பர்கணநாதர் காரைக்காலம்மையரும்
குங்கிலியக்கலயர் குலசிங்கர்காரியரும்
கோட்புலிகூற்றுவரும் நேசச்செங்கட்சோழரும்
சடையர்சிறப்புலியர் சண்டேசர்சத்தியரும்
சுந்தரமூர்த்தியுடன் சொகுசானதண்டியரும்
நமிநந்திநெடுமாரார் நரசிங்கமுனையரையர்
சேரமான்னேசன் செருத்துணைநாயனரும்
திருநாவுக்கரசர் திருக்குறிப்புத்தொண்டரும்
திருமூலநீலநக்கர் திருநாளைப்போவாரும்
புகழ்சோழநீலகண்டர் புகழ்த்துணை சம்பந்தர்
மானக்கர்பூசலார் மங்கையர்க்கரசியரும்
முருகர்முனையாடுவார் மூர்க்கரெறிபத்தர்
மெய்ப்பொருள்வாயிலார் மெய்கண்டர்விரன்மிண்டர்
சிவனடியார்களிவா செல்வவிநாயகரும்
வள்ளிதெய்வானையுடன் வடிவேலர்வருகிருர்
அங்கம்பூம்பாவையையும் அழகுகபாலீசனையும்
அம்மன்கற்பக வல்லியம்மையையும்
கண்டுநேரம்பணிவோம்-தங்கமே
காட்சிதருவாரே (௯)

வழிநடைச்சிந்து—முற்றிற்று. ஆகமொத்தம் 169.

உ

கடவுள் துணை.

# மதனசுந்தரி

## ஓரடிச்சிந்து.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-ரு.

1910.





சிவமயம்.

# மதனசுந்தரி ஓரடிச்சிந்து.

டம்பாச்சாரிசொல்.

வண்டுநிகர்விழியாளே மாவமுதமொழியாளே
தண்டையணிகழலாளே தாரணிந்தக்குழலாளே
அண்டுமெதன் துணையாளே அளவிலாவெழிலாளே
மண்டுநடையொயிலாளே மாகுயிற்குயிலாளே
ஒண்டொடியேமாணிக்கமே—என் கண்ணுட்டி
உனக்கிணைசொல்வதுண்டோ.

மதனசுந்தரிசொல்.

ஆசையுள்ளக்கண்ணாளா அழகியமணவாளா
வாசமணியுபர்தோளா வர்ணசோடணிதாளா
வீசுமலர்க்கணைவேளால் வெதுப்பாதேஎன்னைவாளா
ஈஸ்வரியேயென்னையாள யென்றுநான்வெகுநாளாய்
பூசைபுரிந்தேனடா—என் கண்ணாளா
புஷ்பங்கரத்தெடுத்தே.

டம்பாச்சாரிசொல்.

வட்டமணையின்மீது திட்டமுடனிருந்து
தொட்டுகழுத்தில்தாலி கட்டியவென்னுடைய
மட்டிமனைவியெனும் தாட்டிச்சனவோர்பீச்சை
கிட்டியென்காலினால் எட்டியுதைத்துத்தள்ளி
உந்தனிடம்வாழ்வதல்லால்—என் கண்ணுட்டி
யொருவருடன்வாழ்வதுண்டோ.

மதனசுந்தரிசொல்.

கலிக்கித்துருயழகும் கஸ்தூரிப்பொட்டழகும்
சிலுப்பாமினுக்கழகும் சேர்கிருதாவழகும்
தலைப்பாகையினழகும் சரிகைறுமாலழகும்
நிரமாம்வடிவழகும் நடையின்ஒயிலழகும்

கண்டபோதேயென்னுடைய—வென்கண்ணாளா
கருத்தையுருக்குதடா.

டம்பாச்சாரிசொல்.

வஞ்சியாமிளங்கொடியே மதவாரணப்பிடியே
விஞ்சுமெழிற்பைந்தொடியே மென்மருங் சற்றுடியே
நெஞ்சினிலென்றுங்குடியே நீங்குவனோநொடியே
தஞ்சமுன்மலரடியே தானடைந்தேனடியே

பஞ்சையென்மனையாளோநான்—என்கண்ணுட்டி
பறக்கவடித்திடுவேன்.

மதனசுந்தரிசொல்.

காட்டிக்கொடுத்ததெய்வம் கருணைபுரிந்ததெய்வம்
நாட்டியுயர்ந்ததெய்வம் நலம்பெறச்செய்ததெய்வம்
பாட்டியுயர்ந்ததெய்வம் பணிவிடைசெய்யுந்தெய்வம்
கூட்டிக்குடுத்ததெய்வம் குளிர்முகம்பார்த்ததெய்வம்

கும்பகோணத்தெய்வமல்லவா—என்கண்ணாளா
குலதெய்வம் வேறுசொல்லவா.

(டம்பன் இன்சாழ்மென்டாக்டி னின்றுந் தப்பித்துக்
கொண்டு மதனசுந்தரிவீட்டுக்குவந்து படுத்திரு
ப்பவளை யெழுப்ப, அவள் பராமுகமாயிரு
ப்பதைக்கண்டு சொல்லுதல்.)

தேசுலவுமடமானே தெவிட்டாதசெந்தேனே
ஆசையோடுதினம்நானே அடுத்தின்பஞ்செய்தேனே
வேசிகட்குளுன்னைத்தானே மேலாகநினைத்தேனே
காசினியளித்தோனே கருத்திலறிவானே

வாசமலர்க்குழன் மயிலே—குயிலே
வருத்தமென்ன தையலே.

மதனசுந்தரி தாயை அழைதது சொல்லுதல்

பூதலத்தனேகதவம் புரிந்தென்னைபெற்றவளே
காதலுடனேவளர்த்துக் கரையேற்றிவிட்டவளே
மாதாவேயாரோவோர் மனிதனருகில்வந்து
பாதாரவிந்தமதில் பணிகுவேனென்றும்
என் கண்ணேபொன்னே யெண்ணுங்கார்குயிலே
வண்ணக்கலாபமுடை மாமயிலேயென்று
மூச்சிவிடாமல் மொருகுகிறுனரோ
காச்சல்குளிரினல் கனவருத்தமடைந்து
ஐந்தாறுநாளாக அன்னபானமில்லாமல்
சிந்தைநொந்திருக்குமிந்த ஸ்திதியினிலெந்தனுக்கு
மாப்பிள்ளையொன்றுதானே மாநிலத்திலேகுறைவு
தாப்புள்ளசெல்வமெல்லாம் தாறுமாறுகவழித்து

வாரண்டுங்கையுமாக மாட்டிக்கொண்டிருப்பவர்க்கு
தாராண்டுங்குழலுடை தாசிவீட்டுக்கென்னவேலை
பேயனேபோகச்சொல்லடி—என்னம்மணி
பேசவும்சிவெனில்லடி.

கிழவி-தெம்மாங்கு.

எவனவண்டிவுன்னைவந்து எத்துகிறமூளியவன்
தவடைதனில்போடாமல் தாமதங்கள்செய்வானேன்

டம்பன்-சிங்காரச்சிந்து.

நா-னா-நன்னுனே-நன்னுனே-நன்னுனே

எந்தனருமைமாமி இன்சால்வெண்டாக்ட்டில்
எந்நுடையவல்லமையால் எளிதில்தப்பித்துவந்தேன்
சொந்தவுன்மருமகனுப் சுந்தரிபோடுநான்
சொகுசாகவாழ்ந்திருப்பேன் சுகமேயினிமேலம்மா.

கிழவி-தெம்மாங்கு.

உன்னுடையவல்லமையை வுண்மையொடுசொல்வதற்
என்னுடையநாவாலே எவ்வளவுங்கூடுமோடா [கு
அந்தமுட்டுங்கெட்டிக்கார ஆண்பிள்ளைநீதானப்பா
அவனியிலுனக்கிணை யாரைசொல்லுவதப்பா
உந்தனலநாங்கள்கண்ட தொருகோடியுண்டப்பா
உறவினிலெங்களுக்கு உதவாதநடவப்பா நா

டம்பன்-தெம்மாங்கு

நன்றிகெட்டகிழப்பிணமே ஞாயமோநீங்களென்னுல்
தின்றுவிட்டதிரவியங்கள் செரித்ததன்றோசிந்தித்தீர்

நாலுலட்சம்விலையுள்ள நகைகள்கொடுத்தேனே
நாலடுக்குமெத்தைவிடு நலமாயெடுத்தேனே
கோலச்சரிகைச்சேலை கொஞ்சமோவளித்தது
குணங்கெட்டிப்படிநீங்கள் கூறினும்போவேனோ.

கிழவி-தெம்மாங்கு. [டாய்

பொறுக்கித்தின்னநாயேநீ புளுகெங்கேகற்றுக்கொண்
நறுக்கிவிடப்போறார்கள் நகைசெய்துவைத்தோர்கள்
கப்பல்துபாசியாலே காப்புக்கிடைத்ததடா
கனகராயவேளாலே கண்டிகிடைத்ததடா
அப்பாராவுவேளாலே மற்றெல்லாம்கிடைத்ததடா
அறிவுகெட்டோனேயுன்னை லணுவுமறியோமடா

டம்பன்-தெம்மாங்கு.

பலதினமுழுங்களை நான் பட்சமுடன்கார்த்ததெல்லா
மிலவுதனைக்கார்த்திருந்த வேழைக்கிளிபோலாச்சே
அன்பின்மிகுமெந்தன் அழகுமனையாளை
அரிதானபிள்ளைகளை அலையவிட்டுங்களுக்கே
இன்பமிகுமென்னுஸ்தி யெல்லாம்தொலைத்தேனே
எள்ளளவாகிலும்நன்றி யில்லாமற்போச்சுதே.

கிழவி-தெம்மாங்கு

குடிக்கக்கஞ்சியில்லாத குடிகேடநாய்ப்பயலே [யலே
இடிக்கப்போறேன் தாடைபார்த்தேதுங்கெட்டவெறிப
ஆருக்குன்னுஸ்தியெல்லா மளித்தாயதுவல்லாதே
ஆராலேநீபோட்டாண்டி யானையதுநீசொல்லடா

சீரும்பேனும்பிடித்த எருமைக்கடாவேயடா
ஏடாகூடம்பேசாதேஎடுப்பேன்பழமுரத்தை.

டம்பன்-தெம்மாங்கு.

நான்கொடுத்ததுங்களுக்கு நாலுதலைமுறைக்குண்டே
இத்தனையுமபகரித்தே இப்படிநீயேசுகிறாய்.
பத்துலட்சம்விலையுள்ள பங்களாகட்டினேன்
பகர்மெத்தையெல்லாம்குளோப்புப் படங்களாயா
எத்தனைவிதலஸ்தர் எழிலாகமாட்டினேன் [க்கினேன்
என்னபட்டுங்குடத்தி லிட்டவிளக்காச்சே.

கிழவி-தெம்மாங்கு.

சிறுக்கிதனைவசப்படுத்த சிந்தைதனிலெண்ணினையோ
செறிப்பாளோவுந்தனுக்குச் செருப்புதிண்ணநாய்மக
தந்ததற்கும்வந்ததற்கும் சரிப்பட்டுபோச்சுதடா
தலைவாசல்மிதியாமல் தப்பித்துக்கொள்ளடா
சொந்தம்பாராட்டிநின்றால் சும்மாயிரேனினித்
துடப்பக்கட்டைமுறியும் சொன்னேன்சொன்னே

தாய்கிழவி டம்பனுக்கு திரவியங்
கிடைத்தபின் வந்து எத்துதல்.

ஆசைமிகுமென்னுடைய அருமைமருமகனே
தேசுலவுமன்மதன்போற் சிறந்தவழகோனே
உத்தமனேசத்தியனே உலகினிற்சீமானே
மெத்தவும்புகழுடைய மேன்மைதருங்கோமானே

நாற்பதுசென்றுக்கால் நாய்குணவென்பார்கள்
தோத்திரையானபேய்த் தோஷிகான்தெரியாமல்
மதுவுண்டமயக்கத்தால் மதியழிந்துன்னைநான்
இதமில்லாவார்த்தைகள் எத்தனையோபேசிவிட்டேன்
உள்ளமதில்எள்ளளிவு மெண்ணுமலென்னுடைய
தெள்ளுமணியாமதன சிங்காரசுந்தரியை
நித்திபழம்வைத்திருந்து நித்திலக்கழைசிலைக்கொள்
சித்தஜன்செருக்கொழிய சித்தமதில்சற்றுகிருபை [ன்
செய்யடாவென்சாமிகண்ணே செய்யாவிட்டாலெந்த
தையலவள்வெய்யமாரன் பெய்யுமம்பினால்நொந்து
பாரறியவுன்மீதிற் பழிபோடுவாள்சொன்னேன்

சீரிலுயர்ந்திடுசிங்கமே—தங்கமே
தேசம்புகழ்தங்கமே.

விருத்தம்.

இப்படியெத்தவந்த விதமிலாக்கிழவியோடு
மைப்படிகண்ணுளென்னு மதனசுந்தரியைடம்பன்
ஒப்புக்கொள்ளாமல்நீக்கியொண்டொடிமனையாளோடு
இப்படிதனிலேமிக்க விசையொடுவாழ்ந்திட்டானே.

மதனசுந்தரி ஓரடிச்சிந்து.

முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# கண்ணாட்டிச்சிந்து.



சிருமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிபிக்கப்பட்டது.

விலை] [பை-௩.

1910.

உ

கடவுள் துணை.

# கண்ணாட்டிச் சிந்து.

வெண்பா.

விண்ணாடரேத்தரிய வேலவன்மேல் வையமிசை
கண்ணாட்டிச் சித்தாகங் கழறுதற்குத் கண்ணாருஞ்
சோலைதிகழுந்தணிகை சுந்தரவிநாயன்பொற்
றாளை வணங்கிச் சாற்றுவாம்.

நூன்முகம்.

சிந்து.

இந்துதவழ் சுந்தரனார் தந்தவெய்யாரன்
கணணாட்டி - தந்தவெய்யாரன்
செந்தணிகை வாழ்செங்கல்வ ராயகெம்பீரன்
கண்ணாட்டி ராயகெம்பீரன். (க)

பச்சைமயி லேறிவரு முச்சிதவேலன்
கண்ணாட்டி - உச்சிதவேலன்
இச்சையுடன்போற்றுபவர்க் கிந்திடுஞ்சீலன்
கண்ணாட்டி - யீந்திடுஞ்சீலன். (உ)

கானக்குற வள்ளிமகிழ் கடம்பணிதோளன்
கண்ணாட்டி - கடம்பணிதோளன்
வானவரிடர்தவிர்த்தே வயங்குந்தயாளன்
கண்ணாட்டி - வயங்குந்தயாளன் (௩)

தெய்வகுஞ்சரிமகிழுஞ் செங்கதிர்வேலன்
கண்ணாட்டி - செங்கதிர்வேலன்
சைவமறையோனெனவுஞ் சாற்றுஞ்சுசீலன்
கண்ணாட்டி - சாற்றுஞ்சுசீலன் (௪)

ஒன்னலர்புரமெரித்தோ னுதவியபாலன்
கண்ணாட்டி - யுதவியபாலன்
தன்னிகரில்லாதகொடுந் தானவர்காலன்
கண்ணாட்டி - தானவர்காலன் (௫)

ஆணிப்பொன்னே ரத்தினமே ஆசைக்கிளியே
கண்ணாட்டி - ஆசைக்கிளியே
மாணிக்கமே மாங்குயிலே வார்த்தையைக்கேளடி
கண்ணாட்டி - வார்த்தையைக்கேளடி (௬)

சித்தர் முத்தர் பத்தர்பணி சேவற்கொடியோன்
கண்ணாட்டி - சேவற்கொடியோன்
வெத்திமயிலேறியெம் வினைகள் தீர்ப்பவன்
கண்ணாட்டி - வினைகள் தீர்ப்பவன் (௭)

ரஞ்சிதஞ்சே ரஞ்சுகமே நங்கையேமானே
கண்ணாட்டி - நங்கையேமானே
கொஞ்சுங்கிளியாளே நாமுங் கூடியேபோவோம்
கண்ணாட்டி கூடியேபோவோம் (அ)

ரத்தினபு லாக்குகம்மல் முகத்தில்மின்னுதே
கண்ணாட்டி முகத்தில்மின்னுதே
முத்துமாலே மோகனமுங் கழுத்திற்றுன்னுதே
கண்ணாட்டி - கழுத்திற்றுன்னுதே (௯)

தங்கத்தினில் கல்லிழைத்த வங்கிதோடாவாம்
கண்ணாட்டி - வங்கிதோடாவாம்
சங்கையில்லா மல்கரத்தில் தகதமென்னுதே
கண்ணாட்டி - தகதகென்னுதே (௰)

பத்தரைமாற்று தங்கத்தால் கைவளேகளாம்
கண்ணாட்டி - கைவளேகளாம்
சித்திர விசித்தரமொளிர் செம்பொன்மோதிரம்
கண்ணாட்டி - செம்பொன்மோதிரம் (௰௧)

கல்லிழைத்த வொட்டிவாண மிடையில்மின்னுதே
கண்ணாட்டி - யிடையில்மின்னுதே
பல்லொளிகள் முத்தைப்போலேபளபளென்குதே
கண்ணாட்டி - பளபளென்குதே (௰௨)

பாதமிரண்டில் சதங்கை கீதம்பாடுதே
கண்ணாட்டி - கீதம்பாடுதே
சீதமதி முகத்தைக் கண்டென் சித்தம்வாடுதே
கண்ணாட்டி - சித்தம்வாடுதே (யங)

சந்திரகாந்த சரிகைசேலை தளதளென்குதே
கண்ணாட்டி - தளதளென்குதே
சுந்தர வடிவழகி சிந்தைசோருதே
கண்ணாட்டி - சிந்தைசோருதே (யச)

நெத்தியில்திலர்தபொட்டு நிகநிகென்னுதே
கண்ணாட்டி - நிகநிகென்னுதே
குத்தினி ரவிக்கையது மெத்தஜொலிக்குதே
கண்ணாட்டி - மெத்தஜொலிக்குதே (யரு)

மல்லிகைமுல்லைமுடிக்கு மாங்குயிலாளே
கண்ணாட்டி - மாங்குயிலாளே
வல்லியேநம் வல்வினைகள் தீர்ந்திடும்பாராய்
கண்ணாட்டி தீர்ந்திடும்பாராய் (யசா)

சதுர்மறை புகலுமிந்த சரவணப்பொய்கை
கண்ணாட்டி - சரவணப்பொய்கை
விதியின்படியேயதனில் மூழ்குவோம்வாராய்
கண்ணாட்டி - மூழ்குவோம் வாராய் (யஎ)

வேலவனைச் சேவைசெய்ய வினைகள் தீருமே
 கண்ணாட்டி - வினைகள் தீருமே
பால்சுப்ரமணியதேவன் பதங்கள்வாய்க்குமே
 கண்ணாட்டி - பதங்கள்வாய்க்குமே (௰௮)

அணியணியா யிருக்குமன்ன சத்திரம்பாராய்
 கண்ணாட்டி - சத்திரம்பாராய்
பணிமணிகள் விற்குமிந்த பக்குவம்பாராய்
 கண்ணாட்டி - பக்குவம்பாராய் (௰௯)

வேதியர்கள் வேள்விசெய்யுஞ் சாலைகள்பாராய்
 கண்ணாட்டி - சாலைகள்பாராய்
சீதமலர்பூத்தொளிருஞ் சோலைகள்பாராய்
 கண்ணாட்டி - சோலைகள்பாராய் (௨௰)

ஆறுமுகம் பவனிவரும் அற்புதம்பாராய்
 கண்ணாட்டி - யற்புதம்பாராய்
வீறுசேர் முரசதிரும் விந்தையைத்தேராய்
 கண்ணாட்டி - விந்தையைத்தேராய் (௨௧)

அடியவர்கள் கூட்டமதை யன்னமேபாராய்
 கண்ணாட்டி - யன்னமேபாராய்
வடிவழகி கடைகளிதோ வயங்குதுசீராய்
 கண்ணாட்டி - வயங்குதுசீராய் (௨௨)

மனதின்படி வேணதெல்லாம் வாங்குவோம்வாராய்
கண்ணுட்டி - வாங்குவோம்வாராய்
கனமுலவுங்கருங்குயிலே கவலையேன் கூறாய்
கண்ணுட்டி - கவலையேன்கூறாய் (உங)
கார்த்திகையின் பெருமையதைகருதப் போகுமோபா
கண்ணுட்டி - கருதப்போகுமோ [ராய்
நாற்றிசையோர் போற்றிசெய்யுமநன்கதைப்பாராய்
கண்ணுட்டி - நன்கதைப்பாராய் (உச)
அன்பர்கள் துதித்திரங்கும் ஆனந்தம்பாராய்
கண்ணுட்டி - ஆனந்தம்பாராய்
இன்மயிலேமனைக்கு ஏகுவோம்வாராய்
கண்ணுட்டி - யேகுவோம்வாராய் (உரு)
பத்தியுடன் கங்காதரன் பாடுந்தமிழ்க்கு
கண்ணுட்டி - பாடுந்தமிழ்க்கு
சிந்தமகிழ்ந்தே யருளுஞ் செங்கல்வராயன்
கணணுட்டி - செங்கல்வராயன் (உகூ)
மாமலர்ப்பதங்கள்வாழி வண்மறைவாழி
கண்ணுட்டி - வண்மறைவாழி
பூமியுலிதைப்பகரும் புண்ணியர்வாழி
கண்ணுட்டி - புண்ணியர்வாழி. (உஎ)

கண்ணுட்டிச்சிந்து.
முற்றிற்று.

---

ஆக மொத்தம் 171.

உ

கடவுள் துணை.

# டம்பாச்சாரியின் மீது

மதன சுந்தரி பாடுகின்ற

சிறப்புச் சிந்தும் - பதமும்,

அடங்கியிருக்கின்றன.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௩

1910.

# விளம்பரம்.



இதனல் சகலமானபேர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில், சென்னைசூளை சட்டணநாய்க்கர் தெருவில் ஸ்தாபித்திருக்கும் "சிவகாமி விலாச" அச்சியந்திரசாலையில் நானுவிதமான தமுழ், தெலுங்கு, துலுக்கு, இங்கிலீஷ், வைத்திய ஜோஸ்ய புத்தகங்கள் உண்டு. தேவையானவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கெழுதிபெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கி,

ஸ்ரீ சி. முனுசாமி முதலியார்

அண்டு கம்பெனி.

சூளை போஸ்ட்

மதராஸ்.

உ

கடவுள்துணை.

# டம்பாச்சாரியின்மீது.

## மதனசுந்தரிபாடுகின்ற சிறப்புச்சிந்து.

---

காப்பு.

அரியயன்முதலோரனுதினம்போற்றுங்
கரிமுகன்கழலிணைக்காப்பு.

தங்கப்பண்.

ஏரார்தனபாலன்எழில்தவத்தில்வந்த
சீரார்மகாராஜனே - வாசனே
திவ்யகுணபோசனே (௧)

குடிகெட ஊதிகூறுநன்பிணரோடு
வடிவாய்நேசஞ் செய்தோனேகோனே
மகிழ்கருணமுடையோனே. (௨)

கூட்டிக்கொடுக்கின்றகும்பகோணவையர்தப் மால்
கூட்டிறவானசிலாக்கியனே - யோக்கியனே
குவலயத்தினில்மிகுபராக்கியனே (௩)

அலங்காரவீடெனக்கு அருமையாய்க்கட்டித்தந்த
நலங்கொள்கனயோகனே - வாசனே
நாவலர்புகழ்திபாகனே (௪)

தட்டுமுட்டுசாமான்கள் தங்கத்தாலும் வெள்ளியாலு
திட்டமாயமைத்ததிடனே - சீரனே [ம
திக்குப்புகழ்மாரனே. (௫)

பதம்-இ-ம்-சாமா-ஏகதாளம்.

மாதரசேயுந்தன்மையால் சிக்கியேவாடுகின்றேனே
உனைத்தானே நினைத்தானே
வாராயேமுத்தந்தாராயோ யெனைச்சேராயோ

எந்தவேளையும்உந்தன்மைபலால்ஏங்கிநின்றேனே
சகியேனே தகிதானே
யேதடியின்னம்வாதடிசெய்யாதடியாதடியாதடி

என்னுட்டிற்சிறந்தகண்ணுட்டிநீயென்றெண்ணி
வந்தேனேமகிழ்ந்தேபணிந்தேனே
என்மனம்நொந்து உன்மனம்கன்மனம்கன்மனம்

கிஞ்சிகமொழியே பஞ்சபாணனென் நெஞ்சைதுளைத்
தானே இளைத்தானேகளைத்தானே
கேளடி அணைந்தாளடி - தாளடி - தாளடி - தாளடி

மேட்டிமையானகண்ணுட்டியேஉன்னிடமேமேனியைத்
தவிக்கிமுத்துக்குலிக்கொடிபலிக்கி
மெல்லியேபோகவல்லியேயிசைவல்லையோ

கொஞ்சுங்கிளிமொகரஞ்சிதமோ அபரஞ்சியேவாடி
யெனைநாடிபதம்பாடி
சூட்டிகண்பாசாட்டி விளையாட்டியாட்டியாட்டி

மாணிக்கமேபெண்ணே ஆணிப்பொன்னேகண்ணே
மாங்குயிலேவாராய்முகம்பாராய்களைதீராய்
மங்கையே தெய்வநங்கையே நீசெய்சங்கையே-ச
நாராயணசாமிநம்பித்தொழுங்கிஷ்ணன்நாதலீலைகளை
உபாயங்களை விநோதங்களை
நம்பட்டி அதுதெம்படிநீசெய்வம்படிவம்படிவம்படி

கொச்சகம்.

உன்னைநான் காணாவிடில் ஒருசாமமொருயுகமே
என்னைநீகாணாவிடில்எப்படியோவென்மனது
மன்னமரகதமே மாங்கனியேதேங்கனியே
தன்னேரிலாதவனை தழுவியணைந்திடுவாய்.

இராகம்-சர்பா-ஏகதாளம்.

மாரனேவெகுசீரனேடம்பாசாரிபெனுந்தீர
உபகாரா-வெய்யாரா
வாடுதேமனம்நாடுதே மைபால்நீடுதேநீடுதேநீடு
தீரனுந்தனபாலன்மாதவத்துதித்தவனே வாவா
மகானுபாவா-எமைரகாவா
திபாகனேவைபோகனே சையோகனேயோகனே
சொன்னசொல்தவறாதபூபனே துணைவனேவாராய்
முத்தந்தாராய்-என்னைச்சேராய்
துங்கனே அங்கனே வாரும் இங்கனே இங்கனே
தென்றல்கொடியபுலியைப்போலசீறுதேசாமி
யித்தப்பூமிதனில்சாமி
தென்னனேஎழில்பொன்னனேஉயர்கன்னனே

இந்திரபோகத்தையுடையசிலனேயெந்தனையாளா
மணிதோளாசுகுணாளா
ஏதடாஎன்மேல்வாதடாகாதடா

உன்னைவிட்டுநானின்னொருவனை
உண்ணமாட்டேனே சகிப்பனேஎங்கள்கோனே
ஓரடாமையல்தீரடாகண்பாரடா

தங்கப்பண்.

எனதுநற்றங்கையா இவர்சொல்பாட்டினுக்கு
கனஞ்சொரிந்தமணியே-அணியே
கணிகையர்க்கோர்பணியே (க)

நிருவாணமாகஇன்றுதீயெண்ணெயிடென்று
கிருபையாய்க்கேட்டதூயனே-சகாயனே
கிளர்பவளவாயனே (உ)

புகையிலைமெட்டுக்கப்பால்புகனுஞ்சினேகருடன்
தகையாய்க்காற்றுடிரேக்லாலே லாலோலா
தகும்பந்தயம்விட்டசீலா (ங)

களவிளென்வீட்டில்போனகனகமாம்பொருள்களை
உளமகிழ்வாய்த்தந்தகாமனே பூமனே
ஒப்பிலாமுகசோமனே (ச)

புல்லையசெட்டியிட பொருள்கடன்வாங்கித்தந்த
கல்வியுடையசுந்தரா-யந்திரா
கல்வியில்சுகவிந்திரா (ரு)

வேக்ஷமீராலப்பையிடம்திகழ்நவரத்தினங்கள்
கோக்கவிட்டபுண்ணியனே கண்ணியனே
கோதிலாதகண்ணியனே (சு)
தட்டானையழைப்பித்துசாற்றும்நகைகளெல்லாம்
ஓட்டாகச்செய்தசீலனேலோலனே
ஓட்டாகச்செய்தசீலனே (எ)

இராகம்-கலியாணி-அடதாளம்.

பல்லவி.

கூச்சமில்லாமல்பேசுவார்களேயல்லாது
கொடுக்கநிர்வாகமிராது

அநுபல்லவி.

ஆச்சுதுபாங்கிலும் ஆர்ப்பத்தெட்டவுசிலும்
அக்ராபாங்கிலும் அனேகஅவுசிலும்
எச்சென்றெண்ணாமல்இன்னம்வேணதுண்டு
என்றுவேப்பிலேஅடித்துப்போவார்பண்டு கூச்

மதுரைக்கடையில்குடிக்கூடிக்குத்தலேகுட்டை
வாங்கிச்சம்பமாகமுன்னேபட்டைபட்டை
பதமாய்திருத்திக்கட்டியாரையும்சட்டை
பண்ணித்திரிவரவலால்பார்த்தாலுள்ளலொட்டை
ரவைகத்திரிப்பாவல்ரவைமயிர்மாட்டி
நான்வாங்கித்தருகிறேனென்றுவாயால்நீட்டி
சுவைபைக்காட்டியெழில்பஞ்சணையின்மேலே
தூங்கிமறுநாள்தலேகாட்டமாட்டார்கள்சாலே கூச்

உந்தனுக்கிணையிவ்வுலகினிலாருண்டு
உந்தன்சொல்லுக்குநான்சொல்லுவனேரெண்டு
மன்மதனேசிங்காரமேதிபாகனே
மருவிவிளையாடும்வாகனேயோகனே

தங்கப்பண்.

என்னைக்கைகோர்த்துஎழில் திருவெற்றியூர்க்கு
உன்னதமாய்சென்றசெய்யனே-துய்யனே
ஒளியார்மலர்க்கையனே

சத்திரத்தையனைசாமார்த்தியத்தினாலே
எத்தியேயுண்டபுண்ணியனே திண்ணியபே
பெங்கும்புகழ்கண்ணியனே

திண்டுதிமாசுபோட்டு திண்ணையின்மீதுட்கார்ந்து கொண்டிருக்கும்போதுகோஷ்டமாய்பண்டாரங்கள் ஞானப்பாட்டைபாட நான்சென்ஸ்என்றுரைத்துதான் சவுக்கையெடுத்து சாற்றியவர்களைப்பின்பரத்தையர்மீது பாடுங்களென்று சீர்மைபாய்க்கேட்டநாதனேகீதனே தேசம்புகழ்விநோதனே.

டம்பாச்சாரிசிந்து

முற்றிற்று.



உ

கடவுள் துணை.

நாட்டுசெல்வர்களுக்கு நல்லவழிகாட்டும்

# ஆத்திசூடி சிந்து.

ஓரடித்தங்கப்பண்,



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

---

1910

உ

கடவுள் துணை,

# ஆத்திசூடி சிந்து.

ஓராடித்தங்கப்பண்.

---

அச்சுத்தலைவர்க்கு விண்ணப்பம்.

வெண்பா.

சென்னைவளரச்சுத் தலைவர்களே செப்பக்கேள்
நன்னெறியாமிச்சிந்தை நாடியே இன்னொருவர்
அச்சிடவந்தாலும் அவர்க்குவிடை தாரா
இச்சிறுவன் விண்ணப்பமிது.

பொல்லாமனதே
புகழில்லாப்புன்மன
கல்லாதேமனதேகெட்டமனதே
கழறுவேன்கேளினிதாய்

அத்திமுகத்தோனை அநுதினமறவாதே
ஆதிசிவமூர்த்தி அடிகள்மறவாதே
இவ்வுலகிலயாவருக்கும் இடரினைத்தேடாதே
ஈனர்தமைச்சேர எள்ளளவுநினையாதே
உலகத்திலெந்நாளும் குலப்பழுதுபேசாதே
ஊமைகுருடர்முதல் வொருத்தரையுமேசாதே
எவர்க்கும்பிரியவனுய் இருக்கவேயெண்ணுவாய்

ஏழையர்தமைக்கண்டு எள்ளனஞ்செய்யாதே
ஐயமெனவந்தோரை நையவேபேசாதே
ஒருத்தர்க்கென்னாளும்நீ ஒருதீங்குந்தேடாதே
ஓதுவித்தோன்தனக்கு ஓர்குறையுஞ்செய்யாதே
ஔவியம்பேசி அகலத்திற்றிரியாதே

அக்கரையாய்பொருளை மனதே
அன்பாகத்தேடிடுவாய்

கட்டினமனைவிதன்னை கண்ணீர்சோரவையாதே
காசுபணஞ்சேர்த்து கணுகைக்கிட்டலையாதே
கிள்ளைமுதல்பட்சிக்கும் கேடுநினைக்காதே
கீழ்மக்களோடு கிட்டியுரவாடாதே
குற்றம்நினைந்தால் சுற்றமும்பொய்யாதே
கூரானவார்த்தைகூறி கொடுமைவிளைக்காதே
கெடுக்குந்துர்நேசரிடம் அடுத்துநீசேராதே
கேட்டுங்கேளாமலே கிட்டிசண்டைசெய்யாதே
கைப்பொருளைநம்பிமெய்ப் பொருளைவிக்காதே
கொம்பனைமார்சண்டைதனில் வம்புதீர்க்கபோகாதே
கோபத்தையெந்நாளும் குடியாகக்கொள்ளாதே

சத்தியத்திற்குட்படுவாய்-மனதே
அசத்தியத்திற்குட்படாதே

சாதிப்போர்தம்மிடஞ் சார்ந்துரவாடாதே
சிறுவர்களோடுநீ சிநேகிக்கநாடாதே

சீரில்லாவார்த்தைகளை செவிதனிற்கொள்ளாதே
சுகத்திலிருக்கும்போது அகத்தைப்படைக்காதே
சூதுவாதும்பேசி வேதனைக்குள்ளாகாதே
செப்புமேரிவ்வுடலைச் சதமென்றுயெண்ணாதே
சேதிசொல்லவந்தோரைச் சீறிமுழியாதே
சையெனவேயாரும் சாற்றத்திரியாதே
சொல்லும்பெரியோர்தம் சொல்லைநீதட்டாதே
சோம்பருடையரோடு ஓம்பித்திரியாதே
சௌரியந்தன்னைப்பேசி-மனதே
சங்கைகொண்டுநின்றிடாதே
தந்தையதுவார்த்தை தள்ளிநடக்கொணாது
தாயின்மனமெரிய தாய்வசைச்சொல்லொணாது
திருடர்களோடுநீ சினேகஞ்செய்யொணாது
தீவினையாமென்னுந் தீங்குநினைக்கொணாது
துன்னும்பெரியோரை தூஷணைசெய்யொணாது
தூரிக்கலப்போரைத் துணைவரென்றெண்ணொணாது
தெய்வமதில்லையெனச் செப்பவுமொண்ணாது
தேவியைவிட்டுவிட்டு தெரிவிற்றிரியொணாது
தையலார்மங்கையவள் தன்சொல்லைக்கேட்கொணாது
தொல்லையென்றில்லரத்தை துரந்துமேசெல்லொணாது
தோப்புந்தடாகம்பூந் தோட்டமழிக்கொணாது

நல்லோர்மனதுநோக-மனதே
நாற்றிற்றிரியொண்ணாது

நாவலர்கள்தமக்கு நவின்றதைத்தரவேண்டும்
நித்தமிரப்போர்க்கு நினைவாய்த்தரவேண்டும்
நீதியநீதியை நிதானித்தறியவேண்டும்
நட்பமதாயொருவர் பெட்பையறிய வேண்டும்
நூல்கள்புராணமதை நுட்கரித்தறியவேண்டும்
நெஞ்சுறுதியாக நிலத்திலறையொண்ணாது
நேசத்திருந்தாரென்று நிசமேவொண்ணொணாது
நையவொழுவரைப் பையவேபேசொணாது
னைத்துசொல்லாரையும் நுணுக்கமாய்சொல்லொணா
து, நோகவெவரையும் நோகவேவையொணாது

பத்தமில்லாக்கொடிய-மனதே
பகருவேனின்னமுங்கேள்

பாதகத்தொழிலைப் பார்க்கவுமொண்ணாது
பிறர்பணியின்மேல் பிரியம்வைக்கவொண்ணாது
பீட்டையவென்றால் பெரியோர்கள்நேசந்தேடு
புல்லர்கள்தம்மோடு புணர்ந்தேகவொண்ணாது
பூமியிலிரப்போரை புகுந்தடிக்கலொண்ணாது
பெண்ணாசையாலேநீ பித்தனாகலொண்ணாது
பேடியென்றேயுலகில் பேர்வகிக்கவொண்ணாது
பைநாகத்தோடுநீ பரிக்ஷிக்கவொண்ணாது
பொறுமைஎன்னளும்நீ பொருந்தியிருக்கவேண்டும்
போகாதயிடத்திற்கு போகவுமொண்ணாது

மண்ணின் மீதினில் நின்று - மனதே
வழக்கோரஞ்சொல்லொணாது

மாமியார்வீட்டினில் மருவியிருக்கொணாது
மித்திரர்க்குத்துரோகம் நினைக்கவேயொண்ணாது
மீண்டொருவர்வந்தாலும் விளம்பவேயொண்ணாது
முன்னோர்மொழியை முனிந்தழிக்கவொண்ணாது
மூடர்கள்தம்மோடு கூடவேயொண்ணாது
மெலியரைவிட்டு வேரிடஞ்சொல்லொணாது
மேழியதனை வெறுக்கவேயொண்ணாது
மைபுனைக்கண்ணிதய் வலையிற்சிக்கொணாது
மொழிந்ததோர்சொல்லை மறக்கவுமொண்ணாது
மோசமதுசெய்து காசைச்சேர்க்கொணாது

வஞ்சகரோடுறவு - மனதே
வையாதொருநாளுமே

வாதஞ்சொல்வேனென்று வழங்கியலையாதே
விலையைக்குறைக்காதே வீண்வம்புபேசாதே
வீணானவார்த்தைகூறி காலம்ஒழிக்கொணாதே
வுண்டதோர்வீட்டுக்கு ரெண்டகம்நினையாதே
வூராருடைமைக்கு பேராசைகொள்ளாதே
வெஞ்சமரின்முன்னே வேடிக்கையாய்நில்லாதே
வேந்தன்றன்சொல்லைநீ வெறுத்துநீதள்ளாதே
வையகத்தோர்சொல்லும் வழியைத்தடுக்காதே

ஒருபேச்சைநீ ஒருவரோடுகூருதே
ஓதுமிராசரத்தினம் உரைத்ததைத்தள்ளாதே
ஔவைசொன்னதுமிதுவே-மனதே
ஐயனருள்பெற்றுவாழி.

வேதியர்குலமும்வாழி வேந்தர்கள்தானும்வாழி
ஆதியிலவ்வைச்சொன்ன அருந்தமிழ்நீதிவாழி
கோதிலாக்குணம்படைத்த குவலயத்தோர்கள்வாழி
நீதிநன்னெறிகற்ருேர்க நீடூழிவாழிவாழி.

முற்றிற்று.





உ

சிவமயம்.

பொதிகைமாமலைசிவகீர்த்தனை.

இராகம் - இந்துஸ்தான்.

பல்லவி.

பிச்சையிடாநின்ற பேதைமடையர்கள்
தக்கேசரிக்கேகொடுப்பார் - சிவனே
பிச்சையிடாநின்றபேதை

அநுபல்லவி.

உச்சிதமாநரஜென்மங்கடைத்தேர
இச்சைவையார்குல அச்சுதாகேழ்க்கினும் பிச்சை

சரணங்கள்.

இந்திராதிசாலப்பிரசங்கள்செய்தாலவர்
சிந்தைகரையார்கள்-சிவனே
தந்தைதாயார்பசியாலேவிரந்தாலும்
தாழார்டம்பத்தினாலழியும்பாவி (பிச்சை)
வெள்ளைசள்ளையாகவஸ்திரமுடுத்தினால்
நல்லமுதலியென்பார் - சிவனே
அல்லையறுத்த அடியார்களைக்கண்டால்
தள்ளுதள்ளுதெருவில்நில்லுமென்றபாவி (பிச்)
ஆஸ்திகுலமென்றுபேசும்நகம்பர்தன்
நேசம்யினிவேண்டாமே-சிவனே
நாஸ்திதாசர்களைபூசித்தவன்வார
வாசிவீரமுனிசானந்தங்கேழ்க்க (பிச்சை)
பொதிகைமாமலை சிவகிர்த்தனை

முற்றிற்று.

---

ஆக மொத்தம் 173

உ

கடவுள் துணை.



# தென்னிந்தியாறெயில்வே
என்னும்
# கர்னாடகப் புகைவண்டியின்சிந்து



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.



விலை]　　　　[பை-௩

1910.

75

சிறுமணவூர் முனிசாமிமுதலியார்

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கும்

# சொந்தப்புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| சோதிடசிகாமணி | 3 | 0 | 0 |
| வயித்தியசிகாமணி இங்கிலீஷ் தமிழ் | 3 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி தமிழ் | 2 | 0 | 0 |
| ஷை இங்லீஷ் மொழி பெயர்ப்பு | 2 | 0 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள்சரித்திரம் | 0 | 12 | 0 |
| சுதேச கைத்தொழில்கள்சாஸ்திரம் | 1 | 0 | 0 |
| சுகந்த பரிமளசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம | 0 | 8 | 0 |
| சிவசொரூப சாஸ்திரம் | 0 | 8 | 0 |
| விவாகசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| நஷ்டஜாதககணிதம் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆருடம் | 0 | 8 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| ருஷ்யாஜப்பான்யுத்தம் | 0 | 4 | 0 |
| விபாசவிபரீதம் | 0 | 4 | 0 |
| நாரதர்கலகம் | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 4 | 0 |
| தெய்வகுணவெளிச்சம் | 0 | 8 | 0 |
| ராஜவமசபரம்பரை | 0 | 12 | 0 |
| ஸ்டாம்பு ஆக்டு | 0 | 8 | 0 |
| போலீஸ்ஆக்டு | 0 | 4 | 0 |

உ

கடவுள் துணை

# தென்னிந்தியாறெயில்வே
என்னும்,
# கர்னாடகப்புகைவண்டியின்சிந்து.

தென்னிந்தியா றெயில்பாரடி - பெண்ணேயிது
தெற்கேபோகும்நேரடி

மன்னர்கள்தான் துதிக்கும் மதிறாஸ்கருகாக
உன்னிதமாகவே யுகமைபாயெர்ப்பட்ட (தெ)

மண்டலத்தோர்புகழும் மதிறாஸ்எழும்பூரினில்
கண்டவர்வியப்படைக் கருதிநியமித்த (தெ)

சட்டமுடன்ஸ்டேஷன் பட்டணத்தோர்போற்ற
திட்டமதாகவே கட்டியிருக்கிற (தெ)

கண்ணாடிகதவுகள் கனத்த ஆபீசுகள்
விண்ணோடரும்மெச்ச விதமாகயேர்ப்பட்ட (தெ)

கைக்காட்டிமரங்களும் கனத்த ஆளுகளும்
பைகாண்சினேகர்முதல பலருமிருக்கிற (தெ)

இஞ்சின்வண்டிமுதல் இணையில்லாவண்டிகள்
அஞ்சுதலில்லாமல் தங்கியிருக்கின்ற (தெ)
டிக்கட்டுகள்வாங்கி இக்கட்டில்லாமலே
பக்குவமாகவே தக்கபடிபோவோம் (தெ)
சைதாபேட்டை ஸ்டேஷன் சார்ந்தபரங்கிமலை
பயிலாகிறெயில்வண்டி பரர்மீதிலேபோகும் (தெ)
பல்லாவரம்பாரு பக்கத்தில்வண்டலூரு
எல்லார்தங்குங்கூடு வாஞ்சேரியிதுபாரு (தெ)
அங்கமதுயிடேற ஆண்டவனைப்போற்றும்
சிங்கபெருமாள்கோயில் ஸ்டேஷனிதுபாரு (தெ)
தங்கயிளப்பாரி தாகவிடாய்தீர
செங்கற்பட்டுஸ்டேஷன் சிறப்பதாய்நாம்வந்தோம் ()
கோர்ட்டுமுதலான தூக்குமரங்களும்
பேட்டிமையாய்ச்செயில் தாட்டியாய்த்தோற்றது ()
பொன்விளைந்தகளத்தூரு புகலரியமதுராந்தம்
தன்மையுள்ளதசில்தார் நடத்துங்கச்சேரி (தெ)
அச்சரவாக்கமிது அடர்ந்துவரும்றெயில்வண்டி
இச்சையுடன்மாற்றும் இணையிலலாஸ்டேஷனிது ()
ஓலக்கூறுதாண்டிநாம் ஒயிலானதிண்டிவனம்
தலக்சமிலாத்தாலுக்கா கட்டமுகிவந்தோம்பார் (தெ

புதுமையுள்ளசத்திரத்தில் போஜனம்நாம்செய்து
இதமுடன்றெயிலேறி இக்ஷணம்போகலாம் (தெ)
மானிலந்தான்புகழும் மயிலமெனுந் தலத்தில்
கானமயில்மீதேறும கர்த்தனிருக்கிறார் (தெ)
கண்டுபணிந்தால் கர்மவினைகள்போகும்
வண்டுலிகர்விழியாளே மாங்குயில்மொழியாளே (தெ)
விக்கிரவாண்டி விழுப்புரந்தாண்டி
பக்கத்திலேபண்ருட்டி பண்புள்ளஸ்டேஷனிது ()
நெல்லிக்குப்பமெனும் நேரானவூரிது
அல்லலகற்றுந்திருப் பாதிரிப்புலியூரிது (தெ)
பேடைமயிற்கண்ணாளே பிரியாதேசெந்தேனே
கூடலூர்ஸ்டேஷனைக் குறிப்பாகநீபாரு (தெ)
ஆலப்பாக்கமிது அடுத்தபரங்கிப்பேட்டை
கோலமுள்ளகாயலார் குடியிருக்கறார் (தெ)
பார்தனிலுள்ளோர்கள் பத்தியாய்த்தான்துதிக்கும்
சீருள்ளசிதம்பரத் தெரிசனஞ்செய்யடி (தெ)
நடராஜர்வீற்றிருக்கும் நலமானசிற்சபையை
மடமயிலேநீயும் மனதினிற்போற்றடி (தெ)
தொல்லைவினைகளைத் துரத்திசாநலமுக்கும்
தில்லைமாகாளியின் தெரிசனஞ்செய்படி (தெ)

கனிவர்க்கங்களுண்டு காசாலட்டுமுண்டு
இனிமைப்பிரசாதங்களிருக்குமிடமுண்டு (தெ)
வல்வினையைத்தீர்க்கும்வயித்தீஸ்வரன்கோயில்
எல்லையைவிட்டுமெகா வேகமாய்த்தான்போகும் (தெ)
மாயவரங்குத்தாலங் வயங்குநரசிங்கபேட்டை
தூயஸ்டேசன்கள்தாண்டிதுரிதமாகப்போகும் ()
திருவிடைமருதூர தேன்பொழியுங்கும்பகோணம்
பருவுஞ்செந்தலைப்பேரு வந்தோமிப்போதடி (தெ)
பாபவிநாசனம் பகருமையம்பேட்டை
சோபமதைநீக்குஞ் சொகுசுள்ளதஞ்சாவூர் (தெ)
முப்பத்திரண்டும முதன்மையாய்செய்வித்த
தப்பில்லாபோஜராஜன் தங்கியதஞ்சாவூர் (தெ)
சாலியமங்கலம் சார்ந்தஅம்மாபேட்டை
நீடாமங்கலமிது நேர்ந்தகொரடச்சேரி (தெ)
குளிக்கரைஸ்டேஷனிது குணமுள்ளதிருவாரூர்
களிக்கவேதியாகனைக் கண்டுதெரிசிப்போம் (தெ)
இத்தலந்தன்னிலே யிணையில்லாதேருகள்
பெத்தவுசித்தமாக மேன்மையாய்த்தோற்றுது (தெ)
அப்புறமிருக்கும் அடைவானஸ்டேஷன்களை
தப்பிதமில்லாமல்சண்மையுடன்சொல்வேன் (தெ)
கீவளூர்தானிது கிளர்சிக்கில்தானிது
மேவிநாகப்பட்டணம்மேன்மையுடன்வந்தோம் (தெ)

திடமுள்ளதிருச்சிறுப்பள்ளி ஸ்டேஷனிது
வடமேற்குறெயில்பாதை வந்துகலக்கும்பாரு (தெ)
பிட்டுக்குமண்சுமந்த பிரம்பாலடிபட்ட
திட்டமுள்ளசொக்கநாதர் திருமதுரைதலமிது (தெ)
அங்கயற்கண்மீனாட்சி யம்மனிருக்கிற
சங்கைகளில்லாத சன்னிதியிற்கோறு (தெ)
திருப்பரங்குன்றம் திருமாநகரம்
விருப்பமுள்ள கள்ளுகுடி விருதிபட்டிஸ்டேஷன் ()
துலுக்கப்பட்டிசாத்தூர் கோவில்பட்டிகுமரிபுரம்
தொடர்ந்துவரும்ஸ்டேஷன் தருசாய்ப்போகும்இஞ்சின்
கண்டவர்வியப்படையுங்கடம்பூருஸ்டேசனிது
அண்டையிலிருக்குமணியாச்சிசத்திரமிது தெ)
செந்தைகுண்டாதாண்டி சிறப்பானறெயில்வண்டி
விந்தைமிகும்திருநெல் வேலியிதோவந்தோம் (தெ)
ஏத்தும்திட்டப்பாறை நேத்தியாய்நாம்வந்து
தூத்துக்குடிதலை தூரமோநாம்வந்தோம் (தெ);
தேசமெங்கும்புகழ் திருவண்ணாமலையில்வாழ்
பாசமுடன்வீர பத்திரனியம்பிய (தென்னிந்தியா)

தென்னிந்தியா ரெயில்வே சிந்து

முற்றிற்று.

———





ஆதிமூலேசர்பேரில்

# தாய்மகளேசல்.

## வினு - விடை.

தாய் - வினு,

சிக்கறச்சீவிச் செருகுமைக்குழல் சேர்ந்த விழ்ந்த தென்னமகளே - மனம் - தேறுதலைசொல்லியாறுமுக புரியேறுடையாதிமூலேச ருனையணைந்தாரோ (க)

மகள் - விடை.

மைக்கண்மட மாதருடன் மிக்கவிசை பாடிக்கொண்டேயிருந்தேன் - அப்போது - வண்டளசுந்தனைக் கிண்டிநுழைந்து தேனுண்ட பொழுதென்றன் கொண்டையவுழ்ந்தது தாயே. தாய் - வினு (உ)

வாலைப்பிறைநுதலிலிட்ட நீலப்பொட்டு கலைந்ததென்னமகளே - கயிலை - வாசர்திசைனேசனை புரீசராதிமூலேசருனையணைந்தாரோ. மகள் - விடை (ங)

ஜாலத்தனமல்ல வுச்சிக்காலத்தி லென்பாங்கியருடனே - இருகோள் - தட்டிக்கொண்டானடித் திட்டத்தினல் வேர்வைபட்டுச் சிலைநுதற்பொட்டுக் கலைந்ததென் தாயே. தாய் - வினு. (ச)

பெண்கள்குருவே யுனளிருகண்கள் சிவந்திருப்பதென்மகளே - தவஞ்செய் - பெரியோர்மனதிற் பிரியாவருணைபுரியாதி மூலர்பரிகாசம்போலணைந்தாரோ.

மகள் - விடை.

தண்கமலவாவிதனிற் சலகிரீடை பெண்களுடன்செய்தேன்-அப்போது - தக்கமேலதனின்மொக்குமென்றே கயல் மொய்க்கவே யென்னிருமைக்கண் சிவந்ததுதாயே. (௬)

தாய் - வினா.

கிஞ்சுகவாயிசழுனில்மஞ்சியபற்குறியேதுமகளேமிகுசங் - கீதங்களைபொற் பாதமொருகுழைகாதராதிமூலநாதருனையணைந்தாரோ (௭)

மகள் - விடை.

கஞ்சமலர்க் காத்தெடுத்துக் கொஞ்சுகிளிதனக்குமுத்தங்கொடுத்தேன் - அந்தக் - காவிற்கிளியதுகோவைக்கனியென பாவித்திகழ்தனைத் தாவிக்கடித்ததுதாயே. (௮)

தாய் - வினா.

செப்பிளநீர்முலைமுகட்டி லிப்படியேனகக்குறிகண்மகளே - அந்தச் - சேதியொளியாதென்காதிலுரைநமதாதிமூலேசுரர்பாதி யிரவிலவந்தாரோ. (௯)

மகள் - விடை.

கைப்பலங்கொண்டெனுமிச்சங் கனிபறிக்கவேண்டிக்கொம்பைவளைத்தேன் - அது - கைதவரிப்பறித்தெதய்திம்விசையினில் மெய்யிற்கிழித்ததற்கையப்படவேண்டாந்தாயே (௰)

தாய் - வினா

மார்பிலணியார் வடங்கோவைமணிநெரிந்ததென்னமகளே - இந்த - வார்த்தையை யென்முகம் பார்த்துரைசெய்யடிதோற்றி யாதிமூலமூர்த்தியுனை யணைந்தாரோ. (௰௧)

மகள் - விடை.

பாரமுலைமாதருடன் பந்தெறிந்துவிளையாடும், போ

து அந்தப் - பந்துவிசையுடன்வந்துவிழுந்தொளிர்ந்தாள்நெரிந்தது பொய்யன்றுதாயே, தாய்-வினு. (௬௨)

தனித்திருந்து முலைத்துகிலைத் தள்ளிதள்ளிமூடிவெட்கப்படலால் - சைகை - தந்தாதிமூலைசர்வந்தேயணைந்தாரென் தன் தாமனைமின்னேசந்தேகந்தோன்றிற்றுசொல்லாலை. மகள் - விடை. (௬௩)

பனிமுகந் பொழிந்துடன் படபடப்பாய் குளிர்காற்றுவாலால் - அதை - பார்த்தும் புடவையைப்போர்த்துக்கொண்டாலது தோற்றும விணிலே தூற்றுதே போடியென்தாயே. தாய் - வினு. (௬௪)

பளபளத்த முலைநரம்பு பச்சைகொண்டலச்சைபென்ன மகளே - அடிநீ - பாதகியின்னமுஞ்சூதுசொன்னுலுன்னை மோதுவன்பா லாதிமூலருனை யணைந்தாரோ மகள் - விடை. (௬௫)

சளசளப்பாயிரைச்ச லிட்டுச் சட்டையில்லாதேண்டிசண்டைபோட்டாய் - ச்சிலைச் சாற்றின் மினுக்கெண்ணெய் சேர்த்துக் குழப்பியேபார்த்து நலங்கிட்டுத்தேய்த்துக் குளித்தனன்தாயே, தாய் - வினு. ( )

மேல்விரற் காந்தட்கரததின் வேல்வளையல்தெரிந்ததென்னமகளே - இந்த - விந்தையா லிப்போது சந்தேகமானதுவந் தாதிமூலேசர் தந்தாயுனையணைந்தாரோ மகள் - விடை (௬௭)

சொல்லரும் வெங்கவடெரிந்து சூதாடும்போதெதிர்பணைக்காய் - தன்னைத்-தொட்டெடுத்தே எட்டிவெட்டும்பொழுது கைப்பட்டுவளை நெரிந்திட்டதுதாயே

தாய் - வினா.

சித்திரப் பொற்கலை முகப்பிலவைத் துடித்திக்கொ ண்டதென்னமகளே - யாதித் - திங்கள்புனைத்திடுசங் காரம்பிகைபங்க ராதிதிமூல லிங்கருனை யணைந்தாரோ.

மகள் - விடை.

மெத்தமிசை யிருட்டறையில் நித்திரைகொண்டெ ழுந்துவரும்போதே - அந்த - வீட்டிருளிற்கலை போட் டபடி சற்றுநோட்டந் தெரியாமற்கூட்டிக்கட்டிக்கொ ண்டேன்தாயே. (உ௰)

தாய் - வினா.

இளங்கருப்பக்காரியை போலிருந்திருந்துமயங்குவ தென்ன மகளே - உனக்கி - தெல்லாமறிவன் பொய்யி ல்லாமற்சொல்லடி நல்லாகமூலேச ருல்லாச யாயணைந் தாரோ

மகள் - விடை. (உக)

களங்கமில்லாத்தோழியுடன் கைகோத்துக்கொண் டு தும்பிபறந்தேன் - அந்தக் - கலக்கத்திற் பித்தந்தலை கேறி மிக்கபலக்கடி தோன்றிற் றிலக்கணமாய்ச்சொ ன்னேன்தாயே

தாய் - வினா. (உஉ)

சூதுக்கள்ளி நாளுக்குநாள் சோறுவெறுப்பானதெ ன்னமகளே - நீதான் - சும்மாயொளியா தேயம்மாநீ சொல்லடி யெமமாதி மூலர்பெம்மானுனை யணைந்தா ரோ.

மகள் - விடை, (உங)

ஏதடிபூராயமா யெடுத்தெடுத்துச் சொல்லிச்சண் டைக்கிடமாய் - அடிநீ - யெந்தனையிப்போது நிந்தனை செய்கிறாய்மந்தமிகுந்தாலதுமருந்தல்லவோதாயே. ()

தாய் - வினா

கொடியிணமாதே யுனக்குட அடிவயிறு கனத்ததெ ன்னமகளே - நீதான் - கூச்சப்பட்டாற்புலிக் கேச்சல் லவோவெற்றிபேய்ச் சாதிமூலசர் பேச்சாலுனையணை ந்தாரோ　　　　மகள் - விடை.　　　　(உரு)

வெடிமலர்ப் பூங்கோதையர்முன் வீணையிசையான் பாடக்கேட்டேன் - என்னை - மெச்சியழைக்குப்போ யுச்சிதமாகவே கச்சாயந்தந்திடப் பட்டணங்கொண்ட னன்தாயே.　　　　தாய் - வினை.　　　　(உசு)

போனகபாலருகிருக்கப் புளித்த தெல்லாம் புசிப் பதென்னமகளே - சற்றும் - புத்தியில்லாளென்றேயெ த்துகிறு யுனைத்த ராதிமூலர் முத்த மிட்டேயணைந்தா ரோ.　　　　மகள் - விடை　　　　(உஎ)

கானலென்றெண்ணுமற் கடுங்கானின் மின்னுரோடு ம்விளையாடி - மெத்த - சுளைத்தோடிவந்த விளைப்பதி னாலே புளித்துதிண்ணு விளப்பஞ் சொல்லாதே யென் தாயே.　　　　தாய் - வினை.　　　　(உஅ)

கனகதனத்தின் முகமிரண்டுங் கறுத்துன்முகம்வெ ளுத்ததென்னமகளே - உன்னைக் - கள்ளத் தனமுட ன்மெள்ளப்பசப்பியேவள்ள லாதிமுலருள்ள மகிழ்ந்த ணைந்தாரோ　　　　மகள் - விடை.　　　　(உகூ)

இனியொளித்தாற்றீராதென்னேழைமதிப்பேதைமை யினாலே - அந்த - ஈசர்பவனிகண்டாசைகொண்டேன் வெகுமோசம்போனெனினிரோஷஞ் செய்யாதேயென் தாயே　　　　தாய் - வினை.　　　　(௩௰)

எதடியுன்சாதனை தரணி மேதினிலும் வடுப்படக்

காரணமேன் - உன்னை - யெத்தியபதிமூல வித்தகாகாத
லாய்ச்சித்தசலீலை செய்கைக்குறியல்லவோமகளே.

மகள் விடை.

கோதையர்முன் வேதனையாய்க் கொட்டிக்கொள்ள
ஞாய முண்டோ கூறாய் - அடிநீ - கோட்டானைப்போ
னின்று நாட்டாண்மைபண்ணாலே கோபம்வந்தக்கினி
ப் பாபமென்று பாரேன் தாயே. தாய் - வினா ()

கோபம்வந்தா லென்னசெய்வாய் குடிகேடியுனர்கு
ள்ளதை நான்சொன்னால் - அடியுன் - கோட்டுமுலைக
ள்குலுங்கக்குலுங்கக்குதித்துசகுாத்துக் கொண்டோ
டிவாடி சின்னஞ்சிறுக்கியே. மகள்-விடை (௫௫)

சிறுக்கியென்றேயிறுக்கி மெத்தச் சினந்துவந்தால்ம
ணைத்தொட்டுப்பாராய் - உன்னைச் - சின்னச்சின்ன
க்கண்டமாகத் தறிப்பேன் சீச்சியுனக்கென்னபேச்செ
ன்னடிகிழவோரி. தாய் - வினா (௫௬)

ஓரியென்றதேதடிநீ யுரவின்முறையாரிடத்தில்வாடி
அடியன்றன் செருவமடக்கா விட்டானுனைப்பெற்ற
வளல்லபோசாதேநில்லடிகள்ளி-மகள் விடை (௫௭)

கள்ளியென்றகுணகேடி தள்ளிநின்று பேசும்பத்
ரகாளி தாபங்கண்டிடும் பேய்போலே வண்டத்தனங்க
ளைக்காட்டாதே பப்பரபாட்டி விப்பேன்கிழமூளி.

தாய் - வினா.

மூளியென்றவாய்கிழித்துமேனை முரியச்சபைதனிலே
யிழுத்தே - உன்னை மூக்குமுலையு மறியச்சொல்லா
விட்டால் முத்துமாங்காள் பெற்றமோகனமாலையென்
பெயரோ. மகள் - விடை. (௫௮)

பேணாச்சொல்லி யெந்துரைக்கும் பேய்க்கழுதைநா சக்கிழவிபோடி - என்னை-பேசாத பேச்செல்லாம்பேய ப்பேசவின்னம் பேய்க்காளியென்றுன்னைப் போக்கி வைக்கவுமாச்சே. தாய் - வினா (௩௯)

ஆச்சாச்சேயித்தனையு மயன் வகுத்தாலுன்னைவெ றுப்பானேன் - நல்ல - தாகட்டுமுன்னை நான்போகட் டுவேனோவடங்காப் பிடாரியறியதே போகிறாய் நீலி ()

மகள் விடை

நீலியென்றேயென்னை யிங்கு நீதிப் பிழையோதிப்பி ழையோ - உன்னை நெஞ்சைப்பிளந்த அநீதாஷமில் லையானால் நீருமெனக்கொருதாயென்றிருந்துவந்தாயே.

தாய - வினா

தாய்வார்த்தை கேளாதே நாய்வாயில்கோலையிட்டா ற்போனீ. பெற்ற - தாய்க்காகாதபிள்ளையூர்க்காகமாட் டாத சண்டாளியுன் முகங்கண்டாலும் பாவங்களல்ல வோ. மகள் - விடை. (௪௧)

அல்லவென்னு பற்கடித் தேயலப்பியுந்நாள் வலிப் புதுண்டோடி - அடிநீ - பாங்காரமாய்ப் பேசவே ண்டித்தொடுத்தயதற்கு முனிப்படியானால் நானென் னசெய்வேண்டி. தாய் - வினா (௪௨)

நானென்னடி செய்ததிப்போ நரைத்தகிழலச்சை கெட்டுப்போச்சோ சும்மாநச்சு நச்சென்றென்னை எ த்திக்கெடுக்காதே நாய்க்குணமோ வுன்றன் பேய்க்கு ணமோ போடிமகளே. மகள் - விடை. (௪௩)

போயுனைபோல வேறுமுண்டோ கோபித்துக் கொ ண்டாற்கத்திக் கொண்டுபோடி - என்னைப் - பேசின

பேச்செல்லாம் உண்டுபண்ணு விட்டாற் பிச்சல்லோ
போடுவேன்மூச்சிமேல நான்விடுவேனே. தாய் - வினு

விடுவேனேயென்று சொன்ன வீரியங்கள்நானுமறி
வேண்டி - இந்தவீம்புகள்சொன்னாலெளிதிலே நானு
னேவிட்டேனே தூணோடே கட்டியடிக்கச் சொல்லே
னே. மகள - விடை. (௬௫)

கட்டவுந்தானுன் வீட்டிற் கன்னமிட்டுப் புதையலெடு
த்தேனே - உன்றன்கை யென்னவாயென்ன மிஞ்சின
பேச்சென்னகாலில்விலங்கிட்டு மூலையிற்போட்டுவைப்
பனே. தாய் - வினு. (௬௬)

மூலையிலேகிடந்தவென்னை முற்றத்திலேயிழுத்துவி
ட்டாய்சிறுக்கி - இந்தமொண்டி முரண்டுபண்ணாதே
யொருவர்மேல மோகங்கொண்டால் வழுவாகுங்கண்
டாயடிமகளே. மகள் - விடை. (௬௭)

வழுவறமுன் செய்தவத் தாலழகிய நாயகராதிமூ
லர் - தம்மை - வைபோகமாகவே சைபோகஞ்செய்து
நாணையமில்லா தினியுய்வகைதேடினன்தாயே. (௬௮)

தாய்மனக்களிப்புறல்.

பழுநழுவிப்பாலில் விழும்பழங் கதைபோலானது
வும்அன்றிச் - சர்க்கரைப் பந்தலிற்றேன் மழைசிந்தி
யதுபோலே யென்றனுக்கின்றல்லோ வந்ததுபாக்கிய
மென்மகளே. (௬௯)

ஆதிமூலேசர்பேரில் தாய்மகளேசல் வினுவிடை
முற்றிற்று.

ஆக மொத்தம் 175.

உ

கடவுள் துணை.

ஸ்ரீமகாலட்சுமிக்கும் பார்வதிக்கும்

# வாக்குவாதம்.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [ணட-௬.

1910.



உ

கடவுள் துணை.

# ஸ்ரீமகாலட்சுமிக்கும்-பார்வதிக்கும்

# வாக்குவாதம்.

---

காப்பு-நேரிசை வெண்பா.

திங்கட்சடையாருஞ் செந்திருமாலுமகிழ
ளெங்களுமைசெய்திருசெப் எசலுக்குச்-சங்கமிலா
ச், சந்திரனைப்பறித் தனிக்கோட்டிலேயிணைக்கு
கந்தரத்தின் கற்பகமே காப்பு.

மண்ணெடுத்தடிப்பட்டு வாணிச்சிப்பிட்டு
வாங்கிவாங்கித்தின்றாரோடியுங்கள்சிவனார் (க)

குன்றெடுத்துப்பால தயிர் வெண்ணெய்திருடிக்
குந்திகுந்தித்தின்றாரோடி யுங்கள்பெருமாள் (உ)

பார்த்தன் கையில் கொண்டிருந்த வில்லடிப்பட்டு
பையப்பையவிழித்தாரோடி யுங்கள்சிவனார் (ங)

வேர்த்துவிடபாலுடன் கட்டியிடைச்சி
வீம்புடனடிக்கிறா ருங்கள் பெருமாள் (ச)

வேண்டுமென்றேசோறுகறி மிக்கவிருக்க
விஷத்தைக்குடித்தாரோடி யுங்கள்சிவனார் (ரு)

மானமுடன்றின்னப்பட்ட வஸ்துவிருக்க
மண்ணைவாரித்தின்றாரோடி யுங்கள்பெருமாள் (சு)

பசும்பொன்சரப்பள்ளி பதக்கமிருக்கப்
பாம்பணைகளேதரித்தா ருங்கள்சிவனார் (எ)

தோஷமில்லாதமுத்து நவரத்னமிருக்க
துளசித்தழையையணிந்தாருங்கள்பெருமாள் (அ)
காளியுடன்மிக்கமிக்க வாதுகள்பேசி
காலைதூக்கியாடினாரே யுங்கள்சிவனார் (௯)
நீளமுடன்காளிங்க மடுவிற்குதித்து
நின்றவன்மேலாடினாரே யுங்கள்பெருமாள் (௰)
தந்தையெனவந்தபெருங் கங்கைநதியைத்
தலைமீதில்வைத்தாரோடி யுங்கள்சிவனார் (௧௧)
அந்தமுடனாசைகொண் டிலக்குமிதன்னை
அன்பாகச்சுமந்தாரடி யுங்கள்சிவனார் (௧௨)
சேமக்கலங்கொட்டிக்கொட்டிப் பிச்சையெடுக்கும்
சிற்றாண்டியையனேடி யுங்கள்சிவனார் (௧௩)
ஏமத்திலும்சாமத்திலுந் தப்புகொட்டியே
இரந்துண்ணும்தாதனேடி யுங்கள்பெருமாள் (௧௪)
காடுதனில்நுழைந் தெணாயிரம்பெண்கள்
கற்பழித்தாரல்லவோடி யுங்கள்சிவனார் (௧௫)
நாடறியப்பதினாயிரம கோபிகைகளை
நன்மையுடன்கற்பழித்தா ருங்கள்பெருமாள் (௧௬)
அந்திசந்திபத்மா சூரனுக்குப்பயந்தே
ஐவலிக்காயிலொளிந்தாருங்கள்சிவனார் (௧௭)
தந்தவக்கிரன் றரத்தவோடிக்குகையிற்
றானுழைந்தாரல்லவோடி யுங்கள்பெருமாள் (௧௮)
வைத்துகொள்ளும்கைக்கற்புல்லுந் தின்னுமெறாதை
வாகனமாயேறினாரே யுங்கள்சிவனார் (௧௯)

நத்தைகுத்தூங்கெருடனே வாகனமாக
நாணயமாயேறினரோ யுங்கள்பெருமாள் (௨௰)
ஆனைதோலும்புலித்தோடும் யாமையோட்டையும
அணிந்தவரல்லவோடி யுங்கள்சிவனார் (௨௧)
மானமுடன்கானகத்திற் சீதையுடனே
மரவுரிதரித்தாரோடி யுங்கள்பெருமாள் (௨௨)
வீடுவாசல்கிடையாமல் சுடுகாட்டிலே
வீற்றிருந்தாரலவோடி யுங்கள்சிவனார் (௨௩)
நாடுதேசம் வீடுவாசல் காடுகள்விட்டு
நடுக்கடலிற்பள்ளிகொண்டாருங்கள்பெருமாள் (௨௪)
சந்தனங்கெந்தம்பப்பொடி புனுகுமிருக்கச்
சாமபலகுழைத்துப்பூசினரோ யுங்கள்சிவனார் (௨௫)
வந்திரத்திருவருந் திரப்புரத்துவெண
மண்குழைத்துப்பூசினரோ யுங்கள்பெருமாள் (௨௬)
போடிபோடிபண்டாரமாய் வந்தேயொருநாள்
பிள்ளைகறி சாறுதின்றாருங்கள்சிவனார் (௨௭)
வாடிவாடியிடையனாய்வந்தேயொருநாள்
மாட்டுப்பொங்கல சோறுதின்றாருங்கள்பெருமாள் ()
முன்னேமுன்னேயுங்கள்சிவ நல்லகுலமோ
மூங்கிலவதரித்தாருங்கள்சிவனார் (௨௮)
என்னடிதாடகை சூர்ப்பனகிபோடி
எசுஷ்குலத்துணில்வந்தாருங்கள்பெருமாள் (௩௰)
மதுரையிலேயறுபத்து நாலுருவாகி
வந்துவிளையாடினரோ யுங்கள்சிவனார் (௩௧)

விதமுடனுமைபன்றி மீனுருவாசி
விளையாடுங்கிருஷ்ணனல்லவோ ருங்கள்பெருமாள் ()
குவலயத்திலே முருகன் வள்ளியைக்கொண்டான்
குறக்குலமாகுமோடி யுங்கள்சிவனுர் (ங௩)
ஆவுடனுடுமாடு கன்றுகள்மேய்க்கும்
அந்தவிதக்குலமடி யுங்கள்பெருமாள் (௩௪)
காடறியுமூரறியுந் தாடகைபோடி
நல்லவரோகெட்டவரோ வுங்கள்சிவனுர் (௩௫)
சூடுவெருன்ருடையிலே சித்ராங்கிபோடி
திருடனல்லோமிகவு முங்கள்பெருமாள் (௩௬)
பிரமனைச்சுமமாடுடனே கூலியாளாக்கிப்
பிரம்பாலடிபட்டாரடி யுங்கள்சிவனுர் (௩௭)
மறுமம்வெளிவிடாதே யென்றேயிடைச்சி
மத்தாலடிப்பட்டாரடி யுங்கள்பெருமாள் (௩௮)
தேருடனேயானைபரி பல்லக்கிருக்கத்
திருட்டுமடேறினு ற யுங்கள்சிவனுர் (௩௯)
அம்புவியில்வெய்யலிலே கம்பளிபோர்த்து
அந்தமாடுமேய்த்தாரோடி யுங்கள்பெருமாள் (௪0)
பணமில்லா தநரியைப் பரியதாக்கிப்
பாண்டியனுக்கே கொடுத்தாருங்கள்சிவனுர் (௪௧)
சினமுள்ள துரியன் சபையிலேதுரோபதைக்கொண்டு
செவ்வையுடன்றுபிலுரித்தாருங்கள்பெருமாள் (௪௨)
ஆவலாயுமையவளைத் தபசுக்கேவிட்டு
அன்றுதனியேதிரிந்தா ருங்கள்சிவனுர் (௪௩)

இராவணனெடுத்துக்கொண்டு போனசீதையை
நாடறியச்சேர்த்தாரடி யுங்கள்பெருமாள் (௪௪)
கட்டத்துணிகிடையாமற் காட்டில்கிடந்து
கரியுரிபைக்காட்டினாரே யுங்கள்சிவனார் (௪௫)
வட்டமுலைகோபிகள் புடவையையெல்லாம்
வாரிக்கொண்டோடினாரே யுங்கள்பெருமாள் (௪௬)
ஓடெடுத்துத்திருநீல கண்டன்மனையி
லுகந்துசோருகின்றாரோடி யுங்கள்சிவனார் (௪௭)
நாடுதோறுமாயர்பாடி வெண்ணை திருடி
நன்றிபெறத்தின்றாரோடி யுங்கள்பெருமாள் (௪௮)
முன்பிறந்தமகனுக்குக் கலியாணஞ்செய்ய
முதலிலாமல்விழிக்கிறா ருங்கள்சிவனார் (௪௯)
அன்புடனாலிலைமேற் பள்ளிக்கொண்டு
பங்கமில்லாப்பிள்ளைபெற்றாருங்கள்பெருமாள் (௫0)
வித்துவான்பனையிற்றினம் விறகுசுமந்து
வீணராகம்பாடினாரே யுங்கள்சிவனார் (௫௧)
தாம்புதடிதோளில்வைத்தே யாடுகள்மேய்த்து
தன்மெய்கருப்பானவர்தா னுங்கள்சிவனார் (௫௨)
அண்டையிலேமண்ணெடுத்து கூலியாளாகி
அமர்ந்தசொக்கநாதரோடி யுங்கள்சிவனார் (௫௩)
சண்டையிலேயர்ச்சுனன் றன்கூலியாளாகி
சாரத்தியஞ்செய்தாரோடி யுங்கள்பெருமாள் (௫௪)
பார்வதிக்கிடப்பாகந் தந்தபடியால்
பாதிபெண்ணுமாணுமானா ருங்கள்சிவனார் (௫௫)

ஆரணியிலேயொளிக்க யீசனருந்தான்
அப்போதொருபெண்ணாய்வந்தா ருங்கள்பெருமாள்
பாங்குடனேவேடனாக வோடியேவந்து
பன்றிக்கொம்பைமுறித்தாரோடி யுங்கள்சிவனார் (௫எ)
ஆங்காரமாய்க்கம்சன் முன்னனுப்பிய
ஆனைகொம்பைமுறித்தாரேடி யுங்கள்பெருமாள் (௫அ)
இங்கிதமாய்த்தில்லையிலே பாடெடுத்தவர்
இல்லையென்றுமழுவெடுத்தா ருங்கள்சிவனார் (௫௯)
துங்கவாயர்பாடிபெணகள் கண்டுபிடித்து
தூதுனென்றுநெய்யில்கையிட்டாருங்கள்பெருமாள்
இட்டவந்துவர்ச்சுனனும கட்டிப்புரட்ட
இமேலேவிழுந்துதவிர்த்தாரோடி யுங்கள்சிவனார் (௬௧)
கட்டுணிகுட்டுணியவன் தூதாகிப்போய்
கால்சிவக்கவிழுந்தாரோடி யுங்கள்பெருமாள் (௬௨)
எழுந்திருந்துமார்க் கண்டனுக்காகவந்து
இயமனையுதைத்தாரேடி ருங்கள்சிவனார் (௬௩)
அழுந்திக்கல்லாயிருந்த பெண்ணையுதைத்தே
அன்றுதருதமராமுதைத்தா ருங்கள்பெருமாள் (௬௪)
குடிமாரன்கொல்லையிலே விதைத்தவிதையைக்
கொண்டுவந்தசோறுசெய்த ருங்கள்சிவனார் (௬௫)
இடிமழையிந்திரன்பெய்ய மலையைக்கொடையாய்
எடுத்துப்பொங்கல் சோருதின்றாருங்கள்பெருமாள் ()
தங்கக்கிரீடம்பாகையும் மற்றமிருக்கச்
சடைவளர்த்துக்கட்டினரே உங்கள்சிவனார் (௬எ)

துங்கமணித்துருய்கள் பலவுமிருக்கச்
சூடினூரேமயிலிறகை யுங்கள்பெருமாள் (௬அ)
மாட்டுப்பாலைத்தான்குடித்து இடையன்கையால்
மண்வெட்டியால்வெட்டுப்பட்டாருங்கள்சிவனார் (௬௯)
காட்டிலேகிடைந்ததையும் பேய்முலைப்பாலைக்
கண்ணக்கண்ணவுண்டாரேடி யுங்கள்பெருமாள் (எ0)
நக்கனென்றுபேர்படைத்து சுனையில்வந்து
நாடிப்பூந்து கொண்டாரேடி யுங்கள்சிவனார் (எக)
தக்கவிருகண்ணிலலா ததிப்ாண்டன்வீட்டில்
சாலுக்குள்ளேபுகுந்தாரேடி யுங்கள்பெருமாள் (எ௨)
பாசுபதம்வாங்கிவந்த வர்ச்சுனன்முன்னே
பார்த்தெரிந்தாராகமத்தி லுங்கள்சிவனார் (எ௩)
காசினியி ல கஞ்சனெ ந க லையாய்வரக்
காலைத்தூக்கிவிளாம்பழமுதிர்த்தாருங்கள்பெருமாள்
திக்குபுகழ்நக்கனேடி யுங்கள்சிவனார்
திருவாதிரைக்களிதின்றா ருங்கள்சிவனார் (எ௫)
வக்காபோலக்கத்துகிறு பிரணியன்மார்பை
வகிர்ந்துதிரங்குடித்தாரேடி யுங்களபெருமாள் (எ௬)
பாரிலொருகுட்டிக்கு முலைப்பால்கொடுத்து
பன்றியாகதந்தாரேடி யுங்கள்சிவனார் (எ௭)
காரியமாய்பூமியெல்லா மூக்காலேவிழக்
கரப்பன்றியானூரேடி யுங்கள்பெருமாள் (எஅ)

வாக்குவாதம் — முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# சாவல்பாட்டு.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1910.

உ

வேலுமயிலுந்துணை.

# சாவல்பாட்டு.

காப்பு - கலிவிருத்தம்.

தேவதேவர்கள் போற்றுமீசன
சேவடிதனை சென்னியிமேலவைத்து
சாவலின்கதைசாற்றிட புவியினில்
ஆவலாய்வரு மைங்கரன் காப்பதே.

கண்ணிகள் ௩ - ம் - நீலாம்புரி- அடதாளம் - சாப்பு.

என்சாவல்போனவிட மெனக்குத்தெரியாதே
எத்தன் துரைரங்கசாமி யென்னசொல்லுவாரோ
என்னசொலலுவாரோ அவர்கிஷ்டமுள்ள சாவல்
இஷ்டமுள்ளசாவல்தனை எவளோபிடித்தாளோ
நல்லசிறுதொட்டில்கட்டி நான்வளர்த்தசாவல்
நான்வளர்த்தசாவல்தனை நஷ்டமிட்டவளாரோ
தங்கத்தினால்சிலங்கைக்கட்டி தரையில்விட்டசாவல்
தரையிலவிட்டசாவல்தனை சாத்திக்கொண்டவளாரோ

முத்துமணிகட்டியெந்தன் முன்னேவிட்டசாவல்
முன்னேவிட்டசாவல்தனே மூடிக்கொண்டவளாரோ
பவழமணிகட்டியிப்போ பார்த்துவிட்டசாவல்
பார்த்துவிட்டசாவல்தனே பதுங்கவைத்தவளாரோ
வெள்ளிபினல்சலங்கைகட்டி வெளியில்விட்டசாவல
வெளியில்விட்டசாவல்தனே வேண்டிக்கொண்டவளாரோ
பொன்னதினை சிலங்கைக்கட்டி போகவிட்டசாவல்
போகவிட்டசாவலதனே பிடித்துக்கொண்டவளாரோ
காதுகுத்திகடுக்கனிட்டு கடையில்விட்டசாவல்
கடையில்விட்டசாவல்தனே கண்டழைத்தவளாரோ
கொண்டைதனில் குப்பிகட்டி குலாவவிட்டசாவல்
குலாவவிட்டசாவல்தனே கூட்டிபோனவளாரோ
பச்சைரெக்கைபளபளென்ன பறந்துவருஞ்சாவல்
பறந்துவருஞ்சாவல்தனே பார்த்தழைத்தவளாரோ
சுத்தியப்பூவர்னமுள்ள துரைசாமியின்சாவல்
துரைசாமியின்சாவலுக்கு சூதுசெய்தவளாரோ
வர்ணமயில்ரேகைமின்ன வருகுமெந்தன்சாவல்
வருகுமெந்தன்சாவல்தனே வழிமரித்தவளாரோ
அஞ்சுவர்னநிறமுடைய அன்னநடைசாவல்

அன்னநடைசாவல்தனை யடக்கிக்கொண்டவளாமே
கூவுங்குயில்தொனியுடனே கூவிவருஞ்சாவல்
கூவிவருஞ்சாவல்தனை பார்த்தழைத்தவளாமே
பாப்பாரவீதியெங்கும் பறந்துவருஞ்சாவல்
பறந்துவருஞ்சாவல்தனை பார்த்தழைத்தவளாமே
கன்னாரவீதியெங்கும் கலந்துவருஞ்சாவல்
கலந்துவருஞ்சாவலதனை கன்னமிட்டவளாமே
குக்கிலியர்வீதியெங்கும் கூத்தாடிவருஞ்சாவல்
கூத்தாடிவருஞ்சாவல்தனை கூப்பிட்டவளாமே
கோமுட்டிவீதியெங்கும் கொக்கரித்துவருஞ்சாவல்
கொக்கரித்துவருஞ்சாவல்தனை கொள்ளைகொண்டவளாமே
வெள்ளாழர்வீதியிலே விளையாடிவருஞ்சாவல்
விளையாடிவருஞ்சாவல்தனை வெருக்கசசெய்தவளாமே
இடையர்தெருவீதியிலே இருந்துவருஞ்சாவல்
இருந்துவருஞ்சாவல்தனை இழுத்துக்கொண்டவளாமே
வணிகர்தெருவீதியிலே வழக்காடிவருஞ்சாவல்
வழக்காடிவருஞ்சாவல்தனை வளைத்துகொண்டவளாமே
தச்சர்தெருவீதியெங்கும் குதித்தாடிவருஞ்சாவல்
ஆடிவருஞ்சாவல்தனை அழைத்துகொண்டவளாமே

கோட்டைகொத்தளங்கள் குலாவிவருஞ்சாவல்
குலாவிவருஞ்சாவல்தனை கொடுமைசெய்தவளாரோ
எட்டுதெருசுத்திவரு மெந்தனிடசாவல்
எந்தனிடசாவல்மீதில் யிஷ்டம்வைத்தவளாரோ
பட்டணத்துவீதியெங்கும் பாய்ந்துவருஞ்சாவல
பாய்ந்துவருஞ்சாவல்தனை பதைச்சழைத்தவளாரோ
பூவின்கடைபுழுதியனில் புரண்டுவருஞ்சாவல்
புரண்டுவருஞ்சாவல்தனை பிடித்துக்கொண்டவளாரோ
பெரியகடைவீதியெங்கும் பேரெடுத்தசாவல்
பேரெடுத்தசாவல்தனை பிசகுசெய்தவளாரோ
செங்கான்கடைவீதியெங்கும் திரிந்துவருஞ்சாவல்
திரிந்துவருஞ்சாவல்தனை திருடிக்கொண்டவளாரோ
கொத்தவால்சாவடியில் கொக்கரிக்குஞ்சாவல்
கொக்கரிக்குஞ்சாவல்தனை கோரிக்கொண்டவளாரோ
மார்க்கட்டுவீதியெங்கும் மருவிவருஞ்சாவல்
மருவிவருஞ்சாவல்தனை மறைத்துக்கொண்டவளாரோ
அந்தமிகுமண்ணடியி லாடிவருஞ்சாவல்
ஆடிவருஞ்சாவல்மீது அன்புவைத்தவளாரோ
தங்கசாலைவீதியெங்குந் தங்கிவருஞ்சாவல்

தங்கிவருஞ்சாவல்தனை சதிசெய்தவளாரோ
பெத்துநாய்க்கன்பேட்டையெங்கும் புகழ்பெருகுஞ்சாவல்
புகழ்பெருகுஞ்சாவல்மீது பிரியம்வைத்தவளாரோ
விலைமாதர்வீதியில் விளையாடிவருஞ்சாவல்
விளையாடிவருஞ்சாவல்தனை வேறுசெய்தவளாரோ
காளியிடகோயிலுக்கு கனமாய்விட்டசாவல்
கனமாய்விட்டசாவல்தனை கட்டினவளாரோ
அங்காளம்மன்கோவிலுக்கு அடிமைவிட்டசாவல்
அடிமைவிட்டசாவல்தனை அணைத்துக்கொண்டவளாரோ
எல்லைபிடாரியற்கு யேத்திவிட்டசாவல்
ஏத்திவிட்டசாவல்மீது பின்பங்கொண்டவளாரோ
பாவாடைராயனுக்கு பார்த்துவிட்டசாவல்
பார்த்துவிட்டசாவல்தனை பதுக்கிவைத்தவளாரோ
காத்தன்கருப்பனுக்கு காட்டிவிட்டசாவல்
காட்டிவிட்டசாவல்தனை கைபிடித்தவளாரோ
பேர்பெரியமுனியனுக்கு பிராத்திவிட்டசாவல்
பிரார்த்திவிட்டசாவல்தனை பேதித்தவளாரோ
சாவல்தனைக்காணாமல் தயங்குதென்னாவி
எங்கள்துரைரங்கசாமி யென்னசொல்லுவாரோ

மாயமலைபழனிவடி வேலர்கிருபைசெய்வார்
மனதுகுறைவையாமலே வரச்செய்குவாய்சாவல்
காளிமகாமாரியுந்தன் கடியமலர்போற்றி
கலங்கிடாமல்சாவல்தனை வரச்செய்குவாயம்மா
மாமதுரையெந்தன மனதுதயங்காமல்
வர்னமுள்ளசாவல்தனை வருகவருட்செய்வாய்
ஆரணிபாளயத்திலமர்ந்தவந்தன் தாயே
அன்னநடைசாவல்தனை அழகாய்வரச்செய்வாய்
கானமலையிருளாயுந்தன் கழலிணையைப்பணிந்தேன்
கணவன்வராமுன்னேசாவல் கடுகவரச்செய்வாய்
அண்ணமார்கள்தம்பிமார்கள் அய்யாமார்துணைசெய்ய
அன்பாயெந்தன்சாவல்தனை அனுக்கிரகஞ்செய்வீரே
சாதங்கரியிளநீர் சுகிதாம்பூலம்பாயாசம்
தக்கபடிமொச்சை எள்ளுருண்டைமிகப்படைப்பேன்
கன்னலினிற்கரும்பு கற்கண்டுசக்கரையும்
கனிவாய்ப்பழவர்க்கந்தேன் தினைமாவுடன்மிகப்படைப்பேன்
பூவாடைகாரியற்கு பொங்கலிடச்செய்வேன்
புள்ளிநிறசாவல்தன்னை புகழாய்வரச்செய்வீர்
சொன்னசொல்லைதவரேனென்றுஞ் சுந்தரதேவர்களே

துணைவன்வராமுன்னேசாவல் துரிதமாய்வரச்செய்வீர்
கண்ணேநவமணியே என்கருத்தேநீஎங்கேபோனாய்
கட்டுண்டிருந்தாயோ எந்தன்கவனமறந்தாயோ
ஊட்டிவளர்த்தேனே வுனக்காகவலைந்தேனே
நாட்டில்சென்றுவாராதென்ன நாகபெருமோசம்
அய்யன்ரங்கசாமிகண்டா லடிப்பார்வைகுவாரே
ஆர்செய்தபுண்ணியமோ அன்பாய்வந்ததுவே
தேவர்களும்வாழி சிற்சபையோர்களும்வாழி
யாவர்புகழ் தொண்டமண்டலம் அச்சுக்கூடம்வாழி
மூவர்களும்வாழி முடிமன்னர்களும்வாழி
ஆவலுடன்வினவும்இஷட அம்மையருடவாழி
புண்ணிருபம்புகழுந்திவ்ய பூபன்தங்கவேலுவாழி
என்னாளுமிவ்வுலகி லிருந்துமிகவாழி
படித்தோர்களும்வாழி பதங்கேட்டோர்களும்வாழி
அடுத்தோர்களுக்கன்பன் தங்கவேலுதமிழ்வாழி.

சாவல்பாட்டு - முற்றிற்று.

---

ஆக மொத்தம் 177.

உ

கடவுள் துணை.

# ஸ்ரீரங்கநாயகிக்கும் நாச்சியாருக்கும்

# சம்வாதம்.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௧.

1910.

77

# விளம்பரம்.



இதனால் சகலமானபேர்களுக்குந் தெரிவிப்பது யாதெனில், சென்னைசூளை சட்டணநாய்க்கர் தெருவில் ஸ்தாபித்திருக்கும் "சிவகாமி விலாச" அச்சியந்திரசாலையில் நானுவிதமான தமுழ், தெலுங்கு, துலுக்கு, இங்கிலீஷ், வைத்திய ஜோஸ்ய புத்தகங்கள் உண்டு. தேவையானவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கெழுதிபெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கி,

☞ சி. முனுசாமி முதலியார்

அண்டு கம்பெனி,

சூளை போஸ்ட்

மதராஸ்.



ஸ்ரீ

ஸ்ரீராமஜெபம்.

# ஸ்ரீரங்க நாயகிக்கும்.

## நாச்சியாருக்கும் சம்வாதம்.



வெண்பா.

திருமாலுறவுமருஞ் செந்திருவுநாச்சியரும்
மருவுசம்வாதம் வழுத்துதற்கு-அரியதமிழ்
வேதந்தனையளித்த விமலன் சடகோபன்
பாதந்தனைமனமே பற்று.

ரங்கநாயகி சொல்லியது.

ஸ்ரீரங்கநாயகுல அரவதானு செயிபட்டிசித்த சே
யுண்டாகா - சக்ரதருணிசூசி செயிஜாடகா நீவுஜக
டானிகிவஸ்திவோ. (க)

நாச்சியார் சொல்லியது.

சண்டைக்குவந்தாபோடி வடுகச்சி தத்துவங்கள்
சொல்லுருய் - மண்டலாதிபதி ஸ்ரீ.ங்கநாய்கரைமருவி
க்கொள்ளவந்தேண்டி. (உ)

ரங்கநாயகி சொல்லியது.

கூடாதிநீமாடலு அரவதான கொஞ்சதானவுநீவு
அஞ்சிதமுகமங் ஹரினிகூடடகு அரவதிலகல' தட்ட
வே. (ங)

நாச்சியார் சொல்லியது.

அரவதானினிசேர ரங்கசாமி யென்வீட்டுக்கேன் வந்தாரோ புத்திகெட்டவளே யென்முன்னே நில்லாதே அப்பால்நீபோடி. (௪)

ரங்கநாயகி சொல்லியது.

முந்துநேநிலுவலேதே அரவதான முச்சடலாடேவு-பச்சதருக்கதானபளி செடி திரிகேவு எச்சுமாடலாடகே. (௫)

நாச்சியார் சொல்லியது.

துலுக்கச்சிநான்தாண்டி யுன்னைப்போலே துள்ளிவிழுங்கேனேடி துலுக்கர்வீட்டில்வந்துசயனித்தரங்கரைத்தள்ளி விட்டுப்போடி. (௬)

ரங்கநாயகி சொல்லியது.

ஹரிஹரியே மந்துனே அவுனே ஈ அரவதாடின மாடலு அந்தரங்கமந்து சுவாமிதோனே செப்புஆச்ஞ சேயிஞ்சுனட்டே. (எ)

நாச்சியார் சொல்லியது.

அந்தமட்டுக்கு முண்டோடிரங்கசாமி சொந்தமடி யுனக்கு-பந்தியிலே யென்னோடே கூட்டுறவாய்வந்தாய் சந்தலே நீபோடி. (அ)

ரங்கநாயகி சொல்லியது.

சந்தலேயந்துவட்டே அரவதானசுந்தரி னனுசூசி இந்தரிலோபல யிட்லாமண்டிதனிபிப்புடு தெலும பிஸ்துனே. (௯

நாச்சியார் சொல்லியது.

என்னடிவடுகச்சிநீ என்னுடனேதா னெக்கசக்க
ம் பேசுருய் வெட்கங்கெட்டவளே என்முன்னே நில்
லாதேவேசியே நீபோடி. (௰)

ரங்கநாயகி சொல்லியது.

வேசியனிசெப்பினவு அரவதான வேஸ்துனுதவ
டநீத தாசியனேபேரு பெட்டுகொனிநீவுபரவேதானிகி
போவே. (௰௧)

நாச்சியார் சொல்லுதல்.

பரதேசம்போவண்டிவடுகச்சிவாதென்னடி யுனக்
கு பக்கத்தில் நீகூட கைகோர்த்துவர்தாலே பரதேசம்
போவேண்டி. (௰௨)

ரங்கநாயகி சொல்லியது.

பலுமாருநனுசூச்சி அரவதானபரியாசகமுலேமே
தலதெலியாகநீவு தெய்யாலாடேவி தகினபுத்திசெப்
பேனே. (௰௩)

நாச்சியார் சொல்லியது.

புத்திசொல்லுவ தென்னடிவடுகச்சி பொறுக்கக்
கூடலையோ வார்த்தைகளறி யாதவடுகச்சி யென்னோ
டே வாதென்னடியுனக்கு. (௰௪)

ரங்கநாயகி சொல்லியது.

வடுகச்சிநேனவுனே அரவதான வாதுலாடவஸ்தி
வி பணத்திபோநாப்ராண நாதுபலமுகுசிபதரிக்கைமு
செய்யக்கே. (௰௫)

நாச்சியார் சொல்லியது.

செய்வ தென்னடி போடி வடுகச்சிசேதி யறியா யோ தையலேயுனக்குத் தகாதடிசண்டைக்குத் தாண்டித்தாண்டிவராதே. (௰௬)

ரங்கநாயகி சொல்லியது.

தாண்டிதேனேமாயனே அரவதான தண்டிம்பவச்சிதிவி, மாட்டமாட்டகுனு மரியாதலேகுண்ட மட்டுமிஞ்சிராகவே. (௰௭)

நாச்சியார் சொல்லியது.

மட்டுமிஞ்சுவதென்னடி வடுகச்சி மன்மதக்கிளியோ-நீதிட்டமாச்சுதடி யதிகப் பிரசங்கமாய்த்திட்டாதேநீபோடி. (௰௮)

ரங்கநாயகி சொல்லியது.

திட்டிதேனேமாயனே அறவதான தீருநீசெயிபட்டிதேவட்டிக் கூத்தலேலகூசேவு நாதோனு வகலாடிபோவே. (௰௯)

நாச்சியார்சொல்லியது.

வகையென்ன கண்டாயோடி வடுகச்சிவஞ்சனை எண்ண வேண்டாய்- செகதீசராகிய சக்ரபாணிசுவாமிஎன்னைக் கூடிச்சுகித்திருந்தார். (௨௰)

ரங்கநாயகி சொல்லியது.

கூடின்செர்வமட்டே அறவதானகொட்டவச்சிதிவமே ஆடராணிமாடலாடேவு நின்னபுடு அந்திசெம்பேவத்தனு (௨௧)

நாச்சியார்சொல்லியது.

அடித்துப்பாரடியென்னை நீவடுக்கிச்சியது மாத்திரமாநீசெய்வாய் கடுகடுத்துக்கொண்டு கைமிஞ்சிவாராதே கன்னத்திலடிப்பேண்டி (௨௨)

ரங்கநாயகி சொல்லியது.

கொட்டவா நன்னிபுடு அறிவதான கொஞ்சமுளஞ்சகுண்டா ரட்டுசேசியிட்லுநன்னுயீடிஸ்திவோமணினே விடுஸ்துனட்டே (௨௩)

நாச்சியார் சொல்லியது.

விடுவதில்லையோடிவடுக்கச்சி வேண்டாமோடியுனக்கு அடுக்காதவார்த்தை யனேகமாய்ச் சொல்கிறாய் அத்தனைமதமென்னடி (௨௪)

ரங்கநாயகி சொல்லியது.

மதமனிசெப்பதேமே அறவதானவாது நிண்டஆடேவு சரியயினநீக்குனே னெந்தயினனே சவுத்திபாவிஞ்சுகபோவே. (௨௫)

நாச்சியார் சொல்லியது.

பாவிஞ்சுவதென்னடி வடுகச்சி பளாகல்லவார்த்தைசொன்னாய்சேவித்துரங்கரைத்தேடிக் கூடினநீதிருடியல்லவோபோடி. (௨௬)

ரங்கநாயகி சொல்லியது.

திருடியனேதேமே அறவதான சிச்சிநில்பாகண்டிவி சரியயினவாரிலோ சவித்திநின்னிப்புடு தலகொரிகிஞ்சுதுனே. (௨௭)

நாச்சியார் சொல்லியது.

கொறிகிஞ்சுவதென்னடிவடுகச்சி கொஞ்சத்திலு
ணவிட்டேனே அஞ்சிப்பயந்துநானிருந்தாலே யாச்சு
துஉன்னுணவபடக்குவேண்டி (உ அ)

ரங்கநாயகி சொல்லியது.

அடக்குவதேலனட்ட அறவதான ஆதிரங்கநாது
நிசுகமுகமனமுகூடியே ஆடலாடிச் சேரிமனமுண்டா
மே (உகூ)

நாச்சியார் சொல்லியது.

ரங்கரைக்கூடியே தானுமிருவரும் பொங்கமதாய்
வாழ்வோம்-சங்கையில்லாமலே தங்கையுந்தமக்கையு
ஞ் சரியாகவீற்றிருப்போம். (௩௰)

தெலுங்கிலுந்தமிழிலும் வெண்பா.

ரங்கரிடதேவியர்க ளிருவருமேயொன்றாகச்
சங்கையின்றியெப் பொழுதுந்தான்வாழந்தார்
எப்புடனுநீவுராட்சிஞ்சிக்கார்ச்சுடகு [மங்களஞ்சேர்
தப்புலேதையாசுவாமி.

ரங்கநாயகிக்கும் நாச்சியாருக்கும்-சம்வாதம்.

முற்றிற்று.



உ

கடவுள் துணை.



வள்ளியம்மன் ஆயாலோட்டும்

# குறவஞ்சி.



சிருமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - நூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௩.

1910.

கடவுள் துணை.

# வள்ளியம்மன் ஆயாலோட்டும்

# குறவஞ்சி.

---

வெண்பா.

காருலவும்பூவுலகைக் கனிக்காயவலம்வந்த
சீருலபம்போரூரன் றேவியெனத் - தார்புனைந்த
மங்கைவள்ளிநாயகியின் மாதுரத்தைப்பாடுதற்குத்.
திங்கவைங்கரன்றுள் துணை.

குறம்.

தினதெந்தின தினதெந்தின தினதெந்தின தினன
தென்னாதி னாதினன தினதெந்தின தினன

சித்தர்கள்வாழ்மலையருகில் சிறந்தநல்லவனத்தில்
தேவிதள்ளிமான்வயற்றில் திருவுருவாயமைந்தாள் தின

மான்வயிற்றில்வந்துதித்த வஞ்சிகுறவள்ளி
　　வானமிர்தம்வேண்டியவள் வாய்விட்டழுகலுமே　தின

நம்பிராசன்சேனைகளும் நல்லமைந்தர்தாமும்
　　நாடியந்தவனந்தனிலே யோடிவந்தாரவர்கள்　தின

வனவேட்டையாடியவர் வருகின்றபோது
　　வள்ளிபசியால்மெலிந்து துள்ளியழுதாளே　தின

அழுதகுரல்கேட்டவேடர் ஆச்சரியங்கொண்டு
　　அதிதுரிதமாகவள்ளி யருகில்வந்துநின்று　தின

மான்வயற்றில்வந்துதித்த வஞ்சிதனைக்கண்டு
　　மறவனவன்மனையவள் வாரியெடுத்தணைத்தாள்　தின

வாரியெடுத்துமவள்மடிமீதிலமர்த்தி
　　வன்னமுகந்தான்துடைத்துக் கண்ணைமுத்தமிட்டு　தின

வரர்காதுமூக்குருவிவடிவுகளுஞ்செய்து
　　வாழ்த்திவள்ளியென்று சொல்லிப்பேருமிட்டாரப்போ　தின

ஒய்யாரநெற்றியிலே சுட்டிகளுங்கட்டி
　　ஓசையுள்ளதண்டை கொலுசுபாதத்திலணிந்து

தளராமல்பசியாற்றித் தையல்வள்ளிதன்னை　தின
　　தாமிக்குங்குடிசைக்குள்ளே கொண்டுசென்றாங்கே　தின

வர்னப்பொன்தொட்டிலிலேமாதரசைவளர்த்தி
    வகைவகையாய்த்தாலாட்டி மகிழ்ந்திருந்தாரப்போ — தின
மணிகுலுங்குந்தொட்டிலிலே மானீன்றமகளும்
    மாயநித்திரைசெய்துபின்பு தூயகண்கள்விழித்தாள் — தின
வாரியெடுத்துக்குறத்தி மடிமீதில்வளர்த்தி
    வாய்துடைத்துமுத்தமிட்டு வள்ளியாரைக்கொஞ்சி — தின
நாளொருமேனியுமாய் நலமுடனேவள்ளி
    நாயகியும்வேலவர்க்குமீறிவளர்ந்தாளே — தின
ஓராண்டீராண்டு மூவாண்டுசென்று
    உயர்ந்தநல்லசந்திரன்போல் ஓங்கிவளர்ந்தாளே — தின
ஐந்திரண்டுவயதுதனில் கொஞ்சிவிளையாடி
    ஆறிரண்டுவயதுதனில் குறக்கூடையேந்தி — தின
கொஞ்சிக்கொஞ்சிக் குறியுரைத்துக்கோதைவளர்நாளில்
    கொம்பனையாள் வள்ளியரைத்தினைப்புனத்துக்கனுப்ப — தின
ஏழுபோண்ணமார்கள் இவளருகில்வந்து
    இளங்கொடியாள் வள்ளியரைத்தினைபுனத்துக்கழைக்க — தின
நல்லதென்று அண்ணருக்குநாயகியாளுரைத்து
    நடந்தாளேயிடைகுலுங்க நங்கையருமெப்போ — தின

காடுவெட்டிமுள்பொறுக்கிக் கதித்ததினைபுனத்தில்
கன்னிவள்ளி ஆயாலோட்டக்கடுகிநடந்தாளே — தின

மேடுவெட்டிமுள்பொறுக்கி விரைத்ததினைப்புனத்தில்
மெல்லிவள்ளி ஆயாலோட்டமெல்லநடந்தாளே — தின

கொஞ்சித்தழை தானொடித்து கொற்றவர்கள்வேடர்
கொம்பனையாள்வள்ளியர்க்கும் பரணைகட்டியமைத்தார் — தின

அண்ணமாரமைத்துவைத்த அழகுள்ளபாணையில்
அம்மைவள்ளிநாயகியும் ஆயாலோட்டியிருந்தாள் — தின

தேவாரம்.

கள்ளராமசுரர்காலா கங்கைவேணியர்க்குப்பாலா
புள்ளிமாமயிலேறும் புனிதனேபோரூரானே
வள்ளிநாயகியாள்காத்த வளமைசேர்தினைபுனத்தில்
தெள்ளுநற்குறத்தைப்பாடத் தேசிகாவருள்செய்வாயே.

குறம்.

பத்தினியாள்வள்ளியரும் பரணதிலேயேறி
பரமசிவன்தன்னருளால் ஆயாலோட்டுகின்றாள் — தின

சிவப்புக்கவணவனைச் செங்கையினாலெடுத்து
தேவிவள்ளிநாயகியுஞ் சீக்கிரமாயெறிந்தாள் — தின

தங்கக்கவணெடுத்துத்தையலந்தவள்ளி
　　தங்கையைப்போல் வாய்திறந்து　　ஆயாலோட்டுகிறுள்　தின
ஆயக்கிளிநீலக்கிளி　　ஆலாலோ ஆலோ
　　அச்சமுள்ளபச்சைக்கிளி　　ஆலாலோ ஆலோ　தின
புதுநீர்க்கிளிகளாம　　ஆலாலோ ஆலோ
　　தூதுவர்னப்பூங்கிளிகாள்　　ஆலாலோ ஆலோ　தின
வெள்ளைவர்னக்கிளிகளா　　ஆலாலோ ஆலோ
　　விருந்துமேயும் பூங்கிளிகாள்　　ஆலாலோ ஆலோ　தின
பச்சைவர்னப்பூங்கிளிகாள்　　ஆலாலோ ஆலோ
　　பறந்துமேயும்பூங்கிளிகாள்　　ஆலாலோ ஆலோ　தின
சிவப்புவர்னக்கிளிகளா　　ஆலாலோ ஆலோ
　　சேர்ந்துமேயும்பூங்கிளிகாள்　　ஆலாலோ ஆலோ　தின
ஊதாநிறக்கிளிகளா　　ஆலாலோ ஆலோ
　　உகந்துமேயும்பூங்கிளிகாள்　　ஆலாலோ ஆலோ　தின்
பஞ்சவர்னக்கிளிகளா　　ஆலாலோ ஆலோ
　　பறந்துமேயும்பூங்கிளிகாள்　　ஆலாலோ ஆலோ　தின
சிட்டுநெலலகுருவிகளா　　ஆலாலோ ஆலோ
　　சிறுகுருவிபெருங்குருவி　　ஆலாலோ ஆலோ　தின

மயிஞக்குருவிகளா ஆலாலோ ஆலோ
மஞ்சட்குருவிகளா ஆலாலோ ஆலோ தின
காக்காய்கழுகுகளா ஆலாலோ ஆலோ
காட்டில்வாழும்பட்சிகளா ஆலாலோ ஆலோ தின
கொக்குகளாகோழிகளா ஆலாலோ ஆலோ
கோகிலங்கள்ளஅனங்களா ஆலாலோ ஆலோ தின
பட்சிகளாபறவைகளா ஆலாலோ ஆலோ
பறந்துமேயும்பூங்கிளிகாள் ஆலாலோ ஆலோ தின
அன்னங்களாமயிலினங்காள் ஆலாலோ ஆலோ
அழகுள்ள ‘காரங்களா ஆலாலோ ஆலோ தின
வள்ளினங்காள் குயிலினங்காள் ஆலாலோ ஆலோ
வனத்தில்மேயும்பட்சிகளா ஆலாலோ ஆலோ தின
சேர்ந்துமவளாயாலோட்டிச் சிந்தைமிகக்களித்து
தினப்புனத்தில்தோழியுடன் தானிருக்கும்வேளை தின
ஆயலோட்டும்வள்ளிகுறல் அறிந்துவடிவேலர்
அருமுனிவர்தமையழைத்து ஆலோசனைகேட்டு தின
மயிலேறித்திருநீரிட்டு வடிவேலர்தாமும்
மாதுவள்ளிதினைப்புனத்தில்வந்து நின்றாரங்கே தின

வள்ளியழகைக்கண்டுமப்போ வடிவேலர்மயங்கி
　　மனமிரங்கிவார்த்தைசொல்லி வடிவேலர்நின்றார் — தின

புத்தகத்தைமாற்றடிக்கும் பொக்காலினழகும்
　　பூஞ்சலம்புதண்டைகளும் பொற்பீலியழகும் — தின

குருமபிநிழைகாதழகும் சம்பஸ்தனத்தழகும்
　　கோத்தமுத்துசரமதுபோல கொம்பனைபல்லழகும் — தின

முருக்கம்பூஇதழழகும் முத்துநிகர்பல்லும்
　　மெய்க்குழலின் திருமேனி யனிச்சம்பூநிற்கும் — தின

அழகைக்கண்டுவேல்முருக ராசைமிகக்கொண்டு
　　அம்மைவள்ளிநாயகியை யழகுமணம்புரிந்தார் — தின

மாலையிட்டுவடிவேலர் மனமகிந்துஅப்போ
　　மாதுவள்ளியுடனாக வந்தார்திருத்தணிகை — தின

வள்ளிகுறம்பாடினவர் வடிவேலாருளால்
　　மாருமல்வையகத்தில் வாழிவாழிவாழி. — தின

குறவஞ்சி - முற்றிற்று.

———

ஆக மொத்தம் 179.

உ

கடவுள் துணை.

# கொசுப்பதம்.

நெற்குத்துப்பதம் - மூக்குத்தூள்புகழ்பதம் ஷை
இகழ்பதம் - காவேரியம்மன் கும்மிப்பாட
லும் - அடங்கியிருக்கின்றன.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்
சென்னை - சூளை
தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௫.

1910.





கடவுள் துணை,

# கொசுப்பதம்.

---

## பல்லவி.

துள்ளத்துள்ளத்துள்ளக்கடியாதே சொன்னேன்
சொட்டைத்தலைக்கொசுவே.

## அநுபல்லவி.

கள்ளப்பயலுக்குப் பிறந்தகொசுவே
காதுக்குள்ளேவந்து கயகயயென்கிறாய்
கொள்ளிக்கட்டைகொண்டு சுட்டுப்பொசிக்கிறேன்
கும்பிடுபோட்டுக்கொண் டோடிப்பிழைத்துப்போ. ()

## சரணங்கள்.

க. ஆட்டுத்தோழங்களு மாட்டுத்தோழங்களனே கமுண்டங்கேநீவொடு நல்ல ஆக்கமில்லா மனைதோறும்பெருஞ்சல தாரைக்குள்ளேயுங்கள் நாடு-நல்ல-ஓட்டைப்பழைமாடம் பாழுங்கிணறுகள் உங்கள் மனையரைவீடு-நல்ல - ஆற்றங்கரைகளும் ஊற்றங்கரைகளுமுண்டங்கேபோய்விளையாடு - வாட்டமில்லாமல் சுகசரீரமுள்ள மன்னருடம் பெல்லாஞ் சொன்னீரொழுகவே

கூட்டங்கூட்டங்கூடி கடிக்கிறீருங்கள் கொட்டென்ற
புத்தியை விட்டுவிடச்சொன்னேன். (துன்)

௨. திங்கள்செய்வாய் புதன்வந்து கடித்தாலுஞ்சி
ரசுகாக்கினைவருமேநம்மைத் - தேடிக்குருவென்னும்வி
யாழத்திற்கடித்தால் சீயெனுரால்-போவாயுன்பெருமை
சங்கையுடன்வெள்ளி சனியிற்கடித்தால் தப்பிப்பிழை
ப்பது அருமை-நம்மைத்-தாஞாயிவாரத்தில் வந்துகடித்
தாலுன் சடலம்பிழைப்பதஞ் சிறுமைநீ அங்கஞ்சிரு
த்துக் குரும்பிபெருத்து ஆருக்குமாகாத லோபிக்கொ
சுவே கணங்கட்டிக்கடிக்கிருய் நீயென்னைக்கையாற்
பிசைந்து கசக்கியெறிகுவேன். (துன்)

௩. உத்தரவில்லால் சென்னைபுரி தனிலூருக்குள்
ளேவரலாமோ-உங்கள்-ஒளிவுதெரியாமற் பட்டம்பகல்
மட்டும ஒளித்திருக்கவுமாமோ அத்திரவாள்விழியார்க்
குமெமக்குமெல்லமளி பொறுக்கவும்போமோ இழிவா
னயிசையுங் குணமுமெப்போதும் எற்றுக்கொண்டரி
ன்பமாமோ சித்தங்களித்திடச்சொலலும் முனிசாமி
செய்யும்பதந்தனை மெய்யாகவேகேட்டு நத்திவந்தகொ
சு அத்தனையும் போகநாளை யிந்தவழிவாராமலோடிப்
போ.

கொசுப்பதம் - முற்றிற்று.

---

பல்லவி.

வலியநெல்லுகுத்த என்னாலேயாகாது
மன்னுப்புதாருஞ்சுவாமி.

அநுபல்லவி.

கலைசேருமுத்துக்குமார நாதர்முனிவர்மெச்சும்
காமராம அவதாரசாமிநாதா தீரா (வலிய)

சரணங்கள்.

க. ஈரக்கால் நெல்லுவாங்கி வூரவைத்தானது ஏற
க்குறையமுளையுருதுமே - அதை - வாரிவேகவைத்தா
ல் பார்க்க திக்கில்லாமல் மணிமணியாய்த்தீய்ந்துகருகு
மே வீட்டோரமெங்கு மதை யுலரவைத்தால் மழைஒ
ழுக்கில் நனைந்துதண்ணீர்பெருகுமே ஒருசேர்நெல் கு
றைந்தா லென்வாரமுமாடும்போய்த் தெருவினிற்கத்
தெண்டம் வருகுமே. (வலிய)

உ. கூட்டங்கூட்டமாகத் தாயுங்கோழியுங்குஞ்சு
நின்று கொட்டிக் கொள்ளுமே-அதை ஓட்டப்போன
பிள்ளை கொறிக்கவேணுமென்று ஒவ்வொருபிடியாக
அள்ளுமே-சொந்த-நாட்டுப் பெண்ணவள் திருட்டு
வாய்த்ததென்று நாழியால்மரக்காலால்மெள்ளுமேங்
த-மாட்டுக்காரப்பைய லவனுக்கையாவென்றே வட்
டுவெனக்கிள்ளுமே. (வலிய)

௩. முழுதிலுங்காய்ந்தநெல் பதம்பார்க்கத்தேரி
யாமல்முருகி முடுகிமெத்தப் பொடியுமே வாரிக்குத்

தவேணுமென்று உலக்கைகாட்டுமுன்னே குருணிக்க ணைநாழியாயிடுமே- அதை-மெத்தெனப்புடைத்தாலும் அரிசியென்பதல்லால் விடெங்கும் வெறுநொய்யாயிடி யுமே கல்விகற்றசாமிநாதா முனிவாபெந்தன் கடுக்கன் மேல்பொழுதுகள் விடியுமே. (வலிய)

நெற்குத்துப்பதம்-முற்றுப்பெற்றது.

---

## மூக்குத்தூள் புகழ்பதம்.

பல்லவி.

என்னயோசனைபார் - இந்தத்தூள்
என்னயோசனைபார்.

அநுபல்லவி.

மன்னர்புகழ்திரு வல்லிக்கேணிதனிற்
கன்னன்மொழிமாதர் நடக்கும்வீதியில்
உன்னிதமாய்சாமி நாயகன் திண்ணைமேல்
மன்னியமாயாண்டி யப்பன்விற்குந்தூள். (என்)

சரணங்கள்.

௧. திட்டமதாகவே புட்டியில்ரொப்பியே
துட்டுக்குத்துட்டெடை விற்கும்பொடியது
சட்டமதாகவேசிட்டிகைக்கொண்டால்
அட்டகணக்கெல்லா மப்போதேதோற்றிடும் (என்)

௨. பாரினுயர்கின்ற பார்ப்பார்கண்மெத்தவும்
பட்சமதாகவே நித்யநித்யங்கொள்ளும்

ஊரிலும்பேர்பெற்ற பந்தர்ப்பொடியது
உண்மையாகத்தூக்க மோடிப்போகுந்தானே. (என்)

௩. மூக்குத்தூள்கொண்டு சபையினி லுட்கார்ந்
முன்னும்பின்னு மறியாதவரைக்கூட [தால்
பாக்குவெற்றிலைபா லாகா சரிமுகம
பந்தர்ப்பொடியது செய்யுஞ்சிநேகிதம் (என்ன)

மூக்குத்தூள் பதம்-முற்றிற்று.

---

## மூக்குத்தூள் இகழ்பதம்.

பல்லவி.

என்னகெடுதலைப்பார் பொடியினால்
என்னகெடுதலைப் பார்.

அநுபல்லவி.

தன்னாலேசொல்லத் தலைவலிகண்டிடும்
தருணத்திலமூக்குபொடி யில்லாதேவிட்டால்
எண்ணாதெண்ணிடு மெங்குமில்லாவிட்டால்
ஏக்கத்துநெஞ்சுபோ லேங்கித்திரியுமே. (என்)

சரணங்கள்.

௧. மூக்கையடைத்திடும் முன்கோபம்வந்திடும்
மூளைவரண்டிடும பீனிசங்கண்டிடும்
கேட்காதபேரெல்லாங் கேட்டுவாங்கச்சொல்லும்
கெட்டபாழும்பொடி தொட்டஅபேட்சையால் (என்)

௨. பத்தியில்லாமலே போட்டவழக்கத்தால்
பெரியோர்கையினிற் பொடிவாங்கச்சொல்லுமே
மற்றுமொருவரை நத்திக்கேட்போமானல்
வழக்கமில்லை யென்றால் மனதுபுண்ணாகுமே (என்)

௩. மண்டலந்தன்னிற் புகழ்கின்றபேரெல்லா
மாதவத்தோர்முனி சாமியின்சொற்படி
உண்டிந்தவியாதிகள் உள்ளதுசொன்னேன்
உண்மையாகக்கேளு நன்மைசெகத்தோரே (என்)

மூக்குத்தூளிகழ்ப்தம் முற்றுப்பெற்றது.

## காவேரியம்மன் கும்மிப்பாடல்

ஜெபப்பருவந்தன்னில்வந்து அம்மன் தானேயுற்பத்தியானவளாம் நெல்லிமரத்தின்கீழ் மகாவிஷ்ணுபிர்ந்தாகுந்தத்தினின்றவளாம் (௧)

பிரமதேவருடன் கன்னிகையாம் அம்மன் பிரமாதிகமகந்தீர்த்தவளாம் அறுபத்தாயிரங்கோடி தீர்த்தோடம்மன் அடர்ந்துவாரதைப்பாருங்கடி (௨)

பழனிதன்னிலேவந்திருந்து அம்மன் பழனிநதியில் ஸ்நானஞ்செய்து பழனிமுருகரைக் கண்டு தெரிசித்து ப்பத்தியுடன்வாராள் பாருங்கடி அம்மன் சித்தியுடன் வாராள்பாருங்கடி (௩)

மதுரைத்தன்னிலேவந்திறங்கி அம்மன் மலர்தாமரையில் ஸ்நானஞ்செய்து மாயசொக்கேசரைக் கண்

டுதெரிசித்து மகிழ்ந்துவாரதைப்பாருங்கடி அம்மன்பு
கழ்ந்துவாரதைப்பாருங்கடி (௪)

கும்பகோணத்திலேவந்திரங்கி அம்மன் கொடிய
பாவநிவர்ததிபண்ணிகும்பகஜேந்திரனைக்கண்டு தெரிசி
த்துக் கொத்தளித்துவாராள் பாருங்கடி அம்மன்தத்த
லித்து வாராள்பாருங்கடி (௫)

மாயூரந்தன்னில்வந்திரங்கி அம்மன்மகேஸ்வரரை
ப்பூசைபண்ணி மாயலிங்கேசுரைக்கண்டுதெரிசித்துமா
ட்சியுடன்வாராள் பாருங்கடி அம்மன்ஆச்சியிதோவா
ராள்பாருங்கடி (௬)

பஞ்சனந்தனில்வந்திரங்கி அம்மன் பாவங்களெ
ல்லாநிவர்த்திசெய்து பஞ்சகஜேந்திரனைக் கண்டு தெரி
சித்துப்பாவையிதோவாராள்பாருங்கடி அம்மன்பூவை
யிதோவாராள் பாருங்கடி (௭)

சிதம்பரந்தனில்வந்திரங்கி அம்மன் சிவகங்கையி
லேஸ்நானம்பண்ணி சபாநாதரைக் கண்டுதெரிசித்துச்
சட்டமுடன் வாராள் பாருங்கடி அபமன் திட்டமுட
ன் வாராள் பாருங்கடி. (௮)

காஞ்சீபுரந்தனிலவந்திரங்கி அம்மன் கம்பாநதியி
ல்ஸ்நாணஞ் செய்து ஏகாம்பரநாதரைக் கண்டு தெரிசி
த்து இப்பொழு தேவாராள் பாருங்கடி அம்மன்மெய்
ப்புடனே வாராள்பாருங்கடி (௯)

காவேரியம்மன் கும்மிப்பாடல்முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# குடியர் ஆனந்தப் பதமும் கெஞ்சாவின் ஆனந்தக்களிப்பும் புகையிலையின் வெண்பாவும் அடங்கியிருக்கின்றன.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்
சென்னை - சூளை
தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

1910.

சிறுமணவூர். முனிசாமிமுதலியார்

அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கும்

# சொந்தப்புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| சோதிடசிகாமணி | 3 | 0 | 0 |
| வயித்தியசிகாமணி இங்கிலீஷ் தமிழ் | 3 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி தமிழ் | 2 | 0 | 0 |
| ஷை இங்கிலீஷ் மொழி பெயர்ப்பு | 2 | 0 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள்சரித்திரம் | 0 | 12 | 0 |
| சுதேச கைத்தொழில்கள்சாஸ்திரம் | 1 | 0 | 0 |
| சுகந்த பரிமளசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சிவசொரூப சாஸ்திரம் | 0 | 8 | 0 |
| விவாகசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| சகுன்சாஸ்திரம் | 0 | 4 | 0 |
| ருதுஜெனனஜாதகம் | 0 | 4 | 0 |
| நஷ்டஜாதககணிதம் | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆரூடம் | 0 | 8 | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| அகடவிகட சமசாரி | 0 | 4 | 0 |
| ருஷ்யாஜப்பான்யுத்தம் | 0 | 4 | 0 |
| விபாசவிபரீதம் | 0 | 4 | 0 |
| நாரதர்கலகம் | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 4 | 0 |
| தெய்வகுணவெளிச்சம் | 0 | 8 | 0 |
| ராஜவம்சபரம்பரை | 0 | 12 | 0 |
| ஸ்டாம்பு ஆக்டு | 0 | 8 | 0 |
| போலீஸ்ஆக்டு | 0 | 4 | 0 |

உ

கடவுள் துணை.

## குடியர்கள் பேரில்

# ஆனந்தப்பதம்.

### காப்பு.

### கலிவிருத்தம்.

அத்திமுகவனை பத்தியுடனேயான்
நித்தியமனதில வைத்துவணங்கினேன்.

### குடியர்துதி - விருத்தம்.

விடியாலெழுந்து துடியாய்நடந்து
படியாலளந்து குடியாதிருந்தால்
வெடியாதுவென்று துதிபாகசொன்னேன்
மடியாதவெங்கள் கணநாதனே.

### ஆனந்தப்பதம்.

என்ன ஆனந்தம்பார் இந்தக்கள்
என்னென்ன ஆனந்தம்பார்
மன்னர்புகழ்திரு சென்னைநகர்தனில்
நன்னயமாஞ்செங்கான் கடைத்தெருவினில்
சொன்னமொழிதவறாமல் நடக்கின்ற
வுன்னிதமாம்நயினியப்பன்கடைக்கள்ளுஎன்

அண்டரண்டபகி ரண்டமுங்காணுது
மண்டலமெங்கும் சுழன்றிடத்தோணுது
கண்கண்டகடையில் காண்கிடச்செய்யுது
காசிலிதன்னிலே பேசிடசெய்யுது          என்

பட்டஞ்சுசோமனைக் கட்டவுஞ்செய்யுது
பாரிலமன்னவர்க்கு விற்கவுஞ்செய்யுது
சண்டைக்குவாரம்பந் தான்மிகச்செய்யுது
தாடையிலண்டறை வாங்கவுஞ்செய்யுது என்

காதுக்கடுக்கனை விற்கவுஞ்செய்யுது
கண்டவருக்கெல்லாம் வார்க்கவுஞ்செய்யுது
காரியமாய்க்கள்ளைக் குடித்திடச்செய்யுது
கண்டவர்காலாலுதை படச்செய்யுது          என்

காற்பணங்கள்ளைக் குடித்திடச்செய்யுது
கையில்கறிதோசை வாங்கிடச்செய்யுது
ஐபமில்லாமலேயுட்கொள்ளச்செய்யுது
ஆனந்தமாய்ப்பாட்டைபாடச்செய்யுது          என்

கன்னங்களவுகள் செய்திடச்செய்யுது
கள்ளுக்கடையெச்சைக் குடுவையைத்தேடுது
கண்டபேர்களைப் பழிக்கவுஞ்செய்யுது
மண்டைமுறிய வடிபடச்செய்யுது          என்

தித்திப்புக்கள்ளு தினம்புளித்தகள்ளு
மெத்தகுடித்தால் பித்தந்தலைக்கேறி

சுற்றிசுற்றித்தலையைச் சுழட்டியடிக்குது
தத்துவஞானஞ் சகலமுங்காட்டுது என்

கழுத்துத்தாலியை யறுக்கச்செய்யுது
காசிக்கடைதனில் விற்கவுஞ்செய்யுது
கண்டசேவகர்கையில் பிடிபடச்செய்யுது
கன்னத்திலடிகள் படவுஞ்செய்யுது என்

குட்டிக்கரணங்கள் போடவுஞ்செய்யுது
கும்பலாய்மன்னரைக் கூட்டவுஞ்செய்யுது
ஒட்டமாய்சேவகர் வந்துபிடித்தாக்கால்
ஒதுங்கியடங்கியொடுங்கிக்கிடக்குது என்

பாராளுமன்னரைப் பார்த்திடச்செய்யுது
பங்கப்பட்டபின்பு அங்கமும்வாடுது
தாராளமாயபராதம் இரண்டுரூபாய்
தானேகொடுத்திடத்தள்ளியேபோகுது என்

வள்ளலெல்னுந்துரை ஞாயத்தைகேட்டிட
கள்ளைக்குடித்த கசடர்க்குத்தானப்போ
உள்ளபடி சத்தியஞ் சேவகர்செய்திட
உள்ளங்கலங்கியே துள்ளித்துடிக்குது என்

போட்டவபராதம் ரூபாய்கொடுத்திட [டால்
பொருளொன்றுங்கையில் வகையில்லாமல்விட்
வாட்டமாய்மண்ணை யெடுத்திடச்செய்யுது
மண்வெட்டியைக்கையில்வாங்கவும்செய்யுது

கம்பளிமுக்காடு போடவுஞ்செய்யுது
காலில்விலங்கையு மாட்டிடச்செய்யுது
பம்பரம்போலமண்ணெடுத்திடச்செய்யுது
பத்துநாளும்போனல் விட்டிடச்செய்யுது என்

என்ன ஆனந்தம்பார் இந்தக்கள்
என்னென்ன யானந்தம்பார்

குடியர்ஆனந்தப்பதம்-முற்றிற்று.

---

✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣✣

உ

கடவுள் துணை.

## கெஞ்சாவின்

# ஆனந்தக்களிப்பு.

---

இதுவேயானந்தங் கைலாசம் இதற்
கிணையிலையேயிந்த செகத்தினில்மோசம்

சீரானகெஞ்சாவைவாங்கி யொரு
சிலும்பிதனிலதைச்சிறப்புடன்வைத்து
பாராமலொருதம்மிழுத்தால் அப்போ
பரமபதத்தினைப்பார்க்கலாம்நாமே இது

இலைகாம்புவிரைதள்ளவேணும் இதுக்
கெதிரானபிர்மபத்திரி யிலைபோடவேணும்

சிவகங்கைமுன்றுதுளிவிட்டு அதை
சிக்கெனவுண்டையாய்ச் சிலும்பிலடைத்து

அக்கினிபகவானைமூட்டி யெங்கள்
ஆத்தாள்சிவகாமி யம்மனைநினைத்து

திக்கென்றொரு மூச்சியிழுத்தால் அப்போ
தேவர்களெல்லோருந் திறமுடன்வந்து

எவ்வரம்வேணுமென்று கேட்டார் எனக்
கெதிராளியில்லாம லிருக்கவேகேட்பேன்

இதுவேயானந்தங் கைலாசம் இதற்
கிணையில்லையேயிந்த செகத்தினில் மோசம்

************************************

உ

கடவுள் துணை.

# புகையிலையின் வெண்பா.



கண்புகையும்நெஞ்சுணருங்கைகாலசைந்துவரும்
வெண்புகையல்மேனிவெளுக்குமே பண்பாய்கேள்
சால்கருகிவரும் இந்திரியம்நஷ்டமாம்
பாழும்புகையிலையின் பண்பு.



உ

சிவமயம்.

என்னவேடிக்கைபபார் இப்பதங்கள்
என்னென்னவேடிக்கைபார்
விசும்புகழ்திருவொற்றி யூருச்சவம்
வேடிக்கைபார்க்க வீரபத்திரன்ருனும்
ஆவலுடன்வரும் வழியில்தன்னிலே
அண்புடன்யானுமே யிப்பதம்பாடினேன். என்
வரும்வழிதன்னிலே வம்பர்குடியர்கள்
வார்த்தகளைக்கேட்டு நேத்தியதாகவே
திரமுடன்யானுஞ் செய்தனனிப்பதம்
தீர்க்கமாயெல்லோரும் பார்த்துமகிழவே. என்
உத்தமனிரங்க சாமியெனுமுதலி
ஒருபதம்பாடென்று இனிமையாய்கேட்கவே
மெத்தமகிழ்ச்சியாய்ப் புல்லரிவாயானும
மேதினிதனிலிந்தப் பதங்களைப்பாடினேன். என்
இலக்கணவிலக்கிய மின்பமாய்க்கற்ருேர்வள்
இன்னம்பெரியோர்களெல்லவரும்பார்த்து
என்னபிழைகளிருந் தாலுவென்றெனை
யேற்றுக்கொள்ளவேணுந் தாழ்மையுடன் சொன்
என்னவேடிக்கைபார் இப்பதங்கள் [னேன்
என்னென்ன வேடிக்கைபார்

குடியர் ஆனந்தப்பதம்-முற்றுப்பெற்றது

———

ஆக மொத்தம் 181

உ

கடவுள் துணை.

கள்ளுகடைசிந்துஎன்னும்,

# குடியர் சிந்து.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௩.

1910.

உ

கடவுள் துணை.

# கள்ளுகடைசிந்து.

---

## விருத்தம்.

நம்பினோன் யிருந்தகள்ளே நாடியை யறிந்தகள்ளே, தம்பியுந்தகப்பன்பாட்டன் தலம்பறை கண்டகள்ளே, வம்புநீசெய்தாய்கள்ளே வருவையோசொல்வாய்கள்ளே, சொம்புபோல் குடிவைக்ள்ளே சோறுபோல்கொதிக்குங்கள்ளே, தங்கம்போ லானகள்ளே தைரியங்கொடுக்குங்கள்ளே. எங்களைவளர்க்குங்கள்ளே எங்கேபோ யொளித்தாய்க்ள்ளே. சிங்கம்போலெதருங்கள்ளே ஜெயிலுக்குஅனுப்புங்கள்ளே, பொங்கியே வழியுங்கள்ளே புறப்பட்டு வருவாய்கள்ளே.

## ஆனந்தக்களிப்பு.

ஜாடியேஉனக்கொருகும்பிடு—அந்த
சாராயங்குடித்தாக்கால் பேதியெடுக்குது
புட்டிபேஉனக்கொருகும்பிடு—அந்த
பிரைகுடித்தாக்கா சோரைக்கெடுக்குது

கள்ளேஉனக்கொருகும்பிடு—அந்த
கஞ்சாவடித்தாக்கா நெஞ்சைவுலத்துது
மரமேஉனக்கொருகும்பிடு—அந்த
மதத்தையிழுத்தால் பலத்தைக்கெடுக்குது
எப்போவருவாயோகள்ளே—உனக்கு
இதுஞாயமலலாநீ எழுந்துவாகள்ளே.

இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்.

பல்லவி.

வந்துதேகள்ளு—யீஸ்வரன்போலே
வந்துதேகள்ளு

அநுபல்லவி.

வந்துதேபார்கள்ளு வாகனங்கரிவாடு
நொந்துயிருந்தபேரை நெட்டித்தள்ளிக்கொண்டு ()

சரணங்கள்.

ஆதிவேலைகளெல்லாம் அடிமாண்டுபோச்சுது
அஞ்சணு ஆரணு படியொன்றுஆச்சுது
சோதியதன்சுருக்கு சூரியனுக்கும்ஏது
கள்ளைக்கடித்துக்கொண்டு உள்ளுக்குக்கள்விட்டால்

யெழும்புதேபோதை—தலைக்குமேல்கைதுக்கி
கடிக்குதேபல்லை

ஆரணுபோனாலும் ஆட்டின்மயிரேபோச்சு
அதுகுடிக்கும்போதை காட்டுப்புலியும்சிச்சி

பாரில்பட்டையும்பத்தாய் குழந்தைகுடிக்கும்பாச்சி
பாட்டாக்கள்ஒருமூச்சி பாணந்தடுத்துப்போச்சி (வ)

ரகுபதிகடைகள்ளு ராவெல்லாங்கொடையுது
ரவுண்டுடாணுக்களளு கிருக்குகள்வாங்குது
பரைச்சேரிகடைக்கள்ளு பாடுது ஆடுது
பாழுஞ்சுடுகோட்டுகள்ளு கலேகிழாய்துள்ளுது
இதுவென்னகள்ளு—பலவைதொட்டிக்கள்ளு
ஓழுவுதேசொள்ளு

பெண்சாதியெநிர்த்சாக்கால் பளிச்சென்றுபாட்டுது
பிள்ளைநயினவென்றால் சொள்ளையிலடிக்குது
தன்பேச்சிபோல்வந்தால் தட்டிக்கொடுக்குது
தடுத்துச்சொன்னால்பல்லே கடித்துமுடுக்குது
வெடுக்குதேகிருக்கு நாலுபேர்பிடித்தாலும்
விழுக்குதேமோரப்பு (வக்)

---

செஞ்சி யேகாம்பரமுதலியாரளியற்றிய
குடியர் அலங்காரம்.
வெண்பா.

காலேக்குடியரெல்லாங் சவைக்குகவார்கள்குடிப்பார்
வேலேக்குப்போகார் வெறியனேப்போலலேவார்
வெறுமைவந்தபோது வேலேகுப்போவார்
கருமமோகுடியர்க்குத் தான்.

## புருஷன்சொல்சிந்து.

முக்கிமுக்கிகஷ்டப்பட்டு கேளடி பெண்ணே
மூணுபணங்கொண்டுவந்தேன் பாரடி கண்ணே
பக்குவமாய்செலவுநீ பண்ணடி பெண்ணே
பாட்டாக்கள்ளுக்கொருபணந் தாக்கடி கண்ணே

## பெண்கள்சொல்லல்.

கள்ளைமறந்திடடா குடிகார பாவி
காலையில்குடியாதடா சதிகார பாவி
பிள்ளைகுட்டிபெத்தாயோடா சண்டாள பாவி
யின்னம்புத்திவல்லையோடா குடிகார பாவி

(புரு) சேனைநாள்பழக்கமடி முட்டாளு பெண்ணே
ஜென்மத்திலேவூறிபோச்சே கெட்டண்டி கண்ணே
நானுமட்டுங்குடித்தனென்றெண்ணாதே பெண்ணே
நாலுமூணுதலம்பரையாய் நடக்குதே கண்ணே

(பெ)குடிக்கேனென்றுசத்தியங்கள்பண்ணையே பாவி
குடல்பழுத்துதென்றுகதை சொன்னையே பாவி
ஜாதிகள்ளுஉன்குலைக்கொப்போதாதே பாவி
சாப்பிட்டாலும்வீணசண்டைகள்செய்யாதே பாவி

(புரு)மனவருத்தப்படுவதாலே கேளடி பெண்ணே
மாஜினமாகிலுந்தின்னு வாரண்டி கண்ணே
துணதுணென்றுபேசாதடி முட்டாளு பெண்ணே
திட்டுகூடதரைஞ்சிபோச்சி தூக்குது கண்ணே

(பெ பணம்போனாலும்போகுதையாஎந்தன் கணவா
பங்கிவுண்டைபழக்கம்வேண்டாம் எந்தன் கணவா
குணத்தின்படிநடப்பேனேயா எந்தன் கணவா
கும்மாமுட்டுங்குடுக்கவேண்டாம் எந்தன் கணவா

(புரு)கும்மாவுன்னேகுடுப்பதில்லேகேளடி பெண்ணே
குடிக்கிமட்டும்லத்தை ணம் தாக்கடி கண்ணே
சும்மாசும்மாசொன்னேனென்றுஎண்ணாதே பெண
சோத்துப்பானேயெகிரிப்பூடுந் தவரினால் கண்ணே

(பெ)சோத்துப் ானேஎகரிப்போனால்கேளடாபாவிஉன்
கூத்துதாண்டாகாஞ்சிபோகுங் குடிகார பாவி
நேத்துசொன்னசத்தியத்தை மறந்தாயே பாவி
நெஞ்சிமட்டும்நெட்டிவிட்டு வந்தாயே பாவி

(புரு)குடியருக்குசத்திபங்க ளேதடி பெண்ணே
கூச்சலிங்கேபோடவேணடாம் கேளடி - கண்ணே
படியத்தும்போதைகொஞ்சங் காணண்டி பெண்ணே
பணமிருந்தாலபட்டைகுடித்துவருவண்டி கண்ணே

(பெ பட்டைமூஞ்சிலிடிவிழுக குடிகார பாவி
பாட்டாவுடன்பட்டைசேர்ந்தால் மோசண்டா பாவி
கஷ்டப்பட்டுபணத்தைவீணுயழிக்காதே பாவி
காலங்கருப்பானதினால் சொன்னேண்டா பாவி

(புரு)பணப்போனாலும் ஷட்பம்போச்சிகேளடி பெண்
பாட்டாயடித்தாகையுங்காலு முரைக்குது பெண்

கணக்குபார்த்துகுடிக்காவிட்டால்கேளடி பெண்ணே
காலணாகூடகையில் கிட்டாது பெண்ணே

(பெ)பஞ்சைபோலேசற்றகல்வி படிக்காதே பாவி
பாரிலுள்ளோரெல்லாம் வுன்போல்குடித்தாரோ பாவி
செஞ்சியே-காம் பரங்கவிஷயகேளடா பாவி
சிரிக்குதுஉலகமெல்லாங் குடிகார பாவி

## தெலுங்கும்-தமிழும்.

ஒகநெலகா படினபாடு
ஊரந்த அடிகிகுடி ஜாடியே கள்ளுஜாடியே

பீருபுட்டிசெய்தமோசம்
பீப்பாதண்ணியைகேட்டுபாருஜாடியே கள்ளுஜாடியே

போசேடப்புகுசுருக்கண்டாதி
போயினவதலாஎமிலேதுபுட்டியே கள்ளுபுட்டியே

பட்டைதண்ணியைநம்பிநம்பி
சொட்டுமூ ரங்கூடகானோம் புட்டியே கள்ளுபுட்டி

கள்ளுவொச்சினமாடவினி
காலிவானுபயப்படிந்தி காவடி கள்ளுகாவடி

இத்தனைநாள்பட்டபாடு
யாரைகேட்டால்தெரியபோவுதுகுடுவையே கள்குடு

சிறுமணலூர்முனிசாமி
செப்பிசெப்பிநவ்விஞடுமொந்தையே கள்மொந்தை

பரிபூரணனந்தபோதம்—னேற்று
பகலெல்லாமழைபெய்து சுவரெல்லாம்வோதம்

சாருயபுட்டிபைசம்பு—அதை
சாப்பிட்டாலகொடுக்குதே அளவற்றதெம்பு
கையிக்கிசெலவில்லை—கொம்புயாரை
கண்டதேகுத்தினல் கபளுந்தே கெம்பு (தரு)

பெற்றதாய் சொல்லைக்கேளாதே—உந்தன்
பெண்டாட்டிபிள்ளைக்கி கஞ்சிவார்க்காதே
உற்றுரைஊரில்சேர்க்காதே—உந்தன்
ஆயுசுக்கும்ஒருகாசு தருமஞ்செய்யாதே (தரு)

பெற்றதாயாரைதடிகொண்டுமோட்டு—பெற்ற
தகப்பனையும்பட்டனையும் வீட்டைவிட்டோட்டு
உற்றுரைஉபவாரைமாட்டு—இந்த
ஊரிலுள்ளோர்மேல் கச்சையுங்கட்டு

தருமஞ்செயயாதிருமனமே—நாளை
கருமத்தைசெய்தாலேகடைத்தேறலாமே (தரு)

கள்ளுக்கடைசிந்து.

முற்றிற்று.

———

உ

கடவுள் துணை.



பெருமாள் தாலாட்டென்கிற

# ஸ்ரீராமர் தாலாட்டு.



சிருமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௩.

1910.

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீ ராமர் தாலாட்டு.

---

பேராமயோத்திப் பெருமாளைத்தாலாட்டச்
சீரார்குருகையர்கோன் சேவடிகள்காப்பாமே. (க)

அன்றமரர்க்காக அயோத்தியெனும்பட்டணத்திற்
சென்றன்றவதரித்தத் திருமாலைச்சொன்னாரோ. (உ)

தெள்ளுதமிழ்கொண்டாடச் சீரார்தசரதற்குப்
பிள்ளைவிடாய்தீர்த்த பெருமாளைச்சொன்னாரோ. (௩)

காவலழியக் கருதிலங்கைத்தானழிய
மூவருடன்பிறந்து மூவுலகையாண்டாரோ. (௪)

கருதலர்கள்காவலனே கண்ணார்ந்தகற்பகமோ
அரியுடையதாயார்க்குப் பாற் தடமாய்நின்றானே. (௫)

வீராதிவீரனே வேந்தர்சூடாமணியோ
ஸ்ரீராமனென்னுந் திருநாமம்பெற்றானே. (௬)

பேராற்பெரியவனே பேருலகையாண்டவனே
சீராற்சிறப்புடைய செங்கண்முகின்மேனியனே. (௭)

குவலயத்தோர்கொண்டாடக் குடுமிப்பிராயத்தே
தவமுனிவனசொற்கேட்டு தாடகையையெய்தவனே ()

மாசிலாமுத்தோ மணிவயிரத்தோளானே
கோசிகனார்வேள்விக குறைதவிர்த்தகாவலனே (௯)

அரிய முடிக்கரசேர் வாடவர்க்குப்போரோரோ
பெரியதொருசிலையைப் பெண்வடிவுசெய்தவனே. (௰)

அலைகடல்சூழ்வையகத்தே ஆருமசைக்கவொண்ணாச்
சிலையைவளையக்குனித்துச் சீதைமணஞ்செய்தவனே.

தாய்கைகேசிசொற்படிக்குத் தாமமுடிசூடாமல்
சீதையுடன்கானகத்தே சென்றபெருமானோ. (௧உ)

தாமமணிமார்பனே தம்பிதுணையுள்ளவனே
மாமுனிவர்க்கெல்லா மனக்கவலைதீர்த்தவனே (௧௩)

தாக்குடனேபேசுந் தனக்கடங்காசூர்ப்பநகை
மூக்கரிந்தசேவகர்க்கு முன்புவந்தசேவகனே. (௧௪)

தன்மாயைக்காட்டித் தையலுளமாலாக்கும்
பொன்மானின்பின்போன புண்ணியனேசொன்னாரே.

அக்கானகத்தே யணிமயிலைத்தேடுதற்குச்
சுக்ரீவன்றன்னுடனே தோழமைபைக்கொண்டானே.

கோலமதக்களிறோ கொற்றவர்தம்பேரேறோ
வாலிதனைக்கொலவொரு வாளிசெய்தசேவகனே.

ஆழிகொடுத்தே யனுமானைத்தூதனுப்பி
வாழுமிலங்கைநகர் வழிபார்த்துநின்றவனே. (௧அ)

இருள்கடலைத்தாண்டி யிலங்கைநகர்தீமூட்டித்
திரும்பியனுமானுரைக்கச் சீதைசெயல்கேட்டவனே

வானரங்களென்னு மகாசேனைதன்னுடனே
தானிலங்கைவேரறுக்கத் தண்டெடுத்தசேவகனே. ()

அடல்பெரியவீரியனே வன்புகுடிகொண்டவனே
கடல்கலங்கமுன்னாள் கணைதொடுத்தசேவகனே. ()
துலங்கும்பெருங்கடலைத் தூர்த்தேறிப்பப்புரம்போய்
இலங்கைநகர்கண்ட வீராகவனைச்சொன்னோ. (உஉ)
கொங்கரித்துவானரங்கள் கூத்தாடவெத்திசையும்
அச்கடலைப்பின்னிட் டரக்கர்பதிபுக்கவனே. (உங)
குன்றுபோலவந்த கொடியதொருராவணனை
இன்றுபோய்நாளைவா வென்றபெருமாளோ. (உச)
நாடியரக்கர்பதி நாலாயிரவெள்ளத்துடன்
கூடிவரும்ராவணனைக் கொன்றபெருமாளே. (உரு)
பத்துமணிமுடியும் பத்திரண்டுதிண்டோளும்
தத்திவிழவெய்த தடம்பெரியசேவகனே. (உசு)
எட்டிலங்கையைச்சுட் டிலக்குமியைத்தான்மீட்டுச்
சட்டமுடையயோத்திநகர் சார்ந்தரகுராமனே. (உஎ)
பூண்டமணித்தேரும பொன்னிலங்கைமாநகரும்
மீண்டுவென்றபபி விபீஷணனுக்கீந்தவனே. (உஅ)
ஸ்ரீராமராமனே சீதைசிறைமீட்டவனே
பேராற்பெரியவனே பேருலகையாண்டவனே. (உகூ)
செப்பமுடன்சேர்த்தெடுத்த ஸ்ரீமாரன்தாலாட்டை
மூப்பதுகற்றவர்கள் மூவுலகையாள்வாரே. (ங௦)

ஸ்ரீராமர்தாலாட்டு-முற்றிற்று.

---

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீ ரங்கநாயகர்.

# திருவூசல்.

தார்சிறந்தமுத்தசினாற் காலகணாட்டி
தனிப்பவளக்கொம்பதினாற் கொடுங்கைமாட்டி
வார்சிறந்தவைரத்தாற் பலகைபூட்டி
வண்ணநவமணிமாலை வயங்கச்சூட்டி
ஏர்சிறந்தசித்திரங்க ளெங்குந்தீட்டி
இலகுதிருப்பொன்னூசர் சேர்வைகாட்டி
சீர்சிறந்தமாதவனா ராடிரூசல்
ஸ்ரீரங்கநாயகனா ராடிரூசல். (க)

வச்சிரமணிதங்கத்தாற் கால்கணாட்டி
வைரங்கோமேதகத்தாற் பலகைபூட்டி
பச்சையெனுமரகதத்தாற் கொடுங்கைநாட்டி
பசும்பொன்னின்சங்கிலியால வடங்கள்பூட்டி
உச்சிதமாய்வானவர்கள் சமைத்தவூசல்
உலகளந்தமாயவனா ருண்மையாக
செச்சையணிமாயவனா ராடிரூசல
ஸ்ரீரங்கநாயகனா ராடிரூசல். (உ)

மாமறையைநவமணியாய்க் கால்களாக்கி
வழுததுமறுசாத்திரத்தைப் பலகையாக்கி
தூமருவும்புராணமதைத் கொடுங்கையாக்கி
சொல்லரியபலகலையைச் சங்கிலிகளாக்கி

பூமகளுநிலமகளும் பொற்பாயோங்க
பொன்னுலகோர்செய்தனித்த பொன்னினூசல்
தேமருவும்வண்டுளப மாலைபூண்ட
ஸ்ரீரங்கநாயகனு ராடிரூசல். (௩)

அணியணியாய்த்தேவர்கள்வந் தடிகொண்டாட
அந்தரர்கின்னரர்களுட ரணிந்துபாட
கணியர்கள்கொலுமுகத்திற் களித்தேயாட
கன்னியர்களிருமருங்குங் கவரிபோட
பணிவுடனேமுனிவரெல்லாம் பரிந்துதேட
பன்னிருவராழ்வார்கள் பதத்திறைட
திணிவுபெருந்திருமார்பா ராடிரூசல்
ஸ்ரீரங்கநாயகனு ராடிரூசல். (௪)

மாமறையோர்மாமுனியோர் வருந்திப்போற்ற
வானவர்கள்பூமாரி மகிழ்ந்துதூற்ற
சேமமுடனேம்முரகஞ் சிறக்கச்சாற்ற
தெரிவையர்கள் திருவாலஞ் சிறந்துமாற்றப்
பூமகளும்பார்மகளு மருங்கில்வாழ்க
பொன்னடியிலாழ்வார்கள் பொலிந்துதாழ்க
தேமருவுங்காவேரி சிறந்துசூழ
ஸ்ரீரங்கநாயகனு ராடிரூசல். (௫)

பொன்னணிந்தநவமணிமா மாலையாட
புகழ்பெரியவண்டுளப மாலையாட

வன்னமுள்ள சந்திரவட்டக் குடைகளாட
மகரமணிக்கண்டிகையா மாலையாட
மன்னுமணிமுடியாடப் பதக்கமாட
வாகுவலயங்களுமே யோங்கியாட
செங்நெல்விளைவயல்சூழ்ந்து செறிந்தேயோங்கும்
ஸ்ரீரங்கநாயகனா ராடிரூசல். (௬)
இந்திரரும்வானவரும் வடந்தொட்டாட்ட
இறையவரும்மறையவரும் வடந்தொட்டாட்ட
சந்திரரும்சூரியரும் வடந்தொட்டாட்ட
தானவருவானவரும் வடந்தொட்டாட்ட
கொந்தலருங்குழன்மடவார் வடந்தொட்டாட்ட
கோகனகப்பொற்பாதங் குலுங்கியாடச்
சிந்தைமகிழ்ந்திருவரங்க ராடிரூசல்
ஸ்ரீரங்கநாயகனா ராடிரூசல். (௭)
சதுர்மறையைத்திருடியவன் றன்னைவென்றோன்.
தனியிலங்மைராவணனார் தனையுங்கொன்றோன்
அதிசயமாய்ப்பாண்டவரைங் கார்த்தமூர்த்தி
ஆலிலைமேற்பள்ளிகொண்ட வாதிமூர்த்தி
கதிரொளியாய்ப்புவியளந்த கருணையாளன்
கன்னியர்கள் துகிலுரிந்த கள்ளமாயன்
சதுரிலகுப்ஸ்ரீரங்க ராடிரூசல்
ஜானகிமணாளனே ராடிரூசல் (௮)
சங்கரனுமைங்கரனும் மகிழ்ந்துவாழ்த்த
சதுர்முகனுமறுமுகனுந் தாழ்துபோற்ற

துங்கமுள்ளநவசித்தர் துதித்துப்போற்ற
சொல்லுபதினெண்கணமுந் தொழுதுபோற்ற
எங்குமுள்ளவண்டத்தோ ரேத்திப்போற்ற
ஈராறுமாழ்வார்க ளிணங்கிப்போற்ற
செங்கமலையாளுடனே யாடிரூசல்
ஸ்ரீரங்கநாயகனு ராடிரூசல். (௯)

மலர்மேவுதிருமகளோர் பக்கமேவ
வாட்டங்கனிலமகளோர் பக்கமேவ
நலமேவுபன்னிரண்டாழ் வார்கள்போற்ற
நாதமுனிமுதலானோர் வணங்கியேத்த
வலமேவுமைம்படைகள் கையிலோங்க
மருமார்பிற்கவுஸ்துவா பரணமாடச்
சிலைமேவுமலர்க்கந்தர் ராடிரூசல்.
ஸ்ரீரங்கநாயகனு ராடிரூசல். (௧௰)

இடையினிற்பீதாம்பரந்தா னிருந்துமின்ன
எழிற்கரத்திற்பஞ்சவா யுதங்கள்மின்ன
வடிவுபெருந்திருமேனி வண்ணமின்ன
மதிவதனங்கிருபையொடு மகிழ்ந்துமின்ன
முடிதனிலேமுடிமாலை முயங்கிமுன்ன
மொழிமார்பிற்கவுஸ்துவா பரணந்துன்ன
திடமேவுங்காவேரி சிறந்துசூழும்
ஸ்ரீரங்கநாயகனு ராடிரூசல. (௧௧)

ஸ்ரீரங்கநாயகர்திருஊசல்
முற்றிற்று.
ஆக மொத்தம் 183.

உ

கடவுள் துணை.

# சந்திரவதி புலம்பல்.

## முதல் பாகம்.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௧.

1910

# விளம்பரம்.



இதனால் சகலமானபேர்களுக்குந் தெரிவி ப்பது யாதெனில், சென்னைசூளை சட்டண நாய்க்கர் தெருவில் ஸ்தாபித்திருக்கும் "சிவகாமி விலாச" அச்சியந்திரசாலையில் நானுவிதமான தமிழ், தெலுங்கு, துலுக்கு, இங்கிலீஷ், வைத்திய ஜோஸ்ய புத்தகங்கள் உண்டு. தேவையானவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கெழுதிபெற்றுக்கொள்ளலாம்.

இப்படிக்கி,

ஸ்ரீ சி. முனுசாமி முதலியார்

அண்டு கம்பெனி.,

சூளை போஸ்ட்

மதராஸ்.



உ

கடவுள் துணை.

# சந்திரவதி புலம்பல்.

நேரிசை வெண்பா

சீராரயோத்தியையான் செம்மலரிச்சந்திரன்றன்
பேரார்சரித்திரத்தைப் பேசுதற்கு—யோருஞ்
செஞ்சடையிற்கங்கையொடு திங்களணிந்தோன்மகிழ
குஞ்சரத்தின் செஞ்சரணைக் கோர்.

சந்திரவதி புலம்பல்-விருத்தம்.

வயிற்றிடமாகவுன்னை வைத்தொரு பத்துமாதம் [மேயா
பயன்பெறலா மென்றெண்ணி பரிவுடன்பெற்றேனை
இயல்புடன்வளர்த்தேனுன்னை ஈதருப்பணுகிடாமல்
நாய்நரிபுலிகள்சூழும்காட்டில்வாழ்பாம்புக்கோ தான்

(வ-ம்) அகோதெப்படியென்றால் தற்பையறுக்கஅனு ப்பின தேவதாசன் சற்பந்தீண்டி யிறந்ததாய் அசலா த்துப்பிள்ளைகள் சொன்னவுடன் சந்திரவதியம்மன் அய்யரை விடைகேட்டுக்கொண்டு காட்டில்நடக்கும்போது காலில்தட்டிய மகனைக்கண்டு புலம்புவது காண்க.

சந்திரவதி-இ-ம்-பியாக்-தாளம்-ஆதி.

பாலாயெனைப்பிரிந்தாயோ துஷ்டசர்பத்
தாலேகடித் திறந்தாயோ

பாலாயெனைப்பிரிய மேலோர்கள்செய்சதியோ
காலால்தட்டியெடுத்தே ஞாலாகலையுணர்ந்த பா

பிறந்தஅருமையென்னடா ஐயோமகனே
வளர்ந்த பெருமையென்னடா

சிறந்தசெங்கோலரசு துரந்தவேதியர்வீட்டில்
இருந்து அடிமையன்னம்அருந்தமனம்வெறுத்து-பா

தந்தைகுடை தாங்குவாயென்று ஐயோமகனே
சிந்தையில் நினைத்தேனேயன்று

சிந்தைகூர்ந்தரசு செய்துவரும்நாளையிலே
விந்தையாய்விளைத்தகடன்வந்துதேபாம்பாக யின்று

மறுபடியும் கரத்திலேந்திக்கொண்டு புலம்பல்.

அய்யோமகனேயிது அனியாயமனியாயம் அனி
அரவனுக்கிறையான தனியாயமனியாயம் அய்

அரவன்சிறையிலப்பா அழுதாயோதொழுதாயோ
அணைப்பாரிங்கில்லாமல்அம்மாவென்றழைத்தாயோ

முன்னேசற்பத்தைக்கண்டு முழித்தாயோ அழைத்தா
பின்னேயாதாவற்றுபேசாமல்நின்றாயோ [யோ

மண்ணாளுவாயென்று மகிழ்ந்தேனேபுகழ்ந்தேனே
மண்மேல்படுக்கக்கண்டேன் மணிக்குடல்பதருதே ()

பாவினன்பிள்ளைபெற்றும் பலனில்லைபலனில்லை
பாம்புக்கிரைகொடுத்து பரிதேசியானேனே அய்

(பாலன்பிறப்பானம்மே யென்னும்வர்ணமெட்டு)

பாலாயெனைப்பிரிய கொடும் பாவிதவப்பயனோ
காலால்தட்டியெடுக்க காசிநாதன்செயலிதுவோ
பெற்றகுடல்துடித்து அப்பா பெற்றும் மலடியடா
ஆவிபதைத்துஇங்கேயென்னை கூவிதுடிக்கவிட்டாய்

சந்திரவதி-சாமா-ஏகதாளம்.

கரடிபுலிநாகன்சிங்கமுரங்கிடுங்கானகம்படுத்தாய்
மிகதுடித்தாய் உயிர்விடுத்தாய் மகனேகாலமா
முனிநோலமா அப்பா கோல கோல கோ

அய்யோமகனேவுன்னை அரவந்தீண்டிட அரனார்
செய்திட்டயா தலைவிதியோயா காலகெதியா மகனே
ஆருமா துயர் தீருமா அப்பா தீ தீ தீ

பாலனேஉனை பாம்புக்கிரைதர பாவினான்
பெத்தனோ வாய்பொய்த்த னோ பிரமன் செத்தானோ
பாரினில் இனியானிருந்தென்ன பாரமே பா பா

எப்படிஉனை விட்டுப்பிரிந்திருப்பேன்
தணந்தறிப்பேன் மனம்பொருப்பேன் மகனே
யென்னமோ முனசெய்தன்மமோ அப்பா க க க

வீட்டிலிருந்துநீ காட்டினிற்சென்று
விஷத்தினாலிறந்தாய் எனைமறந்தாய்
யேதடாதெய்வ சூதடா அப்பா சூ சூ சூ

பத்துமாதஞ்சுமந்து பெற்றமகனேஉன்னை
பாம்புக்கோவளர்த்தேன் யிரைகொடுத்தேன்பழியெடு
த்தேன்.பாபமோபெவர்சாபமோஅப்பா சா சா சா

உன்னைபெற்றதந்தை யென்னை வந்துகேட்டால்
உரைப்பதென்சொல்லடா வயதல்லடா மநங்கல்லடா
தூக்கமோ தந்தை யேக்கமோ அப்பா ஏ ஏ ஏ

உன்தந்தைவந்தாரிதோ சிந்தைகலங்காதே
மைந்தனேபாரடா மொழிகூறடா யினியாரடா
மாயமோ பிர்மன் மாயமோ அப்பா மா மா மா

அம்மம்மாவென்று அழைத்தவொழியங்கே
யார்வந்துதடுத்தார்உனைக்கெடுத்தார்பழிதொடுத்தார்
அவனியிற்கொடும்பாவிபெண்ணைப்போல்யாரடா யா யா

காட்டிலுனைவளர்த்தி கண்ணீர்பெருகியழ
கர்ப்பிபென்பாவமோ குலசாபமோ எவர்கோபமோ
கூறுபோகண்ணால் பாராயோ அப்பா பா பா பா

பாலனுயிர்மறித்த பழுஞ்சர்ப்பமே யிந்த
பாவியைத்தீண்டவா விஷங்கொண்டுவா பலனுண்டுவா
வேண்டாயோ என்னை தீண்டாயோ ஐயோ தீ தீ தீ

மன்னன்பிரந்ததும் மைந்தனிறந்ததும்
மாதவக் குறையோ பிரப னுறையோ எவர்முறையோ
காமியோ பாபஜென்மமோ பாப ஜெ ஜெ ஜெ

சர்ப்பந்தீண்டையில் கெர்ப்பங்கலங்கிநீ
எப்படி ஏங்கினாய்விஷந்தாங்கினாய்காட்டில்தூங்கினாய்
சாபமோ தந்தைசோபமோ அப்பா சோ சோ சோ

அரவன்சிரையில் அம்மா அம்மாவென்று
அலரிநீ பார்த்தாயோமுகயவேர்த்தாயேஉயிர்தோத்தர்
யோ ஆரிட்டசாபம்நேரிட்டதிந்தகாட்டிலே காகா

அப்பா ஆண்டநாளேயில் மாண்டிருந்தாலும்
தண்டுதளம்வருமே புகழுநுமே கனம்பெருமே
ஆராதேதுயர் அப்பா நீ நீ நீ

பெற்றுமலடியென்று பேரைத்தாங்கவா பென்ஜெ
ன்மமெடுத்தேன் கிளிவளர்த்தேன் பரிகொடுத்தேன்
பெண்ணிற் பாவிகளென்னைப்போ லுண்டோபிர்மனே

சந்திரவதி-இ-ம்-நவமோஸ்-தாளம்-ஆதி

மைந்தனில்லை என்றுசொல்லி மாதவங்கள் செய்தனே
தேவனே பிர்மதேவனே [யோ
சிந்தைகலிதீர்க்கவென்று சித்திரம்போலே யளித்தாய்
தேவனே பிர்மதேவனே
சித்திரம்போலேயளித்த செங்கனியையேன் பறித்தாய்
தேவனே பிர்மதேவனே
நாடிழந்து நகரிழந்து நாதனையும் பிரியவைத்தாய்
தேவனே பிர்மதேவனே
அன்னையும்சேயனுமாய் அடிமைத்தொழில் செய்யவை
தேவனே பிர்மதேவனே [த்தாய்
பாவியான்பிள்ளையைப் பெற்றுப்பட்டதுயர் போதுமை
தேவனே பிர்மதேவனே. [யா

சர்மமுறைதப்பினாலே தாசர்களைப்பேசினேனோ
தேவனே பிர்மதேவனே
பிள்ளையெங்கேயென்று பெற்றதந்தை கேட்டாலேது
தேவனே பிர்மதேவனே [சொல்வேன்
பிள்ளையை தகனம்செய்ய பெற்றதாயென்றெழுதினை
தேவனே பிர்மதேவனே. [யோ

சந்திராவதி விருத்தம்.

அப்பாமகனேஉன்னை அரவனுக்கிரையாய்தந்து
இப்படிபரதவிக்க இறையவனெழுதினானோ
சொர்ப்பனமரியேனையோ சுந்திரதேவதாசா
வெப்படியுன்னையேந்தி யிமத்துக்கேகுவேநான்

சந்திராவதி சுடலைக்குப்போகுதல் ஐம்பை.

மாதங்கள்செய்துபெற்ற மைந்தனைக்காத்திலேந்தி
பாதகிநான்சுடலைகரை பார்க்கயினறுபோரேன்
அநந்தவங்கள்செய்துபெற்றஅன்னமதைநானேந்தி
பறந்துநாய்பேய்வாழும் பாழ்சுடலைபோரேன்
இப்படியேஎன்சுதனை யிருகாத்தில்நானேந்தி
செப்பரியசுடலைகரை சேரலிதிவசமோ.

சந்திரவதிபுலம்பல்-முற்றிற்று.

---

உ

கடவுள் துணை.

# சந்திரவதிபுலம்பல்.

## இரண்டாம் பாகம்.




சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1910.

உ

கடவுள் துணை.

# சந்திரவதி புலம்பல்

---

பொது-விருத்தம்

மைந்தனைக்கரத்திலேந்தி மயானத்திற்கொண்டுவந்து
செந்தணல்மூட்டிதேவ தாசனையதின்மேல்வைத்து
சிந்தையுநொந்துவுள்ளம் சிதறியேபுலம்பும்போது
வந்தரிச்சந்திரதோட்டி வந்துமேகேட்கலுற்றான்.

வசனம்.

இவ்விதமாக தேவதாசனைவளர்த்தி தீமூட்டிசந்திரவதி புலம்புவதைப் பார்த்து அரிச்சந்திர தோட்டிகேட்கிற விதங்காண்க.

அரிச்சந்திரன் சொல்-தரு.

காவலுக்குள்வந்ததாரடி - அடிதுஷ்ட
கள்ளியே நீயெங்கலூரடி.

சேவகனுத்தரவன்றி சேயனைக்கொளுத்துகிறாய்
ஆவலாய்நடுஜாமத்தி லழுகிறாய்வொழுகிறாய்நீ (காவ)

சந்திரவதிசொல்லல்.

அரசிலிருந்தஎன்னை யாரோ ஒருபுலையன் அடிவாடி
போடியென்றும் அழைக்கவைத்துதேதெய்வம் (அ)

அரிச்சந்திரன்
திருடியாரடிநீலி தெய்வமேயென்றழுது
மூரட்டுத்தனமாய்த்தியை மூட்டுகிருய்திருட்டுப்பேயே
சந்திரவதி.
பேயும்பிசாசுமல்ல பெண்ணிலோர்பாவியையயா
பெற்றமகனை துஷ்ட பாம்புக்கிறைகொடுத்தேன்　(அ)
அரிச்சந்திரன்
பெற்றமகனென்று சொல்லிஅர்த்தராத்திரி வேளைதனில்
எத்துகிருய்கள்ளபிணை மெட்டிநட்டி.　(காவ)
சந்திரவதி.
எட்டியெட்டியென்று யீமங்கார்க்குப்புலையன்
நட்டியென்றுவுதைக்க நான்முகனமைத்தானே
அரிச்சந்திரன்
காப்பணமும்வாய்க்கரிசி கட்டளை கொடுக்காமலென்
காவலையேமாற்றிந்டு ராவிலேயெரித்தகள்ளி　(காவ)
சந்திரவதி
அரிசியுங்காப்பணமும் யாரைப்போய்க்கேட்பேநான்
அரியக்கடனைப்பட்டு பரதேசியானேனே　(அ)
அரிச்சந்திரன்
உள்ளங்கைபோலேதாலி உன்கழுத்தில்மின்னுதடி
கள்ளிபதைவிற்று எந்தன் கட்டளையைத்தாடியடி (க)
சந்திரவதி
அரன்மாலும்பிரமனு மறிந்ததில்லையே ஐயோ
பரையன்பார்க்கவென்ன பாதகஞ்செய்தேனோ　(அ)

அரிச்சந்திரன்

பிரமனரன்காணுரென்று பொய்மொழிபினந்துகிருய்
மர்மமொன்றறிகிலேனுன் மன்னவனின்பேருமென்ன

சந்திரவதி.

மன்னனரிச்சந்திர மகாராஜனெனென்பார்கள்
மாண்டமகன்தேவ தாசனெனசுதனையோ (அ)

(வ-ம்) இவ்விதமாக சந்திரவதி பேரைச் சொல்லி புலம்புவதைக்கேட்ட அரிச்சந்திரமகாராஜன் தன்பிள்ளையென்றறிந்து பிரலாபிக்கின்றது.

தரு-இ-ம்-சாமா - ஏகதாளம்

ஆழிசூழ்யோத்தி அரசாட்சி செய்வாயென் றப்ப
னேபுகழ்ந்தேன் மனமகிழ்ந்தேன் தினம்புகழ்ந்தேன்
அப்பனே இதுக்கெப்படியப்பா எப்படி-எ-எ,

அப்பா மகனேயினி எப்போகாண்பேனுன் ஐயை
யோதெய்வமே யாரைநொய்வனே இனிஉய்வனே அ
ன்னமேயடா சொர்ணமே அப்பா-சொ-சொ,

ஆருமென்னிட பேழையிகழ்ந்திட எடுத்தேனே ஜட
லமுனிநடலம் விதிப்படலம் ஆலமுண்டவன்கோல
மோ அப்பா கோலமோ கோலமோ,

உன்னைப்பிரிந்திந்த மண்மேலிருந்திட என்மனம்வ
ருமோ இதுதகுமோ பொதுவாகுமோ எண்ணிடேன்
ஆவிநண்ணிடேனப்பா நண்ணிடேன்-நண்-நண

நான்எண்ணின எண்ணங்கள் நன்றல்லவென்று நீ மண்ணின்மேல்படுத்தாய் டிகங்கடுத்தாய் எனை விடுத்தாய் இந்தவிதிக்குநான் என்ன செய்வேனினிமைந்தனே-மைந்தனே-மைந்தனே,

பெண்ணே பொய்சொல்லக் கூடாதென்று புலையனுக்கு அடிமையானேன், நீ அடிமையா யிருக்கும்ஐயரை க்கேட்டு காப்பணமும் முழத்துண்டு மாத்திரம்வாங்கி வா பெண்ணே.

சுடலையைவிட்டு வேதியரிடம்வரும்போது காசிராஜன் பிள்ளையைக்கண்டு நடுஜாமவேளையில் தன்பிள்ளையென்று புலம்புகிறவிதங் காணக.

இம்-சாமா-ஏகதாளம்.

விதிபோ விதியோ எவர்சதியோ அப்பாகாட்டில்விழுந்து கிடக்க பாவி துடிக்க கையாலெடுக்க வைத்தானோ பிரமன்செத்தானோ அப்பா-செ-செ.

கல்லும்முள்ளும்உருத்த காட்டில்மிருகந் தீண்டகண்ணேயிங்குபடுத்தாய் காஷ்டம் விடுத்தாய்வேஷ்டம் கொடுத்தாய் காலமா இதுகோலமா முனிஜாமமா,

ஆருமற்றபரதேசிபோ லலைய அண்டர்செய் சதியோ பிரமன்விதியோ நீசெய்சதியோ அப்பனே இதற் கெப்படி மனம் ஒப்புமா.ஒ-ஒ

பொது-விருத்தம்.

மாசிலாதவத்தாலீன்ற மகன்றனைக் காட்டில்வைத்து
கூசியவனத்தில்சந்திர மாமதிவருகும்போது
காசிவாழரசன்தூதர் கள்ளரைப்பிடிக்கவங்கே
பேசியயிவள்தாசென்றுபிடித்திட்டாரடித்திட்டாரே
(காசிராஜன் சபைக்கு கொண்டுபோகிற இந்திரசபா.)

நமதரசன்சுதனுக்கிடர் நினைத்ததுரோகியை
நாமறிந்தோமதாமதமேன் நடத்திவருவீர்
பாலனைவதைசெய்திடுங் கொடும்பாவிதானிவள்
காலன்விடும்தூதரைப்போற் கட்டியிழுங்கள்.

கண்டறியோமென்றுணர்ந்தோர் கடுந்தொழில்செய்தாய், எண்டிசையிலெம்மைவிட எவர்களைக் கண்டாய் கண்கள்வீசும் இரவிற்றிரியுங் கள்ளியாமிந்தசண்டாளியைக் கொண்டுவந்தோம் தெண்டனைச்செய்வீர்.

தூதர்சொல்ல சந்திரவதி யம்மனைப் பார்த்து
காசிராஜன்மந்திரிகள்சொல் விருத்தம்.

கள்ளியென் றுரைக்கலாமோ கருத்திலுநினைக்கலாமோ, கள்ளியின்குறியுங்காணேம் கபடமாய் மொழியுங்காணேம், கள்ளியென்றுரைக்கோமையா காசிவாழ்வேந்தேகேளாய், கள்ளியென்றுரைத்ததூதர் கள்ளர்தான் கள்ளர்தானே.

காசிராஜனும் மதனவல்லியும்சொல்-தரு.

இ-ம்-கண்டா-ரூபகம்.

(காசி) தூதர்சத்தியமாக சொல்லுகிறுர்கேளுங்கள்

மந்திரிமாரே இந்ததுஷ்ட கள்ளியைச் சிரைசாக்கினை செய்யுங்கள் மந்திரிமாரே.

(மத) திருடிப் பிழைக்குங்கள்ளி தீரத்தை விடுவாளோமந்திரிமாரே இவள்நிலைத்துநின்றதைப்பார்த்து யிறக்கப்படலாமோ மந்திரிமாரே.

(காசி கள்ளிகள் சாமர்த்தியம் கண்டதில்லையோநீங்கள் மந்திரிமாரே வெகுவித்தைகள் சித்துகள்கற்றிருப்பார்களே மந்திரிமாரே,

(மத) வீரவாகையழைத்து விடுங்கள் கொடுங்களப்பா மந்திரிமாரே, இந்ததீரக்கள்ளியைச் சற்றுப்பாராடல் வதையுங்கள்மந்திரிமாரே,

(வ-ம்) வீரவாகுவையழைத்து சந்திரவதியை வெட்டச்சொல்ல தனக்கடிமையாயிருக்கும் அரிச்சந்திரனையழைத்து வாளைக்கொடுத்து வெட்டச்சொன்னவுடன் மனந்துணிந்து சத்தியத்தை நயபி வெட்டுகிற விதங்காண்க.

அரிச்சந்திரமகாராஜன்சொல்-தரு.

உனதிஷ்டதெய்வத்தை மனதில்நினைத்துக்கொள்
நாயகி பிராணநாயகி
எனதுசத்தியந்நிலை தவறாமல் வெட்டுவேன்
நாயகி பிராணநாயகி
கடவுளைநினைத்துக்கொள் கதறுதேபதறுதே
நாயகி பிராணநாயகி

திடமாயுஞ்சித்தைநீ தரையிற்குனிந்துபார்
நாயகி பிராணநாயகி
மறவாதேதெய்வத்தை மனதில்நினைத்துக்கொள்
நாயகி பிராணநாயகி
திறமாய்வெட்டென்று சிரசைக்கொடுப்பாயே
நாயகி பிராணநாயகி

வசனம்.

அப்படியேயெல்லாம் என்மனதில் நினைத்துக்கொண்டேன் வெட்டுமையா என் பிராணநாதரே.

தேவர்கள் சொல்-விருத்தம்,

அரிச்சந்திரா பொறுபொறப்பா அரிச்சந்திராபதற வேண்டாம், அரிச்சந்திரா வுனதுசத்தியம் அரிச்சந்திரா தவறவில்லை, அரிச்சந்திரா வுனதுபாலன் அரவத்தால் மடியவில்லை. அரிச்சந்திரா சுடலையல்ல அமரர்வாழ் லோகமப்பா.

வசனம்.

வெட்டவேண்டாமென்று தேவர்கள் தடுத்துலோகிதாசனை எழுப்பிக்கொடுத்து சுகமாகவாழக்கடவாயென்று மகுடாபிஷேகந்தரித்து வாழ்த்தினார்கள்.

இரண்டாம்பாகம்-முற்றிற்று

---

ஆக மொத்தம் 185

உ

முருகர் துணை.

# பழனியாண்டவர் பதிகம்.

இஃது

திருஎவ்வுளூர்

வேங்கடாசல செட்டியாரவர்கள்

குமாரர்

இராமசாமி செட்டியாரவர்களால்

இயற்றப்பட்டு

சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௩.

1910.

அங்கஜாரீடகுஜ வனசரசு புத்ரியா லிங்கனமகா
சுந்தர - அமரகுலபயநாச சங்க்ராமவெற்கர கண்
டிதாசாபதீப, துங்கஜனரக்ஷக தயாளவிஸ்வேசஜெய
சுப்ர தீபப்ர பாக - சுமங்கல சுலக்ஷண சுதந்திரசு
பாஸ்கர சுயம்ப்ரகாசப்ரபா, வெங்கஜவிநோதவாக
னசுரேந்திரமருக விரண விசாகவிபவ - விமலவேதா
கம விசேஷவிக்ரமவிபுத விருதவித்தக விசால, பங்
கஜவில்லசன பாரநந்தபகவ ஸப்பதகனுக்கருள்புரிகு
வாய்-பணிவுபூண்டவரேத்து மகிமைநீண்டவரோதருமகி
மைநீண்டழிலிசேர்த்தபழனியாண்டவமூர்த்தியே. (௨)

வண்ணமுறமேனிதனின் மஞ்சள்பூசிக் குழலைவாரி
மலர்சொருகியிளமென் - மதிநுதலினிற் றிலதமிட்ட
ம்புருவவிழியின் மையிட்டு வளைகள்செங்கை, நண்
ணுபடிக்கணிந் தொலிசெய்காலாழிமுத நவமணிப்
பூண்புனைந்து - நளினமுகைபாமுலையை வாரிட்டிறுக்
கியொளிர் நற்சேலையிடை யுடுத்திப், பெண்ணனை
மென்றுசொல நடை காட்டியங்கிளிப் பிள்ளைபோற்
பேச்சுரைத்துப் - பேதநறுத்திடுவிரக மூட்டிவசமா
க்குமவர் தொழிநதின்று மாழா, பண்ணுவதுநிற்க
ருமை யாகுமோஜெபதுங்க பவபங்கசுனபுங்கவா, ப
ணிவுபூண்டவரேத்து மகிமைநீளெடழில்சேர்த்த பழ
னியாண்டவ மூர்த்தியே. (௩)

ஓத்துநின்றிருவளப் பாங்குணர்ந் தொழுகுநல்லு த்தமரிடத்தில் வைகி - ஒவ்வுமடை யாளங்கள் பல சொல்ல லவர்களு முளத்துறுதி கொண்டமைத்துச், சித்தங்களித்துநின் பெயர்சொலித்தோளிற் சிறப்பா யெடுத்துவருமச் - செழுமலர்க்காவடிகள சர்க்கரைக் காவடிகள் திகழனக்காவடிகள்பால் வைத்தகாவடிக ள்கர்ப் பூரகாவடிகள்சீர் வாய்ந்தமச்சங்களாங்கா - வ டிகளொடுசோதனைக காவடிகள் பலவினுமாமகத்வங்க ள் காட்டிப், பத்தர்களை யாண்டருளு மெய்க்கடவு ளேயெனது பருவரலை நீக்கியருள்வாய் - பணிவுபூண் டவரேத்து மகிமைநீண்டெழில்சேர்ந்தபழனியாண்டவ மூர்த்தியே. (௪)

ஒவ்வொருவ ரொன்றைப் பெறக்கருதிபல்லவாவுள் ளத்தினின்று றெழுத் - துச்சரித்துச் சஷ்டி கார் த்திகைப்பூசநா ளுயருமுபவாசமேவல், செவ்வைபெ றுசங்கி வலமவருதலுசிதவபி ஷேக பூசைகள்காவ டி - செலுத்தலதிவ்யமண மருவுமலர் மாலையொடு செந்தமிழ்தாரணிதலா, மிவ்விதபிரார்த்தனைகள் செ ய்கின்றதப்படி யிருக்கநல்லறிவுசற்று - மில்லாதுதிட முமில் லாதுநினகருணையுற விக்சை கொண்டேன்ற ரங்கப், பவ்வமதுசூழ்புவியி லேழைமயேன்மீதினிற் ப ட்சம்வைத்தருள்புரிகுவாய் - பணிவு பூண்டவரேத்து மகிமை நீண்டெழில்சேர்ந்த பழனி யாண்டவமூர்த்தி யே. (௫)

நிலைகொண்டநவநாத சித்தரொடுசித்தர்கணை நீங்கா
தடுக்கணமென - நிற்சூழ்ந் திலங்கிடப் பூரணகலாம
தி நிகர்த்தமர்ந் தற்புதங்கள, அலகிலாமற் செய்து வி
ளையாடலுண்மையே யாகிடிற் றிச வதி - அயமுமா
ற்றேங்குபொன் னுக் கவ'றெனமிடி யன்றநித்திய
செல்வமும், எல்லனுடனியாங்கொறத் தண்கருணைசெய்
யருள்மகாசித்தனென் றென்றநிம் - ...னிலந்த திசெ
த எலாம்வல்லசித்தரென மதுரை யம் திபின்மேவிப்,
பலனுதவுசித்தர்மகி ழுஞ்சித்த சாரியென் பங்கிலு
றைகுலதெய்வமே - பணிபூண்டவரேத்து மகிமைமீண்
டெழிலசீர்த்த பழனியாண்டவமூர்த்தியே. (௬)

இக்கலியுகத்தினிற் கண்கண்டதெய்வநீ யென்றுல
குளோருரைப்ப - தெகார்த்தமெனினுமமென தமட்
டினிற்பொய்மையா யிருப்பனோவாரிசம் ஒக்
குநின் றண்டையணி யடியிணையை யன்புகொண் டுள்
ளத்திலுன்னவிலையா - உய்யுநெல் விளைபுலமு நிலவு
காய்ந்திடுமிடமு மோர்நாளுநமறியார்களபோல, அக்க
ரையிலாமலெ யிருப்பதழகா எள்ளி னளவுமுனிரக்க
மிலையா - அடியனேனென்செய்வேன்வேறுகதியிலை
யென்னையனே கைவிடாமற், பக்குவமுடன்காத்து வ
ரமுதவியிவ்வேளை பாதுகாத் தருளவேண்டும் - பணி
வுபூண்டவரேத்து மகிமைமீண்டெழில்சீர்த்தபழனியா
ண்டவமூர்த்தியே. (எ)

உண்மைநவி லொரு ரெழுத்துடைய பொருளேயெ ன் னுள்ளத்தினெழுமவப் - வொப் பிலாவற்புதக் கற்பகச்சோலையே உரைக்கப்படா பொன்னே. சண் மதத்தவர்களு பே ற்றவரு தெய்வமே சதுர்மறைப் பொருளின்முடிவே - தலைருமலயுகவ நிதியேசிட்சேப மே தண்க ணே மழைபெயமுகிலே. தெண்மணிவரை ச்சிரத திரப்பூத்ததேர ஒயே செவிட்டாத தெள்ளமுத மே - இகபெட்டி னுற்றவரு முள்ள சளிக்கிடக் கிக மமாணிக்கமலையே, பண்மயவ கமளைி முரல் வெட்சி யலர்மார்ப பரிவுகூர்ந்தெனையாளுவாய் - பணிவுபூண் டவரேத்து மகிமை நீண்டெழிலசேர்த்த பழனியாண்ட வமூர்த்தியே (அ)

கந்தனே முருகனே கடல்வணன் மருகனே கருதி யெழு சருமழகனே - கடப்பமலர் மாலையணி வாகனே போகனே காங்கேயனே தூயனே, சந்தக மு மன்பர் வினை தீர்க்கவரு நாதனே சவமுனிவர் பகழ்பாதனே - சண்டாயுதங்கொண்ட கையனே மெய்யனே சதுர்பெ ருகுமெய்யனே, சுந்தரகஜானனன் றுணைவனே குக்கிடத் துவசனே வியதரெவருங் - துதிசெயுங்கர்த் தனே அத்தனே முத்தனே சுத்தனே பிரசித்தனே, நதெனுங் தனவள்ளி நாயகியுளனே படிறனேனெனையாளுவாய் - பணிவு பூண்டவரேத்து மகிமைநீண் டெழிலசேர்த்த பழனியாண்டவமூர்த்தியே. (கூ)

பெருமலை முனிவனுள மாவு தெய்வங் கொடும்பவி
ணியெலா நீக்கு தெய்வம் - பேசுநர்கோ சிறை மீட்ட
செய்வங் வரை பற்றிடு குமாரதெய்வம், அநடாணைவி
ன்முடிமீது நடனமிடு தெய்வம் விண்ணவர் சிறை தீர்த்
ததெய்வம் - அருணகிரிநாதருக் கருள்செய்த தெய்வ
மேனையாண்டடிமை கொண்ட தெய்வம், கருவாவி
ன்றனர் குறைதீர்க்க தெய்வமொரு மையல்கைவிக்
த தெய்வம் - தயபுரு நின்பதங் கதிராமசாமிசொற்
றமிழுக்கிரங்கு தெய்வம். பர காருண்யதெய் வமபெ
ரியர் வேண்டிய படிக்கருள்செய் தெய்வமே - பணிவு
பூண்டவரேத்த மகிமை நீண்டெழில்சேர்ந்த பழனியா
ண்டவமூர்த்தியே (௧0)

திருவாவினன் குடியென பாபமிதிருட்பழனி சிவகிரி
யெனப்பெயர்பெறுங் - சீர்பெற்றதிருப்பதித் தலம்வா
ழிநற்றித் தெவிமரி வர்வாழி, ஒருவர் புகழ்கொ
ண்டதண்டாயுதபவாழி யொளாசதக் கொஇரவாழி-யு
யர்ந்தவெஞ்சேவலங்கொடி வாழி மயிலவாழி, யாங்கு
சத்தியும் வாழி, திருவாக்கபவு நின்னருள்வாழி நீ வாழி
திருசிகவள்ளர்வாழி - நிலைபெற்ற சதர்வேதப்வாழி க
மழைமுகில்வாழி நின்பூசை யாளாவாழி, ர்வ செயசக
ஞ்செய்வோர்வாழி நிற்றவுடத்காநீடூழிவாழி - பணி
வுபூண்டவரேத்துமகிமை நீடெழில்சேர்ந்த பழனியா
ணடவமூர்த்தியே. (௧௧)

பழனியாண்டவர்பதிகம் முற்றிற்று.

# பழனியாண்டவர்பேரில்

## ஆனந்தக்களிப்பு

சரவணபவகுகா சரணம் - நிதந்
தற்காத்தெனையாள்வாய்சண்முகசரணம் (சரவண)
பரமசிவனருள் பாலா - நல்ல-பண்புறுமன்பரைக்காத்
திடுஞ்சிலா, பிரமனைச்சிறைநீக்குமலோலா-மிகுபிரபல
மேவுபழனிவாழ்வேலா (சரவண)
சதுர்மறைபுகழுங்கியாதா-ருத்ர - சன்மரொனவந்திலங்
கும்பரமேபாதா, மதிமுகவுமைமகிழ்நீதா- துங்க-மாதவ
ருள்ளத்தில வளர்குருநாதா (சரவண)
புள்ளிமாமயிலேறுந்தாளா - ஞான-போதமடியார்க்கரு
ள்செய் குணாளா, வள்ளிக்குவந்தமணாளா - மணமருவு
ங்கடம்பணி பன்னிருதோளா (சரவண)
நவவீரர்பணியுநன் னேயா-ஜெய-நாட்டுங்குணகாங்
கார்த்திகேயா, பவளநிகரஞ்செவ் வாயா-எங்கள்-பார்
வதிமாமுலைப் பாலுண்டதூயா (சரவண)
ஆனைமுகனறுணையோனே- அன்பர்க்-காபத்தில்வந்துத
வும்பெருமானே வானுறைவோர்க்கருள்வோனே-மலர்-
வாய்ந்தசுனைபல ளுபுரிக்கோனே (சரவண)
கிரனைக்காத்திடும் வீரா-மகா-கெ பீரவுக்தண்டவேல
கொண்டதீரா, சீர்வளர்துங் வஜீரா - செழுஞ் - சேவற்
பதாகைக் காவலங்காரா (சரவண)
புனிசமார்கற்பகக்காவே-நல்லோர்-புந்தியிலென்றுமண
க்கும்பொற், நனிசீர்கொள்பழனிவாழ் கோவே-பதம்-
நம்புயிராமசாமிக்கருள்தேவே (சரவண)

ஆனந்தக்களிப்பு - முற்றிற்று.

உ

கடவுள் துணை.

ஸ்ரீமத்சட்சமய நிராகரண சர்வாரிய
பரமஹம்சஸ்வரூபமாகிய
திருநெல்வேலி

# பரசமயகோளரி சுவாமிகள்

## பதிகம்.

---

இஃது
திருவையாறு
ம-ள-ளஸ்ரீ அப்பாவு ஆசாரியார்குமாரர்
நடேசதாசரென்னுங்காரணப்பெயரெய்திய
முத்துசாமிபாரதியாரவர்களால்
இயற்றப்பட்டு

சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்
சென்னை சூளை
தொண்டைமண்டலம அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது

1910.

## சிறுமணவூர். முனுசாமி முதலியார்

### அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கும்

# சொந்தப்புத்தக விளம்பரம்.

| | | | |
|---|---|---|---|
| சோதிடசிகாமணி | 3 | 0 | 0 |
| வயித்தியசிகாமணி இங்கிலீஷ் தமிழ் | 3 | 0 | 0 |
| பிரபஞ்சவுற்பத்தி தமிழ் | 2 | 0 | 0 |
| ஷை இங்லீஷ் மொழி பெயர்ப்பு | 2 | 0 | 0 |
| உலகவிசித்திரக்கதை | 1 | 0 | 0 |
| பதிவிரதைகள்சரித்திரம் | 0 | 2 | 0 |
| சுதேச வைத்திய மூலிகைகளசாஸ்திரம் | 1 | 0 | 0 |
| சுகந்த பரிமளசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சரீரசாஸ்திரம் | 0 | 8 | 0 |
| சிவசொரூப சாஸ்திரம் | 0 | [illegible] | 0 |
| விவாகசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| சகுனசாஸ்திரம் | 0 | 4 | 0 |
| ருதுஜெனன ஜாதகம் | 0 | 4 | 0 |
| நஷ்ட ஜாதக[illegible] | 0 | 8 | 0 |
| நவகண்ட ஆருடம் | 0 | [illegible] | 0 |
| சண்டாளர்சகவாசம் | 0 | 8 | 0 |
| அகடவிகட சம்சாரி | 0 | 4 | 0 |
| ருஷ்யாஜப்பான் யுத்தம் | 0 | 4 | 0 |
| வியாசவி[illegible] | 0 | 4 | 0 |
| நாரதர்கலகம் | 0 | 6 | 0 |
| ஷை 2-ம் பாகம் | 0 | 4 | 0 |
| செய்வகுண வெளிச்சம் | 0 | [illegible] | 0 |
| ராஜமசபரமபதை | 0 | 12 | 0 |
| ஸ்டாம்பு சட்டம் | 0 | [illegible] | 0 |
| போலீஸ்ஆக்டு | 0 | 4 | 0 |



உ

கடவுள் துணை.

---

# திருநெல்வேலிப் பரசமயகோளரிசுவாமிகள் பதிகம்.

---

காப்பு.

எழுசீரடியாசிரிய விருத்தம்.

உலகெலாங் கழைப்பஞ்சகிர்த்தியஞ் செய்தொளி
ர்தனி விச்சுவப் பிரம குலகுரு மணிபா தடியவர் மும
லக்கே ளிரதத் தருள்புரி நெல்லைக், கலபர சமயகோள
ரி சபணிற் றமிழிசை யணிபுனைந் தணிவான், அலகிலா
வருள் செபொருளுருப் பாம்ப லடிமலர் முடிமிசை
டணிவாம் ... ... ... ...*

இரட்டையாசிரிய விருத்தம்.

பூவேவு வண்டிமிர் கடுக்கைகந்தி மதியரவு புனையடா
டவிர்நுதற்கண்-பொலிகருங் கந்தரஞ் சூலங்கப லமெரி
வெங்கதழு மான்றமருகர், தேவேவு கருமா மருப்பா
மை யாடுமா சிங்கமுடி மதகரிக் கந்தல் சிமயமலை வெள்
ளைவிடைபு கங்கை ளமா தமே தினியஞ்சு பொலமறைத்து,
மாதேவுவெயலுரா பொருந்து மறை புகழ்மனுட வடிவு
கொண்டுயிர்கட்கெலா-மன்றுதவி விஸ்வகுல குருவா

கி யின்பருள வந்தகருணைப்பிழம்பே, கோமேவு நின் சரணி லன்பருள்செய் பவளங் குலவுதிரு நெல்லைய ரசே கோளரித் துயர்சிமயநீள்புயப் பரசமய கோளரிப் பரமகுருவே. (க)

மன்பூத்த செங்கதிர் பழுங்கவொளி யுமிழுநவமணி மகுடம வனையு படியும் - மல தகிரு நீற்றொளி பழுத்த நெற்றியும்விஸ்வ மாங்குலப் பயிர்கடமையத், தென் பூத்த கருணை பொழி விழி ளுங் குழைகளொடு சிறிய னேன் மொழிகளுங்கொள் செவிகளும் பரஞான வமு தூற்றிருங்கொழுத திருவ யு மதிவதனமும், பொன் பூத்த கண்மணிதெரியலணி மார்பமும பொலிபபய வரதகரமும-புவிராஜர் கவிராஜர் தவராஜர் பணியுபப பொற் தமுமறவாமலயான், கொன்பூக்க நின்பணிசெ யின்பவாழ வுறவநள்செய் குலவுதிரு நெலலையரசே-கோளரித துயர்சிமய நீள்புயப் பரசமய கோளரிப் பரமகுருவே. (உ)

தெண்டிரைக் கடலுலகி னிறையான்ம கோடிகள் செழிக்கவரு மறைகடழைபத் தெய்வபூசனை நிலவ மழைவளம் பெருகமிகு செல்வமாடுகளவிசகழ, விண் டலத் தமரருக் கவிகல் தமிழ்விகள் விளங்கிட வறங் களோங்க-மேன்மைபெறு சைவவைதிகமாதி சமயமும் விபூதிகண்டிகையுமங்க, மண்டலத்தரசர்செங்கோல் வழா திலகவுர் மமொடு புகழ்வளங்க-மாதவ மிலங்கவளர் சித்திகளெங்கமலி வாழ்வுபொலி தரவுமுவ

கை, கொண்டுசேர்த் தியமைந்து நிகழ்வருள் வள்ளலே
குலவுதரு நெல்லையரசே-கோளரித் துயர்சிமய நீள்புயப்
பரசமய கோளரிப் பரமகுருவே. (௬)

திங்களங் கவிகைமுடி மீமிசை நிழற்றவொளி திக
ழும் வெண் சுவரிவீசச்-செறியாலவட்டமுடனளவாத
விருதுகள் சிறந்தோங்க விசைகள்பாட, மங்கலம் பொ
லிதரு மிபம்பல முழங்கவுயர் மாதவர்கள் சித்தர்போ
ற்ற-மறைவாழ்த் தொடுப்பமெய்யடியர்ஜய ஜயவென்ன
மலர்மாரி விபுதர்பொழியத், தங்கவொளி விரிமணிச்
சிவிகையூர்ந் தலகெலாஞ் சூழ்பவனி வந்தன்புள்ளார்-
துசளறத் தவரவர்கள் பக்குவ மறிந்தருள் செய் சற்கு
ணமெய்ஞ்ஞானமணியே, கொங்கவிழு நினமலர்த்தாள்
பாவென கருள்செய் குலவுதிரு நெல்லையரசே-கோள
ரித்துயர்சிமய நீள்புயப்பரசமய கோளரிப்பரமகுருவே.

பணனுதிரு நீற்றினொடு கண்மணி விளங்கவணி பண்
புளோர் மறையாதிநூல்-பயிலுவோர் வினவுவோர் தெ
ளிவோர் வணங்குவோர் பத்திசெய்வோர் துதிப்போர்,
பன்னுவளி பற்றியொளிர் குண்டலி வயங்குமதி மண்
டலந் தன்னின்மூல-வன்னியைத் தாக்கிவரு மமிர்து
ண்டு மகிழுவோர் மருவுசித்திகள் பெற்றுள்ளார், துன்
னுசரு இலைகாய் கிழங்குகனி புனல்வாயு துய்த்திடு மரு
ந்தவத்தோர்-சூழ்ந்துபணி செய்யத்திருக்கொலு விரு
ந்தருட் சுகமுதவு கருணைவடிவே, கானுலவு விபின
யினே னுய்யுமாறினிதருள் செய்குலவுதிரு நெல்லையரசே

சதாகாலசூழல்வென்றனே. அஞ்சலென்றருளியழிபர தம்பரின்பெற் களிக்கிடுவ செந்தாளே-அடரச்சே தன திருமிரியவரு பானுவே யன்பர்படி யின்பநதியே, பஞ் சகிர்த்தியமோங்க வருள்பெய்முகிலெயருள் பழுத்தோ ங்குந்தவதருவே-பரமதமெனுங்களி றடங்கவெழு சீ யமேபலவினைக் கருமறுந்த, மகாஞ்சுகிளிர்வதாக மமபகர்ந் துலவுமெழில் குலவுதிரு நெல்லைபாசே-கோளரித் துயர்சிமய நீள்புயப்பரசமய கோளரிப் பரம குருவே. (௰)

கதிர்விலகி யுமிழ்பல மணிசுதிரள் கொழிக்குங்கருந் திரைப பரவைபுடைசூழ்-காசினியில் வாழுமெய் யடி யவருளத்தினிற் கருதிய படிக்கேயவர், தகயறிந்தருள் செயுங்கருணைப் பிரவாகமே சகலகலைமொழிமேகமே-தண்ணி...ணைப்பெருங் குன்றமே யுண்மைமிகு சைவ சித்தாந்தமணியே, மசியுநிதியுந்தருங் கற்பதருவேகரிய மறலிவசமாய் வருந்தர்-வண்ணமெனிபோனின து பொன்னடி துதித்தேத்தம் வாழ்வுபெறு மாறருள்செய்வாய், குறுகலித்தமரர்வி கொளநல்கு வேதியர்கள்குலவு திருநெல்லையசே கோளரித் துயர்சிமய நீள்புயப் பர சமய கோளரிப் பரமகுருவே. (௰௧)

பாசமயகோளரி சுவாமிகள் பதிகம்

முற்றிற்று.

ஆக மொத்தம் 187.

ஸ்ரீராமஜெயம்.

பொன்னேரியைச்சார்ந்த

திருவாயர்பாடி

கரிகிருஷ்ணப்பெருமாள்மீதியற்றிய

# இல்லாவண்ணம்.



இவை,

இயற்றமிழாசிரியராகிய,

தி. விசாகப்பெருமாளைய ரவர்களுடைய

மாணாக்கருளொருவராகிய

திருநீர்மலை

கோபாலகிருஷ்ண

கவிராஜசேகரராற் பாடப்பட்டு

சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை]  [பை-ரு.

1910.

ஸ்ரீபராங்குசபரகாலயதிவராய நம:

திருவாயர்பாடிக்

# சுரிகிருஷ்ணசுவாமிவண்ணம்.

---

சாப்பு-கலிப்பா.

சீரமருந்திருவாயர்பாடியில்வாழ்சீதானுக்
கோமிலாமனத்தளியனின்றமிழில்வண்ணமதாம்
தாரணியத்துலாமதியுற்றவமூலத்தவதரித்த
தீரன்மணவாளமுனிதிருவடிகள்காப்பாமால்

வண்ணம்.

இராகம்-புன்னாகவராளி-தாளம்-ஆதி.

தனதனதத்தத் தனந்தானன தனத்தத்தத் தனத்னத்தன தனதனதத்தத் தனந்தானன தனத்தத்தத் தனதனத்தன தனனதானன தனனதானன தனனதானன தனனதானன தனனதனதன தனனதனதன தனனதனதன தனனதனதன தனதானதான தனதானதான தனதானதான தனதானதான தனனதனனதானன தானனா.

உலகமதிக்கப் பரந்தார்கலி முழக்கத்திற் படாலைப் புனைதிசடிலத்திற் படிந்தார்தர வளைத்துக் கட்டிய தனைத்தனி நுனியினுனில வரசுகூர்மகிழ் மருவவார்தர விடுதயாநிதி வரியினடுபுலி யதளைநடுவினிலாவில் வரியுறு பரமனதிசய வடலாரவிறு விறல்பூதநாதன் பழு மாறுலாவுகரனிள்-உயர்கிரிமத்துப்படிந்தாழ்தரு பணி

செகத்தினிலிருக்குஞ் சர்ச்சனர்களைப்பகைத்து
கொண்டகத்தினுள்ழியும்பொல்லாக்கொடியபாவிகள்
பேசாவிடும்புகளைபபேசி ஸ்ரீபராங்குச
தாசர்களைப்பழிக்குஞ் சண்டாளப்பாவிகள் இரு

இ-ம்-கேதாரகௌளம்- ஆதிதாளம்-பல்லவி

இந்தமட்டுமெவிஷயாத்துரையான்
இருந்ததுபோதும் யானிருந்ததுபோதும்

சுந்தரமூர்த்தில்லைத் தாண்டவராயன்சந்நிதியிற்கூத்தாடும் பொன்னமபலமேயென்றுபாடும் அதைத்தேடும் இந்த

பெண்டுபிள்ளைகள் சோற்றுப் பாளயம்பெருகிய சந்தைக்கூட்டம், அதிலுனக்கென்ன கொண்டாட்டம் பொம்மலாட்டம் இந்த

அற்பசுகத்தினிற் காசைபட்டு பிரமானந்தத்தை மரவாதே அம்மை வயிற்றினிற் பிறவாதே இறவாதே இந்த

மல்லிகைமுல்லைகள்தாரேனென்று சிலமாதரைக் கண்டுதொடர்ந்து அவள்பாதங் கதியென்றுகிடந்து அநுபவடைந்து இந்த

அத்தியதிபவர்க்காம விகாரங்கள் அன்னமயமது தோஷம் அதலாசை வைத்தால் வெகுமோசம் பவநாசம் இந்த

தேசங்கடோறு மலைந்துதிரிந்து தேடிப்புதைத்து வைத்தாலும்-நாளை கூடவராதொருக்காலும் நிஜமொ ன்றாலும் இந்த

எட்டினி லெழுதத்தொலையுமோ நாம்எடுத்தசன் மசம்சாரம் கரை காணவோ சுமைபாரம் இதென்ன கோ: இந்த

அண்ணமலெனுங் கோபாலகிருஷ்ணன் தொழும் ஆண்டவன்கோயிலிற் செல்லுநிலைத் தாண்டவராய னைப்புல்லுமாயைவெல்லு இந்த

இ-ம்-பைரவி-சாபுதாளம்-பல்லவி

ஓம்-ஓம்-ஓம்-ஓம்-ஓம்- பிரணவசொரூபனே

ஆதாரவாகியஐயன் திருவடியைஅநுதினமும்வந் துதித்துநினையடிமனமே ஓம்

ஆயிரத்தெட்டண்டமோர் குடைக்குளாண்டசூர னைமறித்தும் வளைத்தும்வேலாலெறிவாவசெய்தவுக் கிரனே ஓம்

நாதாந்த நாதருக்குநாத பிர்மமாகிய நாதாந்தவே தாந்தசித்தாந்தசொரூபனே ஓம்

ஞானசொரூபருக்கு ஞானமொழி யுரைத்த ஞா னனே பரிபூரணனே நாரணன் திருமருகனே ஓம்

வேதத்தின் முடிவிலுந்தேடியுங் காணுதவேலனே முக்கியனே மெய்ஞ்ஞானதேசிகனே ஓம்

இ-ம்-அசாவேரி-அடதாளம்-பல்லவி.

அருள்புரியாயோ-வரதா-அருள்புரியாயோ
அஞ்சலெனவோடிவந் தென்னையாதரியாயோ அ
வாய்திறந்தென்னோடொரு வார்த்தைசொல்லாயோ
வஞ்சகமேசெய்தேனென்று மனமிரங்காயோ அ
அன்னையும்நீதந்தையும்நீ குருதெய்வமும்நீயே
ஆபத்துவேளைதனிலாதரிக்கலாகாதோ அ
பஞ்சவர்க்குதூதுசென்ற பரமதயாளபட்சம்
என்மேலவைத்தடிமையைப் பார்க்கலாகாதா அ
சங்கசக்ரதரமுகுந்தா தண்டுளபமார்பா
சமயமறிந்துதவிசெய்வாய்சாமளரூபா அ
இரணியனுமாரதீரா எழுமங்கைநாதா இந்த
ஏழைக்கிரங்காதிருந்தா லுலகமேசாதா அ
விரைசெறிக்காஞ்சிபுரி வாய்ந்தவரதா திரு
வேங்கடதாசன் துதி செய்யுஞ்செகதீசா அ

இ-ம் நாதநாமக்கிரியை-ஆதிதாளம்-பல்லவி.

இன்னமுமவர்மஞ் செய்யலாகுமோ
உமதடிமைக் குழந்தையின்மேல் இ
மன்னர்புகழுந்திருவரங்கந் தன்னில்வாழும்
வாசனேயரங்கேசனே இ

வேதமுனிவர்தன் றேவி தனைக்கண்டு வாசவனெ
னுங்கோனுங் காதலிடனரன் மேவமனான் கொல்...

முடன் சாபமோத கலிசைரின்ற சிலபதனையன்றபெ
ல்லுகச்செய்தே இ

பாசபந்த மெனுமாசைதனை யோட்டித்திருவருள
மூட்டி விரதனுகவே செய்யவதனைப்பாராட்டி - நிச
ன்புகழுஞ்சகதீசனை மங்கைநேசனை பவநாசனை இ

மாதவ முனிவர்தேவர் துதிபாலா திருவேங்கட
தாசன் ஒதுந்தமிழ்க்கருள் செய்திடுக் குணசீலா வேத
முதல்யாவுந்துதிசெய்யும பிரதாபமோதும் பாற்கடல்
மேவியநாதா இ

இ-ம்-- துசாவந்தி-ரூபகதாளம-பல்லவி

கண்டேன் கண்டேன் பால்வெண்ணெ
யுண்டோனைக் காலனை வென்ற கண்

அநுபல்லவி.

அண்டத்தீற்றேவர்கள் தொண்டர்களாகிய
நின்றுபஜனைசெய்யும் புண்டரீகநாதனை கண்

சரணங்கள்.

புவியில்பத்தறகள் சாபத்தைத்தீர்க்காதமாமனை
[illegible]செய்தராபோதானைக் கண்
[illegible]லுலத்தோர்களுக் குதவாபாவிகள்
[illegible]களைத்தொலைத்த வென்பத்மநாபனைக் கண்
[illegible]மபக்தவாசன் ரங்கதாசருக்கு
நேசநுக்மணிமனோலயனை நேராகக் கண்

ஆ கீர்த்தனைகள் மிக முற்றிற்று.

ஆக மொத்தம் 197.

உ

சிவமயம்.

# வேமனானந்தசுவாமி பதிகம்.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்
சென்னை - சூளை
தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை. ...

1910.

87

உ

கடவுள் துணை.

# வேமனானந்தகுருபேரில் பதிகம்.

---

ஓங்காரகுத்திர சதானந்தவாரியில் ஓரெழுத்தானப ரனே, ஓரியாய்நீயெனக் கஞ்செழுத் தொருசெவியி லோதிவைத்தவனல்லவோ. ஆங்காரமற்றுசுகமற்று து க்கமுமற்று ஐம்புலன்பாசமற்று, ஆகாசம் கிடுகிடென் றிடியிடித் தமுர்தமழை யாருதரத்தில்பொழிய இரீங் காரநாதமணி விந்துவுக்குள்ளாகி யிரவுச்சிபுருவ நடுவி ன்; இரதிமன்மதன்போல விளையாடுவதைக்கண்டிராசபி ட்டுனதுமுன்னே, வீங்காமனின்றனன்று திருவடியின்மகி மையினை விகசிப்ப தெக்காலமோ, வேதாந்த பரமசிவ மெஞ்ஞான மூர்த்தியே வேமனானந்தகுருவே. (௧)

அறியாத பாலகனை யழைத்து புத்திகள் சொல் [illegible] ன்புவைத்தாள்வதற்கு, ஐயையோ நானுனக்கொர்காக் [illegible] வியோ அப்பனே யத்விதனே, மரியாதையாக [illegible] தளித்த கருணைமிகு மெய்ஞ்ஞானசம் மார்க்கேசவா, மனமகி [illegible]

ந்தின்றைக்கிவாராமல்போனியோ மடியில்கைபோட்டி ழுப்பேன், பரியாசமென்றவுன் சிந்தை தனிலிவ்வார்த் தை பாராட்டவேண்டுவதிலே, பக்தியாயுன்றனை மறவா மலனுதினம் பாங்குடநிராமயத்தின், வெரியாகிலும்தந் தகண்டபரிபூரண விவேகமறிவிக்கொணாதோ, வேதாந் த பரமசிவ மெஞ்ஞான மூர்த்தியே வேமனனந்த குரு வே. (உ)

பஞ்சபூதங்களொடு யானுமொருபூதமாய் பட்டகு றைமெத்தவுண்டு, பசுஷமுடன் கேழ்ப்பியாமாகில்சொ ல்லக்கேளு பரமனேபரமயோகி, சஞ்சலப்படுகுழியில் த ர்கமென்றெண்ணாமல் சந்தோஷமாய்விழுந்து, சத்திய நிலையின்னதென் றறியாமல்மூடனாய் சகிக்காமலன்று கெட்டு, கொஞ்சமாகிலுமுனக்கஞ் சவிதைசெய்யாமல குரங்காய்முழிக்கலாச்சே, கோணாமல்வந்தேனக் குயர் வானவழிகாட்டி கோரிக்கையின்படிக்கி, வெஞ்சினமற ந்தமகராஜகெம்பீரன்போல் வித்தைதனிலுட்காரவை வேதாந்தபரமசிவ மெஞ்ஞான மூர்த்தியே வேமனனந் தகுருவே. (௩)

எத்தனைபயந்துடமை சரணமென்றழுதாலும்என்மே லிலைக்குருகருணை, எள்ளளவிலாதது விதிவசமிதென்ன அமோவெப்போதுமொருதிட்டமாய், யித்தனைகடூரகுண

மேன்சித்விலாசனே யிந்தஜகமாய்கைதன்னுள், இரவுப
கலச்சமற முச்சந்நில்பத்துவித யிங்கிதக்குயில்கள்பா
ட, முத்தியென்கிறசரியை மோக்ஷவைராக்யமாய் மு
த்தமுட்டணைவதற்கு, முட்டாளையாட்கொண்டு மெய்
ஞ்ஞானமறிவித்து மூக்குனுனிமீதில்சதமாய், வித்திலா
மணிவிளக்கவியாம லெரியவே வரமருளவேண்டுமென்
று, வேதாந்தபரமசிவ மெஞ்ஞானமூர்த்தியே வேமனா
னந்தகுருவே.

தத்துவக் குப்பையை சொளுத்தி தூளிதமாக்கிதண்
ணியில்கலக்கிவிட்டு, தனயனுன்னுளாவதற்குயெண்ணை
க்கொண்டு தாமசகுணத்தைவெட்டி, சத்துசித்தொள்
ளுக்கி யட்டாங்கயோகநெறி சாதிக்கவே நாடோறும்,
சரணமென்றுனைபணியு மடியார்க்குமடிமையாய் சத்
யமாய்கை முழுங்கி, பத்துமாதங்கமாய் தங்கநடு செம்
பாகி பரமசிவ்நாதசுடராய், பவழமாய் படிகமாய் நீல
மாய்கண்கொண்டு பார்த்ததெல்லாம் பிர்ம்மமாய், வித்
துவாய்வித்துநடு முளையாகிநிற்கவே வரமருள் செய்ய
வேண்டும், வேதாந்தபரமசிவ மெஞ்ஞான மூர்த்தியே
வேமனானந்தகுருவே. (௭)

எட்டாதவாசிகொடி மானுச்சிதனிலேறி எச்சரிக்கை
பாதனின்று, எண்சாண் துரித்திதனி லெரிகின்றதுதி

ணைய எங்குமேலாடுபொருளாய், முட்டாதகாராம்பசுப்
பால்தனைவேண்டி முக்கண்ணுருட்டிநலமாய், முலையு
ண்பதற்குமோன் றஞ்சாமலாசையாய் மும்மலங்களை
யொழித்து, கட்டாதகட்டுபடு மந்திரம் ஜெபிப்பர்தனை
காரணகயிற்றில்கட்டி, காடிலாமலைமீதில் வேறிலாமவு
ணபயிர் காம்பிலா தருவாளினால், வெட்டாத வெட்ட
ருத் தொருகொடிவிலைசோறுக்கி வெறிகொண்டு உண்ப
தென்றோ, வேதாந்தபரமசிவ மெஞ்ஞான மூர்த்தியே
வேமனானந்தகுருவே. (௬)

ஆதியாயந்தமா யந்தநடுவாதியாய் ஆறுமுகருத்ரா
க்ஷமாய், ஆட்டமாய்பாட்டமாய் வோட்டமாய் நாட்ட
மா யானந்தகுஞ்சிரிப்பாய், சோதியாய் மின்னலாய்
மின்னல்நடு மாசியாய் சொக்கலிங்கக் கடவுளாய் சோ
மாய் மோகமாய் தாகமாபென்மனதை சோதிக்கவந்
கணமாய், நீதியாய்நேமமாய் நேமனடுமுத்தியாய் நீ
ட்டவெளிமிளியாய், நீட்டமாய்வாட்டமாய் தோ
பென்னாளும் நீங்காதனந்தவடிவாய், வேதியாய்
யாய் கோபமாயனுவாகி விண்ணேறவிட்டகளி
, வேதாந்தபரமசிவ மெஞ்ஞானமூர்த்தியே வேமனா
ருவே. (௭)

தன்னைதானறியாமல் நாய்போலுமுளறினல் தாரகம் வெளியாகுமோ, வானென்றவாணவம் பேயனைக்கொல்லாமே தப்பிதங்கட்போகுமோ, பொன்னையும் மண்ணையும் பெண்ணையுமறக்காமே பொய்மெய்புமொன்ருகுமோ. போதமாய்நாதமங் கிதபணிகேளாமெ பொம்பரம் மேலாடுமோ, யென்னையானறியாமே தலைவனைக்காணுமே யெட்டுதிக்கொன்ருகுமோ யெச்சலென்றமூர்த்தை யண்ணாக்கி லுண்ணுமே லெந்தனுட்பசியாறுமோ, வுனைசதாகாலமாய் கிழ்மேல் துதிக்காமே, வுன்னுடைய மனமுருகுமோ, வேதாந்தபாமசிவ மெஞ்ஞானமூர்த்தியே வேமனானந்த நருவே. (அ)

மண்ணுநடுவெப்பாகி யப்புதனில் விஷ்ணுவாய் மாய்கைநடு சங்கானுமாய், மனதுநடு பிர்ம்மமாய்பிர்மநடுகெஞானமாய் மாணிக்கக்கொடிவிளக்காய், கண்ணுநடு ரூபமாய் காதுநடுசத்தமாய் கண்டநடுமந்திரமுமாய், கானல்நடுனுந்தல ய் னுந்தல்நடுகானலாய் காணுதவெவ்சாரையாய், பெண்ணுநடு வாணுமாய் வாணுநடு பெண்ணுமாய் பெரியநாமக்காரனுய், பேயனுய் பித்தனுய் வெறியனுய் ஊமையாய் பேரின்பமவுனனெறியாய, திருண்ணுநடுவிந்துவாய் விந்துநடுநாதமாய் விளையாடுகின்

றபரனே, வேதாந்தபரமசிவ மெஞ்ஞான மூர்த்தியே வேமனனந்தகுருவே. (கூ)

சித்தியூரைச்சார்ந்த போடிமலை குகையினுட்சித்த ன்புமீதிலநாட்டி, சிறிதநாவில்பதுன் பங்களுடனடி பட்டு சிறியனும் நாமதியானம், பக்தியாயுருவேத்துமஜ க்காண்பதற்காக பதிநான்குலோகமெட்டிற், பஞ்சபூத ங்களை மொடிக்குன்னைகண்குளிர பார்க்கலுற்றருமை யானே, புத்தியுள்ளப்பிள்ளை என்றெனக் குபதேசம் புண்டரீகாக்ஷனரிய, பிரியமாய்நரசிங்க தாசனேகே ளென்று பட்சமென்மீதில்வைத்து, வெறறிலையும் பாக் குசுண்ணும்பு மூன்றென்றாக விபரமருளிட்ட துரை யே, வேதாந்தபரமசிவ மெஞ்ஞான மூர்த்தியே வேம னனந்தகுருவே. (ய)

வேமனனந்தசுவாமிபதிகம்.

முற்றிற்று.



உ

கடவுள் துணை.



# பாய்ச்சலூர்ப்பதிகம்.






சிருமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [பை-௩.

1910.

# விள்ம்பரம்.

இதனல் சகலமானபேர்களுக்குந் தெரிவி ப்பது யாதெனில், சென்னைசூளை சட்டணநா ய்க்கர் தெருவில் ஷ்தாபித்திருக்கும்"சிவகாமி விலாச" அச்சியந்திரசாலையில் நானுவிதமான தமிழ், தெலுங்கு, துலுக்கு, இங்கிலீஷ், வை த்திய ஜோஷ்ய புத்தகங்கள் உண்டு. தேவை யானவர்கள் அடியிற்கண்ட விலாசத்துக்கெ ழுதிபெற்றுக்கொள்ளலாம்.

ஸ்ரீ சி. முனுசாமி முதலியார்

அண்டு கம்பெனி.

சூளை போஷ்ட்

மதராஷ்.

உ

கடவுள் துணை.

# பாயச்சலூர்ப்பதிகம்.

## காப்பு.

### அறுசீரடி யாசிரியவிருத்தம்.

மூலத்தின்மேலேநின்று
மூன்றுமண்டலமுந்தாண்டி
சீலத்தின்வெளியாய்வந்து
சிலம்பொலிபரமானந்தக்
கோலத்தின்மேலேநின்று
குகனருமுனைகப்பாட
வாலிபரூபமான
வைங்கரன்காப்பதாமே.

## நூல்.

ஓதியநூலும்பொய்யே
யுடலுயிர்தானும்பொய்யே
சாதியுமொன்றேயாகுஞ்
சகலமும்வேறதாமோ
வேதியன்படைத்ததல்லால்
விதிதன்னைவெல்லலாமோ
பாதியேபாமேசூழும்
பாய்ச்சலூர்கிராமத்தாரே. (௧)

உறக்கமோவூனமுள்ளம்
உள்ளமோபுறம்போசிவன்
இறப்பதுமுன்னேபின்னே
ஈன்றதுபெண்ணேவாணே
கறப்பதுமுலையோபாலோ
காண்பதுமனமோகண்ணே
பறப்பதுஇறகோகாலோ
பாய்ச்சலூர்க்கிரர்மத்தாரே. (௨)

வெற்றிலைதாழைவாழை
விந்தொன்றுமுளைப்புதொன்றே

பற்றியயோனிபேதம்
பாருளோரறிந்திடாமல்
பெற்றவர்தம்மைத்தேடிப்
பிறந்தரிந்திறந்துபோனார்.
பற்றிநின்றலைவதேனோ
பாய்ச்சலூர்க்கிராமத்தாரே. (௩)

தீப்படைக்கடைந்தகோலுஞ்
சிவனுஞ்சிவன்வேறோ
வார்ப்படத்தந்தைதாயார்
மக்களுஞ்சுற்றத்தாரு
போர்படைக்கடைந்தவெண்ணெய்
மோருடன்கூடாவண்ணம்
பாற்படத்திரளவேண்டும்
பாய்ச்சலூர்க்கிராமத்தாரே. (௪)

கொக்குமேற்குடுமிகண்டேன்
கோழிமேற்குடுமிகண்டேன்
நெக்குறிவாளுங்கண்டேன்
நீரின்மேல்நெருப்புங்கண்டேன்

சற்குலமென்றுசொல்லிச்
சதுர்மறைபேசவேண்டாம்
பக்குவமறிந்துபாரும்
பாய்ச்சலூர்க்கிராமத்தாரே. (௫)

வித்தொருமரத்தையினும்
மரமொருவித்தையினும்
பெற்றதாய்பிள்ளையினும்
பிள்ளையுமதலையினும்
உற்றபாற்றயிரையினும்
உதிரஞ்சுக்கிலத்தையினும்
பற்றிநின்றலைவதேனே
பாய்ச்சலூர்க்கிராமத்தாரே. (௬)

மதங்கொண்டதேகந்தன்னை
மற்றொருசுத்தங்காணார்
அகங்கண்டுபுறமுங்கண்டு
மவனுக்கேதாரமானேன்
சுகங்கண்டுதுக்கங்கண்டு
சுக்கிலவழியேசென்று

யகங்கொண்டதேனேவென்னிற்
பாய்ச்சலூர்க்கிராமத்தாரே. (எ)

ஊருடன்பார்ப்பார்கூடி
யுயர்ந்ததோர்சாலைகட்டி
நீரிலேழைமூழ்கிவந்து
நெருப்பிலேநெய்யைத்தூவிக்
கார்வயற்றவளைபோலக்
கலங்கியவுங்கள்வேதம்
பாறைவிட்டகன்றதேனோ
பாய்ச்சலூர்க்கிராமத்தாரே. (அ)

சந்தனமகிலுவேம்புந்
தனித்தனிவாசம்வீசும்
அந்தணர்த்தீயில்வீழ்ந்தா
லதன்மணம்வேறதாமோ
செந்தலைப்புலையன்வீழ்ந்தாற்
றீமணம்வேறதாமோ
பந்தமுந்தீயும்வேறோ
பாய்ச்சலூர்க்கிராமத்தாரே. (௯)

ஒருபனையிரண்டுபாளை
யொன்றுநுங்கொன்றுகள்ளு
அறிவினிலறிந்தவற்கு
அதுவுங்கள்ளிதுவுங்களோ
ஒருகுலையுயர்ந்ததேனோ
ஒருகுலைதாழ்ந்ததேனோ
பறையனைப்பழிப்பதேனோ
பாய்ச்சலூர்க்கிராமத்தாரே. (௰)

பாய்ச்சலூர்ப்பதிகம்

முற்றிற்று.

---



ஆக மொத்தம் 199.

உ

சிவமயம்.

மலையனூர்

# பாவாடைராயன்

## விருத்தம்.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] [illegible]

1910.

உ

கடவுள்துணை.

———

மலையனூர்

# பாவாடைராயன் விருத்தம்.

———

[illegible]தளச்செங்கமல வதனச்சிங்காரமும் செப்பவ
ளகவிழுநறுவும், திவ்யமணிமார்பினில் பதக்கமும்சந்த
னம் பொட்டிட்ட நெற்றியழகும், காதிலணிகுண்டல
மும் வஜ்ஜிரக்கடுக்கனும் கையில்கணையாழியழகும், க
[illegible]மான செகதாடு மீசைகன்னிப்பரிசைகண்பார்வை த
[illegible]ழகும், நாதவழ்தனில்வர்ண ரகடம்புஜல்லடைமு
[illegible]சாரிணழகும், தலையில்குண்டல டாகைசமு
[illegible]யும் கதாயுதகையினழகும், ஆதிசதுர்வேதம
[illegible]ஊார்தன்னிலே அமர்ந்திடுமெகாதேவனே, அ
[illegible]வந்து ரக்ஷித்தருளுவாய் என் அழகுபா
[illegible] (க)

செஞ்சரணபாதனே கலைஞான போதனே தெளி வானசதுர்வேதனே, செய்யனே செங்கமல கையனே துய்யனே ஐயனே ஜெகநாதனே, கஞ்சுலிக பாலியாள் அங்காள ரூபிக்கு காதலன் பானுகுமரா, கண்டதுண் டப்பட சண்டப்ர சண்டனே கனகோப வல்வீரனே, நெஞ்சினில் நினைநதுனைப் பணிந்தவர்க ளம்பனே நீடு லகில்முதல் சமையனே, ரணவீரசூரனே ஓங்காரீங் கார ஆங்கார ஊங்காரனே, மஞ்சடரெரிக்கின்ற அரி கோஷ்ட பொன்னகரி லமர்ந்திடு மகாதேவனே, அன் பாகயெனைவந்து ரக்ஷித்து ஆளுவாய் என்அழகுபா வாடைதுரையே. (௨)

பெண்களைக் கன்னமிடும் சோரனே உலகெலாம் போகனே வெகுதீரனே, பூதலம் தன்னிலே அன்பர்த ன்பங்கிலே பொய்யிலா மெய்பான துரையே, மண் ணு லகில்கண் கண்ட தெய்வம் நீயல்லாமல் மற்றுமொரு தெய்வ முண்டோ, மதுமாமிசங்களும் அபினி கஞ்சா யிலை மாஜிம் ரொட்டியுடன், பன்றி யாடுகள் கோழி பூப்பூசைவாங்கிமிக பக்ஷிக்கும் அதிகாரனே, [illegible] அன்னூச்சி சாராயம் பூவிமகள் பாங்கான [illegible] னே, அண்ணல் வாழ்பதியான மலையனூர் தன்னிலே

அமர்ந்திடுமகாதேவனே, அன்பாக யெனைவந்து ரக்ஷித்
து ஆளுவாய் என் அழகுபாவாடைதுரையே. (௩)

பிண்டிபாலாயுதம் வாள்தண்டுசக்கரம் பெரியதிரு
சூலாயுதம், பீரங்கிரவை வெடிகுண்டு பிஸ்தோலுட
ன் பெரும்பூசபடைகளுடனே, தெண்டாயுதம் சூரிவி
ல்லம்புமுள்ளம்பு ஜெயவிருது படபாணமும். சிங்கார
மாகவே வாங்குசவாளாக்கழி சுளிகிச்சில்லாக்கோலுட
ன், கண்டகோடாலிவாள் கட்டாரிபட்டாவும் கன்னிக
யர்வலைசளுடனே, கனபெரிதிசேனையும் வனவேட்டை
யாடியே களித்துமிகபரியவருவாய், அண்டர்கள்பணிந்
துபுகழ் அழகானமலையனார் அமர்ந்திடுமகாதேவனே,
அன்பாகயெனைவந்து ரக்ஷித்து ஆளுவாய் என் அழகு
பாவாடைதுரையே. ௪)

பேரானநெடியமக மேருகிரியுனதுபுஜ பலமதாக்
கிளையாகுமோ, பெரிதான அஷ்டமலை யுனதுடைய
கண்விரல் அணையாழி சமனாகுமோ, கூரானகொடூர
வடவாக்கினி யுன்னுடைய கோபாக்கினிக் கெதிராகு
மோ, மோடையினில்நின்றுண்ட மேககர்ஜ்ஜனையுனது
நாத்தொனிக் கெதிராகுமோ, மாராத விசைகொண்டு
பாய்ந்தால் கனம்வானு வுலகமது போதுமோ, மணி

க்குசுக்குமாந்தடி பிடித்துவிளையாடிவர மண்டலமிட போதுமோ, ஆறுகொண்டலமமே நறைதிகழ் மலைய னூர்தன்னிலே அமர்ந்திடு மகாதேவனே, அன்பாகயெ னைவந்து ரக்ஷித்து ஆளுவாய் என் அழகு பாவாடைது ரையே. (௫)

கடல்கொண்டசாராயம் உண்டாலு முன்னுடை யசனகோபம்கனியாகுமோ, காவேரி கொள்ளிடம்பெ ருகிவந்ததையுண்ண கனியிதழ்நுனி நனையுமோ, வட மேருமைநாகம் மலைப்பூசைகொள்ளினும் கடவாய்க்குக் கடுகாகுமோ, பதிக்கின்றசெஞ்சாவும் புகையிலையுமது வுண்ண மயக்கமும்மதுகாணுமோ, நெடிதானவிண்ண ளவு உதிரபலி கொண்டாலும் உன்னெடி யவயரதுநி றையுமோ, நித்தம்வொருகோடிபெண் போகமதுசெய் தாலும்உன் நெரிகாமவெறிநீங்குமோ, அடியவர்துதிக் கமிக மலையனூர்தன்னிலே அமர்ந்திடுமகாதேவனே, அ ன்பாகயெனைவந்து ரக்ஷித்து ஆளுவாய் என்அழகுபா வாடைதுரையே. (௬)

சங்கீதமல்லாரி மத்தளம்துத்தியுடன் கைதாளமு ரசுபம்பை, சம்பிரம தாசவே பேரிடங்கா பூரிகாளை

கர்ணசின்னமும் வெங்கலடவோசை டமாரபேரிகை
யும் விருதினிற்கிசை மேளமும், மேலானகொம்பு யெக்
காளமுடன்சாவீணை யாழ்வீணைருத்ரவீணை, இங்கித
மிகுந்ததொனி கோடையிடிபோலதிர நீயெழில்தவள
பரியேறியே, இருபுரமும்அன்னுக்ஷிசாராயபூவிமகள்
யெங்குங்விளையாடி வருவாய், அங்கர்தொழமதனன்பர்
புகழ் மலையனூர்தன்னிலே அமர்ந்திடு மகாதேவனே,
அன்பாகயென்னைவந்து ரக்ஷித்து ஆளுவாய் என்அழகு
பாவாடைதுரையே. (எ)

வீரவிஜயன்பரியின் மீதேரிசெங்கையினில் வில்
லம்புவாள்பிடித்து, மீறிவனமேறிகணை தூரியப்புடன்
கொண்டு மிருகபுலியாள் கள்வீழ, கார்நிறமும் முயல்
பன்றி முள்பன்றிப்புள்ளிமான் கலைமான்கல்லரிகள்வீ
ழ, கரியானைமதகுடல் பிளந்துதிரமதுசரிய கரடிநரிசி
ங்கம்விழ, சிருலவுசக்கரப்புள் சுருண்டுவிழசெங்கருந்
[illegible]ளமும்ப, சிங்காரமாகவேவாங்குசவாளாக்கசுளிகை
[illegible]சிலாக்கோலுடனே, ஆரகொண்டலமமென்னநதிகழ்
[illegible]னூர்தன்னிலே யமர்ந்திடுமகாதேவனே, அன்பா
[illegible]ன்னைவந்து ரக்ஷித்து ஆளுவாய்என்அழகுபாவாடை
[illegible]யே. (அ)

பூதப்பிசாசுரண சாமுண்டிமாதங்கி பிடாரிமகமா
யிவிரி, பொல்லாதஜாகினி யிடாகினிசாகினிகூளியிரு
ளன்மோகினி, மீதானஉதிராட்டேரி கருப்பனும்உயர்
மதுரவீரய்யனும், முத்துமுனிலாடமுனி கொறளிகு
ட்டிச்சாத்தி கூளிசங்கிலிகருப்பன், பேய்பில்லிசூனியம்
மந்திரந்தந்திரம் பொல்லாத வடுசல்லியும், அகிலத்து
விவ்விதம் தந்தனக்கிரிகைதனி ல[illegible]ங்காதஞானபரனே,
ஆதிசதுர்வேதமமிழ் மலையனூர்தன்னிலே அமர்ந்திடும
காதேவனே, அன்பாகயென்னைவந்து ரக்ஷித்து ஆளுவாய்
என் அழகு பாவாடைதுரையே. (௯)

சோகைகன்மம் பெருவியாதி பக்கப்பிளவை அ
டைவாழைபடுகிரந்தி, சகஜன்னி முகஜன்னி சூககம்ம
ரோதாம் சூலை [illegible]ரையாப்புகுன்மம், வாய்வுநோய்நீரிழி
வு காமாலைவெங் கட்டம் கருங் குட்டம் ஊமைமுதலாய்
முறையாகவருஞ்சுரமும் மா[illegible]டைப்பாபித்தம்முறை[illegible]
பாடுஅண்டவாக[illegible], ஏவல்[illegible]ப் பு[illegible]ப்புசெய்ப
னும்வண்டுகடி [illegible] ம்பல்மிக [illegible] திரியும், [illegible]
வெருகோடவிஷவநகினும் [illegible]
விட்டோட்டு [illegible] ஆ[illegible]
[illegible] அமர்ந்திடு[illegible]

ந்து ரக்ஷித்து ஆளுவாய் என் அழகு பாவாடைது
ரையே. (௰)

பன்னீருபுனுகு கஸ்தூரிஜவ்வாது பரிமளம்மிகவீ
சவே, பரிதேசியப்பனுடன் ஆலயந்தன்னிலேஅமர்ந்து
மிககாவுகொண்டாய், உன்னைநான்தேடியே உருகிமன
வாடியே ஓலமிட்டலரிநின்றால், ஓங்காரரீங்காரஆங்கார
ஊங்கார சிவயநமபரமகுருவே, உன்னையே தெய்வம்
யென யென்னாளும்நம்பியே உகந்துபாலகன் மீதினில்,
உதிக்கின்றபிடர்தனைநீக்கியே உன்பதம் உகந்து சனம்
தருமையனை, அன்னதொழி லும்திகழும் மலையனூர்
தன்னிலே அமர்ந்திடுமகாதேவனே, அன்பாகவெனைவ
ந்து ரக்ஷித்து ஆளுவாய் என் அழகு பாவாடை து
ரையே. (௰௧)

மலையனூர்

பாவாடைராயன் விருத்தம்

முற்றிற்று.

———

உ

மீனாட்சிதுணை.

# மீனாட்சியம்மன்பந்தடி.



சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1910

உ.

சிவமயம்.

# மீனாட்சியம்மன்பந்தடி.

பாயிரம்.

சத்தியாய்சிவ மாகித்தனிப்பரா
முத்தியான முதலைத்துதிசெயச்
சுத்தியாகிய சொற்பொருணல்குவ
சித்தியானைதன் செய்யபொற்பாதமே.

கருப்புமுர கடிமலர்ப்பூங் குழல்போற்றியுத்தமியத்
தொடித்தோள்போற்றி
கரும்புருவச்சிலைபோற்றி கவுணியர்க்குப்பால்சுரந்த
கலசம்போற்றி
இரும்பு மனங்குழைத்தென்னை
யெடுத்தாண்ட வங்கயற்கணெம்பிராட்டி

யரும்புமிளநகைபோற்றி
யாரணநூபுரம்சிலம்பு மடிகள்போற்றி
அண்டங்களெல்லா மணுவாகவணுக்களெல்லா
மண்டங்களாகப்பெரிதாய்ச் சிறுதாயினளு
மண்டங்களுள்ளும்புறம் புங்கரியாயினளு
மண்டங்களின்றுடுணையென்ப ரறிந்தநல்லோர்.
செழியர்பிரான் றிருமகளாய்க் கலைபயின்று திருமுடிபுனைந்து
செங்கோலோச்சி
முழுதுலகுஞ்செயங்கொண்டு திறைகொண்டெந்திசை
முனைப்போர்சாய்த்துத்
தொழுகணவற்கணிமணமா லைசூட்டித்தன் மகுடஞ்
சூட்டிச்செல்வந்
தழைவுறத்தன்னரசளித்த பெண்ணரசிபடிக்கமலங்
கலைமேல்வைப்பாம்.

பந்தடி.

ஆதியானகடவுளுஞ்சோதி மூலப்பொருளுமாய்
அப்புலிதனைதரித்தவேணி வெம்புலிதனையுரித்தவள்
நீடுயர்விடையிலேறி வீதிமதுரைபுரிதனில்
நீண்டவேழுமறுபத்து நாலுபுவனங்கண்டவள்

[illegible]டெட்டுதிருவிளையாடல் மேதினிதனில்புரிந்தவள்
வளமைபரண்டிநாடுபடைத்த அழகியசொக்கர்மனைவியாள்
கோதிலாதசங்கரும்பைநிகர்த்த கூறுபசுமொழியினாள் (ப்பாளே
கொங்கைகுலுங்கவேமீனாட்சிசுந்தரி செங்கையாலொருபந்தடி.

௨

மேகநாதணக்கூந்தலசைய வாசுசுட்டியசையவே
விச்சித்திரமணிபுனைந்த ரத்நசடைபில்லைலிக்கவே
நாகமணிமூக்குத்தி சோதிமயமாய்மின்னவே
நவரத்ன குழைகாதில் செகமெச்சயிலங்கவே
ஆகமருவும்பவளவடங்க ளனேகவடங்களசையவே
ஆயிரத்தெட்டுமோத்து மிருந்தசாயலானமாசுதந்
தோகைமயில்பொலன்னநடையும் வாகுமதுரைச்சியாள்
சுந்தரிமீனாட்சியம்மன் முந்திரண்டுபந்தடிப்பாளே.
வேலைப்பழித்தவிழியினழகும் நீலத்திலதசோதியும்
வில்லைப்பழிந்தபுருவங்கண்டு தில்லைவாணனுந்திகைக்கவே
மாலமலரின்மாலையணிந்த சிலமுள்ளபசுங்கிளி
மதுரைக்கோவைகனியைப்பரிக்க கதறிக்ககதறிவருகுதே
சேலைமுகப்பிலிரத்நமணிகள் நாலுதிசையுஞ்சிதறுதே
திங்கள்வதனவேர்வைசிந்த கொங்கைமூன்றுடைதடாதகை

வாலச்சந்திரரூபபான கோலமகனைக்காய்ந்தவள்
மதுரைமீனுட்சிசுந்தரி சிதமூன்றுபந்தடிப்பாளே. ௩

மின்னூலிடையுந்துவளுதே கண்ணேபெண்ணேவயறுகுழையி தே
மேகலாபரணதிசோரவும் வாதுவளைகள்தளறுதே
நன்னூல்மிகுந்தமதுராபுரியில் மின்னுட்களைகூடியே
நாடிப்பாடிபந்தடிக்கவுந் தேடித்தெருவில்வருவதே
மின்னேமுக்கனிபாலும்சோறு முண்ணவருவாயிப்போ
முத்தேபாண்டியரசன்வந்து மெத்தவென்னைக்கோவிப்பாரே
யின்னேரம்பசித்திருக்கலாமோ அன்னேகண்ணேஎன்செய்வேன்
யெங்கள்தங்கைமீனுட்சியம்மை மங்கைநாலுபந்தடிப்பாளே. ௪

பொறுபொறுதாயேகோவியாதே சிறுபிள்ளையுந்தன்பிள்ளைநான்
புதுமையாகப்பந்துமடித்து பதுமையாகவருகிறேன்
பிரியமாகவந்துகூடலில் சிறியமங்கைநங்கைமார்
பேடைமயிலதுபோல்விளையாடி வோடிவருகிறூர்பாரிதோ
மருதுதோறுஞ்சந்திரன்வந்து தருகிரணங்கள்வீசுதே
மாவிருக்குயில்கள் கூடிகூவுதுநல்லகீதமாய்

[illegible]ப்பாடப்பெயுந்திரும் கொடியில்வருவன்போமென்றுள்
[illegible]மொழிமீனாட்சிசுந்தரி வஞ்சுஐந்தியந்தடிப்பாளே. ௫

மந்தரகிரியைநிகரவோங்கி அந்திரயிந்திரவிமானமும்
வற்றுக்கிணறும்வன்னிமரமும் பொற்றாமரைத்தடாகமும்
அந்தரங்கமுங்கடம்பவனமுஞ் சுந்தரசன்னிதிநெழுகடல்
ஆணிமுத்துகள்ளந்தகோபுரந் தோணிநாலுவாசலும்
வந்தரம்பைகள்கொண்டாடிக்குஞ் சுந்தரப்புதுமண்டபம்
வருங்கல்லானைகரும்புதின்றதும் வலிமையுள்ளராபதம்
முந்திசாபந்தீர்த்தமதுரை கந்தசுவாமியையீன்றதாய்
முதுநகைமீனாட்சியம்மன் கதியாயறுபந்தடிப்பாளே. ௬

எங்குமதிக்குமேன்மையான சங்கைபலகைமீதினி
லிருக்குநாற்பத்தெட்டுபேருடன் யானுநாற்பத்தொன்பதாம்
மெங்குநிறைந்தகற்பூரசொக்கர் சங்கத்தாரிலொருவராம்
மினச்சமணர்படித்தமிந்திரம் ஞானபூதிவைகையாறினில்
பொங்கிவருந்திதன்னிற்போட போய்மறந்ததுகடல்தீரம்
புண்ணியசம்பந்தர்வாசக மெதிர்த்துபோன திருவேடகம்

மங்கையர்காசிகருளை புரிந்தவளர் சப்பந்தற்குபாலின்ற
மதுரைநகர்மீனம்பிகைத்தா யேழுபந்துவடிப்பாளே. ௭

மேன்மைபெருகும்பாண்டியென்பது நாலுகோடி திரவிய
விலக்கிமாணிக்கவாசகரிடத்தில் விளங்கிகுதிரைவாங்கவே
தானேமீறும்நரியைப்பரியா கோலஞ்சமைத்தகாரணஞ்
சட்டமாகவாணிச்சிகையிற் பிட்டுவாங்கிதின்றவர்
ஆலகாலவமுதுகொண்ட நீலகண்டசுந்தரர்
அங்கைமீதுமான்மழுவுடன் தங்கபவனிவந்தவர்
ஞாலமோகபாலமேந்தி வலமதனைக்காய்ந்தவன்
சொக்கர்பங்கிலுறைமீனாட்சி யெக்கியெட்டுபந்தடிப்பாளே. ௮

கலைமடந்தையோர்பந்தடித்தனள் குலமடைந்தயர்தடுத்தனள்
நிலமடந்தையோர்பநதடித்தனன் மலைமடந்தையும்தடுத்தனள்
நலமிகும்பந்தையெடுத்து லட்சுமிபலம்பொருந்தியடிக்கதவரிற்று
மங்கைமீன்வல்லிகண்டு அங்கங்கலுங்ககைத்தனள்
புஷ்பமடந்தைநாணக்கொண்டு பலைமகளைபணித்தனள்
புஷ்பிப்பாலன்னைமகிழ்ந்து வஞ்சியைப்புல்லிதழுவினள்

[illegible]குருசாமிவந்து நிலவிலெபந்தெடுத்ததை
மலையத்துவசன்மகள்மீனாட்சி வொன்பதுபந்தடிப்பாளே. ௬

விண்ணவருடன் பாண்டிமன்னவர் கண்ணெதிர்வந்துபோற்றவே
வேழமுகனுமாறுமுகனுந்தாளை வணங்கிப்பணியவே
விண்ணுயர்சோலைமலைவாளழகர் கண்ணெதிர்வந்துபார்க்கவே
மீனலோசனிபந்தடிப் பதைவானவர்போற்றிவாழ்த்தவே
பெண்ணரசியுந்தன்மடந்தையுங் கலைமடந்தைபந்தடிப்பதை
பேறுபெற்றமலையழகர் கூறிதங்கையைவாழ்த்தினார்
தன்னைநிகரிலாமும்முலைதாடகை வண்ணப்பந்தடிப்பதை
சங்கரன்கண்டுமெகிழப்பத்து பந்தெடுத்துஅடிப்பாளே. ௰

மதுரைமீனாசியம்மைபந்தடி

முற்றிற்று.

---

ஆகமொத்தம் 201.

உ

கடவுள் துணை.

# பெண்கட்கறிவு கூறல்.

இஃது

மதுரைச்சில்லா

இராமநாதபுரஞ் சீமைச்சேகரம்

கெர்ப்பயனமென்று பேர்வழங்கிய

திருப்புல்லாணியிலிருக்கும்

முத்துவீமலிங்கப்பிள்ளையவர்கள்

குமாரர்

இராமசாமிப்பிள்ளையவர்களாற்

இயற்றப்பட்டு,

சிருமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - ஆனை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை] 1910. [[illegible].



உ

கடவுள் துணை.

---

இஃது

# பெண்கட் கறிவுகூறல்.

---

சிந்து-இராகம்-புந்நாகவராளி-திரிபுடைதாளம்.

பல்லவி.

பட்டசளமெத்தவுண்டெடி-என் தங்கையரே
பட்டசளமெத்தவுண்டெடி.

அநுபல்லவி.

பட்டசளமெத்தவுண்டும்
கொட்டுமுழக்கிட்டுமாலை
யிட்டிடுங்கணவனைநான்
தொட்டிடுமோகவலையிற்-பட்டசள

சரணங்கள்.

ற்றினிற்பிறந்து-தவழ்ந்துவளர்ந்
௧. அன்னைவயி[illegible]த்துச் சமைந்து-உன்னிதமான
அங்கமும்பூரித்து
மின்னியபொன்பூஜுதிசுட்டி-ஒலைஜிமிக்கி
வெட்டுசரட்டட்டியல்கட்டி-மெருகிழைத்துத்
மின்னியகாலாளிபீலியும்-நத்தமூக்குத்தி,
அவண்டிடும்பேசரிவாளியுங்கற்களிழைப்பின்

பன்னியகங்கணவளையும்-சரிகைப்புட்டாப்
பட்டுகளுயர்ந்தவிலையும-அணிந்தென்மீதிற்
பச்சம்மைத்தலைகரித்தார்
இச்சைகொண்டவர்பிர்மித்தார்
லச்சையினிமேலேவருஞ்
சச்சரவறியாமலே-பட்டசள

௨ வஞ்சியர்கள்சூழ்ந்துவரவே-மணவறையில்
வாத்தியங்களுதிரவே-எவருமெய்க்கக்
கொஞ்சவயதானதினிலே-மாலையுமிட்டுக்
கொண்டமன்னன்வீடுதனிலே-சிங்காரஞ்செய்து
பஞ்சணையிற்பன்னீருதெளித்துலீலாவினோதப்
படினமுழுவதும்படித்து-அறிவுகேட்டு
நெஞ்சுகமகிழ்ந்துமேயோக-கணவனுட
னேசவிசுவாசமதாகக்-கூடிக்குலாவி
நித்தமிப்படிச்சுகத்தைப்
பெற்றநாமிருப்பமென்று
புத்திகெட்டதையுணர்ந்து
சத்தியருளை மறந்து-பட்டசள

௩ பாவையேநான் செல்லச்செல்லவே-என்மேனி[illegible]
பட்சமும் வெறுத்துமெள்ளவே-நித்தி[illegible]
எவளிட்டேனையதட்டின-நாத்தனார்கள்
எசினார்கள் தாலிகட்டின-மறுவாரகம்
[illegible]வன் கடுகடுத்திட்டார்-மாமியாரென்னை[illegible]

கண்டிக்கத் துடிதுடித்திட்டாள்-சீவிமுடித்துத்
தேவரம்பை போலுமிருந்தாய்-வீட்டுவேலையைச்
செய்கிறதாரென்றும்மறிந்தாய்-எல்லோருங்கூறிச்
சீசியென் றதட்டியென்னைப்
பேசின விதங்கள்தன்னை
யோசித்து மோசமிதென்று
காசிவிச லாச்சிதென்று-பட்டசள

௪. என்னடிநான்சொல்வதுபொய்யோ-கர்ப்பமதுவ
மித்துடன்வந்துற்றதையையோவயிறுங்கனத்து
மின்னிதேகமும்வெளுத்துச்-சாதஞ்சமைக்கும்
வேலைகளேவாமலுதித்து-உல்லாசமாக
மன்னிய நடைகள்சரிந்து-கணவனிடும்
வளிடஞ் செய்யவேபயந்து-தங்கைதாய்பால்
முன்னிருந்தசெல்வத்தையெண்ணியே-யழு தழுது
முகமும்வேறதாகக்கன்னியே-அசைந்தசைந்து
மும்மூப்பென்ப துமாதமாய்
அம்மாநானி தம்பதமாய்த்
தெய்மாடித் தனமிருந்து
அம்மாடுகோ விச்சுமந்து-பட்டசள
[illegible]பெற பாட்டைதெரியாமூடமேவிட்டு
மோகமது தானும்பெரிதாய்-இடையில்வந்து
[illegible] கணவனிதுமேலே-படுந்துயரஞ்
[illegible]னின்னமுமேலே-கர்ப்பமெனக்கு

பத்துமாதஞ் சென்றுவிட்டது-அடிவயிற்றை
பற்றிவலிவந்து தொட்டது-சயிக்காமலே
தத்தித்தத்தி நானும்விழுக-மருந்துவைத்துத்
தாங்கியெடுத்தணைத்து தமிறுகக்-கட்டியணைத்துத்
தாங்கிவைத்ததட்டியிலே
தூக்கிவைத்திருக்கையிலே
கூக்குரலிட்டென்னுயிரை
மாய்க்கிறதாமாய்க்கிறேனென்று-பட்டசள

௬ இப்படியவதிப்படுத்தி-வந்தபாலனை
யின்னொருபுறத்திற்கிடத்தி-யிருந்தவர்கள்
தப்புரவயிற்றையுங்கட்டிக்-கஸ்தூரியதைச்
சுறுக்கினிலெணக்குப் புகட்டிக்-கஷாயமிட்டுத்
தப்பிலிச்சிறுக்கிமருந்தைத்-தினுதினென்று
தடுத்துமாமியாளுமுறுக்கிப்-பலர்கள்கூடிச்
செப்பியவசைபிக்குள்ளாகிப்-பதினறுநாட்
சென்றறையைவிட்டுத்தானேகி-யிருக்கையிலே
தேட்டமுள்ளபிள்ளையைத்தா
ராட்டதெரியாதோசண்டி
பாட்டையென்றதட்டுமாலை
சூட்டுங்கணவனாலே-பட்டசள

௭ மைந்தனேர்புறத்திலழுகக்-கொதிக்குஞ்சாதம்
படிந்துமடிந்தங்குவிழுகக-பசிக்குதென்று
அந்தகனமுதையுங்கேட்க-அம்மியினாய்

அரைத்தரையாமலுமிருக்கத்-தனியேநாளும்
எந்தவேலையென்றுசெய்புவேன்-காண்படுந்துயர்
எவ்விதமெவரிடஞ்சொல்வேன்-மாலையையிட
முந்திநானறிந்திலேயே-இப்படிவந்து
மூணுமென்றறிந்ததில்லையே-தங்கையேயிம்
மோகமென்றஇல்லறத்துச
சாகரம்பொல்லாதசுற்று!
ஏகவழி யேகடாமல்
யோகவல்லியைத் தேடாமற்-பட்டசள

அ. அங்கெனுளமவுனமுந்தாங்கிச்-சுருதிப்படி
அடர்வினைகளையுமேபாககிளங்குபநிறைந்த
எங்களம்பிகைபைவாசமாய்க் கொண்டாடிகொள்ள
ஏலாமல திகநேசமாய்ச்-கேளெடிநாளும்
வஞ்சனைசினேகிதமிட்ட-கணவனாலே
வந்தவிதியதில்நேரிட்ட-பொல்லாத இந்தச்
சங்கடபீடிதன்னகொடுமை-தாங்கவொண்ணாச்
சத்திசிவகாமியடிமை-புகுந்தாள்ளவர்
தந்திரமாய்த்தாலிகட்ட
வந்தாலுமொட்டாதேகிட்டத்
தொந்தவினையைத்தளளெடி
உன்றன்சொல்லையுட்கொள்ளெடி-பட்டசள

முற்றிற்று.

---

# ஆனந்தக் களிப்பு.

---

பல்லவி,

ஆசைக்கிணங்காதே மானே - பூவில்
ஆடவர் தங்களைத் தேடாதே தேனே - ஆசை

சரணங்கள்.

க. கொண்டைக்குப் பூமாலை சூட்டி - நல்ல
கொப்புச் சிமிக்கி புலாக்கோலை மாட்டித்
தண்டை சதங்கை யணிந்து - பூசும்
சந்தன கந்தம் சவ்வாது மணிந்து
கொண்ட கணவனைக் கூடி - நீயும்
கூட்டத்திற் கொஞ்சி விளையாடும்போது
சண்டனுனை வந்தழைத்தால் - அதைத்
தடுப்பானோ வுன்னைத் தழுவிய கணவன் - ஆசை

உ. கோணுமற் கணவனைச் சேர்ந்து - பொல்லாக்
குடிகெட்ட மோகத்தைப் பெரிதென்றுநம்பித்
தோணுமற் கர்ப்பஞ் சமைந்து - அந்தத்
துன்பத்தினாலே வருத்தமிகுந்து
ஆணோடு பெண்ணையும் பெற்று - உன்றன்
அழகைக் கெடுத்தனியாயஞ் செய்யாமற்
காணாத காட்சியைக் கண்டு - நல்ல
கருத்தைத் திருத்தியிருத்திக் கொள்ளாமல் - ஆ

௫. எற்றதாய்ச்சொன்னுலு மென்ன-உன்னைப்
பெற்றவளர்த்த தகப்பன்சொன்னுலும்
உற்றூர்கள்வந்துசொன்னுலும்-உங்கள்
உறவின்முறை யர்களெல்லாஞ்சொன்னுலும்
எத்தனைபேர்கள் சொன்னுலுமசற்றும்
இரங்காதேமாப்பிள்ளை மார்களைச்சேரப்
புத்தியுடன்சத்தி வாலை-பரி
பூரணிபாதத்தைப் போற்றெடிமாதே-ஆசை

௬. மண்டலமெல்லாமதிக்கநல்ல
வானுலகத்து மடந்தையர்மெய்கக
அண்டமுபிண்டமு மொன்றுய்நின்ற
ஆதிதிரிபுரையானந்திபாதம்
கண்டடிகன்னி வணங்கிப்-பொல்லாக்
கன்மவினையைக் களற்றறியாமற்
கொண்டநணவனை கூட்டில்-திவ்ய
குமாரானபருவ மிழந்துதள்ளாடும்ஆசை

௭. பட்டுப்பட்டாவளிசெய்த-தங்கப்
பணிதிகள்வேணபதார்த்தமிருக்கப்
பட்டறைகட்டிகட்டியிருக்கச்-சொந்தப்
பட்டியிற்பாலாடு மாடுமிருக்கக்
கட்டியானைவனிருக்கத்-தொட்டில்

கட்டிவளர்த்திட்டமக்களிருக்கத்
தட்டியெமன்வந்தழைத்தால்-அப்போ
தாருனக்கார்வந்துதவிசெய்வார்கள்-ஆசை

௬. போகத்தைப்பெரிதாயெண்ணாதே-அது
பொய்யானவாழ்வுநில்லாது,பொல்லாதே
மோகப்பிசாசையுந்தள்ளி-வாலை
மூன்றெழுத்தச்சரந்தன்னையுட்கொள்ளு
தேகத்தைநீகெட்டிபண்ணு-நல்ல
தேவர்க்குமெட்டாதஅமுதத்தையுண்ணு
யோகமிதைப்போலுமுண்டோ-இந்த
வுபதேசந்தன்னைமறக்காதேமானே-ஆசை

௭. கணவனுக்காசைநீகொண்டுஉன்றன்
கன்னிப்பருவத்தைப்போக்கடியாமல்
மணமானவாலையைநோக்கி-யோக
மவுனத்தைச்சாதித்துமதிதனைத்தூக்கிக்
குணமானசுழிகண்டும்மாறி-நின்று
கூசாமலண்டத்துலாவியேதேறிப்
பிணமானசடலத்தைமாற்றிநீயும்
பேரின்பவாழ்விலிருப்பதேநேத்தி-ஆசை

௮. காலமேதூக்கத்தைநீக்கிக்-கண
வன்கட்டும்வீட்டையெல்லாஞ்சுத்தியாக்கு

கோலப்பணிகள் திருத்திச்-செப்பும்
குடஞ்செம்புதவலைகள் விளக்கவேவேணும்
சாலெல்லாந் தண்ணீர்நிறைத்து-வெகு
ஜலதியிற்சமையற்செய்யாவிட்டாலுன் கணவன்
காலினாலுதைத்தேயடிப்பான்-அந்தக்
கணவனுனக் குதவாது தவாது-ஆசை

௬௰. அந்தைக்குப்பத்தியம்வைத்துச்-சொந்த
அம்மானிடுப்புக்குவெந்நீரும்வைத்து
உற்றகொழுந்தனைத்தேடி-அவற்
குபசாரஞ்செய்துபழையதுமிட்டு
இத்தனைவேலைசெய்யாவிட்டால்-உன்னை
யிப்படியாயொப்பன்வளர்த்தானென்று
சுற்றத்தாரிடஞ்சொல்லுவானே-அந்தத்
துன்பமுனக்குதவாது தவாது-ஆசை

௬௰௧. கட்டிகணவனுக்கஞ்சி-அவன்
கம்பெடுத்தோங்கியபோதெல்லாங்கெஞ்சிச்
சட்டியும்பானையுங்கொண்டு-நித்தஞ்
சமையல்செய்யும்போது தடுமாறிநின்று
சட்டியேசட்டியுடைந்தால்-உன்றன்
தகப்பன்வளர்த்திடுதேத்தியோசுத்த

மட்டிக்கிருக்கிமகளே-என்று
மாமியையேசவுங்கேட்பதற்கேஞே-ஆசை

௧௧. புருஷன்சதமென்றிருந்து-நாளும்
பொழுதும்போய்நீசெய்தும்போனதுகண்டு
சிறுபாடைகட்டெடுத்து-உன்னைச்
சென்றிடுசாட்டிணிற்கொண்டுபோய்வைத்து
உறைமுறையாரெல்லாங்கூடி-மண்ணில
உன்னைப்புதைததுவம்போதுன்கணவன்
திரும்பியும்பாராமற்போவன்-அவன்
சோந்துணக்கென்னசாலாக்கிசமாச்சு-ஆசை

௧௨. பருவத்தில்வாலையநாடி-வாகிப்
பரிபெறிகடத்தாமற்பத்தாவைத்தேடி
யொருபஞ்சணைகூடிவாழும்-போது
உள்ளவிதிப்படியாண்டு நீபோனல
மருவியிருந்த சுகத்தை-உன்றன்
மணவாளனினையாமல் விசுவாசங்கெட்டு
மறுகலியாணமுஞ்செய்வான்-அதை
மறந்துநீவிணுவி லேருணுபொல்லாத-ஆசை

௧௩. பொங்கியசாதஞ் சறிக்கு-ருசி
போதாதென்றெண்ணியேயுன்னையுருக்கிய

தின்னவுஞ்சரியல்ல வென்று-அவன்
தெண்டனைகண்ட னைசெய்தேஅடிப்பான்
சங்கடமிதுபொல்லாச் சள்ளை-நீயுந்
தாலிகட்டிக்கொண்டாலேலாதுதொல்லை
சிங்கத்திலேறுவாள்நித்தம்-வாலை
சேவடிபோற்றேயிருப்பதேசுத்தம்-ஆசை

௧௪. நெல்லைப்புளுக்கியுணர்த்தி-யொரு
நிமிஷத்திற்குத்திய யரிசியதாக்கிக்
கல்லுமண்ணில்லாமற் போக்கிநீயுஞ்
சடைசியிற்சமையற்செய்யாட்டாலுன்கணவன்
பல்லைக்கடித்தேயடிப்பான்-அதைப்
பார்த்துன்றனைத்தர் சொல்லிச்சிரிப்பார்
தொல்லையிப் பாடெல்லாமாற்றி-வாலை
சுந்தரிபாதத்தைத் தொழுவதேசுத்தி-ஆசை

௧௫. சத்தியால்முத்தி பெறுமல்உன்றன்
தனதுகணவனைப் பெரிதாகவெண்ணிப்
பத்தியாய்ப்பணிவிடைசெய்து-வீணாய்ப்
பாழிலேயுன்றன்வயதெல்லாம்போக்கி
பற்றிநரைத்துத்தள்ளாடி-நல்ல
முட்டிவாய்சாழ்ந்துள்ளபல்லெல்லாம்போக்கிச்

செத்துமண்ணுக்கிரை யானால்-உன்ற
ஜென்னபீடேறுது சொன்னேனன்சேரு-ஆசை

---

ஆனந்தக்களிப்பு
முற்றிற்று.

---

கீர்த்தனம்-இ-ம்-குறிஞ்சி- திரிபுடைதாளம்.

பல்லவி

ஆண்பிள்ளையைநம்பாதியோ-பெண்களே
ஆண்பிள்ளையைநம்பாதியோ

அநுபல்லவி.

ஆண்பிள்ளையைநம்பாதியோ
அலக்கழிந்துபோகாதியோ
ஆசைக்கிசைந்தபெரு
மோசமாய்ப்பேசுகிற-ஆண்பி

சரணங்கள்

க. கொப்புபண்ணித்தாரேன்
கொசுலுபண்ணித்தாரேன்

கொண்டைக்குபூமாலை
கொண்டுவருவேனென்று
கோதையரைத்தொட்டுக்
கொஞ்சிமுத்தமிட்டுக்
கூடியணைந்ததின்பின்
குடியைக்கெடுப்பார்கள் - ஆண்பி

௨. உன்றறக்கூடி
உனக்குமலர்சூடி
ஒத்துவிளையாடி
உறங்கையிலேதேடி
உன்ஞலையைத்திருடி
யொளிப்பார்கள்போல்
ஒருக்காலும்நாடி
யுறவுசெய்யாதேடி - ஆண்பிள்ளை

அஞ்சுபொன்தாரேன்
அரக்குச்சேலைதாரேன்
ஆணங்கேடென்று
ஆசையைப்பொருத்தி
அன்றிரவுகூடி
அரைக்காசுமீயாமல்

ஆட்போனதெங்கேயென்று
ஆளனுப்பித்தேடவிடுபய - ஆண்பிபிள்ளை

௭. என்னைமருவவாடி
உன்னைமறவேனென்று
எட்டுகதைபேசி
முத்தமிட்டுத்தோஷி
இணக்கப்படுத்திக்
குணக்கேடுசெய்து
இடைவழியேவிட்டுக்
தனிவழியேபோற்ற ஆண்பிள்ளை

௫. தெற்றியெளியேற்றி
இராத்திரியேகூட்டிக்
திருடருக்கஞ்சித்
திருவபரணத்தைச்
சிக்கிரங்கழிற்றிச்சட்டைச்
சாக்கில்தைத்தடக்கித்
தெருவழியேவிட்டு
மறுவழியேபோய் ஆண்பிள்ளை

௬. சல்லாவைத்தொங்கவிட்டுச்
சாலுவையைமேற்போட்டுக்
சந்தனத்தைப்பூசிக்
சவ்வாதுப்பொட்டுமிட்டுத்
தந்திரமாய்ப்பேசி
மந்திரத்தைச்செய்து
சன்னையிட்டழைப்பார்கள்
சங்காத்தமாகாது - ஆண்பிள்ளை

௭. நத்துமுத்துக்கொத்தவடம்
மெத்தமொய்த்தசுற்றுயில்லை
நாடியவரிசையெல்லாம்
தேள்யேதருவனென்று
நாட்டுகூட்டமிட்டுப்பேசிக்
கேட்டுக்கட்டிக்கூடிவந்த
நாரியைவலக்கழுத்தத்
தூரியேவிரட்டிவிட்ட - ஆண்பிள்ளை

ஆனந்தக்களிப்பு
முற்றிற்று.

---

ஆக மொத்தம் 203

உ

சிவமயம்.

# ஆண்பிள்ளைத்தாலாட்டு.

## பெண்பிள்ளைத்தாலாட்டு.

இஃது

சிறுமணவூர் - முனுசாமி முதலியாரால்

சென்னை - சூளை

தொண்டமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1910.

✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤✤



கடவுள் துணை.

# ஆண்பிள்ளை தாலாட்டு.

---

காப்பு - வெண்டா.

பெருட்புகழ்கொள்செங்கழுநீர்ப் பிள்ளையாரென்னெஞ்
சருப்புமன பீடமுறலாலே—கரும்புகனி
கண்டமிழ்தங்கைப்பக் கவிஞர்பிள்ளைத்தாலாட்டு
வண்டமிழிற்பாட வரும்

இராகம் - நீலாம்புரி:

ஆராரோ ஆராரோ ஆணரசே ஆராரோ
சீராரு மெங்கள் சிரோமணியே ஆராரோ

கரகரும்புஞ்சர்க்கரையு நாவுமமுதையடோற்
சொற்கவின்செய்முத்தமிழோற் ததிபதியேகண்வளராய். க

தாய்மார்கள்சீராட்டத் தையலல்லார்தாராட்ட
ஆயுமணித்தொட்டிலிலே யற்புதனேகண்வளராய் (உ)

மின்னாரிவாசிக்கக் கிளிகளுடன்பூவைகொஞ்ச
[illegible]தொட்டிலிலே வாழ்வேந்தேகண்வளராய் (ங)

[illegible]யர்ச்சதங்கை வடம்பூட்டித்தாராட்டிப்
[illegible]ளர்க்கவளர் புத்திரனேகண்வளராய் (ச)

[illegible]விளங்கப் பசர்முத்தமாலைதொங்க
[illegible]பூக்கொட்டிலிலே நராதிபனேகண்வளராய். (ரு)

[illegible]நிலாக்காட்டிப்பொட்டுமிட்டுச்
[illegible]மங்கள் சிகாமணியே [illegible]ண்வளராய் (சா)

[illegible]நெற்றி விளங்கவுங்கண்மைதீட்டி
[illegible]வளர்க்குமெங்கள் நாயகமேகண்வளராம். ஆரா (எ

தளதளெனுந்தண்டை சதங்கையொடுபாதசரம் ஆரா
களினமலர்தாளிலங்க நன்மணியேகண்வளராய் (௮)
குஞ்சுமணிபொற்சதங்கை கோலமுயர்பொன்னரைநாண்.
விஞ்சுமொளிவீச விதரணனேகண்வளராய் (௯)
வையமதிக்கு மணிக்கடகம்பாட்டிலுடன்
கையிற்பொற்காப்புங் கவின்பெறவேகண்வளராய் (௧௦)
சிறுவிரலிற்பச்சை திகழ்வயிரமும்பதிக்கப்
பெறுமோதிரங்கள் பிறங்கவேகண்வளராய் (௧௧)
எஞ்சுமிருபுறத்து மிலங்கிருதலைப்பட்சி
கொஞ்சுதல்போல்வங்கியுங்கை குலவவேகண்வளராய். (௧௨)
சரப்பளிநல்வச்ரமணித் தாழ்வடமுத்தாரம்
இருப்பெறும்வண்மார்பிற் றிகழவேகண்வளராய் (௧௩)
காதில்வயிரக் கடுக்கனொடுமுருகும்
நீதமுடன்விளங்க நிதிபதியேகணவளராய். (௧௪)
டங்காளகேசமுன்பேய் பாட்டனர்கொண்டுவந்த
சிங்காரக்கொண்டை திகழவேகண்வளராய் (௧௫)
கொற்றவருங்கண்டு கூதுகலிக்குஞ்சுட்டிபிறை
நெற்றிதனின்மேவி நிலவவேகண்ணவளராய் (௧௬)
பிள்ளைகலிதீர்க்கப் பெருக்கமுடன்வந்துதித்த
வள்ளலேதிவ்ய மரகதமேகண்வளராய்
ஆக்கன்றமசல்முத்தொழில்செ யர்புசனூல்வந்திசை
பாக்கியச்சினலவிளைந்த டாக்கியமேகண்வளராய்
தாலமெங்கனுஞ்சீர் தழைததோங்கவேயுதித்த
பாலசுந்தரன்மகிழுமபார்த்திபனேகண்வளராய்
ஆன்றோர்களெல்லாம் அனுதினம்வந்தாசிசெ
தோன்றுநித்யகல்யாண சுந்தரமேகண்வளராய்.

வாடாதபூவே மதுகரஞ்சூழ்பைங்காவே
கோடாதபுஷ்பாதக் கோவேநீகண்வளராய். ஆரா (௨௧)
ஆராவமுதே அதிமதுரமுக்கனியே
பேராறுமெங்கள்குலப் பேரரசேகண்வளராய் (௨௨)
எத்தேசத்துள்ளவரு மெண்ணிமிகமதிக்கு
முத்தேபவளமென்வாய் முதல்வனேகண்வளராய் (௨௩)
பூங்காவனத்கிளியே புலவர்புகழ்கண்ணணியே
பாங்காருந்தெய்வப் பசுங்கிளியேகண்வளராய் (௨௪)
சிந்தாமணியே தெவிட்டாதசெள்ளமுதே
நந்தாமணிவிளக்கே நட்பேநீகண்வளராய் (௨௫)
பொற்பாரதிபதியே பூரணகலாமதியே
சற்பாத்திரர்புகழுந் தயாநிதியேகண்வளராய் (௨௬)
கண்ணேகருணைக் கடலேயிசைக்குயிலே
பண்ணேயினிய பழமேநீகண்வளராய் (௨௭)
தித்திக்குஞ்செங்கரும்பே தினிச்சருக்கரையே
எத்திக்கும்போற்றும் இலஞ்சியமேகண்வளராய் (௨௮)
தாயாரும்பாலூட்டத் தந்தையுமேபக்கலுற
ஐயாக்கவலையென்ன வுத்தமனேகண்வளராய் (௨௯)
மேவுமொருநாளையிலே வேணபலவேளையிலே
வியுழுவதென்னே கொற்றவனேகண்வளராய் (௩0)
சொல்கேளாமல் ஆம்பல்மலர்வாய்திறந்து
[illegible] தேன்தெய்வ சிகாமணியேகண்வளராய் (௩௧)
[illegible] தாளோ அம்மான்மார்வைதாரோ
[illegible] வந்தேன் வித்தகனேகண்வளராய் (௩௨)
[illegible] நெற்புவதேன் [illegible] மெவு நினக்கென்னசொற்றாழ்வு
[illegible] வளர்க்குமெவு ஒரு நவமணியேகண்வளராய். ஆரா. (௩௩.)

கட்டிகருப்பூரங் கனகதட்டிலேற்றிவைத்துத்
திட்டிசுழிக்குமுன்னே தினகரனேகண்வளராய். ஆரா (௩௪)
மெல்லியர்கைகால்பிடித்து மெல்லமாருந்தளிப்பார்
அல்லலுறுமல் அருந்தவனேகண்வளராய் (௩௫)
வட்டமூலைதிறந்து மங்கையருமபால்கறந்தே
இட்டமுடனீவா ரிரஞ்சிதமேகண்வளராய் (௩௬)
தங்கத்தாலாலனைகளுந் தந்தத்திறுநடரியும்
இங்கிதமிறுரளித்தா ரிளங்கதிரேகண்வளராய் (௩௭)
பாட்டனார்பாட்டியுமே பலகாரங்கொண்டுவந்தார்
வாட்டமேன்சூடா மணியேநீகண்வளராய் (௩௮)
தாமமலர்மாலை சரப்டளியும்அம்மான்மார்
தாமதமில்லாதளித்தார் சற்குணனேகண்வளராய் (௩௯)
சித்திரஞ்சேர்வேலைமிகத் திர்ந்ததங்கபாப்பாசும்
அத்தைமார்வாங்கிவந்தார் ஆசவனேகண்வளராய் (௪0)
எழுதப்பொன்னோலை யெழுத்தாணியுமிந்தப்
பொழுதேதருவேன் புரந்தரனேகண்வளராய் (௪௧)
பொற்சரிகைக்குல்லாவும பொற்சரிகையங்கிகளும்
நற்குடையுஞ்சொக்காயு நல்குவேன்கண்வளராய் (௪௨)
அத்தைமகளும்வந்தாள் அத்தையார்தானும்வந்தாள்
மெத்தமகிழ்ச்சியுடன் விஜயனேகண்வளராய்
வாசமலரெடுத்து வாசிகையாகத்தொடுத்து
நேசமுடன்மாமிதந்தாள நித்திலமேகண்வளராய்
மணங்கொள்டனிநீராட்டி மல்லிகைப்பூமேற்சூட்
டிணங்கவளர்க்குமெங்க ளிளங்குருந்தேகண்வ[illegible]
தாயாருமன்புபெறத் தாதையுளங்களிக்கச்
சேயாகவந்துதித்த செஞ்சுடரேகண்வளராய்

ஓசைக்குயில்கூவ வுவந்துமயில்கூத்தாட
நேசக்கிளிகள்கொஞ்ச நிலைவிளக்கேகண்வளராய். ஆரா (௪௭)

தக்கசிர்க்கற்பகமே சாதிகறுஞ்சண்பகமே
செக்கலிக்குநர்சுகமே கிஞ்சுகமேகண்வளராய் ஆரா (௪௮)

ஆண்பிள்ளைத்தாலாட்டு முற்றிற்று.

---

## பெண்பிள்ளை தாலாட்டு.

ஆராரோ ஆராரோ ஆரணங்கே ஆராரோ
பேராருமெங்கள்தவப் பெண்மணியே ஆராரோ

பூமிபுகழ்செய்வப் புலவர்துதிமன் னுகந்த
சாமியருளென்னவளர் சற்குணியேகண்வளராய் ஆரா (௧)

அன்னைமார்சீராட்ட அழகுசலலார்சாராட்ட
பொன்னின்மணித்தொட்டிலிலே பொற்கொடியேகண்வளராய்

பண் ணுக்கிசைந்திலங்கும் பாவேசெழுங்காவே
வண்ண முயர்மாதாவே வாழ்வேநீகண்வளராய் (௩)

[illegible]மேவசுரர் வந்திக்குந்தென்மதுரை
[illegible] மேவுமின்னேகண்வளராய், (௪)

[illegible] பொருந்தகிசிர்மேலோர்கள்
[illegible]ம் அருந்ததியேகண்வளராய். (௫)

[illegible] ஒளிர்ஜீவரதினமே
[illegible]மே மோகனமேகண்வளராய் (௬)

[illegible] புகழ்ந்துரைக்கும்
[illegible]த்தாய்கண்வளராய் (௭)

[illegible]ருமணிகனுகற்
[illegible] சயடைவியேகண்வளராய் ஆரா. (௮

பொன்னுலமைந்தொளிரும் பூங்குடமும்ஸ்ரீபடமும்
கன்னயஞ்சேர்அத்தைதந்தாள் நாயகமேகண்வளராய். (உஉ)

தங்கத்தினூலுறியுந் தனிவயிரச்செப்புகளும்
பொங்கமுடன்பாட்டிதந்தாள் பூவையேகண்வளராய் (உ௩)

கறைமெழுகியுண்டுபெருந் தவமிருந்தம்பெற்ற
நிறைவடிவுமேவுமெங்கள் நித்திலமேகண்வளராய் (உ௪)

விண்ணவரென்றென்றும் விரும்புஞ்சுவையமுதே
திண்ணயமாவோங்குசங்க நிதியேகண்வளராய். (உ௫)

ஓடாதமானே யுவட்டாதசெங்கேனே
நீடாழிசூழ்புவியோர் நிதியமேகண்வளராய் (உ௬)

கோமேதகமே குறைவிலாவித்தகமே
மாவேவுதெய்வ மணிவிளக்கேகண்வளராய். (உ௭)

கண்ணனகண்ணே கருத்துக்கிசைந்தபண்ணே
பெண்ணனபெண்ணேயெம் பெண்ணரசேகண்வளராய். ( )

பொற்றாமரைமேரும் பொன்னனமேமின்னினமே
நற்றுமந்துரும் நவமணியேகண்வளராய். (உ௯)

வண்ணஞ்சேர்கன்னேத்திரமே வாணர்புகழ்சூத்திரமே
[illegible]சேர்சத்பாத்திரமே கோமளமேகண்வளராய். (௩0)

[illegible] பவித்திரபாகீரதியே
[illegible] வாய்ந்தமின்னேகண்வளராய் (௩௧)

[illegible]வுள் வருராமசாமியின்வாக்
[illegible]மிளங்குருந்தேகண்வளரார். (௩௨)

ஆராரோ ஆரணங்கே ஆராரோ

[illegible]பிள்ளைத்தாலாட்டு முற்றிற்று.

---

உ

கணபதிதுணை.

நூதன

# பிள்ளைதாலாட்டு.

இஃது

சிறுமணவூர்

முனுசாமிமுதலியாரால்,

இயற்றப்பட்டு

சென்னை - சூளை

தொண்டைமண்டலம் அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1910





கடவுள் துணை.

# பிள்ளை தாலாட்டு.

## விநாயகர் துதி.

சீரார் செல்வச் சிறுபிள்ளைத் தாலாட்டை
பாரார் மகிழ்ப் பாடுதற்கு—நீரார்
வேணியர னம்பிகையும் வைத்துவிளை யாடுகின்ற
ஆனைமுகன் றாளை அணி.

---

ஆராரோ ஆராரோ ஆரிரோ ஆராரோ
சீராறு மெங்கள்குல சிகாமணியே ஆராரோ.

கண்ணே நவமணியே
கற்பகமே முக்கனியே
என்னார் உயிரானே
இந்திரனே கண்வளராய். (க)

தொட்டி வைத்த முத்தே
குவித்தநவ ரத்தினமே
[illegible]கம் பொன்னே என்
[illegible]மணியே நித்திரைசெய். (உ)

[illegible] நித்திரைசெய்
[illegible] [illegible]னே
[illegible] தொட்டிலிலே
[illegible]க்கு [illegible] நித்திரைசெய். (௩

கரும்புரசமே-என்
கசக்காத முக்கனியே
அரும்புமலர் மணமே
அறுமுகனே கண்வளராய். (௪)

மாத்துயர்ந்தபொன்னே-இந்த
மண்டலத்து அதிபதியே
பூத்தபுது மலரே-என்
பொக்கிஷமே கண்வளராய். (௫)

மருவே மரிக்கொழுந்தே
மலர்விரிந்த மல்லிகையே
குருவேரரும்பே-என்
குலக்கொழுந்தே கண்வளராய். (௬)

கிள்ளைக்குயில் மொழியே நான்
கண்டெடுத்த பொக்கிஷமே
பிள்ளைகலி தீர்க்கவந்த
பெம்மானே கண்வளராய்.

மாயன் மகளார்க்கு
மாப்பிள்ளையாய் வந்தவனோ
தாய்சொல் தவராத
தனஞ்சயனோ நீதானோ.

சிறைதக் கதிபதியோ
சிலையேர்த்தப் ரகுபதியோ
தாதைசொல் தட்டாத
தருமதுரை நீதானோ.

ஒருமாங் கனிக்காக
உலகம்வலம் செய்துவந்த
பெருமாள் மருமகனே
பெண்ரதிக்கி மாப்பிளையோ. (௰)

கரும்புக் கணையானே
கன்னிவள்ளி நாயகனே
பரமன்றனை யடித்த
பாண்டியனார் நீதானே. (௧௧)

ஆரடித்து நீயழுதாய்
அழுதகண்ணில் நீர்ததும்ப
பேரை யுரைத்தாக்கால்-நான்
பெருவிலங்கு பூட்டிடுவேன். (௧௨)

அத்தை யடித்தாளோ-உனக்கு
அமுதூட்டும் கையாலே
சுற்றே மனம்பொறுத்து
[illegible]னே கண்வளராய். (௧௩)

பாட்டி யடித்தாளோ-உனக்கு
[illegible]ல்வார்க்கும் கையாலே
[illegible] நான்கேட்பேன்
[illegible]மே கண்வளராய். (௧௪)

[illegible] யடித்தாளோ-உனக்கு
[illegible] கையாலே
[illegible]பொறுத்து
[illegible] கண்வளராய். (௧௫)

தமய் அடித்தானோ-உனக்கு
தயிரூட்டும் கைபாலே
நிமிஷம் மனம்பொறுத்து
நித்திரைசெய் கோமானே. (௧௬)

அக்கா ளடித்தாளோ-உங்கள்
அம்மான்மார் வைதாரோ
மிக்காகத் தேம்புவதேன்
வித்தகனே கண்வளராய். (௧௭)

பெரியாயி தப்பிதமோ-உன்னை
பெற்று ளடித்ததுண்டோ
அறியாமற் செய்தாலும்-எங்கள்
ஆரமுதே கண்வளராய் (௧௮)

அழாதே அழாதே-எங்கள்
அரசே அழாதேநீ
தொழுவார் யலரிருக்க
துரையேநீ கண்வயராய். (௧

ஆம்பல் மலர்போலே
அடிக்கடிநீ வாய்திரந்து
தேம்பி யழாதேநீ
தினகரனே கண்வளராய்.

நீராட்டி மையிட்டி
நிலாக்காட்டி பொட்டுமிட்டு
சீராட்டும் வேளையல்லோ
சித்தஜனே கண்வளராய்.

அந்திநிலாக் காட்டி-உனக்கு
அமுதூட்ட வேணுமல்லோ
மைந்தன் கலிதீர்த்த
மந்திரியே கண்வளராய். (௨௨)

வாடாதப் பூவே
வானுலகின் தாராவே
தேடாத பென்னே-என்
திரவியமே கண்வளராய். (௨௩)

துரைமுகத்து வியாபாரி
துரைமார்கள் உங்களம்மான்
திரவியங்க ளெண்கோடி
தேடிவைப்பார் கண்வளராய். (௨௪)

கப்பத் துறைமுகத்தார்
கனசாலி உங்களம்மான்
பொற்பணிகள் கொண்டுவந்தார்
புண்ணியனே கண்வளராய். (௨௫)

[illegible] பட்டை பதிகாரி
[illegible] க்கார உங்களம்மான்
[illegible] தெல்லாக் கருவார்
[illegible] மணியே கண்வளராய். (௨௬)

[illegible] விற்கும் [illegible] ர்கள்
[illegible] உங்களம்மான்
[illegible] பிள்ளையோ தோ-உங்கள்
[illegible] வந்தார்காண். (௨௭)